# திருவருட்பா

## மூலமும்-உரையும்



உரைவேந்தர்

ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உ

அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீ

# திருவருட்பா

## மூலமும் உரையும்

ஒன்பதாம் தொகுதி

ஆறும் திருமுறைத் தொடர்ச்சி

3780 - 4614

உரையாசிரியர்

உரைவேந்தர், சித்தாந்த கலாநிதி.

ஔவை சு. துரைசாமிப் பிள்ளை




வெளியீடு :

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

சிவமயம்

# முகவுரை

## டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி அவர்கள்

### இணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

எத்தனை கோடி பணம் இருந்தாலும், வாழ்வில் நிம்மதி வேண்டும். அதனைப் பொருள் கொடுத்துப் பெற இயலாது. அருள் கொண்டு ஆன்மீக நெறிநின்று, தெய்வங்களை வழிபட்டே பெறல் வேண்டும்.

நிம்மதியற்ற வாழ்க்கை ஆதவன் இல்லாத ஆகாயம் போன்றது.

நிலைத்த நிம்மதியை இறைவன் ஒருவனே தர முடியும். இதற்கு மன ஒருமைப்பாடே, ஏற்ற, இனிய, இன்பம் தரும் நல் நெறியாகும்.

மனம் விரும்பி ஏற்படுகின்ற ஒருமைப்பாட்டின் மூலம், உலகமக்களெல்லாம் வேற்றுமைகள் அனைத்தையும் மறந்து, ஒற்றுமையாகி ஒரு குடைக்கீழ் வாழ்கின்ற உன்னதமான நிலை ஏற்படமுடியும்.

இதனையே வள்ளல் பெருமான், ஆன்மநேய ஒருமைப்பாடு என்ற புதிய கொள்கையாகக் கண்டார்.

பக்தி என்பது மனித குலத்திற்கு, அருள் வழிப்பட்ட புதிய சக்திகளை வழங்க வேண்டுமே தவிர, அதன் மூலம் மனித குலத்திற்குப் புறம்பான கொள்கைகளோ, மூடநம்பிக்கைகளோ, தோன்றக் கூடாது என்பதில், வள்ளல் பெருமான், மிகத் தீவிரமான நோக்குடையவராக இருந்தார்.

வள்ளல் பெருமானது திருவருட்பாப் பாடல்கள், இறைவனைப் போற்றுகின்ற வாழ்த்துப் பாக்களாக மட்டும் அமையாமல், அவன் நெறிச் செல்லப் புதிய வழிகளைக் காட்டும் ஒளிச்சுடர்களாக விளங்குகின்றன. வாழ்க்கைத் தத்துவங்களாக மிளிர்கின்றன. தீமைத் திமிங்கிலங்களை அகற்றி, வாய்மை நாவாய்களுக்கு வழிகாட்டும் கலங்கரை விளக்கங்களாகக் காட்சி தருகின்றன. மாட்சி பெறுகின்றன.

வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம்
வாடினேன்

என்று வள்ளல் பெருமான் பாடும்போது, அஃறிணைப் பொருளான பயிர் வாடுவது கண்டுகூடத் தாங்காத தளிர் உள்ளம், அவர் உள்ளம் என்பது தெளிவாகின்றது.

அதனுடன் பயிர் வாடினால், பசியால் மக்கள் வாடுவார்களே என்ற எதிர்கால நோக்கும் அதில் அடங்கி இருக்கின்றது என்பதை எண்ணும் போது, வள்ளல் பெருமான், எல்லாப் பொருள்களையும் இனிய தாயுள்ளத்துடன் நோக்கினார்; அவற்றின் பிணி போக்கி ஊக்கினார் என்பது தெளிவாகின்றது.

வள்ளல் பெருமானின் உள்ளம், பத்தரை மாற்றுப் பசும்பொன்னி னும் மேலானதாக விளங்கி இருக்கின்றது என்பதனைத் திருவருட்பாப் பாடல்கள் எங்கும் நாம் எளிதாகக் காண இயல்கிறது.

தாம், ஒருமையுடன் இறைவனைப் பணிவதோடல்லாமல், தம்மைச் சூழ்ந்தவர்களும் ஒருமையுள்ளம் உடையவர்களாக இருக்க வேண்டும் என்றே வள்ளல் பெருமான் விரும்பியுள்ளார்.

சிதம்பரத்திற்கு அருகில் அவதரித்துப் பரம்பொருளை, இளமை யிலேயே கண்டு, பாடும் திறம் பெற்ற அந்தப் பெருமானின் திருவருட்பாப் பாடல்களுக்குப் பேராசிரியர் ஔவை துரைசாமிப் பிள்ளை அவர்கள் எழுதிய வரலாற்று முறை உரை நூற்பதிப்பு, தில்லையில் ஆடும் இறைவனின் எல்லையில் உள்ள, அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் மூலம் வெளியிடப்பெறுவது எண்ணி எண்ணி மகிழத்தக்கதாகும்.

திருவருட்பாவிற்கு உரை கண்டு, செயற்கரிய செயல் நிகழக் காரணமான, அருட்செல்வர் பொள்ளாச்சி டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களுக்கு என் ஆழ்ந்த நன்றி உரியது.

அவர்கள் தட்டச்சுப் பகுதிகளைக் கொண்டுவந்து என் தந்தையார் செட்டி நாட்டரசர், டாக்டர் ராஜா சர். முத்தையா செட்டியார் அவர் களிடம் கொடுத்து, மகிழ்ந்த காட்சியினைக் கண்டு மகிழ்ந்தவன் நான். என் தந்தையார் முன்னுள் இணைவேந்தர் டாக்டர் முத்தையவேள் அவர்கள் திருவருட்பாப் பகுதிகள் அச்சாகி வெளிவந்து மக்கள் பயன் பெற வேண்டும் என்பதில் பேரார்வம் கொண்டு, அவை வெளிவர வழி வகை செய்தார்கள்.

பொன்னுன இந்நூல் தொகுதிகள் அச்சாகி வெளிவர, அறநிலையத் துறை மூலம் வட்டியில்லாக் கடனுதவி நிதி உதவி கிடைக்க வழி வகுத்த தமிழக அரசு அறநிலையத் துறைக்கு என் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருவருட்பா வரலாற்று முறைப் பகுதிகள் அச்சாகி வெளிவர வேண்டும் என்பதற்கு நம் பல்கலைக் கழக துணை வேந்தர் ராம. சேது நாராயணன் அவர்கள் ஆக்கமும் ஊக்கமும் தந்துவருகிறுர்கள்.

திருவருட்பாப் பதிப்புச் சிறப்பு அலுவலர் புலவர் நாகசண்முகம் அவர்களும் இந்நூல் தொகுதிகளை அச்சியற்றி வரும் மாருதி அச்சகம் திரு. வி. பார்த்திபன் அவர்களும் தம் பணிகளைச் செம்மையாய்ச் செய்துவருகிறுர்கள்.

இதுவரை வெளிவந்துள்ள எட்டு பகுதிகளையும் விரும்பி வாங்கிப் பயன் பெறுதல் போல, வெளிவரும் மற்ற தொகுதிகளையும் பொது மக்களும் மற்றும் பல்துறையினரும் வாங்கிப் பயன் பெற வேண்டும் என்று அன்புடன் வேண்டுகின்றேன்.

அருட் பெருஞ் ஜோதியாய் ஆண்டவனைக் கண்டு, புதியதோர் உலகுக்காக வழிகாட்டிய வள்ளல் பெருமானின் வழிச்சென்று நாம் வாழ்வாங்கு வாழ்வோமாக.

எம். ஏ. எம். இராமசாமி

# அணிந்துரை

தமிழ் இசைக்காவலர், பத்மபூஷண், டாக்டர்

ராஜா சர். முத்தையா செட்டியார்

முன்னாள் இணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

ஈடு இணையற்ற உயர்தனிச் செம்மொழியான தமிழ்மொழியும் அதன் சொற்களும் அனைவருக்கும் பொதுவாயினும், கையாள்பவரைப் பொறுத்து மென்மையும், வன்மையும், எழிலும், ஏற்றமும், தெளிவும், திட்பமும் பெற்று விளங்கும் தன்மையைப் பெறுகின்றன. எனவே தான் வள்ளுவர் தமிழ், இளங்கோ தமிழ், கம்பர் தமிழ் என்று நூல்களை, ஆக்கியோர்மீது அதனை ஏற்றிச் சொல்லும் நிலைமையைக் காண்கிறோம்.

இது போலவே பக்திப் பேருலகில் நால்வர் தமிழ் என்று நானிலமே போற்றும் வண்ணம், அப்பர், ஞானசம்பந்தர், சுந்தரர், மாணிக்க வாசகர் ஆகிய அருளரசர்கள் நால்வரும் இறைவனின் பெருமையைப் போற்றி, எண்ணற்ற பாக்களை இயற்றித் தமிழகமெங்கும் பக்திமணத்தைப் பெருக்கினார்கள்.

அவர்கள் தமிழ் கேட்டு இறைவனே பலமுறை மகிழ்ச்சி அடைந்திருக்கிறார். சிலமுறை மயங்கிக்கூட இருக்கிறார். எனவேதான் தூய மறைகள் பாடும் வாயை உடைய எம்பெருமான் சுந்தரரைப் பார்த்துச் 'சொற்றமிழ் பாடுக' என்று அன்பால் ஆணை பிறப்பித்திருக்கின்றார்.

தண்ணார் தமிழால் சைவநெறி போற்றுகின்ற அப்பெருமக்களுக்குப் பின்னர், அந்நெறி போற்ற, தத்துவமும் வித்தகமும் ஞானமும் சித்தியும் நிறைந்த, தேனினும் இனிய, தெளிந்த அமுதினும் உயர்ந்த, பாடல்களைத் தந்த பட்டினத்தடிகளும் வள்ளல் பெருமானும் தோன்றினார்கள். இந்த இருபெரும் ஞானச் சித்தர்களும் தோன்றிய இடங்கள் வேறுவேறு ஆயினும், பட்டினத்தடிகளால் திருவொற்றியூரும், வள்ளற்பெருமானால் வடலூரும் நிலைத்த பெருமைக்கு நிலைக்களன்களாக விளங்குகின்றன.

உலகத்தார் அனைவரும் ஒருமையுடன் இறைவன் திருவடிகளை வணங்குகின்ற உத்தமர்களாக வேண்டும். பிறிதொன்று எண்ணாத பேருள்ளம் கொண்டவர்களாக அவர்கள் திகழவேண்டும் என்னும் அருள் நோக்கோடு, அருட்பிரகாச வள்ளலார் அவர்கள், திருவாய் மலர்களாக மலர்ந்தவையே, அந்த அற்புத அருள் மலர்களின் தொகுதியே, செந்தமிழ் மொழியின் பக்திச் சுரங்கமே திருவருட்பாவாகும்.

திருவருட்பா ஆறு திருமுறைகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவற்றில் இடம்பெற்ற பாடல்களின் எண்ணிக்கை 5818 ஆகும்.

பாடல் நூல்களுக்கு உரைகாண்பது என்பது அரிய, பெரிய, மிகவும் போற்றத்தக்க ஒப்பற்ற செயலாகும். பல சங்க நூல்களும் காவியங்களும் பக்திப் பெருநூல்களும் இலக்கண நூல்களும் அவற்றின் உரை நலத்தைக் கொண்டே அவற்றை எளிதில் படித்துப் பயன்பெறக் கூடியவையாக இருக்கின்றன என்பதனை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

நல்லார் ஒருவர் உளரேல் எல்லாருக்கும் மழை பெய்வதுபோல நல்லார் ஒருவர் உள்ளத்தில் திருவருட்பாவிற்கு உரை காணவேண்டும் என்ற எண்ணம் தோன்றியதால், அது செம்மையான முறையில் செயல் ஆயிற்று. இவ்வுலகிற்குப் பொருளும் அவ்வுலகிற்கு அருளும் இன்றியமையாதன என்று வள்ளுவப் பெருமான் வகுத்தார். ஆனால் இவ்வுலகிலேயே பொருளுடன் அருளையும் பெற்ற புண்ணியப் பெருமகனாக விளங்குகின்ற என் இனிய நண்பர் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் அவர்கள் பொன்மனத்திலேயே இந்தப் பொன்னான எண்ணம் தோன்றியது. பரம்பரையாகவே அருட்பிரகாச வள்ளல் பெருமானிடம் பேரன்பு கொண்ட குடும்பத்தைச் சேர்ந்த அவர்கள் உள்ளத்தில் இந்த எண்ணம் தோன்றியதற்குக் காரணம், அந்த வள்ளல் பெருமானின் திருவருள் என்றே எண்ணுகின்றேன்.

எண்ணியவற்றை எண்ணிய வண்ணமே செயலாக்கும் அன்பர் மகாலிங்கம் அவர்கள், சைவநெறியினை உள்ளவாறு உணர்ந்து தெளிந்த திறனுடன் தமிழ்மொழியின்கண் நுட்பமும் உரைகாண்பதில் திட்பமும் கொண்டு, பெரும்புகழ் பெற்று விளங்கிய சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்களைக் கொண்டு அருட்பாவிற்கு உரை காணச் செய்தார்கள்.

அந்த உரை தட்டெழுத்துப் பிரதியில் எட்டாயிரம் பக்கங்களுக்கு மேல் உள்ளதாக உருவாயிற்று. அந்த உருவாக்கம் முழுமை பெற, பெருவிருப்பத்தோடு இரண்டு லட்சம் ரூபாய் வரை செலவு செய்து மகாலிங்கம் அவர்கள் அந்த முயற்சியில் முழு வெற்றி பெற்றார்கள்.

கூத்தப்பெருமான் குடிகொண்டு விளங்கும் சிதம்பரத்திற்கு அருகில் மருதூரில் பிறந்து, சற்றுத்தொலைவில் உள்ள வடலூரில் சத்திய ஞான சபையைக் கண்ட வள்ளல்பெருமானின் திருவருட்பாவிற்கு, உரிய உரை நூல், அந்தக் கூத்தபெருமானின் ஊர் எல்லையிலேயே விளங்கும் கல்விப் பேராலயமான, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின்மூலம் வெளிவரவேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். அவ்விருப்பத்தை அவர்கள் என்னிடம் வெளியிட்டபோது போற்றத்தக்க பல அரிய நூல்களை வெளியிட்ட அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் மூலம், உரையுடன் கூடிய திருவருட்பா நூல் வெளிவருவது மிகவும் பொருத்தமுடையது என்று எண்ணி, மிகுந்த மகிழ்ச்சியோடு அதற்கு நான் ஒப்புக்கொண்டேன். விரைவிலேயே ஒருநாள் அவர்கள் தட்டெழுத்துப் பிரதியில் உள்ள திருவருட்பா உரை முப்பது பகுதிகளையும் எடுத்துக் கொண்டு அவர்களும், அவர்கள் திருக்குமாரரும் என் இல்லத்திற்கு

வந்து அவற்றை என்னிடம் தந்ததை, வாழ்நாளில் நான் பெற்ற பரிசுகளை யெல்லாம்விட மிகப்பெரிய பரிசாகக் கருதுகிறேன்.

பல்வேறு நூல்களைப் பதிப்பித்தும், உரை கண்டும், தமிழ் இலக்கிய உலகிற்கு ஓர் ஒளிவிளக்காக விளங்கியவர்கள் தமிழ்த் தாத்தா என்று உலகம் புகழும் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள். அந்தத் தமிழ்ப் பேரறிஞர் அவர்களை 1920ஆம் ஆண்டு (தமிழ்க் கல்லூரிக்கு) முதல்வராக நியமித்து, அண்ணாமலைப் பல்கலைக்கழகம் மகிழ்ந்தது. என்றுமே தமிழ் அறிஞர்களைத் தேடிப் போற்றிப் பல்கலைக்கழகத்திற்கு அவர்கள் பணிகளைப் பயன்படுத்திக் கொண்டது போலவே, பல ஒப்பற்ற நூல்களையும் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் மிகச் செம்மையான முறையில் தொடர்ந்து வெளியிட்டுக்கொண்டு வருகின்றது.

அனைத்துப் பாட வேறுபாடுகளோடும் விளக்க உரைகளோடும் ஈடு இணையற்ற பதிப்பாக பதினாறு பகுதிகளாக வெளிவந்த கம்பராமாயணத்தின் முதல்தொகுதி அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் வெள்ளி விழாவில் வெளியிடப் பெற்றது.

அப் பதிப்புப் போலவே பத்துப் பகுதிகளாக மிகச் சிறந்த முறையில் வெளிவர இருக்கும் மூலமும் உரையும் கொண்ட திருஅருட்பாவின் முதல் தொகுதி (முதல் திருமுறை), இந்தியப் பெருநாட்டின் ஜனாதிபதியாக இருந்த மேன்மைதங்கிய சஞ்சீவி ரெட்டி அவர்கள் தலைமை தாங்கப் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடி இருந்த பொன்விழாவில் வெளியிடப் பெற்றது. அப்பொழுது துணைவேந்தராக விளங்கிய டாக்டர் ஜஸ்டிஸ் பி.எஸ். சோமசுந்தரம் அவர்கள், திருவருட்பா நூல் வெளி வருவதில் பேரார்வம் காட்டியதுடன், முதல் தொகுதி பொன் விழாவில் வருவதற்கான தக்க ஏற்பாடுகளையும் செய்தார்கள். அவர்களுக்கு என் ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிந்தனைத் திறத்தாலும், செயல்வன்மையாலும், தெளிந்த உயர்ந்த நிர்வாக ஆற்றலாலும், எந்தப் பொறுப்பை ஏற்றாலும் அந்தப் பொறுப்பிற்கும் அந்த அமைப்பிற்கும் நிலைத்த பெருமையினைச் சேர்க்கும் நம் மதிப்பிற்குரிய பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்கள், இப்பொழுது துணை வேந்தராக விளங்குகிறார்கள். அவர்கள் திருவருட்பாவின் பகுதிகள் தொடர்ந்து வெளிவரவேண்டும் என்பதில் காட்டிய ஆர்வமும் அக்கறையும் எடுத்துக்கொண்ட முயற்சிகளும் அளவிட முடியாதன. சென்ற ஆண்டு நிறுவியோர் நினைவு விழாவிற்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு வருகைதந்த அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்களிடம் திருவருட்பா வெளியீட்டு முயற்சிக்குத் தமிழக அரசு உதவவேண்டும் என்ற கோரிக்கையை அவர்கள் வெளியிட்டார்கள்.

அதனை அன்புடன் கேட்ட,அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள், முதலமைச்சர் எம்.ஜி.ஆர். அவர்களின் ஒப்புதலோடு, திருவருட்பா வெளியீட்டிற்கு உதவி செய்வதாக அந்த விழாவிலேயே தெரிவித்தார்கள். அங்குத் தெரிவித்தவண்ணமே அறநிலையத்துறை மூலம் வட்டி

இல்லாக் கடனாக நான்கு லட்ச ரூபாய்கள் வழங்கித் திருவருட்பாப்பகுதி கள் சிறந்த முறையில் நூல்களாக வெளிவர உதவினார்கள். இந்த நற்பணிக்கு உதவிய அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்களுக்கும், நற்செயல்கள் அனைத்திற்கும் துணை நின்று நாளும் நல்லன புரியும் தமிழக முதல்வர் மாண்புமிகு எம்.ஜி.ஆர். அவர்களுக்கும் என் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

அரசு கொடுத்த உதவித் தொகையைக்கொண்டு, திருவருட்பா உரைப் பகுதிகள் மிக அழகாகவும் அருமையாகவும் பெருமை கொள்ளத் தக்க வகையிலும் தொடர்ந்து வெளிவரத் திட்டமிட்டுச் செயலாற்றிப் பெருவெற்றி கண்டுள்ள துணைவேந்தர் பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்களுக்கும் என் அன்புகலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

திருவருட்பா உரையுடன் கூடிய பகுதிகளை அனைத்துத் தமிழ் மக்களும் படித்து அருட்பெரும் சோதியான வள்ளல் பெருமானின் அருளைப் பெறவேண்டும் என்று மனப்பூர்வமாக விரும்புகிறேன்.

மு. அ. முத்தையா செட்டியார்

**பேராசிரியர் ராம. சேதுநாராயணன்**

துணைவேந்தர்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்

## முன்னுரை

உலக உயிர்களுள் மானுடப்பிறவி மிகமிக அருமையுடையது. இதனையுணர்ந்தே ஒளவையாரும்,

'அரியது கேட்கின் வரிவடி வேலோய்
மக்கள் யாக்கையிற் பிறத்தலும் அரிதே
மக்கள் யாக்கையிற் பிறந்த காலையும்
மூங்கையும் செவிடும் கூனும் குருடும்
பேடும் நீங்கிப் பிறத்தலும் அரிதே...'

எனப் பாடிச் சென்றுள்ளார். மக்களாகப் பிறந்தவர்கள் பிறவிப் பயனடையும் நெறியில் உணர்ந்து செல்லுதல் வேண்டும். ஞான பூமியாகிய பாரதநாட்டில் சித்தர்களும், யோகியர்களும், சமய ஞானியர் களும், தத்துவ வித்தகர்களும் பிற அருட்செல்வர்களும் தோன்றி, நாட்டின் பெருமையை உலக அரங்கத்தில் உயர்த்தியுள்ளனர். அத்தகைய நல்லோர் வரிசையில் இடங்கொண்டு, உலக ஒருமை யுணர்வைப் போதிக்க முற்பட்டவரே வடலூர் இராமலிங்க அடிகள்.

இராமலிங்க அடிகளாரை, வள்ளலார் என்றும் வள்ளல் பெருமான் என்றும், திருவருட்பிரகாச வள்ளலார் என்றும் ஆர்வமுடன் அழைத்து மகிழ்கின்றனர். மக்கள் நன்னெறியிற் சென்று வாழ்வாங்கு வாழ்வதற் காக அவர் சத்திய சன்மார்க்க நெறியை வகுத்தார். 'அருட்பெருஞ் சோதியே தனிப்பெருங்கருணை' யென்று அருள்முழக்கமிட்டார். ஆன்மநேய ஒருமைப்பாட்டினையும் மரணமிலாப் பெருவாழ்வையும் பற்றிப் போதித்ததுடன் தாமும் அவற்றைத் தம் வாழ்வில் செயற் படுத்தினர்.

வள்ளற்பெருமான் உலகமக்களின் நலத்திற்காகவே தம் உள்ளுணர் வால் திருவருட்பாப் பாசுரங்களைப் பாடி வழங்கியவர். அந்தப் பாசுரங் களெல்லாம் தேனினும் இனியவை; தென்றலைப் போன்று மனத்துக்கு இதந்தருபவை; தெய்வநலம் வாய்ந்தவை.

வள்ளலாரின் இளமையில் அவர்தம் உள்ளங்கவர்ந்தவன் திருத் தணிகை முருகப் பெருமான். அந்த முருகனின் ஆறுமுகங்களைப் போலவே திருவருட்பாவும் ஆறுதிருமுறைகளாக விளங்குகின்றது.

அப்பெருமானின் தெய்வநலக் கண்ணொளிபோன்ற பிரகாசமான கருத்துக்கள், உலக அரங்கில் நிலைபெறுமேயானால் உலகெங்கும் அமைதியும் மகிழ்ச்சியும் நின்று நிலவும்; உலகமே கடைத்தேறும்.

நாளும் வள்ளற்பெருமானின் நற்கருத்துக்களைப் போற்றி அவரது செந்நெறியில் வாழும் அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள். திருவருட்பாவின் அருமையையும் பெருமையையும் நன்குணர்ந்த அவர்கள் அந்த அருள்நூல் பரவுவதற்குச் செயற்கரிய செயல் - திருத்தொண்டு - ஒன்றைச் செய்துள்ளார்கள்.

தமிழுலகம் போற்றும் உரைவேந்தரும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றிய ஆராய்ச்சிப் பேரறிஞருமான ஒளவை. சு. துரைசாமி பிள்ளையவர்களைக் கொண்டு, திருவருட்பா முழுவதற்கும் உரையெழுதச் செய்துள்ளார்கள். வள்ளற்பெருமானது வரலாற்று முறைப்படி அந்த உரை அமைந்துள்ளது.

தெளிவான உரையுடன் கூடிய திருவருட்பாவினைப் பகுதிப் பகுதிகளாகப் பிரித்து வெளியிடுவதற்கு அண்ணாமலைப் பல்கலைக்கழகமே ஏற்றது என்று கருதிய அருட்செல்வர் மகாலிங்கம் அவர்கள், உரைப் பகுதிகள் அனைத்தையும் பல்கலைக்கழக இணைவேந்தரும் பெருவெள்ளலுமாக விளங்கிய செட்டி நாட்டரசர் முத்தையவேள் அவர்களிடம் ஒப்படைத்தார்கள். அரசர் பெருமானும் பெருவிருப்புடன் அந்த நற்பணிக்கு உதவ முற்பட்டமையால் தெளிவான உரையுடன் கூடிய திருவருட்பா - முதல் திருமுறை பல்கலைக்கழகப் பொன்விழாவில் வெளியிடப் பெற்றது. இந்நிலையில் அருட்செல்வர் மகாலிங்கம் அவர்களுக்கும் செட்டி நாட்டரசர் முத்தையவேள் அவர்களுக்கும் தமிழுலகம் என்றும் நன்றிக் கடப்பாடு உடையது.

சிலம்புச் செல்வர் டாக்டர் ம.பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் மதிப்பிற்குரிய இராம. வீரப்பன் அவர்களால் 2,3,4,5- ஆம் தொகுதிகள் மிகச் சிறப்பாக வெளியிடப்பட்டன. அவற்றைத் தொடர்ந்து ஆறுந் தொகுதியும் ஏழாந் தொகுதியும் எட்டாந் தொகுதியும் வெளிவந்துள்ளன; இப்பொழுது ஒன்பதாம் தொகுதி வெளிவருகின்றது; பத்தாம் தொகுதி உருவாகி வருகின்றது.

இத் தொகுதியில் ஆறுந் திருமுறையில் திருவருட் பேறு தொடங்கி சோதியுட் ஜோதி நிறைவாக முப்பத்தொறு பகுதிகள் இடம் பெற்றுள்ளன.

இப்பகுதிகள் அனைத்திலுமே தோன்றாத் துணையான சிவபிரான் வள்ளல் பெருமானுக்குத் தோன்றும் துணையாகத் தொடர்ந்து நின்ற பெற்றிகள் பெருமையுடனும் அருமையுடனும் தேனினும் இனிய அருட்பாக்களால் பரவப்பட்டுள்ளன.

பவளம்போல் மேனியில் பால் வெண் நீறுடைய சிவபிரான் எல்லா எல்லைகளையும் கடந்து நின்று இன்னருள் புரிபவர் என்பதனை வள்ளல் பெருமான் எண்ணி எண்ணி பெருமைப்படுகின்றார்.

சமயமும் மதமும் கடந்ததோர் ஞான
 சபை நடம்புரி கின்ற தனியைத்
தமை அறிந் தவருட் சார்ந்த மெய்ச்சார்வைச்
 சத்துவ நித்த சற்குருவை
அமைய என் மனத்தைத் திருத்தி நல்அருளார்
 அமுதளித் தமர்ந்த அற் புதத்தை
நிமல நிற் குணத்தைச் சிற் குணாகார
 நீதியைக் கண்டு கொண்டேனே.

பேரொளி விளக்காகப் பரமனைக் கண்ட வள்ளல் பெருமான், அருட் பெருஞ்சோதி என்னும் தனிப்பெரும் சோதியை ஆர்வமுடன் ஏற்றி, அனைவரின் அக இருளையும் நீக்கி நமக்கும் புதுவழி காட்டிச் சென்றுள் ளார். அப்பெருமானின் திருவருட்பாப் பாடல்களில் ஒளிரும் தெய்வீகக் கருத்துக்கள் உலகம் எங்கும் பரவவேண்டும் என்பதே பல்கலைக்கழக இணைவேந்தர் டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்களின் எண்ணமும் ஆர்வமும் ஆகும்; அவ்விருப்பமே என் விருப்பமும் ஆகும்.

திருவருட்பாத் தொகுதிகள் அனைத்தையும் அனைத்துத் துறையிலும் உள்ள தமிழ்ப் பெருமக்கள் வாங்கிப் பயன் பெற வேண்டும் என்று அன்புடன் விரும்புகின்றேன்.

(ஒப்பம்) ராம. சேதுநாராயணன்

## அருட்பிரகாச வள்ளலார்

# இராமலிங்க சுவாமிகள்

## வாழ்க்கை வரலாறு

தமிழ்நாடு செய்த பெருந் தவப்பயனால், பச்சைப் பயிரோடு பக்தி பயிரையும் வளர்க்கும் தென்னார்க்காடு மாவட்டத்தில், இறைவன் திருக்கூத்தாடும் தில்லைத் திருநகரை அடுத்து உள்ள மருதூரில், இராமையா பிள்ளைக்கும் சின்னம்மையாருக்கும் மகவாக இராமலிங்கர் தோன்றினார். அவர் பிறந்த நாள் 5-10-1823 ஆகும்.

இவருடன் பிறந்தோர் சபாபதிப்பிள்ளை, பரசுராமப்பிள்ளை என்போர் ஆவர். வாழையடி வாழையாக வந்த அருள் திருக்கூட்ட மரபில் உதித்த இராமலிங்கருக்குச் செந்தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமானது திருக்காட்சி இளமையிலேயே கிடைத்தது. மக்கட் பிறவியினரையே குருவாகப் பெறும் மானிடர் உலகில், மறைமுதல்வனின் மகனை முருகப் பெருமானையே குருவாய் ஏற்றதால், இராமலிங்கர் செந்தமிழும் வடமொழியும் ஆகிய இரு பெரும் மொழிகளையும் ஓதி உணரும் பெருஞானம் கைவரப் பெற்றார்.

எனினும் உலகியல் முறைக்கேற்பக் காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியாரையும், சகோதரர் சபாபதிப் பிள்ளையையும் ஆசான்களாகப் பெற்றார். சபாபதிப் பிள்ளையின் அன்பிலும் அவர் மனைவியாரின் அரவணைப்பிலுமே வளர்ந்தார்.

கருவிலே திருவுடையவராக அவர் தோன்றியமையால், இளம் போதிலேயே கவி எழுதும் பேராற்றலைப் பெற்றார். இராமலிங்கர் பல்வேறு ஆற்றல்களின் உறைவிடமாக விளங்கினார்.

அவர் புலவராக, கவிஞராக, சொற்பொழிவாளராக, உரைநடை எழுத்தாளராக, நூலாசிரியராக, உரையாசிரியராக, ஞானசிரியராக, போதகாசிரியராக, மருத்துவராக, இவர்களுக்கெல்லாம் மேலாகத் துறவியாக, ஞானியாக, சித்தராகக் காட்சி தந்தார்.

செயற்கரியவற்றையே செய்த இராமலிங்கர், உலகங்கள் எல்லாவற்றையும் இயக்கிவரும் முழுமுதற் பொருள்களான கடவுள், அனைவர் உள்ளங்களிலும் சோதி வடிவாகத் திகழ்கின்றார். அத்தகைய அருட்

பெருஞ்சோதி ஆண்டவரின் தனிப்பெருங் கருணையே உலக உயிர்களை யெல்லாம் வாழவைக்கிறதென்றும் கண்டார்.

இவ்வுண்மையினை மனத்திற் கொண்டு, சாதி மத வேறுபாடின்றி எல்லா உயிர்களிடத்திலும் இரக்கமுடையவராய் வாழும் ஆன்மநேய ஒருமைப்பாட்டினை நல்கும், சீவகாருண்ய ஒழுக்கமே உலகில் உயர்ந்தது என அறிந்து தெளிந்தார். இதனால் சமரச சன்மார்க்க நெறியைக் கைக்கொண்டார்.

தம் நெறிதழைக்க, இறைவன் கருணைதனைப் பெற்றார். பயிர்கள் வாடுவதையே பார்க்கப் பொறுக்காத இராமலிங்கர், பசியால் வாடும் மக்களின் துயர் துடைக்க முன்வந்தார். வடலூரில் சன்மார்க்க சங்கம்—சத்திய தருமசாலை—சத்தியஞான சபை என்னும் மூன்று அருள் நெறி காக்கும் அமைப்புகளை நிறுவினார். அப் பெருமான் தனிக்கொள்கையை, தனிக்கொடியை, தனிச்சபையை, தனி மார்க்கத்தை, தனி மந்திரத்தை, வழிபாட்டைக் கண்டார்.

பொருளை வாரி வழங்கியவர்கள் பொருள் வள்ளல்கள்; அருளை வாரி வழங்கியோர், அருள் வள்ளல்கள். அருள் வள்ளல்களில் ஒருவராகி, அதேபொழுது தம் தனிப்பண்பால் ஒருவராகி, வள்ளல் என்ற தனிப்பெயரையே பெற்றுத் திகழும் வெற்றி பெற்றவர் நம் இராமலிங்கர்.

மரணமில்லாப் பெருவாழ்வு எனச் சாகாக்கலையை உலகிற்கு உணர்த்தியவர் வள்ளலார்; அவர் பொன்செய்யும் ஆற்றலையும் பெற்றிருந்தார்.

வள்ளலார் தோன்றிய காலம்தொட்டே பல அதிசயங்களை நிகழ்த்தி உள்ளார்.

அப் பெருமகனார் ஓராண்டுப் பருவத்தினராக இருந்தபோதே தில்லையம்பலநாதர் சந்நிதித் திரைச்சீலை தானே தூக்கப்பெற்று தரிசித்தார். ஒருமுறை திண்ணையிலிருந்து கீழே விழுந்தபோது இறைவி வந்து காப்பாற்றினார். ஒருநாள் பட்டினியோடு படுத்திருந்தபோது அவர் அண்ணியார் வடிவில் இறைவி காப்பாற்றினார். இளமையில் அண்ணன் சொற்பொழிவுகளுக்கு ஏடு படிக்கத் தொடங்கினார். ஒருமுறை அவர் நோய்வாய்ப் பட்டமையால் தாமே சொற்பொழிவு செய்யத் தொடங்கி நாடறிந்த பெருமகன் ஆனார்.

தண்ணீரில் விளக்கெரியச் செய்தார். ஒரே இரவில் 1596 வரிகளை உடைய அருட்பெருஞ்சோதி அகவலைப் பாடி முடித்தார்.

வள்ளலார் பக்தி நெறி நின்றாலும் உலகவாழ்வில் மக்கள் சிறந்து வாழும் பக்குவநெறியும் கண்டவர். ஏழை பணக்காரன், மேல்சாதி கீழ்சாதி முறைகளை வன்மையாகக் கண்டித்தவர்.

சாதி சமய வேறுபாடுகளைக் கடுமையாய் எதிர்த்தார். மக்கள் வாழ பயன்படும் நெறியே நன்னெறி எனப் போற்றினார்.

இளமையில் முருகப்பெருமானைக் கடவுளாகவும், திருஞான சம்பந்தரைக் குருவாகவும், திருவாசகத்தை வழிபடும் நூலாகவும் கொண்டார். பின்னர் ஒற்றியூரில் வாழும் இறைவனின் இணையற்ற பக்தராகவும், பின் தில்லையம்பல நாதரின் பக்தராகவும் விளங்கினர். முடிவில் அருட்பெருஞ்சோதி அடியவராகத் திகழ்ந்தார்.

ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் ஆகிய அனைவரும் ஒருமை உள்ளவராகி உலகில் வாழவேண்டும் என்ற பெருநோக்கோடு வள்ளலார் திருவாய் மலர்ந்தருளிய செந்தமிழ்த் திருப்பாடல்களின் தொகுதியே திருவருட்பா என்னும் கருவூலமாகும்.

அருளாளர்கள் பாடிய பாடல்கள் அனைத்தும் அருட்பாக்களே, ஆனல் 'திரு' சேர்ந்து அப் பெயருடனேயே விளங்கும் அருட்பா! வள்ளல் பெருமான் பாடிய பாடல்களின் தொகுதியே யாகும்.

திருவருட்பா ஆறு திருமுறைப் பகுதிகள் கொண்டு விளங்குகின்றது. 399 பதிகங்களையும் 5818 பாடல்களையும் கொண்டது. எல்லாப் பாடல் களும் இறைவனை முன்னிறுத்திப் பாடப்பெற்றவையே. இது பக்திப்பா உலகில் ஒரு புதுமை; தமிழ்மொழிக்கு மற்றொரு பெருமை.

ஆண்டவனை அனைவரும் நாள்தோறும் வேண்டிப் போற்றும் நிலையில் உரைநடை வேண்டுகோளாக அமைந்தவை, சுத்த சன்மார்க்கச் சத்தியச் சிறு விண்ணப்பம், சுத்த சன்மார்க்கப் பெரு விண்ணப்பம், சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான விண்ணப்பம், சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய ஞான விண்ணப்பம் என்பன வாகும்.

மனுமுறை கண்ட வாசகம், சீவகாருண்ய ஒழுக்கம் என்பன வள்ளல் பெருமான் இயற்றிய உரைநடை நூல்கள் ஆகும். அவர் உரை யாசிரியராகவும், பதிப்பாசிரியராகவும் திகழ்ந்தும் பல அரும்பணிகள் செய்தார்.

இறைநெறியை ஆன்மநேயப் பெருநெறி ஆக்கிய, வள்ளல்பெருமான் தைப்பூச நன்னுளில் வடலூரில் உள்ள சித்திவளாகத்தில் ஓர் அறைக் குள் சென்று கதவினை மூடிக்கொண்டு அருட்பெருஞ்சோதி ஆண்ட வரான இறைவனோடு இரண்டறக் கலந்து சோதி வடிவானுர். அவர் சித்தி அடைந்த நாள் 30-1-1874 ஆகும்.

வள்ளல் பெருமானின் கொள்கைகள் இன்று உலகெங்கும் பரவி வருகின்றன.

ஆண்டுதோறும் வடலூரில் தைப்பூசத் திருவிழாவில் பத்து லட்சத் திற்கும் அதிகமான மக்கள் கூடிச் சோதி வழிபாட்டில் கலந்துகொண்டு வள்ளல் பெருமானின் அருளைப் பெறுகின்றனர்.

வள்ளல் பெருமானின் அருட்திறத்தை, ஆன்மநேய, ஒருமைப் பாட்டின் உயர்வை, அறிந்து தெளிந்து திருவருட்பாக்களை நாளும் ஓதி நல்வாழ்வு பெறுவோமாக.

## உரைவேந்தர், சித்தாந்த கலாநிதி,

# ஔவை சு. துரைசாமிப் பிள்ளை

## வாழ்க்கை வரலாறு

தென்னார்க்காடு மாவட்டத்தில் ஔவையார் குப்பம் என்ற கிராமம். அதில் சுந்தரம்பிள்ளை என்ற திருமகனாரும் சந்திரமதி அம்மையார் என்ற திருமகளாரும் மனமொன்றிய தம்பதிகளாக வாழ்ந்து வந்தார்கள்.

சுந்தரம்பிள்ளை ஊர்க்கணக்கராகப் பணியாற்றி வந்தார், என்றாலும் கன்னித் தமிழ்மீது கட்டுக்கடங்கா அன்பு கொண்டவராக விளங்கினார். அன்பு மட்டுமல்லாமல், அம்மொழியில் மிக்க ஆற்றல் பெற்றவராகவும் திகழ்ந்தார். இப்பெருந்தகையார் மயிலம் முருகன்மீது பல செய்யுள் நூல்கள் இயற்றி உள்ளார்.

இந்த அன்புத் தம்பதிகளுக்கு ஐந்தாம் குழந்தையாக 1902ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 5ஆம் நாள் ஆண்மகவு ஒன்று பிறந்தது. அதற்குத் துரைசாமி என்று பெற்றோர்கள் பெயரிட்டார்கள்.

அக் குழந்தை பிற்காலத்தில் தமிழகத்தில் உரை உலகில் ஒரு பொற்காலத்தை உருவாக்க பிறந்ததாலோ என்னவோ, இறைவன் ஔவை என்னும் சொல்லை முதலாக உடைய ஊரில் அந்தச் செந்தமிழ்ச் செல்வத்தைப் பிறக்க வைத்தார்.

துரைசாமிப்பிள்ளை, தொடக்கக் கல்வியை உள்ளூரில் கற்றார். பின் திண்டிவனம் அமெரிக்கன் ஆர்க்காடு நற்பணி உயர்நிலைப் பள்ளியில் பள்ளி இறுதி வகுப்பு வரை கற்றார்.

அந்த இளமைக் காலத்திலேயே துரைசாமிப் பிள்ளைக்கு இருந்த தமிழ்ப்பற்றால், ஓலைச்சுவடிகளை ஆய்கின்ற பயிற்சியினை மேற் கொண்டார்.

வருவாய் தேடவேண்டிய நிலை வந்ததால், முதலில் துரைசாமிப் பிள்ளை உடல்நலத் தூய்மைக் கண்காணிப்பாளராகவே பொறுப்பேற்றார்; என்றாலும், தமிழ்மொழிமேல் அவர் கொண்ட பெரும் பற்றால் இப் பொறுப்பினைச் சிறிது காலத்திலேயே விட்டுவிட்டார்.

தமிழை முறையாகக் கற்க முடிவு செய்தார். நாவலர் ந.மு. வேங்கடசாமியார் அவர்களிடமும், பாவரசு வேங்கடாசலனார் அவர் களிடமும் சங்க இலக்கியங்களையும் தொல்காப்பியம் முதலிய இலக் கணங்களையும் பழுதறக் கற்றார்.

சைவ சமயக் கல்வியை கந்தசாமி தேசிகர், தவத்திரு வாலையானந்த அடிகள் ஆகியோரிடம் கற்றுந் தெளிந்தார். 1930ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் பட்டமும் பெற்றார்.

வடார்க்காடு மாவட்டக் கழக உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றும் வாய்ப்பினை ஔவை பெற்றார். அம் மாவட்டத்தில் பல பள்ளிகளில் அவர் பணியாற்றினார். அது சமயம் அவர் நடத்திய திருக்குறள் வகுப்புகள் பேரறிஞர்களையும் கவரும் தன்மைபெற்று விளங்கின.

துரைசாமிப் பிள்ளைக்கு திருமதி உலோகாம்பாள் என்னும் அம்மையாரை மணம் முடித்தனர். துரைசாமிப்பிள்ளையின் இல்லறம் என்றும் நல்லறமாக அமைந்தது.

இப் பெருமக்களின் இல்லற வாழ்வின் பயனாக திருவாளர்கள் ஔவை நடராசன், ஔவை திருநாவுக்கரசு, ஔவை ஞானசம்பந்தன், மெய்கண்டான், நெடுமாறன், திருமதிகள் பாலகுசம் அம்மையார், மணிமேகலை, திலகவதி அம்மையார், தமிழரசியார் ஆகியோர் அறிவறிந்த நன்மக்களாக வாய்ந்தார்கள்.

துரைசாமிப் பிள்ளை தமிழ் கற்றுத் தேர்ந்ததோடு, பிறமொழித் தாக்குதல்களிலிருந்து தமிழைக் காக்கும் பெரும்பணியையும் தொடக்க முதலே மேற்கொண்டார்.

உயர்நிலைப்பள்ளிப் பணியிலிருந்து நீங்கித் திருவேங்கடவன் தமிழ்த் திசைக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியேற்றார். இதன் பின்னர் துரைசாமிப் பிள்ளையின் தமிழ்ப்பணி மிக ஆக்கபூர்வமாக அமைந்தது.

நாவலர் ந.மு. வேங்கடசாமியார் அவர்கள் மணிமேகலையில் அமைந்துள்ள சமயப் பகுதிகளுக்கும் தருக்கப் பகுதிகளுக்கும் சீரிய உரை காணுமாறு துரைசாமிப் பிள்ளையிடம் பணித்தார். அதற்கு உடன்பட்ட துரைசாமிப்பிள்ளை வடமொழி வல்லவர்கள் பலரின் பெருந் துணையுடன், வடமொழி நூல்களை மிகச் செம்மையாகக் கற்று, மணிமேகலைக்கு மிகச் சிறந்த உரை கண்டார்.

தொல்காப்பியம், திருக்குறள், சிந்தாமணி, இறையனார் களவியல் சிலப்பதிகாரம் முதலிய பெருநூல்களுக்குப் பல உரைகள் பல பெருமக்களால் வரையப்பட்டன. அக்கால எல்லைக்குப்பின் அத்தகைய பெரும் புலவர்கள் வரிசையில் வைத்து எண்ணத்தக்க வகையில் உரை எழுதும் வழியில் துரைசாமிப்பிள்ளை தன்னிகரற்றவரானார்; அதனால் அவரைத் தமிழ் உலகம் உரைவேந்தராகக் கண்டது. ஔவையாகக் கண்டது.

ஔவை துரைசாமிப்பிள்ளை உரை எழுதித் தமிழகத்திற்கு வழங்கியவைகள் பலவாகும்.

யசோதர காவியம் என்ற சமணசமய இலக்கிய நூலைச் சுவடியிலிருந்து ஆராய்ந்து உரைகண்டு பதிப்பித்தார்.

தமிழ்ப் பெரும் புலவர்களின் பேராலயமாக விளங்குகின்ற அண்ணாமலைப் பல்கலைக்கழகம் துரைசாமிப்பிள்ளையை, தமிழ்த்துறையில் சேர்த்துக் கொண்டது. அங்கிருந்தபோதுதான் ஔவை துரைசாமிப்பிள்ளை சைவசமய இலக்கிய வரலாறு என்ற அரிய வரலாற்று நூலை உருவாக்கினார். ஐங்குறுநூறுக்கு உரைகண்டார். இவற்றோடு சைவசமயப் பெருநூலான ஞானாமிர்த நூலை ஆராய்ந்து விளக்கம் எழுதினார். இந்நூல்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடுகளாக மலர்ந்தன.

அடுத்து, துரைசாமிப்பிள்ளை செய்த பெரும்பணி புறநானூறுக்கு உரை கண்டதாகும். நற்றிணைக்கும் உரை கண்டார். பெரிதும் முயன்று பதிற்றுப்பத்திற்கும் உரை கண்டார்.

தமிழ்ப்பணி என்ற பெரும்பயணத்தை மேற்கொண்ட துரைசாமிப் பிள்ளை, பின் மதுரை தியாகராசர் கல்லூரித் தமிழ் பேராசிரியராகப் பொறுப்பேற்றார். எண்ணற்ற மாணவர்கள் உரைவேந்தர்பால் தமிழ் கற்று அறிஞர்கள் ஆயினர்.

உரைவேந்தரின் உரை காணும் பணிகளின் சிகரமாக அவர் திருவருட்பாவிற்கு உரைகண்ட பணி அமைந்தது. அருட்செல்வர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் நல் உதவியோடு திருவருட்பாப் பாடல்கள் அனைத்திற்கும் தெளிவும் திட்பமும் நுட்பமும் மிகுந்த உரைதனைக் கண்டார்.

மதுரைப் பல்கலைக் கழகம், இந்தியப் பல்கலைக் கழகங்களின் ஆய்வுக்கு உரைவேந்தரைப் பேராசிரியராக அமர்த்தியது. அப்போது தமிழ்நாட்டு ஊர்ப்பெயர் வரலாற்றாராய்ச்சி நூல் உரைவேந்தரால் உருவாக்கப்பட்டது.

உரைவேந்தர் நாவேந்தராகவும் விளங்கினார். இலக்கிய சமய மேடைகளில் அவர் சொற்கள் ஆலயமணிகளின் அற்புத ஓசைகளாகவே முழங்கின.

துரைசாமிப் பிள்ளைக்கு உரைவேந்தர் பட்டத்துடன், சித்தாந்த கலாநிதி, பேரவைச் செம்மல் என்ற சிறந்த பட்டங்களையும் உயர்ந்த அமைப்புகள் வழங்கிச் சிறப்பித்தன.

மகேந்திரவர்மப் பல்லவன் வடமொழியில் இயற்றிய நாடகமான மத்த விலாசத்தை உரைவேந்தர் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

எங்கும் தமிழ், எதிலும் தமிழ் எனவும், சைவமும் தமிழும் தழைத்தினிதோங்குக எனவும் முழக்கமிட்டு வாழ்நாள் முழுவதும் திகழ்ந்த தமிழ்ப் பெருமானாரான ஔவை துரைசாமிப்பிள்ளை அவர்கள், 1981 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 3 ஆம் நாள் இறைவன் திருவடி நீழலை அடைந்தார்.

உரைகாண்பதில் தனி உலகையே அமைத்து வேந்தரான துரைசாமிப்பிள்ளை அவர்களின் பொன்னனை புகழ், உலகுள்ளளவும், உயர் தனிச் செம்மொழியாம் தமிழ் உள்ளளவும் நிலைத்து நிற்கும். அவர் அரும்பணி வருங்காலங்களுக்குப் பெரும் வழிகாட்டியாகும்.

# இதனுள்...

## ஆறும் திருமுறைத் தொடர்ச்சி

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

அருட்பிரகாசவள்ளலார்

சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் அருளிய

# திருவருட்பா-வரலாற்றுமுறை

உரைவேந்தர் உரை

ஒன்பதாம் தொகுதி

# ஆறும் திருமுறை

## 30. திருவருட் பேறு

அஃதாவது, இறைவன் திருவருளைப் பெறுதல் பொருட்டு, விண்ணப்பம் செய்வதாம்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3780. படிகளெலாம் ஏற்றுவித்தீர் பரமநடம் புரியும்
பதியைஅடை வித்தீர் அப் பதிநடுவே விளங்கும்
கொடிகள்நிறை மணிமாடக் கோயிலையும் காட்டிக்
கொடுத்தீர்அக் கோயிலிலே கோபுரவா யிலிலே
செடிகள்இலாத் திருக்கதவம் திறப்பித்துக் காட்டித்
திரும்பவும்நீர் மூடுவித்தீர் திறந்திடுதல் வேண்டும்
அடிகள்இது தருணம்இனி அரைக்கணமும் தரியேன்
அம்பலத்தே நடம்புரிவீர் அளித்தருள்வீர் விரைந்தே.

**உரை:** அம்பலத்தில் ஞான நடம் புரிகின்ற பெருமானே; நீ மேலான ஞான நடனத்தைச் செய்கின்ற அருட் பதியை அதற்குரிய படிகள் எல்லாம் ஏறி அடையுமாறு அருளினாய்; அங்ஙனம் அடைந்த எனக்கு, அவ்வருள் நிலையமாகிய பதியின் நடுவில் விளங்குகின்ற கொடிகள் நிறைந்த மணிமாடத்தை யுடைய திருக்கோயிலை எளியேன் காணச் செய்து, அக்கோயிலில் கோபுர வாயிலில் குற்றமில்லாத அழகியகதவைத் திறந்து காட்டிப் பின்னர் அதனை மூடும்படி செய்தருளி விட்டாய்; அதனைத் திறந்து அடியேனுக்கு அருளுதல் வேண்டும்; அதற்கு ஏற்ற

தருணம் இதுவாகும்; தாமதித்தால் நான் அரைக்கணமும் உயிர் தாங்க மாட்டேன்; ஆதலால் எனக்குத் திருவருளை விரைந்து செய்தருள வேண்டும். எ.று.

அம்பலத்தில் ஞான நடம் புரியும் பெருமானாதலால் அவன் நடம் புரியும் அருள் ஞானப் பதியாவது தத்துவாதீதப் பரவெளியாம். அதனை யடைதற்குத் தத்துவங்களாகிய படிகள் மேல் ஏறுதல் வேண்டும். அங்ஙனம் ஏறுதற்கு அவன் திருவருள் இன்றியமையாதாதலால், "படிகள் எலாம் ஏற்றுவித்தீர் பரம நடம் புரியும் பதியை அடைவித்தீர்" எனக் கூறுகின்றார். திருக்காளத்தி மலையேறிச் சிவத்தைக் கண்ட கண்ணப்ப நாயனாருடைய செயலைப் "பேணு தத்துவங்க ளென்னும் பெருகு சோபானம் ஏறி ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர்" என்று சேக்கிழார் பெருமான் குறிப்பது ஈண்டு நினைவு கூரத் தக்கது. இதனால், வடலூர் வள்ளல் தத்துவ ஆராய்ச்சியை மேற்கொண்டு அத்தத்துவம் முப்பத்தாறினையும் ஆராய்ந்து கடந்து, தத்துவாதீதமாகிய பரசிவப் பதியைக் கண்டருளிய திறம் குறிப்பாய்த் தெரிவிக்கின்றார். அத்தத்து வாதீதப் பெரும் பதியில் சிவ பரம்பொருள் எழுந்தருளும் திருக்கோயிலைக் கண்டு கொண்ட திறத்தை, "அப்பதி நடுவே விளங்கும் கொடிகள் நிறை மணிமாடக் கோயிலையும் காட்டிக் கொடுத்தீர்" என்றும், அந்த ஞானக் காட்சியில் திருக்கோயிலின் கோபுர வாயிலும், அவ்வாயிலின் கண் நிற்கும் திருக்கதவும் காணப் பட்டமை விளங்க, "அக்கோயிலிலே கோபுர வாயிலிலே திருக்கதவம் திறப்பித்துக் காட்டி" என்றும், கண்ட காட்சி மீளவும் மறைந்தமை புலப்பட, "திரும்பவும் நீர் மூடுவித்தீர் திறந்திடுதல் வேண்டும்" என்றும் முறையிடுகின்றார். திறந்த கதவம் மூடிக் கொண்டமை பற்றி ஆறாத் துயரம் உறுகின்றாராதலால், "திறந் திடுதல் வேண்டும் இது தருணம் இனி அரைக்கணமும் தரியேன்" என்று வருந்துகின்றார். படிகளாகிய தத்துவங்கள் ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவம் என மூன்று வகையாய், பின்னர் இருபத்துநாலும் ஏழும் ஐந்துமாக முப்பத்தாறாய் விரிந்து நிற்றலின் அவை யனைத்தும் அகப்பட, "படிகள் எலாம்" என்று குறிக்கின்றார். பொறி புலன்களை அடக்கி யோகக் காட்சியை மேற்கொண்டு படிப்படி யாகத் தத்துவங்களைக் கடந்து அதீதமாகிய சிதாகாச ஞானப் பதியை அடைந்த வடலூர் வள்ளல், சாக்கிரத்தே அதீதத்தைப் புரியும் சான்றோராதலால், தமது யோக நெறிக்குத் துணை புரிந்த திருவருளை உடன் உணர்ந்து உரைக்கின்றமை புலப்பட, "ஏற்றுவித்தீர்" எனவும், "அடைவித்தீர்" எனவும் சிவன் செயலாகச் செப்புகின்றார். சிதாகாசப் பெருமதியின் நடுவிடத்தே காட்சி தருகின்ற திருவருட் கோயிலைக் காணும்படிச் செய்தருளிய அருட் செயலை, "பதி நடுவே விளங்கும் கோயிலையும் காட்டிக் கொடுத்தீர்" என்று கூறுகின்றார். யோகக் காட்சியில் மானத வெளியில் தோன்றிய திருவருட் கோயிலைக் கண்டு கொண்ட வள்ளற் பெருமான் கோபுர வாயிலைக் காண்கின்றார்; அக் கோயிற் கதவம் திருவருளால் திறந்து உள்ளே திகழும் திருவருள் ஞான ஒளியைக் காட்டிப் பின்னர் மூடிக் கொண்டமை விளங்க, "கோபுர வாயிலிலே திருக்கதவம் திறப்பித்துக் காட்டித் திரும்பவும் நீர் மூடுவித்தீர்" என்று உரைக்கின்றார். திருக்கதவம் திறந்து காட்டிய திருவருள் ஞான ஒளியின் காட்சி, பேரின்பம் சுரத்தலால் அதனைக்

காணவெழும் ஆர்வத்தை வெளிப்படுத்தற்கு, "திறந்திடுதல் வேண்டும்" என்றும், "ஆர்வம் குறைதற்கு முன் திறந்திடுதல் வேண்டும்; அதற் கேற்ற மனப் பக்குவம் தமக்கு அமைந்துளது என்பாராய், "திறந்திடுதல் வேண்டும் இது தருணம்" என்றும், தாமதமாயின் ஆர்வ மிகுதியால் தமக்கு உயிர் நில்லாது என்றற்கு, "இனி அரைக்கணமும் தரியேன்" என்றும், "விரைந்து அளித்து அருள்வீர்" என்றும் முறையிடுகின்றார். திருவருள் ஞான நிலையத்தைக் கோயில் என உருவகம் செய்கின்றாரா தலின் அதற்கேற்பக் "கொடிகள் நிறை மணிமாடம்" எனவும், "கோயில்" எனவும், "கோபுர வாயில்", எனவும் "திருக்கதவம்" எனவும் குறிக்கின்றார். உலகியல் கதவுகட்கு உள்ள குற்றங்கள் ஞானக் கோயில் கதவுக்கு இல்லையென்பது தோற்றுவித்தற்கு, "செடிகள் இலாத் திருக்கதவம்" என்று சிறப்பிக்கின்றார். செடி-குற்றம்.

இதனால், சாக்கிராதீதத்தில் யோகக் காட்சியுற்றுத் தத்துவாதீதப் பரவெளியில் திருவருள் ஞானக் கோயிலைக் கண்டு திருக்கதவம் திறந்து சிவதரிசனம் பெற்று இன்புற்ற திறம் கூறியவாறும். (1)

**3781.** **பெட்டிஇதில் உலவாத பெரும்பொருள்உண் டிதுநீ**
**பெறுகஎன அதுதிறக்கும் பெருந்திறவுக் கோலும்**
**எட்டிரண்டும் தெரியாதேன் என்கையிலே கொடுத்தீர்**
**இதுதருணம் திறந்ததனை எடுக்கமுயல் கின்றேன்**
**அட்டிசெய நினையாதீர் அரைக்கணமும் தரியேன்**
**அரைக்கணத்துக் காயிரம்ஆ யிரங்கோடி ஆக**
**வட்டிஇட்டு நும்மிடத்தே வாங்குவன்நும் ஆணை**
**மணிமன்றில் நடம்புரிவீர் வந்தருள்வீர் விரைந்தே.**

**உரை :** அழகிய அம்பலத்தின்கண் நடம் புரியும் கூத்தப் பெருமானே; எனக்குப் பெட்டி ஒன்றைத் தந்து இதன்கண் கெடாத பெரிய பொருள் ஒன்று உண்டு; இதனை நீ பெற்றுக் கொள்க எனத் திருவாய் மலர்ந்து அப்பெட்டியைத் திறப்பதற்குரிய பெரிய திறவுகோல் ஒன்றையும் எட்டும் இரண்டும் தெரியாதவனாகிய என்னுடைய கையிலே கொடுத் தருளினீர்; இச்சமயத்தில் யான் இப்பெட்டியைத் திறந்து அதனுள் இருக்கும் பெரும் பொருளை எடுத்துக் கொள்ள முயலுகின்றேன்; என் முயற்சி முற்றுதவாறு தடை செய்ய நினைத்தல் வேண்டா; தடுக்கப் படின் அரைக்கணமும் நான் உயிர் வாழேன்; அரைக்கண நேரம் தாமதித்தாலும் ஆயிரம் ஆயிரம் கோடியாக வட்டியோடு நும்மிடத்தே வளைத்து வாங்குவேன்; இது நும்மேல் ஆணை. எ.று.

இதன்கண் பெட்டி என்றது திருவருட் சிவயோகம். இதனுள் இருக்கும் பெரும் பொருள் என்பது சிவயோகத்தால் பெறுதற்குரிய சிவ போகம். அதனைத் திறக்கும் திறவு கோல் திருவருள் ஞானமாகும். சிவயோகத்துக்குள் சிவபோகம் இருத்தலின், "பெட்டி இதில் உலவாத பெரும் பொருள் உண்டு" என்று கூறுகின்றார். சிவபோகத்தினும் பெரிய பொருளும், என்றும் கெடுதல் இல்லாத தன்மையுடையதும் எவ்வுலகிலும்

இல்லாமை பற்றி அதனை, "உலவாத பெரும்பொருள்" என உரைக்கின்றார். சிவயோகத்தின் முடிவில் இச்சிவபோகம் என்றும் எய்த உளவாதல் பற்றி, "உண்டு" என்றும், "இது நீ பெறுக" என்றும் உரைக்கப்படுகிறது. சிவ யோகம் கைகூடுதற்குத் திருவருள் ஞானம் வேண்டப்படுதலின் அதனைத் திறவு கோலாக்கி, "அது திறக்கும் பெருந் திறவு கோல்" என்று கூறுகின்றார். திருவருள் ஞானத்தால் சிவயோகம் புரிந்து சிவபோகம் நுகரப்படுதலின், "பெட்டி" என்றும் "பெரும் பொருள்" என்றும், "பெருந் திறவு கோல்" என்றும் உருவக வாயிலாக விளக்குகின்றார். திருவருள் ஞானத்தின் பெருமை தோன்றப் "பெருந் திறவுகோல்" என்று பேசுகின்றார். ஒன்றும் அறியாதவனை எட்டும் இரண்டும் அறியாதவன்" என்பது மரபு; "அ உ அறியா அறிவில் இடை மகனே" என்று பண்டையோர் இக்குறிப்பை வைத்துப் பழிப்பது வழக்கம். இவ்வாறே மணிவாசகப் பெருமானும் தம்மை "எட்டினோடு இரண்டும் அறியேனைப் பட்டி மண்டபம் ஏற்றினை" (சதகம்) என்று கூறுவது காண்க. திருவருள் ஞானமில்லாத எளியவனாகிய என் கையில் கொடுத்தருளினீர் என்றற்கு. "எட்டிரண்டும் தெரியாதேன் என் கையிலே கொடுத்தீர்" என்று கூறுகின்றார். கையிலே கொடுத்தலாவது சிவபோகப் பேற்றிற்குரிய நெறியாகிய சிவயோகத்தை உபதேசித் தருளுவதாம். அத்திருவருள் ஞான உபதேசத்தைக் கொண்டு யோகம் புரிந்து சிவபோகத்தை நுகர இப்பொழுது முயல்கின்றேன் என்ற கருத்துப் புலப்பட, "இது தருணம் திறந்து அதனை எடுக்க முயலுகின்றேன்" என அவ்வுருவக வாய்ப்பாட்டிலேயே உரைத் தருளுகின்றார். அட்டிசெயல் - தடை செயல். தடை உண்டாயின் முயற்சி கலக்கமுற்று வீழ்ந்தொழியின் யான் உயிர் வாழேன் என்பார், "அட்டி செய நினையாதீர் அரைக்கணமும் தரியேன்" என்று கூறுகின்றார். என் முயற்சி முற்றுதற்கு அரைக்கண நேரம் தாமதித்தாலும் சிவபோக நுகர்ச்சியினை நெடிது பற்றிப் பெரிதும் நுகர்வேன் எனப் போக நுகர்ச்சியின் பெருமை தோற்றுவித்தற்கு, "அரைக்கணத்துக்கு ஆயிரமாயிரம் கோடியாக வட்டியிட்டு நும்மிடத்தே வாங்குவேன்" என்றும், இதனை நும் மேல் ஆணையாக யுரைக்கின்றேன் என வற்புறுத்து வாராய், "நும் ஆணை" என்றும், "விரைந்து வந்து அருள்வீர்" என்றும் இயம்புகின்றார்.

இதனால், சிவபோகத்திற்குரிய நெறியாகிய சிவயோகத்திற்கு வேண்டப்படும் திருவருள் ஞானம் உபதேச வாயிலாகப் பெற்ற திறத்தை வடலூர் வள்ளல் எடுத்துரைத்தவாறும். (2)

**3782.** **கைக்கிசைந்த பொருள்எனக்கு வாய்க்கிசைந்துண் பதற்கே**
**காலம்என்ன கணக்கென்ன கருதும்இடம் என்ன**
**மெய்க்கிசைந்தன் றுரைத்ததுநீர் சத்தியம் சத்தியமே**
**விடுவேனோ இன்றடியேன் விழற்கிறைத்தேன் அலவே**
**மெய்க்கிசைந்த சிவபோகம் விளைத்துணவே இறைத்தேன்**
**தினந்தோறும் காத்திருந்தேன் திருவுளமே அறியும்**
**மைக்கிசைந்த விழிஅம்மை சிவகாம வல்லி**
**மகிழநடம் புரிகின்றீர் வந்தருள்வீர் விரைந்தே.**

**உரை :** மை தீட்டிய கண்களை யுடைய அம்மையாகிய சிவகாம வல்லி கண்டு இன்புறுமாறு திருக்கூத்தாடுகின்ற பெருமானே; கைக்கேற்ற பொருள் வாய்த்து அதனை உண்பதற்குத் தக்க வாய்ப்புக் கிடைத்த வழி அதனை யுண்பதற்குக் காலமோ, கணக்கோ, இடமோ வேண்டா என எனக்கு நேர்பட்டு அன்று குருபரம்பரையாய் எழுந்தருளி எனக்கு நீர் உரைத்தது மெய்ம்மை மெய்ம்மையேயாகும்; இனி அதனை யுண்ணுது விடேன்; இன்று வரை அது குறித்து அடியவனுகிய யான் வீணில் முயன்றேனில்லை; செயற் பாட்டிற் குகந்த செயல் மேற்கொண்டு சிவபோகத்தை விளைவித்து நுகர்வதற்கே முயன்றுள்ளேன்; அது நோக்கியே நாள்தோறும் காத்திருக்கின்றேன்; இதனைப் பெருமானுகிய நினது திருவுள்ளம் நன்கறியும் அன்ருே. எ.று.

கைக்கு இசைந்த பொருள் என்பது ஞானசிரியன் உபதேசித் தருளும் சிவஞானம். சிவஞானப் பயனுகிய சிவபோகத்தை நுகர்வதற்கு வாய்ப்பு கிடைத்தபோது காலம், இடம், அளவு முதலியன நோக்காது நுகர்தல் வேண்டும் என்று அன்று நீவிர் உபதேசித்து அருளியது உண்மையுரை அன்ருே என விளக்குதற்கு, ''வாய்க்கு இசைந்து உண்பதற்கே காலமென்ன கணக்கென்ன கருதும் இடமென்ன மெய்க் கிசைந்து அன்று உரைத்தது நீர் சத்தியம் சத்தியமே'' என உரைக் கின்ருர். நுகர்தற்குரிய சால்பை யுணர்த்துவதற்கு ''எனக்கு வாய்க் கிசைந்து உண்பது'' எனக் குறிப்பு மொழியால் உரைக்கின்ருர். பரம்பொருள் மானிட உருவில் குருமுதல்வனுய் வந்து உரைத்தமை தோன்ற, ''மெய்க் கிசைந்து அன்று உரைத்தது'' என விளம்புகின்ருர். அன்று செய்த உபதேசத்தை விடாமற் கைக்கொண்டு இன்று வரை முயல்கின்றேனே யன்றி வீண் பொழுது போக்குகின்றேனில்லை என்பா ராய், ''விடுவேனே இன்று அடியேன் விழற் கிறைத்தேன் அலவே'' என விளம்புகின்ருர். வீண் செயல் புரிவதை ''விழற்கு இறைத்தல்'' என்பது உலகோர் பழமொழி. சிவஞானச் சிவயோக முயற்சிகளால் சிவபோகம் விளைவது பற்றி, ''செய்க் கிசைந்த சிவபோகம் விளைத்துணவே இறைத்தேன்'' என்று தெரிவிக்கின்ருர். சிவஞானம் பெற்றுச் சிவயோகம் புரிதல் செய்தற்குரிய செயலாதலின் அதனை, ''செய்க்கு இசைந்த சிவபோகம்'' என்றும், சிவயோக முயற்சியை ''இறைத்தேன்'' என்றும் விளக்குகின்ருர். நாளும் சிவஞான யோகப் பயனுகிய சிவபோகத்தை எதிர்பார்த்த வண்ணம் இருந்தமை புலப்பட, ''தினந்தோறும் காத்திருந்தேன்'' என்றும், தமது முயற்சியின் மெய்ம்மை விளக்குதற்குத் ''திருவுளமே அறியும்'' என்றும் தெரிவிக் கின்ருர். நெடிது காத்திருக்குமாறு என்னை விடலாகாது என உரைப்பார், ''விரைந்து வந்தருள்வீர்'' என வேண்டுகிருர்.

இதனல், சிவயோகமாகிய பயனை விரைந்து அருள் புரியுமாறு வேண்டியவாரும். (3)

**3783.** பரிகலத்தே திருஅமுதம் படைத்துணவே பணித்நீர்
பணித்தபின்னே என்னுடைய பக்குவம்பார்க் கின்றீர்
இருநிலத்தே பசித்தவர்க்குப் பசிநீக்க வல்லார்
இவர்பெரியர் இவர்சிறியர் என்னல்வழக் கலவே

**உரிமையுற்றேன் உமக்கேஎன் உள்ளம்அன்றே அறிந்தீர்**
**உடல்பொருள்ஆ விகளைஎலாம் உம்மதெனக் கொண்டீர்**
**திரிவகத்தே நான்வருந்தப் பார்த்திருத்தல் அழகோ**
**சிவகாம வல்லிமகிழ் திருநடநா யகரே.**

**உரை :** சிவகாமவல்லி கண்டு மகிழ ஆடல் புரிகின்ற தலைவரே; உண்ணும் கலத்தில் உணவினைப் படைத்து இதனை உண்க என்று சொல்லிப் பின்னர் அதனை யுண்டற்குரிய பக்குவம் எனக்கு உண்டா வென நோக்குகின்றீர்; இப்பெரிய உலகத்தில் பசித்தவர்க்கு உணவு தந்து அதனைப் போக்க வல்ல பெரியவர்கள், பசித்தவர்களில் இவர் பெரியவர், இவர் சிறியவர் என ஆராய்தல் மரபன்று; தேவரீருடைய திருவருள் ஞான வமுதத்தை யுண்டற்கு அமைந்த உரிமை யுடையவன் நான்; உமக்கே எனது உள்ளம் உரிமை கொண்டது என்பதை அப் பொழுதே தேவரீர் அறிந்திருக்கிறீர்; எனது உடல் பொருள் உயிர் ஆகிய எல்லாவற்றையும் உம்முடையவை எனக் கொண்டிருக்கிறேன்; மனத் தின்கண் திரிபு கொண்டு நான் வருந்துவதைப் பார்த்திருப்பது உமக் கழகாகாது. எ.று.

ஞானசிரியனுய்ப் போந்து திருவருள் ஞானத்தை உபதேசித்து அதன் வாயிலாகச் சிவபோகத்தைப் பெற்று நுகருமாறு செய்தருளிய திறத்தைக் குறிப்பு மொழியால், "பரிகலத்தே திருவமுதம் படைத் துணவே பணித்தீர்" என்றும், திருவருள் ஞானப் பயிற்சியாகிய சிவயோகத்துட் புகுந்தபோது யோகமும் போகமும் எய்துதற்குக் காலம் தாழ்க்கின்றமை புலப்படக் குறிப்பு வாய்பாட்டிலேயே, "பணித்த பின்னே என்னுடைய பக்குவம் பார்க்கின்றீர்" என்றும் உரைக்கின்றார். பசித்தவர்க்கு உணவளிக்கும் பண்புடைய நன்மக்கள் பசித்தவரை அமர்வித்துப் பரிகலமிட்டு உணவு பரிமாறிய பின் அவர்களிற் பெருமை சிறுமை யுடையவர்களைக் கண்டறிவது உலகியல்பன்று; இதனை எடுத்தோதித் தமக்குத் திருவருள் ஞானமாகிய அமுதத்தை வழங்கு வதில் பக்குவம் உடைமை இன்மைகளை நோக்கலாகாது என வற்புறுத்து கின்றவர், "இருநிலத்தே பசித்தவர்க்குப் பசி நீக்க வல்லார் இவர் பெரியவர் இவர் சிறியர் என்னல் வழக்கலவே" என்று இயம்புகின்றார். தமக்கு அத்திருவருள் ஞானமாகிய அமுதத்தைப் பெற்று உண்பதற் கேற்ற பக்குவமும் தகுதியும் உண்டென்பார், "உரிமை யுற்றேன்" என்றும், உம்முடைய திருவருளின் தொடர்பு உற்ற பொழுதே என் உள்ளம் உம்முடைய திருவடியின்பால் பொருந்திய நிலைமையைத் தேவரீர் அறிந்திருக்கின்றீர்; அக்காலத்தேயே என் உடல் பொருள் ஆவி மூன்றையும் நீ ஏன்று கொண்டாய் என முறையிடுவார், "என் உள்ளம் அன்றே அறிந்தீர்; உடல் பொருள் ஆவிகளை எலாம் உமதெனக் கொண்டீர்" என்றும் கூறுகின்றார். "அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாம் குன்றே யனையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ" (குழைத்த) என மணிவாசகப் பெருமான் உரைப்பது காண்க. ஞானப் பேறு எய்துதற்குக் காலம் தாமதிப்பதால் மனவமைதி குன்றி வருந்துவது விளங்க, "திரிவகத்தே நான் வருந்தப் பார்த்திருத்தல் அழகோ" என்று முறையிடுகின்றார். அகத்தே திரிபுற்று வருத்த முறுவதைத் "திரிவகத்தே நான் வருந்த" என்று குறிக்கின்றார்.

இதனால், திருவருள் ஞானத்தை நல்கிய பெருமான் அதன் வாயிலாகச் சிவயோக போகத்தை நுகர்தற்கு எழும் உள்ளத்தின் விரைவைப் புலப்படுத்தவாறும். (4)

**3784. பொய்கொடுத்த மனமாயைச் சேற்றில்விழா தெனக்கே**
**பொன்மணிமே டையில்ஏறிப் புந்திமகிழ்ந் திருக்கக்**
**கைகொடுத்தீர் உலகம்எலாம் களிக்கஉல வாத**
**கால்இரண்டும் கொடுத்தீர்எக் காலும்அழி யாத**
**மெய்கொடுக்க வேண்டும்உமை விடமாட்டேன் கண்டீர்**
**மேல்ஏறி னேன் இனிக்கீழ் விழைந்திறங்கேன் என்றும்**
**மைகொடுத்த விழிஅம்மை சிவகாமவல்லி**
**மகிழநடம் புரிகின்றீர் வந்தருள்வீர் விரைந்தே.**

**உரை :** மை தீட்டிய கண்களையுடைய தேவியாகிய சிவகாமவல்லி நேரில் கண்டு மகிழத் திருக்கூத்தாடுகின்ற பெருமானே; பொய் யறிவை விளைவிக்கின்ற மனத்திடைப் படரும் மாயையாகிய சேற்றில் விழாதபடிப் பொன்னாலும் மணியாலுமாகிய மேடை மேல் ஏறி மனம் மகிழ்ச்சியோடு இருக்குமாறு எனக்குத் திருவருள் ஞானம் தந்து உதவினீர்; இனி அது கொண்டு யான் ஞானவான்களின் சூழல்கள் எங்கும் சென்று கண்டு இன்புறுதற்குத் தளராத கால் இரண்டையும் கொடுத்தருளியுள்ளீர்; அதனால் எக்காலத்தும் அழியாத மெய்யுணர்வைத் தந்தருளுதல் வேண்டும்; அதனைப் பெறும் வரையில் உமது தொடர்பை விட மாட்டேன்; ஞான நெறியில் மேனிலை அடைந்த யான் இனிமேல் கீழ் நிலையாகிய உலகியல் வாழ்வை என்றும் விரும்பி இறங்க மாட்டேன்; ஆதலால் காலம் தாழ்த்தாது என்பால் வந்து அத்திருவருள் ஞான விளக்கத்தைத் தந்தருள்வீராக. எ.று.

மங்கல மகளிர் கண்களில் மை தீட்டிக் கொள்ளுதல் மரபாதலின் உமாதேவியை, "மை கொடுத்த விழி யம்மை" என்று சிறப்பிக்கின்றார். மாணிக்கவாசகரும் "மையார் தடங்கண் மடந்தை" (எம்பாவை) என்று கூறுதல் காண்க. உலகியல் வாழ்வில் மனத்தின்கண் படியும் மாயையால் பொய் நினைவும், பொய் ஒழுக்கமும் உளவாதலின், "பொய் கொடுத்த மனமாயை" எனவும், சேற்றில் விழுந்தவர் எளிதில் ஏற மாட்டாது மேனி முழுதும் மாசு பட்டு வருந்துவது போல உலகியல் மாயையில் அழுந்தினவர் மனம் மாசுற்று வருந்துதல் பற்றி, "மாயைச் சேற்றில் விழாது" எனவும், ஞான நெறியில் நின்று இன்புற்று இருத்தல் வேண்டித் திருவருள் ஞானம் நல்கப்படுவது விளங்க, "பொன் மணி மேடையில் ஏறிப் புந்தி மகிழ்ந்திருக்கக் கைகொடுத்தீர்" எனவும் புகல் கின்றார். பொன் மணி மேடை என்றது திருவருள் ஞானம் கை வந்த நிலையை. திருவருள் ஞானம், சிதாகாசம் எனவும், திருச்சிற்றம்பலம் எனவும் சான்றோரால் புகழப்படுதலின், அந்த அம்பலத்தைப் "பொன் மணி மேடை" எனக் குறிப்பு மொழியால் தெரிவிக்கின்றார். சிவஞானப் பேற்றால் மேனிலை யுற்ற வடலூர் வள்ளல், தாம் பெற்ற ஞானம், அல்லாதார் கூட்டத்தால் கெடாமை வேண்டி ஞானவான்களின் கூட்டத்தையே விரும்பிச் சென்றடையும் செயலுடையராதல் புலப்பட,

"உலகமெலாம் களிக்க உலவாத கால் இரண்டும் கொடுத்தீர்" எனவும், வாதனை வயத்தால் அஞ்ஞானிகளின் கூட்டம் உண்டாயினும் தாம் பெற்ற திருவருட் சிவஞானம் கெடாது விளக்கமுறுதல் வேண்டும் என்பார், "எக்காலும் அழியாத மெய் கொடுக்க வேண்டும்" எனவும் இயம்புகின்றார். உலவாத கால் - நடையில் தளர்ச்சி யுறாத கால். மெய் என்றது சிவஞானமாகிய மெய்யுணர்வை. கால் இரண்டும் என்பதற்கு உட்சுவாசம், வெளிச்சுவாசம் ஆகிய இரண்டு எனவும், அழியாத மெய் கொடுக்க வேண்டும் என்பதற்குச் 'சாகா உடம்பு' எனவும் கூறுவோர் உண்டு. சிவஞானத்தைத் தந்து மேனிலை யின்பத்தில் இருத்தினீரா தலால், இனி யாம் உமது நெறியினின்றும் பிரியேன் என வலியுறுத்தற்கு, "உமை விட மாட்டேன் கண்டீர்" எனவும், "மேல் ஏறினேன் இனிக் கீழ் விழைந்து இறங்கேன்" எனவும் கூறுகின்றார். மனத் தடுமாற்றம் உளவாகாமைப் பொருட்டு "விரைந்து வந்தருள்வீர்" என்று விளம்பு கின்றார்.

இதனால், சிவஞானப் பேறு எய்தினமையால் உண்டாகிய நலம் உரைத்தவாறு. (5)

**3785. மின்போலே வயங்குகின்ற விரிசடையீர் அடியேன்**
**விளங்கும்உம திணைஅடிகள் மெய்அழுந்தப் பிடித்தேன்**
**முன்போலே ஏமாந்து விடமாட்டேன் கண்டீர்**
**முனிவறியீர் இனிஒளிக்க முடியாது நுமக்கே**
**என்போலே இரக்கம்விட்டுப் பிடித்தவர்கள் இலையே**
**என்பிடிக்குள் இசைந்ததுபோல் இசைந்ததிலை பிறர்க்கே**
**பொன்போலே முயல்கின்ற மெய்த்தவர்க்கும் அரிதே**
**பொய்தவனேன் செய்தவம்வான் வையகத்திற் பெரிதே.**

**உரை :** மின்னலைப் போல் ஒளி வீசுகின்ற விரிந்த சடையை யுடைய பெருமானே; ஒளி விளங்கும் உன்னுடைய இரண்டாகிய திருவடிகளை அடியவனாகிய யான் மெய்யுற அழுந்தப் பிடித்துக் கொண்டேன்; முற்காலத்தைப் போல யான் ஏமாற்றமுற்று அவற்றை விட மாட்டேன் காண்; வெறுப்புணர்வில்லாத பரமனாகிய நீர் இனி எனக்கு உம்மை மறைத்துக் கொள்ள முடியாது; என் போல் இரக்க மின்றி உம்முடைய திருவடிகளைப் பற்றிக் கொண்ட அடியவர்கள் உமக்கு யாருமில்லை; என் பிடிக்குள் இசைந்து அகப்பட்டது போல் நீரும் பிறர் பிடித்துக் கொள்ள இசைந்ததில்லை; பொன் பெறுவாரைப் போல முயற்சி செய்கின்ற மெய்த்தவமுடையவர்களுக்கும் இதுபோல் நீ அகப்படுவது அரிதாகும்; பொய்ந்நெறியை யுடையவனாகிய யான் செய்த தவம் வையத்திலும் வானத்திலும் பெரிதாகும். எ. று.

சிவபெருமானுடைய திருமுடியில் விளங்குகின்ற சடை மின்னலைப் போல ஒளி செய்வது எனச் சான்றோர் புகழ்ந்தோதுதலின், "மின் போலே விளங்குகின்ற விரிசடையீர்" என்று புகல்கின்றார். எக்காலத் தும் ஆடும் இயல்புடைய பெருமானாதலின் அவரது சடை விரிந்திருக் கும் இயல்பு பற்றி, "விரி சடையீர்" என விளம்புகின்றார். சிவனுடைய

திருவடிகளைத் தமது மனத்தின்கண் அழுந்தப் பற்றி யிருக்கின்றாராதலால், வடலூர் வள்ளல், "விளங்கும் உமது இணையடிகள் மெய் அழுந்தப் பிடித்தேன்" என விளம்புகின்றார். முன்னொருகால் தமது மானதக் காட்சியில் சிவனது திருவடி எய்தப் பெற்றுப் பின்னர் அக்காட்சி முடிவில் மறைந்து ஒழியக் கண்டாராதலின், "முன் போலே ஏமாந்து விட மாட்டேன் கண்டீர்" என்றும், பலகாலும் நினைந்து போற்றினும் வெறுது காட்சி தந்து அருளுவது பற்றி, "முனிவறியீர்" என்றும், இடையறவு படாது மனத்தின்கண் சிவனுடைய திருவடிகளை நிறுத்தி வழிபடுதல் விடாமை தோன்ற, "இனி ஒளிக்க முடியாது" என்றும் விளம்புகின்றார். மானதக் காட்சியில் இறைவன் திருவடிகளை இறுகப் பற்றிக் கொண்டவர்கள், தம்மைப் போல் பிறர் பற்றியது இல்லை எனத் தெளிந்து உரைப்பாராய், "என் போலே இரக்கம் விட்டுப் பிடித்தவர்கள் இலையே" எனவும், தமது பிடிக்குள் இறைவன் அகப்பட்டது போல் பிறர் பிடிக்குள் அகப்படாமை விளங்க, "என் பிடிக்குள் இசைந்தது போல்பிறர்க்கு இசைந்ததிலை" எனவும் கூறுகின்றார். இறைவன் திருவடிகளை இறுகப் பற்றிக் கொள்ளும் சால்பு தமக்கு அமைந்ததைப் போல மெய்யுணர்வுடைய தாபதர்க்கும் அமையவில்லை என்றற்கு, "பொன் போலே முயல்கின்ற மெய்த்தவர்க்கும் அரிதே" என விளக்குகின்றார். பொன் வேண்டி முயல்பவர் மெய்வருத்தம் பாராது கண்ணுறக்கமின்றி முயல்வது போல, மெய்ந்நெறித் தாபதர்கள் சிவபரம் பொருளைப் பெறற்கு முயல்கின்றமை இனிது தோன்ற, "பொன் போலே முயல்கின்ற மெய்த்தவர்" என்று புகல்கின்றார். யான் பொய்ந்நெறி யுடையேனாயினும் இறுகப் பற்றி இன்புறுதற்கு ஏற்ப யான் செய்த தவம் வானகத்தினும் வையகத்தினும் பெரிதாகும் என விளம்புவாராய், "பொய் தவனேன் செய்தவம் வான் வையகத்திற் பெரிது" என உரைக்கின்றார். பொய் தவன் என்றது மெய்ந்நெறித் தாபதர் போல அத்துணைச் சிறப்புடையவனல்லன் எனத் தனது தாழ்மையைப் புலப்படுத்தற்காம். எளிய நெறியில் முயன்று மெய்த்தவர்க்கும் எய்தாத திருவடிப் பெரும்பேறு தமக்கு எய்திய அருமையை விளக்குதற்கு, "வான் வையகத்திற் பெரிதே" என வியந்துரைக்கின்றார்.

இதனால், தமக்கு எய்திய திருவடிப் பேற்றை நினைந்து வியந்து வடலூர் வள்ளல் இறைவனைப் பாராட்டியவாறும். (6)

**3786. எதுதருணம் அதுதெரியேன் என்னினும்எம் மானே**
**எல்லாஞ்செய் வல்லவனே என்தனிநா யகனே**
**இதுதருணம் தவறும்எனில் என்உயிர்போய் விடும்இவ்**
**வெளியேன்மேல் கருணைபுரிந் தெழுந்தருளல் வேண்டும்**
**மதுதருண வாரிசமும் மலர்ந்தருள் உதயம்**
**வாய்த்ததுசிற் சபைவிளக்கம் வயங்குகின்ற துலகில்**
**விதுதருண அமுதளித்தென் எண்ணம்எலாம் முடிக்கும்**
**வேலைஇது காலைஎன விளம்பவும்வேண் டுவதோ.**

**உரை :** எங்கள் தலைவனே! எல்லாம் செய்ய வல்ல பெருமானே; எனக்கு அமைந்த ஒப்பற்ற தலைவனே; நீ எனக்குள் எழுந்தருளி ஞானானந்தம் தருதற்குரிய சமயம் யாதோ அதனை யான் அறிகிலேன்;

ஆயினும் இச்சமயம் நினது திருவருள் இன்பம் எய்தத் தவறுமாயின் என் உயிர் நீங்கி விடும்; ஆதலால் எளியவனாகிய என் மேல் அருள் கூர்ந்து என் முன் எழுந்தருளுதல் வேண்டும்; தேன் பொருந்திய புதிது மலரும் தாமரையும் மலர்ந்து விட்டது; திருவருள் தோன்றுதற்குரிய காலமும் வாய்த்துளது; ஞானச் சபையினுடைய ஒளியும் உலகில் விளக்க முறுகிறது; அமுத சந்திரனிடத்து ஒழுகும் யோக ஞான வமுதத்தைத் தந்து என் எண்ணத்தை முடித்து வைக்கும் காலம் இதுவாகும் என்பதை நான் விளம்ப வேண்டுமோ? வேண்டாவன்றோ! எ.று.

எம்மான் - எம்முடைய பெரிய தலைவன்; எம்மை யுடையவன் என்றலும் உண்டு. வரம்பில் ஆற்றலுடையவன் எனச் சிவபெருமானை ஆகமங்கள் பாராட்டுதலால், "எல்லாம் செய் வல்லவனே" என்றும், ஒப்பற்ற தலைவன் என்பது பற்றி, "என் தனி நாயகனே" என்றும் போற்றுகின்றார். சிவபெருமானுடைய திருவருள் எய்தும் காலம் இதுவென முன்னுணர்ந்து கொள்ளும் மதிமை தமக்கில்லை என்பதைத் தெரிவித்தற்கு, "எது தருணம் அது தெரியேன்" என்றும், என்றாலும் திருவருள் ஞானப் பேற்றிற்குத் தாம் சமைந்திருக்கும் தனி நிலையைப் புலப்படுத்துதற்கு, "இது தருணம் தவறும் எனில் என் உயிர் போய் விடும்" என்றும் இயம்புகின்றார். வேறு வகையால் இறைவன் திருவருளைப் பெறுதல் முடியாதாகையால் "எளியேன் மேல் கருணை புரிந்து எழுந்தருளல் வேண்டும்" என இறைஞ்சுகின்றார். திருவருள் ஞானம் தமக்கு எய்துதற்கேற்ற சூழ்நிலை இப்பொழுது அமைந்துளது என்பாராய். "மது தருண வாரிசம் மலர்ந்தது அருள் உதயம் வாய்த்தது சிற்சபை விளக்கம் உலகில் வயங்குகின்றது" என்று கூறுகின்றார். தருண வாரிசம் -அப்பொழுது மலரும் தாமரை; புதிது மலரும் தாமரை எனினும் அமையும். மது - தேன். அருள் உதயம் - திருவருளைப் பெறுதற்குரிய பக்குவம் வாய்த்தது. ஞான சபையின்கண் நிலவுதற்குரிய ஞானப் பேரொளி உலகவர் அறிய விளங்குவது புலப்பட, "சிற்சபை விளக்கம் உலகில் வயங்குகின்றது" எனக் குறிக்கின்றார். அருள் ஞானத்தால் ஞான சபையின்கண் ஒளிர்கின்ற கூத்தப் பெருமானை யோக நெறியில் துவாத சாந்தத்தில் தரிசிக்கின்ற பொழுது அமுத சந்திரன் தோன்றி ஞான வமுதத்தைச் சொரியும் என யோக நூலார் கூறுதலால், அதனை எடுத்தோதி, அந்தச் சந்திராமுதத்தை உண்டு தேக்கறியும் பேற்றினை நல்கி மகிழ்விக்கும் காலம் இதுவேயாம் என உரைப்பாராய், "விது தருண அமுதளித்து என் எண்ணமெலாம் முடிக்கும் வேலை இதுகாலை" என்றும், இது தேவரீர் இனிதறிந்த செய்தியாதலின் யான் மீள எடுத்துரைத்தல் வேண்டாவாம் என்பாராய், "இதுகாலை என விளம்பவும் வேண்டுவதோ" என்றும் இயம்புகின்றார்.

இதனால், யோக நெறியில் துவாத சாந்தத்தில் சந்திராமுதத்தைப் பெற்றுத் திருவருள் காட்சி பெறும் திறம் கூறியவாறும். (7)

**3787.** **கோள்அறிந்த பெருந்தவர்தம் குறிப்பறிந்தே உதவும்**
**கொடையாளா சிவகாமக் கொடிக்கிசைந்தே கொழுநா**
**ஆள் அறிந்திங் கெனைஆண்ட அரசேஎன் அமுதே**
**அம்பலத்தே நடம்புரியும் அரும்பெருஞ்சோ தியனே**

**தாள்அறிந்தேன் நின்வரவு சத்தியம்சத் தியமே**
**சந்தேகம் இல்லைஅந்தத் தனித்ததிரு வரவின்**
**நாள்அறிந்து கொளல்வேண்டும் நவிலுகநீ எனது**
**நனவிடையா யினும்அன்றிக் கனவிடையா யினுமே.**

**உரை :** அருள் நெறிக்குரிய கொள்கைகளை அறிந்தொழுகும் பெரிய தவத்தை யுடைய சான்றோர்களின் குறிப்புணர்ந்து வேண்டுவன வற்றை உதவி யருளும் கொடை வள்ளலே; சிவகாமக் கொடியாகிய உமாதேவியின் மனத்திற் கிசைந்த கணவனே; ஆளாந்தன்மை என்பால் உண்மை யறிந்து இவ்வுலகில் என்னை ஆண்டு கொண்ட அருளரசே; எனக்கு இனிய அமுது போன்றவனே; அம்பலத்தில் திருக்கூத் தாடுகின்ற அரிய பெரிய ஒளி யுருவானவனே; நின் திருவடிகளைக் கண்டு கொண்டேனுதலால் நினது வரவு மெய்யே; இதில் சிறிதும் சந்தேகமில்லை என்று தெளிந்து கொண்டேன்; அந்த ஒப்பற்ற நினது வரவுக்குரிய நன்னுளை யான் அறிந்து கொள்ள விரும்புகின்றேன்; என்னுடைய நனவின்கண் இல்லையாயினும் கனவிலாயினும் போந்து சொல்லியருளுக. எ.று.

திருவருள் ஞானப் பேற்றிற்குரிய பொய்தீர் ஒழுக்க நெறிகளை உணர்ந்தொழுகும் பெருமக்களை, "கோள் அறிந்த பெருந்தவர்" என்று கூறுகின்றுர். அப்பெருமக்கள் வேண்டுவதை வேண்டியவாறு குறைவறக் கொடுத்தருளும் வள்ளன்மை பற்றி, "பெருந்தவர்தம் குறிப்பறிந்தே உதவும் கொடையாளா" என்று புகழ்கின்றுர். தில்லையில் கோயில் கொண்டருளும் உமாதேவியைச் "சிவகாமி" என்றும், "சிவகாமக் கொடி" என்றும், "சிவகாமவல்லி" என்றும் பெரியோர் புகல்வது பற்றி "சிவகாமக் கொடிக்கு இசைந்த கொழுநா" என்றும் குறிக்கின்றுர். ஆளாந்தன்மை யுடையாரையன்றிப் பிறரை ஆட்கொள்வது இறைவன் இயல்பன்மையின், "ஆள் அறிந்திங்கு எனை ஆண்ட அரசே" என்று இசைக்கின்றுர். "ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும் ஆதி மாண்பும் கேட்பான் புகில் அளவில்லை கிளக்க வேண்டா" (பாசுரம்) என்று ஞானசம்பந்தர் உரைப்பது காண்க. அம்பலத்தில் திருக்கூத்தியற்றும் சிவ பரம்பொருள் ஆதியும் அந்தமுமில்லாத அரும் பெருஞ் சோசி வடிவாய் விளங்குதல் பற்றி, "அம்பலத்தே நடம் புரியும் அரும் பெருஞ் சோதியனே" என்று போற்றுகின்றுர். திருவடி ஞானப் பேற்றுல் இறைவன் எழுந்தருளி அடியார்க்கு அட்டியின்றி, அருளும் நலம் அறிந்துள்ளாராதலின், "தாள் அறிந்தேன் நின் வரவு சத்தியம் சத்தியமே சந்தேகமில்லை" என உரைக்கின்றுர். தமது வரவினை இறைவன் எவர்க்கும் நனவின்கண் நேர்படப் போந்து உரைப்பதில்லையாதலால், "அந்தத் தனித்த திருவரவின் நாள் அறிந்து கொளல் வேண்டும்" என்றும், "எனது நனவிடையாயினும் அன்றிக் கனவிடையாயினும் நவிலுக" என்றும் விண்ணப்பிக்கின்றுர்.

இதனுல், இறைவனது திருவருள் வரவை முன்னுற யுணர்த்தி அருளல் வேண்டுமென விண்ணப்பிக்கின்றவாறும். (8)

3788. அன்றெனக்கு நீஉரைத்த தருணம்இது எனவே
அறிந்திருக்கின் றேன்அடியேன் ஆயினும்என் மனந்தான்
கன்றெனச்சென் றடிக்கடிஉட் கலங்குகின்ற தரசே
கண்ணுடைய கரும்பேஎன் கவலைமனக் கலக்கம்
பொன்றிடப்பேர் இன்பவெள்ளம் பொங்கிடஇவ் வுலகில்
புண்ணியர்கள் உளங்களிப்புப் பொருந்திவிளங் கிடநீ
இன்றெனக்கு வெளிப்படஎன் இதயமலர் மிசைநின்
றெழுந்தருளி அருள்வதெல்லாம் இனிதருள்க விரைந்தே.

**உரை :** கணுக்களையுடைய கரும்பு போன்ற பெருமானே! அருளரசே! அன்றொருநாள் திருவருட் பேற்றிற் கென நீ குறித்தருளிய காலம் இதுவாகுமென்று நன்கு அறிந்திருக்கின்றேனாயினும், அடியவனுகிய எனது மனம் அடிக்கடி தாயை நினைந்தோடும் கன்று போல நினது திருவருளை அடிக்கடி நினைந்து உள்ளம் கலக்கமுறுகின்றது; கவலையுறும் எனது மனம் கலக்க மில்லாததாகவும், திருவருள் இன்ப வெள்ளம் பொங்கிடப் பெருகவும், இந்த உலகிலுள்ள புண்ணியப் பெரு மக்களின் திருவுள்ளம் பொங்கி விளங்கிடவும் இப்பொழுது நீ எனக்கு முன் வெளிப்படையாக என் மனத் தாமரையின்கண் எழுந்தருளி எனக்கு அருளத் தக்கவை யெல்லாம் இப்பொழுதே விரைந்து அருள்வாயாக. எ.று.

சிவனுக்குக் கரும்பை ஒப்புக் கூறுகின்றாராதலின் கணு வுடைமை பற்றி, "கண்ணுடைக் கரும்பே" என்று கூறுகின்றார். கணு - கண் எனவும் வழங்கும். இறைவன் மூன்று கண்களை யுடையனுதல் பற்றி அவனை "முக்கட் கரும்பு" என மொழியும் இயல்பு பற்றி, "கண்ணுடைய கரும்பே" என மொழிகின்றார் எனினும் பொருந்தும். முன்பொருகால் சிவ பரம்பொருள் வடலூர் வள்ளலார்க்குக் கனவின்கண் எழுந்தருளித் திருவருள் ஞானம் நல்கும் காலத்தை உரைத்திருக்கின்றமை தோன்ற, "அன்றெனக்கு நீ உரைத்த தருணம் இதுவெனவே அறிந்திருக் கின்றேன்" என அறிவிக்கின்றார். இறைவன் திருவடியை மனத்தில் கொண்டு எப்பொழுதும் இடையருது நினைந்தொழுகும் பாங்கினராதலால் வடலூர் வள்ளல் தம்மை 'அடியேன்' என்று உரைக்கின்றார். இறைவன் திருவடியை உள்ளத்தில் கொண்ட உரிமையால் இறைவன் அவர்க்கு, இறைவன் திருவருள் இன்பம் நல்கும் காலம் இதுவென முன்னமே உரைக்கப்பட்டுளது என அறிக. திருவருட் பேற்றிற்குரிய காலம் இதுவென அறிந்திருந்தும் விரைந்து பெறுதல் வேண்டு மென்று விதுப்பு மனத்தின்கண் நின்று அலைப்பது புலப்பட, "என் மனந்தான் கன்றெனச் சென்று அடிக்கடி உட்கலங்குகின்றது" என்று மனங் கலங்குகின்றார். மனக் கவலை திருவருள் இன்ப நினைவுகளைப் போக்குதலின் அதனை ஒழித்தல் வேண்டுமென முறையிடுவாராய், "என் கவலை மனக் கலக்கம் பொன்றிட" எனவும், "பேரின்ப வெள்ளம் பொங்கிட" எனவும் புகல் கின்றார். பிறர் ஆக்கம் கண்டு இன்புறுதல் புண்ணியவான்களின் மனப் பண்பாதலின், "இவ்வுலகில் புண்ணியர்கள் உளங் களிப்புப் பொருந்தி விளங்கிட" என்று இயம்புகின்றார். இறைவன் அடியவர் உள்ளத் தாமரையின்கண் எழுந்தருளி அருள்செய்வது மரபாதலின், "நீ இன்று எனக்கு வெளிப்பட என் இதய மலர்மிசை நின்று எழுந்தருளி அருள்வ

தெலாம் இனிதருள்க விரைந்தே" என நவில்கின்றூர். இதயத் தாமரையின்கண் எழுந்தருளும் காட்சி தெளிவுறத் தோன்றல் வேண்டும் என வற்புறுத்தற்கு, "வெளிப்பட என் இதய மலர்மிசை நின்று எழுந்தருளி" என உரைக்கின்றூர். வேண்டுவார்க்கு வேண்டுவதைக் குறைவறக் கொடுத்தருளும் கொடையாளனுதல் பற்றி, "அருள்வது எலாம் இனிதருள்க விரைந்தே" என எடுத்துரைக்கின்றூர்.

இதனுல், மனக் கவலை நீங்க இதயத் தாமரையின்கண் எழுந்தருளி அருள் நலம் அனைத்தும் ஈந்தருளுக என வடலூர் வள்ளல் விண்ணப் பித்தவாறும். (9)

3789. **இதுதருணம் நமையாளற் கெழுந்தருளுந் தருணம்**
**இனித்தடைஒன் றிலைகண்டாம் என்மனனே நீதான்**
**மதுவிழுமோர் ஈப்போல மயங்காதே கயங்கி**
**வாடாதே மலங்காதே மலர்ந்துமகிழ்ந் திருப்பாய்**
**குதுகலமே இதுதொடங்கிக் குறைவிலைகாண் நமது**
**குருவாணை நமதுபெருங் குலதெய்வத் தாணை**
**பொதுவில்நடம் புரிகின்ற புண்ணியனுர் எனக்குள்**
**புணர்ந்துரைத்த திருவார்த்தை பொன்வார்த்தை இதுவே.**

**உரை :** என்னுடைய மனமே, இறைவன் நம்மை ஆட்கொள் வதற்கு நம் உள்ளத்தில் எழுந்தருளுதற்குரிய காலம் இதுவாகும்; இப்பொழுது அதற்கு ஒரு தடையுமில்லை; நீதானும் தேனில் விழுகின்ற ஈயைப் போல மயக்கமோ மெலிவோ எய்தி வாட்ட முற்று வருந்தாமல் மலர்ந்து மகிழ்ந்திருப்பாயாக; இந்த நாழிகை முதல் நமக்கு இன்ப நிறைவே யன்றிக் குறைவு சிறிதும் இல்லை யென அறிக; இது நமது குரு முதல்வன் கட்டளையும் நமது பெரிய குலதெய்வத்தின் ஆணையுமாகும்; அம்பலத்தில் திருக்கூத்தாடுகின்ற புண்ணிய மூர்த்தியாகிய கூத்தப் பிரான் என்னுட் புகுந்து உரைத்தருளிய திருமொழியும் பொன்மொழியும் இதுவேயாம். எ.று.

திருவருட் பேற்றிற்குரிய தருணம் யாதாகுமென எண்ணி அலைந்த மனத்திற்குத் தெளிவு நல்குகின்றூராதலால், "என் மனனே இது தருணம் நமை ஆளற்கு எழுந்தருளும் தருணம் இனித் தடை ஒன்றிலை கண்டாய்" என உரைக்கின்றூர். தேனில் விழுந்த ஈ பறக்கும் திறமின்றி மயங்கி மெலிவுற்று வாடி வருந்துவது, மனம் திருவருள் இன்பத்தை நினைந்து வருந்தும் திறத்தை விளக்குவதாகும். திருவருள் இன்பத்தையே நினைந்து எப்பொழுது கைகூடுமோ என ஏங்கும் நிலையைப் போக்கி மகிழ்வுடன் தெளிவு கொண்டு இருப்பாயாக என வற்புறுத்தற்கு. "மலர்ந்து மகிழ்ந்திருப்பாய்" என உரைக்கின்றூர். கயங்குதல் - கசங்கி மெலிதல். மலங்குதல் - வருந்துதல். மலர்தல் - கிளர்ச்சி யுறல், இப்பொழுது முதலே நமக்கு இன்பமே யன்றி இன்பக் குறைவு சிறிது மில்லை யென்றற்கு, "குதுகலமே இது தொடங்கிக் குறைவிலை காண்" எனத் தெளிவிக்கின்றூர். குதுகலம் - குதூ கலம் எனவும் வழங்கும். இன்ப நிறைவு என்பது பொருள். குருவும் குலதெய்வமும் கூத்தப்

பெருமானேயாதலால், "நமது குருவாணை நமது பெருங்குலத் தெய்வத் தாணை" எனவும், "பொதுவில் நடம் புரிகின்ற புண்ணியனுர் எனக்குள் புணர்ந்துரைத்த திருவார்த்தை" ஏனவும் தெரிவிக்கின்ருர். பொன் வார்த்தை - மெய்ம்மொழி. பொது - அம்பலம்.

இதனுல், கலக்கமுறும் மனத்திற்கு இறைவன் ஆட்கொள்ள எழுந்தருளும் தருணம் இதுவென எடுத்தோதித் தெளிவு நல்கிய வாரும். (10)

திருச்சிற்றம்பலம்

# 31. உண்மை கூறல்

*அஃதாவது, உள்ளத்தின் உண்மைத் தன்மையை எடுத்துரைத்தல் உட்கோள் உரைத்தல் எனினும் அமையும்.*

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**3790.** **தனிப்பெருந் தலைவரே தாயவ ரேஎன்**
**தந்தைய ரேபெருந் தயவுடை யவரே**
**பனிப்பறுத் தெனையாண்ட பரம்பர ரேஎம்**
**பார்வதி புரஞானப் பதிசிதம் பரரே**
**இனிச்சிறு பொழுதேனுந் தாழ்த்திடல் வேண்டா**
**இறையவ ரேஉமை இங்குகண் டல்லால்**
**அனிச்சய உலகினைப் பார்க்கவும் மாட்டேன்**
**அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே**

**உரை :** ஒப்பற்ற பெரிய தலைவரே; எங்கட்குத் தாயும் தந்தையுமானவரே; மிக்க பெருந் தயவு நிறைந்தவரே; அச்சம் நீக்கி என்னை ஆண்டுகொண்ட பரம்பொருளே; பார்வதி புரம் என்னும் ஞானப் பதியாகிய சிதம்பரத்தை உடையவரே; இறைவனே; உம்மை இங்குத் தரிசித்தல்லது நிலையில்லாத உலகியலைக் கண்ணெடுத்துப் பார்க்கமாட்டேன்; இனிச் சிறிது பொழுதும் தாமதமின்றி அருள் செய்தல் வேண்டும்; அருட்பெருஞ் சோதி வடிவுடைய பெருமானாகிய உம்மீது ஆணையாக இதனை மொழிகின்றேன். எ.று.

உலகனைத்திற்கும் ஒப்பற்ற தலைவராதலால் சிவபெருமானைத் "தனிப் பெருந் தலைவரே" என்று சொல்லுகின்றார். தலையளித்தலில் தாய் போலவும், ஞானம் வழங்குதலால் தந்தை போலவும் உள்ளமை பற்றிச் சிவனை, "தாயவரே என் தந்தையரே" என்று மொழிகின்றார். அருளே உருவாகியவனாதலால், "பெருந் தயவுடையவரே" என்று புகல்கின்றார். பனிப்பு - அச்சம்; நடுக்கமுமாம். உலகியல் துன்பங்களை நோக்கி அஞ்சிக் கிடந்த தமக்குச் சிவஞானம் தந்து ஆண்டு கொண்டமையின், "பனிப்பறுத்து எனை ஆண்ட பரம்பரரே" என்று பகர்கின்றார். பரம்பரன் - எல்லாவுலகுக்கும் எல்லாத் தெய்வங்கட்கும் மேலான முதல்வன். வடலூர்க்குப் பார்வதி புரம் என்றும் பெயர் வழங்குதலால் அங்குள்ள கூத்தப்பெருமானை, "பார்வதி புர ஞானப் பதி சிதம்பரரே" என்று சிறப்பிக்கின்றார். சிதம்பரர் - சிதம்பரத்தையுடையவர். சிதம்பரம் என்பது சித் அம்பரமெனப் பிரிந்து ஞான ஆகாசம் எனப் பொருள்படும். ஞானப் பதியாகிய சிதம்பரத்தை

யுடையவர் என்பது சொற் பிரித்தல் விரித்தல். பார்வதி புரமாகிய ஞானப் பதியின்கண் கூத்தப்பெருமானாகிய உம்மைக் கண் குளிரக் கண்டு தெளிவடைந்தாலன்றி நிலையில்லாத உலகியல் இன்பங்களை நோக்கமாட்டேன் என வற்புறுத்துவாராய், "உமை இங்கு கண்டல் லால் அனிச்சய உலகினைப் பார்க்கவும் மாட்டேன்" என உறுதிப்பட உரைக்கின்றார். கண்டு தெளிவுற வேண்டின் இறைவனே அருள்கூர்ந்து காட்சி நல்க வேண்டுதலால் அதனைத் தாமதமின்றி அருளுக என்பாராய் "இனிச் சிறு பொழுதேனும் தாழ்த்திடல் வேண்டா" எனச் சாற்று கின்றார். அனிச்சய உலகு - நிலையில்லாத உலகியல் இன்பம். பார்க்கவும் மாட்டேன் என்னும் உறுதி மொழியை மேலும் வற்புறுத்தற்கு, "ஆணை நும் மீதே" என அறிவிக்கின்றார். அருட் பெருஞ்சோதியீர் திருவருளாகிய பேரொளியை யுடையவரே என்று பொருள்படும் செம்மை மொழி.

இதனால், வடலூராகிய ஞானப் பதியின்கண் கூத்தப் பெருமானாகிய சிதம்பரேசரைக் கண்டன்றி உலகியல் நல்கும் காட்சி இன்பங்களைக் காண மாட்டேன் என வடலூர் வள்ளல் தமது உட்கோளைக் கூறிய வாறும். (1)

**3791.** **பெறுவது நுமைஅன்றிப் பிறிதொன்றும் விரும்பேன்**
**பேசல்நும் பேச்சன்றிப் பிறிதொன்றும் பேசேன்**
**உறுவதுநும் அருள்அன்றிப் பிறிதொன்றும் உவவேன்**
**உன்னல்உம் திறன்அன்றிப் பிறிதொன்றும் உன்னேன்**
**மறுநெறி தீர்த்தெனை வாழ்வித்துக் கொண்டீர்**
**வள்ளலே நும்திரு வரவுகண் டல்லால்**
**அறுசுவை உண்டிகொண் டருந்தவும் மாட்டேன்**
**அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.**

**உரை :** மாறுய நெறியிற் செல்லும் என்னை அதனின்றும் நீக்கித் திருவருளில் வாழச் செய்தருளிய பெருமானே; அருள் வள்ளலே உம்முடைய ஞானத் திருவரவைக் கண்குளிரக் கண்டல்லது அறுவகைச் சுவையோடு கூடிய உணவைப் பெற்று அருந்த மாட்டேன்; நும்மைப் பெறுவதன்றிப் பிறிது யாதும் விரும்பமாட்டேன்; பேசுவதும் நும்முடைய பேச்சுக்களை யன்றிப் பிறிதொரு சொல்லும் பேச மாட்டேன்; அடைவது நுமது திருவருளே யன்றிப் பிறிது யாதாயினும் அதனை உள்ளத்திற் கொண்டு மகிழமாட்டேன்; நினைப்பது உமது அருள் வகையன்றிப் பிறிது யாதனையும் மனத்தால் நினைக்கமாட்டேன்; அருட் பெருஞ் சோதி வடிவினராகிய பெருமானே; இதற்கு நும் மேல் ஆணை. எ.று.

பிறவிக் கேதுவாகிய பொறி புலன்கள் காட்டும் வழி மறுநெறியா தலால், அவ்வழிச் செல்லாது திருவருளாகிய செம்மை நெறிக்கண் நின்றொழுகுகின்ற தமக்கு அது திருவருளால் வாய்த்த தென்னும் கருத் தினராதலால், "மறுநெறி தீர்த்தென்னை வாழ்வித்துக் கொண்டீர்" என்றும், அவ்வாழ்வு ஞானப் பயனை நல்கும் பெருவாழ்வாதற்கு நுமது திருவடிக் காட்சி இன்றியமையாது என்பாராய், "வள்ளலே நும் திருவரவு கண்டல்லால் அறுசுவை உண்டி கொண்டு அருந்தவும் மாட்டேன்"

என்றும் உரைக்கின்றார். திருவருள் ஞான நெறியை மேற்கொண்டாராயினும் உலகில் உண்பன உண்டு வாழ்வாங்கு வாழ வேண்டுதலின், "அறுசுவை உண்டி கொண்டு அருந்தவும் மாட்டேன்" எனத் தெளிவிக்கின்றார். பெறுவது என்பது இறைவன் திருவருட் காட்சியினைப் பெறுவதாகும். உலகியற் காட்சிகளை விரும்பாது இறைவனது அருட் காட்சியினை விரும்புதல் விளங்கப் "பெறுவது நுமையன்றிப் பிறிது ஒன்றும் விரும்பேன்" என்று கூறுகின்றார். உலகியல் வாழ்வில் பேசப்படுவன பலவும் உலகியற் பொருட்கள் பற்றியனவாதலின் யான் அவ்வழிச் செல்லாது நினது பொருள் நிறைந்த புகழைப் புகன்றுரைக்கும் பேச்சுக்களிலேயே ஒன்றிய கருத்துடையேன் என்பாராய், "பேசல் நும் பேச்சன்றிப் பிறிதொன்றும் பேசேன்" என்றும், பெறக் கருதுவனவற்றுள் திருவருட் செல்வமே தம்மால் பெரிதும் விரும்பப்படுவது என்றற்கு, "உறுவது நும் அருளன்றிப் பிறிதொன்றும் உவவேன்" என்றும் இயம்புகின்றார். உவவேன் என்பது உவத்தலைச் செய்யேன் என்னும் பொருட்டு; உவத்தல் என்பது உறுவது உற்ற வழி உள்ளத்தில் உளதாகும் உவகை. உன்னுதல் - ஊன்றி நினைத்தல். அஃதாவது பொருளாய தொன்றைப் பற்றி நீள நினைத்தல். திருவருள் வாழ்வில் உன்னுதற்குரிய பொருள் இறைவனுடைய அருட்டிறமாதலால், "உன்னல் உம் திறனன்றிப் பிறிதொன்றும் உன்னேன்" என வற்புறுத்துகின்றார்.

இதனால், திருவருள் வாழ்வில் நிற்கும் தமது உள்ளத்தின் உண்மை நிலையை வடலூர் வள்ளல் எடுத்துரைத்தவாறும். (2)

3792. கரும்பிடை இரதமும் கனியில்இன் சுவையும்
காட்டிஎன் உள்ளம் கலந்தினிக் கின்றீர்
விரும்பிநும் பொன்னடிக் காட்பட்டு நின்றேன்
மேல்விளை வறிகிலன் விச்சைஒன் றில்லேன்
துரும்பினும் சிறியனை அன்றுவந் தாண்டீர்
தூயநும் பேரருட் சோதிகண் டல்லால்
அரும்பெறல் உண்டியை விரும்பவும் மாட்டேன்
அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

**உரை :** திருவருள் ஞானமாகிய பேரொளியையுடைய பெருமானே; கரும்பின் சாறும் கனியினுடைய இன்சுவையும் போல எளியேனுடைய உள்ளத்திற் கலந்து இனிமை செய்கின்றீர்; யானும் நுமது திருவருளை விரும்பி நும்முடைய அழகிய திருவடிக்கு ஆட்பட்டு நிற்கின்றேன்; எனக்கு இனிமேல் உண்டாவது இன்னதென அறிகிலேன்; அறிந்து கொள்ளும் ஞானமும் சிறிதும் இல்லாதவனுவேன்; துரும்பினும் அற்பனாகிய என்னை அக்காலத்தே மனமுவந்து ஆண்டு கொண்டாயாதலால், தூயதாகிய நும்முடைய பேரருள் ஞான ஒளியைக் கண்டாலன்றிப் பெறுதற் கரிய உணவு வரினும் யான் அதனை விரும்ப மாட்டேன் இது நும் மேல் ஆணை. எ.று.

கரும்பின்கண் சாறும், கனி வகைகளின் இனிய சுவையும், அவற்றுள் கலந்து நின்று இனிமைச் சுவையைத் தருவதுபோல

இறைவன் உள்ளத்தில் கலந்து இன்பம் செய்தலை விளக்குவாராய், "கரும்பிடை இரதமும் கனியில் இன்சுவையும் காட்டி என் உள்ளம் கலந்து இனிக்கின்றீர்" என இயம்புகின்றார். உமது திருவருளை விரும்பி உமது திருவடிக்கு ஆட்பட்டு நிற்பதொன்றன்றி இதன்மேல் விளைவது யாதாம் என எண்ணினேன் இல்லை; எண்ணுதற்குரிய ஞானமும் இல்லாதவன் எனத் தமது மனநிலையைத் தெரிவிப்பாராய், "விரும்பி நின் பொன்னடிக்கு ஆட்பட்டு நின்றேன் மேல் விளைவறிகிலேன் விச்சை ஒன்றில்லேன்" எனக் கூறுகின்றார். இறைவனது திருவருட் பெருமையையும் தமது சிறுமையையும் தம்மை இறைவன் ஆண்டு கொண்ட திறத்தையும் நினைந்து வியந்து கூறுகின்றாராதலால், "துரும்பினும் சிறியனை அன்று உவந்து ஆண்டீர்" என அறிவிக்கின்றார். திருவருள் ஞான மூர்த்தியாதலின் அவரது ஞானக் காட்சியைக் காண்பதிலுள்ள தமது உறைப்பினை எடுத்துரைப்பாராய், "தூய நும் பேரருள் சோதி கண்டல்லால் அரும் பெறல் உண்டியை விரும்பவும் மாட்டேன் ஆணை நும் மீதே" என உரைக்கின்றார்.

இதனால், திருவருட் காட்சியில் தமக்குள்ள ஆர்வ மிகுதியை வடலூர் வள்ளல் தெரிவித்தவாறும். (3)

**3793.** **தடுத்தெனை ஆட்கொண்ட தந்தைய ரேஎன்**
**தனிப்பெருந் தலைவரே சபைநடத் தவரே**
**தொடுத்தொன்று சொல்கிலேன் சொப்பனத் தேனும்**
**தூயநும் திருவருள் நேயம்விட் டறியேன்**
**விடுத்திடில் என்னைநீர் விடுப்பன்என் உயிரை**
**வெருவுளக் கருத்தெல்லாம் திருவுளத் தறிவீர்**
**அடுத்தினிப் பாயலில் படுக்கவும் மாட்டேன்**
**அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.**

உரை : உலகியல் நெறியிற் செல்லாமல் தடுத்துத் திருவருள் ஞான நெறியில் என்னை ஆண்டு கொண்ட தந்தையே; என்னுடைய ஒப்பற்ற பெரிய தலைவனே; ஞான சபையில் நடம் புரிகின்ற பெருமானே; கற்பனையாகச் சிலவற்றைத் தொடுத்து யான் ஒன்றும் சொல்லுகின்றேனில்லை; தூயதாகிய நுமது திருவருள் ஞானத்தின்பால் எனக்கு உளதாகிய அன்பைக் கனவின் கண்ணும் யான் கைவிட்டதில்லை; என்னை நீர் கைவிடின் யான் என் உயிரைத் துறந்துவிடுவேன்; உலகியல் மாயைக்கு அஞ்சும் என் உள்ளத்தில் நிலவும் எண்ணங்கள் எல்லாவற்றையும் தேவரீருடைய திருவுள்ளம் நன்கறிந்ததாகும்; திருவருட் காட்சி எய்தும் வரையில் இனி நான் படுக்கையில் படுக்கவும் மாட்டேன்; இது நும் மேல் ஆணை. எ.று.

மண்ணிற் பிறந்த யான் மண்ணியல் வாழ்க்கையில் மயங்கித் தடுமாறும் நிலையில் என்னைத் தடுத்துத் திருவருள் நெறியைத் தலைப்பட்டொழுகுமாறு எனக்கு அருள் புரிந்தாய் எனத் தாம் இறைவனுக்கு ஆட்பட்ட நிலையை விளக்குதற்கு, "தடுத்தெனை ஆட்கொண்ட தந்தையரே" என்று உரைக்கின்றார். என்பால் இல்லாத செயல் வகைகளை உள்ளன

போல உரைக்கின்றேனில்லை எனத் தெளிவுபடுத்தற்கு, "தொடுத் தொன்று சொல்கிலேன்" என்றும், உள்ளத்தில் எப்பொழுதும் திருவருள் ஞானத்தின்கண் விருப்பம் கொண்டு ஒழுகும் நிலைமையினை விளக்கு தற்கு, "சொப்பனத்தேனும் தூய நும் திருவருள் நேயம் விட்டறியேன்" என்றும் சொல்லுகின்றார். தமது உள்ளத்திடையே எடுத்துரைத்தற்கு, "விடுத்திடில் என்னை நீர் விடுப்பன் என் உயிரை வெருவுளக் கருத் தெல்லாம் திருவுளத் தறிவீர்" என உரைக்கின்றார். வெருவுளம் - அஞ்சும் உள்ளம்; அஃதாவது, மண்ணியல் வாழ்வின் மயக்குந் தன்மை கண்டு அஞ்சும் மனப்பான்மை. மக்கள் மனத்தின்கண் நிகழும் நினைவு களை அறிவது இறைவன் ஒருவனுக்கே இயலுவதாகலின், "உளக் கருத்தெல்லாம் திருவுளத்து அறிவீர்" என்று கூறுகின்றார். தமது மன வுறுதியைப் புலப்படுத்தற்கு, திருவருட் காட்சியைப் பெறுங் காறும் கண்ணுறங்கேன் என்பாராய், "அடுத்தினிப் பாயலில் படுக்கவும் மாட்டேன் நும் மீது ஆணை" என மொழிகின்றார்.

இதனால், திருவருள் ஞானக் காட்சியின்கண் தமக்குள்ள ஆர்வப் பண்பினை வடலூர் வள்ளல் எடுத்துரைத்தவாறும். (4)

**3794.** **காசையும் பணத்தையும் கன்னியர் தமையும்**
**காணியின் ஆட்சியும் கருதிலேன் கண்டீர்**
**நேசநும் திருவருள் நேசம்ஒன் றல்லால்**
**நேசம்மற் றிலைஇது நீர்அறி யீரோ**
**ஏசறல் அகற்றிவந் தென்னைமுன் ஆண்டீர்**
**இறையவ ரேஉமை இன்றுகண் டல்லால்**
**ஆசையிற் பிறரொடு பேசவும் மாட்டேன்**
**அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.**

**உரை :** திருவருளாகிய பெரிய சோதி உருக் கொண்ட பெரு மானே; காசும் பணமுமாகிய பொருட்களையும், மகளிரையும், காணி ஆட்சியையும் நான் விரும்பினதில்லை; அன்புருவாகிய உமது திருவருளின்பால் எனக்கு அன்பொன்று உண்டே தவிர வேறு பொருள் களின் மேல் எனக்கு ஆசையில்லை; இது நீ அறியாததன்று; ஏங்கும் இயல்பை நீக்கி என்பால் வந்து முன்பு என்னை ஆண்டுகொண்டீராத லால், இறைவனே, உம்மை இன்று கண்ணாரக் கண்டன்றி ஆசை யுற்றுப் பிறர் எவரோடும் இனிப் பேச மாட்டேன்; இது நும்மேல் ஆணை. எ.று.

காசு - பொற் காசு. பணம் - வெள்ளிப் பணம். காணியாட்சி - நில புலன்கள் உடைமை. இம் மூன்றினையும் பொன்னாசை, பெண்ணாசை, மண்ணாசை என்பதுமுண்டு. இந்த மூவகை ஆசையும் எனக்குச் சிறிதுமில்லை எனத் தெரிவித்தற்கு, "காசையும் பணத்தையும் கன்னியர் தமையும் காணியின் ஆட்சியும் கருதிலேன்" என விரித்துரைக்கின்றார். நேச - நேசனே என்னும் அண்மை விளியேற்றது. உள்ளத்தில் நேசம் விளைவிக்கும் பொன், பெண், மண், என்ற மூன்றையும் விடுத்த வழி நேசிக் கும் இயல்புடைய உள்ளத்தில் நேசம் நிலவும் திறம் இதுவென விளக்கு

தற்கு, "நேச நும் திருவருள் நேசம் ஒன்றல்லால் நேசம் மற்றிலை இது நீர் அறியீரோ" என உரைக்கின்றார். ஏசறல் - ஏக்கம்; இது ஏசறவு எனவும் வழங்கும். செயலறுதியைப் புலப்படுத்தும் கையறவு என்பாரு முண்டு; திருவருள் ஞானம் எய்தாமையால் ஏங்கி நின்ற காலத்து இறைவன் திருவருளில் நேசம் உறுவிக்கும் வகையில் இறைவன் தம்மை ஆண்டு கொண்டமை தோற்றுவித்தற்கு, "ஏசறல் அகற்றி வந்து என்னை முன் ஆண்டீர்" என எடுத்தோதுகின்றார். முன்னமே தாம் இறைவனுக்காட்பட்ட முறைமை கொண்டு இன்று இப்பொழுது தமக்குத் திருவருள் காட்சி வழங்குதல் வேண்டுமென வற்புறுத்து கின்றாராதலால், "உமை இன்று கண்டலல்லால் ஆசையிற் பிறரொடு பேசவும் மாட்டேன்" என இயம்புகின்றார். பேசவும் மாட்டேன் என்ற உம்மையால் பிறரோடு இணங்கவும் மாட்டேன் என்றதாகக் கொள்ளல் வேண்டும்.

இதனால், இறைவன் திருவருள்பாற் கொண்ட நேசத்தின் இயல்பு தெரிவித்தவாறும். (5)

**3795. என்பொருள் என்உடல் என்உயிர் எல்லாம்**
**ஈந்தனன் உம்மிடத் தெம்பெரு மானீர்**
**இன்பொடு வாங்கிக்கொண் டென்னையாட் கொண்டீர்**
**என்செயல் ஒன்றிலை யாவும்நும் செயலே**
**வன்பொடு நிற்கிலீர் என்பொடு கலந்தீர்**
**வள்ளலே நும்திரு வரவுகண் டல்லால்**
**அன்பொடு காண்பாரை முன்பிட மாட்டேன்**
**அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.**

**உரை :** திருவருளாகிய பெருஞ் சோதியை யுடையவரே; அருள் வள்ளலே; என் உடல், பொருள், உயிர் ஆகிய எல்லாவற்றையும் உமக்கே உரிமை செய்து தந்துள்ளேன்; எங்கள் பெருமானாகிய நீரும் அவற்றை மகிழ்வோடு வாங்கிக்கொண்டு என்னை ஆளாகக் கொண்டு விட்டீர்; இனி எனக்கு என்னுடைய செயல் என ஒன்றுமில்லை; செய்வன யாவையும் நும்முடைய செயலேயாகும்; வன்மனத்தோடு நிற்பவரல்லராதலின் நீர் எனது எலும்போடு கூடிய என் உடலில் கலந்து கொண்டீர்; அருள் வள்ளலாகிய நும்முடைய சிவஞானத் திருவருளைக் கண்டன்றி அன்புருவாய்ப் போந்து என்னைக் காண வருபவ ரையும் முற்பட வரவேற்க மாட்டேன்; இது உன் மேல் ஆணையாகச் சொல்வதாகும். எ.று.

சிவன்பால் அன்பு தோன்றிய பொழுதே தம்மை முழுதும் அப் பெருமானுக்கே உரிமை செய்து விட்டபடியால், "என் பொருள் என்னுடல் என்னுயிர் எல்லாம் உம்மிடத்து ஈந்தனன்" என்றும், உயிருணர்வு உடலுணர்வு எல்லாம் தமக்குச் சிவ நினைவாகவும் செயலாகவும் இருத்தலின், "எம்பெருமான் நீர் இன்பொடு வாங்கிக் கொண்டு என்னை ஆட்கொண்டீர்" என்றும் இயம்புகின்றார். இவ்வாற்றால் தம்முடைய நினைவும் சொல்லும் செயலும் பலவும் சிவ மயமாய் நிலவு

தலை யுணர்ந்து உரைத்தலின், "என் செயல் ஒன்றில்லை யாவும் நும் செயலே" என்று உரைக்கின்றார். அருளே திருவுருவாய்த் தம் உடலி டத்தே சிவ பரம்பொருள் கலந்து நிற்றலை உணர்கின்றாராதலால், சிவனை நோக்கி, "வன்பொடு நிற்கிலீர் என்பொடு கலந்தீர்" என்று கூறுகின்றார். அன்பு நிறைந்த உள்ளமும் செயலும்கொண்டு தம்மைக் காண வருப வர்க்கு முதலிடம் தந்து பின்னர் பிறரைக் காண்பது உலகியல் அறமா யினும், யான் அதனை விரும்பாமல் உம்முடைய ஞான நல்வரவுக்கே சிறப்பிடம் தந்து போற்றுகின்றேன் என்பாராய், "வள்ளலே நும் திருவரவு கண்டல்லால் அன்பொடு காண்பாரை முன்பிட மாட்டேன்" என்றும், இதனை யாப்புறுத்தற்கு "ஆணை நும்மீதே" என்றும் இசைக் கின்றார்.

இதனால், வடலூர் வள்ளல் தமது உடல் பொருள் உயிர் மூன்றையும் சிவனுக்கு உரிமை செய்து அவருடைய திருவருள் வரவை நோக்கியிருக் கும் ஆர்வம் விளங்கத் தெரிவித்தவாறும். (6)

**3796.** **திருத்தும்என் உள்ளத் திருக்கோயில் ஞான**
**சித்தி புரம்எனச் சத்தியம் கண்டேன்**
**இருந்தருள் கின்றநீர் என்னிரு கண்கள்**
**இன்புற அன்றுவந் தெழில்உருக் காட்டி**
**வருந்தலை என்றெனைத் தேற்றிய வாறே**
**வள்ளலே இன்றுநும் வரவுகண் டல்லால்**
**அருந்தவர் நேரினும் பொருந்தவும் மாட்டேன்**
**அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.**

**உரை :** திருவருள் ஞானவுருவாகிய பேரொளியையுடைய பெருமானே; திருந்திய என் உள்ளத்தில் நிலவுகின்ற திருக்கோயில் வடலூராகிய ஞான சித்திபுரத்து நினது திருக்கோயில் என்பதை உண்மையாகக் கண்டேன்; அத் திருக்கோயிலுள் எழுந்தருளுகின்ற பெருமானாகிய நீர் அன்றொருநாள் என்னுடைய இரண்டு கண்களும் கண்டு இன்புறுமாறு போந்து, உமது அழகிய திருவுருவைக் காட்டி வருந்துவது ஒழிகவென்று சொல்லி என்னைத் தெளிவித்தது போலவே இன்றும் வள்ளலாகிய உமது திருவரவைக் கண்டாலன்றி அரிய தவத் தையுடைய பெரியவர்கள் என் முன் வந்தாலும் நான் அவர்களை மனம் பொருந்திக் காண மாட்டேன்; இது நும்மேல் ஆணையாகச் சொல்வ தாகும். எ.று.

சிவஞானத்தாலும், சிவன்பால் எளதாகிய பேரன்பாலும் தமது உள்ளம் தூயதாதலை யுணர்த்த, "திருந்தும் என் உள்ளம்" என்றும், தமது திருந்திய சிந்தையிலிருந்து காட்சி தருவது வடலூர் ஞான சித்திபுரம் என வற்புறுத்தற்கு, "உள்ளத் திருக்கோயில் ஞான சித்தி புரம் எனச் சத்தியம் கண்டேன்" என்றும் தெரிவிக்கின்றார். சிந்தையில் தோன்றும் சித்திபுரத் திருக்கோயிலுள் அன்றொருநாள் சிவபெருமான் எழுந்தருளிக் காட்சி தந்தருளிய செய்தியையும், அப்பொழுது அப்பெரு மான் அவரை நோக்கி "உன்னுடைய மனக் கவலையை ஒழிப்பாயாக" என உரைத்தருளி மகிழ்வுறுத்திய அருட் செயலையும் வியந்து கூறுகின்று

ராதலால், "இருந்தருள்கின்ற நீர் என்னிரு கண்கள் இன்புற அன்று வந்து எழிலுருக் காட்டி வருந்தலை என்று எனைத் தேற்றியவாறே" என இயம்புகின்றார். அன்று பெற்ற சிவதரிசனமே இன்றும் பெறல் வேண்டுமெனத் தம் உள்ளத்தெழும் ஆர்வத்தை விளங்க உரைப்பாராய், "வள்ளலே இன்றும் வரவு கண்டல்லால் அருந்தவர் நேரினும் பொருந்தவும் மாட்டேன்" என உரைக்கின்றார். தவச் செல்வர்கள் வரின் அவர்கட்கு ஏனை யாவர்க்கும் முற்படச் சிறந்த நிலையில் வரவேற்றல் அறமாயினும், யான் மனமிசைந்து அன்பு பொருந்தி வரவேற்பதை விடுத்து உமது வரவிற்கே தலைமை இடம் தந்து பேணிப் போற்றுவேன் என்பாராய், "அருந்தவம் நேரினும் பொருந்தவும் மாட்டேன்" என்றும், இதனை நும்மீது ஆணையாகச் சொல்லுகின்றேன் என்பார், "ஆணை நும் மீது" என்றும் வலியுறுத்துகின்றார்.

இதனால், முன்பொருநாள் வடலூர் சித்திபுரத்துச் சிவபெருமானுடைய அருட்காட்சி பெற்ற திறம் தெரிவித்தவாறும். (7)

**3797. கரைக்கணம் இன்றியே கடல்நிலை செய்தீர்**
**கருணைக் கடற்குக் கரைக்கணஞ் செய்யீர்**
**உரைக்கண வாத உயர்வுடை யீர்என்**
**உரைக்கண விப்பல உதவிசெய் கின்றீர்**
**வரைக்கண எண்குண மாநிதி ஆனீர்**
**வாய்மையில் குறித்தநும் வரவுகண் டல்லால்**
**அரைக்கணம் ஆயினும் தரித்திட மாட்டேன்**
**அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.**

**உரை :** அருட் பெருஞ் சோதி யுருவாகிய பெருமானே; கரை வகைகள் இல்லாமலே கடல்களை நிலைபெறச் செய்தருளிய நீவிர் கருணையாகிய கடலுக்குக் கரையிலாதவர் ஆவீர்; சொல்லிதற் கடங்காத பெருமையை யுடையவராகிய நீவிர், என்னுடைய சொற்களுக்கு அடங்கி உதவிகள் பலவும் செய்து வருகின்றீர்; மலை போன்ற எண் வகைக் குணங்களாகிய பெருஞ் செல்வமாக நீர் இருக்கின்றீர்; உம்முடைய வாய்மை நிறைந்த அருள் வரவைக் கண்டாலல்லது அரைக்கண நேரமாயினும் உயிர் தாங்கி யிருக்க மாட்டேன்; இது நும் மேல் ஆணையாகச் சொல்வதாகும். எ.று.

சிறிய நீர் நிலையாயினும் உலகியல் மக்கள் அதற்குப் பலவகையான கரைகளை யிட்டு நிலைபெறச் செய்வது வழக்கு. அளப்பரிய பெரிய நீர் நிலையாகிய கடலுக்குக் கரை கிடையாது; கரை யின்றியே அதனை நிலைபெறச் செய்யும் இறைவனுடைய திருவருளை வியந்து பேசுதலின், "கரைக்கண மின்றியே கடல் நிலை செய்தீர்" என எடுத்து மொழிகின்றார் அவ்வியல்பால் உம்முடைய கருணையாகிய கடலுக்கும் கரையாகிய ஆணை யிடுவதில்லை என்றற்கு, "கருணை கடற்குக் கரைக்கணம் செய்யீர் என மொழிகின்றார். மலைகளும் குன்றுகளுமாகிய இயற்கை அணைகளையும், மலை போல் உயர்வுற அமைத்த செயற்கைக் கரைகளையும் மக்கள் நீர் நிலைகட்குக் கரைகளாக அமைப்பது பற்றி, "கரைக்கணம் இன்றிக்

கடல் நிலை செய்தீர்'' எனக் கட்டுரைக்கின்றார். இறைவனுடைய பெருமை எத்துணை உயர்ந்தோராலும் அளவிட்டு உரைக்க முடியாத தாகலின், ''உரைக்கணவாத உயர்வு உடையீர்'' என்றும், எனினும் என்னுடைய உரைகளை விரும்பி யேற்று இனிய உலகியல் வாழ்க்கைக் கும் ஞான வாழ்க்கைக்கும் ஏற்பன பலவற்றையும் உதவுகின்றீர் எனப் போற்றுகின்றாராதலின், ''என் உரைக்கு அணவிப் பல உதவி செய் கின்றீர்'' என உரைக்கின்றார். அணவுதல் - விரும்பி ஏற்று அடங்குதல். குணங்களின் சலியா இயல்பு பற்றி அவற்றை மலைகளாய் உவமித்துக் ''குணக் குன்றம்'' என்று சான்றோர் பாராட்டும் மரபு பற்றி, ''வரைக் கண எண்குணம்'' எனவும், அக் குணங்களையே பெருஞ் செல்வமாகப் போற்றி, ''எண் குண மாநிதி ஆனீர்'' எனவும் பாராட்டுகின்றார். குறித்தது தவறாத நல்லியல்பு விளங்க, ''வாய்மையில் குறித்த நும் வரவு என்று புகல்கின்றார்.

இதனால், சிவபெருமானுடைய திருவருள் வரவை வடலூர் வள்ளல் மிக்க பெரும் ஆர்வத்தோடு எதிர்பாக்கின்றமை கூறியவாறும். (8)

**3798.** **மடுக்க நும் பேரருள் தண்அமு தெனக்கே**
**மாலையும் காலையும் மத்தியா னத்தும்**
**கடுக்கும் இரவினும் யாமத்தும் விடியற்**
**காலையி னுந்தந்தென் கடும்பசி தீர்த்து**
**எடுக்குநற் றாயொடும் அிணைந்துநிற் கின்றீர்**
**இறையவ ரே உம்மை இங்குகண் டல்லால்**
**அடுக்கவீழ் கலைஎடுத் துடுக்கவும் மாட்டேன்**
**அருட்பெருஞ் சோதியீர் ஆணை நும் மீதே.**

**உரை :** திருவருளாகிய பெரிய ஒளி யுருவாகிய பெருமானே; காலை மாலை, நண்பகல், இரவு, நடுயாமம், விடியற் போது ஆகிய இக்காலங் களில் என் மிக்க பசி யறிந்து உணவளித்துப் போக்கிக் கைகளில் எடுத் தணைக்கும் தாய்க் கொடுப்பாக நுமது பேரருள் ஞானமாகிய தண்ணிய அமுதத்தை யான் உண்ணவளித்து விளங்குகின்றீர்; இறைவனாகிய உம்மை இப் பிறப்பில் இவ்வுலகில் கண் குளிரக் கண்டாலன்றி இடை யினின்றும் நெகிழ்ந்து வீழும் உடையையும் உடன் எடுத்து உடுக்க மாட்டேன்; இது நும் மேல் ஆணை. எ.று.

பெற்ற தாய் தன் குழவியின் பசியை எண்ணி மாலை காலை முதலிய ஆறு பொழுதினும் பாலுணவு தந்து அதன் மிக்க பசியைத் தீர்த்து ஆதரிப்பது உலகியலில் கண்ட உண்மை. அது போலவே இறைவனும் தமக்குத் திருவருள் ஞானமாகிய அமுதத்தைப் பொழுதறிந்து தந்தருளிப் பேணுகின்றார் என்பாராய், ''மடுக்க நும் பேரருள் தண்ணமுது எனக்கே மாலையும் காலையும் மத்தியானத்தும் கடுக்குறும் இரவினும் யாமத்தும் விடியற் காலையினும் தந்து என் கடும்பசி தீர்த்து எடுக்கு நற்றாயொடும் இணைந்து நிற்கின்றீர்'' எனக் கூறுகின்றார். மடுத்தல் - உண்ணல். கடுத்தல் - மிகுதல். இணைதல் - ஒத்தல். காணுவிடில் - மான வுணர்வின்றி உடுக்கும் உடையையும் எடுத்து

உடுத்துக் கொள்வதன்றி அலேவேன் என்பாராய், ''உம்மை இங்கு கண்டு அல்லால் அடுக்கு அவிழ் கலை எடுத்துடுக்கவும் மாட்டேன்'' என உரைக்கின்ருர்.

இதனுல், திருவருள் ஞான வமுதம் பெற்று வாழும் நான் உமைக் கண்டாலன்றி நெகிழும் உடையையும் எடுத்தணிய மாட்டேன் என முறையிட்டவாரும். (9)

3799. **கறுத்துரைக் கின்றவர் களித்துரைக் கின்ற**
**காலே தென்றே கருத்துள் அறிந்தேன்**
**நிறுத்துரைக் கின்றபல் நேர்மைகள் இன்றி**
**நீடொளிப் பொற்பொது நாடகம் புரிவீர்**
**செறுத்துரைக் கின்றவர் தேர்வதற் கரியீர்**
**சிற்சபை யீர்எனைச் சேர்ந்திடல் வேண்டும்**
**அறுத்துரைக் கின்றேன்நான் பொறுத்திட மாட்டேன்**
**அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.**

**உரை :** தன்னை அடைந்தார்க்கு அளந்தறிந்து உரைக்கின்ற பல வகையான நேர்மை உரைகளைப் பேசாமல் நெடிய ஒளி பொருந்திய அழகிய அம்பலத்தின்கண் கூத்தாடுதலைச் செய்கின்ற பெருமானே; வெறுத்துப் பேசுகின்றவர் அறிந்து கொள்ளுதற்கு அரியவரே; ஞான சபையை யுடையவரே; அருட் பெருஞ் சோதி யுருவாகிய தலைவரே; வெகுண்டு பேசுகின்றவர்களும் மகிழ்ந்து உரையாடுகின்ற நற்பொழுது இதுவா மென்று மனதால் அறிந்து உரைக்கின்றேனுதலால், என்பால் இப்பொழுது போந்து அருள் புரிய வேண்டுகிறேன்; இனி நான் பொறுக்க முடியாது என்பதை அறுதியிட்டுக் கூறுகின்றேன்; மேலும் இது நும் மேல் ஆணையாக உரைப்பதாகும். எ.று.

நிறுத்துரைத்தல் - தகுதி யறிந்து வேண்டுவன உரைத்தும் செய்தும் அருள் செய்கின்ற செயல்களை விடுத்து அம்பலத்தின்கண் நின்று ஆடல் புரிவதை வியந்து புகழ்கின்ருராதலால், ''நிறுத்துரைக்கின்ற பல்நேர்மை கள் இன்றி நீடொளிப் பொற்பொது நாடகம் புரிவீர்'' என மொழிகின்ருர். நெடுந் தூரம் பரந்து ஒளிர்தலின் பேரொளி யுடைய அம்பலத்தை, ''நீடு ஒளிப் பொற் பொது'' எனப் பாராட்டுகின்ருர். செறுத்துரைக்கின்றவர் - நெஞ்சில் வெறுப்புற்றுப் பேசுபவர். மனத்தின்கண் வெறுப்புணர்வு நிலவும்போது உண்மையை யுணரும் திறம் கெட்டொழிதலால், ''செறுத்து உரைக்கின்றவர் தேர்வதற்கு அரியீர்'' என்று போற்று கின்ருர். சிற்சபை - ஞானசபை. கறுத்து உரைக்கின்றவர் - சினந்து பேசுகின்றவர். கணந்தோறும் மாறுகின்ற குண வேற்றுமையால் சினம் முதலிய குற்றங்கள் தோன்றுதலின், ''கறுத்து உரைக்கின்றவர் களித்து உரைக்கின்ற காலை'' என்று காலத்தின் இயல்பு விளங்க உரைக்கின்ருர். அறுத்து உரைத்தல் - அறுதியிட்டுப் பேசுதல்.

இதனுல், காலத்தின் இயல்பறிந்து திருவருள் ஞானத்தை வழங்கத் தம்முன் போந்தருள வேண்டும் என இறைவன்பால் வடலூர் வள்ளல் முறையிட்டவாரும். *(10)*

திருச்சிற்றம்பலம்

## 32. பிரியேன் என்றல்

அஃதாவது, இறைவனுடைய திருவருள் இன்ப ஞான வாழ்வு பெற்றாலன்றி உமது திருமுன் நின்று நீங்கேன் என முறையிடுவதாம். மண்ணியல் வாழ்வின் குறிக்கோள் திருவருள் ஞானப் பேரின்பப் பெரு வாழ்வு பெறற்கு உரித்ததாகலின், அது தமக்கு எய்துங்காறும் விடாப் பிடியாய் இருக்கும் தமது மனக் கொள்கையை இப் பகுதியில் பாட்டுத் தோறும் விரித்துரைக்கின்றார்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**3800.** அப்பாநான் பற்பலகால் அறைவதென்னே அடியேன்
அச்சம்எலாம் துன்பம்எலாம் அறுத்துவிரைந் துவந்தே
இப்பாரில் இதுதருணம் என்னைஅடைந் தருளி
எண்ணம்எலாம் முடித்தென்னை ஏன்றுகொளாய் எனிலோ
தப்பாமல் உயிர்விடுவேன் சத்தியஞ்சத் தியம்நின்
தாளிணைகள் அறிகஇது தயவுடையோய் எவர்க்கும்
துப்பாக்கித் துணையாகித் துலங்கியமெய்த் துணையே.
சுத்தசிவா னந்தஅருட் சோதிநடத் தரசே.

உரை : தயவாகிய அருட் செல்வத்தை உடையவனே; உலகில் யாவர்க்கும் நுகர் பொருளாகியும் துணைவனாகியும் விளங்குகின்ற மெய்யான துணைவனே; சுத்த சிவானந்தத்தை நல்கும் அருட்சோதி உருக் கொண்டு அம்பலத்தில் ஆடுகின்ற அருளரசே; அப்பனே; உன் திருமுன் அடியவனாகிய நான் பலகாலும் பலவற்றைப் பல வகையால் எடுத்துரைப்பது என்னை? என்னுடைய அச்சங்களைப் போக்கித் துன்பங் கள் எல்லாவற்றையும் ஒழித்து இத்தருணத்தில் இவ்வுலகில் விரைந்து மகிழ்ச்சியுடன் என்பால் வந்தருளி என்னுடைய எண்ணங்கள் அனைத்தையும் ஈடேற்றி என்னை உனது அருள் நெறியில் ஏற்றுக் கொள்ளாயானால் யான் தவறாமல் என் உயிரை விட்டுவிடுவேன்; இது சத்தியம்; இதனை உன் திருவடிகள் அறிந்து கொள்ளட்டும். எ.று.

அருளே சிவனுக்குத் திருமேனியும் உடைமையும் செல்வமுமாதல் பற்றி, "தயவுடையோய்" என்று எடுத்து மொழிகின்றார். தன்னை அடைந் தவர் எத்திறத்தாராயினும் அவர்கட்கு ஞானமுதம் ஆகியும் ஞானத் துணையாகியும் நீங்காது விளங்குகின்ற சிவபெருமானுடைய செம்மை நிலையை விளக்குதற்கு, "எவர்க்கும் துப்பாகித் துணையாகித் துலங்கிய மெய்த்துணையே" என்று உரைக்கின்றார். சிவன்பால் பெறப்படுகின்ற சிவயோக யோகானுபவத்தைச் "சுத்த சிவானந்தம்" என்றும், அதனை

அருள் ஒளி கொண்டு அம்பலத்தில் நிகழ்த்துகின்ற ஆடல் நல்கும் இயல் புடைத்தாதல் பற்றி, "சுத்த சிவானந்த அருட் சோதி நடத்தரசே" என்றும் புகல்கின்றார். எக்காலத்தும் எப்போதும் உலகியலில் தாம் பெறுகின்ற அச்சங்களையும் துன்பங்களையும் எடுத்தோதிய வண்ணமிருத்தலால், "அப்பா நான் பற்பலகால் அறைவது என்னே" என்று முறைபட மொழிகின்றார். இறைவன் திருவருள் ஞானம் எய்துதற்கு உலகியல் வாழ்வில் உண்டாகும் அச்சங்களும் அவலங்களும் தடையாக நிற்பது கண்டு, "அடியேன் அச்சமெலாம் துன்பமெலாம் அறுத்து" எனவும், மீளவும் வந்து தாக்காமை கருதி "விரைந்து வந்து பாரில் இது தருணம் என்னை அடைந்தருளுக" எனவும், அவ்வருளால் சிவஞானப் பேறு குறித்து யான் எண்ணுகின்ற எண்ணங்கள் எல்லாவற்றையும் நிறைவித்துத் தம்மைத் திருவருளில் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டு வாராய், "இப் பாரில் இது தருணம் என்னை அடைந்தருளி எண்ண மெலாம் முடித்து என்னை ஏன்றுகொள்வாய்" எனவும் முறையிடுகின்றார். தம்மை ஏலா தொழியின் தாம் இறந்துபடுவது மெய்யாம் என வற்புறுத் தற்கு, "தப்பாமல் உயிர் விடுவேன் சத்தியம் சத்தியம்" என்றும், இதனைத் தானும் நும்முடைய திருவடிகள் அறியச் செப்புகின்றேன் என்பார், "நின் தாள் இணைகள் அறிக இது" என்றும் இயம்புகின்றார்.

இதனால், உலகியல் வாழ்வில் உளவாகும் அச்சம் அவலம் ஆகிய வற்றைப் போக்கி எண்ணியவற்றை எண்ணியாங்கு எய்துவித்து என்னை நின் திருவருட் சூழலில் சேர்த்துக்கொள்க என விண்ணப்பித்தவாறும். (1)

**3801. ஆணை உன்மேல் ஆணை உன்மேல் ஆணை உன்மேல் ஐயா**
**அரைக்கணமும் நினைப்பிரிந்தே இனித்தரிக்க மாட்டேன்**
**கோணைநிலத் தவர்பேசக் கேட்டதுபோல் இன்னும்**
**குறும்புமொழி செவிகள்உறக் கொண்டிடவும் மாட்டேன்**
**ஊணைஉறக் கத்தையும்நான் விடுகின்றேன் நீதான்**
**உவந்துவராய் எனில்என்றன் உயிரையும்விட் டிடுவேன்**
**மாணைமணிப் பொதுநடஞ்செய் வள்ளால்நீ எனது**
**மனம்அறிவாய் இனம்உனக்கு வகுத்துரைப்ப தென்னே.**

உரை: மாண்புடைய மணிகள் இழைத்த அம்பலத்தில் ஆடல் புரிகின்ற அருள் வள்ளலே; உமது திருவருள் ஞானச் சூழலில் நின்று அரைக்கண நேரமும் யான் இனிமேல் பிரிந்து தரித்திருக்க மாட்டேனு கின்றேன்; தீய நெறியினை யுடைய உலகத்தவர் பேசுவதை இன்று வரை கேட்டதுபோல் இனி மேலும் அவர்களுடைய குறும்பு மொழிகளை என் செவிகள் பொருந்தக் கேட்டுக்கொண்டிருக்க மாட்டேன்; உண்டி உறக்கங்களையும் நான் இனி விட்டொழிக்கின்றேன்; நீயும் மனமகிழ்ந்து என்பால் வாராயாயின், என் உயிரையும் விடத் துணிந்துள்ளேன்; என்னுடைய மனவியல்பையும் நீ நன்கறிவாயாதலால் இன்னமும் உனக்கு என் துன்பங்களை வகுத்துரைப்பது என்ன பயனைச் செய்வதாம்; இதனையும் உன் மேல் ஆணையாக உரைக்கின்றேன். எ.று.

மாண்பு என்னும் சொல் "மாணை" என வந்தது. மணிப் பொது, மணிகள் இழைத்த பொன்னம்பலம். அம்பலத்தில் ஆடல் புரிவதும்

இறைவன் அருட் செயலாதலின், "நடஞ்செய் வள்ளால்" என நவில்கின்றார். திருவருட் சூழலில் நின்று அரை நொடிப்பொழுது பிரியினும், உலகியல் மாயை படர்ந்து அறிவை மயக்கித் திருவருட்கு மாறாய நெறியில் செலுத்துதலின், "அரைக்கணமும் நினைப் பிரிந்தே இனித் தரிக்க மாட்டேன்" எனவும், உயிர் உணர்வோடு இருக்கும்போது உலகத்தவர் பேசும் பேச்சுக்களைக் கேட்டு மனம் மாயை மயக்கிற்கு இரையாதலின், "கோணை நிலத்தவர் பேசக் கேட்டதுபோல் இன்னும் குறும்பு மொழி செவிகளுறக் கொண்டிடவும் மாட்டேன்" எனவும், ஊணும் உறக்கமும் உடலோம்பற்கு உறவாய் உலகியல் மாயையின்கண் செலுத்துதலின், "ஊணை உறக்கத்தையும் நான் விடுகின்றேன்" எனவும் உரைக்கின்றார். கோணை நிலத்தவர் - நேர்மை நெறியினின்றும் பிறழ்ந்து நிலவும் உலகியல் மக்கள். அவர்கள் பேசுவன பலவும் குறும்பு விளைவிக்கும் தீய மொழிகளாதலின் அவற்றைக் கேட்பதும் குற்றமாம் என்பது பற்றி, "இன்னும் குறும்பு மொழி செவிகளுறக் கொண்டிடவும் மாட்டேன்" என்று கூறுகின்றார். கேள்வியறிவு தோன்றியது முதல் உலகினர் பேசும் பேச்சுக்களைக் கேட்டுப் பயின்றவராதலின், "நிலத்தவர் பேசக் கேட்டவர் போல்" எனக் கிளந்து ஓதுகின்றார். குறும்பு மொழி - பயனில் சொற்கள். துன்பம் விளைவிக்கும் சொற்கள் எனினும் அமையும். உறக்கத்தையும் என வந்த உம்மையும், ஊணையும் என விரித்துக் கொள்க. என் வேண்டுகோட்கு இசைந்து மனமகிழ்ந்து வந்தருள வேண்டும் என்றற்கு, "உவந்து வாராய் எனில்" என்று மொழிகின்றார். உயிரையும் விட்டிடுவேன் என்பது உறுதி குறித்து நின்றது. வேண்டுவார் மனப் பண்பறிந்து வேண்டுவன நல்குவது இறைவனது அருள் நெறியாதலின், "எனது மனம் அறிவாய்" என்றும், மனத்தால் வரும் துன்பங்களையும் சொல்லால் வருந் துன்பங்களையும் உடம்பால் வரும் துன்பங்களையும் வகை செய்து விரித்துரைப்பது முறையிடுவார் செயலாதலின், "இன்னம் உனக்கு வகுத்துரைப்பது என்னே" எனக் கூறுகின்றார். எல்லாம் அறிந்துள்ள உனக்கு இன்னமும் விரித்துரைப்பது வேண்டா கூறலாகும் என்றற்கு, "இன்னம் உனக்கு வகுத்துரைப்பது என்னை" என்று கூறுகின்றார். ஆணை நும் மேல், ஆணை நும் மேல் என அடுக்கி உரைத்தது வன்புறை.

இதனால், அருள் வழங்க இறைவன் வாரானாயின் உயிர் விடுதல் உறுதி என எடுத்தோதியவாறும். (2)

**3802.** **படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே**
**பட்டதெல்லாம் போதும்இந்தப் பயந்தீர்த்திப் பொழுதென்**
**உடல்உயிரா தியஎல்லாம் நீ எடுத்துக் கொண்டுன்**
**உடல்உயிரா தியஎல்லாம் உவந்தெனக்கே அளிப்பாய்**
**வடலுறுசிற் றம்பலத்தே வாழ்வாய்என் கண்ணுள்**
**மணியேஎன் குருமணியே மாணிக்க மணியே**
**நடனசிகா மணியேஎன் நவமணியே ஞான**
**நன்மணியே பொன்மணியே நடராச மணியே.**

உரை : வடலூரின்கண் உள்ள திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளும் பெருமானே; என் கண்ணின்கண் உள்ள மணி போல்பவனே;

குருமணியே; மாணிக்க மணி போல்பவனே; நடன சிகாமணியே; நவமணியே; ஞானமாகிய நல்ல மணியே; அழகிய மணி போல்பவனே; நடராசனுகிய சிவமணியே; உலகியல் நல்கும் துன்பத்தை யான் இனிமேல் பட முடியாது; அருளரசே! இதுகாறும் நான் பட்ட துன்பங்கள் போதும்; துன்பம் வந்து தாக்குமென்ற இந்த அச்சத்தைப் போக்கி இப்பொழுதே என் உடல் உயிர் முதலிய எல்லாவற்றையும் நீ எடுத்துக் கொண்டு உன்னுடைய உடல் உயிர் முதலிய அனைத்தையும் மனமுவந்து எனக்கு அளித்தருள வேண்டும். எ.று.

வடலூர் என்ற பார்வதிபுரத்தின்கண் அமைந்துள்ள சிற்றம்பலத்தை "வடலுறு சிற்றம்பலம்" என்றும், அங்கே கோயில் கொண்டருளும் கூத்தப் பெருமானை, "சிற்றம்பலத்தே வாழ்வாய்" என்றும் முன்னிலைப் படுத்துகின்றுர். அப் பெருமான்பால் கொண்ட பேரன்பால் அவனை "என் கண்ணுள் மணியே" என்று பாராட்டுகின்றுர். ஞானம் வழங்குதல் பற்றி, "குருமணியே" என்றும், ஒளி மிக்க சிவந்த திருமேனி உடைமை பற்றி, "மாணிக்க மணியே" என்றும், கூத்தப் பெருமானுதலால் "நடன சிகாமணியே" என்றும், புதிய புதிய ஞான விளக்கம் தருவது கொண்டு "நவமணியே" என்றும், ஞான மயமாய் விளங்குதல் பற்றி, "ஞான நன்மணியே" என்றும், திருவுருக் காட்சியைச் சிறப்பித்து, "பொன் மணியே" என்றும், "நடராச மணியே" என்றும் போற்றுகின்றுர். உலகியல் துன்பத்தை நினைந்து ஆற்ருமை மிக்குற்றமை புலப்பட, "இனித் துயரம் படமுடியாது படமுடியாது" என்று பகர்கின்றுர். இதுகாறும் பட்ட துயரங்கள் அத்தனையும் போதும் இனி வேண்டா என்றற்கு, "பட்ட தெல்லாம் போதும்" என்று கூறுகின்றுர். பட்ட துன்பங்கள் மேலும் வந்து தாக்குமோ என்ற அச்சம் நெஞ்சில் நிலவிய வண்ணமிருத்தலால் அதனை உடனே போக்கி யருளுக என வேண்டு வாராய், "இப்பொழுது இந்தப் பயம் தீர்த்து" எனவும், அச்ச வுணர்வு களால் அவலமுற்று மெலியும் என்னுடைய உடல் உயிர் முதலிய பசு கரணங்கள் எல்லாவற்றையும் நீ எடுத்துக்கொண்டு, அச்ச வகைகளால் தாக்கப்படாத உன்னுடைய உடல் உயிர் முதலிய பதி கரணங்களை மனமுவந்து எனக்கு அளித்தருளுக; அதனுல் இவ்வுலகியல் துன்பங்கள் தாக்கப்படாது இனிது உறைவேன் என்பாராய், "என் உடல் உயிர் ஆதியவெல்லாம் நீ எடுத்துக்கொண்டு உன் உடல் உயிராதிய வெல்லாம் உவந்து எனக்கே அளிப்பாய்" எனவும் வேண்டுகின்றுர். வடல் - வடலூரின் மரூஉ வழக்கு. அழகிய கோயில் கொண்டிருத்தலின் "சிற்றம்பலத்தே வாழ்வாய்" என்று சிறப்பிக்கின்றுர். "என் கண்ணுள் மணியே, என் குருமணியே" என்பது முதலாக வருவன வள்ளற் பெருமானுடைய அன்பு மிகுதியைப் புலப்படுத்தும் ஆர்வ மொழிகளா கும்.

இதனுல், தன்னுடைய பசு கரணங்கள் யாவும் பதி கரணங்களாக மாற்றியருளுக என விண்ணப்பித்தவாரும். (8)

**3803. வாழைஅடி வாழைஎன வந்ததிருக் கூட்ட**
**மரபினில்யான் ஒருவன்அன்றோ வகைஅறியேன் இந்த**
**ஏழைபடும் பாடுனக்குந் திருவுளச்சம் மதமோ**
**இதுதகுமோ இதுமுறையோ இதுதருமந் தானே**

மாழைமணிப் பொதுநடஞ்செய் வள்ளால்யான் உனக்கு
மகன்அலனே நீஎனக்கு வாய்த்ததந்தை அலேயோ
கோழைஉல குயிர்த்துயரம் இனிப்பொறுக்க மாட்டேன்
கொடுத்தருள்நின் அருள்ஒளியைக் கொடுத்தருள்இப்
பொழுதே.

**உரை :** பெருமானே; வாழையடி வாழை போல உன்னுடைய அடியார்களின் திருக்கூட்டத் தொகுதியுள் யானும் ஒருவன் ஆவேனன்றோ; அவர் வகைவுள் யான் எவ்வகையைச் சேர்ந்தவனே அறிகிலேன்; ஏழையாகிய நான் படும் துன்பம் உன்னுடைய அருள் நிறைந்த திருவுள்ளத்திற்கு இசைந்தது தானே? நான் துன்பப்படும் இது ஆண்டவனாகிய உனக்குத் தக்கதாகுமோ? முறையாகுமோ? ஆண்டவனாகிய உனக்கு நான் படும் துன்பத்தைப் பார்த்துக் கொண்டிருப்பது தர்மமாகுமா? மணி யிழைத்த பொன்னம்பலத்தில் திருநடம் புரிகின்ற வள்ளலாகிய உனக்கு யான் மகனல்லவா; நீ எனக்கு ஏற்ற தந்தை யல்லவா; வன்மை யில்லாத உலகில் வாழும் உயிர்களுக்கு எய்துகின்ற துன்பத்தை இனியும் நான் பொறுத்திருக்க முடியாது; ஆதலால், என் உயிர்க்கு உறுதி உண்டாகும்வண்ணம் நின்னுடைய அருள் ஞான ஒளியைக் கொடுத்தருள்க; அதனையும் இப்பொழுதே கொடுத்தருள வேண்டுகிறேன். எ.று.

கனி யீந்த வாழை மடியவும், அதன் அடியில் கிளைத்துத் தோன்று கின்ற வாழை வளர்ந்து கனி நல்குவதும், அதன்பின் அதனடியில் கன்று தோன்றி முன்னையது போலக் கனி தருவதும் இயல்பாம். அதுபோல, அடியார்களும் வழி வழியாகத் தோன்றுவது மரபு. அவ்வடியார்களைப் போல யானும் தோன்றி யுள்ளேன் என்பார், "வாழையடி வாழை என வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ" என உரைக்கின்றார். அடியார்களின் தொண்டு வகை தாச மார்க்கம், சற்புத்திர மார்க்கம், நேச மார்க்கம், ஞான மார்க்கம் என நால்வகைப்படுதலின், தாம் மேற் கொண்டிருக்கும் மார்க்கம் இத்தகையது என உணர்ந்துரைக்க மாட்டாராய், "வகை யறியேன்" என மொழிகின்றார். சிவஞான மில்லாதவன் எனத் தமது பணிவு தோன்றக் கூறுவார், "இந்த ஏழை" எனத் தம்மைக் கூறுகின்றார். சிவ பரம் பொருளாகிய உமக்குத் தொண்டு பட்ட அடியவனாகிய யான் துன்புறுவது உன்னுடைய அருட் பெருமைக்கு ஒத்ததாகாது என்றும், உமது திருவடியே பற்றி நிற்கும் யான் துன்புறுவதும், யான் துன்புறுவதை நீ கண்டிருப்பதும் தேவரீரது நிலைமைக்குத் தகுதிக்கும் முறைமையும் தருமமும் ஆகாது என்பாராய், "உனக்குத் திருவுளச் சம்மதமோ, இது தகுமோ, இது முறையோ, இது தருமந் தானே" எனக் கூறுகின்றார். மாழை மணிப் பொது - பொன்னும் மணியும் கொண்டு அமைத்த பொன்னம்பலம். மாழை - பொன். தமக்கும் சிவபெருமானுக்கும் உள்ள தொடர்பு கூறுவார், "யான் உனக்கு மகனலனே, நீ எனக்கு வாய்த்த தந்தை அலேயோ" என்று மொழிகின்றார். உறுவது கூறி வேண்டுவது வேண்டிப் பெறுவது மகனுக்குள்ள முறையாதலின், "யான் உனக்கு மகனலனே" எனவும், செய்வதறியாது சிந்தை தியங்குமிடத்து நல் ஞானம் வழங்கி நன்னெறியில் உய்த்தலின், "நீ எனக்கு வாய்த்த

தந்தை அலையோ'' என்று விளக்கி, உலகியல் வாழ்வால் தம் உயிர்க் குளதாகும் துன்ப மிகுதியைப் பொறுத் தாற்றும் மதுகை தம்பால் இல்லாமை புலப்படுத்தற்கு, ''கோழை யுலகுயிர்த் துயரம் இனிப் பொறுக்க மாட்டேன்'' எனவும், எத்தகைய துன்பங்கள் வந்து தாக்கினும் பொறுத் துய்தற்கு ஏற்ற உடல் வன்மையும் ஞானத் திண்மையும் உண்டாக்குவது திருவருள் ஞான ஒளியாதலின், அதனை இப்பொழுதே கொடுத் தருள்க என விண்ணப்பிக்கின்றாராதலால், ''கொடுத்தருள் நின்னருள் ஒளியை'' எனவும், ''கொடுத்தருள் இப்பொழுதே'' எனவும் குறித்துரைக்கின்றார். கோழை உலகுயிர் - கோழைத் தன்மையையுடைய உலகத் துயிர்கள். துன்பங்களைப் பொறுத் தாற்றும் வன்மை யில்லாதவையாதலின் உலகுயிர்களை, ''கோழை உயிர்'' என்று கூறுகின்றார். கோழைமை - மனத்திண்மை யில்லாமை.

இதனால், உலகுயிர்களின் கோழைமைத் தன்மையை எடுத்தோதி அதனைப் போக்குதற்குரிய அருளொளியை நல்குமாறு வேண்டியவாறு. (4)

**3804.** **செய்வகைஎன் எனத்திகைத்தேன் திகையேல்என் றொருநாள்**
**திருமேனி காட்டிஎனைத் தெளிவித்தாய் நீயே**
**பொய்வகைஅன் றிதுநினது புத்திஅறிந் ததுவே**
**பொன்அடியே துணைஎனநான் என்உயிர்வைத் திருந்தேன்**
**எய்வகைஎன் நம்பெருமான் அருள்புரிவான் என்றே**
**எந்தைவர வெதிர்பார்த்தே இன்னும்இருக் கின்றேன்**
**ஐவகைஇவ் உயிர்த்துயரம் இனிப்பொறுக்க மாட்டேன்**
**அருட்சோதிப் பெரும்பொருளை அளித்தருள்இப்**
**பொழுதே.**

**உரை :** எந்தையே, ஒருநாள் துன்பத்தால் தாக்குண்டு அறிவு மருண்டு நின்றேனாக நீ குருபரனாய்த் திருமேனி விளங்க உன்னைக் காட்டி மருள வேண்டா என்று எனக்குத் தகுவன கூறித் தெளிவித்தருளினாய்; இது பொய்யுரை யன்று; உன்னுடைய திருவுள்ளம் நன்கறிந்ததாகும்; உன்னுடைய அழகிய திருவடிகள் இரண்டுமே எனக்குத் துணையாம் என்று எண்ணி நான் என்னுடைய உயிரைத் தாங்கி யிருந்தேன்; இனித் தளருவது ஏன்? நம் பெருமானாகிய பரமன் அருள் செய்யா தொழியான் என்றெண்ணி உன்னுடைய அருள் வரவை எதிர்பார்த்துக் கொண்டு இன்னும் இருக்கின்றேன்; ஆயினும், கண் காது முதலிய ஐவகைக் கருவிகளால் என் உயிர்க்கு எய்தும் துன்பங்களை இனிப் பொறுத்தாற்ற மாட்டேனாகின்றேன்; ஆகவே இப்பொழுதே திருவருள் ஞான ஒளியாகிய பெரிய பொருளை எனக்கு அளித்தருள்வாயாக. எ.று.

இதன்கண் துன்ப மிகுதியால் அறிவு திகைத்து செய்வகை அறியாமல் மயங்கியபோது சிவபரம்பொருள் குருமுதல்வனாய்த் திருவுருக் கொண்டு தம்பால் எழுந்தருளி மனமயக்கம் தீர்த்துத் தெளிவு பெறுவித்த அருட் செயலை நினைப்பிப்பாராய், ''செய்வகை என்னெனத் திகைத்தேன் திகையேல் என்று ஒருநாள் திருமேனி காட்டி எனைத் தெளிவித்தாய்

நீயே'' என்று உரைக்கின்றார். தாம் கூறுவது பொய்யுரை யன்று; இறைவன் திருவுள்ளம் அறிந்த நிகழ்ச்சி என்றற்கு, ''பொய்வகையன்று இது நினது புந்தி அறிந்ததுவே'' என்று புகல்கின்றார். நினது அருளுரையால் அன்று தெளிவுபெற்ற நான் துன்பங்கள் எத்தனை வந்து தாக்கினும் நின் திருவடியே துணையென்ற உள்ளத்தோடு உயிர் தாங்கி இருப்பேனாயினேன் எனத் தமது மனநிலையை எடுத்துக் காட்டுதற்கு, "பொன்னடியே துணை என நான் என் உயிர் வைத்திருந்தேன்'' என்று உரைக்கின்றார். துன்பங்களால் மனச்சோர்வு எய்திய பொழுதும் சோர்வது எற்றுக்கு? நம் பெருமானாகிய பரம்பொருள் முன்போல் நம்பால் வந்தருளித் தன் திருவருள் ஞானத்தை வழங்கி அருளுவான் என்ற எண்ணத்தால் உன்னுடைய திருவரவை எதிர்பார்த்துக் கொண்டு இப்பொழுதும் இருந்துவருகின்றேன் என இயம்புவாராய், "எய்வகை என் நம்பெருமான் அருள் புரிவான் என்றே எந்தை வரவு எதிர்பார்த்தே இன்னும் இருக்கின்றேன்'' என்று எடுத்துரைக்கின்றார். எனினும் துன்பங்கள் வந்து தாக்கியவாறு இருத்தலின் என்னால் பொறுத் தாற்ற முடியவில்லை; உனது அருள் ஞானமாகிய பெரும்பொருளை நீ இப்பொழுது நல்குவாயாயின் யான் உய்தி பெறுவேன் என்பாராய், "ஐவகை இவ்வுயிர்த் துயரம் இனிப் பொறுக்க மாட்டேன் அருட் சோதிப் பெரும்பொருளை அளித்தருள் இப்பொழுதே'' என்று விளம்பு கின்றார். ஐவகைத் துயரம் என்றது, கண் காது முதலிய ஐம்பொறி களாலும் உண்டாகும் துன்பங்கள். அவிச்சை, ஆங்காரம், அவா, ஆசை, கோபம் என ஆன்மாவை வருத்தும் ஐவகைத் துன்பங்கள் எனினும் பொருத்தம்.

இதனால், ஐவகைத் துயரங்களையும் பொறுத்தற்கு இன்றியமையாத அருட் சோதிப் பெரும்பொருளை நல்கி யருளுமாறு வேண்டியவாறும். (5)

**3805.** **முன்ஒருநாள் மயங்கினன்நீ மயங்கேல்என் றெனக்கு**
**முன்னின்உருக் காட்டினைநான் முகமலர்ந்திங் கிருந்தேன்**
**இன்னும்வரக் காணேன்நின் வரவைஎதிர் பார்த்தே**
**எண்ணிஎண்ணி வருந்துகின்றேன் என்னசெய்வேன் அந்தோ**
**அன்னையிலும் தயவுடையாய் நின்தயவை நினைத்தே**
**ஆருயிர்வைத் திருக்கின்றேன் ஆணைஇது கண்டாய்**
**என்இருகண் மணியேஎன் அறிவேஎன் அன்பே**
**என்உயிர்க்குப் பெருந்துணையே என்உயிர்நா யகனே.**

உரை : என்னுடைய இரண்டு கண்களிலும் ஒளிரும் மணி போல் பவனே; என்னுடைய அறிவே; என்னுடைய அன்பே; என் உயிர்க்குப் பெரிய துணையாகும் பெருமானே; என் உயிர்க்கு நாயகனே; முன்பொரு நாள் நான் அறிவு மயங்கி யிருந்த காலை என் முன் குருபரனாய் நின்னுடைய திருவுருவைக் காட்டி ''நீ மயங்குதல் ஒழிக'' என எனக்கு அறிவுரை வழங்கினாய்; நானும் முகம் மலர்ந்து இங்கே இருப்பேனா யினேன்; ஆயினும் நீ மீளவும் இன்னும் என்பால் வரக் கண்டிலேன்; நின்னுடைய அருள் வரவை எதிர்நோக்கி நின்னையே எண்ணி எண்ணி

வருந்துகின்றேன்; ஐயோ, நான் இனி யாது செய்வேன்; பெற்ற தாயினும் மிக்க பெரும் அருளுடையவனே; நின் திருவருளை நினைத்தே என்னுடைய அருமையான உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன்; இது உன் மேல் ஆணையாகச் சொல்வது காண். எ.று.

கண்ணிரண்டிற்கும் ஒளி தந்து விளக்கம் செய்வது கருமணி யாதலின் அதனைச் சிறப்பித்து, "என்னிரு கண்மணியே" என எடுத்து உவமம் செய்து பாராட்டுகின்றார். உயிர்க்கு அறிவு நல்குபவனும், அன்பின் உருவாகியவனும் இறைவனாதலால் அவனை, "என் அறிவே என் அன்பே" என்று போற்றுகின்றார். அறிவுருவாகிய உயிர்க்கு விளக்கம் தருவது குறித்து, அது புகும் உடம்புதோறும் தானும் புகுந்து பிரிவரிய துணையாய் நின்று பெருந் துணை புரிவதால் சிவபெருமானை "என் உயிர்க்குப் பெருந் துணையே" என்றும், உயிரினுடைய அறிவு, இச்சைச் செயல்கள் செயல்படுதற்குத் தலைவனாய் நின்று இயக்குதல் பற்றி, "என் உயிர் நாயகனே" என்றும் பராவுகின்றார். முக்குண வயத்தால் உடலுள் இயங்கும் உயிர், ஒரொருகால் மயங்குவதும் இறையருளால் தெளிவுறுவதும் உயிர்க் கியல்பாதலின், "முன்னொருநாள் மயங்கினன்" என்றும், பெருமயக்கத்தால் உயிரறிவு தெளிவு எய்தாது மயங்கு மிடத்து இறைவன் உலகியல் மக்களைப் போல் உருக் கொண்டு போந்து தெளிவுரை நல்கி மயக்கறுத்த செயல் விளங்க, "நீ மயங்கேல் என்று எனக்கு முன் நின் உருக்காட்டினை" என்றும், அத்தெளிவால் நானும் மனமும் முகமும் மலர்ந்து இவ்வுலகில் இன்புற்றிருந்தேன் என்பாராய், "நான் முகமலர்ந்து இங்கிருந்தேன்" என்றும் மொழிகின்றார். முன் போலவே இப்பொழுதும் நீ எழுந்தருளி என் மனமயக்கத்தை நீக்க வருவாய் என்று கருதியிருந்த என் முன் நீ இன்னும் வரக் காண்கிலேன் என்றும், அதனால் நான் நினது நினைவே கொண்டு வருந்தி மெலிகின்றேன் என்றும் கூறுவாராய், "இன்னும் வரக் காணேன், நின் வரவை எதிர்பார்த்தே எண்ணி எண்ணி வருந்துகின்றேன்" எனவும், நீ இருக்குமிடம் அறிந்து நின்னை என்பால் வருவித்துக் கொள்ளுதல் என் அளவிற்கு அப்பாற் பட்டதாதலின் செய்வகை யறியாது தியங்குகிறேன் என்றற்கு, "அந்தோ என்ன செய்வேன்" எனவும் உரைத்து அலமருகின்றார். பெற்ற தாயினும் பேரருள் உடையவனாதலின் நீ அருள் கூர்ந்து என்பாற் போந்து அருள் புரியத் தவறாய் என்று நினைத்து இப்பொழுதும் என் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன்; இது உன் மேல் ஆணை என்பாராய், "அன்னையினும் தயவுடையாய் நின் தயவை நினைத்தே ஆருயிர் வைத்திருக்கின்றேன் ஆணை இது கண்டாய்" என்று முறையிடுகின்றார். நீங்கினால் மீளப் பெறலரிது என்பது பற்றி உயிரை, "ஆருயிர்" என்று சிறப்பிக்கின்றார்.

இதனால், இறைவன் திருவருளை நினைந்தே தான் உயிர் தாங்கி யிருக்கின்ற நிலையை வடலூர் வள்ளலார் தெரிவிக்கின்றார். (6)

**3306. உன்னைமறந் திடுவேனோ மறப்பறியேன் மறந்தால்**
**உயிர்விடுவேன் கணந்தரியேன் உன்ஆணை இதுநீ**
**என்னைமறந் திடுவாயோ மறந்திடுவாய் எனில்யான்**
**என்னசெய்வேன் எங்குறுவேன் எவர்க்குரைப்பேன் எந்தாய்**

**அன்னையினும் தயவுடையாய் நீமறந்தாய் எனினும்
அகிலமெலாம் அளித்திடும்நின் அருள்மறவா தென்றே
இன்னுமிகக் களித்திங்கே இருக்கின்றேன் மறவேல்
இதுதருணம் அருட்சோதி எனக்குவிரைந் தருளே.**

உரை : பெருமானே! உன்னை நான் மறக்க வல்லனோ? உன்னை மறக்குந் திறத்தை நான் அறியேன்; ஒருகால் மறக்க நேர்ந்தால் நான் என் உயிரை ஒரு கணநேரமும் இருக்க விடாமல் துறந் தொழிவேன்; இது உன்மேல் ஆணையாக உரைப்பதாம்; ஒருகால் நீ என்னை மறந்து போவாயோ; மறப்பாயாயின் யான் யாது செய்வேன்; எங்கே போவேன்; எவரிடத்து இதனை எடுத்துரைப்பேன்; பெற்ற தாயினும் பேரருளுடைய நீ மறந்தாய் என்றாலும், உலக மெல்லாவற்றையும் படைத்தளிக்கும் நின்னுடைய திருவருள் என்றும் மறவாத இயல்புடையது என்று கருதி நான் இன்னும் உலகில் மிகவும் மகிழ்ச்சியோடு இருக்கின்றேன்; ஆதலால் என்னை நீ மறவற்க; இது நல்ல சமயமாதலின் நின் திருவருள் இன்ப ஒளியை விரைந்து எனக்கு அருளுவாயாக. எ.று.

உன்னை எம்பொழுதும் மறப்பதில்லாதவனாகிய யான் உன்னை ஒருபோதும் மறக்க மாட்டேன்; ஒருகால் குண மயக்கத்தால் மறப்பேனு யின் ஒருசிறு கணமும் நான் உயிர் தாங்கி யிருக்க மாட்டேன்; யான் உரைக்கும் இது உன்மேல் ஆணையாக உரைப்பதாகும் என்பார், "உன்னை மறந்திடுவேனோ மறப்பறியேன் மறந்தால் உயிர் விடுவேன்; கணந் தரியேன் உன் ஆணை இது" என்று இயம்புகின்றார். இறைவன் குணாதீதனாய் நினைப்பு மறப்புகட்கு உள்ளாகுபவ னல்லனாதலால், "நீ என்னை மறந்திடுவாயோ" என்று உரைக்கின்றார். மறதி நினைவுகட்கு இரையாகும் மக்கள் உடம்பிலிருந்து பேசுவதால் வடலூர் வள்ளல், "மறந்திடுவாய் எனில்" என்று மொழிகின்றார். எனில் என்பதனால் ஒருகாலும் மறவாமை வலியுறுத்தப்படுகிறதாம். இறைவன் மறந்திடு வானாயின் விளைவு இதுவென விளக்குவார், "யான் என்ன செய்வேன் எங்குறுவேன் எவர்க்குரைப்பேன் எந்தாய்" என்று இயம்புகின்றார். இறைவனை மறப்பித்தலும் நினைப்பித்தலும் மக்கட் செயற்கு அப்பாற் பட்டதாதலின், "என்ன செய்வேன்" எனவும், "எங்கு உறுவேன்" எனவும், "எவர்க்குரைப்பேன்" எனவும் ஏங்கி யுரைக்கின்றார். இவ்வாறே மணிவாசகரும் ஏங்கிய நிலையில் "ஆண்ட நீ அருளிலையானால் யாரொடு நோகேன் யார்க்கு எடுத்துரைப்பேன்" (வாழா) என உரைக்கின்றமை காண்க. மக்களில் தாயினும் சிறந்த தயவுடையவர் வேறு யாரும் இல்லாமையால் "அன்னையினும் தயவுடையாய்" என்று சிவனைப் புகழுகின்றார். மக்களைப் போல நீ ஒருகால் மறந்தாயானாலும் அருளே திருவுருவாகிய உமது உள்ளம் ஒருபோதும் மறவாது என வற்புறுத்துவாராய், "நீ மறந்தாய் எனினும் அகிலமெலாம் அளித்திடும் நின் அருள் மறவாது" என்ற உண்மையை வெளிப்பட வலியுறுத்துகின் றார். அத்திருவருள் உண்மையே பற்றுக் கோடாகக் கொண்டு நான் உயிரோடு மகிழ்ந்திருக்கின்றேன் என்றும், நீ என்னை மறத்தல் கூடாது என்றும் விண்ணப்பிக்கின்றாராதலால், "இன்னுமிகக் களித்திங்கே இருக்கின்றேன்" எனவும் "மறவேல்" எனவும் மொழிகின்றார். மறவாமல் தமக்கு அருள வேண்டுவது இதுவென விளக்குகின்றாராதலின், "இது

தருணம் அருட்சோதி எனக்கு விரைந்து அருளே" என்று வேண்டுகின்றார்.

இதனால், தமக்கு அருள் ஞான விளக்கத்தைத் தந்தருள வேண்டுமென விண்ணப்பித்தவாறும். (7)

3807. நான்மறந்தேன் எனினும்எனைத் தான்மறவான் எனது
நாயகன்என் றாடுகின்றேன் எனினும்இது வரையும்
வான்மறந்தேன் வானவரை மறந்தேன்மால் அயனை
மறந்தேன்நம் உருத்திரரை மறந்தேன்என் னுடைய
ஊன்மறந்தேன் உயிர்மறந்தேன் உணர்ச்சிஎலாம் மறந்தேன்
உலகம்எலாம் மறந்தேன்இங் குன்னைமறந் தறியேன்
பான்மறந்த குழவியைப்போல் பாரேல்இங் கெனையே
பரிந்துநின தருட்சோதி புரிந்துமகிழ்ந் தருளே.

உரை : நான் மறந்தேனாயினும் என்னுடைய நாயகனாகிய சிவபெருமான் என்னை மறக்க மாட்டான் என்ற எண்ணத்தால் மகிழ்ந்திருக்கின்றேன்; எனினும் இது பொழுது வரையும் வானுலகத்தையும் அங்குள்ள வானவர்களையும் மறந் தொழிந்தேன்; அவர்கட்கு மேலுள்ள தேவர்களாகிய திருமாலையும் பிரமனையும் மறந் தொழிந்தேன்; அவரோடு நம்முடைய சிவபெருமானுக்குரிய உருத்திர தேவர்களையும் மறந்திருந்தேன்; இவ்வுலகில் என்னுடைய உடம்பையும் உயிரையும் உணர்வுகளையும் மறந்ததோடு உலகம் எல்லாவற்றையுமே மறந்திருந்தேன் என்றாலும், இங்கு யான் சிவபரம்பொருளாகிய உன்னை மறந்ததில்லையாதலால், பால் மறந்த தன் குழந்தையைத் தாய் பார்ப்பதைப் போல என்னைப் பார்ப்பதின்றி என்பால் பரிவு கொண்டு திருவருள் ஞான ஒளியாகிய அருட்சோதியை எனக்கு விருப்பத்துடன் மகிழ்ந்து தந்தருள வேண்டுகிறேன் எ.று.

நினைப்பு மறப்புக்களாகிய குற்றங்கட்கு இடமாகிய உடம்பொடு கூடி இருக்கின்றேனாதலால் நான் சிவனை மறப்பது இயல்பு என்பாராய், "நான் மறந்தேன்" என்றும், அத்தகைய குற்றங்கட்கு இடமின்றிக் குணமே உருவாகிய பெருமான் என்னை ஒருகாலும் மறவான் என்ற எண்ணத்தால் நான் மகிழ்ந்து கிளர்ச்சியுடன் இருக்கின்றேன் என்பாராய், "நான் மறந்தேன் எனினும் எனைத் தான் மறவான் எனது நாயகன் என்று ஆடுகின்றேன்" என்றும் உரைக்கின்றார். மறதியாகிய குற்ற முடையவனாதலால் மேலுலக வாழ்வாகிய தேவருலக வாழ்வையும் அங்கு வாழ்கின்ற தேவர்களையும் அவர்களுக்கு மேலான வாழ்வையுடைய திருமால், பிரமன் முதலியோருடைய வாழ்வையும், உருத்திர மூர்த்திகளின் வாழ்வையும் மறந் தொழிந்தேன் என்பார், "இதுவரையும் வான் மறந்தேன் வானவரை மறந்தேன் மாலயனை மறந்தேன் நம் உருத்திரரை மறந்தேன்" என்று மொழிகின்றார். மண்ணுலகத்தில் மக்களிடத்தில் வாழ்ந்தேனாகினும் என் உடலையும், உயிரையும்,

உணர்ச்சிகளையும், ஏனை உலக போகங்களையும் யான் மறந்ததுண்டு; ஆயினும், உன்னை மறந்ததில்லை என வற்புறுத்தற்கு, "என்னுடைய ஊன் மறந்தேன் உயிர் மறந்தேன் உணர்ச்சி எலாம் மறந்தேன் உலக மெலாம் மறந்தேன் இங்கு உன்னை மறந்தறியேன்" என இசைக்கின்றார். தனக்கு வேண்டிய உணவைப் பால் உண்பதை விடுத்த குழவி பெற்ற தாயைக் கேட்டுப் பெற்றுக் கொள்வதால், பெற்ற தாய் பாலுண்ணும் குழவிபால் கொள்ளும் அன்பு வேறுபடுவது போல என்பால் பராமுகம் கொள்ளலாகாது என வேண்டுகின்றாராதலால், "பால் மறந்த குழவியைப் போல் எனைப் பாரேல்" எனவும், இங்கு என்பால் பரிவு கொண்டு நினது திருவருள் ஒளியாகிய ஞானத்தை நல்கி யருளுக என விண்ணப்பிப் பாராய், "பரிந்து நினது அருட் சோதி புரிந்து மகிழ்ந்து அருளே" எனவும் வேண்டுகின்றார்.

இதனால், மறதியாகிய குற்றமுடையேனாயினும் என்பால் பரிவு கொண்டு திருவருள் ஒளியாகிய ஞானப் பொருளை நல்கி யருளுக என விண்ணப்பித்தவாறும். (8)

3808. தெருவிடத்தே விளையாடித் திரிந்தஎனை வலிந்தே
சிவமாலை அணிந்தனைஅச் சிறுவயதில் இந்த
உருவிடத்தே நினக்கிருந்த ஆசைஎலாம் இந்நாள்
ஓடியதோ புதியஒரு உருவுவிழைந் ததுவோ
கருவிடத்தே எனைக்காத்த காவலனே உனது
கால்பிடித்தேன் விடுவேனோ கைப்பிடிஅன் றதுதான்
வெருவிடத்தென் உயிர்ப்பிடிகாண் உயிர்அகன்றால் அன்றி
விடமாட்டேன் விடமாட்டேன் விடமாட்டேன் நானே.

உரை: சிறு பருவத்தே தெருவின்கண் அங்குமிங்கும் ஓடி விளையாடித் திரிந்த என்னை வலிந்து அழைத்துச் சிவமாலை அணிந்து சிறப்பித்தாய்; அச்சிறு வயதில் இருந்த என்னுடைய உடலுருவின்கண் பரம் பொருளாகிய உனக்கிருந்த அன்பெல்லாம் இப்பொழுது நீங்கி விட்டதோ அன்றிப் புதிய ஓர் உடம்பின் உருவின்கண் அந்த அன்பு சென்று விட்டதோ அறிகிலேன்; கருவிலேயே என்பால் அருள் கொண்டு காத்தருளிய என் உயிர்க் காவலனாகிய உன்னுடைய திருவடியைப் பிடித்துக் கொண்டேன்; இனி அதனை விட மாட்டேன்; நான் பிடித்தது என் கைப்பிடி யன்று; அதுதானும் அச்ச நிலையில் பற்றிக் கொண்ட உயிர்ப் பிடியாகும்; அது என் உயிர் அகன்றாலன்றி விட மாட்டாத வன்மை யுடையது காண். எ.று.

சிறு பருவத்தில் மக்கள் ஓடி விளையாடுதலும் உண்டு உறங்குதலுமன்றி வேறு செயலுடையன வல்லவாதலின், "தெருவிடத்தே விளையாடித் திரிந்த என்னை" என்றும், அலைந்து திரியும் மனத்தையுடைய தன்னைப் பற்றி யீர்த்து அங்கிருத்தி, அக்க மாலை அணிந்து மகிழ்வித்த அருட் செயலை நினைந்து கூறுகின்றாராதலால், "எனை வலிந்து சிவமாலை அணிந்தனை" என்றும் இயம்புகின்றார். சிவமாலை அணிந்து தம்மைச் சிறப்பித்ததற்குக் காரணம் சிறு வயதில் தமது திருமேனி உருவத்தில் இறைவனுக் குளதாகிய அன்பு என எண்ணுகின்றாராதலால், "அச்சிறு

வயதில் இந்த உருவிடத்தே நினக்கிருந்த ஆசை'' என்றும், அந்த அன்பு இப்பொழுது இல்லை போலும் எனக் கூறலுற்று, ''ஆசை எலாம் இந்நாள் ஓடியதோ'' என்றும், ஆசை நீங்கியதற்குக் காரணம் வேறு ஒருவர் மேல் உனது அன்பு சென்றெழுந்தது போலும் என்பாராய், ''புதிய ஒரு உருவு விழைந்ததுவோ'' என்றும் எடுத்துரைக்கின்றார். புதுமை நாடுவது மக்களுயிர்க்கியல்பாதலால் அவ்வியல்பு நின்னிடத்தும் உளது போலும் என்பது கருத்து. இளமைப் பருவத்தேயே தமக்கு இறைவன் திருவருள் கிடைத்த திறத்தை விளக்குதற்கு, ''கருவிடத்தே எனைக் காத்த காவலனே'' என்று குறிக்கின்றார். பிறிதோரிடத்தும் இக் குறிப்பே தோன்ற ''ஆடையிலே எனை மணந்த மணவாளா'' (அருள் விளக்க) என்று வடலூர் வள்ளல் கூறுவது காண்க. இறைவன் திருவடிக் கண் தமக்குளதாகிய விடாப் பிடியை விளக்குதற்கு, ''உனது கால் பிடித்தேன் விடுவேனோ'' என்றும், ''கைப்பிடி யன்று அதுதான் வெருவிடத்து என் உயிர்ப்பிடி காண்'' என்றும் இயம்புகின்றார். அச்சம் தோன்றிய பொழுது பற்றப்படும் பிடிப்பு எளிதில் விடப்படும் மென்மை யுடையதன்று. ஆதலால் அதனை ''வெருவிடத்து என் உயிர்ப்பிடி காண்'' என்று உரைக்கின்றார். நீர் நிலைக்குள் வீழ்ந்து கரையேற மாட்டாது அஞ்சி அலமரும் ஒருவன் தன் உயிர்ப் பொருட்டுத் தன்னால் பற்றிய பொருளை விடாது உழலும் பிடி ''உயிர்ப் பிடி'' எனப்படும். பிடி நெகிழும் திறத்தை ''உயிர் அகன்றால் அன்றி விட மாட்டேன் விட மாட்டேன் விட மாட்டேன் நானே'' என விளக்குகின்றார்.

இதனால், தாம் இறைவன் திருவடியைப் பற்றி யிருக்கும் பிடிப்பு உயிர்ப்பிடிப்பு எனத் தெரிவித்தவாறும். (9)

**3809.** **பெரியன்அருட் பெருஞ்சோதிப் பெருங்கருணைப் பெருமான்**
**பெரும்புகழைப் பேசுதலே பெரும்பேறென் றுணர்ந்தே**
**துரியநிலத் தவர்எல்லாம் துதிக்கின்றார் ஏழை**
**துதித்தல்பெரி தலஇங்கே துதித்திடஎன் றெழுந்தே**
**அரியபெரும் பேராசைக் கடல்பெரிதே அதுஎன்**
**அளவுகடந் திழுக்கின்ற தாதலினால் விரைந்தே**
**உரியஅருள் அமுதளித்தே நினைத்துதிப்பித் தருள்வாய்**
**உலகம்எலாம் களித்தோங்க ஓங்குநடத் தரசே.**

உரை: எல்லா வுலகங்களும் இன்புற்று ஓங்குமாறு உயர்ந்த நடம் புரிகின்ற அருளரசே; பெருமை யுடையவனும் திருவருள் ஞானமாகிய பேரொளியையுடைய பெரிய கருணை உருக் கொண்ட பெருமானுமாகிய சிவபெருமானுடைய பெரிய புகழை எடுத்தோதுவதே பெருஞ் செல்வம் என்றுணர்ந்து துரிய நிலையிலிருந்து வழிபடுகின்ற பெருமக்கள் எல்லாரும் உன்னைத் துதிக்கின்றார்கள்; ஆகவே அவர்களை ஏழையாகிய யான் துதி செய்தல் பெருமை யுடையதாகாது; ஆயினும் இங்கே உன்னைத் துதித்தல் வேண்டுமென்று என் உள்ளத்தில் எழுந்த அரும் பெரும் அன்பாகிய கடல் பெரிதாகும்; அன்றியும் அது என்னுடைய அளவு கடந்து என்னை ஈர்க்கின்றதாதலால், விரைவுடன் உரியதாகிய உனது திருவருள் அமுதத்தை அளித்து உன்னை நான் நன்கு நினைத்துத் துதித்திட அருள் புரிய வேண்டுகிறேன். எ.று.

உலகுயிர்களெல்லாம் மலப் பிணிப்பின் நீங்கி உய்தி பெறற் பொருட்டே இறைவனது திருநடனம் அம்பலத்தில் நடைபெறுகிறது என்ற உண்மை விளங்க, "உலகமெலாம் களித்தோங்க ஓங்கு நடத்தரசே" என்று சிவனைப் பாராட்டுகின்றார். எல்லாத் தேவ தேவர் கட்கும் பெரியவன் என்பது பற்றி, "பெரியன்" என்றும், திருவருள் ஞான ஒளியுடன் பேரருளுருவாகிய பெருமான் சிவன் என்பது பற்றி, "அருட் பெருஞ் சோதிப் பெருங் கருணைப் பெருமான்" என்றும், அவனுடைய பெரும் புகழை விரும்பிப் பேசுவதே பெருஞானச் செல்வமாம் என்று எண்ணிச் சிவயோகிகள் எல்லாரும் எப்பொழுதும் துதித்து வாழ்கின்றார் கள் என்பாராய், "பெரும் புகழைப் பேறு என்றுணர்ந்து துரிய நிலத்தவர் எல்லாம் துதிக்கின்றார்" என்றும் எடுத்து மொழிகின்றார். துரிய நிலத்தவர், சாக்கிரத்தே துரியாவத்தைக்கண் இருந்து யோக நெறி மேற்கொண்டு சிவயோகம் புரியும் பெருமக்களை, "துரிய நிலத்தவர்" என்று குறிக்கின்றார். அப்பெரியோர்களது புகழுரைகளை நோக்க, தமது வழிபாடு மிகச் சிறிதாதலை யுணர்ந்து, "இங்கு ஏழை துதித்தல் பெரிதல" எனவும், என்றாலும் சிவனைத் துதிப்பதற்கு வடலூர் வள்ளலது உள்ளத்தே எழுந்த ஆர்வ மிகுதியை விதந்து "இங்கே துதித்திட என்று எழுந்த அரிய பெரும் பேராசைக் கடல் பெரிது" எனவும், பெரிதாகிய அவ்வார்வக் கடல் நின்றாங்கு நில்லாது என் உள்ளத்தின் எல்லை முழுதும் நிறைந்து என்னையும் தன் போக்கில் இழுக்கின்றது என்பாராய், "அதுதான் அளவு கடந்து இழுக்கின்றது" எனவும், அதனால் எனக்கு அருள் ஞான வமுதம் அளித்து அறிவு நிறைவித்து உன்னையே நினைந்து துதித்து வீழுமாறு அருள் புரிதல் வேண்டுமென விண்ணப்பிக்கின்றாரா தலால், "அது என் அளவு கடந்து இழுக்கின்றதாதலினால், "விரைந்து உரிய அருளமுது அளித்து நினைத் துதிப்பித்து அருள்வாய்" எனவும் வேண்டுதல் செய்கின்றார்.

இதனால், எனது ஆசைப் பெருக்கை நோக்கி அருளமுதம் வழங்கிச் சிவபரம்பொருளாகிய நின்னையே துதித்து வாழ்தற்கு அருள்க என விண்ணப்பம் செய்தவாறும். (10)

**3810.** **கவலைஎலாம் தவிர்ந்துமிகக் களிப்பினொடு நினையே**
**கைகுவித்துக் கண்களில்நீர் கனிந்துசுரந் திடவே**
**சவலைமனச் சலனம்எலாம் தீர்ந்துசுக மயமாய்த்**
**தானேதான் ஆகிஇன்பத் தனிநடஞ்செய் இணைத்தாள்**
**தவலருஞ்சீர்ச் சொன்மாலை வனைந்துவனைந் தணிந்து**
**தானாகி நானாடத் தருணம்இது தானே**
**குவலயத்தார் அதிசயிக்க எழுந்தருளி வருவாய்**
**குருவேஎன் குற்றம்எலாம் குணமாக்கொண் டவனே.**

**உரை :** குருமுதல்வனே! யான் செய்யும் குற்றங்கள் எல்லா வற்றையும் என் உயிர்க் குணமாகக் கருதிப் பொறுத் தருளுபவனே; மனக் கவலை யெல்லாம் போக்கி மிகுந்த மகிழ்ச்சியோடு கைகுவித்து வணங்கிக் கண்களில் நீர் பெருகக் கோழைத் தன்மை பொருந்திய என் மனத்தின் சலனங்கள் தீர்ந்து சுகமயமாய்த் தானே தனக்கு முதலாய் இன்பம் பெருகும் ஒப்பற்ற திருநடம் புரிகின்ற இரண்டாகிய நின்

திருவடிகள் பொருளாகக் கெடுவதில்லாத சிறப்புக்களையுடைய சொன் மாலைகளைப் பலவாறும் தொடுத்துத் திருவடிகளில் அணிந்து சிவமயமாய் நானும் ஆடுதற் பொருட்டு இத்தருணத்தில் உலகவர் கண்டு அதிசயிக்கும் படியாக எழுந்தருளி வந்து அருளுவாயாக. எ.று.

கவலை தவிர்த்துக் களிப்போடு நினையே நினைந்து மனங் கனிந்து கைகுவித்துக் கண்களில் நீர் சுரந்து சலனமெலாம் தீர்ந்து சுகமயமாய்ச் சொன்மாலை வனைந்தணிந்து தானாகி நானாடல் வேண்டும்; அதற்குத் தருணம் இதுவாகும்; இத்தருணத்தில் குவலயத்தார் என்னைக் கண்டு அதிசயிக்குமாறு நீ எழுந்தருள வேண்டுமென்பது இப்பாட்டின் கருத்து. விருப்பு வெறுப்புக்களால் மனத்தின்கண் தோன்றி யலைக்கும் கவலைகள் ஒழிந்தாலன்றிக் களிப்பும் ஊக்கமும் உள்ளத்தில் நிலவாவாகலின், "கவலை எலாம் தவிர்ந்து மிகக் களிப்பினொடு" என்றும், அம்மன மகிழ்ச்சியால் அன்பு மிகுந்து கண்களில் நீர் சுரக்கக் கைகள் தலைமேல் குவித்து வாயால் துதித்தல் உண்டாகுதலின், "கைகுவித்துக் கண்களில் நீர் சுரந்திட" என்றும், இத்தகைய பத்தி நிலையால் மனச் சலனம் நீங்குதலின், "சவலை மனச் சலனமெலாம் தீர்ந்து" என்றும், சலன மில்லாத நீர்நிலை போலத் தெளிவும் அமைதியும் உள்ளத்தே நிலவுவது பற்றி, "சுகமயமாய்" என்றும் கூறுகின்றார். சவலை மனம் - திடமில்லாத மனம். திடமில்லாத பொழுது மனத்தில் சுழற்சியும் கலக்கமும் உண்டாதல் பற்றி, "சவலை மனச் சலனமெலாம் தீர்ந்து சுகமயமாய்" என இயம்புகின்றார். தானே தனக்கு முதலும், இடையும், கடையுமாய் எல்லாமாய் விளங்குதலால் கூத்தப் பெருமானை, "தானே தானாகி" எனவும், அத்தனிப் பெருங்கூத்து இன்ப மயமாய் விளங்குதலின், "இன்பத் தனிநடனம்" எனவும் சிறப்பிக்கின்றார். சொன்மாலை - சொற் களால் தொடுக்கப்படும் பாமாலை. இசை நலமும், பொருள் நலமும், சொன்னலமும் நிறைந்து விளங்குதல் பற்றி, "தவலருஞ்சீர்ச் சொன்மாலை" என்று புகல்கின்றார். தவல் - கெடுதல். சொன்மாலைகளைப் பல படியாக நினைந்து தொடுத்து அணிகின்ற பொழுது தொடுக்கும் உள்ளம் சிவத்தின் திருவருள் மயமாய் இன்பக் கிளர்ச்சியால் ஆட்டு வித்தலின், "தானாகி நான் ஆட" என்று சாற்றுகின்றார். நிலவுலகத்து மக்களினத்து ஒருவனாக இருந்தும் எனது இன்பத் தனி ஆடல் உலக மக்கட்கு வியப்பை உண்டு பண்ணுதலால், "குவலயத்தார் அதிசயிக்க எழுந்தருளி வருவாய்" என்று கூறுகின்றார். குற்றம் புரிவது உலகுயிர் கட்கு இயல்பு என்று எண்ணுகிற பொழுது, அவற்றின் மேல் வெறுப்பு உண்டாகாதாகலின், "குற்றமெலாம் குணமாகக் கொண்டவனே" என்று கூறுகின்றார்.

இதனால், மனக் கலக்கமின்றிச் சுகமயமாய்ச் சொன்மாலை வனைந் தணிந்து மனமகிழ்ச்சி மீதூர்ந்து உலகியல் மக்கள் கண்டு அதிசயிக்கும் படியாக நான் ஆனந்தக் கூத்தாடுமாறு அருள் புரிக என வடலூர் வள்ளல் கூத்தப் பெருமானை வேண்டியவாறும். (11)

திருச்சிற்றம்பலம்

## 33. சிவ தரிசனம்

அஃதாவது, சிவதரிசனம் பெறுவது குறித்துச் சிவபெருமானை வேண்டுவதாகும். இங்கே சிவம் என்பது திருவருள் ஞானத்தின் மேற்று. அருள் ஞான வடிவமான சிவத்தைத் திருவருள் என்றும், திருவருள் ஞானம் என்றும், ஞானமானது ஒளி மயமாவது பற்றி அருட் சோதி என்றும் வடலூர் வள்ளற் பெருமானால் குறித்தருளப் பெறுவதால் சிவஞானமாகிய அருட் சோதியைத் தம்பாற் போந்து வழங்கி அருளுமாறு இதன்கண் பாட்டுத் தோறும் வேண்டுகின்றார்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**3811. திருஉடையாய் சிற்சபைவாழ் சிவபதியே எல்லாம்**
**செய்யவல்ல தனித்தலைமைச் சித்தசிகா மணியே**
**உருஉடைஎன் உயிர்க்குயிராய் ஒளிர்கின்ற ஒளியே**
**உன்னுதொறும் என்னுளத்தே ஊறுகின்ற அமுதே**
**அருஉடைய பெருவெளியாய் அதுவிளங்கு வெளியாய்**
**அப்பாலும் ஆய்நிறைந்த அருட்பெருஞ்சோ தியனே**
**மருஉடையாள் சிவகாம வல்லிமண வாளா**
**வந்தருள்க அருட்சோதி தந்தருள்க விரைந்தே.**

**உரை :** சிவஞானமாகிய செல்வத்தை யுடைய பெருமானே! ஞான சபையில் வாழ்கின்ற பதிப் பொருளாகிய சிவனே! எத்தகைய செயலை யும் செய்ய வல்ல ஒப்பற்ற தலைமை நலம் பொருந்திய ஞானிகளின் முடிமணியாக விளங்குபவனே! உருவுடைய என்னுடைய உயிர்க் குயிராய் விளங்குகின்ற ஒளிப் பொருளே! நினைக்கும் தோறும் என் சிந்தையின்கண் சுரந்து பெருகுகின்ற அமுதமானவனே! அருவாகிய பெருவெளியாய் அது நிலவுகின்ற தத்துவாதீதப் பரவெளியாய் அதற்கப் பாலுமாய் எங்கும் நிறைந்து ஒளிரும் அருட் பெருஞ் சோதியையுடைய ஐயனே! ஞான மணம் கமழும் சிவகாமவல்லியின் மணவாளனே! என்பால் போந்தருளி அருட் சோதியாகிய சிவஞானத்தை எனக்கு விரைந்து தந்தருள்க. எ.று.

சிவஞானமாகிய திருவருட் செல்வத்தை உடையனாதல் பற்றிச் சிவ பெருமானை, "திருவுடையாய்" என்றும், ஞான சபையின்கண் நின்று உலகுயிர்களுக்கு மங்கலமும் இன்பமும் நல்குவதால், "சிற்சபைவாழ் சிவபதியே" என்றும் இயம்புகிறார். வரம்பிலாற்றலுடைய பெருமானாகி யும், எல்லா வுலகங்களுக்கும் தேவ தேவர்களுக்கும் உயர்வற வுயர்ந்த தலைவனாகியும், பேராற்றல் படைத்த சிவ ஞானிகளுக்கு முடிமணியாக வும் விளங்குவதால், "எல்லாம் செய்ய வல்ல தனித் தலைமைச் சித்த

சிகாமணியே'' என்று பாராட்டுகின்றார். அருவுருவானதால் உயிரை 'உருவுடைய என்னுயிர்' என்றும், உயிர்க்குயிராய் நல்லுணர்வாகிய ஒளி தந்து வாழ்விப்பது பற்றி "உயிர்க்குயிராய் ஒளிர்கின்ற ஒளியே'' என்றும் ஓதுகின்றார். சிந்திப்பார் சிந்திக்கும் தோறும் அவர் சிந்தையின் கண் தேனாய் ஊறி இன்புறுத்துவது கொண்டு "உன்னுதொறும் என்னுளத்தே ஊறுகின்ற அமுதே'' என்று பராவுகின்றார். சிவ பரம்பொருள் நின்று விளங்குகின்ற ஞானப் பெருவெளி உருவமில்லாத ஞானாகாசப் பெருவெளியாதலால், "அருவுடைய பெருவெளியாய்'' எனவும், அப்பெருவெளி விளக்கம் பெறுகின்ற ஆகாசம் தத்துவாதீதப் பெருவெளியாதலால் அதனை, "அது விளங்கு வெளியாய்'' எனவும், தத்துவாதீதப் பெருவெளிக்கும் சிதாகாசப் பெருவெளிக்கும் இடைப்பட்ட பெரு வெளியை "அப்பால்'' என்று குறித்து அதனூடும் சிவப் பேரொளி திகழ்வது புலப்பட, "அப்பாலுமாய்'' எனவும், இப்பெருவெளிகள் எங்கும் நீக்கமற நிறைந்தருளுவது பற்றி, "நிறைந்த அருட் பெருஞ் சோதியனே'' எனவும் போற்றுகின்றார். "அப்பாலுக் கப்பாலுக் கப்பாலானை ஆரூரில் கண்டு அடியேன் அயர்ந்தவாறே'' என்றும், "அப்பாலுக் கப்பாலை பாடுதுங் காண் அம்மானை'' என்றும் சான்றோர் உரைப்பது காண்க. "இன்னவுரு இன்ன நிறம் என்று அறிவரிதாகிய சிவபரம்பொருளை'' அந்நிலையில் வைத்து இதுவரை பாராட்டிய வடலூர் வள்ளல் உருவுடைய சிவமும் தேவியுமாக வைத்துப் போற்றுகின்றாரா தலால், "மருவுடையாள் சிவகாமவல்லி மணவாளா'' என்று புகழுகின்றார். சிவகாம வல்லியாகிய உமாதேவி ஞான மணம் கமழும் திருமேனி யுடையவள் என்பது பற்றி அப்பெருமாட்டியை "மருவுடை யாள்'' என்று சிறப்பிக்கின்றார். அருள் உருவாகிய உமாதேவியின் திருவருளைப் பெற்றாலன்றிச் சிவஞானமாகிய திருவருள் எய்தப் பெறுவது அரிதாகலின், சிவகாமவல்லியை எடுத்தோதி வணங்குகின்றார். எங்கும் எல்லாப் பொருளிலும் அருவமாய் ஒன்றாய்க் கலந்திருக்கின்றானாதலின், தனக்கு முன்னிலைப் பொருளாக எழுந்தருளித் திருவருள் ஞானமாகிய அருட் சோதியை நல்குதல் வேண்டும் என விண்ணப்பிப்பாராய், "வந்தருள்க அருட் சோதி தந்தருள்க விரைந்தே'' என்று முறையிடு கின்றார். கணந்தோறும் மாறுகின்ற இயல்புடைய முக்குண வயப் பட்டிருத்தலின் மறதி தோன்றி மயக்குவதற் கஞ்சி "விரைந்து'' என்று குறிக்கின்றார்.

இதனால், முக்குண வயப்பட்டுக் கணந் தோறும் மயங்கி மாறுபடும் தமக்கு அருட் சோதியை விரைந்து வழங்கி யருள வேண்டும் என வடலூர் வள்ளல் முறையிட்டவாறும். (1)

**3812.** **சொல்லவனே பொருளவனே துரியபதத் தவனே**
**தூயவனே நேயவனே சோதிஉரு வவனே**
**நல்லவனே நன்னிதியே ஞானசபா பதியே**
**நாயகனே தாயகனே நண்பவனே அனைத்தும்**
**அல்லவனே ஆனவனே அம்பைஅப்பா என்னை**
**ஆண்டவனே தாண்டவனே அருட்குருவே எல்லாம்**
**வல்லவனே சிவகாம வல்லிமண வாளா**
**மன்னவனே என்னவனே வந்தருள்க விரைந்தே.**

**உரை :** சொல்லும் பொருளுமாகிய பெருமானே! துரியாவத்தைக் கண் ஆன்ம ஞானத்தில் காட்சி தருபவனே! தூய்மையும் தூய அன்பும் பொருந்திய ஞானவொளி யுருவாகிய சிவனே! நன்மையே செய்பவனே! அழியாத ஞானச் செல்வமே! ஞான சபையின்கண் விளங்குகின்ற தலைவனே! எல்லா வுலக உயிர்களுக்கும் நாயகமாகவும் தாயகமாகவும் நண்பனாகவும் விளங்குபவனே! எல்லாப் பொருளுமானவனும் அல்லாதவனுமாய் எவ்வுயிர்க்கும் அம்மையும் அப்பனுமாய் விளங்குபவனே! என்னை ஆண்டு கொண்டவனே! அம்பலத்தில் ஆடுபவனே! அருள் ஞானத்தை வழங்கும் குருமுதல்வனே! எல்லாம் வல்ல பெருமானே! சிவகாமவல்லிக்கு மணவாளனே! எல்லா வுலகங்கட்கும் மன்னவனே! என்னை யுடையவனே! என்பால் விரைந்து வந்து அருட் சோதி யின்பத்தைத் தந்தருளுக. எ.று.

நினைப்பார் நினைவின்கண் நீக்கமற நின்று நினைவு வழித் தோன்று கின்ற சொல்லும் பொருளுமாய்ச் சிவபரம்பொருள் திகழ்கின்றது என்பது பற்றிச் சிவனை, "சொல்லவனே பொருளவனே" என்று சுட்டிக் கூறுகின்றார். துரிய பதம் புருவ நடுவாகிய சாக்கிரத்தானத்தையும், கண்டமாகிய சொப்பனத்தானத்தையும், இதயமாகிய சுழுத்தித்தானத் தையும் கடந்து உந்தியாகிய துரியதானத்தில் இருந்து ஆன்ம ஞானத் தால் யோக நெறியில் காண்கின்ற சிவயோகிகளுக்குக் காட்சி தருவது பற்றிச் சிவபெருமானை, "துரிய பதத்தவனே" என்று கூறுகின்றார். தூய்மையே வடிவமாக இருப்பதினால் சிவனை, "தூயவனே" என்றும், அன்பே உருவமாக யிருப்பதால், "நேயவனே" என்றும், ஞானப் பேரொளியாக விளங்குவது பற்றி, "சோதி உருவவனே" என்றும் போற்றுகின்றார். நன்மையே புரிவது பற்றி, "நல்லவனே" எனவும், அடியார்களுக்கு நிலைத்த செல்வமாய் இன்ப வாழ்வு நல்குவது பற்றி, "நன்னிதியே" எனவும், ஞான சபையின்கண் தனிப் பெருங் கூத்தினை ஆடுவது பற்றி, "ஞான சபாபதியே" எனவும், உயிர் வகைகள் எல்லா வற்றுக்கும் நாயகனாக விளங்குவதால், "நாயகனே" எனவும், எல்லா வுலகங்களையும் படைத்தருளித் தாயாய் நின்று தாங்குவது பற்றி, "தாயகனே" எனவும், ஆன்மாக்களுக்கு நல்லுணர்வு தந்து உய்வித்தலின், "நண்பவனே" எனவும் புகழ்கின்றார். "தாயாகிய உலகங்களை நிலைபேறுசெய் தலைவன்" என்று ஞானசம்பந்தர் உரைப்பது காண்க. உலகங்களும் உலகியற் பொருட்களுமாகிய எல்லாமாய் அல்லதுமாய் இலகுவது கருதி, "அனைத்தும் ஆனவனே அல்லவனே" என்றும், உலகுயிர்களை வளர்ப்பவனும் அறிவு தந்து உய்விப்பவனுமா தலால், "அம்மை அப்பா" என்றும், வாழ்வில் உளவாகும் இடர்களிலும் தளர்வுகளிலும் ஊக்கம் குன்றும் நிலையில் நல்லுணர்வு தந்து இனிது உய்ய துணை புரிதலால், "என்னை ஆண்டவனே" என்றும், ஞானிகளின் திருவுள்ளத்தையே ஞானாகாசமாய்க் கொண்டு ஞான நடனம் புரிவதால், "தாண்டவனே" என்றும் துதிக்கின்றார். திருவருள் சிவஞானத்தை உணர்வின்கண் நின்று உணர்த்துவதோடு முன்னிலையில் மக்கள் உருவில் குருவாய் எழுந்தருளி அறிவுரை வழங்குவதால், "அருட் குருவே" எனவும், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல் ஆகிய எல்லாத் தொழில்களையும் செய்யும் சிவனது வல்லமையை வியந்து, "எல்லாம் வல்லவனே" எனவும் ஏத்துகின்றார்.

உலகமெல்லாம் கெடினும் தான் கெடாது நின்று அருள் புரிவது பற்றி, "மன்னவனே" என்றும், அடியவனாக ஏற்றுக் கொண்டு அருள்வது பற்றி, "என்னவனே" என்றும் பரவுகின்றார். உமாதேவியை மணந்து கொண்ட பெருமானாதலால், "சிவகாமவல்லி மணவாளா" என்று போற்றுகின்றார். தன்பால் விரைந்து வந்து திருவருள் ஞானத்தை வழங்குக வென வேண்டுகின்றாராதலால், சொல்லவனே என்பது முதல் என்னவனே என்பது ஈறாகப் புகழ்ந்து "வந்தருள்க விரைந்தே" என முறையிடுகின்றார்.

இதனால், திருவருள் ஞானத்தை விரைந்து போந்து தமக் கருளுக என வடலூர் வள்ளல் சிவபெருமானை வேண்டியவாறும். (2)

**3813.** **துரியநிலை துணிந்தவரும் சொல்லரும்மெய்ப் பொருளே**
**சுத்தசிவா னந்தசபைச் சித்தசிகா மணியே**
**பெரியசிவ பதியேநின் பெருமைஅறிந் திடவே**
**பேராசைப் படுகின்றேன் பித்தர்களில் பெரியேன்**
**கரியமணித் திறத்தினையும் காணவல்லேன் அல்லேன்**
**கண்மணியே நின்திறத்தைக் காணுதல்வல் லேனோ**
**அரியபெரும் பொருளாம்உன் அருட்சோதி எனக்கே**
**அளித்தனையேல் அறிந்துகொள்வேன் அளித்திடுக**
**விரைந்தே.**

**உரை :** துரியாவத்தைக்கண் இருந்து சிவ பரம்பொருளாகிய சிவத்தின் பரமாம் தன்மையை அறிந்து கொண்ட பெரியோர்களாலும் இத்தன்மையது என்று சொல்லுதற்கரிய மெய்ப்பொருளாக விளங்கு பவனே; சுத்த சிவானந்தம் நிலவுகின்ற ஞான சபையைக் கண்டுணரும் சித்தர்களின் முடிமணியாக விளங்குபவனே; பெருமை பொருந்திய சிவமாகிய பதிப் பொருளே; உன்னுடைய பெருமையை அறிந்து கொள்ளுவதற்குப் பித்தர்கள் எல்லாரினும் பெரும் பித்தனாகிய யான் பேராசையைக் கொண்டுள்ளேன்; நீல நிறமுடைய மணிகளின் இயல்புகளை அறிய மாட்டாதவனாகிய யான் கண்ணின் மணி போல் விளங்கும் நின்னுடைய அருள் நலங்களைக் காண வல்லவனா வேனோ? ஆதலால் பெறுதற்கரிய பெருமை மிக்க பரம்பொருளாகிய உன்னுடைய திருவருள் ஞான ஒளியை எனக்குத் தந்தருள்வாயாயின் உன்னுடைய அருட் பெருஞ் சோதி நலத்தை அறிந்து கொள்வேனா வேன்; ஆதலால் என்பால் விரைந்து வந்து அளித்தருளுக. எ.று.

துரியத்தின்கண் நின்று யோகக் கண் கொண்டு சிவத்தைக் கண்டு இன்புறுகின்ற சிவயோகச் செல்வர்களை, "துரிய நிலை துணிந்தவர்" என்று சிறப்பிக்கின்றார். சிவயோகக் காட்சியின்கண் சிவத்தின் உண்மை நிலையைத் தெளிவுற உணர்ந்திருத்தல் பற்றிச் சிவயோகிகளைத் "துணிந்தவர்" என்று புகழ்கின்றார். துணிதல் - தெளிய வுணர்தல். துரிய நிலையில் சிவதரிசனம் மானதக் கண் கொண்டு காணுதலால் அக் காட்சி நலம் வாயாகிய கருவியால் சொல்ல வாராமை பற்றி, "சொல்லரும் மெய்ப்பொருளே" என்று சொல்லுகின்றார். தூய சிவபோகம்

விளைகின்ற நிலையமாதலால் ஞான சபையை, "சுத்த சிவானந்த சபை" என்றும், அதனைக் கண்டு நுகர்ந்து இன்புறும் ஞான சித்தர்களுக்குத் தலைவனாக விளங்குவது பற்றி, "சித்தர் சிகாமணியே" என்றும் விளக்கு கின்றார். சிவ பரம்பொருள் எல்லாத் தெய்வங்கட்கும் தலைவனாய்ப் பெருமைக்கு எல்லையாய் வியங்குவது பற்றிச் சிவனை, "பெரிய சிவ பய்யே" என்று போற்றுகின்றார். எல்லை காண முடியாத சிவத்தின் பெருமையை மெய்யுணர்வுடைய மேலோர் நினைத்து பரவுவதை யன்றி முற்றும் அறிந்து கொள்ள விழையாராக, அறிந்து கொள்ள வேண்டு மென்று முயலுவது பித்தர் செயல் என்றற்கு, "பித்தர்களில் பெரியேன்" என்றும், "பெருமை அறிந்திடவே பேராசைப் படுகின்றேன்" என்றும் பேசுகின்றார். அறிய முடியாத ஒன்றை அறிய ஆசைப் படுவது பித்தர் செயலாம் என்பது பற்றி, "பேராசைப் படுகின்றேன் பித்தர்களில் பெரியேன்" என்று வடலூர் வள்ளல் தம்மைக் குறிக்கின்றார். மாணிக்கம் முதலிய மணிகள் ஒன்பதனுள் எளிதில் ஆராய்ந்து நலம் கண்டறியப் படுவது நீலமணியாயினும் அதனைத் தானும் கண்டறிந்து கொள்ளும் அறிவு நலம் என்பாலில்லை; அத்தகைய யான் கண்ணில் விளங்கும் கருமணி போன்ற நினது நல்லியல்புகளை அறிய வல்லவனல்லேன் என்பாராய், "கரிய மணித் திறத்தினையும் காண வல்லேன் அல்லேன்; கண்மணியே நின் திறத்தைக் காணுதல் வல்லேனோ" எனக் கூறுகின் றார். திருவருள் ஞானமாகிய அருட் சோதி, அருமையும் பெருமையும் நிறைந்த பொருள் என்றற்கு, "அரிய பெரும் பொருளாம் உன் அருட் சோதி" எனவும், அத்திருவருள் ஞானம் எனக்கு எய்துமாயின் நான் நின் அருள் பெறும் திறத்தை யுணர்ந்து கொள்வேன் என்பாராய், "எனக்கே அளித்தனையேல் அறிந்து கொள்வேன்" எனவும் ஓதுகின்றார். அறிதற் கரியவற்றையும் எளிதில் அறித்து கொள்ளச் செய்யும் அருட் சோதியை எனது யாக்கை நிலையாமை நோக்கி விரைந்து தந்தருளுக என்பாராய், "அளித்திடுக விரைந்தே" என்று உரைக்கின்றார்.

இதனால், சிவத்தின் பெருமை யறியவும் திருவருள் திறத்தைக் கண்டு கொள்ளவும் இறைவனுடைய அருட் சோதியைத் தந்தருளுக என வடலூர் வள்ளல் சிவபெருமானை வேண்டியவாறும். (3)

3314. மறப்பறியாப் பேரறிவில் வாய்த்தபெருஞ் சுகமே
மலைவறியா நிலைநிரம்ப வயங்கியசெம் பொருளே
இறப்பறியாத் திருநெறியில் என்னைவளர்த் தருளும்
என்னுடைய நற்றாயே எந்தாயே நினது
சிறப்பறியா உலகமெலாம் சிறப்பறிந்து கொளவே
சித்தசிகா மணியேநீ சித்திஎலாம் விளங்கப்
பிறப்பறியாப் பெருந்தவரும் வியப்பவந்து தருவாய்
பெருங்கருணை அரசேநீ தருந்தருணம் இதுவே.

**உரை :** மறத்தலில்லாத பேரறிஞர்களின் அறிவின்கண் விளங்கிப் பேரின்பத்தை அளிக்கின்ற சுகப் பொருளே; மயக்கம் இல்லாத ஞான நிலை முழுவதுமாக விளங்குகின்ற செம்பொருளே; இறத்தலில்லாத திருவருள் நெறியில் என்னைப் பேணி வளர்க்கின்ற என்னுடைய ஞானத்

தாயே; ஞானத் தந்தையே! உன்னுடைய பெருமைகளை அறியாத உலகவரெல்லாம் அதனை நன்கறிந்து கொள்ளவும், ஞானிகளின் முடிமணியாகிய நின்னுடைய ஞான சித்திகள் எல்லாம் விளக்கமுறவும், பிறவாப் பேரின்ப வாழ்வு பெற்ற தவயோகிகள் கண்டு வியப்படையவும் பெருங் கருணை யுருவாகிய அருளரசன் எனப்படும் நீ என்பால் வந்து திருவருள் ஞானத்தை நல்குதற்கு ஏற்ற தருணம் இதுவாகும்; ஆதலால் அதனை அடியேனுக்குத் தந்தருளுக. எ.று.

மறத்தலும் நினைத்தலுமாகிய குறைகளில்லாத ஞானிகளின் அறிவு பேரறிவு எனப்படுதலின், அப்பேரறிவு உடைய பெருமக்களின் அறிவு நெறியில் அவர்கட்கு அறிவானந்தத்தைப் பெருக நல்குவது பற்றிச் சிவனை, "மறப்பறியாப் பேரறிவில் வாய்த்த பெருஞ் சுகமே" என்றும், ஐயம் திரிபுகள் இல்லாத தெளிந்த ஞான நிலையில் அறிஞர்கள் அறிந்து இன்புறுமாறு சிறந்து விளங்குவது பற்றி, "மலைவறியா நிலை நிரம்ப வயங்கிய செம்பொருளே" என்றும் விதந்து கூறுகின்றார். மலைவு முதலிய ஐயம் திரிபுகளுக்கு இடமாகிய மனநிலை, எல்லாவற்றையும் குற்றமற வுணரும் பெரியோர்களின் அறிவு நிலை மலைவறியா நிலையாகும். அவர்கள் மெய்யுணர்ந்தோர் எனப்படுவதால் அவர்களுடைய மேன்மை யுணர்வின்கண் சிறந்து தோன்றுவது பற்றி, "செம்பொருளே" என்றும் சிறப்பிக்கின்றார். தூய்மையும் நோன்மையும் நிலைபேறும் உடைமை பற்றிச் சிவ பரம்பொருளைச் செம்பொருள் எனத் திருவள்ளுவர் குறிப்பது காண்க. "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காண்பதறிவு" எனத் திருக்குறள் ஓதுவது காண்க. பிறப்பிறப்புக்களை வென்றேருங்கும் சிவநெறியை "இறப்பறியாத் திருநெறி" என்று குறிக்கின்றார். திருஞானசம்பந்தரும் இச்சிவநெறிக்குரிய தமிழ்ப் பாட்டுக்களைத் "திருநெறிய தமிழ்" என்று சிறப்பித்து அருளுகின்றார். இச்சிவநெறிக் கண்ணே தோன்றி வளர்ந்து அறிவு பெற்று விளக்கம் எய்தினமை தோன்ற, "திருநெறியில் என்னை வளர்த்தருளும் என்னுடைய நற்றாயே எந்தாயே" என்று போற்றுகின்றார். எந்தையே என்பது எந்தாய் என வந்தது. சிவநெறியை மேற் கொள்ளாதவருடைய கூட்டத்தை, "சிறப்பறியா உலகம்" என்றும், அவர்கள் சிவத்தின் சிறப்பறிந்து கொண்டால் தெளிவு பெறுவர் என்பதற்காக, "சிறப்பறியா உலகமெலாம் சிறப்பறிந்து கொளவே" என்றும், சிவத்தின் திருவருட் செயல்கள் எல்லாம் மக்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்ற வேட்கையால், "சித்தி எல்லாம் விளங்க" என்றும், சிவயோக சிவ ஞானத்தால் பிறப்பறுத்த பெருமக்கள் எம்போல்வார் திருவருள் ஞானம் பெறுவது கண்டு எங்களை ஊக்குதல் வேண்டும் என்பார், "பிறப்பறியாய் பெருந்தவரும் வியப்ப" என்றும் வேண்டுகின்றார்.

இதனால், தமக்கருளும் திருவருள் ஞானத்தால் திருநெறி யறியா தவரும், திருவருள் ஞான சித்திகளைத் தெளியாதவரும், பிறவி வேரறுத்த பெரிய தவமுதல்வர்களும் அறிந்தும் கண்டும் வியந்தும் நலமுறுவர் எனத் தெரிவித்தவாறும்.

(4)

3815\. முன்னுழைப்பால் உறும்எனவே மொழிகின்றார் மொழியின்
முடிவறியேன் எல்லாம்செய் முன்னவனே நீஎன்
தன்னுழைப்பார்த் தருள்வாயேல் உண்டனைத்தும் ஒருநின்
தனதுசுதந் தரமேஇங் கெனதுசுதந் தரமோ
என்னுழைப்பால் என்பயனோ இரங்கிஅரு ளாயேல்
யானார்என் அறிவெதுமேல் என்னைமதிப் பவரார்
பொன்னுழைப்பால் பெறலும்அரி தருள்இலையேல் எல்லாம்
பொதுநடஞ்செய் புண்ணியநீ எண்ணியவா றாமே.

உரை : முன்னைத் தவத்தால் எல்லா நற்பயனும் உண்டாம் என்று அறிஞர்கள் மொழிகின்றார்கள்; அம்மொழியின் முடிவை என்னால் அறிய முடியவில்லை; எல்லாவற்றையும் செய்து முடிக்கும் முன்னோனாகிய நீ என்னைக் கடைக்கண் பார்த்து அருள்வாயாயின் எல்லாம் எனக்குண்டாம்; ஒப்பற்ற உன்னுடைய சுதந்தர நிலைமை உலகில் எனக்கு உரியதாகுமா; நீ அருள் புரியாயாயின் என்னுடைய உழைப்பால் என்ன பயன் விளையும்; யானார், யான் எத்தகையவன், என்னுடைய அறிவு யாதாம், என்னை எவர் மதிப்பார்; உனது திருவருள் இல்லையாயின் எவ்வளவு பொன் தந்தாலும் கருதிய பொருட் பயன் பெறுவது அரிதாம்; எச்செயலும் அம்பலத்தில் ஆடல் புரிகின்ற புண்ணிய மூர்த்தியாகிய நீ திருவுள்ளத்தில் எண்ணியது போலவே நடைபெறும். எ.று.

மக்கள் பெறுகின்ற நலன்கள் எல்லாவற்றிற்கும் முன்னைத் தவமே காரணம் என்று அறிஞர் கூறுவதை எடுத்தோதுகின்றாராதலால், "முன் உழைப்பால் உறுமெனவே மொழிகின்றார்" என்றும், முன்னைத் தவத்துக்குக் காரணம் யாது என்பார்க்கு முன்னைத் தவமே என்று உறப்படின் அது அனவத்தை என்னும் குற்றமாய் முடிதலின், "மொழியின் முடிவறியேன்" என்றும் கூறுகின்றார். எல்லாச் செயல் கட்கும், செயல் புரிபவர்க்கும் முன்னோனாதலால் சிவனை, "எல்லாம் செய் முன்னவனே" என இயம்புகின்றார். இறைவன் திருவருள் நோக்கம் உண்டாயின் எல்லா நலங்களும் யாவர்க்கும் உளவாதலின், "நீ என் தன் உழைப் பார்த்து அருள்வாயேல் அனைத்தும் உண்டு" என்றும், உன்னைச் சுதந்தரன் என்றும் என்னைப் பரதந்திரன் என்றும் நூலோர் உரைத்தலால், "ஒரு நின் தனது சுதந்தரம் இங்கெனது சுதந்தரமாமோ" என்றும் கூறுகின்றார். பசுபாச பந்தங்களை யுடைமை யால் ஆன்மாக்களைப் பரதந்திரம் என்று சிவாகமங்கள் உரைக்கின்றன. "கரைகழி பந்தம் பரதந்திரியம்" என்று ஞானாமிர்தம் என்னும் தமிழாகமம் உரைப்பது காண்க. பரதந்திரியாகிய எனது உழைப்பு நினதருளால் விளக்கமுறுதபடி என்னுடைய உழைப்பு பயனில்லாத உழைப்பாம் என்றற்கு, "இரங்கி அருளாயேல் என்னுழைப்பால் என்பயனோ" எனவும், சுதந்தர மில்லாமையால் என் ஆன்ம சத்தியும், ஆன்ம ஞானமும் பசுபாசங்கட்கு அடிமையாய்ப் பரதந்திரியப் படுதலால் சிறப்பிழந்து மழுங்குவதால் யானும் என்னறிவும் சிறுமை யுறுகின்றன; அதனால் சிவஞானத்தால் சுதந்தர ஞானமுடைய பெரியோர்களால் மதிப்பிழந்து போம் என்பாராய், "நீ இரங்கி அருளாயேல் யானார் என் அறிவெதுமேல் என்னை மதிப்பவரார்" எனவும் இசைக்கின்றார். "நானார் என்உள்ளமார் ஞானங்களார் என்னை யாரறிவார் வானோர் பிரான் என்னை

ஆண்டிலனேன்'' (கோத்தும்பி) என்று மணிவாசகப் பெருமான் உரைப்பது காண்க. மேலும் இவ்வுலகியலில் பொன்ஞல் எப்பொருளையும்செய்து கொள்ளலாம் என்பர்; ஆயினும் அச்செயல் தானும் நின் திருவருள் இல்லையாயின் எண்ணியவாறு நடைபெருது என்றற்கு, ''அருளில்லையேல் பொன் உழைப்பால் பெறலும் அரிது'' எனப் புகல்கின்ருர். இனி உண்மையுழைப்பால் பொன்னும் பொருளும் எல்லாம் பெறலாம் என்பராயினும், அதுதானும் நின் திருவருள் இல்லையாயின் பெறல் அரிதாம் என்று இதற்கு வேறு பொருள் கூறுதலும் உண்டு. இவ்வாற்ருல் புண்ணிய மூர்த்தியாகிய நீ எண்ணிஞல் எல்லாம் கைகூடும் என்பது விளக்க முறுகிறது என்பார், ''எல்லாம் பொது நடஞ்செய் புண்ணிய நீ எண்ணிய வாருமே'' என மொழிகின்ருர்.

இதனுல், இறைவன் திருவருளால் உண்டாகும் நலன்களை வடலூர் வள்ளல் எடுத்துரைத்தவாரும். (5)

3816. விழித்துவிழித் திமைத்தாலும் சுடர்உதயம் இலையேல்
விழிகள்விழித் திளைப்பதலால் விளைவொன்றும் இலையே
மொழித்திறஞ்செய் தடிக்கடிநான் முடுகிமுயன் ருலும்
முன்னவநின் பெருங்கருணை முன்னிடல்இன் றெனிலோ
செழித்துறுநற் பயன்எதுவோ திருவுளந்தான் இரங்கில்
சிறுதுரும்போர் ஐந்தொழிலும் செய்திடல்சத் தியமே
பழித்துரைப்பார் உரைக்களலாம் பசுபதிநின் செயலே
பாடிங்தெனையும் பாடுவித்துப் பரிசுமகிழ்ந் தருளே.

**உரை :** சூரியன் உதயம் ஆகாத போது கண்களைப் பரக்கப் பரக்க விழித்து நோக்கினுலும் விழி இமைகள் இளைத்துப் போவதன்றிப் பார்ப்பது ஒன்றும் இல்லையாம்; மொழிகளைத் தொடுத்துத் தொடுத்து அடிக்கடி விரைந்து பாட முயன்ருலும் முன்னவனுகிய நின்னுடைய பெரிய திருவருள் முன் நில்லாவிடில் செழுமையான பொருட் பயன் ஒன்றும் பாட்டில் அமையாது; அருளுருவாகிய உன் திருவுளம் இரங்கி அருளுமாஞல் ஒருசிறு துரும்பும் படைத்தல் முதலிய ஐவகைத் தொழில்களையும் செய்ய வல்லவாம்; இது உண்மை; பழித்துப் பேசுவோர் பேசுக; செய்வன வெல்லாம் பசுபதியாகிய நின் திருவருட் செயல்களாம்; என்பால் அருள் கூர்ந்து என்னையும் பாடச் செய்து அதற்குரிய பரிசிலையும் மகிழ்வோடு தந்தருள்க. எ.று.

சூரியன் உதயமாகாத போது எங்கும் இருள் பரந்து விடுதலால், எத்தனை முறை பரக்கப் பரக்க விழித்து நோக்கினுலும் இருளே விளைவதன்றிப் பொருட்களைப் பார்த்து மகிழ்தல் இல்லையாம்; அதுபோல் சொற்களை ஆராய்ந்து எடுத்துப் பாட்டுக்களை அமைக்க அடுத்தடுத்து விரைந்து முயன்ருலும் இறைவன் திருவருள் துணை இல்லையேல் பொருள் நலம் செறிந்த பாட்டு உருவாகாதென்ற இக்கருத்தை விளக்குவதற்கு, ''விழித்து விழித்து இமைத்தாலும் சுடர் உதயம் இலையேல் விழிகள் விழித்து விழித்து இளைப்பதலால் விளைவொன்றும் இலையே மொழித் திறஞ்செய்து அடிக்கடி நான் முடுகி முயன்ருலும் முன்னவ நின் பெருங்

கருணை முன்னிடல் இன்று எனிலோ செழித்துறு நற்பயன் எதுவோ" என்று கூறுகின்றார். இருட் பொழுதில் கண்களைப் பரக்க விழித்து விழித்துப் பலகாலும் இமைத்து நோக்கினாலும் இமைகள் சோர்ந்து போவதன்றிப் பார்த்து அறிதலாகிய பயன் ஒன்றும் உண்டாகாது; அதனை விழிகள் விழித்து விழித்து இமைப்பதல்லால் பயனொன்றும் இல்லையாம் என்பதை வற்புறுத்தற்கு, "விழிகள் விழித்து இளைப்பதல்லால் விளைவொன்றும் இல்லை" என்று விளம்புகின்றார். மொழித் திறஞ் செய்வதாவது சொல்லும் பொருளும் சிறக்குமாறு வழுச் சொல் இல்லாமல் கலந்து தூய இனிய சொற்களை அமைத்து ஓதுதல். பலகாலும் பாடப் பாடப் பாட்டுக்கள் உருவாவது இயல்பாதலால், "அடிக்கடி முடுகி முயன்றாலும்" என்றும், நான் செய்யும் முயற்சிகள் அத்தனையும் நின் திருவருள் துணை யில்லாவிடில் பாட்டுக்குச் செழுமை தரும் நற்பொருட் பயன் எய்தாது என்பாராய், "நின் பெருங் கருணை முன்னிடல் இன்று எனிலோ செழித்துறும் நற்பயன் எதுவோ" என்றும் இயம்புகின்றார். முன்னவன் - முதல்வன்; முற்பட நினைக்கத் தக்கவன். பெருங் கருணை முன்னிடலாவது - பெருமை பொருந்திய நின்னுடைய திருவருள் முன்னின்று உதவுதல். பாட்டுக்குச் செழுமையும் வனப்பும் பொருளின்பமும் அமைந்தாலன்றி அது பயனுடைய பாட்டாகாதா தலால், "செழித்துறு நற்பயன் எதுவோ" என்று தெரிவிக்கின்றார். திருவருட்டுணையின் வரம்பி லாற்றலை யுணர்த்துதற்கு, "திருவுளந்தான் இரங்கில் சிறு துரும்போர் ஐந்தொழிலும் செய்திடல் சத்தியம்" என்று செப்புகின்றார். சிறு துரும்பு என்றவிடத்துச் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. ஐந்தொழில்களாவன : படைத்தல், காத்தல், ஒடுக்குதல், மறைத்தல், அருளல் என்ற ஐந்துமாம். பழித்துரைப்பார் - குற்றம் கூறுவோர். "குற்றமே தெரிவார் குறுமாமுனி சொற்ற பாவினும் ஓர் குறை சொல்குவர்" (கந்தபு) என்பதனால் பழித்துரைப்பார் உரைக்க எனப் பகர்கின்றார். உலகில் உயிர் வகைகள் செய்வன யாவும் இறைவன் திருவருள் இயக்கமே என்பது எல்லா ஆகமங்களும் ஒப்ப உரைக்கும் உரையாதல் பற்றி, "எலாம் பசுபதி நின் செயலே" என்று கூறுகின்றார். அதனால் நான் பாடுவதும், பாட்டுக்குப் பரிசு பெறுவதும் நினது திருவருள் இயக்கமே என்பாராய், "பரிந்தெனையும் பாடுவித்துப் பரிசு மகிழ்ந்தருளே" என்றும், தன்னைப் பாடுவார் பாடக் கேட்டுப் பரிசு தருவது அருள் நெறியாதலால், "எனையும் பாடுவித்துப் பரிசு மகிழ்ந் தருளே" என்றும் பராவுகின்றார்.

இதனால், இறைவன் திருவருட்டுணையின்றிப் பாடுவதும் பாடற் பரிசு பெறுவதும் இல்லையாம் என்பது தெளிவித்தவாறும். (6)

3817. மாநிருபா திபர்சூழ மணிமுடிதான் பொறுத்தே
மண்ணாள வாளாள மனத்தில்நினைத் தேனோ
தேன்ஒருவா மொழிச்சியரைத் திளைக்கவிழைந் தேனோ
தீஞ்சுவைகள் விரும்பினனோ தீமைகள்செய் தேனோ
நான்ஒருபா வமும்அறியேன் நன்னிதியே எனது
நாயகனே பொதுவிளங்கும் நடராச பதியே
என்ஒருமை இலர்போல்நீ இருக்கின்றாய் அழகோ
என்ஒருமை அறியாயோ யாவும்அறிந் தாயே.

உரை : பெரிய மன்னர்கள் சூழ்ந்திருக்கத் தலையில் மணி முடியை அணிந்து மண்ணுலகை ஆளவும் வானவருலகத்தை ஆளவும் நான் மனத்தின்கண் விரும்பியதில்லை; தேன் போல் இனிக்கின்ற சொற்களைப் பேசும் மகளிரைக் கூடி மகிழ விரும்பினதில்லை; இனிய சுவை மிக்க உணவுகளை நான் விரும்பியதில்லை; யார்க்கும் தீமைகளைச் செய்ததில்லை; இவ்வாற்றால் நான் ஒரு பாவமும் செய்தறியேன்; நன்னலம் நல்கும் செல்வமாகியவனே; என்னுடைய தலைவனே; அம்பலத்தில் விளக்கமுற ஆடுகின்ற நடராசனாகிய பதியே; எல்லாம் அறிந்தவனாகிய நீ மனவொருமை யில்லாதவர் போலிருப்பது ஏனோ? அது உனக்கு அழகாகாதே; என்னுடைய ஒருமையை நீ அறிந்துள்ளாய் அன்றோ. எ.று.

மண்ணுலகில் சிற்றரசரும் பேரரசருமாகப் பலர் இருத்தலால் அவர்களை, "மாநிருபாதிபர்" எனப் புகழ்கின்றார். பேரரசர்கள் முடி சூழ அரசு வீற்றிருக்கும் போது சிற்றரசர்கள் அவருடைய அவைக் களத்தில் வந்திருந்து சிறப்பித்தல் மரபாதலின், "மாநிருபாதிபர் சூழ மணிமுடி தான் பொறுத்தே மண்ணாள வானாள மனத்தில் நினைத்தேனோ" என்று கூறுகின்றார். இம்மரபு மண்ணாளும் மன்னருக்கே யன்றித் தேவருலக இந்திரன் முதலிய தேவ அரசர்களுக்கும் உண்டு என்பது விளங்க, "வானாள" என்று உரைக்கின்றார். தேன் ஒருவா மொழிச்சியர் - தேனினது இனிமை நீங்காத சொற்களைப் பேசும் மகளிர். மொழியுடையவரை மொழிச்சியர் என்று குறிக்கின்றார். மண்ணகத்தும் விண்ணகத்தும் வாழ்பவர் மகளிர் இன்பத்தை விரும்புவது இயல்பாதல் பற்றி, பெண்ணாசையை இங்கே எடுத்துப் பேசுகின்றார். திளைத்தல் - கூடுதல். தீஞ்சுவை - இனிய சுவை பொருந்திய உணவு வகைகள். தீமைகள் - தீச்செயல்கள். அருளுருவாகிய இறைவனால் எல்லா இன்பங்களும் குறைவற நிறைவது பற்றி இறைவனை, "நன்னிதியே" என்று நவில்கின்றார். பொது - தில்லையம்பலம். மனத்தின்கண் ஒருமையுணர்வு இல்லாதவர் செய்யும் செயல் வகை யறியாது திகைப்பது போல இறைவன் வாளா இருக்கின்றான் என்பாராய், "ஒருமையிலர் போல் நீ இருக்கின்றாய் அழகோ" என்றும், எல்லாம் அறிந்த பெருமானாகிய நீ என்னுடைய மனவொருமையை அறியா தொழிந்தனையோ என வினவுவாராய், "என் ஒருமை அறியாயோ" என்றும் முறையிடுகின்றார்.

இதனால், ஒரு பாவமும் அறியாத என்பால் நீ பராமுகமாக இருப்பது முறையாகாது என்று வடலூர் வள்ளல் முறையிட்டவாறும். (7)

3818. பாவிமனக் குரங்காட்டம் பார்க்கமுடி யாதே
பதிவெறுத்தேன் நிதிவெறுத்தேன் பற்றனைத்தும் தவிர்ந்தேன்
ஆவிஉடல் பொருளைஉன்பாற் கொடுத்தேன்உன் அருட்பேர்
ஆசைமய மாகிஉனை அடுத்துமுயல் கின்றேன்
கூவிஎனை ஆட்கொள்ள நினையாயோ நினது
குறிப்பறியேன் பற்பலகால் கூறிஇளைக் கின்றேன்
தேவிசிவ காமவல்லி மகிழுமண வாளா
தெருள்நிறைவான் அமுதளிக்கும் தருணம்இது தானே.

**உரை :** உமாதேவியாகிய சிவகாமவல்லி மனம் மகிழுமாறு வீற்றிருக்கின்ற மணவாளப் பெருமானே! பாவியாகிய என்னுடைய மனமெனும் குரங்கு ஆடுகின்ற ஆட்டத்தைப் பார்க்க முடியவில்லை; என் ஊரையும் என் பொருளையும் பிறர்பால் எனக்கிருக்கும் பற்றுக்களையும் ஒழித்து விட்டேன். என்னுடைய உயிர் உடல் பொருள் மூன்றையும் உனக்கே உரிமை செய்துவிட்டு, நின்னுடைய திருவருளின்கண் பெருத்த ஆசையுடையனாய், உன்பால் அதைப் பெறுதற்கு அடுத்தடுத்து முயன்று கொண்டிருக்கின்றேன்; என்னைக் கூவி யழைத்து ஆளாகக் கொள்ளுதற்குத் திருவுளம் கொள்ளாயோ? உன்னுடைய திருக்குறிப்பை அறியேனாய்ப் பலகாலும் உன் திருப்பெயரைச் சொல்லிச் சொல்லி உள்ளம் சோர்கின்றேன்; உன்னுடைய விளக்கம் நிறைந்த திருவருள் ஞானமாகிய அமுதத்தை எனக்கு நல்குதற்கு இதுவே தருணமாகும். எ.று.

உமை யமர்ந்து விளங்கும் ஒரு பெருங் கடவுளாதலின், "தேவி சிவகாமவல்லி மகிழும் மணவாளா" என்று போற்றுகின்றார். ஒரு பொருளிலும் நிலையுறாது கண் முதலிய ஐம்பொறிகளிடத்து உளவாகும் ஐவகை ஆசைகளால் பொருள்கள் தோறும் அலையும் இயல்புடையதாதலின் மனத்தைக் "குரங்கு" என்றும், அதனுடைய இடையறாது ஓடியலையும் இயல்பு பற்றி "மனக்குரங் காட்டம்" என்றும், அதனை யடக்கி ஒருமையுற நிறுத்த முடியாமை தோன்ற, "குரங்காட்டம் பார்க்க முடியாதே" என்றும் பரிந்துரைக்கின்றார். ஊரையும் உறையும் வீட்டையும், தன்பாலுள்ள பொருளையும், உற்றார் உறவினர்பால் உண்டாகிய உறவையும் நட்பையும் துறந்து நிற்கின்றமை தோன்ற, "பதி வெறுத்தேன் நிதி வெறுத்தேன் பற்றனைத்தும் தவிர்ந்தேன்" என்று பகர்கின்றார். இவற்றின் வேறாக உள்ள தம்முடைய உயிரின்பாலும் உடம்பின்பாலும் உடம்பினின்றும் நீங்காத பொருளின்பாலும் ஆசையறுத்து இறைவன்பால் அன்பு ஒன்றே கொண்டு இருக்கின்றமை புலப்பட, "ஆவி உடல் பொருளை உன்பாற் கொடுத்தேன்" என்றும், "உன் அருட் பேராசை மயமாகி உனை யடுத்து முயல்கின்றேன்" என்றும் உரைக்கின்றார். தம்முடைய நினைவு மொழி செயல் ஆகிய மூன்றும் இறைவன் திருவருளின்பால் உண்டாகிய அன்பு மயமாய் இருப்பதைப் புலப்படுத்தற்கு, "உன் அருட் பேராசை மயமாகி" எனவும், திருவருள் ஞானத்தைப் பெறுதற்காக முயலும் திறத்தை, "உனை யடுத்து முயல்கின்றேன்" எனவும், என்னுடைய செயல்களால் எனது ஆர்வ நிலையை யுணர்ந்து என்னைக் கூவி ஆட்கொள்ள வேண்டும்; அதனைச் செய்வதற்கு உன் திருவுளம் கொள்கிறாயோ? இல்லையோ? உன்னுடைய திருவுளப் பாங்கினை அறிகிலேன் என்பாராய், "கூவி எனை ஆட்கொள்ள நினையாயோ நினது குறிப்பறியேன்" எனவும், அறியாமையால் பல காலும் பலமுறையும் எனது மனநிலையை எடுத்தோதிச் சோர்வடைகின்றேன் என்பாராய், "பற்பலகால் கூறி இளைக்கின்றேன்" எனவும் இயம்புகின்றார். "கொள்ளுங் கில்லெனை அன்பரிற் கூய்ப்பணி கள்ளும் வண்டும் அறுமலர்க் கொன்றையான்" (சதகம்) என்று மணிவாசகப் பெருமான் இவ்வாறு விண்ணப்பிப்பது காண்க. நீர் வேட்கையுற்றார்க்கு அது தீரும் சமயமறிந்து நீரை அளிப்பது போல எனது ஆர்வ நிலையையும் முயற்சியையும் அறிந்து அளித்தற்கு இது தக்க தருணமா

தலால், உனது திருவருள் ஞானமாகிய அமுதத்தைத் தந்தருளுவாயாக என வேண்டலுற்று, "தெருள் நிறை வானமுதளிக்கும் தருணம் இது தானே'' என்று முறையிடுகின்றார். திருவருள் ஞானம், தெளிவும் குறைவிலா நிறைவும் உடையதாகலின் அதனை, ''தெருள் நிறை வானமுது'' என்று சிறப்பிக்கின்றார்.

இதனால், திருவருள் ஞானத்தைப் பெறுதற்குரிய தருணம் இதுவென வடலூர் வள்ளல் இறைவன்பால் முறையிட்டவாறும். (8)

**3819. கட்டவிழ்ந்த கமலம்எனக் கருத்தவிழ்ந்து நினையே**
**கருதுகின்றேன் வேறொன்றும் கருதுகிலேன் இதுதான்**
**சிட்டருளம் திகழ்கின்ற சிவபதியே நினது**
**திருவுளமே அறிந்ததுநான் செப்புதல்என் புவிமேல்**
**விட்டகுறை தொட்டகுறை இரண்டும்நிறைந் தனன்நீ**
**விரைந்துவந்தே அருட்சோதி புரிந்தருளும் தருணம்**
**தொட்டதுநான் துணிந்துரைத்தேன் நீஉணர்த்த உணர்ந்தே**
**சொல்வதலால் என்அறிவால் சொல்லவல்லேன்**
**அன்றே.**

**உரை :** முறுக்கவிழ்ந்து மலர்ந்த தாமரை மலர் போல என் மனம் மலர்ந்து, விரிந்து நின் திருவருளையே நினைக்கின்றேனன்றி வேறு எதனையும் நினைக்கின்றேன் இல்லை; நல்லொழுக்கமுடைய ஞானிகளின் உள்ளத்தில் விளங்குகின்ற சிவமாகிய பதிப்பொருளே! என் கருத்து நின்னுடைய திருவுள்ளம் அறிந்ததாதலால் நான் வேறு சொல்லுவது என்னையோ? இவ்வுலகில் விட்ட குறை தொட்ட குறையாகிய இரண்டையும் நிறைத்துக் கொண்டேன் ஆதலால் என்பால் நீ விரைந்து வந்து திருவருள் சோதியை வழங்குதற்குரிய தருணமும் வந்து விட்டது என்பதை நான் தெளிய வுணர்ந்து சொல்லுகின்றேன்; அதனையும் நீ என்னுள் இருந்து உணர்த்த உணர்ந்து சொல்லுவதன்றி என் அறிவால் சொல்லத் தக்கவனல்லேன். எ.று.

அரும்பி மலர்ந்த தாமரைப் பூவை, "கட்டவிழ்ந்த கமலம்'' எனக் குறிக்கின்றார். தாமரை மலர்ந்து விரிவது போலத் தனது மனத் தாமரையும் மலர்ந்து இறைவனையே நினைக்கின்றமை உணர்த்துவாராய், "கருத் தவிழ்ந்து நினையே கருதுகிறேன்'' எனவும், வேறு எண்ணங்கள் என் நெஞ்சின்கண் இல்லை; இது நின் திருவுள்ளம் நன்கறிந்தது என்றற்கு, "இதுதான் நினது திருவுளமே அறிந்தது'' எனவும் விளம்புகின்றார். நின் திருவுளம் நன்கறிந்த ஒன்றை மீளவும் எடுத்தோதுவது வேண்டா கூறலாம் என வற்புறுத்தற்கு, "நான் செப்புதல் என்'' என்று மொழிகின்றார். சிட்டர் - இறைவனின் பொய்தீர் ஒழுக்க நெறி நின்ற சிவஞானிகள். அவரது திருவுள்ளத்தையே கோயிலாகக் கொண்டு அதன்கண் எழுந்தருளுவது பற்றி, "சிட்டருளம் திகழ்கின்ற சிவபதியே'' என்று புகழ்கின்றார். விட்ட குறை - முன்னைப் பிறப்பில் செய்த வினைப் பயனில் நுகரப் படாது இருக்கும் பயன். தொட்ட குறை - மேற்கொண்ட வினையைத் தொடங்கி அதனை முடிக்காமலும் அதன் பயனை நுகராமலும்

இருக்கும் நிலை. இருவகை வினைப் பயன்களையும் நுகர்ந்து கழித்து வினைத் தொடர்பினின்றும் நீங்கி யிருக்கும் தமது நிலையைத் தெரிவித் தற்கு, "புவி மேல் விட்ட குறை தொட்ட குறை இரண்டும் நிறைந் தனன்" என்று கூறுகின்றார். "வினையால் அசத்து விளைதலால் ஞானம் வினை தீரினன்றி விளையாவாம்" (சிவஞான போதம்) என்று சான்றோர் கூறுதலால், வினைத் தொடர்பறுத்த நிலையை எடுத்துரைக்கின்றார். வினையின் நீங்கிய தமது நிலை நோக்கி அருள் ஞானம் வழங்குதல் வேண்டும் என்று வற்புறுத்தற்கு, "நீ விரைந்து வந்து அருட் சோதி புரிந்தருளும் தருணம் தொட்டது" என்று சொல்லுகிறார். வினைத் தொடர்பறுத்தமை ஞான நாட்டம் உடையார்க்கன்றி விளங்காதாதலின், "நான் துணிந்து உரைப்பேன்" என்றும், அங்ஙனம் உரைத்தற்கு இன்றியமையாத உணர்வு நீ யுணர்த்த என் உள்ளத்தில் உளதாயது என்பாராய், "நீ உணர்த்த உணர்ந்து சொல்லுவதல்லால் என் அறிவால் சொல்லவல்லேன் அன்றே" என்றும் பகர்கின்றார்.

இதனால், விட்ட குறை தொட்ட குறையாகிய வினைத் தொடர்பி லிருந்து நீங்கிச் சிவஞானப் பேற்றுக்குச் சமைந்திருக்கின்றமை தெரிவித்தவாறும். (9)

**3820. காட்டைஎலாம் கடந்துவிட்டேன் நாட்டைஅடைந் துளது**
**கடிநகர்ப்பொன் மதிற்காட்சி கண்குளிரக் கண்டேன்**
**கோட்டைஎலாம் கொடிநாட்டிக் கோலம்இடப் பார்த்தேன்**
**கோயிலின்மேல் வாயிலிலே குறைகள்எலாம் தவிர்ந்தேன்**
**சேட்டைஅற்றுக் கருவிஎலாம் என்வசம்நின் றிடவே**
**சித்திஎலாம் பெற்றேன்நான் திருச்சிற்றம் பலமேல்**
**பாட்டைஎலாம் பாடுகின்றேன் இதுதருணம் பதியே**
**பலந்தரும்என் உளந்தனிலே கலந்துநிறைந் தருளே.**

உரை: ஐம்புல நுகர்ச்சிக்குரிய காட்டைக் கடந்து ஞானப் பேற்றுக்குரிய சிவம் உறையும் நாட்டை யடைந்து அங்குள்ள சிவ மாநகராகிய கடிநகரினைச் சூழ்ந்து விளங்கும் அழகிய மதில்களினுடைய இனிய காட்சியைக் கண் குளிரக் கண்டேன்; அங்குள்ள கோட்டை களின் உச்சியிலெல்லாம் கொடி நாட்டி உள்ளே விளங்கும் கோயிலின் மேலை வாயிலில் கோலம் செய்திருப்பதைப் பார்த்தேன்; அதனால் எனக்குள்ள குறைகளெல்லாம் நீங்கின; என்னுடைய கருவி கரணங்கள் யாவும் தன் செயலற்று என் வசமாய் நிற்க யானும் ஞான சித்திகள் எல்லாவற்றையும் பெற்றுக் கொண்டேன்; திருச்சிற்றம்பலம் பொருளாகப் பாட்டு வகை எல்லாம் பாடுகின்றேன்; எனக்குத் திருவருளைத் தருதற்கு இது ஏற்ற தருணம் ஆகுமாதலால் ஞான பலம் கொண்ட என்னுள்ளத் தில் நீ எழுந்தருளி இரண்டறக் கலந்து நிறைந்தருளுவாயாக. எ.று.

கண் காது முதலிய பொறி புலன்களின் ஆசைச் சூழலாகிய உடம்பை, "காடு" என்றும், அதன் வழி நின்ற தாம் அப்பற்றொழித்து விளங்கும் திறத்தை, "காட்டை எலாம் கடந்து விட்டேன்" என்றும், பொறி புலன்களின் கட்டினின்று நீங்கி ஞானப் பேற்றால் சிவலோகக்

காட்சி பெற்றமை உணர்த்த, "நாட்டை அடைந்து" என்றும், ஆங்கே விளங்கும் சிவ மாநகரைக் "கடிநகர்" என்றும், அதனைச் சூழ்ந்திருக்கும் மதிலின் அழகிய தோற்றத்தைக் கண்டு மகிழ்ந்தமை விளங்க, "பொன் மதிற் காட்சி கண் குளிரக் கண்டேன்" என்றும் கூறுகின்றார். சிவலோக மென்றும், அவ்வுலகில் சிவன் எழுந்தருளும் இடம் சிவ மாநகர மென்றும், அங்கே சிவனுறையும் கோயிலைக் கோயில் என்றும் மணிவாசகர் முதலிய பெருமக்கள் திருவாசகத்துள் ஓதுவதறிக. கடிநகர் - காவலை யுடைய நகர்; ஞான வேலி சூழ்ந்த நன்னகர் என்பதுமுண்டு. கோட்டை மதிலின்மேல் கொடிக் கம்பங்கள் நிறுவி அழகு செய்வது பற்றி, "கோட்டை எலாம் கொடி நாட்டி" எனவும், வாயில்களில் பல வகையாகக் கோலமிட்டு அழகு செய்யும் இயல்பு தோன்ற, "கோட்டை எலாம் கொடி நாட்டிக் கோலமிடப் பார்த்தேன்" எனவும் கூறுகின்றார். சிவ மாநகரின் திருக்கோயில் காட்சி வள்ளற் பெருமானுக்கு மனநிறைவு தந்தமையின் "குறைகள் எலாம் தவிர்ந்தேன்" என்றும், கண் காது முதலிய கருவிகளின் செயலொடுங்கி ஆன்ம அறிவின் வழி ஒன்றி நிற்க, அதன் பயனாக ஞான சித்திகள் எல்லாவற்றையும் தாம் பெற்றுக் கொண்டமை யுணர்த்த, "சேட்டை அற்றுக் கருவி எலாம் என் வசம் நின்றிடவே சித்தி யெலாம் பெற்றேன்" என்றும் செப்புகின்றார். இவ்வாறு கருவி கரணங்கள் தம்வழி நின்ற போது தமது ஆன்ம அறிவு செய்த செயலைத் தெரிவிப்பாராய், "திருச்சிற்றம்பல மேல் பாட்டை எலாம் பாடுகின்றேன்" என்றும் இயம்புகின்றார். சிவஞானப் பேற்றால் தமது திருவுளம் ஞான வலிமை எய்தியது என்றற்கு, "பலம் தரும் என்னுள்ளம்" என்றும், அந்தத் தகுதி சிவம் ஒன்றாய்க் கலந்து நிறைதற்கு ஏற்றதாயிற்று என விளக்குதற்கு, "எனது உளந்தனிலே கலந்து நிறைந்தருளே" என்றும் வேண்டுகின்றார்.

இதனால், வாயிற் காட்சி மானதக் காட்சி இரண்டையும் கடந்து யோகக் காட்சியால் சிவ மாநகரின் சிவக் காட்சி பெற்ற திறத்தை வடலூர் வள்ளல் காட்டியவாறும். (10)

3821. சித்திஎலாம் வல்லசிவ சித்தன்உளம் கலந்தான்
செத்தாரை எழுப்புகின்ற திருநாள்கள் அடுத்த
இத்தினமே தொடங்கிஅழி யாதநிலை அடைதற்
கேற்றகுறி ஏற்றவிடத் திசைந்தியல்கின் றனநாம்
சத்தியமே பெருவாழ்வில் பெருங்களிப்புற் றிடுதல்
சந்தேகித் தலையாதே சாற்றியஎன் மொழியை
நித்தியவான் மொழிஎன்ன நினைந்துமகிழ்ந் தமைவாய்
நெஞ்சேநீ அஞ்சேல்உள் அஞ்சேல்அஞ் சேலே.

**உரை :** நெஞ்சமே! அணிமா, மகிமா முதலிய எண்வகைச் சித்திகள் எல்லாவற்றையும் செய்ய வல்ல சிவபெருமானாகிய சித்தன் என் உள்ளத்திற் கலந்து கொண்டான்; இனிச் செத்தவர்களை எழுப்புகின்ற திருநாட்கள் காலத்தால் அடுத்த இன்றே தொடங்கி அழியாத மெய்ந்நிலையை அடைதற்கு ஏற்ற குறிகளும் அடையாளங்களும் ஏற்றவிடத்துப் பொருந்தி அமைகின்றன; ஆகவே நாம் சாவாப் பெருவாழ்வு பெற்று மிக்க பெருமகிழ்ச்சி அடைதல் சத்தியமாகும்; இனி வீணே

சந்தேகமுற்று அலைய வேண்டா; இப்போது உரைத்த என் சொற்களைப் பொய்யாத மெய்ம்மொழிகள் எனக் கருதி மகிழ்ச்சியோடு அமைவாயாக; இதுபற்றி நெஞ்சமே, நீ உள்ளம் அஞ்சுதல் வேண்டா. எ.று.

ஒருகால் மதுரையில் எல்லாம் வல்ல சித்தராக எழுந்தருளினுறுதலால், அதை நினைவிற் கொண்டு சிவபெருமானை "எல்லாம் வல்ல சித்தன்" என்று குறிக்கின்றுர். அணிமா, மகிமா, லகிமா முதலாகச் சித்திகள் எண்வகைப் படுதலின், "சித்தி எல்லாம்" என எடுத்துரைக்கின்றுர். சித்தி - செயற்கரிய செயல்கள். அணுவை மலையாக்குதல், மலையை அணுவாக்குதல், சிறியதைப் பெரிதாக்குதல், பெரியதைச் சிறியதாக்குதல், கூடு விட்டுக் கூடு பாய்தல், பிறர் கண்ணுக்குத் தெரியாமல் உலாவுதல் முதலியன சித்திகள் எனப்படும். இவற்றை எளிதாக எண்ணிய மாத்திரத்தே செய்ய வல்ல பெருமான் என்பதற்காகச் சிவனை, "சித்தி எலாம் வல்ல சிவசித்தன்" என்று சிவபெருமானைச் சிறப்பிக்கின்றுர். அப்பெருமான் என் உள்ளம் புகுந்து வேறறக் கலந்து கொண்டானுதலால், இனி யாமும் செயற்கரிய செயல்களைச் செய்யலாம் என்ற துணிவினுல், "உளம் கலந்தான்" என்று ஓதுகின்றுர். இத்தகைய நலத்தால் நாமும் செத்தாரை எழுப்பலாம்; அதனைச் செய்தற்கேற்ற நாட்களும் இன்று தொடங்கி நம்பாற் பொருந்துகின்றன என்பாராய், "செத்தாரை எழுப்புகின்ற திருநாட்கள் அடுத்த இத்தினமே தொடங்கி இசைந்து இயல்கின்றன" என்றும், அது செத்துப் பிறக்கின்ற அழிவு நிலையை மாற்றி அழியாத பெருநிலையை அடைதற்கு ஏற்ற குறியாகும் என்பதற்கு, "அழியாத நிலை அடைதற்கு ஏற்ற குறி" என்றும், அது காலமும் இடமும் வாய்த்த பொழுது கைகூடும் எனத் தெளிவித்தற்கு, "ஏற்ற விடத்து இசைந்து இயல்கின்றன" என்றும், அதனுல் நாம் நினைத்த இன்பப் பெருவாழ்வு அடைதல் நிச்சயம் என்பாராய், "நாம் பெருவாழ்வில் பெருங் களிப்புற்றிடுதல் சத்தியமே" என்றும் இயம்புகின்றுர். யாவர் யாது கூறக் கேட்பினும் சந்தேகித்துப் பின்பு தெளிதல் மனத்தின் இயல்பாதலால், "சாற்றிய என் மொழியைச் சந்தேகித்து அலையாதே" எனவும், தமது மொழியைப் பொய்யாத மெய்ம்மை மொழி என்று கொள்க என்பாராய், "சாற்றிய என் மொழியை நித்திய வான்மொழி என்ன நினைந்து மகிழ்ந்து அமைவாய்" எனவும், சந்தேக விபரீதங்களால் அஞ்சி அவலித்தல் வேண்டா வென யாப்புறுத்தற்கு, "நெஞ்சே நீ அஞ்சேல் உள்ளஞ்சேல் அஞ்சேலே" எனவும் கூறுகின்றுர். செத்தாரை எழுப்புதலாவது உடம்பிலிருந்து உயிர் நீங்கப் பெற்றவரை மீள உயிர் பெற்று எழச் செய்தல் என்று பொதுவாகப் பொருள் கொள்ளப்படினும், "எவரும் தத்தம் மனத்தன பேச எஞ்ஞான்று கொல் சாவதுவே" (சதகம்) என்றும், "செத்தே போனுல் சிறியாரே" (மகா. மூத்த) என்றும் பெரியோர் வழங்குவது போன்று நல்லுணர்வு இழத்தல் என்று பொருள் கொள்வதும் உண்டு. நல்லது தேரும் உணர்விழந்து அலமருவோர்க்கு நல்லுணர்வு தந்து உண்மை ஞானத்தால் பிறவாப் பெருநிலை எய்துவித்தற் கேற்ற வாய்ப்புக்கள் கிடைத்துள்ளன என்ற கருத்தமைய இது கூறப்படுகின்றது என உரைப்பதும் உண்டு.

இதனுல், செத்தாரை எழுப்புதற்கு அமைந்த காலமும் இடமும் வாய்த்துள்ளன என நெஞ்சுக்கு வலியுறுத்தவாறும். (11)

திருச்சிற்றம்பலம்

# 34. அனுபோக நிலையம்

அஃதாவது, சிவஞானத்தில் தோய்ந்து, கலந்து, சிவானந்தத்தைப் பெறுதற்குள்ள ஆர்வ மிகுதியை எடுத்துரைப்பதாகும்.

இந்தச் சிவஞான அனுபவத்தைப் பெறுதற் கெழுந்த வேட்கையை இப்பகுதியில் பாட்டுத் தோறும் வடலூர் வள்ளல் எடுத்துரைக்கின்றார்.

## எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**3822.** **இனிப்பிரிந் திறையும் இருக்கலேன் பிரிவை**
**எண்ணினும் ஐயவோ மயங்கிப்**
**பனிப்பில்என் உடம்பும் உயிரும்உள் உணர்வும்**
**பரதவிப் பதைஅறிந் திலையோ**
**தனிப்படு ஞான வெளியிலே இன்பத்**
**தனிநடம் புரிதனித் தலைவா**
**கனிப்பயன் தருதற் கிதுதகு தருணம்**
**கலந்தருள் கலந்தருள் எனையே.**

**உரை :** தனித் தோங்குகின்ற ஞானமாகிய பேரம்பலத்தில் இன்பம் பெருகும் ஒப்பற்ற நடனத்தைப் புரிகின்ற ஒப்பற்ற தலைவனே! உன்னைச் சிறிது பொழுதும் இனிமேல் நான் பிரிந்திருக்க மாட்டேன்; பிரிவென்ப தொன்று உண்டென எண்ணினாலும் ஐயனே, என் அறிவு மயங்கி நடுக்குற்று என் உடம்பும் உயிருள் உலவும் உணர்வும் எல்லாம் வருந்தித் துடிப்பதை நீ அறிந்திலையோ; சிவயோகத்தில் கனிந்து பெருகும் சிவஞான ஆனந்தமாகிய பயனை, எனக்குத் தருதற் பொருட்டு இது தக்க தருணமாதலால் என் உயிருணர்வில் கலந்தருளுவாயாக. எ.று.

சிவஞானம் தலைப்பட்டிருக்கின்ற நான் இனிச் சிறிது போதும் அதனின்றும் பிரிந்திருக்க மாட்டேன்; பிரிவை நினைப்பினும் பிரிந்திருக்க மாட்டேன் என்பாராய், "இனிப் பிரிந்து இறையும் இருக்கலேன்" என எடுத்து மொழிகின்றார். பிரிவை நினைந்த வழித் தமது உடம்பும், உயிரும், உள்ளுணர்வும் வருந்துகின்ற திறத்தை எடுத்துரைப்பாராய், "பிரிவை எண்ணினும் ஐயவோ மயங்கிப் பனிப்பில் என் உடம்பும் உயிரும் உள்ளுணர்வும் பரதவிப்பதை அறிந்திலையோ" என வுரைக்கின்றார். பனிப்பு - நடுக்கம். பிரிவை எண்ணுகிற போது உடம்பில் உண்டாகிற நடுக்கத்தை விளக்குதற்கு, "பனிப்பில் என் உடம்பு" எனப் பகர்கின்றார். இல்லுருபு ஏதுப் பொருளதாகிய இன்னுருபின் பொருட்டு. உள் உணர்வு-

உணர்வு வடிவாகிய உயிரின்கண் உட்கலந்து ஒளிரும் உணர்வு. பரி தவித்தல் - வருந்துதல். ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவமாகிய தத்துவ எல்லைகளுக்கு அப்பால் விளங்குகின்ற பரவெளியை, "தனிப்படு ஞான வெளி" என்றும், அவ்வெளியின்கண் ஞான இன்ப நடனம் புரிகின்றான் சிவபெருமான் என்பது பற்றி, "ஞான வெளியிலே இன்பத் தனிநடம் புரி தனித் தலைவா" என்றும் இயம்பு கின்றார். ஞான நடனம் நிகழுமிடத்து கூத்தப்பெருமான் ஒருவனையன்றி வேறு எத்தகைய தேவரும் முனிவரும் இல்லாமை விளங்க, "தனித் தலைவா" என்று சிறப்பித் துரைக்கின்றார். சிவயோகம் முதிர்ந்த வழி எய்துகின்ற சிவஞான நலத்தை, "கனிப் பயன்" என்று குறித்து, அதனை நான் பெறுதற்கு இது தக்க தருணமாதலால் என் உணர்வினுள் கலந்து நல்குதல் வேண்டுமென விழைகின்றாராதலால், "கனிப் பயன் தருதற்கு இது தகு தருணம் கலந்தருள் கலந்தருள் எனையே" என்று முறையிடுகின்றார். அடுக்கு விரைவு தோன்ற வருகிறது.

இதனால், சிவயோக ஞானானந்தம் பெறுதற்கு எழுந்த விழைவு மிகுதி புலப்படுத்தவாறும். (1)

**3823.** **பிரிந்தினிச் சிறிதும் தரிக்கலேன் பிரிவைப்**
**பேசினும் நெய்விடுந் தீப்போல்**
**எரிந்துளங் கலங்கி மயங்கல்கண் டிலையோ**
**எங்கணும் கண்ணுடை எந்தாய்**
**புரிந்தசிற் பொதுவில் திருநடம் புரியும்**
**புண்ணியா என்னுயிர்த் துணைவா**
**கரந்திடா துறுதற் கிதுதகு தருணம்**
**கலந்தருள் கலந்தருள் எனையே.**

**உரை :** எவ்விடத்தும் பரந்து விளங்குகின்ற கண்களையுடைய பெருமானே! யாவராலும் விரும்பப்படுகின்ற ஞான சபையில் திருக் கூத்தாடுகின்ற புண்ணிய மூர்த்தியே! என் உயிர்க்குத் துணைவனே! இனிச் சிறிது பொழுதும் உன்னைப் பிரிந்திருக்க வல்லேனல்லேன்; பிரிவை நினைந்து பேசினும் நெய் பெய்த தீயைப் போல என் மனம் எரிந்து கலக்கமுற்று மயங்குவதை நீ காணுயல்லையோ; என் கண்ணிற் படாது மறைதலின்றி என்னுள்ளத்தில் எழுந்தருளுதற்கு இது தக்க தருணமாதலால் என்னுட் கலந்து கொள்வாயாக. எ.று.

திருவருள் இன்பத்தை நாடியெய்தி அதனோடு கூடி மகிழ்கின்றவரா தலால் வடலூர் வள்ளல், "இனிப் பிரிந்து சிறிதும் தரிக்கலேன்" என்று கூறுகின்றார். பிரிதலை எண்ணினும் பேசினும் நெய் பெய்த தீ கொழுந்து விட்டெரிவது போல் உள்ளம் வெய்துற்று வருந்துவதை விளக்குவாராய், "பிரிவைப் பேசினும் நெய் விடுந் தீப் போல் எரிந்து உளம் கலங்கி மயங்கல் கண்டிலையோ" என்று இசைக்கின்றார். எங்கும் எல்லாப் பொருளிலும் கலந்திருந்து நிகழ்வன அனைத்தையும் கண்டு கொள்ளுதலால் இறைவனை, "எங்கணும் கண்ணுடை எந்தாய்" எனவும், யாவராலும் விரும்பிப் போற்றப்படுவது குறித்து ஞான சபையை,

"புரிந்த சிற்பொது" எனவும், சிவ புண்ணியத்தின் பிழம்பாய்ப் பிறங்குதலால், "புண்ணியா" எனவும், உயிரோடு ஒன்றாய்க் கலந்து உற்றவிடத்து உணர்வு நல்கி உய்வித்தல் பற்றி, "என்னுயிர்த் தலைவா" எனவும் போற்றுகின்றார். தம்முடைய மனக் கண்ணிற்கும் ஒரொருகால் தோன்றாது மறைந்து நிற்றலை நினைந்து, "கரந்திடாது உறுதற்கு இது தகு தருணம்" என இயம்புகிறார். தகு தருணம் - தக்க சமயம்.

இதனால், தமது மனக் கண்ணுக்கும் அறிவுக் கண்ணுக்கும் விளங்கத் தோன்றுமாறு தமைக் காத்தருள வேண்டுமென வடலூர் வள்ளல் முறையிட்டவாறும். (2)

3824. மேலை ஏகாந்தவெளியிலே நடஞ்செய்
மெய்யனே ஐயனே எனக்கு
மாலையே அணிந்த மகிழ்நனே எல்லாம்
வல்லனே நல்லனே அருட்செங்
கோலையே நடத்தும் இறைவனே ஓர்எண்
குணத்தனே இனிச்சகிப் பறியேன்
காலையே தருதற் கிதுதகு தருணம்
கலந்தருள் கலந்தருள் எனையே.

உரை : தத்துவங்கட்கு மேலாகிய பரநாதம் எனப்படும் ஏகாந்த வெளியில் ஞான நடஞ் செய்கின்ற மெய்யனே! ஐயனே! எனக்குத் திருவருள் ஞானமாகிய மாலையை அணிந்து மகிழ்வித்த பெருமானே! எல்லாம் வல்லவனே! நன்மையே உருவானவனே! திருவருட் செங்கோலைச் செலுத்தும் இறைவனே! ஒப்பற்ற எண் குணங்களையுடைய பெருமானே! இனி நின்னைப் பிரிந்து உறைவதைப் பொறுக்க மாட்டேன்; ஆதலால் நின் திருவருளைத் தருதற்கு இது தக்க காலமாதலால் என்பால் எழுந்தருளி என்னுட் கலந்து கொள்வாயாக. எ.று.

சுத்த மாயா மண்டலத்துக் கப்பால் விளங்கும் பரநாத வெளி சிவம் ஒன்றே தனித்து விளங்கும் பெருநிலையமாதலால் அங்கே ஞான நடனம் புரிகின்ற தன்மை நோக்கிச் சிவனை, "மேலை ஏகாந்த வெளியிலே நடஞ் செய் மெய்யனே" என்று போற்றுகின்றார். ஏகாந்த வெளி - பரநாத வெளி. இதனை ஞானாகாச வெளி என்பதுமுண்டு. மெய்யன் -மெய்ம்மை வடிவானவன். ஐயன் - தலைவன். மகிழ்நன் - மகிழ்ச்சி நல்குபவன். எல்லா வுலகங்கட்கும் ஆங்காங்குள்ள உயிர்கட்கும் அருளரசு புரிகின்றானாதலால் இறைவனை, "அருட் செங்கோலையே நடத்தும் இறைவனே" என்று இசைக்கின்றார். எண் குணத்தன், தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல் முதலிய எட்டு வகைக் குணங்களையுடையவன். "எண்குணத்தான் தாளை வணங்காத் தலை" என்று திருவள்ளுவரும் குறித்துரைப்பது காண்க. சகித்தல், சகிப்பு என வந்தது. சகிப்பு - பொறுத்தல்.

இதனால், எண்குணத்தனாகிய இறைவன் திருவருள் கூட்டத்தைப் பிரிந்திருக்க மாட்டாமை தெரிவித்தவாறும். (3)

3825. பண்டுகொண் டெனைத்தான் பிழைகுறி யாத
பண்பனே திருச்சிற்றம் பலத்தே
தொண்டுகொண் டடியர் களிக்கநின் றாடும்
தூயனே நேயனே பிரமன்
விண்டுகண் டறியா முடிஅடி எனக்கே
விளங்குறக் காட்டிய விமலா
கண்டுகொண் டுறுதற் கிதுதகு தருணம்
கலந்தருள் கலந்தருள் எனையே.

**உரை :** எளியவனாகிய என்னை முன்னமே ஆட்கொண்டு யான் செய்த குற்றங்களைப் பொருளாகக் கொள்ளாத நற்பண்புடையவனே; திருச்சிற்றம்பலத்தின்கண் தொண்டு புரிகின்ற அடியார்கள் கண்டு மனம் களிக்க நின்றாடுகின்ற தூயவனே; நேயப் பொருளாகுபவனே; பிரமனும் திருமாலும் காண முடியா தொழிந்த திருமுடியையும் திருவடியையும் எனக்கு விளக்கமாகக் காட்டி யருளிய விமலனே; உன்னைக் கண்டு கொண்டு இன்புறுதற்கு இது தக்க தருணமாதலால் என்னைக் கலந்தருளுவாயாக. எ.று.

இளமைப் போதிலேயே தம்மைச் சிவபெருமான் ஆளாகக் கொண்டமை பற்றி, "எனைத் தான் பண்டு கொண்டு" என்றும், ஆளாகிய தாம் செய்த பிழைகளைப் பொறுத் தருளினமை புலப்பட, "பிழை குறியாத பண்பனே" என்றும் பரவுகின்றார். சிவஞானிகளாகிய தொண்டர்கள் நேரிற் கண்டு இன்புறுமாறு அம்பலத்தின்கண் ஆடு கின்றமை விளங்க, "திருச்சிற்றம்பலத்தே தொண்டு கொண்டு அடியர் களிக்க நின்றாடும் தூயனே" என்றும், ஞானத்தால் உணரப் படுவது பற்றி, "நேயனே" என்றும் புகழ்கின்றார். ஞானத்தால் அறியப்படுவது நேயம். ஞானப் பொருளாவது பற்றிச் சிவனை "நேயன்" என்று கூறுகின்றார். பிரமனும் திருமாலும் ஒருகால் சிவனுடைய திருமுடியை யும் திருவடியையும் காண முயன்று மாட்டா தொழிந்தனரெனப் புராணம் கூறவும், தாம் அவ்விரண்டனையும் கண்டு மகிழ்ந்தமை புலப்பட, "பிரமன் விண்டு கண்டறியா முடி அடி எனக்கே விளங்குறக் காட்டிய விமலா" என்று வியந்து கூறுகின்றார். விமலன் - மலமில்லாத தூயவன். சிவ பரம்பொருளைப் புறக் கண்களாலும் அகக் கண்களாலும் கண்டு மகிழ விழைகின்றாராதலால் வடலூர் வள்ளல், "கண்டு கொண்டு உறுதற்கு இது தகு தருணம் கலந்தருள் கலந்தருள் எனையே" என்று வேண்டுகிறார்.

இதனால், சிவ பரம்பொருளை அகம் புறமெனும் இரு கண்களாலும் கண்டு மகிழ்தற்குத் தம்பாற் போந்து தம்முட் கலந்தருளுமாறு வேண்டிய வாறும். (4)

3826. தனித்துணை எனும்என் தந்தையே தாயே
தலைவனே சிற்சபை தனிலே
இனித்ததெள் அமுதே என்னுயிர்க் குயிரே
என் இரு கண்ணுள்மா மணியே

அனித்தமே நீக்கி ஆண்டஎன் குருவே
அண்ணலே இனிப்பிரி வாற்றேன்
கனித்துணை தருதற் கிதுதகு தருணம்
கலந்தருள் கலந்தருள் எனையே.

**உரை :** தனித் துணை யெனச் சான்றோரால் புகழப்படும் என்னுடைய தந்தையே, தாயே! எனக்குத் தலைவனே! ஞான சபையில் விளங்குகின்ற இனிமை மிக்க தெளிந்த அமுதம் போன்றவனே! என் உயிர்க் குயிராயவனே! என்னுடைய இரண்டு கண்களிலும் உள்ள கரிய மணி போன்றவனே! என்பாலுள்ள அனித்தத் தன்மையைப் போக்கி ஆண்டருளிய என் குருபரனே! அண்ணலே! இனியும் உன்னுடைய பிரிவைப் பொறுக்க மாட்டேன்; அருள் ஞானமாகிய முதிர்ந்த துணையை எனக்கு நீ நல்குதற்கு இது தக்க தருணமாதலால் என்னுட் கலந்து அருள் இன்பம் தருவாயாக. எ.று.

"தமியேன் தனி நீக்கும் தனித் துணையே" என்றும், "தனித் துணை நீ நிற்க" என்றும் (நீத்தல் : 38 - 39) மாணிக்கவாசகப் பெருமான் புகழ்ந் தோதுவது பற்றி, "தனித் துணை" என்றும், "என் தந்தையே" என்றும் பராவுகின்றார். ஞான சபையில் ஞான மூர்த்தியாய் ஞான நெறியில் தரிசிப்பார்க்கு ஞான இன்பத்தை நல்குவதால், "சிற்சபை தனிலே இனித்த தெள்ளமுதே" என்று போற்றுகின்றார். நிலையில்லாத உலகியல் வாழ்விலிருந்து நீக்கி அதன்பால் பற்று கொள்ளாதவாறு ஞான வுரை நல்கி ஆண்டருளியது பற்றிச் சிவபெருமானை, "அனித்தமே நீக்கி ஆண்ட என் குருவே" என்று துதிக்கின்றார். ஞானத்தால் வீடு பேறு எய்துதலின் சிவனருளும் சிவஞானம் கனிந்து முதிர்ந்து இன்பம் தரும் துணை என்பாராய், "கனித் துணை" என்று சிறப்பிக்கின்றார்.

இதனால், சிவஞானமாகிய முதிர்ந்து கனிந்த துணையை நல்குமாறு வேண்டியவாறும். (5)

**3827.** துன்பெலாம் தவிர்க்கும் திருச்சிற்றம் பலத்தே
சோதியுட் சோதியே அழியா
இன்பெலாம் அளிக்கும் இறைவனே என்னை
ஈன்றநல் தந்தையே தாயே
அன்பெலாம் ஆகி நிறைந்ததோர் நிறைவே
அண்ணலே இனிப்பிரி வாற்றேன்
பொன்பதந் தருதற் கிதுதகு தருணம்
புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே.

**ரை :** உலக வாழ்வில் உளவாகும் துன்பங்கள் எல்லாவற்றையும் நீக்குகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் விளங்கும் சிவ ஒளிக்குள் சிறந்த ஒளிப் பொருளாய்த் திகழ்பவனே! கெடாத இன்பங்கள் எல்லாவற்றை யும் அளித்து ஆதரிக்கும் இறைவனே! என்னைப் பெற்றுப் புறந்தருகின்ற நல்ல தந்தையும் தாயுமானவனே! அன்பே உருவாய் குறைவற நிறைந்த பூரணனே! அண்ணலே! இனி உன்னுடைய பிரிவால்

உண்டாகும் துன்பத்தைப் பொறுக்க மாட்டேன்; உன்னுடைய அழகிய திருவடி ஞானத்தை எனக்குத் தருதற்கு இது தக்க தருணமாதலால் என்பால் வந்து கலந்தருளுக. எ.று.

உலக வாழ்வில் மனம் மொழி மெய்களால் உண்டாகும் வினைத் துன்பங்கள் பலவாதலின், ''துன்பெலாம்'' என்றும், அவை ஞான சபையின் காட்சியால் எய்தும் ஞான ஒளி கொண்டு நீங்குதலின் ''துன்பெலாம் தவிர்க்கும் திருச்சிற்றம்பலம்'' என்றும் குறிக்கின்றார். திருச்சிற்றம்பலத்தில் தோன்றும் தூல ஒளிக்குச் சூக்குமமாய் நிலவும் சிவவொளியை, ''சோதியுட் சோதி'' என்று குறிக்கின்றார். இறைவன் அருளும் இன்பம் சிவஞானப் பேரின்பமாதலின் அதனை, ''அழியா இன்பம்'' என்று சிறப்பிக்கின்றார். உலகில் பிறந்து ஞானம் பெற்று உய்தி பெறுதற்குக் காரணமாகிய தலைவனாதலால் இறைவனை, ''என்னை ஈன்ற நல்தந்தையே தாயே'' என்று துதிக்கின்றார். அன்பே சிவத்தின் உருவாதலின் ''அன்பெலாமாகி நிறைந்ததோர் நிறைவே'' எனப் பராவுகின்றார். அன்பே சிவம் என்னும் பொழுது சிவபரம்பொருள் என்பது அன்பே முற்றவும் நிறைந்த முழுப் பொருள் என்பது தோன்ற, ''நிறைந்ததோர் நிறைவே'' என்று கூறுகின்றார். பொன் பதம் - அழகிய ஞான மயமாகிய திருவடி. இது திருவடி ஞான மெனவும் வழங்கும். திருவடி ஞானம் குறைவின்றி நிறைந்த இன்ப ஞானமாதலின் அதனை இப்பொழுதே என்பால் வந்து கலந்து தந்தருளுக என்பாராய், ''பொன்பதம் தருதற்கு இது தகு தருணம் புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே'' என வேண்டுகின்றார்.

இதனால், திருவடி இன்ப ஞானத்தை எனக்கு நல்குதற்கு இது தக்க தருணம் என்று ஓதி என்னோடு கலந்து அதனைத் தந்தருளுக என விண்ணப்பித்தவாறும். (6)

**3828.** **ஏதும்ஒன் றறியாப் பேதையாம் பருவத்**
**தென்னைஆட் கொண்டெனை உவந்தே**
**ஓதும்இன் மொழியால் பாடவே பணித்த**
**ஒருவனே என்னுயிர்த் துணைவா**
**வேதமும் பயனும் ஆகிய பொதுவில்**
**விளங்கிய விமலனே ஞான**
**போதகம் தருதற் கிதுதகு தருணம்**
**புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே.**

**உரை :** ஓதப்படும் வேதங்களும் அவற்றின் பயனாகிய வைதிக ஞானமுமாகிய அம்பலத்தின்கண் விளங்குகின்ற விமலனே! எதனையும் நன்கறியாத பேதைப் பருவத்தில் என்னை ஆட்கொண்டு என்பால் அன்புற்று யான் பேசுகின்ற இனிய சொற்களால் பாடுமாறு பணித்தருளிய ஒப்பற்ற தலைவனே! என் உயிர்த் துணைவனே! திருவருள் ஞானத்தை எனக்கு நல்குதற்கு இது தக்க தருணமாதலால் என்பால் வந்து என்னுட் கலந்தருளுக. எ.று.

வேதங்களும் வேத ஞானப் பயனும் அம்பலத்தாடும் சிவபரம் பொருளையே பொருளாகக் கொண்டு விளங்குதலால், "வேதமும் பயனு மாகிய பொதுவில் விளங்கிய விமலனே" என்று விளம்புகின்றார். அறிவறியாத மிக்க இளம் பருவத்தே தமக்குச் சிவப் பற்றும் சிவத் தொண்டும் அமைந்தமை விளங்க, "ஏதும் ஒன்றறியாப் பேதையாம் பருவத்து என்னை ஆட்கொண்டு எனை உவந்து" எனவும், அக் காலத்தேயே இனிய தமிழ் பாடும் திறத்தை உண்டாக்கியது பற்றி, "ஓதும் இன்மொழியால் பாடவே பணித்த ஒருவனே" எனவும் இசைக் கின்றார். ஞான போதம் என்பது ஞான போதகம் என வந்தது. போதம் - போதனை.

இதனால், தம்முட் கலந்து சிவஞானத்தைப் போதிக்குமாறு இறைவனை வேண்டியவாறும். (7)

**3829.** **எண்ணிய எனதுள் எண்ணமே எண்ணத்**
**திசைந்தபேர் இன்பமே யான்தான்**
**பண்ணிய தவமே தவத்துறும் பலனே**
**பலத்தினால் கிடைத்தஎன் பதியே**
**தண்ணிய மதியே மதிமுடி அரசே**
**தனித்தசிற் சபைநடத் தமுதே**
**புண்ணியம் அளித்தற் கிதுதகு தருணம்**
**புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே.**

**உரை :** குளிர்ந்த ஞான மதி போன்றவனே; பிறைச் சந்திரனைத் திருமுடியில் சூடிக் கொண்டிருக்கின்ற அருளரசே! ஒப்பற்ற ஞான சபையில் நடம் புரிகின்ற ஞான வமுதமாகியவனே! எண்ணுகின்ற கருவியாகிய எனது மனதிற்குள் எண்ண வடிவாய் இருப்பவனே! எண்ணுமிடத்து அவ்வெண்ணத்தின்கண் சுரக்கின்ற இன்பமாக இருப் பவனே! யான் செய்த தவ உருவாகியவனே! அத்தவத்தால் விளையும் பயனாகியவனே! அத்தவப் பயனால் எனக்குக் கிடைத்தருளிய சிவபதியே! அவரவர் செய்யும் சிவ புண்ணியப் பயனாக எய்தும் சிவ போகத்தை எனக்களிக்க இது தக்க தருணமாதலால் என்பால் வந்து என்னுட் கலந்தருளுக. எ.று.

சிவயோகிகட்கு அவர்களுடைய யோக நெறியில் துவாத சாந்தத் தில் அமுத சந்திர வடிவில் காட்சி தருதலின் சிவனை, "தண்ணிய மதியே" என்று குறிக்கின்றார். ஞான சபைக்கு நிகராக வேறு சபை யில்லாமை தோன்ற அதனை, "தனித்த சிற்சபை" என்றும், அங்கே நிலவுகின்ற ஞான நடனம் ஞானவான்களுக்குப் பேரின்பம் தருதலின், "தனித்த சிற்சபை நடத்து அமுதே" என்றும் போற்றுகின்றார். காணும் கண் போலவும், கேட்கும் காது போலவும், நினைக்கும் கருவி மன மாதலின் அம்மனத்துக்கு உள்ளூறு பொருளாய் எண்ணத்தைத் தூண்டும் காரணப் பொருளாய் விளங்குதலின் இறைவனை, "எண்ணிய எனதுள் எண்ணமே" எனவும், எண்ண மிகுதியால் உண்டாகும் தெளிவின்கண் பிறக்கும் இன்பம் திருவருள் மயமாதலால், "எண்ணத்து இசைந்த

பேரின்பமே'' எனவும் இயல்புகின்றார். தவமாவது நல்ல பொருட் பயன் கருதிச் செய்யும் தூய முயற்சியாகும். அம்முயற்சி கைகூடும் பொருட்டுச் சிவபரம்பொருள் உள்ளிருந்து ஊக்குதலின், ''யான் தான் பண்ணிய தவமே'' என்றும், அத்தவ முயற்சியில் எய்துகின்ற நற்காட்சியும் சிவ ஞானமாதலின் அதனை, ''தவத்துறும் பலனே'' என்றும், தவத்தால் எய்தும் சிவஞானத்தால் தவம் செய்வார்க்குக் காட்சி படும் முதல்வனு தலின் சிவபெருமானைத் ''தவ பலத்தினல் கிடைத்த என் பதியே'' என்றும் புகழ்கின்றார். சிவ புண்ணியத்தால் எய்தும் சிவபோகத்தைப் பெறுதற்குத் தாம் சமைந்திருக்கின்றமை புலப்பட, ''புண்ணியம் அளித்தற்கு இது தகு தருணம் புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே'' என்று வேண்டுகின்றார்.

இதனால், சிவ புண்ணியப் பயனாகச் சிவபோகத்தைத் தமக்கு அளிக்குமாறு முறையிட்டவாறும். (8)

3830. மலப்பகை தவிர்க்கும் தனிப்பொது மருந்தே
மந்திர மேஒளிர் மணியே
நிலைப்பட எனைஅன் றாண்டருள் அளித்த
நேயனே தாயனை யவனே
பலப்படு பொன்னம் பலத்திலே நடஞ்செய்
பரமனே பரமசிற் சுகந்தான்
புலப்படத் தருதற் கிதுதகு தருணம்
புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே.

**உரை :** மும்மலங்களாகிய பகைப் பொருட்கள் விளைவிக்கும் பிறவி நோயைப் போக்குதற்கு அமைந்த ஒப்பற்ற மருந்தும், மந்திரமும், ஒளிர்கின்ற மணியுமாய் விளங்குபவனே! மிக்க இளமைப் பருவத்திலிருந்த என்னை அன்றொருநாள் அருள் நெறியின்கண் நிலைபெறுமாறு ஆட்கொண்டு திருவருள் ஞானத்தை அளித்தருளிய அன்பனே! எனக்குத் தாய் போன்றவனே! பயன் தருகின்ற பொன்னம்பலத்துத் திருநடஞ் செய்கின்ற பரமசிவனே! மேலான ஞான வின்பம் எனக்குப் புலப்படப் பெறுதற்கு இது தக்க தருணமாதலால் என்னைக் கலந்தருளுக. எ.று.

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் ஆன்மாவைப் பிணித்து நோய் செய்வது பற்றி அவற்றை ''மலப் பகை'' என்று குறிக்கின்றார். நோய் நீக்குதற்குப் பண்டையோர் மணி, மந்திரம், மருந்து என்ற மூன்று நெறியை மேற்கொண்டிருந்தனராதலால் அவ்வுண்மை விளங்க, ''மலப் பகை தவிர்க்கும் தனிப்பொது மருந்தே மந்திரமே ஒளிர் மணியே'' என்று கூறுகின்றார். மணியாவது அக்குமணி என்றும், மந்திரமாவது திருவைந்தெழுத்து என்றும், மருந்தாவது திருநீறு என்றும் உரைப்பர். இம்மூன்றும் சிவனுக்கே உரியவையாதலால், ''மருந்தே மந்திரமே மணியே'' என்று முறையாகக் கூறுகின்றார். மிக்க இளம் பருவத்தே தம்மை ஆட்கொண்ட வரலாற்றை முன்னே கூறியதால் இங்கே ''அன்று'' எனக் குறிக்கின்றார். பேதைப் பருவத்தில் போதித்தது

நெஞ்சின்கண் என்றும் நிலைபெறுமாறு அருள் ஞானத்தை அருளிய சிறப்புத் தோன்ற, "நிலைப்பட எனை அன்று ஆண்டருள் அளித்த நேயனே" என்று இயம்புகின்றார். தொடக்கத்தேயே தமக்குத் தாய் போல் தலையளி செய்தமை பற்றி, "தாயனை யவனே" என்று சாற்றுகின்றார். வேண்டுவார் வேண்டும் வரங்களை நல்கும் அருள் நிலையமாதலால் திருச்சிற்றம்பலத்தை, "பலப்படு பொன்னம்பலம்" என்று புகழ்கின்றார். உயிர்கள் பெறுதற்குரிய இன்பங்களில் சிவஞான ஆனந்தத்திலும் மேலானது வேறின்மையின் அதனை, "பரம சிற்சுகம்" என்று கூறுகின்றார். சிவஞானானந்தம் தமக்கு இனிது விளங்கி இன்பம் செய்ய வேண்டும் என்பாராய், "பரம சிற்சுகந்தான் புலப்படத் தருதற்கு இது தகு தருணம்" என்று எடுத்துரைக்கின்றார்.

இதனால், பரம சிற்சுகத்தை இனிது விளங்கத் தந்தருள வேண்டுமென விண்ணப்பித்தவாறும். (9)

**3831.** **களிப்புறும் அடியேன் கையிலே கிடைத்த**
**கற்பகத் தீஞ்சுவைக் கனியே**
**வெளிப்புறத் தோங்கும் விளக்கமே அகத்தே**
**விளங்கும்ஓர் விளக்கமே எனக்கே**
**ஒளிப்பிலா தன்றே அளித்தசிற் பொதுவில்**
**ஒருவனே இனிப்பிரி வாற்றேன்**
**புளிப்பற இனித்தற் கிதுதகு தருணம்**
**புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே.**

**உரை :** திருவருளில் கலந்து மகிழ்வுறும் அடியவனாகிய எனக்குக் கைமேல் கிடைத்த கற்பகத்தின் இனிய சுவை பொருந்திய கனி போல்பவனே! வெளியில் உலகெங்கும் ஒளிர்கின்ற தூல விளக்கமே! அவரவர் மனத்தின்கண் நின்று திகழும் ஞான விளக்கமே! சிறிதும் மறைப்பின்றி அந்நாளிலேயே எனக்கு ஞானமளித்த ஞான சபையில் எழுந்தருளும் ஒப்பற்ற பெருமானே! இனியும் நின் பிரிவால் உளதாகும் துன்பத்தைப் பொறுக்க மாட்டேன்; உனது திருவருளின்பம் புளித்தலின்றி இனிமை மிக்கு விளங்குதற்கு இது தக்க தருணமாதலால் என்பால் வந்து என்னுட் கலந்தருளுக. எ.று.

திருவருள் ஞான வின்பத்தில் தோய்ந்து மகிழ்ச்சி மிகுகின்றாராதலால் வடலூர் வள்ளல் சிவபெருமானை, "களிப்புறும் அடியேன் கையிலே கிடைத்த கற்பகத் தீஞ்சுவைக் கனியே" என்று சிறப்பிக்கின்றார். இனிமைச் சுவை மிக்கதாகிய கற்பகக் கனி தேவர் உலகத்தில் இருப்பதாயினும் பெறுதற்கரிய அதனைக் கையிலே பெற்றாற் போலச் சிவஞான இன்பம் தனக்கு எய்த வுள்ளமை இனிது விளங்க, "அடியேன் கையிலே கிடைத்த கற்பகத் தீஞ்சுவைக் கனியே" என்று கூறுகின்றார். புறத்தே விளங்குகின்ற பூதவொளியும் அவரவர் அகத்தே விளங்கும் உள்ளொளியாகிய ஞான ஒளியும் சிவமே என்று வற்புறுத்தற்கு, "வெளிப் புறத்தோங்கும் விளக்கமே அகத்தே விளங்கும் ஓர் விளக்கமே" என்று விளக்குகின்றார். இளமைப் போதில் பக்குவமின்மை நோக்கி மறைக்

காமல் திருவருள் ஞானத்தைத் தமக்களித்தமை பற்றி, "எனக்கு ஒளிப்பிலாது அன்றே அளித்த சிற்பொதுவில் ஒருவனே" என்று தெரிவிக்கின்ருர். ஒளிப்பு - மறைத்தல். புளிப்பு - வெறுத்தல். இளமைக்கண் பெற்ற திருவருள் ஞானத்தை நான் நன்கு சுவைத்தற்கு இது தக்க தருணமாதலால் என்பாற் போந்து என்னைக் கலந்தருளுக என வற்புறுத்துவாராய், "இனிப் பிரிவு ஆற்றேன்" எனவும், "புளிப்பற இனித்தற்கு இது தகு தருணம் புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே" எனவும் இயம்புகின்ருர்.

இதனுல், சிவஞான ஆனந்தத்தை இனிது சுவைத்து மகிழ்தற்குரிய பக்குவம் தமக்கு எய்தினமை தெரிவிப்பாராய் வடலூர் வள்ளல் விண்ணப்பம் செய்தவாரும். *(10)*

திருச்சிற்றம்பலம்

# 35. சிவபோக நிலை

அஃதாவது, சிவஞானத்தால் எய்துதற்குரிய சிவபோகத்தைப் பெறும் வாயிலாகிய சிவயோக முயற்சியை எடுத்தோதுவதாம். சிவயோகச் சிவஞானப் பேற்றிற்குத் தடையாக இருக்கும் உலகியல் மாயையை நீக்கி ஞான நேய நிலையின்கண் செலுத்துவதாகலின் அதனைக் கதவாக உருவகம் செய்து அதனைத் திறந்து அருளுமாறு இதன்கண் வரும் பாட்டுத் தோறும் வடலூர் வள்ளல் எடுத்தோதுகின்றார். சிவஞானமாகிய நிலையத்தின்கண் புகுந்தாலன்றிச் சிவஞான போக நுகர்ச்சி எய்தாது என்பது கருத்து.

## நேரிசை வெண்பா

3832. மதிமண்ட லத்தமுதம் வாயார உண்டே
பதிமண்ட லத்தரசு பண்ண—நிதிய
நவநேய மாக்கும் நடராச னேயெஞ்
சிவனே கதவைத் திற.

**உரை :** எங்கள் சிவபெருமானே! நித்தியமும் புதுமையுமுடைய நேயமாகிய சிவயோகப் பயனை எய்த அருளும் கூத்தப் பெருமானே! திருவருள் ஞானத்தைப் பெறுதற்குத் தடையாகும் உலகியற் மாயை என்னும் கதவைத் திறந்து யோக நெறியில் துவாத சாந்தத்தில் தோன்றும் ஞான வமுத சந்திரனிடத்து ஒழுகும் ஞான அமுதத்தை நிரம்ப உண்டு சிவலோகத்தில் சிவஞான அருளரசு பண்ணி இன்புற அருளுவாயாக. எ.று.

நித்திய நவநேயமாவது அழிவில்லதாய் சிவஞானத்தால் உணரப் படும் சிவமாகிய நேயப் பொருள். நித்தியம் நிதியம் என வந்தது. நிதிய நவநேயம் எனவே கொண்டு திருவருள் ஞானச் செல்வமாகிய சிவஞான நேயம் எனினும் அமையும். நுகருந் தொறும் நுகருந் தொறும் புத்தின்பம் தருவதாகலின் சிவமாகிய நேயத்தை "நவ நேயம்" என்று கூறுகின்றார். மதி மண்டலம் என்பது யோக நெறியில் மூலாதாரம் முதலாக வுள்ள ஆதாரம் ஆறினுக்கும் மேலதாகிய துவாத சாந்தத்தில் தோன்றுகின்ற ஞான சந்திரன். யோகியர் சந்திரனிடத்து அமுதம் ஒழுகப் பெற்று அதனை ஞான நாட்டமே வாயாக உண்டு இன்புறுவர் என்பவாதலின், "மதி மண்டலத்து அமுதம் வாயார உண்டு" எனவும், ஆங்கு அவர் பெறும் பயன் சிவலோக இன்ப அரச போகம் என்று விளக்குதற்கு, "பதி மண்டலத்து அரசு பண்ண" எனவும், அவ்வின்பப் பேற்றுக்கு உலகியல் மயக்கம் தடையாதல் பற்றி அதனைக் கதவு எனவும்

உருவகம் செய்து, "கதவைத் திற" எனவும் இயம்புகின்றார். இறைவன் யோகியர்க்கு அருளும் திறத்தை "ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர் ஞான விளக்கினை ஏற்றி, நன்புலத்து ஏனை வழி திறந்து ஏத்துவார்க்கு, இடரான கெடுப்பன அஞ்செழுத்துமே" என்று ஞானசம்பந்தர் உரைப்பது காண்க.

இதனால், சிவயோக நெறியில் மதி மண்டலத் தமுதம் உண்டு சிவ போகத்தை நுகரும் திறம் தெரிவித்தவாறும். (1)

**3833.** **இந்தார் அருளமுதம் யானருந்தல் வேண்டுமிங்கே**
**நந்தா மணிவிளக்கே ஞானசபை—எந்தாயே**
**கோவே எனது குருவே எனையாண்ட**
**தேவே கதவைத் திற.**

உரை : கெடாத ஞான மணி விளக்கமாகியவனே! ஞான சபையில் எழுந்தருளும் எந்தையே! எல்லா வுலகுகட்கும் தலைவனே! என்னை யுடைய குருவே! என்னை இளமைப் போதிலே ஆண்டு கொண்ட தேவனே! யோகாந்தத்தில் தோன்றிப் பெருகும் நினது திருவருள் ஞான அமுதத்தை, இவ்வுலகில் இருந்தே யான் பருகி இன்புற வேண்டுமாதலால் உனது ஞானக் கதவைத் திறந்தருளுக. எ.று.

நந்துதல் - கெடுதல். உலகில் காணப்படும் மணி வகைகள், ஒரு காலத்தே கெடும் இயம்பினவாதலால் சிவபெருமானை, "நந்தா மணி விளக்கு" என்றும், ஞான சபையில் எழுந்தருளுவது பற்றி, "ஞான சபை எந்தாய்" என்றும், எல்லா வுலகுகளையும் படைத்தளிக்கும் முதல் வனுதலால், "கோவே" என்றும், குருபரனாய் எழுந்தருளி ஞானம் நல்கு வதால் "எனது குருவே" என்றும், தம்மை இளமைப் பருவத்தேயே ஆண்டு கொண்ட நலம் பற்றி, "எனை யாண்ட தேவே" என்றும் உரைக் கின்றார். இந்தார் அருளமுதமாவது யோகக் காட்சியில் துவாத சாந்தத் தில் பெறலாகும் ஞான வமுதமாம். அதனை இவ்வுலகில் இப்பிறப் பிலேயே பெற வேண்டுமென்று வடலூர் வள்ளல் விழைகின்றாராதலால், "இங்கே இந்தார் அருளமுதம் யான் அருந்தல் வேண்டும்" எனவும், அதற்கு உனது திருவருள் ஆற்றலைத் தந்துதவ வேண்டும் என்றற்கு, "கதவைத் திற" எனவும் கூறுகின்றார். இப்பாட்டில் கதவு என்பது திருவருள் ஞானத் துணை என அறிக.

இதனால், துவாத சாந்தப் பெருவெளியில் விளங்குகின்ற அமுத சந்திரனது ஞான வமுதத்தை அருந்த விழையும் தமது ஆர்வத்தை வெளிப்படுத்தியவாறும். (2)

**3834.** **சாகா அருளமுதம் தான்அருந்தி நான்களிக்க**
**நாகா திபர்சூழ் நடராசா—ஏகா**
**பவனே பரனே பராபரனே எங்கள்**
**சிவனே கதவைத் திற.**

**உரை :** தேவ லோகத்து இந்திரர்கள் சூழ்ந்து நின்று வணங்கு கின்ற கூத்தப் பெருமானே! ஏகனே! ஞான ஒளி யுடையவனே! மேலானவனே! மேலும் கீழுமானவனே! எங்களுடைய சிவனே! சாகாமைக்கு ஏதுவாகிய உன்னுடைய திருவருள் ஞான வமுதத்தை உண்டு நான் மகிழ்ந்திருக்கும்வண்ணம் நினது திருவருள் ஞானமாகிய கதவைத் திறந்தருளுக. எ.று.

நாகாதிபர் - நாகர் உலகத்து வேந்தர்களாகிய இந்திரர்கள். ஞான சபையில் கூத்தப் பெருமான் திருநடம் புரியுங்கால் தேவ தேவர்களோடு இந்திரர்களும் சூழ்ந்து நின்று அருட்கூத்தைக் கண்டு இன்புறுபவா தலால், "நாகாதிபர் சூழ் நடராசா" என்று நவில்கின்றார். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஒருவனாகிய முதல்வனாதல் பற்றிச் சிவனை, "ஏகா" எனக் குறிக்கின்றார். ஏகன் - ஒருவன். பவன் - ஒளி செய்பவன். சிவனை ஞான ஒளி பரப்பும் சிவசூரியன் என்று வழங்குதல் பற்றி, "பவனே" என்றும், எல்லா வுயிர்கட்கும் தேவதேவர்கட்கும் மேலானவன் ஆதலால் சிவனை, "பரனே" என்றும், எல்லாப் பொருட்கும் கீழாய் நின்று தாங்கி அருளுவது பற்றி, "பராபரனே" என்றும் போற்று கின்றார். சிவன் எல்லா இன்பங்களையும் மங்கலங்களையும் நல்குபவன் என்பது கொண்டு, "எங்கள் சிவனே" என்று இயம்புகின்றார். திருவருள் ஞான வமுதம் உண்டவர்கள் ஏனை மக்கள் தேவர்களைப் போலச் செத்துப் பிறக்கும் நிலைமையை எய்த மாட்டா ரென்று சிவஞானிகள் செப்புவதால், "சாகா அருளமுதம்தான் அருந்தி நான் களிக்கச் சிவனே கதவைத் திற" என்று வேண்டுகின்றார்.

இதனால், திருவருள் ஞான வமுதம் பிறவாப் பெருவாழ்வு தரும் பெருமை யுடையது என்பது தெரிவித்தவாறும். (3)

**3835.** **அருளோங்கு தண்ணமுதம் அன்பால் அருந்தி**
**மருள்நீங்கி நான்களித்து வாழப்—பொருளாந்**
**தவநேயர் போற்றும் தயாநிதியே எங்கள்**
**சிவனே கதவைத் திற.**

**உரை :** மெய்ப் பொருளாகிய தவத்தை மேற்கொண் டொழுகும் ஞானிகள் போற்றுகின்ற திருவருட் செல்வமே! எங்களை ஆளாக வுடைய சிவபெருமானே! திருவருள் ஞானத்தைப் பெருகுவிக்கும் குளிர்ந்த வமுதத்தை உன் போல் ஆர்வத்தோடு உண்டு உலகியல் மயக்கத்திலிருந்து நீங்கி ஞான போகத்தில் நான் மகிழ்ந்து வாழ்தல் வேண்டி எனக்கு உனது திருவடி ஞானமாகிய கதவைத் திறந்தருளுக. எ.று.

செய்தற்குரிய உறுதிப் பொருட்களில் சிவஞானம் நோக்கிச் செய்யும் தவமே சிறந்ததாகலின், "பொருளாம் தவம்" என்றும், அதனை யுணர்ந்து செய்யும் தவச் செல்வர்களை, "தவ நேயர்" என்றும் புகழ்கின் றார். திருவருட் செல்வமே உருவாக அமைந்தவனாதலால் சிவனை, "தயாநிதி" என்று சிறப்பிக்கின்றார். சிவன்பால் பெறலாகும் திருவருள் ஞானமாகிய அமுதத்தைப் பெற்றவர், உலகியல் வாழ்வு நல்கும்

மயக்கத்தில் ஆழ்ந்து கெடாது சிவஞான இன்ப நிலையில் இருந்து மகிழ்வராதலால் அந்த மகிழ்ச்சி வாழ்வைப் பெறுதற் கெழுந்த தமது ஆர்வத்தைத் தெரிவிப்பாராய் வடலூர் வள்ளல், "அருளோங்கு தண்ணமுதம் அன்பால் அருந்தி மருள் நீங்கி நான் களித்து வாழ எங்கள் சிவனே கதவைத் திற" என்று முறையிடுகின்றார்.

இதனால், சிவஞான வமுதம் திருவருள் ஞானம் மேன்மேலும் பெருக்கும் இயல்பினது என்று உணர்த்தியவாறும். (4)

3836. வானோர்க் கரிதெனவே மாமறைகள் சாற்றுகின்ற
ஞானோ தயஅமுதம் நானருந்த—ஆனாத்
திறப்பா வலர்போற்றும் சிற்றம் பலவா
சிறப்பா கதவைத் திற.

உரை : குறையாத பல வகைகளை யுடைய பாட்டுக்களை ஆக்க வல்ல, பாவலர்கள் பாடித் துதிக்கின்ற திருச்சிற்றம்பலத்தே உடைய சிவபெருமானே! எல்லாச் சிறப்புக்களையுடைய பெருமானே! தேவர்களுக்கும் பெறுதற் கரியதாம் என்று பெரிய வேதங்கள் புகழ்ந்து ஓதுகின்ற ஞான உதயமாகிய அமுதத்தை, நான் அருந்தி ஞானம் பெறுமாறு உனது திருவருளாகிய கதவைத் திறந்தருளுக. எ.று.

ஆனாமை - குறையாமை. ஆசிரியப்பா முதலிய நால்வகைப் பாக்களையும் அவற்றின் பல்வகை இனங்களையும் பாட வல்ல பாவலரை, "திறப் பாவலர்" என்று சிறப்பிக்கின்றார். பாட்டும் பாட்டின் திறமும் வல்லவர் என்பதற்கு, "திறப்பாவலர்" என்று கூறுகின்றார் எனினும் அமையும். குமரகுருபரர், சிவப்பிரகாசர் முதலிய பெருமக்கள் பாவகை எல்லாம் பாட வல்லவராதலின் அவர்களை இங்கே நினைப்பிக்கின்றார் என்பது முண்டு. சிற்றம்பலம் - தில்லையம்பலம். சிற்றம்பலம் என்பது நாளடைவில் சிதம்பரம் என மருவி வழங்குகிறது. சிறப்புடையவன் என்னும் பொருளதாகிய சிறப்பன் என்னும் பெயர் சிறப்பா என விளி யேற்றது. அமுதுண்டு கற்பக லோக போக நுகர்ச்சியில் மூழ்கிக் கிடப்பவராதலால் தேவர்கட்குத் திருவருள் ஞானம் எய்துவ தரிது என்று வேதங்கள் உரைக்கின்றன. ஆதலால் அதனை "வானோர்க் கரிதெனவே மாமறைகள் சாற்றுகின்ற ஞானோதய அமுதம்" என்று புகழ்கின்றார். திருவருளமுதம் ஞானம் பெறுதற்கு ஏதுவாவது தோன்ற, "ஞானோதய அமுதம்" என்று சொல்லுகின்றார்.

இதனால், திருவருள் அமுதம் ஞானப் பேற்றுக்கு ஏற்ற தென்பது தெரிவித்தவாறும். (5)

3837. எல்லாமும் வல்லசித்தென் றெல்லா மறைகளுஞ்சொல்
நல்லார் அமுதமது நான்அருந்த—நல்லார்க்கு
நல்வாழ் வளிக்கும் நடராயா மன்றோங்கு
செல்வா கதவைத் திற.

**உரை :** நல்லவர்களுக்கு நல்வாழ்வைத் தருகின்ற நடராசப் பெருமானே! அம்பலத்தில் உயர்ந் தோங்குகின்ற அருட் செல்வரே! எவ்வகைச் செயல்களையும் செய்ய வல்ல சித்தன் என்று எல்லா வேதங்களும் சொல்லிப் பாராட்டுகின்ற நன்ஞானமுடையவர்கள் விரும்பி உண்கின்ற ஞான வமுதத்தை நானும் அருந்தி மகிழுமாறு உனது திருவருளாகிய கதவைத் திறந்தருளுக. எ.று.

நல்லார் - நன்ஞான நல்லொழுக்க முடையவர்கள். அப்பெரு மக்களுக்குக் குறையாத இன்ப வாழ்வை நல்குவது பற்றிச் சிவபெருமானை, "நல்லார்க்கு நல்வாழ்வு அளிக்கும் நடராயா" என்றும், அவர் அம்பலத்தில் திருக்கூத்து ஏற்றி அருள் வழங்குவது பற்றி, "மன்றோங்கு செல்வா" என்றும் போற்றுகின்றார். எண்வகைச் சித்திகளையும் செய்ய வல்லவன் சிவபெருமானாகிய சித்தன் என்று நால்வகை வேதங்களும் ஓதுகின்றன என்பதற்கு, "எல்லாமும் வல்ல சித்தென்று எல்லா மறைகளும் சொல் நல்லார்" என்று எடுத்துரைக்கின்றார். நலமே யுருவாகக் கொண்டவனாதலால் "நல்லார்" என்றும், அப்பெருமான் அருளுகின்ற ஞான வமுதத்தை "நல்லாரமுதம்" என்றும் சிறப்பிக்கின்றார். அப்பெருமானுடைய திருவருளாகிய அமுதத்தைத் தாமும் பெறுதற்கு விழைந்து நிற்கின்றமை தோன்ற, "நல்லார் அமுதமது நான் அருந்த" என்றும், அது இறைவன் திருவருளாலன்றி எய்தா தென்பது விளங்க, "மன்றோங்கு செல்வா கதவைத் திற" என்றும் இயம்புகின்றார்.

இதனால், திருவருள் ஞானமாகிய அமுதத்தை நல்கி, நல்வாழ் வளிக்கும் நல்லவனே என்று பாராட்டியவாறாம். (6)

3838. ஏழ்நிலைக்கும் மேற்பால் இருக்கின்ற தண்ணமுதம்
வாழ்நிலைக்க நான்உண்டு மாண்புறவே—கேழ்நிலைக்க
ஆவாஎன் றென்னைஉவந் தாண்டதிரு அம்பலமா
தேவா கதவைத் திற.

**உரை :** என்பால் ஞானப் பேற்றுக்குரிய தன்மை நிலைபெறும் பொருட்டு இவண் வருக வென்று என்னை அன்போடு மனமுவந்து ஆண்டு கொண்ட திருச்சிற்றம்பலத்தையுடைய மாதேவனே; ஏழ் நிலைக்கும் மேல் நிலையிலுள்ள குளிர்ந்த ஞான வமுதத்தை என் வாழ்வு நிலைபெறுமாறு நான் உண்டு மேன்மை யுறுதல் பொருட்டு எனக்கு உனது திருவருளாகிய கதவைத் திறந்தருளுக. எ.று.

அறுவகை ஆதாரங்களும் மேலதாகிய அந்த நிலையிலிருக்கும் குளிர்ந்த ஞானமிர்தத்தை, "ஏழ்நிலைக்கும் மேற்பால் இருக்கின்ற தண்ணமுதம்" என்று குறிக்கின்றார். ஏழாம் நிலை துவாதசாந்தம். அவ்விடத்தே தோன்றி ஒளிர்கின்ற சந்திரனது அமுதம் "ஏழ்நிலைக்கும் மேற்பாலுள்ள தண்ணமுதம்" என விளக்கப்படுகிறது. வாழ் நிலைக்க என்றவிடத்து, வாழ் என்பது முதனிலைத் தொழிற் பெயர். வாழ்வு என்று பொருள். அது பெறுதற் கரிய ஞான வாழ்வாதலால் அது நீங்காமைப் பொருட்டு, "வாழ் நிலைக்க நானுண்டு மாண்புற" என வுரைக்கின்

ருர். கேழ் - தன்மை; ஞானப் பேற்றிற்குரிய தகுதியுமாம். அத்தகுதி என்றும் நிலைபெறுதல் வேண்டி இறைவன் இளமையிலேயே தம்மை ஆண்டு கொண்டமை புலப்பட, "கேழ் நிலைக்க என்னை உவந்தாண்ட அம்பல மாதேவா" என்று போற்றுகின்ருர். ஆவா என்பது அருகே வா என வுரைக்கும் விளிச் சொல் வகை.

இதனல், திருவருள் ஞானமாகிய அமுதம் ஞான வாழ்வில் நிலை பெறுவிக்கும் என்பது தெரிவித்தவாறும். (7)

**3839.** **ஈன உலகத் திடர்நீங்கி இன்புறவே**
**ஞான அமுதமது நான்அருந்த—ஞான**
**உருவே உணர்வே ஒளியே வெளியே**
**திருவே கதவைத் திற.**

**உரை :** ஞானமே உருவாகிய பெருமானே! உயிருணர்வுக்கு உணர்வாய் இருப்பவனே! ஒளி மயமானவனே! பரவெளியாய் விளங்கு பவனே! சிவஞானப் பொருளாகிய திருவே! கீழ்மையைத் தருகின்ற இவ்வுலக வாழ்வு தரும் துன்பத்திலிருந்து நீங்கிச் சிவானந்தமாகிய பேரின்பத்தை, நான் அடைதற் பொருட்டுத் திருவருள் ஞானமாகிய அமுதத்தை அருந்தி, உய்தற்கு நின் திருவருளாகிய கதவை திறப்பாயாக. எ.று.

பரஞானமாகிய சிவஞானமே தனக்கு உருவாக வுடையவன் என்று ஞானிகள் உரைப்பதால் சிவனை, "ஞான உருவே" என்றும், உயிர்க் குயிராய் அதன் உணர்வுக்குணர்வு வடிவாய் விளங்குவது பற்றி, "உணர்வே" என்றும் உரைக்கின்ருர். உலகப் பொருட்களின் ஒளிக்கு ஒளி தரும் பேரொளிப் பொருளாய்ப் பிறங்குவது பற்றி, "ஒளியே" எனவும், எல்லா உலகுகளையும் தனக்குள் அடக்கி யிருக்கும் அண்ட வெளிக்கு அப்பாலதாகிய பெருவெளியையே தனக்கு உருவமாகக் கொண்டு ஒளிர்வது பற்றி, "வெளியே" எனவும், சிவஞானத்தால் பெறு கின்ற சிவபோகத்தின் திருவுருவாய்த் திகழ்வது பற்றி, "திருவே" எனவும் பராவுகின்ருர். நிலையாப் பொருள்களின் மேல் ஆசையை விளைவித்து அவற்றை ஈட்டியும் இழந்தும் துன்புறச் செய்தலின் உலகியலை, "ஈன உலகத்து இடர்" என்றும், இதனுள் கிடந்து துன்புறும் நிலைமையிலிருந்து நீங்கினலன்றி நிலைத்த இன்பப் பேறு எய்தா தென்பது பற்றி, "இடர் நீங்கி இன்புறவே" என்றும், அவ்வின்பப் பேறும் சிவஞானமாகிய அமுதினை உண்டாலன்றிக் கைவரப் பெறுதென்பது பற்றி, "ஞான அமுதமது நான் அருந்த" என்றும், அதற்குத் திருவருளின் இன்றியமையாமை தோன்ற, "கதவைத் திற" என்றும் இசைக்கின்ருர்.

இதனல், உலகியல் துன்பத்தினின்றும் நீங்கி, இன்புறுதற்கு ஞானத் திருவமுது இன்றியமையா தென்பது இயம்பியவாறும். (8)

**3840.** **திரையோ தசத்தே திகழ்கின்ற என்றே**
**வரையோது தண்ணமுதம் வாய்ப்ப—உரை ஓது**
**வானேஎம் மானேபெம் மானே மணிமன்றில்**
**தேனே கதவைத் திற.**

**உரை :** துவாத சாந்தத்துக்கு அப்பாலானதாகிய திரையோதசமாகிய ஞான வானத்தில் ஒளிர்கின்ற சிவசூரியனே! யோக நூல்களில் வரைந்தோதப்படும் சந்திரனிடத்து ஒழுகும் குளிர்ந்த அமுதம் எய்தும் நெறி விளங்க எம்போல்வார்க்கு ஓதி யருளுகின்ற குருமுதல்வனே! எங்கள் தலைவனே! பெருமானே! மணிகள் இழைத்த அம்பலத்தின்கண் எழுந்தருளி இன்பம் தரும் தேன் போன்றவனே! உனது திருவருளாகிய கதவைத் திறந்தருளுவாயாக. எ.று.

துவாத சாந்தமாகிய சந்திர மண்டலத்திற்கு மேலே யுள்ள பதிமூன்ருவதாகிய அங்குலித்தானம் திரையோதசம் எனப்படுகின்றது. இதனைச் சிதாகாசம் என்றும், அங்கே ஒளிர்கின்ற சிவசூரியனை, "திரையோதசத்தே திகழ்கின்ற என்றே" எனக் கூறுகின்ருர். என்று - சூரியன். என்றூழ் எனவும் வழங்கும். வரையோது தண்ணமுதம் - யோக சந்திர மண்டலம் என யோகக் காட்சியின் முடிவாக யோக நூல்கள் வரையறுத்துக் காட்டுவது. யோக குருவாய் எழுந்தருளி யோக முடிவை விளக்குவது பற்றி, "தண்ணமுதம் வாய்ப்ப உரை ஓதுவானே" என்று உரைக்கின்ருர். எம்மான் - எங்கள் தலைவன். மான் - தலைவன். பெருமான் என்பது பெம்மான் என மருவிற்று. மணி மன்றில் கூத்தப் பெருமானுய் எழுந்தருளிக் காண்பார்க்கு இன்பம் தருதலின், "மணி மன்றில் தேனே" என்றும் பாராட்டுகின்ருர். அமுதமது என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி.

இதனுல், யோக நூல்கள் வரையறுத்துக் கூறும் யோக அமுத சந்திரனது அமுதத்தை யுண்ணும் வேட்கை புலப்படுத்தவாரும். (9)

**3841.** **சோதிமலை மேல்வீட்டில் தூய திருஅமுதம்**
**மேதினிமேல் நான்உண்ண வேண்டினேன்—ஓதரிய**
**ஏகா அனேகா எழிற்பொதுவில் வாழ்ஞான**
**தேகா கதவைத் திற.**

**உரை :** சொல்லுதற் கரிய குருபரம்பொருளாகிய ஒருவனே! உலகுயிர்கள் தோறும் நிறைந்து பலவாய் விளங்குபவனே! அழகிய திருவம்பலத்தின்கண் எழுந்தருளும் ஞானமே யுருவாகிய சிவனே! சோதியாகிய மலை போல் விளங்குகின்ற துவாத சாந்தமாகிய வீட்டில் பெறப்படும் தூய ஞான அமுதத்தை மண்ணுலகில் இருந்து கொண்டே நான் உண்டற்கு விரும்பினேனுதலால் அதற்குத் துணையாக உனது திருவருளாகிய கதவைத் திறந்தருளுக. எ.று.

உயிர் உணர்வுக்கு எட்டாத ஒருபெரும் பரம்பொருளாதலால் சிவத்தை, "ஓதரிய ஏகா" எனவும், எண்ணிறந்த உயிர்கள் தோறும்

உயிர்க்குயிராய் விரிந்து நிறைந்து நிலவுவது பற்றிச் சிவனை, "அனேகா" எனவும் உரைக்கின்றார். காணும் தொறும் தனது பேரழகால் காணும் உயிர்கட்குக் காட்சி யின்பம் நல்குதலின், "எழிற் பொதுவில் வாழ் ஞான தேகா" என்றும் பாராட்டுகிறார். யோக ஞானப் பேரின்ப நுகர்ச்சிக்குத் திருவருள் இன்றியமையாதாதலால் திருவருள் நல்குக என்றற்கு, "கதவைத் திற" என்று கட்டுரைக்கின்றார்.

இதனால், யோக ஞான வின்பத்தைப் பெறுவது குறித்து வடலூர் வள்ளல் கொண்ட வேட்கை மிகுதி விளம்பியவாறும். *(10)*

*திருச்சிற்றம்பலம்*

## 36. பெற்ற பேற்றினை வியத்தல்

*அஃதாவது, தாம் நாளும் முயன்று இறைவனை நினைந்து நினைந்து பரவித் தாம் பெற்ற திருவருள் ஞானப் பேற்றினைப் பலவாறாக வியந்து எடுத்துரைத்தல். இப்பகுதி யாவரும் பாராயணம் செய்தற் குரியதாதலின் இதன்கண் வரும் பத்துப் பாட்டுக்களும் அந்தாதியாக அமைந்துள்ளன.*

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**3842.** **சீரிடம் பெறும்ஓர் திருச்சிற்றம் பலத்தே**
**திகழ்தனித் தந்தையே நின்பால்**
**சேரிடம் அறிந்தே சேர்ந்தனன் கருணை**
**செய்தருள் செய்திடத் தாழ்க்கில்**
**யாரிடம் புகுவேன் யார்துணை என்பேன்**
**யார்க்கெடுத் தென்குறை இசைப்பேன்**
**போரிட முடியா தினித்துய ரொடுநான்**
**பொறுக்கலேன் அருள்கஇப் போதே.**

**உரை :** *சிறப்பு நிலைபெற்ற ஒப்பில்லாத திருச்சிற்றம்பலத்தின்கண் விளங்குகின்ற தனிப் பெரும் தந்தையே! சேர்தற்குரிய இடம் நின் திருவடி என்பதைத் தெளிய அறிந்து அதனை அடைந்துள்ளேன்; உனது திருவருளை நீ எனக்குச் செய்தற்குத் தாமதிப்பாயின் நான் வேறே யாரிடம் செல்வேன்; யாரைத் துணையாகக் கொள்வேன்; யாவரிடத்து என் குறையைச் சொல்லுவேன்; உலகியல் நல்கும் துன்பத்தோடு இனியும் நான் போர் செய்து வருந்த முடியாது; அத்துயரத்தை நான் தாங்கவும் முடியாதாகையால் எனக்கு உனது திருவருள் நலத்தைத் தந்தருளுவாயாக. எ.று.*

பன்னெடுங் காலமாகப் புகழ்நிலை பெற்ற இடமாதலால் இறைவனுடைய அம்பலத்தை, *"சீரிடம் பெறும் ஓர் திருச்சிற்றம்பலம்"* என்றும், அதனை அடைந்தார்க்கு இனிய காட்சி தந்து ஞானம் தருவது பற்றி, *"திருச்சிற்றம்பலத்தே திகழ் தனித் தந்தையே"* என்றும் போற்றுகின்றார். உலகில் இறைவனுடைய திருவருள் பெறுதற்கேற்ற இடம் திருச்சிற்றம்பலம் என்று தெளிந்து உன் திருமுன் அடைந்துள்ளேன்; ஆதலால் உனக்கு எனது திருவருள் ஞானத்தை இப்போதே தருதல் வேண்டும் என்பார், "நின்பால் சேரிடம் அறிந்தே சேர்ந்தனன்" என்றும், "கருணை செய்தருள்" என்றும் வேண்டுகின்றார். கருணையாகிய உனது திருவருள் எனக்கு அருளுவதற்கு நீ கால தாமதம் செய்வாயானால் நின்னை ஒழிய அருளுருவாகிய புகலிடம் வேறு யாருமில்லை என்பாராய்,

"யாரிடம் புகுவேன்" எனவும், திருவருளை நல்கி உய்தி பெறுதற்கு எனக்குத் துணையாவார் வேறு யாவருமில்லை என்றற்கு, "யார் துணை என்பேன்" எனவும், நின்னைத் தவிர வேறு யாவர்பால் சென்று என் குறையை எடுத்துரைப்பேன் என்பாராய், "யார்க்கு எடுத்து என் குறை இசைப்பேன்" எனவும், கணந் தோறும் இவ்வுலகியல் துன்பம் தோன்றி என்னை அலைப்பதாலும் யானும் என்னால் இயன்ற அளவு அதனைத் தடுப்பதற்கு முயன்றும் மாட்டாமையால் வருந்துகின்றேன் என உரைக்கலுற்று, "இனித் துயரொடு நான் போரிட முடியாது" எனவும், அத்துயர் மிகுதியைத் தாங்க வியலாதவனாக இருக்கிறேன் என்பாராய், "நான் பொறுக்கலேன்" எனவும், உனது திருவருள் துணையைச் செய்தருள்க என வேண்டுவாராய், "அருள்க இப்போதே" எனவும் விண்ணப்பிக்கின்றார்.

இதனால், தம்மைத் தாக்குகின்ற உலகியற் றுன்பத்தினின்றும் நீங்குதற்குத் துணையும் வன்மையும் நல்குவது இறைவன் திருவருள் எனத் தெளிந்து பெறும் நெறியும் இடரும் அறிந்து அடைந்தமை தெளிவித்தவாறும். (1)

3843. போதுதான் விரைந்து போகின்ற தருள்நீ
புரிந்திடத் தாழ்த்தியேல் ஐயோ
யாதுதான் புரிவேன் யாரிடம் புகுவேன்
யார்க்கெடுத் தென்குறை இசைப்பேன்
தீதுதான் புரிந்தேன் எனினும்நீ அதனைத்
திருவுளத் தடைத்திடு வாயேல்
ஈதுதான் தந்தை மரபினுக் கழகோ
என்னுயிர்த் தந்தைநீ அலையோ.

உரை: காலமோ விரைந்து கழிந்து கொண்டிருக்கிறது; அது தெரிந்து நீ எனக்கு உனது திருவருளை நல்குவதற்குக் கால தாமதம் செய்வாயாயின், ஐயகோ யான் யாது செய்வேன்; அது குறித்து வேறு யாவரிடம் செல்வேன்; எனது திருவருள் ஞானமில்லாத குறையை யாவரிடம் எடுத்துரைப்பேன்; அதனைப் பெறுதற்குத் தடையாக யான் குற்றம் பல செய்துள்ளேன் என்றாலும் நீ அதனை நினது திருவுள்ளத்தில் கொள்வாயாயின் இச்செயல் அருளுருக் கொண்ட தந்தையாகிய உன்னுடைய முறைமைக்கு அழகாகுமா? என் உயிர்க் கினிய தந்தை நீ அல்லவா? அருள் புரிக. எ.று.

கணப் பொழுதும் நில்லாமல் கழிவது காலத்தில் இயல்பாதலாலும், கழிந்த காலம் மீளப் பெறுதற்கு இயலாதாதலாலும், "போதுதான் விரைந்து போகின்றது" என்று புகழ்கின்றார். இக்காலத்தின் அருமை நோக்கி நீ அருள் புரிவது முறையாகும்; அது நோக்காது நீ தாமதிப்பாயாயின் என் புகலிட மின்றியும் என் குறையைக் கேட்டு ஆதரிப்பார் இன்றியும் எண்ணி வருந்துகிறேன் என்பாராய், "யாதுதான் புரிவேன் யாரிடம் புகுவேன் யார்க்கு எடுத்து என் குறை இசைப்பேன்" என மொழிகின்றார். யான் செய்த குற்றங்கள் காரணமாக நீ எனக்குத்

திருவருள் நல்கத் தாமதிக்கின்றாய் எனில் என் குற்றங்களைப் பொருளாகக் கருதித் தாமதித்தல் அருளே திருவுருவாக வுடைய உனக்குப் பெருமையாகாது; அருள் தந்தையாகிய உனக்கு அது அழகுமாகாது என முறையிடுவாராய், "தீதுதான் புரிந்தேன் எனினும் நீ அதனைத் திருவுளத்தில் அடைத்திடுவாயேல் ஈதுதான் தந்தை மரபினுக்கு அழகோ" எனவும், நீ எனக்கு என் உயிர்க் கினிய அருள் நெறித் தந்தையாதலால் நீ அதனை மறந்தனையோ என்பாராய், "என் உயிர்த் தந்தை நீ அலையோ" என்று இயம்புகின்றார்.

இதனால், திருவருட் பேற்றுக்குத் தடையாகும் குற்றங்கள் செய்திருப்பினும் என்னைப் பொறுத் தருளுக என்று வேண்டியவாறும். (2)

3844. தந்தைநீ அலையோ தனயன்நான் அலனோ
 தமியனேன் தளர்ந்துளங் கலங்கி
எந்தையே குருவே இறைவனே முறையோ
 என்றுநின் றோலிடு கின்றேன்
சிந்தையே அறியார் போன்றிருந் தனையேல்
 சிறியனேன் என்செய்கேன் ஐயோ
சந்தையே புகுந்த நாயினில் கடையேன்
 தளர்ச்சியைத் தவிர்ப்பவர் யாரே.

**உரை :** எனக்கு அருள் நெறித் தந்தையே! ஞான குருவே! என் உயிர்க்கு இறைவனே! நீ எனக்கு அருளுறும் தந்தையாகவும் நான் உனக்கு அருள் பெறுதற்குரிய மகனாகவும் இருக்கவும், தனியேனாகிய நான் மனம் சோர்ந்து கலக்கமுற்று வருந்துவது முறையாகாதே என்று நின் திருமுன் நின்று ஓலமிடுகின்றேன்; என் மனநிலையை அறியாதவர் போல நீ வாளா இருக்கின்றாய்; அதனால் சிறுமை பொருந்திய யான் யாது செய்ய வல்லேன்; சந்தையிற் புகுந்த நாயினும் கடைப்பட்டவனாகிய என்னுடைய சோர்வைப் போக்க வல்லவர் உன்னைத் தவிர யாவருளர். எ.று.

இறைவனுக்கும் தமக்குள்ள தொடர்பு கூறுவார், "தந்தை நீ அலையோ தனயன் நான் அலனோ" எனவும், தந்தையும் மகனுமாகத் தொடர்புற்றிருக்கும் நிலையில் மகனாகிய நான், என்னுடைய தளர்ச்சி போக்கும் அன்புடைத் தந்தையின் முன் உடல் தளர்ந்து உள்ளம் அழிவது முறையாகாது என்பாராய், "தமியனேன் தளர்ந்து உளங் கலங்கி எந்தையே குருவே இறைவனே முறையோ என்று ஓலிடு கின்றேன்" எனவும் மொழிகின்றார். ஓலம் - ஈறு குறைந்து ஓல் என வந்தது. தன்னை அடைந்தாருடைய மனநிலையை அறியாதவர் போலிருப்பது அருள் செய்தற்கு விரும்பாமை புலப்படுத்தலின் அதனால் தாம் வருத்தம் மிகுந்தமை வெளிப்படுத்தற்கு, "சிந்தை யறியார் போன்று இருந்தனையேல் சிறியனேன் என் செய்வேன் ஐயோ" என்று செப்புகின்றார். சந்தை - வருவார் போவார் நிறைந்த இடம். அவ்விடத்திற்குப் புகுந்த நாய் பலராலும் அலைக்கப்படுவது பற்றித் தம்மை, "சந்தையே புகுந்த நாயினில் கடையேன்" என்று தம்மையே இழித்துக் கூறுகின்றார்.

பிறிதோரிடத்தும் "சந்தை நாயெனப் பந்தலுற்று அலைவேன்" என்று வள்ளற் பெருமான் உரைப்பது காண்க. உயிர்கட் குளவாகும் தளர்ச்சியைப் போக்குதற்கு இறைவனை யல்லது துணை யாவார் பிறர் எவரையும் பெறல் அரிதாதலின், "தளர்ச்சியைத் தவிர்ப்பவர் யாரே" என இசைக்கின்றார்.

இதனால், தனது மனத் துயரினை அறியாதார் போன்று வாளா விருத்தல் முறையாகாதென முறையிட்டவாறும். (8)

3845. யாரினும் கடையேன் யாரினும் சிறியேன்
என்பிழை பொறுப்பவர் யாரே
பாரினும் பெரிதாம் பொறுமையோய் நீயே
பாவியேன் பிழைபொறுத் திலையேல்
ஊரினும் புகுத ஒண்ணுமோ பாவி
உடம்பைவைத் துலாவவும் படுமோ
சேரினும் எனைத்தான் சேர்த்திடார் பொதுவாம்
தெய்வத்துக் கடாதவன் என்றே.

உரை : எல்லாரினும் கடைப்பட்டவனாகிய யான் எல்லாரினும் மிக்க சிறுமை யுடையேனாதலால் யான் செய்கின்ற பிழைகளை யாவர் தான் பொறுப்பார்கள்; நிலத்தினும் பொறுமைத் தன்மையில் பெரியவனாகிய நீயே என் பிழையைப் பொறுத்தருளாயாயின் பாவியாகிய யான் மக்கள் வாழும் ஊர்க்குள் புக முடியுமோ; இவ்வுடம்பைச் சுமந்து கொண்டு உலாவ முடியுமோ? எவ்வூர்க்குள்ளேனும் புகுவேனாயின் அவ்வூரவரும் எல்லாருக்கும் பொதுவாகிய தெய்வத்தால் வெறுக்கப் பட்டவ னென்று தம்மிடையே என்னைச் சேர்த்துக் கொள்ள மாட்டாரன்றோ. எ.று.

எல்லாரிலும் கடையவனாகிய தன்மையும் சிறுமை இயல்பும் உடையவனாதலால் யான் செய்யும் பிழைகளை ஒருவரும் பொறுக்க மாட்டார் எனத் துணிகின்றாராதலால், "யாரினும் கடையேன் யாரினும் சிறியேன் என் பிழை பொறுப்பவர் யாரே" என்று முன்மொழிகின்றார். பொறுமைக்கு எல்லையாக நிலத்தையே சான்றோர் உவமம் கூறுவது மரபு. அந்நிலத்தினும் பொறுமையால் மிக்க பெருமை யுடையவன் இறைவன் என்பது குறித்து, "பாரினும் பெரிதாம் பொறுமையோய்" என்றும், என்னுடைய பாவ மிகுதி நோக்கி நீ பொருது வெறுப்பாயானால் உலகவர் என்னைத் தம்போல் ஒருவனாக ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்பாராய், "நீயே பாவியேன் பிழை பொறுத்திலையேல் ஊரினும் புகுத ஒண்ணுமோ" என்று உரைக்கின்றார். பாவங்களைச் செய்தற்குக் கருவியும் துணையுமாகிய இவ்வுடம்பைச் சுமந்து கொண்டு நான் எங்கும் யாவரும் காணவும் திரிய முடியாது என்றற்கு, "பாவி உடம்பை வைத்து உலாவவும் படுமோ" என்றும், இவ்வுடம்பைச் சுமந்து கொண்டு ஊர்க்குள் நுழைந்தாலும் தெய்வத்தால் வெறுக்கப்பட்டவன் என்று என் உடம்பை நோக்கி என்னைத் தம்மிடையே ஒருவரும் சேர்த்துக் கொள்ள மாட்டார் என வருந்துவாராய், "சேரினும் தெய்வத்துக்கு அடாதவன்" என்றும், "எனைத் தான் சேர்த்திடார்" என்றும், எல்லார்க்கும் பொதுவாகிய

கூத்தப் பெருமானுகிய தெய்வமே என்னைக் கைவிட்டு விட்டது என்று பிறரெல்லாம் கருதுவர் என்பாராய், "பொதுவாம் தெய்வத்துக்கு அடாதவன் என்று சேர்த்திடார்" என்றும் இயம்புகின்றார்.

இதனுல், தெய்வமாகிய நீ என் பிழையைப் பொறுத் தருளாவிடில் என்னை உலகில் மக்களினத்தார் தம்மோடு சேர்க்காமல் வெறுத் தொதுக்கி விடுவர் எனத் தெரிவித்துக் கொண்டவாறும். (4)

**3846.** **அடாதகா ரியங்கள் செய்தனன் எனினும்**
**அப்பநீ அடியனேன் தன்னை**
**விடாதவா றறிந்தே களித்திருக் கின்றேன்**
**விடுதியோ விட்டிடு வாயேல்**
**உடாதவெற் றரைநேர்ந் துயங்குவேன் ஐயோ**
**உன்னருள் அடையநான் இங்கே**
**படாதபா டெல்லாம் பட்டனன் அந்தப்**
**பாடெலாம் நீஅறி யாயோ.**

**உரை :** அப்பனே! பொருந்தாத செயல்கள் பல செய்துள்ளேன் என்றாலும் உனக்கு அடியவனுகிய என்னை விலக்க மாட்டாய் என்று அறிந்து மகிழ்வோடு இருக்கின்றேன்; என்னைக் கைவிடுவாயோ? அவ்வாறு கைவிடுவாயானுல் இடையில் உடையின்றி நிர்வாணமாய்த் திரியும் பித்தரைப் போல வருந்துவேன்; ஐயோ உனது திருவருள் நெறியை அடைதற்கு நான் உலகில் படாத பாடுகள் பலவும் பட்டேன்; அந்தப் பாடுகளை யெல்லாம் நீ அறிந்திலேயோ. எ.று.

நேர்மைக் கொவ்வாத காரியங்களை அடாத காரியங்கள் என்பர். பிறப்பு ஒழுக்கத்திற்கும் மக்கள் தன்மைக்கும் ஒவ்வாத காரியங்கள் என்று உரைப்பினும் அமையும். வயிறு வளர்த்தல் வேண்டி இக்காரியங் களைச் செய்தேனுதலால் நீ அவற்றைப் பொருளாகக் கருதாமல் பொறுத்துக் கொண்டு என்னைப் புறக்கணித்து ஒதுக்க மாட்டாய் என எண்ணி மகிழ்ந்திருக்கிறேன் என்பாராய், "அடாத காரியங்கள் செய் தனன் எனினும் அப்ப நீ அடியேன் தன்னை விடாதவாறு அறிந்தே களித்திருக்கின்றேன்" என்று கூறுகின்றார். திருத்தொண்டர்களின் வரலாற்றால் அடாதவற்றைச் செய்த அடியார்களையும் நீ வெறுத் தொதுக்காமல் ஆண்டருளியுள்ளாய் என்றறிந்து நம்மையும் ஆண்டருள் வான் இறைவன் என்று மகிழ்ந்திருக்கின்றேன் என்பாராய், "விடாத வாறு அறிந்தே களித்திருக்கிறேன்" என்று மொழிகின்றார் எனினும் பொருந்தும். உடாத - வெற்றர் இடையில் உடையின்றி நிர்வாணமாய்த் திரியும் பித்தர்களை "உடாத வெற்றர்" என்று உரைக்கின்றார். திகம்பர ராகிய சமணரை உடாத வெற்றர் என்று பெரியோர் கூறுவது வழக்கம். திருவருள் நெறியை அடைதல் வேண்டி வடலூர் வள்ளல் இளமை முதலே பட்ட துன்பங்கள் பலவாதலால், "உன்னருள் அடைய நான் இங்கே படாத பாடெல்லாம் பட்டனன்" என்று பகர்கின்றார். படாத பாடு - என் போன்றவர் அடைந்திராத துன்பங்கள். எல்லா மறியும் இயல்பினனுதலின் இறைவன் தமது துன்பத்தையும் அறிந்திருப்

பான் என்ற கருத்தால் "அந்தப் பாடெல்லாம் நீ அறியாயோ" என்று கூறுகின்றார். வடலூர் வள்ளலின் பிறப்பும் வாழ்வும் உள்ளவாறு விளங்க எடுத்துரைக்கும் வரலாறுகள் இல்லாமையால் அவர் சொல்லுகின்ற படாத பாடெல்லாம் இன்னவை என நம்மால் அறிந்து கொள்ள முடிய வில்லை.

இதனால், இறைவன் திருவருள் நெறியை அடைதற்கு, வடலூர் வள்ளல் படாத பல பாடுகள் பட்டமை தெரிவித்தவாறும். (5)

3847. அறிந்திலை யோஎன் பாடெலாம் என்றே
அழைத்தனன் அப்பனே என்னை
எறிந்திடா திந்தத் தருணமே வந்தாய்
எடுத்தணைத் தஞ்சிடேல் மகனே
பிறிந்திடேம் சிறிதும் பிறிந்திடேம் உலகில்
பெருந்திறல் சித்திகள் எல்லாம்
சிறந்திட உனக்கே தந்தனம் எனஎன்
சென்னிதொட் டுரைத்தனை களித்தே.

உரை : என்னுடைய அப்பனாகிய பெருமானே! நான் பட்ட துன்பங்களெல்லாம் நீ அறியாயோ என்று உன்பால் யான் முறையிட்டேனாக, நீயும் என்னைப் புறக்கணிக்காமல் இத்தருணத்தில் எழுந்தருளி வந்து என்னை எடுத்து மார்போ ட்டணைத்து, மகனே, இனி நீ அஞ்ச வேண்டா; உன்னை விட்டு இவ்வுலகில் சிறிது போதும் பிரிய மாட்டோம்; பெரிய திறமை வாய்ந்த சித்திகள் யாவும் உன்னிடத்தே சிறப்புற நிகழுமாறு அருளி யுள்ளோம் என்று என் தலைமேல் கை வைத்து உவகையுடன் உரைத் தருளினாய்; இனி எனக்கு ஒருகுறையு மில்லையாம். எ.று.

ஒரு குறையு மில்லையாம் என்பது குறிப்பெச்சம். திருவருள் நெறியை அடைந்த தமக்குத் திருவருள் நன்மையும் வன்மையும் எய்தாமை யுணர்ந்து, நான் பட்ட பாட்டை ஐயனே நீ இன்னும் அறியாயோ என்று நான் வருந்தி அழைத்ததற்கு நீயும் மனமிரங்கி என்முன் வந்தருளினாய் என விளக்குவாராய், "அறிந்திலையோ என் பாடெல்லாம் என்றே அழைத்தனன் அப்பனே என்னை எறிந்திடாது இந்தத் தருணம் வந்தாய்" என உரைக்கின்றார். தன்முன் போந்தருளிய பெருமான் தமக்கு அருள் செய்த திறத்தை உரைக்கலுற்று, தன்னை இருகைகளாலும் அன்போடு எடுத்துத் தன் மார்பிடை அணைத்து உரைத்தருளிய திறத்தை, "எடுத்தணைத்து அஞ்சிடேல் மகனே பிறிந்திடேம் சிறிதும் பிறிந்திடேம் உலகில்" என மொழிந்ததையும், பிறகு தம்மேல் கைவைத்து மகிழ்ச்சியோடு எல்லாச் சித்திகளையும் செய்ய வல்ல ஆற்றலை அளித்தருளிய நலத்தை, "பெருந்திறல் சித்திகள் எல்லாம் சிறந்திட உனக்கே தந்தனம்" எனவும், "என் சென்னி தொட்டுக் களித்து உரைத்தனை" எனவும் இசைக்கின்றார். சென்னி - தலை.

இதனால், வடலூர் வள்ளலுக்குச் சித்திகள் பலவற்றைச் செய்தற்கு இறைவன் அருளிய திறம் எடுத்தோதியவாறும். (6)

3848. களித்தென துடம்பில் புகுந்தனை எனது
கருத்திலே அமர்ந்தனை களிந்தே
தெளித்தஎன் அறிவில் விளங்கினை உயிரில்
சிறப்பினுல் கலந்தனை உள்ளம்
தளிர்த்திடச் சாகா வரங்கொடுத் தென்றும்
தடைபடாச் சித்திகள் எல்லாம்
அளித்தனை எனக்கே நின்பெருங் கருணை
அடியன்மேல் வைத்தவா றென்னே.

உரை : பெருமானே! மனம் களிகூர்ந்து என்பால் வந்த நீ என் உடம்பினுட் புகுந்து என் கருத்திலே அமர்ந்து அன்பு நிறைந்து என்னையும் தெளிவித்து, என் அறிவில் விளங்கி, என் உயிர்க்குயிராய் சிறப்புறக் கலந்து என்னுள்ளம் அருளால் தளிர்க்கும் வண்ணம் சாகா வரங் கொடுத்து எப்போதும் தடைபடுதல் இல்லாத சித்திகள் எல்லாவற்றையும் எனக்குத் தந்தருளினுய்; உன்னுடைய பெரிய கருணையை அடியவனுகிய என்பால் செய்தருளினுய்; உனது அருள் நலத்தை என்னென்பது. எ.று.

வள்ளற் பெருமானுடைய உடம்பினுட் புகுந்து மனத்தில் அமர்ந்து அறிவைத் தெளிவித்து அதன்கண் விளங்கித் தோன்றிய திருவருள் நலத்தை, "எனது உடம்பில் புகுந்தனை" என்றும், "எனது கருத்தில் அமர்ந்தனை" என்றும், "அறிவில் விளங்கினை" என்றும் எடுத்தோதுகின்ருர். கருத்தில் அமர்ந்த இறைவன் அறிவைத் தெளிவித்தமை புலப்பட, "தெளித்த அறிவில் விளங்கினை" எனத் தெரிவிக்கின்ருர். உயிர்க் குயிராய்க் கலந்து இயலுதல் இறைவனுக்குப் பொது வியல்பாயினும் தமது உயிரில் சிறப்புறக் கலந்து கொண்டதை வெளிப் படுத்தற்கு, "உயிரில் சிறப்பினுல் கலந்தனை" என்றும், அதனுல் தமது உள்ளம் அருள் நிறைந்து தளிர்க்கும் வண்ணம் சாகா வரங் கொடுத்தான் என்றும், அந்த நலமிகுதியால் தமக்குச் சித்திகள் பலவும் தடையின்றிச் செய்ய வல்ல தன்மை உண்டாயிற்று என்றும் கூறுவாராய், "தடைபடாச் சித்திகள் எல்லாம் அளித்தனை எனக்கே" என்றும் வியந்து உரைக்கின்ருர். இத்தகைய பெருங் கருணையைத் தமக்குச் செய்தமை பற்றித் தமது ஆராப் பேரின்பத்தை, "நின் பெருங் கருணை அடியன் மேல் வைத்தவாறு என்னே" என்று வியந்து பாராட்டுகின்ருர்.

இதனுல், இறைவன் தமக்கு அறிவு தந்து சாகா வரம் கொடுத்துச் சித்திகள் செய்ய வல்ல சிறப்பளித்தமை தெரிவித்தவாரும். (7)

3849. என்நிகர் இல்லா இழிவினேன் தனைமேல்
ஏற்றினை யாவரும் வியப்பப்
பொன்இயல் வடிவும் புரைபடா உளமும்
பூரண ஞானமும் பொருளும்
உன்னிய எல்லாம் வல்லசித் தியும்பேர்
உவகையும் உதவினை எனக்கே
தன்னிகர் இல்லாத் தலைவனே நினது
தயவைஎன் என்றுசாற் றுவனே.

**உரை :** ஒப்புயர்வற்ற தலைவனாகிய பெருமானே எனக்கு ஒப்பாக ஒன்றையும் கூற வியலாத இழிதகவினை யுடைய என்னைக் காண்போர் யாவரும் வியக்குமாறு மேலவனாக உயர்த்தி யருளினாய்; அன்றியும் பொன்னிற மேனியும் குற்றமில்லாத உள்ளமும் நிறைந்த ஞானமும் பொருளும் எண்ணிய எல்லாவற்றையும் செய்ய வல்ல சித்தியும் மிக்க மகிழ்ச்சியும் எனக்கு உதவி யருளினாய்; உன்னுடைய அருட் சிறப்பை என்னென்று சொல்வேன். எ.று.

இழி தன்மையையுடைய பொருட்கள் எல்லாவற்றிலும் கீழ்ப்பட இழிந்தவன் எனத் தம்மை இழித்தற்கு, "என் நிகரில்லா இழிவினேன்" எனவும், இவ்வியல்பால் மேலவர் மதிக்கும் மேன்மைக்கு யான் சிறிதும் தகுதி யில்லாதவனாகவும், இவ்வுலகில் என்னைக் கண்டவர் அனைவரும் வியக்குமாறு மேல்நிலையில் ஏற்றி யருளினாய் என்பாராய், "என் நிகரில்லா இழிவினன் தனை யாவரும் வியப்ப மேல் ஏற்றினை" எனவும் பரவுகின்றார். இவ்வாறே மாணிக்கவாசகரும், "யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான் யாவர்க்கும் கீழாம் அடியேனை யாவரும் பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான் மற்றறியேன் செய்யும் வகை" (வெண்பா) என்று கூறுவது காண்க. திருவருள் ஞானப் பேற்றால் தாம் எய்திய நலன்களை எடுத்துரைக்கும் வள்ளற் பெருமான், "பொன்னியல் வடிவும் புரைபடா உளமும் பூரண ஞானமும் பொருளும் உண்ணிய எல்லாம் வல்ல சித்தியும் பேருவகையும் எனக்கு உதவினை" என்று ஓதுகின்றார். திருவருள் ஞானம் கைவரப் பெற்றோருடைய மேனி பொன்னிறம் எய்துமெனச் சான்றோர் கூறுதலால், "பொன்னியல் வடிவு" என எடுத்துரைக்கின்றார். குறை - குற்றம். உள்ளம் குற்றத்தால் மாசுபட்ட வழி பூரண ஞானம் எய்தாதாதலால், "புரைபடா உளமும் பூரண ஞானமும்" தான் பெற்றதாகக் கூறுகின்றார். பேருவகை - மாறாத இன்பம். உலகியலில் இடும்பையும் இன்பமும், புணர்வும் பிரிவும், பகலும் இரவும் போல மாறி மாறி வருதல் இயல்பாதலின் அதற்கு மாறாகத் தமக்கு மாறா இன்பத்தை இறைவன் உதவினான் என்று விளக்குதற்கு, "பேருவகை உதவினை" எனவும், எண்ணிய எண்ணியாங்கு செய்தல் வல்லவர்க்கு உவகை மாறாதாதலின், "உன்னிய எல்லாம் வல்ல சித்தியும் பேருவகையும் எனக்கு உதவினை" எனவும் விதந்து மொழிகின்றார். தன்னிகரில்லாத் தலைவனாதலால் இறைவனுக்கு இத்திருவருள் நலங்களை அளிப்பது எளிதாயினும் நிகரில்லாத இழிவு உடைய தமக்கு இவை எய்துவது மிக்க வியப்பைத் தருதலின், "நினது தயவை என்னென்று சாற்றுவேன்" என்று பாராட்டுகின்றார்.

இதனால், இறைவன் தமக்குச் செய்த அருள் நலத்தை வியந்து நன்றியுணர்வு தோன்ற தெரிவித்தவாறும். (8)

**3850.** **சாற்றுவேன் எனது தந்தையே தாயே**
**சற்குரு நாதனே என்றே**
**போற்றுவேன் திருச்சிற் றம்பலத் தாடும்**
**பூரணா எனஉல கெல்லாம்**

தூற்றுவேன் அன்றி எனக்குநீ செய்த
தூயபேர் உதவிக்கு நான்என்
ஆற்றுவேன் ஆவி உடல்பொருள் எல்லாம்
அப்பநின் சுதந்தரம் அன்றே.

உரை : அப்பனாகிய சிவபெருமானே! உன்னை எனக்குத் தந்தையே தாயே சற்குரு நாதனே என்று சொல்லித் துதிப்பேன்; திருச்சிற்றம்பலத்தில் ஆடி யருளுகின்ற பூரணனே என்று உன்னை நாளும் போற்றுவேன்; நீ அருளாவிடில் உலகத்தார் எல்லாம் அறியும்படி உன்னைப் பழித்துத் தூற்றுவேன்; அன்றியும் நீ அருள் வழங்குகிற போது நீ எனக்குச் செய்கிற தூய பேருதவியை நினைந்து நான் என்ன கைம்மாறு செய்வேன்; என்னுடைய உடல் உயிர் பொருளாகிய எல்லாம் உனக்கே உரியவையாய் உன் வழியில் நிற்பனவாம் அன்றோ. எ.று.

சற்குரு நாதன் - சன்மார்க்கத்தை அறிவுறுத்துகின்ற ஞானாசிரியன். பூரணன் - எல்லா நலன்களும் நிறைந்தவன். அருளுவாரைப் போற்றுவதும் அருள் செய்யாதாரைத் தூற்றுவதும் உலகவர் இயல்பாதலின், யான் உனது அருள் பெறாத போது உலகமெல்லாம் அறிய தூற்றுவது என் செயலாம் என்பாராய், "உலகெல்லாம் தூற்றுவேன்" என்று உரைக்கின்றார். உதவி பெற்ற விடத்து இன்பத்தால் பாராட்டுவது இயல்பாதல் பற்றி, நான் நீ செய்த உதவிக்கு யாது கைம்மாறு செய்வேன் என்பாராய், "எனக்கு நீ செய்த தூய பேருதவிக்கு நான் என் ஆற்றுவேன்" என்று கூறுகின்றார். என் உடல் உயிர் பொருள் மூன்றையும் கைம்மாறாகத் தரலா மென்றாலோ அவை உன் உரிய பொருளாதலின் செய்வ தறியாது மயங்குகின்றேன் என்ற குறிப்புத் தோன்ற, "ஆவி உடல் பொருள் எல்லாம் அப்ப நின் சுதந்தர மன்றோ" என்று விளம்புகின்றார்.

இதனால், இறைவன் செய்த திருவருளுக்குக் கைம்மாறு நல்க மாட்டாமை நினைந்து கையறவு பட்டவாறாம். (9)

3851. சுதந்தரம் உனக்கே கொடுத்தனம் உனது
தூயநல் உடம்பினில் புகுந்தேம்
இதந்தரும் உளத்தில் இருந்தனம் உனையே
இன்புறக் கலந்தனம் அழியாப்
பதந்தனில் வாழ்க அருட்பெருஞ் சோதிப்
பரிசுபெற் றிடுகபொற் சபையும்
சிதந்தரு சபையும் போற்றுக என்றாய்
தெய்வமே வாழ்கநின் சீரே.

உரை : சிவ பரம்பொருளாகிய தெய்வமே! எல்லா உரிமையும் உனக்குத் தந்துள்ளோம்; உன்னுடைய தூய நல்ல உடம்பினுட் புகுந்துள்ளோம்; நலமே நினையும் உன்னுடைய மனத்தின்கண் எழுந்தருளி யுள்ளோம்; இன்பம் உண்டாகுமாறு உன் உயிரோடு உயிராய்க் கலந்துள்ளோம்; ஆதலால் நீ அழிவில்லாத சிவபதம் பெற்று

வாழ்க; திருவருளாகிய பேரொளி ஞானத்தைப் பரிசாகப் பெற்றுக் கொள்க; இனிப் பொன்னம்பலத்தையும் ஞானம் தரும் சிற்சபையையும் போற்றுவாயாக என்று எனக்குத் திருவாய் மொழிந் தருளினுய்; ஆதலால் நினது பெரும் புகழ் வாழ்க. எ.று.

நினைந்ததை நினைந்தாங்கு செய்ய வல்ல சித்திகளை நல்கினமை பற்றி, "சுதந்தரம் உனக்கே கொடுத்தனம்" என்றும், பொன்னிறம் பெறுமாறு உடம்பில் புகுந்து கொண்டாராதலின், "உனது தூய நல்லுடம்பினில் புகுந்தேம்" என்றும், எவ்வுயிர்க்கும் நலமே நினைக்கும் உன் உள்ளத்தில் எழுந்தருளி இருக்கின்ரும் என்பது தோன்ற, "இதம் தரும் உளத்தில் இருந்தனம்" என்றும், எம்முடைய கலப்பால் உனக்கு இனி இன்பமே பெருகும் என்பது தோன்ற, "உனையே இன்புறக் கலந்தனம்" என்றும், இறைவன் கூற்ருகக் கொண்டெடுத்து மொழிகின் ருர். பதம் - சிவபதம். அருட் பெருஞ் சோதி - திருவருள் ஞானமாகிய பெரிய ஞானவொளி. சிதந்தரு சபை - காண்பார்க்கு ஞானம் நல்கும் ஞான சபை.

இதனுல், சிவ பரம்பொருளின் அருளுரை பெற்ற இன்பத்தால் நன்றி கூறியவாரும். (10)

திருச்சிற்றம்பலம்

## 37. அழிவுறு அருள் வடிவப் பேறு

அஃதாவது, திருவருட் பேற்றால் அழிந்து படுகின்ற உடம்பின் தன்மையை மாற்றித் திருவருள் ஞான வடிவம் தமக்கு எய்துமாறு சிவபெருமான் அருள் புரிந்ததை வியந்து பாடுவதாம்.

உலகியலில் மக்கள் பிறந்து வளர்ந்து பின்னர், முதிர்ந்து மெலிந்து இறந்து விடுவதைக் கண்ட வடலூர் வள்ளல், ஞானப் பேறு மக்களை இவ்வாறு மூப்பும் சாக்காடும் எய்தி வருந்தச் செய்கிறது. ஆனால் இறைவன் அருளும் ஞானப் பேறு உலகியல் ஞானப் பேற்றினும் சிறப்பும் மேன்மையும் உடைத்தாதலால் அதனைப் பெறுபவர் அழியா உடம்பு பெற்றுத் திருவருள் ஒளி உடம்பு கொண்டு இன்புறுவர் எனத் தெளிந்து தமக்கு அந்த அழியாத் திருவருள் ஞான வுடம்பு நல்கியதாக மகிழ்ந்து பாடுகின்றார்.

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3852. சிவங்க னிந்தசிற் றம்பலத்
தருள்நடம் செய்கின்ற பெருவாழ்வே
நவங்க னிந்தமேல் நிலைநடு
விளங்கிய நண்பனே அடியேன்றன்
தவங்க னிந்ததோர் விண்ணப்பம்
திருச்செவி தரித்தருள் புரிந்தாயே
பவங்க னிந்தஇவ் வடிவமே
அழிவுறாப் பதிவடி வாமாறே.

உரை : சிவபோகம் நிறைந்த திருச்சிற்றம்பலத்தின்கண் எழுந்தருளி, உயிர்கட்கு அருள் பெருகும் திருக்கூத்தினைச் செய்கின்ற பெருவாழ்வையுடைய சிவபெருமானே! புதுமை மிகுந்த மேலும் கீழும் நடுவுமாகிய எங்கும் விளக்கமுற நிலவுகின்ற இனிய நண்பனே! அடியவனாகிய என்னுடைய தவம் நிறைந்த விண்ணப்பத்தை அழகிய செவிகளில் ஏற்று உலகில் பிறக்கும் தன்மை நிறைந்த இவ்வுடம்பே அழிவில்லாத சிவ வடிவமாகுமாறு அருள் புரிந்தாய்; ஆதலால் உனக்கு யான் என்ன கைம்மாறு செய்வேன். எ.று.

திருச்சிற்றம்பலம் சிவஞான நலம் விளங்கும் அருளிடமாதலால் அதனை, "சிவம் கனிந்த சிற்றம்பலம்" என்றும், அதன்கண் எழுந்தருளி ஞான நடம் புரிந்து ஆன்மாக்கட்கு ஞான போகப் பெருவாழ்வை அருளுகின்றான் என்பது பற்றிக் கூத்தப் பெருமானை, "சிவம் கனிந்த

சிற்றம்பலத்து அருள் நடம் செய்கின்ற பெருவாழ்வே'' என்றும் போற்று கின்றார். இவ்வுலகில் மேல், நடு, கீழ் ஆகிய மூன்று நிலைகளிலும் நீக்கமற நின்று, புத்தின்பம் விளங்க அருளுதலால், ''நவம் கனிந்த மேல் நிலை நடு விளங்கிய நண்பனே'' என்று நவில்கின்றார். சிவ நினைவும் சிவ மொழியும் செயலும் மேற்கொண்டு சிவன்பால் விண்ணப்பம் செய்வ தால், ''அடியேன்தன் தவம் கனிந்ததோர் விண்ணப்பம்'' என்றும், அதனை அருளோடு ஏற்றுக் கொண்டு தமக்குச் சிவஞான வடிவு எய்துதற் குரிய தகுதியினை வெளிப்படுப்பாராய், ''அழிவுறுப் பதிவடிவாமாறு அருள் புரிந்தாய்'' என்றும் தெரிவித்து மகிழ்கின்றார். உலகில் தாம் கொண்டுறையும் உடம்பு பிறப்பிறப்புக்களையுடைய தன்மை அமைந்த தாகலின், ''பவம் கனிந்த இவ்வடிவம்'' என்று குறிக்கின்றார். இவ்வுடம்பை விட்டு இறந்து பெறப்படுவதன்றி இவ்வுடம்பே இறவாத் தன்மையுற்று ஞான வடிவம் பெறுவது தேர்ந்து, ''இவ்வடிவமே அழிவுறுப் பதி வடிவாமாறு அருள் புரிந்தாய்'' என்று விளம்புகின் றார்.

இதனால், அழிவுறு ஞான வடிவம் எய்துமாறு, இறைவன் தனக்கருள் புரிந்தமை தெரிவித்தவாறும். இனி வரும் பாட்டுக்கள் தோறும் இதுவே கருத்தாக உரைத்துக் கொள்க. (1)

**3853.** **விளங்கு கின்றசிற் றம்பலத்**
**தருள்நடம் விளைக்கின்ற பெருவாழ்வே**
**களங்க மில்லதோர் உளநடு**
**விளங்கிய கருத்தனே அடியேன் நான்**
**விளம்பி நின்றதோர் விண்ணப்பம்**
**திருச்செவி வியந்தருள் புரிந்தாயே**
**உளங்கொள் இவ்வடி விம்மையே**
**மந்திர ஒளிவடி வாமாறே.**

**உரை :** ஞான நலம் விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் அருட் கூத்தாடுகின்ற பெருவாழ்வு அருளும் சிவபெருமானே! குற்ற மில்லாத மனத்தின்கண் விளங்குகின்ற தலைவனே! அடியவனாகிய யான் மனத்தால் விரும்புகின்ற இவ்வுடம்பே இப்பிறவியிலேயே மந்திர ஒளி நிறைந்த உடம்பாகுமாறு வாய் திறந்து ஓதி நிற்கிற எனது விண்ணப்பத்தைச் செவி நிரம்பக் கேட்டு உனது திருவருளை நல்கினையா தலால் இதற்கு யான் என்ன கைம்மாறு செய்வேன். எ.று.

ஞான நலம் விளங்குவது பற்றித் திருச்சிற்றம்பலத்தை, ''விளங்கு கின்ற சிற்றம்பலம்'' என்றும், அதன்கண் ஆன்மாக்கட்கு உய்தி எய்தும் பொருட்டுத் திருக்கூத்து இயற்றுவது பற்றிச் சிவனை, ''அருள் நடம் விளைக்கின்ற பெருவாழ்வே'' என்றும் போற்றுகின்றார். குற்றமில்லாத தூய உள்ளத்தினைக் கோயிலாகக் கொண்டு அருளொளி செய்வது பற்றி, ''களங்க மில்லதோர் உளநடு விளங்கிய கருத்தனே'' என்று துதிக்கின் றார். இப்பிறப்பில் யான் விரும்பிப் பேணுகின்ற இவ்வுடம்பு இப்பிறப்பிலேயே சிவமந்திரத்தின் ஒளி நிறைந்த மந்திர தேகமாகுமாறு

எனக்கு வழங்கியருளினாய் என்று கூறுவாராய், "உளங் கொள் இவ்வடிவு இம்மையே மந்திர ஒளி வடிவாமாறு" என்று வியந்து அருள் புரிந்தாய் என்று விளம்புகின்றார். (2)

3854. விஞ்சு கின்றசிற் றம்பலத்
தருள்நடம் விளக்கின்ற பெருவாழ்வே
எஞ்சல் அற்றமா மறைமுடி
விளங்கிய என்னுயிர்த் துணையேநான்
அஞ்சல் இன்றியே செய்தவிண்
ணப்பம்ஏற் றகங்களித் தளித்தாயே
துஞ்சும் இவ்வுடல் அழிவுறா
தோங்குமெய்ச் சுகவடி வாமாறே.

**உரை:** *திருவருள் நலத்தால் மேன்மை யுறுகின்ற திருச்சிற்றம்* பலத்தின்கண் எழுந்தருளி அருட் கூத்தியற்றும் வகையால் ஆன்மாக் கட்கு இன்பப் பெருவாழ்வு நல்கும் பெருமானே! குறைவ தில்லாத வேதத்தின் உச்சியில் விளங்குகின்ற என் உயிர்த் துணைவனே! யான் நெஞ்சில் சிறிதும் அச்சமின்றிச் செய்து கொண்ட விண்ணப்பத்தை ஏற்றருளி இறந்து படும் இயல்பினதாகிய எனது உடம்பு அழிவுறுதலின்றி உயர்கின்ற மேன்மையான இன்ப உடம்பாகுமாறு மனமகிழ்ந்து எனக்குத் தந்தருளினாய்; இதற்கு யான் என்ன கைம்மாறு செய்வேன். எ.று.

உலகில் பெறலாகும் நன்பொருள் எல்லாவற்றினும் மிக்க தென்பது பற்றி, "விஞ்சுகின்ற சிற்றம்பலம்" என்றும், அங்கு நிகழ்த்தும் திருக்கூத்து ஆன்மாக்கட்குப் பெருநலத்தை நல்குவ தென்பது பற்றி, "அருள் நடம் விளக்கின்ற பெருவாழ்வே" என்றும் புகழ்கின்றார். வேதங்களின் முடிபொருளாய் ஒரு நலக்குறைவு மில்லதாய் விளங்கு கின்றமை தோன்ற, "எஞ்சலற்ற மாமறைமுடி விளங்கிய துணையே" என்றும், உலகில் ஆன்மாக்கட்கு உயிர்க்குயிராகும் பெருந் துணையாய்ப் பிறங்குவது விளங்க, "என்னுயிர்த் துணையே" என்றும் ஏத்துகின்றார். வேண்டப்படும் பொருளின் அருமை பெருமைகளையும் தமது சிறுமையை யும் எண்ணி நெஞ்சில் சிறிதும் அச்சமின்றிக் கேட்பதனால், "அஞ்ச லின்றியே செய்த விண்ணப்பம்" எனவும், இதனைச் செவிகளில் ஏற்று அருள் செய்தமையைப் பாராட்டி, "விண்ணப்பம் ஏற்று அகங் களித்து அளித்தாய்" எனவும் வியந்து உரைக்கின்றார். தாம் பெற்றுள்ள உடம்பின் இயல்பு இது வென்றற்கு, "துஞ்சும் இவ்வுடல்" என்றும், தான் பெற விரும்பும் ஞான வுடம்பை, "மெய்ச்சுக வடிவம்" என்றும் மொழிகின்றார். (3)

3855. ஓங்கு கின்றசிற் றம்பலத்
தருள்நடம் ஒளிர்கின்ற பெருவாழ்வே
தேங்கு லாவிய தெள்ளமு
தேபெருஞ் செல்வமே சிவமேஎன்

பாங்க னேன்மொழி விண்ணப்பம்
திருச்செவி பதித்தருள் புரிந்தாயே
ஈங்கு வீழுடல் என்றும்வீ
ழாதொளிர் இயல்வடி வாமாறே.

**உரை :** ஞான ஒளி கொண்டு உயர்ந்தோங்குகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் விளங்கி ஆன்மாக்கட்குப் பெருவாழ்வு நல்குகின்ற பெருமானே! இனிமை பொருந்திய தெளிந்த அமுது போன்றவனே! பெருமை பொருந்திய அருட் செல்வமாகியவனே! சிவபெருமானே! நின் பக்கலிருந்து தொண்டு புரியும் யான் சொல்லுகின்ற விண்ணப்பத்தை உன்னுடைய அருட் செவிகளி லேற்று இவ்வுலகில் இறந்து வீழுதற்குரிய என்னுடம்பு எக்காலத்தும் இறந்து படாத ஞான ஒளி திகழும் உடம்பாகும்மாறு அருள் புரிந்தாய்; இதற்கு யான் என்ன கைம்மாறு செய்வேன். எ.று.

ஞானப் பெருமையால் மிக்குயர்ந்த தென்பதற்கு, "ஓங்குகின்ற சிற்றம்பலம்" என்றும், அதன்கண் நின்று ஞானத்திரு நடம் புரிந்து கண்டு பரவும் உயிர்கட்கு இன்பப் பெருவாழ்வு அருளுவது பற்றிச் சிவபெருமானை, "அருள்நடம் ஒளிர்கின்ற பெருவாழ்வே" என்றும் துதிக்கின்றார். ஞானத் திருவருள் அமுதம் இனிமையும் தெளிவு முடையதாதலால், "தேங்குலாவிய தெள்ளமுதே" எனவும், என்றும் குறையாத பேரருட் செல்வ முடையதாதலால், "பெருஞ் செல்வமே சிவமே" எனவும் பேசுகின்றார். சிவநெறிக்கண் நின்று திருவருள் ஞானத்தை விரும்பும் தொண்டன் என்பது பற்றி வடலூர் வள்ளல் சிவனை நோக்கி, "நின் பாங்கனேன்" என்று குறிக்கின்றார். வீழுடல் - இறந்து படும் உடம்பு. இயல் வடிவம் - ஞான வடிவம். (4)

**3856.** இலங்கு கின்றசிற் றம்பலத்
தருள்நடம் இடுகின்ற பெருவாழ்வே
துலங்கு பேரருட் சோதியே
சோதியுள் துலங்கிய பொருளேஎன்
புலங்கொள் விண்ணப்பம் திருச்செவிக்
கேற்றருள் புரிந்தனை இஞ்ஞான்றே
அலங்கும் இவ்வுடல் எவற்றையும்
அழிவுறா அருள்வடி வாமாறே.

**உரை :** ஞான ஒளி விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் அருட் கூத்தை இயற்றுகின்ற பெருவாழ்வுடைய சிவபெருமானே! எங்கும் விளங்குகின்ற பெரிய அருட் சோதியே! சோதிக்குள் சோதியாய் விளங்குகின்ற பரம்பொருளே! என் மனத்தின்கண் கொண்டு செய்யும் விண்ணப்பத்தைச் செவி குளிரக் கேட்டு, இப்பிறப்பிலேயே அசைந்து வீழ்ந்து மாயும் எனது இவ்வுடம்பு எக்காலத்தும் அழியாத நிலைமையினை யுடைய அருள் உடம்பாகுமாறு எனக்கு அருள் புரிந்தாய்; இதற்கு யான் என்ன கைம்மாறு செய்வேன். எ.று.

பொன்னும் மணியும் இழைக்கப் பெற்று நல்ல ஒளி விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் திருக்கூத் தாடுகின்ற பெருமானுதலால், "இலங்குகின்ற சிற்றம்பலத்து அருள் நடம் புரிகின்ற பெருவாழ்வே" என்று ஏத்துகின்ருர். திருவருள் சோதி வடிவினதாதலால் அதுவே தமக்கு ஒளியாகவும் அந்த ஒளிக்குள் விளங்கும் ஒளிப் பொருளாய்ச் சிவம் விளங்குதலின், "துலங்கு பேரருள் சோதியே" என்றும், "சோதியுள் துலங்கு பொருளே" என்றும் துதிக்கின்ருர். மனத்தின்கண் நன்கு எண்ணிச் செய்கின்ற விண்ணப்பமாதல் விளங்க, "புலங்கொள் விண்ணப்பம்" என்றும், தமக்கு அருள் புரிந்ததனைத் தெளிந்து உரைக்கின்ருராதலால், "திருச்செவிக்கு ஏற்று அருள் புரிந்தனை" என்றும் தெரிவிக்கின்ருர். அலங்குதல் - அசைதல். முதுமை எய்திய உடம்பு அசைவுற்று வீழ்தல் இயல்பாதலால் தமது உடம்பை, "அலங்கும் இவ்வுடல்" என்று கூறுகின்ருர். என்றும் என்பது எற்றையும் என வந்தது. அருளுடம்பு என்றும் பொன்ருத பெருமை வாய்ந்ததாதலால், "அழிவுரு அருள் வடிவு" என்று அறிவிக்கின்ருர். (5)

**3857.** **சிறந்த பேரொளித் திருச்சிற்றம்**
**பலத்திலே திகழ்கின்ற பெருவாழ்வே**
**துறந்த பேருளத் தருட்பெருஞ்**
**சோதியே சுகப்பெரு நிலையேநான்**
**மறந்தி டாதுசெய் விண்ணப்பம்**
**திருச்செவி மடுத்தருள் புரிந்தாயே**
**பிறந்த இவ்வுடல் என்றும்இங்**
**கழிவுருப் பெருமைபெற் றிடுமாறே.**

**உரை :** சிறப்புடையதாகிய மிகுந்த அருளொளியுடைய திருச்சிற்றம்பலத்திலே விளங்குகின்ற பெருவாழ்வுடைய பெருமானே! உலகியற் பற்றுக்களைத் துறந்த பெரியோர்களின் உள்ளத்தில் ஒளிர்கின்ற அருட் பெருஞ் சோதியால் விளைகின்ற ஞான சுகத்தைத் தருகின்ற பெரு நிலையை யுடைய பெருமானே! உன்னை மறவாது செய்கின்ற என்னுடைய விண்ணப்பத்தைச் செவிகளில் ஏற்றருளி மண்ணுலகில் பிறந்து வளர்கின்ற என்னுடைய உடம்பு இவ்வுலகில் எப்பொழுதும் அழியாது நிலைக்கும் பெருமையைப் பெறுமாறு எனக்கு அருள் புரிந்தாய்; ஆதலால் உன் திருவருளுக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன். எ.று.

மங்குதலின்றிப் பெருகுகின்ற ஒளி கொண்டு திகழ்வது பற்றி "சிறந்த பேரொளித் திருச்சிற்றம்பலம்" என்றும், அங்கே எப்பொழுதும் எழுந்தருளுவது பற்றி, "திகழ்கின்ற பெருவாழ்வே" என்றும் சிறப்பிக்கின்ருர். ஒட்டுப் பற்றின்றி உலகைத் துறந்த அருளாளருடைய உள்ளத்தின்கண் விளங்குவது பற்றித் திருவருள் ஞானத்தை, "துறந்த பேருளத்து அருட் பெருஞ் சோதி" என்றும், அதனுல் சிவ போகத்தை நல்குதல் விளங்க, "சுகப் பெருநிலையே" என்றும், சிவபெருமானைப் பாராட்டுகின்ருர். எப்போதும் மறத்தலின்றி இறைவனிடம் விண்ணப்பம் செய்யும் திறம் தோன்ற, "மறந்திடாது செய் விண்ணப்பம்" எனவும், இறவாப்பெருமையுற்ற உடம்பு பெற்று இன்புறுமாறு அருளியது புலப்பட,

"பிறந்த இவ்வுடல் என்றும் இங்கு அழிவுறுப் பெருமை பெற்றிடுமாறே" எனவும் விளம்புகின்றார். (6)

**3858.** **வயங்கு கின்றசிற் றம்பலந்**
**தன்னிலே வளர்கின்ற பெருவாழ்வே**
**மயங்கு றுதமெய் அறிவிலே**
**விளங்கிய மாமணி விளக்கேஇங்**
**கியங்கு சிற்றடி யேன்மொழி**
**விண்ணப்பம் ஏற்றருள் புரிந்தாயே**
**தயங்கும் இவ்வுடல் எற்றையும்**
**அழிவுறுத் தனிவடி வாமாறே.**

உரை : சிவஞானிகளின் சித்தத்தில் விளக்கமுறுகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் வளர்ந்தருளும் சிவபோகச் செல்வ வாழ்வையுடைய கூத்தப் பெருமானே! மயக்கமில்லாத ஞானிகளின் மெய்யுணர்வில் விளங்குகின்ற மாணிக்க மணியின் நிறத்தையுடைய விளக்கமே! இவ்வுலகில் திரிகின்ற அடியேனுடைய விண்ணப்பத்தை ஏற்றருளி இன்ப துன்ப நுகர்வுகளால் தளர்கின்ற எனது இவ்வுடல் என்றும் அழிவுறாத ஒப்பற்ற தனி வடிவமாகுமாறு எனக்கு அருள் புரிந்தாய்; உனக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன். எ.று.

வயங்குதல் - விளங்குதல். ஆன்மாக்கட்குத் திருவருள் ஞான இன்பப் பெருவாழ்வு நல்குபவனாதலால் சிவனை, "பெருவாழ்வே" என்றும், ஐயம் திரிபுகளால் கலக்கமுறாத மெய்யுணர்வு உடையோரது ஞான நிலையை, "மயங்குறாத மெய்யறிவு" என்றும், மெய்யுணர்ந்த ஞானிகளின் உள்ளத்தில் ஞான ஒளியாய் விளங்குவது பற்றி, "மயங்குறாத மெய்யறிவிலே விளங்கிய மணிவிளக்கே" என்றும் போற்றுகின்றார். மண்ணுலகில் பல இடங்கட்கும் சென்று திரிந்து சிறுமை அடைவது பற்றி, "இங்கு இயங்கு சிற்றடியேன்" என்று தம்மைக் குறிக்கின்றார். உலகியல் நலங்களை விரும்பி வருந்தி மெலிவது பற்றித் தனது உடலை, "தயங்கும் இவ்வுடல்" என்றும், அழியாப் பேருடம்பாகுமாறு வேண்டுதலின் அதனை, "அழிவுறுத் தனிவடிவு" என்றும் குறிக்கின்றார். (7)

**3859.** **தீட்டு கின்றசிற் றம்பலந்**
**தன்னிலே திகழ்கின்ற பெருவாழ்வே**
**காட்டு கின்றதோர் கதிர்நடு**
**விளங்கிய கடவுளே அடியேன்நான்**
**நீட்டி நின்றதோர் விண்ணப்பம்**
**திருச்செவி நிறைத்தருள் புரிந்தாயே**
**பூட்டும் இவ்வுடல் எற்றையும்**
**அழிவுறுப் பொன்வடி வாமாறே.**

உரை : அழகுறப் புனைப்படுகின்ற திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளி விளங்குகின்ற பெருவாழ்வுடைய பெருமானே! கண்களால்

காணப்படுகின்ற ஒளிப் பொருள்களுக்கு உட்பொருளாய் விளங்குகின்ற கடவுளே! அடியவனுன யான் நெடிது நின்று செய்கின்ற விண்ணப்பத்தைத் திருச்செவிகளில் ஏற்று அழகிய உடைகளாலும் பூணுரங்களாலும் அழகுறுத்தப்படும் இவ்வுடல் எப்போதும் என்றும் பொன்ருமல் பொன் வடிவம் எய்துமாறு அருள் புரிந்தாயாதலால் நான் என்ன கைம்மாறு செய்வேன். எ.று.

தீட்டுதல் - அழகுறப் புனைதல். திருநாவுக்கரசரும் திருச்சிற்றம் பலத்தைப் "பொன்னின் எழுதி வேய்ந்த சிற்றம்பலம்" என்று புகழ்வது காண்க. தனது ஒளியினுல் பொருட்களை மக்கள் காணுமாறு செய்தலால், "காட்டுகின்ற கதிர்" என்றும், கதிர் விட்டொளிரும் ஒளிப் பொருள் களுக்கு உள்ளொளியாய் உறுவது பற்றி இறைவனை, "கதிர் நடு விளங்கிய கடவுளே" என்றும், தமது விண்ணப்பத்தை நீட்டித்து உரைப்பது பற்றி, "நீட்டி நின்றதோர் விண்ணப்பம்" என்றும் உரைக் கின்ருர். தூய அழகிய உடைகளாலும் பொன்னுல் செய்த அணிகலன் களாலும் புனைந்து அழகு செய்யப்படுவது பற்றி மக்களுடம்பை, "பூட்டும் இவ்வுடல்" எனவும், ஞான ஒளி பெற்ற · வுடம்பு பொன்னிறம் பெறுதலால், "பொன் வடிவாமாறே" எனவும் விளம்புகின்ருர். (8)

**3860.** **தடையி லாதசிற் றம்பலந்**
**தன்னிலே தழைக்கின்ற பெருவாழ்வே**
**கடையி லாப்பெருங் கதிர்நடு**
**விளங்கும்ஓர் கடவுளே அடியேன்நான்**
**இடைவு றுதுசெய் விண்ணப்பம்**
**திருச்செவிக் கேற்றருள் புரிந்தாயே**
**புடையின் இவ்வுடல் எற்றையும்**
**அழிவுருப் பொன்வடி வாமாறே.**

**உரை :** கதவுகளால் தடுக்கப் படுதலில்லாத சிற்றம்பலத்தின்கண் எழுந்தருளி விளங்குகின்ற பெருவாழ்வருளும் பெருமானே! ஒடுங்குத லில்லாத பெரிய ஒளியின் நடுவில் விளங்கும் ஒப்பற்ற கடவுளே! அடியேனுகிய நான் இடைவிடாது செய்கின்ற விண்ணப்பத்தை நின்னுடைய திருச்செவியின்கண் ஏற்று மண்ணுலகில் உலவும் எனது இவ்வுடல் என்றும் பொன்றுதலில்லாத பொன் உடலாகுமாறு அருள் புரிந்தாய்; ஆதலால் யான் இதற்கு என்ன கைம்மாறு செய்வேன். எ.று.

ஏனைக் கோயில்கள் போலக் கதவுடை வாயில்களால் தடைப்படுதல் இல்லாததாகலின், "தடையில்லாத சிற்றம்பலம்" என்றும், அதன்கண் எழுந்தருளித் தன்னை நினைந்து கண்டு வழிபடுபவர்க்கு இன்பப் பெரு வாழ்வு அளிக்கும் பெருமானுவது விளங்க, "தழைக்கின்ற பெருவாழ்வே" என்றும் புகழ்கின்ருர். ஒடுங்குதலில்லாத திருவருட் பேரொளியின் நடுவில் விளங்குகின்ற அருட் பெருங் கடவுளாதல் பற்றி, "தடை யில்லாப் பெருங் கதிர் நடு விளங்குமோர் கடவுளே" என்று போற்றுகின் ருர். எப்பொழுதும் விண்ணப்பம் செய்து கொண்டிருப்பது விளங்க, "இடையருது செய் விண்ணப்பம்" என்று சொல்லுகின்ருர். இடைவு -

இடையறவு படுதல். பூமியைக் குறிக்கும் புடவி என்னும் சொல் எதுகை நோக்கிப் புடைவி என வந்தது. ஞான வுடம்பினைப் பொன் வடிவு எனப் புகல்கின்றார். (9)

**3861.** **கையின் நெல்லிபோல் விளங்குசிற்**
**றம்பலங் கலந்தருள் பெருவாழ்வே**
**மெய்யி லேவிளைந் தோங்கிய**
**போகமே மெய்ப்பெரும் பொருளேநான்**
**ஐய மற்றுரைத் திட்டவிண்**
**ணப்பம்ஏற் றளித்தனை இஞ்ஞான்றே**
**செய்யும் இவ்வுடல் என்றுமிங்**
**கழிவுறாச் சிவவடி வாமாறே.**

**உரை :** அங்கையில் உள்ள நெல்லிக் கனி போல் யாவரும் காண விளங்கும் சிற்றம்பலத்து எழுந்தருளுகின்ற, பெருவாழ்வை யுடைய பெருமானே! மெய்ம்மை நெறியில் விளைந்து சிறக்கின்ற சிவபோகமே! மெய்ம்மையான பெரிய பொருளே! நான் சந்தேக விபரீதமின்றி எடுத்துரைத்த விண்ணப்பத்தை ஏற்றருளிப் பிரமனால் செய்யப்பட்ட எனது இவ்வுடல் இப்பொழுதே என்றும் அழியாத சிவஞான வடிவம் எய்துமாறு அருள் புரிந்தாய்; இதற்கு என்ன கைம்மாறு யான் செய்வேன் எ.று.

அங்கையில் ஏந்திய நெல்லிக் கனி இனிது யாவரும் காண விளங்குவது போலச் சிற்றம்பலத்தின்கண் எழுந்தருளுகின்றானாதலால் சிவனை, "கையில் நெல்லி போல் விளங்கு சிற்றம்பலம் கலந்தருள் பெருவாழ்வே" என்று பாராட்டுகின்றார். மெய்ம்மை நெறியில் நின்று விளங்குகின்ற சிவ போகப் பொருளாதலால், "மெய்யிலே விளைந்து ஓங்கிய போகமே" எனவும், மெய்ம்மை வடிவாய் அமைந்துள்ளமை பற்றி, "மெய்ப் பெரும் பொருளே" எனவும் விளம்புகின்றார். கருதும் பயன் எய்துமோ எய்தாதோ என ஐயம் கொண்டு அலமராத உள்ளத்துடன் விண்ணப்பம் செய்வது தோன்ற, "ஐயம் அற்று உரைத்திட்ட விண்ணப்பம்" என்று சிறப்பிக்கின்றார். இஞ்ஞான்று - இக்காலம். சிவ வடிவு - சிவஞான வடிவம். பிரமனால் படைக்கப்படுவது பற்றித் தமது உடம்பை, "செய்யும் இவ்வுடல்" என்று எடுத்துரைக்கின்றார். (10)

திருச்சிற்றம்பலம்

# 38. பேரருள் வாய்மையை வியத்தல்

அஃதாவது, திருவருள் ஞானம் பெற்ற இன்பத்தால் அதனை வியந்து பாராட்டுவதாம்.

## கட்டளைக் கலித்துறை

3862. நன்றே தருந்திரு நாடகம்
நாடொறும் ஞானமணி
மன்றே விளங்கப் புரிகின்ற
ஆனந்த வார்கழலோய்
இன்றே அருட்பெருஞ் சோதிதந்
தாண்டருள் எய்துகணம்
ஒன்றே எனினும் பொறேன் அருள்
ஆணை உரைத்தனனே.

**உரை :** நன்மையை விளைவிக்கும் நாடகத்தை நாள்தோறும் அழகிய ஞான சபையில் ஆடி யருளுகின்ற இன்ப மயமான நீண்ட கழலணிந்த பெருமானே! ஒளி மயமான உனது திருவருட் பெரு ஞானத்தை எனக்குத் தந்து, என்னை ஆண்டருளுவாயாக; அந்த ஞானம் எய்துதற்கு ஒரு கணநேரம் தாமதமாகும் எனினும் என்னுல் பொறுக்க முடியாது; இதனை உனது திருவருள் ஆணையாகச் சொல்லுகின்றேன். எ.று.

ஞான சபையில் சிவபெருமான் நிகழ்த்துகின்ற திருக்கூத்து உயிர்களைப் பற்றி யிருக்கும் மன விருளைப் போக்கி ஆன்மாக்களை உய்தி பெறுவிக்கும் நலம் சிறந்ததாதலால், "நன்றே தரும் திருநாடகம்" என்றும், அது நிகழும் ஞானசபை பொன்னுலும் மணியாலும் அழகுற அமைந்திருத்தலால் அதனை, "ஞான மணிமன்று" என்றும், திருக்கூத்தாடுகின்ற திருவடி தரிசித்து அன்புடன் வணங்குகின்ற அன்பர்களுக்கு வினை மாசு போக்கி இன்பம் பெருகுவிக்கும் இயல்பினதாதலால், "ஆனந்த வார் கழலோய்" என்றும் புகழ்கின்ருர். கழல் - திருவடியில் அணிகின்ற வீர தண்டை. "கழலா வினைகள் கழற்றுவ கால வனம் கடந்த அழலார் ஒளியன காண்க ஐயாறன் அடித்தலமே" என்று திருநாவுக்கரசர் உரைப்பதனுல் வீர தண்டை அணிந்த இறைவன் திருவடியின் சிறப்பை அறியலாம். அருட் பெருஞ்சோதி - திருவருளாகிய பெருமை மிக்க சோதி மயமான சிவஞானம். அருட் பெருஞ் சோதி யாகிய சிவஞானமே தனக்கு இன்றியமையாது வேண்டப் படுவது என்பது புலப்பட, "இன்றே அருட் பெருஞ் சோதி தந்து ஆண்டருள்"

என்று முறையிடுகிருர். உலகியல் மயக்கம் மாசு படர்ந்து குற்றம் போல மனதை மூடிக்கொள்ளுவது பற்றி, "எய்து கணம் ஒன்றே எனினும் பொறேன்" என்று மொழிகின்ருர். தமது பொறுக்க மாட்டாமையை வற்புறுத்தற்கு, "அருள் ஆணை"யை எடுத்தோதுகிருர்.

இதனால், திருவருள் ஞானம் பெறுதற்கு ஒருகண நேரம் தாமத மெய்தினும் தனது பொறுக்க மாட்டாமையை வடலூர் வள்ளல் ஓதிய வாரும். (1)

**3863.** **தற்சோதி என்னுயிர்ச் சத்திய**
**ஜோதி தனித்தலைமைச்**
**சிற்சோதி மன்ருெளிர் தீபக**
**ஜோதிஎன் சித்தத்துள்ளே**
**நற்சோதி ஞானநல் நாடக**
**ஜோதி நலம்புரிந்த**
**பொற்சோதி ஆனந்த பூரண**
**ஜோதிஎம் புண்ணியனே.**

**உரை :** தன்னிற் ருனே எழுகின்ற ஒளியும், என் உயிரின்கண் நிலவும் உண்மை ஒளியும், ஒப்பற்ற தலைமை சான்ற ஞான ஒளியும், அம்பலத்தின்கண் ஒளிர்கின்ற சிவஞானத் தீப ஒளியும், என்னுடைய சிந்தையின் உண்ணின்று ஓங்குகின்ற நல்லொளியும், ஞானம் விரிகின்ற நல்ல நாடக ஒளியும், ஆன்மாவுக்கு நலம் செய்கின்ற அழகிய ஒளியும், நிறைந்த ஆனந்த ஒளியுமாகிய எங்கள் புண்ணிய மூர்த்தியே வணக்கம். எ.று.

தற்சோதி - பிறிது ஒன்றையும் பற்ருது தானே தனக்குப் பற்ருய் நின்று ஒளிரும் சிவசோதி. உயிர்க்குயிராய் நின்று உண்மை யுணர்வை எழுப்பி, விளங்கச் செய்தலின் சிவசோதியை, "என்னுயிர்ச் சத்திய சோதி" என்று சிறப்பிக்கின்ருர். தனக்குஒப்பதும் மிக்கதும் இல்லாமல் தலைமைப் பேரொளியாய் அமைவது பற்றிச் சிவபெருமானை, "தனித் தலைமைச் சிற்சோதி" எனவும், ஞான சபையின்கண் ஞான வுருவாய் நின்று திகழ்தலால், "மன்று ஒளிர் தீபக சோதி" எனவும், ஞான சபையிலே யன்றிச் சிந்திப்பார் சிந்தனைக்குள்ளும் சித்த ஒளியாய்த் திகழுமாறு விளங்க, "என் சித்தத்துள்ளே நற்சோதி" எனவும், ஞான நாடகம் புரியுமிடத்துத் தெளிந்த ஞான ஒளி தோன்றி எங்கும் பரவுதல் பற்றி, "ஞான நன்னாடக சோதி" எனவும், அச்சோதியைத் தரிசிப் பார்க்கு நலம் மிகுவித்தலின், "நலம் புரிந்த பொற் சோதி" எனவும், நிறைந்த ஆனந்தத்தை நல்குவது பற்றி, "ஆனந்த பூரண சோதி" எனவும் போற்றுகின்ருர். புண்ணியத் திருவுருவை உடையவனுதல் பற்றி, "என் புண்ணியனே" என்று போற்றுகின்ருர்.

இதனால், புண்ணிய மூர்த்தியாகிய சிவபெருமான் பல்வேறு வகையான சோதி வடிவங்கள் உற்று உயிர்கட்கு நலம் புரியும் திறம் தெரிவித்தவாரும். (2)

3864. திரைகண்ட மாயைக் கடல்கடந்
தேன் அருட் சீர்விளங்கும்
கரைகண் டடைந்தனன் அக்கரை
மேல்சர்க் கரைகலந்த
உரைகண்ட தெள்ளமு துண்டேன்
அருள்ஒளி ஓங்குகின்ற
வரைதண்ட தன்மிசை உற்றேன்
உலகம் மதித்திடவே.

உரை : திரை யிட்டது போல் அறிவை மறைக்கின்ற திரை போன்ற உலகியல் மாயையாகிய கடலைக் கடந்தொழிந்தேன்; நினது திருவருளின் சிறப்பு விளங்குகின்ற ஞான நிலையமாகிய கரையை அடைந்து விட்டேன்; அந்த ஞான நிலையமாகிய கரையின் மேல் புகழ் மிக்க இனிய சர்க்கரை கலந்த தெளிந்த அமுதத்தைப் பெற்றுண்டேன்; ஆங்கே அருளொளி எழுந்து விளங்குகின்ற சிவமாகிய மலையைக் கண்டு அதன் மேல் அறிஞர் உலகம் கண்டு என்னை நன்கு மதிக்குமாறு ஏறிக் கொண்டேன். எ.று.

ஆன்மாவின் ஞானக் கண்ணைத் திரை யிட்டது போல உலகியல் மாயை தோன்றி மறைப்பதால், "திரை கண்ட மாயைக்கடல் கடந்தேன்" என்றும், நீலக் கடல் போல் விரிந்திருக்கின்ற மாயையைக் கடந்த போது திருவருள் ஞான ஒளி திகழும் சிவஞான நிலை தோன்றக் கண்டு அதனை நெருங்கினேன் என்பாராய், "அருட் சீர் விளங்கும் கரை கண்டு அடைந்தனன்" என்றும், அந்த ஞான நிலையத்தில் தாம் பெற்ற ஞானச் சிறப்பை "அக்கரை மேல் சர்க்கரை கலந்த உரை கண்ட தெள்ளமுது உண்டேன்" என்றும், ஞான அமுதத்தை உண்டதனால் உளதாகிய ஞான வன்மையுற்று அவ்விடத்தே ஒளி மிக்கு உயர்ந்து நிற்கின்ற திருவருள் ஞானப் பொருளாகிய சிவமாகிய மலையைக் கண்டு அதன் மேல் ஏறினேன் என்பாராய், "அருளொளி ஓங்குகின்ற வரை கண்டு அதன் மிசை யுற்றேன்" என்றும், அதனால் ஞானிகளுடைய கூட்டமாகிய உலகம் என்னை நன்கு மதிக்கின்றது என்பாராய், "உலகம் மதித்திடவே" என்றும் இயம்புகின்றார்.

இதனால், ஞான நிலையத்தைக் கண்டு ஞானப் போகத்தை உண்டு சிவமாம் தன்மை எய்திய நலத்தை உரைத்தவாறும். (3)

3865. மனக்கேத மாற்றிவெம் மாயையை
நீக்கி மலிந்தவினை
தனக்கே விடைகொடுத் தாணவம்
தீர்த்தருள் தண்ணமுதம்
எனக்கே மிகவும் அளித்தருட்
சோதியும் ஈந்தழியா
இனக்கேண்மை யுந்தந்தென் உட்கலந்
தான்மன்றில் என்னப்பனே.

உரை : மனத்தின்கண் படிகின்ற குற்றங்களைப் போக்கி அறிவை மயக்குகின்ற கொடிய உலகியல் மாயையை நீக்கி ஆன்மாவைப் பற்றி யுள்ள வினைத் தொடர்புகளைக் கெடுத்து உள்ளத்தில் படிகின்ற ஆணவ விருளையும் போக்கிக் குளிர்ந்த ஞானமாகிய அமுதத்தை மிகுதியாக எனக் களித்து அருள் ஞான ஒளியையும் என்னுட் பரப்பி அழியாத சிவத் தொண்டர்களின் நட்பையும் எனக்குத் தந்து மன்றில் கூத்தாடு கின்ற எனக்கு அப்பனாகிய சிவபெருமான் என்னுட் கலந்து கொண்டான்; என்னே நான் பெற்ற பேறு. எ.று.

மனக்கேதம் - மனத்தின்கண் பல்வேறு நினைவுகளால் படிகின்ற மாசு. உலகியல் வாழ்வு தரும் மயக்கத்தை மாயை எனவும், எளிதில் நீக்க முடியாத அதன் கொடுமையைப் புலப்படுத்த, "வெம்மாயை" எனவும், மனம் மொழி மெய் என்ற மூன்று கருவிகளாலும் கணந்தோறும் தீட்டப் படுவது பற்றி, "மலிந்த வினை" எனவும், ஆன்ம உணர்வின்கண் படிந்து அறியாமையை விளைவிக்கும் மலத்தை ஆணவ மெனவும் குறிக்கின்றார். மனம் தூய்மையுற்று மாயையின் நீங்கி வினை மாசு துடைத்து ஆணவ விருளைப் போக்கிக் கொண்டவிடத்துச் சிவஞானம் தோன்றிப் பிறவி வெம்மையைத் தணித்து ஞான விளக்கம் தருதலின், "அருள் தண்ணமுதம் எனக்கே மிகவும் அளித்து அருட் சோதியும் ஈந்து அழியா இனக்கேண்மையும் தந்து என்னுட் கலந்தான்" என்று கூறுகின்றார். பெற்ற அருட் சோதி நீங்காவண்ணம் ஒழியாது உடனிருந்து துணை புரிதலின் கொண்டாரது கேண்மையை, "அழியா இனக் கேண்மை" என்று புகழ்கின்றார். அழியாமை - ஈண்டு நீங்காமை மேற்று.

இதனால், ஞான அமுதுண்டு, அருட் சோதி பெற்றுத் தொண்டர் கேண்மையும் எய்தியது தெரிவித்தவாறும். (4)

3866. **வாதித்த மாயை வினையா**
**ணவம்எனும் வன்மலத்தைச்**
**சேதித்தென் உள்ளம் திருக்கோயி**
**லாக்கொண்டு சித்திஎலாம்**
**போதித் துடம்பையும் பொன்னுடம்**
**பாக்கிநற் புத்தமுதும்**
**சாதித் தருளிய நின்னருட்**
**கியான்செயத் தக்கதென்னே.**

உரை : ஆன்ம வுணர்வோடு பிணங்குகின்ற மாயை, வினை, ஆணவம் எனப்படுகின்ற வலிமை மிக்க மும்மலங்களையும் போக்கி என்னுடைய உள்ளத்தையே தூய கோயிலாகக் கொண்டு ஞான சித்தி வகைகள் எல்லாவற்றையும் எனக்கு அறிவித்து எனது உடம்பையும் ஞானம் நிறைந்த பொன்னிற உடம்பாக்கி நல்ல புதுமையான ஞான வமுதத்தையும் எனக்குத் தந்தருளிய நின்னுடைய திருவருளுக்கு யான் செய்யத் தக்க கைம்மாறு யாதாம். எ.று.

அறியாமையைச் செய்யும் ஆணவ மலத்தையும், உலகு உடம்பு களைத் தந்து துன்பத்தில் அழுத்தும் மாயா மலத்தையும், மாயையைக்

கருவியாகக் கொண்டு செய்யப்படும் கர்ம மலத்தையும் போக்குதற்கு உயிர் வாழ்வு நாளும் இயங்கிய வண்ணமிருத்தலின், "வாதித்த மாயை வினை ஆணவம் எனும் மலம்" எனவும், இவற்றின் செயல் வகைகளை ஒடுக்கினாலன்றி ஆன்மாவுக்கு உறுதிப் பேறு எய்தாமை பற்றி, "வன்மலத்தை சேதித்து" எனவும் இயம்புகின்றார். மலம் நீங்கியவிடத்து உள்ளம் ஞான மணமுற்றுத் தூயதாய்த் துலங்குவதால், "உள்ளம் திருக்கோயிலாக் கொண்டு" என்று கூறுகிறார். இறைவன் மனமாகிய கோயிலுக்குள் எழுந்தருளி ஞானத்தால் பெறுதற்குரிய நலமனைத்தையும் உள்ளிருந்து உணர்த்துதலால், "உள்ளம் திருக்கோயிலாக் கொண்டு சித்தி எலாம் போதித்து" என்று புகல்கின்றார். மனம் சிவனுக்குத் திருக் கோயிலாகிய விடத்து மனத்தை உள்ளே கொண்டு நிற்கும் உடம்பு இயற்கை நிறம் நீங்கிச் சிவஞானப் பேரொளியால் பொன்னிறமும் ஞான வமுதமுமாகிய புத்தமுதத்தை உண்டு தேக்கெறிவது தோன்ற, "உடம்பையும் பொன்னுடம்பாக்கி நற்புத்தமுதம் சாதித்து அருளிய நின் அருளுக்கு" என்று விரித்துரைக்கின்றார்.

இதனால், தன் மனக்கோயிலில் இறைவன் எழுந்தருளி ஞானோப சேதம் செய்து உடம்பையும் பொன் உடம்பாக்கி அருளமுதம் தந்தருளிய செய்தியை விளம்பியவாறும். (5)

3867. செத்தார் எழுகெனச் சிந்தைசெய்
முன்னஞ் சிரித்தெழவே
இத்தா ரணியில் அருட்பெருஞ்
சோதி எனக்களித்தாய்
எத்தாலும் என்றும் அழியா
வடிவுதந் தென்னுள்நின்னை
வைத்தாய் மணிமன்ற வாணநின்
பேரருள் வாய்மையென்னே.

உரை : மணிகள் இழைத்த அம்பலத்தின்கண் எழுந்தருளுகின்ற பெருமானே! செத்தவர்கள் எழுவார்களாக என நினைப்பதற்கு முன்னமே நான் சிரித்து மகிழுமாறு இம்மண்ணுலகில் எனக்குத் திருவருள் ஞான மாகிய ஒளியை அளித்தருளினாய்; அதன் மேலும் எவ்வகையாலும் எக் காலத்தும் கெடாத ஞான வடிவு தந்து என்னுள் உன்னையே இடம் பெற வைத்தாய்; ஆதலால் உன்னுடைய பெரிய திருவருளின் மெய்ம்மையை என்னென்பது. எ.று.

மண்ணுலகில் உயிர் நீத்து இறந்தவர்கள் அதனை மீளப் பெற்று எழுவார்களாக என்று நினைக்கின்றேனாயினும் நினைப்பதற்கு முன்னமே அந்நிலை கைகூடப் பெற்று என் மனம் மகிழுமாறு எனக்கு உனது திருவருளாகிய ஒளியைத் தந்தருளினாய் என உரைப்பாராய், "செத்தார் எழுகெனச் சிந்தை செய் முன்னம் சிரித்தெழவே இத்தாரணியில் அருட் பெருஞ் சோதி எனக்கு அளித்தாய்" என்று கூறுகின்றார். மண்ணுலகில் செத்தவர்கள் மீள எழுவதில்லை என்பது பெரும்பாலும் உண்மையாயினும் இது நிகழுமாறு எனக்கு உனது அருட் பெருஞ் சோதியை அளித்தாய்

என்றற்கு, "இத்தாரணியில்" என்று விதந்து ஓதுகின்றார். தான் பெற்ற சிவஞான மயமான உடம்பு இத்தகையது எனச் சிறப்பித்தற்கு, "எத்தாலும் என்றும் அழியா வடிவு தந்து" என்றும், தமக்குள்ளே இறைவன் எழுந்தருளி யுள்ள தன்மையை வெளிப்படுத்தற்கு, "என்னுள் நின்னை வைத்தாய்" என்றும் மொழிகின்றார். இவ்வாறே சுந்தரமூர்த்தி களும், "எத்தாலும் மறவாதே நினைக்கின்றேன் மனத்து உன்னை வைத்தாய்" என்று கூறுவது காண்க. இறைவனை நேரிற் கண்டு கொண்டு வந்து தனக்குள் வைத்துக் கொள்வது ஆன்மாவிற்கு ஆகாத தொன்றாதலால், இறைவனே மனமுவந்து தானே வந்து தன்னுடலில் தங்குவதைக் குறிப்பிப்பாராய், "என்னுள் நின்னை வைத்தாய்" எனவும், வாத பித்த சிலேத்துமங்களாலாகிய உடம்பின் தன்மையை மாற்றி ஞான வுடம்பாலுலன்றி அவன் தன்னுள் புக மாட்டான் என்ற உண்மை விளங்க, "அழியா வடிவு தந்து என்னுள் நின்னை வைத்தாய்" எனவும் உரைக்கின்றார். இவ்வாறு உடம்பை ஞான மயமாக்கி அதனுட் புகுந்திருத்தல் இறைவனுடைய திருவருட் சிறப்பாதல் தோன்ற, "நின் பேரருள் வாய்மை என்னே" என்று பராவுகின்றார்.

இதனால், நமது உடம்பை ஞான வுடம்பாக்கி இறைவன் எழுந் தருளும் திறம் உரைத்தவாறும். (6)

3868. ஆக்கல்ஒன் றேதொழில் ஐந்தையும்
தந்திந்த அண்டபிண்ட
வீக்கம்எல் லாம்சென்றுன் இச்சையின்
வண்ணம் விளங்குகநீ
ஏக்கமு றேல்என றுரைத்தருட்
சோதியும் ஈந்தெனக்கே
ஊக்கம்எ லாம்உற உட்கலந்
தான்என் உடையவனே.

**உரை :** படைத்தல் என்ற தொழிலோடு அழித்தல், அளித்தல், அருளல், மறைத்தல் என்ற தொழில் வகை ஐந்தையும் தந்து இந்த அண்ணம் பிண்டம் என மிகைபட விரிந்து விளங்கும் அனைத்திலும் சென்று உன் விருப்பப்படிக் கலந்து விளங்குக; இது குறித்து இனி நீ ஏங்குதல் வேண்டாம் என மொழிந்தருளி அருள் ஞானமாகிய ஒளியை யும் எனக்குத் தந்து எல்லா வகையான ஊக்கங்களும் என்னுட் பொருந்த எனை யுடையவனாகிய சிவபெருமான் என்னுட் கலந்து கொண்டான். எ.று.

ஆக்கல், அழித்தல், அளித்தல், அருளல், மறைத்தல் என்ற ஐவகைத் தொழிலையும் புரிவது இறைவனுடைய அருட் செயலாகும். அதனை இறைவன் தனக்கு அளித்தான் என்பாராய், "ஆக்கல் ஒன்றே தொழில் ஐந்தையும் தந்து" எனவும், அகில உலகத்திலு முள்ள அண்ட பிண்டம் எனப்படும் பொருள் வகைகளில் கலந்தியங்கும்வண்ணம் தனக்கு அருள் பாலித்துள்ளான் என்பாராய், "இந்த அண்ட பிண்ட வீக்கம் எல்லாம் சென்று உன் இச்சையின் வண்ணம் விளங்குக" எனவும்,

இந்தப் பேராற்றல் தனக்கு எய்துமோ என எண்ணி ஏங்குதல் வேண்டா என்று அறிவுறுத்தினன் என்பாராய், "நீ ஏக்கமுறேல் என்று உரைத்து" எனவும் இயம்புகின்றார். ஏக்கமும் ஐயமும் தீரும் பொருட்டு அருள் ஞானத்தை வழங்கினன் என்றற்கு, "அருட் சோதியும் ஈன்று" என்றும், அதனால் தமக்குக் கலக்கமில்லாத ஊக்கமும் தெளிவும் உண்டாயின என உரைப்பாராய், "எனக்கே ஊக்கமெலாம் உற உட்கலந்தான்" என்றும், அவனுக்கும் தமக்குமுள்ள தொடர்பை விளக்குதற்கு, "என்னுடையவன்" என்றும் எடுத்துரைக்கின்றார்.

இதனால், ஐவகைத் தொழில் புரியும் ஆற்றலையும் அதற்கு இன்றியமையாத அருட் சோதியையும் இறைவன் தந்தருளினமை தெரிவித்தவாறும். (7)

**3869.** **என்னேஎன் மீதெம் பெருமான்**
**கருணை இருந்தவண்ணம்**
**தன்னேர் இலாத அருட்பெருஞ்**
**சோதியைத் தந்துலகுக்**
**கன்னே எனவிளை யாடுக**
**என்றழி யாதசெழும்**
**பொன்னேர் வடிவும் அளித்தென்**
**உயிரில் புணர்ந்தனனே.**

**உரை :** எங்கள் பெருமானாகிய சிவபிரான் தனக்கு ஒப்பில்லாத அருட் பெருஞ் சோதியாகிய திருவருள் ஞானத்தை எனக்குத் தந்து இவ்வுலகுக்குத் தாய் போல் தலையளி செய்து வாழ்க வென்று மொழிந்து அழிவில்லாத செழுமையான பொன்னிற மேனியைத் தந்து என் உயிர்க் குயிராய்க் கலந்து கொண்டான்; எளியவனாகிய என் மீது அப்பெருமான் செய்துள்ள கருணையை என்னென்பேன். எ.று.

அருட் பெருஞ் சோதியாகிய திருவருள் ஞானத்திற்கு நிகர் ஒன்று மில்லையாதலால் அதனை, "தன்னே ரில்லாத அருட் பெருஞ் சோதி" என்றும், அச்சிவ ஞானத்தால் எல்லா வுயிர்களிடத்தும் தாய் போல் அன்பு செய்யும் தன்மை தமக்கு உண்டானது விளங்க, "உலகுக்கு அன்னே என விளையாடுக" என்று உரைத்தருளினன் என்றும், அந்த ஞானத்தால் தமது மேனி பொன்னிறம் பெற்றமை விளங்க, "செழும் பொன்னேர் வடிவம் அளித்து" என்றும், முடிவில் அப்பெருமான் தன் உயிர்க்குயிராய்க் கலந்து கொண்டதை, "என் உயிரில் புணர்ந்தனன்" என்றும் புகல்கின்றார். அன்னை என்பது அன்னே என வந்தது.

இதனால், அருட் பெருஞ் சோதியைத் தந்து தனக்குப் பொன்னிற வடிவம் அருளியதை வியந்துரைத்தவாறும். (8)

**3870.** **அச்சோ என்என்று புகல்வேன்என்**
**ஆண்டவன் அம்பலத்தான்**
**எச்சோ தனையும் இயற்றாதென்**
**னுட்கலந் தின்னருளாம்**

மெய்ச்சோதி ஈந்தெனை மேனிலைக்
கேற்றி விரைந்துடம்பை
இச்சோதி ஆக்கி அழியா
நலந்தந்த விச்சையையே.

**உரை :** என்னை ஆண்டருளிய பெருமானும் அம்பலக் கூத்தனுமாகிய சிவபெருமான் எவ்வகையான சோதனைகளையும் செய்யாமல் என் மனத்தினுட் கலந்து கொண்டு இனிய தன்னுடைய திருவருள் ஞானமாகிய மெய்ம்மை ஒளியைத் தந்தருளி என்னையும் மேனிலையில் உயர்த்தி என் உடம்பையும் ஞான ஒளி யுடைய உடம்பாக விரைந்து செய்து கெடாத நன்மையைத் தந்தருளிய வித்தையை ஆ ஆ என்னென்று சொல்வேன். எ.று.

சிவத் தொண்டர்களின் வரலாற்றால் பல்வகைச் சோதனைகட்குப் பின்பே இறைவன் அருளிய திறம் தெரிகின்றமையின் தமக்கு அத்தகைய சோதனை ஒன்றுமின்றியே, பெருமான் அருள் புரிந்ததை உணர்கின்றமை புலப்பட, "எச்சோதனையும் இயற்றாது என்னுட் கலந்து" என்றும், பெற்ற திருவருள் ஞானத்தை, "இன்னருளாம் மெய்ச் சோதி" என்றும், அந்த ஞானத்தால் தாம் உள்ளத்தால் உயர்ந்தமை விளங்க, "எனை மேல் நிலைக்கு ஏற்றி" என்றும், தமது உடம்பு அருளொளி திகழும் பொன்னிற உடம்பாக்கிய சிறப்பை வியக்கின்றாராதலால், "உடம்பை இச்சோதியாக்கி அழியா நலம் தந்த விச்சை" என்றும் இயம்புகின்றார். தமது மேனியின்கண் உண்டாகிய பொன்னிற வொளியை வியந்து போற்றுகின்றாராதலின், "அச்சோ என்னென்று புகல்வேன்" என மொழிகின்றார்.

இதனால், அம்பலக் கூத்தனாகிய பெருமான் தமக்குத் திருவருள் ஞான ஒளி தந்து அழியா நலமருளிய வித்தையை எடுத்தோதியவாறும். (9)

**3871.** வாழிஎன் ஆண்டவன் வாழிஎங்
கோன்அருள் வாய்மைஎன்றும்
வாழிஎம் மான்புகழ் வாழிஎன்
நாதன் மலர்ப்பதங்கள்
வாழிமெய்ச் சுத்தசன் மார்க்கப்
பெருநெறி மாண்புகொண்டு
வாழிஇவ் வையமும் வானமும்
மற்றவும் வாழியவே.

**உரை :** என்னை ஆண்டு கொண்டவனும் எனக்குத் தலைவனுமாகிய சிவபெருமான் வாழ்க; அவனுடைய திருவருள் ஞானத்தின் மெய்ம்மை எக்காலத்தும் வாழ்க; அப்பெருமானுடைய புகழ் வாழ்க; எனக்கு நாதனாகிய அவனுடைய மலர் போன்ற திருவடிகள் வாழ்க; அப் பெருமான் அருளிய மெய்ம்மை சான்ற சுத்த சன்மார்க்கமாகிய பெரிய நெறி மாண்பு மிகுந்து வாழ்க; அவனது திருவருள் நிலவும் இம்மண்ணுலகமும் வானுலகமும் மற்றவைகளும் வாழ்க. எ.று.

சிவபெருமானை நினைந்து பெற்ற திருவருள் ஞானத்தைப் பெற்று இன்புறுதலால் அதனை நினைந்து பெறும் இன்ப மிகுதியால் வாழ்த்துகின்றாராதலின், "வாழி என் ஆண்டவன் வாழி என் கோன் அருள் வாய்மை" என்று வாழ்த்துகின்றார். அவர் அருளிய திருஞானத்தால் அவரது பெரும் புகழும் அவரது திருவடிச் சிறப்பும் பாராட்டலுற்று, "என்றும் வாழி எம்மான் புகழ் வாழி என் நாதன் மலர்ப்பதங்கள்" என்று கூறுகின்றார். திருவருள் ஞானத்தைப் பெற்று மகிழ்தற்குரிய நன்னெறியாதலால், "மெய்ச் சுத்த சன்மார்க்கப் பெருநெறி மாண்பு கொண்டு வாழி" எனவும், இறைவன் புகழும் அவருடைய சன்மார்க்கப் பெருநெறியும் நிலவுமிடமாதலின் மண்ணுலகும் விண்ணுலகுமாகிய வேறு பிற உலகங்களும் நிலைபெறுக என்பாராய், "வாழி இவ்வையமும் வானமும் மற்றவும் வாழியவே" என்று உரைக்கின்றார்.

இதனால், தாம் பெற்ற திருவருள் ஞானத்தையும் திருவருள் ஞான நெறியாகிய சுத்த சன்மார்க்கப் பெருநெறியையும் வடலூர் வள்ளல் வாழ்த்தி இன்புற்றவாறும். (10)

திருச்சிற்றம்பலம்

## 39. பொதுநடம் புரிகின்ற பொருள்

அஃதாவது, திருச்சிற்றம்பலத்தில் திருநடம் புரிகின்ற, சிவபெருமானைப் பொருளாகக் கொண்டு பாடுவது. இதன்கண் பாட்டுத் தோறும் பொதுநடம் புரிகின்ற பொருளை மகுடமாக வைத்துப் பாடுதலின் இது பொதுநடம் புரிகின்ற பொருள் என்னும் பெயரை யுடையதாயிற்று.

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3872. அருட்பெருஞ் சோதி அமுதமே அமுதம்
அளித்தெனை வளர்த்திட அருளாம்
தெருட்பெருந் தாய்தன் கையிலே கொடுத்த
தெய்வமே சத்தியச் சிவமே
இருட்பெரு நிலத்தைக் கடத்திஎன் றனைமேல்
ஏற்றிய இன்பமே எல்லாப்
பொருட்பெரு நெறியும் காட்டிய குருவே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

**உரை :** அருட் பெருஞ் சோதியாகிய அமுத மயமான பெருமானே! அருள் ஞான அமுதத்தை எளியேனை எனக்குத் தந்து, என்னை அருள் நெறியில் வளர்த்தற் பொருட்டுத் திருவருளாகிய தெளிந்த பெருமை மிக்கத் தாயின் கையிலே என்னைக் கொடுத் தருளிய தெய்வமே! நிலையாய சிவ பரம்பொருளே! தமது மாயையால் இருள் செய்கின்ற பெரிய நிலவுலக வாழ்வைக் கடந்து வெல்வாயாக என்று என்னைச் சிவஞான மேல் நெறியில் உயர்த்தி யருளிய இன்பப் பொருளே! பொருளாகக் கருதப்படும் பெருநெறிகள் பலவற்றையும் அறிவித் தருளிய ஞான குருவே! திருச்சிற்றம்பலத்தில் நடம் புரிந்தருளும் பரம்பொருளே வணக்கம். எ.று.

திருவருள் ஞானம் பெருமை சான்ற ஒளியாதலின் அதனை "அருட் பெருஞ் சோதி" என்றும், அது தன்னைப் பெறுவார்க்கு அமுதம் போல் இன்பம் செய்தலின், "அமுதமே" என்றும் போற்றுகின்றார். இறைவன் திருவருளை அருட் சத்தி என்றும், அது இறைவனுக்குத் தேவி என்றும், அந்த அருட் சத்தியால் உயிர்கட்கு வாழ்வு உண்டாதலால் உயிர்களை வளர்க்கும் தாய் என்றும் ஞான நூல்கள் உரைத்தலால், என்னை அமுதம் அளித்து வளர்த்தற் பொருட்டு, "அருளாம் தெருட் பெருந் தாய் தன் கையிலே கொடுத்த தெய்வமே" என்று சிறப்பிக்கின்றார். அருட் சத்தி தெளிந்த ஞான வடிவாய் உலகெலாம் படைத்தளிக்கும் பெருமை யுடையதாய் விளங்குவது பற்றி, "அருளாம் தெருட் பெருந் தாய்"

எனவும், உலக வாழ்வால் உயிர்கட்கு ஞானம் எய்துவித்தல் பற்றி வாழ்விக்கும் அருட் சத்தியின் செயலை, "அமுதம் அளித்தெனை வளர்த்திட" எனவும் குறித்து மொழிகின்றார். உயிர்கட்கு அமுதமாகிய ஞான மளித்து வளர்த்தல் வேண்டி அருளாகிய தாய் கையிலே சிவபெருமான் அவ்வுயிர்களைக் கொடுத் துள்ளான் என்பது குறிப்பு. என்றும் உள்ளதாதலின் சிவ பரம்பொருளை, "சத்தியச் சிவமே" என்று துதிக்கின்றார். உலகியல் வாழ்வு மாயா காரியமாய் உயிர்களை அனாதியே மறைத்திருக்கும் மலப்பிணிப்பைப் போக்குதற்கு மாயம் செய்யும் உலகியல் வாழ்வைத் தந்து அதனை வாழ்ந்து கடந்து உய்தி பெறுக என்று இறைவன் படைத்தளித்தலின், "இருட் பெருநிலத்தைக் கடத்தி என்று என்னை மேலேற்றிய இன்பமே" என இயம்புகின்றார். இருளைச் செய்யும் மாயையின் காரியமாதலின் நிலவுலக வாழ்வை, "இருட் பெரும் நிலம்" என எடுத்தோதுகின்றார். நிலவுலக வாழ்வை வாழ்வாங்கு வாழ்ந்து இன்ப நிலை பெற வேண்டுதலின், "நிலத்தைக் கடத்தி என்று என்றனை மேலேற்றிய இன்பமே" என வுரைக்கின்றார். கடத்தி என்ற விடத்து, என்று என்னும் சொல் எஞ்சி நின்றது. இருள் செய்யும் மாயா காரியமாகிய உலகியலைக் கடந்தவிடத்து எய்துவது இறவாப் பேரின்ப மாதலின், "மேல் ஏற்றிய இன்பமே" என்று இசைக்கின்றார். உயிர்கட்கு உய்தி காட்டுவன எனக் காலந்தோறும் சான்றோர்கள் தோன்றிப் பல உண்மை நெறிகளை யுணர்த்தி இருக்கின்றாராதலால், அவற்றின் வன்மை மென்மைகளை அறிந்து ஏற்ற நெறியை மேற்கொள்ளுதற்கு நன்ஞானம் வேண்டுதலின், அதனையும் இறைவன் குருமுதல்வனாய் எழுந்தருளி உபதேசித்தல் பற்றி, "எல்லாப் பொருட் பெருநெறியையும் காட்டிய குருவே" என்று மொழிகின்றார். சான்றோர் காட்டிய நெறிகள் பலவும் அவ்வக்காலத்திற் கேற்ப வேண்டிய மெய்ப்பொருளையும் மெய்ந்நெறியை யும் காட்டுவனவாதலால் அவற்றை, "எல்லாப் பொருட் பெருநெறியும்" எனப் புகல்கின்றார்.

இதனால், இறைவன் உயிர்களை அருட் சத்தியாகிய தேவி கையில் தந்து, உலகியல் வாழ்வு நல்கும் ஞானமாகிய அமுதத்தை ஊட்டி, உலகில் வாழ்வாங்கு வாழ்ந்து உய்தி பெற உதவிய செம்மை நெறி விளக்கியவாறும். (1)

**3873.** **சித்தெலாம் வல்ல சித்தனே ஞான**
**சிதம்பர ஜோதியே சிறியேன்**
**கத்தெலாம் தவிர்த்துக் கருத்தெலாம் அளித்த**
**கடவுளே கருணையங் கடலே**
**சத்தெலாம் ஒன்றே சத்தியம் எனஎன்**
**தனக்கறி வித்ததோர் தயையே**
**புத்தெலாம் நீக்கிப் பொருளெலாம் காட்டும்**
**பொதுநடம் புரிகின்ற பொருளே.**

**உரை :** அம்பலத்தில் நடம் புரிகின்ற பரம் பொருளே! சித்தி வகைகள் எல்லாவற்றையும் செய்ய வல்ல சித்தனே! ஞான நிலையமாகிய சிதம்பரத்தில் விளங்குகின்ற ஒளிப் பொருளே! சிறுமை யுடைய எனது

பொய்ம்மைகளைப் போக்கி உண்மைக் கருத்துக்களை எய்துமாறு எனக்கு அருள் புரிந்த கடவுளே! கருணை மிகுதியால் கடல் போன்றவனே! சத்தெனப்படுகின்ற பொருள்கள் எல்லாம் சத்தாந்தன்மை யுடையவை என எனக்கு அறிவுறுத்தருளிய தயாகுருவே! என்னுடைய புதுமைப் புனைவுகள் அனைத்தையும் போக்கி மெய்ம்மைப் பொருள் எல்லாவற்றை யும் காட்டி யருளுகின்ற பெருமானே, வணக்கம். எ.று.

அணிமா, மகிமா, லகிமா என வரும் சித்திகள் எட்டினையும் முட்டாது செய்ய வல்ல முதல்வன் என்பதற்கு, "சித்தெலாம் வல்ல சித்தனே" என்று கூறுகின்றார். ஞான சிதம்பரம் - ஞானமாகிய பெருவெளிச் சிதம்பரம் என்பது சித்து அம்பரம் எனப் பிரிந்து ஞானமாகிய ஆகாசம் எனப் பொருள்படும். அதனால் இதனைச் சிதாகாசம் எனவும், ஞானப் பரவெளி எனவும் சான்றோர் கூறுவர். ஞானப் பெருவெளியில் விளங்கும் ஞான சூரியன் என்பது தோன்ற, "ஞான சிதம்பர சோதியே" என்று உரைக்கின்றார். கத்து - பொய். பொருளில்லாத ஆரவாரப் பேச்சு. "களவும் கத்தும் அற" என்பது பழமொழி. பொய்க் கருத்துக்களை ஆரவாரமாகப் பேசி வலியுறுத்த முயலுவதைக் கத்துதல் என்பர். கருத்து - உண்மைப் பொருள். பொய்யை நீக்கி மெய்ம்மையை யுணர்ந்து உரைக்கச் செய்த நலம் பற்றி இறைவனைக் "கத்தெலாம் தவிர்த்துக் கருத்தெலாம் அளித்த கடவுளே" என்று புகழ்கின்றார். வற்றாப் பெருங் கருணை உருவினனாதலால் சிவனை, "கருணையிங் கடலே" என்று போற்றுகின்றார். சத்து - நிலையாயது; மெய்ப்பொருள் என்றுமாம். மெய்ப் பொருள்கள் யாவும் என்றும் அழியாத தன்மை யுடையவை என்பதை உள்ளம் நன்குணர அறிவுறுத்தருளிய இறைவனது திருவருள் நலத்தை, "சத்தெலாம் ஒன்றே சத்தியம் என என்றனக்கு அறிவித்த தயையே" என்று ஆண்டவனைப் புகழ்கின்றார். இல்லதனை உள்ளது போலப் புதுமை தோன்ற உரைக்கும் திறம், புத்து எனப்படுகின்றது. புதிது புனைந்து பொய்யை நிலைநாட்டும் இச்செய்கை குற்றமுடைத்தாதல் பற்றி, "புத்தெலாம் நீக்கி" என்றும், உள்ளதன் உண்மையை உள்ளவாறு உணரும் திறத்தை இறைவன் திருவருள் உள் நின்று காட்டுதல் பற்றி, "பொருளெலாம் காட்டும் பொது நடம் புரிகின்ற பொருளே" என்றும் விளம்புகின்றார்.

இதனால், சிதம்பர சோதியாகிய சிவபெருமான் உண்மைக் கருத்தை யுணர்வித்து, மெய்ம்மைப் பொருளை உணரக் காட்டி உதவும் திறம் எடுத்தோதியவாறும். (2)

**3874.** **கலைகளோர் அனந்தம் அனந்தமேல் நோக்கிக்**
**கற்பங்கள் கணக்கில கடப்ப**
**நிலைகளோர் அனந்தம் நேடியுங் காணா**
**நித்திய நிற்குண நிறைவே**
**அலைகளற் றுயிருக் கமுதளித் தருளும்**
**அருட்பெருங் கடல்எனும் அரசே**
**புலைகளை வகற்றி எனக்குளே நிறைந்து**
**பொதுநடம் புரிகின்ற பொருளே.**

**உரை :** கலைகள் எண்ணிறந்தனவாய்ப் பெருகி மேன்மேல் நுணுகிக் கண்டு கணக்கிலடங்காத கற்ப காலங்கள் கடக்கவும், எண்ணிறந்த பதங்களில் உறைபவர்கள் தேடியும் காணாத நித்தமாய் நிர்க்குணமாய் நிறைந்து விளங்கும் பெருமானே! எண்ணிறந்த உயிர்கட்கு ஞானமாகி அமுதளித்தருளும் அலைகளில்லாத திருவருளாகிய பெரிய கடல் என்று சொல்லப்படுகின்ற அருளரசே! புலை, களவு முதலிய குற்றங்கள் இல்லையாக எனக்குள்ளே நிறைந்து அம்பலத்தில் நடம் புரிகின்ற பரம் பொருளே, வணக்கம். எ.று.

உலகம் தோன்றிய நாள் முதற் கொண்டு எண்ணிறந்த அறிஞர்கள் தோன்றி அளவில்லாத கலை நுட்பங்களைக் கொண்டு அவற்றின் வாயிலாக இறைவனாகிய பரம்பொருளைக் காண்பதற்கு முயன்றமை புலப்படுத்தற்கு, "கலைகள் ஓர் அனந்தம்" என்றும், தத்துவப் படிகளின் மேலும் மேலும் சென்று கணக்கில்லாத கற்ப காலங்கள் கழித்தமை தோன்ற, "கற்பங்கள் கணக்கில கடப்ப" என்றும், இந்திரன் முதலிய தேவர்களும், அவர்களுக்கு மேன் மேலுள்ள பதங்களில் உறையும் தேவ தேவர்களும் தேடிய வரலாறும் விளங்க, "நிலைகள் ஓர் அனந்தம் நேடியும் காணா" என்றும், தன்னைக் காண முயன்ற கலைத் துறைகளையும், கற்ப கோடி காலங்களின் கழிவும் மேன் மேலாக, முடிவின்றி இருக்கின்ற தேவ பதங்களும் எல்லாம் அழியவும் தான் மட்டில் அழியாமையும், மாயா மண்டலத்து குண தத்துவத்திற்கு அப்பாலாயும், எல்லாம் குறைவற நிறைந்ததாயும் உள்ளது சிவம் என்பதை விளக்குதற்கு, "கலைகள் ஓர் அனந்தம் அனந்த மேல் நோக்கிக் கற்பகங்கள் கணக்கில கடப்ப நிலைகள் ஓர் அனந்தம் நேடியும் காணா நித்திய நிர்க்குண நிறைவே" என்றும் கூறுகின்றார். "நிர்க்குணனாய் நிர்மலனாய் நித்தியானந்தனாய் தற்பரமாய் நின்ற தனி முதல்வன்" என மெய்க்கண்டாரும், "வான் கெட்டு மாருதம் மாய்ந்து மண் கெடினும் தான் கெட்டலின்றிச் சலிப்பறியாத் தன்மையன்" (தெள்ளே) என்று மாணிக்கவாசகரும் இக்கருத்தைக் குறித்து அருளுவது காண்க. வாழும் உயிர்களுக்கு ஞானம் அருளி உய்விப்பதே அருளுருவாகிய இறைவனது செயலாதலால், "உயிருக்கு அமுதளித்து அருளும் அருட் பெருங் கடலெனும் அரசே" என்று புகழுகின்றார். அருளே நிறைந்த பெரிய கடல் என்பதால் அக்கடலின்கண் அலைகள் இல்லை என்பது தோன்ற, "அலைகளற்று அருளும் அருட் பெருங் கடல்" என்று சிறப்பிக்கின்றார். ஏனைக் கடல்கள் எல்லாவற்றிலும் அலை யுண்டாதலால் அவற்றின் வேறு படுத்தற்கு "அலைகளற்று" என்று சிறப்பிக்கின்றார் எனினும் அமையும். புலை, களவு முதலிய குற்றங்கள் தன்பால் உளவாகாமல் நீக்கித் தூய்மை செய்து எனக்குள்ளே நீக்கமற நிறைந்து நிற்கின்றது என்பாராய், "புலை களவு அகற்றி எனக்குள்ளே நிறைந்து பொது நடம் புரிகின்ற பொருளே' என்று புகல்கின்றார்.

இதனால், உயிர்க்கு ஞான அமுதளித்து, அருள் புரியும் பரமன் உயிரிடத்துள்ள கொலை, களவு முதலிய குற்றங்களைப் போக்கி நிறைந்து விளங்குகின்றான் என்பது தெரிவித்தவாறும். (3)

3875. தண்ணிய மதியே தனித்தசெஞ் சுடரே
சத்திய சாத்தியக் கனலே
ஒண்ணிய ஒளியே ஒளிக்குள்ஓர் ஒளியே
உலகெலாந் தழைக்கமெய் உளத்தே
நண்ணிய விளக்கே எண்ணிய படிக்கே
நல்கிய ஞானபோ னகமே
புண்ணிய நிதியே கண்ணிய நிலையே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

உரை : குளிர்ந்த மதி போல்பவனே! ஒப்பற்ற சிவந்த சூரியன் போன்றவனே! நித்தியமாய் பல்வகையான சாதனங்களால் சாதித்துக் கொள்ளக் கூடிய ஞானக் கனலே! காட்சிக்கு அகப்படக் கூடிய ஒளிப் பொருளே! ஒளிப் பொருட்கள் எல்லாவற்றிற்கும் உள்ளொளியாய் விளங்கும் முதலொளியே! உலகங்கள் எல்லாம் இனிது வளமுற மெய் யுணர்ந்த ஞானிகளின் திருவுள்ளத்தில் பொருந்தி விளங்கும் ஞான விளக்கமே! ஞானிகள் எண்ணியவாறு அவர்கட்கு நல்கிய ஞானமிர்தமே! புண்ணியச் செல்வமே! கருதிய சிவநிலையே! அம்பலத்தில் ஆடல் புரிகின்ற பரம் பொருளே, வணக்கம். எ.று.

உலகில் விளங்குகின்ற ஒளிப் பொருள்களான சந்திரன் சூரியன் என்ற இரண்டினுக்கும் குளிர்ச்சித் தன்மையாலும் செந்நிற ஒளி யுடைமையாலும் மேம்பட்டிருத்தல் பற்றிச் சிவனை, "தண்ணிய மதியே தனித்த செஞ்சுடரே" எனவும், ஆங்காங்குத் தோன்றி மறைகின்ற தீயினும் வேருய் அளவைகளாலும், யோகம் சரியை கிரியை முதலிய தவங்கள் ஆகிய ஞான சாதனங்களால் பெறுதற்குரிய ஞானத் தீயாய் விளங்குவது தோன்ற, "சத்திய சாத்தியக் கனலே" எனவும் இயம்பு கின்ருர். உலகியலில் காணப்படும் ஐம்பூதங்களில் ஒன்ருகிய தீ உலகியற் பொருளாகிய கல், இரும்பு முதலிய சாதனங்களில் பிறப்பித்துக் கொள்ளுவது போலத் தவயோகச் சாதனங்களால் சிவமாகிய ஞானக் கனலும் பெறுவித்துக் கொள்வது என்பது புலப்பட, "சாத்தியக் கனலே" என்று குறிக்கின்ருர். உலகியல் வாழ்வு ஒளியும் மக்களால் பெறப்படும் தன்மைத்தாதல் போலச் சிவபர ஒளியும் பெறப்படுவது என்றற்கு, "ஒண்ணிய ஒளியே" என்றும், இவ்வொளிகளைப் போல்வதாயினும் இவை எல்லாவற்றிற்கும் உள்ளுறை காரண முதல் ஒளியாய் இருப்பது விளங்க, "ஒளிக்குள் ஓர் ஒளியே" என்றும் இயம்புகின்ருர். இவ்வாறு ஞானசம்பந்தர் முதலியோர் இறைவனை, "சோதி முழுமுதலாய் நின்ருர்" என்றும், "சோதியுட் சோதியாய் நின்ற சோதி" என்றும் எடுத்தோதுவது காண்க. உலகில் ஞானவான்களின் ஞானம் நிறைந்த திருவுள்ளத்தின் கண் எழுந்தருளி ஏனை உலக மக்கள் பலரும் உய்தி பெற அருளுவது பற்றி, "உலகெலாம் தழைக்க மெய்யுளத்தே நண்ணிய விளக்கே என்று புகழ்கின்ருர். தவஞானிகள் எண்ணியவாறு ஞான இன்பத்தை நல்கும் சிறப்புப் பற்றி, "எண்ணிய படிக்கே நல்கிய ஞான போனகமே" என்று நவில்கிருர். தவத்தால் எண்ணிய எண்ணியாங்கு எய்தப்படுதது பற்றித் தவஞானிகள் என்பது வருவிக்கப்பட்டது. ஞான போனகம் - ஞான மாகிய அமுதம். உண்ணப்படுவது பற்றி ஞானமிர்தம் போனகம் எனப் பட்டது. புண்ணியச் செல்வம் போல் எல்லா நலங்களையும்

தருவதாதலின், "புண்ணிய நிதியே" என்று புகல்கின்றார். போக நுகர்ச்சிக்குரிய தேவ பதங்கள் யாவும் இறைவன் திருவருளால் புண்ணியவான்களுக்கு எய்துவது என்பது பற்றி, "கண்ணிய நிலையே" என்று கூறுகின்றார்.

இதனால், உலகிலுள்ள ஆன்மாக்கள் ஞான ஒளி பெற்று உய்யும் பொருட்டுப் பரம்பொருள் அவர்கள் திருவுளத்தில் எழுந்தருளுகின்றான் என்பது தெரிவித்தவாறும். (4)

3876. அற்புத நிறைவே சற்புதர் அறிவில்
அறிவென அறிகின்ற அறிவே
சொற்புனை மாயைக் கற்பனை கடந்த
துரியநல் நிலத்திலே துலங்கும்
சிற்பரஞ் சுடரே தற்பர ஞானச்
செல்வமே சித்தெலாம் புரியும்
பொற்புலம் அளித்த நற்புலக் கருத்தே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

**உரை :** அற்புதங்களின் நிறைபொருளே! ஞானிகளின் அறிவுக்கறிவாய் ஒளிர்ந்து அறிகின்ற அறிவு வடிவானவனே! சொற்களால் புனைந்துரைக்கப்படும் மாயையின் கற்பனையைக் கடந்த துரிய நிலையின் கண் விளங்குகின்ற ஞான மயமான பரஞ்சுடரே! தற்பர ஞானமாகிய செல்வமே! சித்து எல்லாவற்றையும் செய்யும் அழகிய அறிவு நலமளித்த நல்லுணர்வுக் கருத்தே! அம்பலத்து நடம் புரிகின்ற பரம்பொருளே, வணக்கம். எ.று.

பொருட்களின் பெருமை சிறுமைகளையும், புதுமை பழைமைகளையும், ஆக்கக் கூறுகளையும் காணுமிடத்து காண்பார் உள்ளத்தில் உளதாகும் வியப்புணர்வு அற்புதம் எனப்படும். அந்த அற்புதக் கூறுகள் அனைத்தும் குறைவற நிறைந்தமை பற்றிச் சிவபரம்பொருளை, "அற்புத நிறைவே" என்று போற்றுகின்றார். சற்புதர்-ஞானவான்கள். ஞானிகளின் உள்ளத்தில் நிகழ்கின்ற ஞானத்திற்கு ஞானமாய் விளங்கும் சிவஞான வடிவுடையவனாதலின் அதனை விளக்குதற்கு, "சற்புதர் அறிவில் அறிவென அறிகின்ற அறிவே" என்று தெரிவிக்கின்றார். மாயா காரியங்களாகிய கருவி கரணங்களைக் கடந்து துரியாவத்தையில் உந்திக்கண் வைத்துக் காணப்படுதலின், "சொற்புனை மாயைக் கற்பனை கடந்த துரிய நல்நிலத்திலே துலங்கும் சிற்பரஞ் சுடரே" என்று செப்புகின்றார். என்ன தன்மைத் தென அறியப் படாமை பற்றி மாயையை, "சொற்புனை மாயை" என்றும், அதனால் உளதாகும் கற்பனைகட்கு அப்பால் விளங்குவதாகலின் துரியாவத்தையை, "மாயைக் கற்பனை கடந்து துரிய நன்னிலம்" என்றும், அங்கிருந்து நோக்கும் ஆன்ம நாட்டத்திற்குப் புலனாதலின், "துரிய நல்நிலத்திலே துலங்கும் சிற்பரஞ் சுடரே" என்றும் சொல்லுகின்றார். பரஞ்சுடர் ஞானவொளி யுடையதாதல் பற்றி, "சிற்பரஞ்சுடர்" என்று சிறப்பிக்கின்றார். சிவபரம்பொருளையே பற்றுக் கோடாகக் கொண்டு ஞான ஒளி செய்வது பற்றி, "தற்பர ஞானச் செல்வமே" என நவில்கின்றார். பொற்புலம் - அழகிய அறிவு. சித்தெல்லாம் உரிய வல்ல

ஆன்ம அறிவின்கண் புலனுதலால், "பொற்புலம் அளித்த நற்புலக் கருத்தே" என்று நவில்கின்றார்.

இதனால், மாயையை விளக்கும், கற்பனைகளைப் படிப்படியாகக் கடந்து விளங்கும் துரியக் காட்சியில் காணப்படும் சிவ பரஞ்சுடரின் சிறப்பினை உரைத்தவாறும். (5)

3877. தத்துவ பதியே தத்துவம் கடந்த
தனித்ததோர் சத்திய பதியே
சத்துவ நெறியில் சார்ந்தசன் மார்க்கர்
தமக்குளே சார்ந்தநற் சார்பே
பித்துறு சமயப் பிணக்குறும் அவர்க்குப்
பெறல்அரி தாகிய பேறே
புத்தமு தளித்தென் உளத்திலே கலந்து
பொதுநடம் புரிகின்ற பொருளே.

**உரை :** தத்துவங்கட்குத் தலைவனாக உள்ள பெருமானே! தத்துவங்கள் எல்லாம் கடந்த, தத்துவாதீதனாய்த் தனித்து விளங்கும் உண்மைப் பதிப்பொருளே! மெய்ம்மை நெறியைச் சார்ந்த சன்மார்க்கர்களாகிய பெருமக்களைச் சார்ந்து, அவர்களுக்கு நல்ல சார்பாக உள்ள தலைவனே! சமயக் கொள்கையில் பித்துற்று ஒருவரோடு ஒருவர் பொருது வருந்தும் அஞ்ஞானிகட்குப் பெறுதற் கரிதாகிய ஞானச் செல்வமே! அருள் ஞான மாகிய அமுதை எனக்குத் தந்து, என்னுளத்திலே கலந்து அம்பலத்தில் நடம் புரிகின்ற சிவ பரம்பொருளே, வணக்கம். எ.று.

தத்துவங்கள் ஒவ்வொன்றுக்கும் தலைமைப் பொருளாய் இருந்து ஒவ்வொன்றும் தனக்குரிய செயலைத் தவறாமல் நடத்துமாறு ஆளுகின்றானாதலின் இறைவனை, "தத்துவ பதியே" எனவும், தத்துவங்கட்குத் தலைவனாகியும் அவற்றுள் கலவாமல் அவை எல்லாவற்றையும் கடந்து, அப்பாலாய் விளங்குகின்ற உட்பொருளாகிய பரமனாதலால். "தத்துவம் கடந்த தனித்ததோர் சத்திய பதியே" எனவும் கூறுகின்றார், சத்துவ குணத்தராய் நன்னெறியில் ஒழுகுபவர் சத்துவச் சன்மார்க்கராதலின், அவரிடையே நின்று அவர்கட்கு அழியாப் பெருந் துணைவராதலால் சிவனை, "சத்துவ நெறியில் சார்ந்த சன்மார்க்கர் தமக்குள்ளே சார்ந்த நற்சார்பே" எனப் புகழ்கின்றார். சமயக் கொள்கைகள் தோய்ந்த உள்ளத்தால் அவற்றின் பொருட்டுப் பிறரோடு பிணங்கிப் பேதுறும் ஞானத் தெளிவில்லாதவர்களைப் "பித்துறு சமயப் பிணக்குறும் அவர்" என்று குறிக்கின்றார். தெளிந்த ஞானம் இல்லாமையால் இறைவன் திருவருளைப் பெறுவது அவர்கட்கு அரிதாதலால், "பிணக்குறும் அவர்க்குப் பெறல் அரிதாகிய பேறே" என்று உரைக்கின்றார். அருள் ஞானம் எய்துந் தோறும் புதிய புதிய இன்பம் தோன்றி இறைவன் தன்னுட் கலந்திருக்கும் நிலை யுணர்த்தி, மகிழ்வித்தலின், "புத்தமுது அளித்து என் உளத்திலே கலந்து பொது நடம் புரிகின்ற பொருளே" என்று புகல்கின்றார்.

இதனுல், பொது நடம் புரியும் சிவபெருமான், தத்துவம் கடந்த சத்திய பதியாய், சன்மார்க்கச் செல்வர்கட்கு நல்ல சார்பாய், சமய வெறி கொண்டு பிணங்கும் பேதை மாக்களுக்குப் பெறலரியனுய் விளங்கும் திறன் எடுத்தோதியவாரும். (6)

3878. மேல்வெளி காட்டி வெளியிலே விளைந்த
விளைவெலாம் காட்டிமெய் வேத
நூல்வழி காட்டி என்னுளே விளங்கும்
நோக்கமே ஆக்கமும் திறலும்
நால்வகைப் பயனும் அளித்தெனை வளர்க்கும்
நாயகக் கருணைநற் றுயே
போலுயிர்க் குயிராய்ப் பொருந்திய மருந்தே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

**உரை :** அம்பலத்தில் ஆடல் புரிகின்ற பரம்பொருளே! தத்துவ வெளிகட்கு மேலாயுள்ள பரவெளியைக் காட்டி, அவ்வெளியின்கண் தோன்றுகின்ற ஞான நலங்களையெல்லாம் காணச் செய்து, மெய்ம்மை சான்ற வேதங்கள் உரைக்கிற ஞான நெறியைக் காட்டி, எனக்குள்ளே எழுந்தருளி விளக்கம் தருகின்ற ஞானக் கண்ணே! ஞானச் செல்வமும் ஞான வன்மையும் அறம் முதலிய நால்வகைப் பயனையும் எனக்கு அறிவித்து வளர்த்தருளுகின்ற தலைமையான கருணையே உருக்கொண்ட நல்ல தாய் போன்றவனே! என்னுடைய உயிர்க்குயிராய் என்னுள் பொருந்திய அருள் ஞானமாகிய மருந்தே, வணக்கம். எ.று.

தத்துவ வெளிகட் கெல்லாம் மேலதாகிய பரவெளியை "மேல் வெளி" என்றும், அந்தப் பரவெளியில் தோன்றி இன்பம் செய்கின்ற ஞான நலங்களை, "வெளியிலே விளைந்த விளைவு" என்றும் விளம்பு கின்றுர். மெய்ம்மைப் பொருளை விளக்குவனவாய் அதனைக் கடைப்பிடிப் பதற்குரிய நெறியைக் காட்டுவனவாய்த் திகழ்வது பற்றி வேதங்களை, "மெய் வேத நூல்" எனவும், வைதீக நூற்பொருள் உள்ளத்திலிருந்து ஞான விளக்கம் தருவது பற்றி, "என்னுள்ளே விளங்கும் நோக்கமே" எனவும், அதனுல் தமக்குண்டாகும் ஞானச் செல்வத்தையும் அதனுல் பெறும் ஆற்றலையும், "ஆக்கமும் திறலும்" எனவும், இவ்வாற்றும் உறுதிப் பொருட்களாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கை யும் உணர்வித்து உலகில் ஓங்கச் செய்தலின், "நால்வகைப் பயனுற் அளித்தெனை வளர்க்கும் நாயகக் கருணை நற்றுயே" எனவும் இயம்பு கிருர். உயிர்க்குயிராயிருந்து உணர்வு தந்து ஊக்குதலின், "உயிர்க் குயிராய்ப் பொருந்திய மருந்தே" என்று புகல்கின்றுர்.

இதனுல், வைதீக ஞான நெறியும், அறம் முதலிய உறுதிப் பொருட் பயனும் தமக்கு அருளிய திறத்தைத் தெரிவித்தவாறும். (7)

3879. அலப்பற விளங்கும் அருட்பெரு விளக்கே
அரும்பெருஞ் சோதியே சுடரே
மலப்பிணி அறுத்த வாய்மைஎம் மருந்தே
மருந்தெலாம் பொருந்திய மணியே

**உலப்பறு கருணைச் செல்வமே எல்லா
உயிர்க்குளும் நிறைந்ததோர் உணர்வே
புலப்பகை தவிர்க்கும் பூரண வரமே
பொதுநடம் புரிகின்ற பொருளே.**

உரை : அம்பலத்தில் ஆடல் புரிகின்ற சிவபரம் பொருளே! வாழ்வில் உளவாகும் மன வலேச்சல்களை இல்லையாக்கி, விளங்குகின்ற அருளாகிய பெருவிளக்கமே! அரும் பெருஞ் சோதியே! சோதிக்குள் விளங்கும் அருட் சுடரே! மலத் தொடர்பால் உளதாகும் துன்பங்களைப் போக்கி யருளிய, மெய்ம்மை சான்ற மருந்து போல்பவனே! மருந்தின் தன்மைகளெல்லாம் தனக்குள் பொருந்திய மணியாகியவனே! கெடுதலில்லாத திருவருட் செல்வமே! எல்லா உயிர்க்குள்ளும் நிறைந் திருக்கின்ற ஒப்பற்ற உணர்வாகிய மெய்ப்பொருளே! ஐம்புலன்களாகிய பகைப் பொருளை நீக்குகின்ற, பூரணமான மேன்மைப் பொருளே, வணக்கம். எ.று.

அலம்பற என்பது அலப்பற என வந்தது. அலம்புதல் - அசைதல். இறைவன் திருவருள் அன்பர் உள்ளத்தில் இன்ப ஒளி தருவதாதலின், "அலப்பற விளங்கும் அருட் பெருவிளக்கே" என்று உரைக்கின்றார். இறைவனருளால் உள்ளத்தில் எழுகின்ற ஞானவொளி அருமையும் பெருமையும் உடைய தென்பது பற்றி, "அரும் பெருஞ்சோதியே சுடரே" என்று போற்றுகின்றார். அருள் மயமாய் ஞானச் சுடராய் விளங்குவது பற்றிச் சிவனை, "ஆதியும் அந்தமுமில்லா அரும் பெருஞ் சோதி" என்று (எம்பா) மாணிக்கவாசகரும் உரைப்பது காண்க. ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்றன் தொடர்பால் உயிர்கட்குத் துன்பம் விளைதலின் அதனை, "மலப்பிணி" என்றும், அதனைப் பற்றறக் கெடுப்பது பற்றிப் பரம் பொருளை, "மலப்பிணி அறுத்து வாய்மை எம் மருந்தே" என்றும் புகல் கின்றார். பல்வேறு நோய்களைப் போக்குதற்கு மருந்துகள் பலவாதலின், அம்மருந்துகளின் தன்மையெலாம் தன்பால் கொண்டமை விளங்கச் சிவமாகிய மணியை, "மருந்தெலாம் பொருந்திய மணியே" என்று மகிழ்ந்து உரைக்கின்றார். மருந்தும் மணியும் மந்திரமும் என்ற மூன்றும் பண்டை நாளில் நம் தமிழ்நாட்டு மருத்துவர் கைக்கொண்டிருந்தமை யின் வடலூர் வள்ளல் இவ்வாறு கூறுகின்றார். உலப்பு - கெடுதல். இறைவனது கருணையாகிய செல்வம் என்றும் கெடுதலில்லாத சிறப்புடையதாகலின், "உலப்பறு கருணைச் செல்வமே" என்று கூறு கிறார். உயிர் வகைகள் எல்லாவற்றினுள்ளும் உணர்வுருவாய் இறைவன் நிறைந்திருப்பது பற்றி, "எல்லா உயிர்க்குளும் நிறைந்ததோர் உணர்வே" என்று போற்றுகின்றார். கண் காது முதலிய பொறி ஐந்தின் வழியாக ஒளி ஓசை முதலிய புலன்களால் விளையும் ஆசை என்னும் நோய் தருவனவாதலால் அவற்றை, "புலப்பகை" என்றும், அவற்றால் நோயின்றி மெய்ஞ் ஞானம் கைவர உதவுதல் பற்றி, "பூரண வரமே" என்றும் போற்றுகின்றார். வரம் - மேலான பொருள்.

இதனால், சிவ பரம்பொருளை அருட் பெருவிளக்கு என்றும், அரும் பெருஞ் சோதியும் சுடரும் ஆவதென்றும், மருந்தெலாம் பொருந்திய மணி என்றும் புகழ்ந்தவாறும். (8)

3880. பரம்பர நிறைவே பராபர வெளியே
பரமசிற் சுகந்தரும் பதியே
வரம்பெறு சிவசன் மார்க்கர்தம் மதியில்
வயங்கிய பெருஞ்சுடர் மணியே
கரம்பெறு கனியே கனிவுறு சுவையே
கருதிய கருத்துறு களிப்பே
புரம்புகழ் நிதியே சிரம்புகல் கதியே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

**உரை :** மேன்மேல் உயர்ந்து நிறைந்து விளங்கும் பரம்பொருளே! மேலும் கீழுமாக எல்லா உலகங்களையும் சூழ்ந்து கொண்டிருக்கும் ஆகாசமே! மேலான ஞான வின்பத்தை நல்கும் பதிப் பொருளே! மேன்மை பெற்ற சிவநெறிச் சன்மார்க்க நன்மக்களின் அறிவில் விளங்குகின்ற பெரிய சுடரையுடைய மாணிக்க மணி போல்பவனே! கையிலே கிடைத்த கனி போல்பவனே! கனியின்கண் நிரம்பி யுள்ள சுவையாகியவனே! நினைக்கின்ற நினைவின்கண் இன்பம் தருகின்றவனே! சிவபுரத்தார் புகழ்ந்து போற்றுகின்ற ஞானச் செல்வமே! வேதங்களின் உச்சியிலிருந்து யாவராலும் விரும்பப்படுகின்ற கதிப் பொருளே! அம்பலத்தில் ஆடல் புரிகின்ற பெருமானே, வணக்கம். எ.று.

பரம்பரம் - மேன் மேல். ஈண்டு அடுக்கு மேன் மேலுயர்ந்த நிலைகளை உணர்த்துகின்றது. பரம் - மேல். அபரம் - கீழ். பராபர வெளியாவது எல்லா அண்டங்களுக்கும் மேலும் கீழுமாய்ச் சூழ்ந்திருக்கும் பராகாசம். அதுவும் சிவத்தின் பெருவடிவமாதலின், "பராபர வெளியே" என்று சிவனைப் பரவுகின்றார். சிற்சுகம் - ஞான வின்பம். ஞானத்தால் உணர்ந்து ஞான நெறியால் பெறப்படுவது பற்றி ஞான வடிவாகிய சிவ பரம் பொருளை, "பரம சிற்சுகம் தரும் பதி" என்று சிறப்பிக்கின்றார். வரம் - மேன்மை. சிவநெறியில் நிற்கும் சன்மார்க்கச் செல்வரைச் சிவ சன்மார்க்கர் என்று புகழ்கின்றார். அப்பெருமக்களின் அறிவின்கண் இருந்து ஞான வின்ப விளக்கம் தருதலால், "சன்மார்க்கர்தம் மதியில் வயங்கிய பெருஞ் சுடர் மணியே" என்று போற்றுகின்றார். நன்கு சுவை மிகப் பழுத்துக் கைமேல் கிடைப்பது போல்வது பற்றிச் சிவனை, "கரம் பெறு கனியே" என்றும், கனியினும் கனியுள் நிறைந்த அவை சிறப்புடைத்தாதல் பற்றி, "கனிவுறு சுவையே" என்றும், அதனை நினைக்கும் தோறும் நினைவின்கண் இன்பம் சுரந்து மகிழ்வித்தலின், "கருதிய கருத்துறு களிப்பே" என்றும் ஏத்துகின்றார். புரம் - சிவபுரம்; சிவலோகத்தில் சிவ பரம்பொருள் உறையும் நகரம் என்பது கருத்து. சிவபுரத்தில் வாழும் முத்தான்மாக்கள் பெற்று மகிழும் பெருஞ் செல்வம் என்பது பற்றி, "புரம் புகழ் நிதியே" என்று புகல்கின்றார். சிரம் - வேத சிரம். அஃதாவது வேதங்களின் முடிவு நிலை. வேதாந்தங்களில் ஓதப்படுகின்ற சிவ பதத்தை, "சிரம் புகல் கதி" என்று தெரிவிக்கின்றார்.

இதனால், சிவ பரம்பொருள் பரம்பர நிறைவாய், பராபர வெளியாய், பரம சிற்சுகம் தரும் பதியாய், சிவசன்மார்க்கப் பெருஞ் சுடர் மணியாய் விளங்குவது எடுத்தோதியவாறும். (9)

3881. வெற்புறு முடியில் தம்பமேல் ஏற்றி
மெய்ந்நிலை அமர்வித்த வியப்பே
கற்புறு கருத்தில் இனிக்கின்ற கரும்பே
கருணைவான் அமுதத்தெண் கடலே
அற்புறும் அறிவில் அருள்ஒளி ஆகி
ஆனந்த மாமஅனு பவமே
பொற்புறு பதியே அற்புத நிதியே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

உரை : மறை முடியில் நிறுத்தப்பட்ட தூணின் மேலேற்றி ஆங்குள்ள மெய்ம்மை நிலையில் இருக்க வைத்த அற்புதப் பொருளே! கல்வி நிறைந்த கருத்தின்கண் இன்பம் சுரக்கின்ற கரும்பு போல்பவனே, கருணையாகிய பெரிய அமுதம் நிறைந்த கடலாகியவனே! அன்பு நெறியில் உருவாகும் அறிவின்கண் திகழும் அருள் ஒளியாய் இன்பமாய் இன்ப அனுபவமாய் அழகு மிகும் பதிப் பொருளே! அற்புத அருட் செல்வமே! அம்பலத்தில் நடம் புரிகின்ற பரம்பொருளே, வணக்கம். எ.று.

யோக முடிவாகிய ஆஞ்ஞையை வெற்பு என்றும், அதற்கு மேற் செல்லும் துவாதசாந்தத்தைத் தம்பம் என்றும், அதன் மேல் பெறப்படுகின்ற ஞானச் சந்திராமுத போகநிலையை மெய்நிலை என்றும் இங்கே குறிக்கின்றார். மூலாராதத்தினின்றும் எழுப்பி மேன் மேலும் உயர்த்தி ஆஞ்ஞை நிலை காறும் உயர்த்திய சிறப்பை, "வெற்புறு முடியில் தம்ப மேலேற்றி மெய்ந்நிலை அமர்வித்த வியப்பே" என்று குறிப்பாக உரைக்கின்றார். தற்புறு கருத்து - கல்வி ஞானம் நிறைந்த உள்ளம். கற்றவர் உள்ளத்தில் கரும்பு போல் இனிக்கின்றவன் என்பது பற்றி, "கற்புறு கருத்தில் இனிக்கின்ற கரும்பே" என்றும், அருட் கடலாகிய பெருமானிடத்து ஞானமாகிய அமுது பெறப் படுதலின், "கருணை வான் அமுதத்து ஒண்கடலே" என்றும் கூறுகின்றார். அன்பு நெறியில் பெறலாகும் மெய்யறிவை "அற்புறும் அறிவு" என்றும், அவ்வறிவின்கண் அருளொளி நல்கி ஞான ஆனந்த அனுபவம் பெறுவித்தலின், "அற்புறும் அறிவில் அருளொளியாகி ஆனந்தமாம் அனுபவமே" என்றும் அறிவிக்கின்றார். பொற்புறு பதி - அழகும் இன்பமும் நிறைந்த பதிப் பொருள் என்றற்கு, "பொற்புறு பதி" என்று புகல்கின்றார். சிவத்தின் திருவருளாகிய நிதி நுகருந் தொறும் வியப்பை விளைவித்தலின், "அற்புத நிதியே" என்று பாராட்டுகின்றார்.

இதனால், யோக நெறியில் ஆன்மாவை மெய்ந்நிலைக்கண் உயர்த்தி இன்பம் நுகர்விக்கும் திருவருட் டிறம் தெரிவித்தவாறும். (10)

3882. தன்மைகாண் பரிய தலைவனே எல்லாம்
தரவல்ல சம்புவே சமயப்
புன்மைநீத் தகமும் புறமும்ஒத் தமைந்த
புண்ணியர் நண்ணிய புகலே

**வன்மைசேர் மனத்தை நன்மைசேர் மனமா**
**வயங்குவித் தமர்ந்தமெய் வாழ்வே**
**பொன்மைசார் கனகப் பொதுவொடு ஞானப்**
**பொதுநடம் புரிகின்ற பொருளே.**

**உரை :** அழகமைந்த பொற் சபையிலும் ஞான சபையிலும் நடம் புரிகின்ற பெருமானே! தன்மை இதுவென்று அறிய முடியாத தலைவனே! வேண்டுவார்க்கு வேண்டுவன வெல்லாம் தருகின்ற சிவனே! சமயக் கொள்கை வெறி பொருந்திய கீழ்மையை நீக்கி, அகமும் புறமும் ஒத்த பண்புடைய புண்ணியப் பெருமக்கள் அடைகின்ற புகலிடமே! வன்மை பொருந்திய மனத்தை மென்மையாகிய நற்பண்புடையதாக விளங்குவித்து அதன்கண் எழுந்தருளுகின்ற மெய்ம்மை வாழ்வையுடைய பெருமானே, வணக்கம். எ.று.

பொன் வேய்ந்த அம்பலமாதலின் அதனை, "கனகப் பொது" என்றும், அதனின் வேறாகிய ஞான சபையை "ஞானப் பொது" என்றும் குறிக்கின்றார். தன்மை இதுவென மக்களால் அறிய முடியாத மேலோனாதலின் சிவனை, "தன்மை காண்பரிய தலைவன்" எனவும், வேண்டுவார் வேண்டுவன வெல்லாம் தந்தருளும் வள்ளலாதலின், "எல்லாம் தர வல்ல சம்புவே" எனவும் இயம்புகின்றார். "தன்மை யாரும் அறிவாரில்லை" (ஐயா) என்றும், "இன்ன தன்மையன் என்று அறிவொண்ணா எம்மான்" (ஆரூர்) என்றும் சான்றோர் உரைப்பது காண்க. சமயப் புன்மையாவது சமய நெறிகளில் பொய்யும் வழுவும் பொருந்திய கொள்கைகளை மெய்ம்மை யுடையன வென எண்ணி அவற்றை விடாப் பிடியாய் மேற்கொண்டு பூசல் விளைவிக்கும் கீழ்மைத் தன்மை. உண்மை ஞானத்தால் அக்கீழ்மையைப் போக்கி, உள்ளும் புறமும் ஒத்தமைந்த நற்பண்புடைய சிவஞானிகளுக்கு இனிய புகலிடமாதல் பற்றி, "புன்மை நீத்து அகமும் புறமும் ஒத்தமைந்த புண்ணியர் நண்ணிய புகலே" என்றும், இரக்கமும் அருளும் ஈகையுமாகிய தன்மையில்லாத கல்மனமுடையவர்களின் உட்புகுந்து அவரது மனப் பண்பை மாற்றி மென்மையும் அறவுணர்வும் உடைய செம்மை பொருந்திய மனமாக்கி அருள் செய்யும் செம்மைத் தன்மை பற்றிச் சிவனை, "வன்மை சேர் மனத்தை நன்மை சேர் மனமா வயங்குவித்து அமர்ந்த மெய் வாழ்வே" என்றும் விளம்புகின்றார். கொலையும் புலையுமாகிய வன்கண்மை நிறைந்த மனமுடைய கண்ணப்பர் திருவுள்ளத்தில் புகுந்து அன்புருவாக்கி ஆட்கொண் டருளிய மெய்ம்மைத் திறம் ஈண்டு நினைக்கப்படுகின்றது.

இதனால், கல்மனத்தை மாற்றி நன்மனமாக்கும் சிவனுடைய அருள் நலம் உரைக்கப்பட்டவாறும். (11)

**3883.** **மூவிரு முடிபின் முடிந்ததோர் முடிபே**
**முடிபெலாம் கடந்ததோர் முதலே**
**தாவிய முதலும் கடையும்மேற் காட்டாச்**
**சத்தியத் தனிநடு நிலையே**

மேவிய நடுவில் விளங்கிய விளைவே
விளைவெலாம் தருகின்ற வெளியே
பூவியல் அளித்த புனிதசற் குருவே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

உரை : அம்பலத்தில் நடம் புரிகின்ற பெருமானே! நாதாந்தம் முதலாக ஓதப்படுகின்ற அறுவகை அந்தங்களால் முடிவு காணப்பட்ட முடிபொருளே! அந்த முடிவுகள் எல்லாவற்றையும் கடந்து அப்பாற்பட்டு விளங்கும் முதற்பொருளே! முதலும் ஈறும் இவை யெனக் காண்பரிதாகிய சத்தியத்தின் இடை விளங்கும் நிலைப் பொருளே! அந்நடுவில் விளங்கிய ஞானப் பயனே! அப்பயன்களை எல்லாம் தந்தருளுகின்ற பரவெளியே! உலகியல் வாழ்வை அளித்து வாழ்விக்கும் தூய சற்குருவே, வணக்கம். எ. று.

மூவிரு முடிபுகளாவன: நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், வேதாந்தம், கலாந்தம், சித்தாந்தம் (3667) என வரும். இக் கருத்தையே "ஆறந்த நிலைகளின் அனுபவ நிறைவே" என்று பிறிதோரிடத்தும் வள்ளலார் உரைப்பது காண்க. யோகாந்த முதலிய அந்தங்களின் முடிபொருளாவதே யன்றி அவற்றிற்கு அப்பாலும் கடந்து நிலவுவதால், "முடிபெலாம் கடந்ததோர் முதலே" என மொழிகின்றார். முதல், இடை, கடை எனப் பொருட்களைக் கூறு செய்து காண்பதியல்பாதலின், முதலும் ஈறுமாகிய இரண்டையும் "தாவிய முதலும் கடையும்" எனப் பிரிக்கின்றார். மெய்ம்மைக்கு முதலுமாகாது இறுதியுமாகாது நடுநின்று திகழ்தலின் பரம்பொருளை, "மேவிய நடுவில் விளங்கிய விளைவே" எனவும், இவ்விளைவுகட்கு எல்லாம் விரிந்த இடமாதல் தோன்ற, "விளைவெலாம் தருகின்ற வெளியே" எனவும் இயம்புகின்றார். அனாதி மலப்பிணிப்பு நீங்கி உய்தி பெறுதற் பொருட்டுப் பூவுலக வாழ்வை அளித்து வாழ்வியலையும் உயிர்க்குயிராய் உள் நின்று உணர்த்துவது பற்றி, "பூவியல் அளித்த புனித சற்குருவே" எனப் புகல்கின்றார்.

இதனால், ஆறந்தங்களையும் கடந்து மெய்ம்மைக்கு நடுநிலையாய்ப் பூவியல் வாழ்வளித்த இறைவனின் பெருமையைத் தெரிவித்தவாறும். (12)

3884. வேதமும் பொருளும் பயனும்ஓர் அடைவும்
விளம்பிய அனுபவ விளைவும்
போதமும் சுகமும் ஆகிஇங் கிவைகள்
போனது மாய்ஒளிர் புலமே
ஏதமுற் றிருந்த ஏழையேன் பொருட்டிவ்
விருநிலத் தியல்அருள் ஒளியால்
பூதநல் வடிவம் காட்டிஎன் உளத்தே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

உரை : வேதங்களையும் அவற்றின் பொருளையும், அப்பொருளால் அடையும் பயனையும், அவை அடையும் முறையையும், இவற்றுள் எடுத்

தோதிய அனுபவப் பயனும், அனுபவ ஞானமும் ஞான இன்பமுமாகிய இவைகளின் உருவாய், பின்னர் அவற்றின் மறைவாய் ஒளிர்கின்ற அறிவுப் பொருளே! துன்ப மெய்தி வருந்துகின்ற ஏழையாகிய என் பொருட்டு, இந்நிலவுலகில் நிலவுகின்ற நின் திருவருள் ஒளியால் பூதங்களின் கூட்டமாகிய இவ்வுலக வடிவைக் காட்டி, என்னுளத்தே எழுந்தருளித் திருநடம் புரிகின்ற பெருமானே, வணக்கம். எ.று.

வைதீக நெறியையும் அந்நெறியின் பயனையும் அனுபவ திறத்தையும் ஞானத்தையும், ஞானப் பயனையும் அறிவாலறிந்து உய்தற்கு ஏற்ப விளங்குகின்ற அறிவுருவே இறையருள் என்பது விளங்க, "வேதமும் பொருளும் பயனும் ஓர் அடைவும் விளம்பிய அனுபவ விளைவும் போதமும் அகமுமாகி இங்கு இவைகள் போனதுமாய் ஒளிர் புலமே" என வுரைக்கின்றார். மலப் பிணிப்பால் உலகியலில் துன்பங்கள் பலவற்றை எய்தி வருந்தி அறிவிழந்து துன்புறுகின்ற நிலையைப் புலப்படுத்தற்கு, "ஏதமுற்று இருந்த ஏழையேன் பொருட்டு" என்றும், உலகியல் வாழ்வால் அருள் ஞானத்தைப் பெற்று நில நீர் நெருப்பு முதலிய ஐம்பெரும் பூதங்களின் உருவே இறை யுருவமென உணரக் காட்டிய திறத்தை, "இரு நிலத்தியல் அருள் ஒளியால் பூத நல்வடிவம் காட்டி என்னுளத்தே பொது நடம் புரிகின்ற பொருளே" என்றும் புகல்கின்றார்.

இதனால், இறைவன் வைதீக ஞானமாகவும், அருளொளியால் பூதவுலக ஞானமாகவும் காட்டி யருளுகின்ற திறம் தெரிவித்தவாறும். (13)

**3885.** **அடியனேன் பொருட்டிவ் வவனிமேல் கருணை**
**அருள்வடி வெடுத்தெழுந் தருளி**
**நெடியனே முதலோர் பெறற்கரும் சித்தி**
**நிலைஎலாம் அளித்தமா நிதியே**
**மடிவுறு தென்றும் சுத்தசன் மார்க்கம்**
**வயங்கநல் வரந்தந்த வாழ்வே**
**பொடிஅணி கனகப் பொருப்பொளிர் நெருப்பே**
**பொதுநடம் புரிகின்ற பொருளே.**

**உரை :** திருநீறு அணிந்து பொன் மலை போல் ஒளி செய்கின்ற நெருப்பு வடிவுடைய பெருமானே! அம்பலத்தில் ஆடுகின்ற பரம் பொருளே! அடியவனான என் பொருட்டு, நிலத்தின் மேல் மிக்க அருள் வடிவு கொண்டு என்பால் எழுந்தருளித் திருமால் முதலிய தேவர்கள் பெறுதற் கரிய சித்தி வகைகள் பலவற்றையும் யான் பெற அருளிய அருட் செல்வமே! எக்காலத்தும் நிலைகுலையாத சுத்த சன்மார்க்க நெறி நின்று விளங்க நல்ல வரம் தந்த என் வாழ்முதலே, வணக்கம். எ.று.

பொடி - திருநீறு. வெண்ணிறப் பொடியாகத் தோன்றுதலின் பொடி எனப்படுகிறது. இதனை வெண்பொடி என்றும் விளம்புவர். பொன்னிற மேனியும் நெருப்பு ஒத்த ஒளியும் உடையவனாதலின் சிவபெருமானை, "பொடியணி கனகப் பொருப்பு ஒளிர் நெருப்பே" என்று குறிக்கிறார். சிவனுடைய திருவடி ஞானம் தம்மில் நிறைந்திருப்பது விளங்க,

"அடியனேன்" என்றும், உலகியல் அன்புருவான குருபரன் வடிவில் எழுந்தருளியது தோன்ற, "அவனி மேல் கருணை அருள் வடிவு எடுத்து எழுந்தருளி" என்றும், குருபரன் தமக்கருளிய ஞானத்தால் தமக்குத் திருமால் முதலிய தேவர்களும் பெறலாகாத சித்தியும் ஞானமும் எய்தினமை தோன்ற, "நெடியனே முதலோர் பெறற்கரும் சித்தி நிலை எலாம் அளித்த மாநிதியே" என்றும் இயம்புகின்றார். தாம் உலகில் நிலை நாட்டி உபதேசித்துப் பேணி வளர்க்கும் சுத்த சன்மார்க்கம் ஓங்குதல் வேண்டு மென்ற தமதார்வம் புலப்பட, "மடிவுறுது என்றும் சுத்த சன்மார்க்கம் வயங்க நல்வரம் தந்த வாழ்வே" என்று எடுத்துரைக் கின்றார்.

இதனால், தாம் மேற்கொண்டு பரப்பும் சுத்த சன்மார்க்கம் மடிவுறுது வளம் பெற வேண்டுமென இறைவனைப் போற்றியவாறும். (14)

3886. என்பிழை அனைத்தும் பொறுத்தருள் புரிந்தென்
இதயத்தில் இருக்கின்ற குருவே
அன்புடை அரசே அப்பனே என்றன்
அம்மையே அருட்பெருஞ் சோதி
இன்புறு நிலையில் ஏற்றிய துணையே
என்னுயிர் நாதனே என்னைப்
பொன்புனை மாலை புனைந்தஓர் பதியே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

உரை: அம்பலத்தில் ஆடல் புரிகின்ற பரம்பொருளே! யான் செய்த பிழைகள் அத்தனையும் பொறுத்தருளி என்னுடைய இதய தாமரையில் வீற்றிருக்கின்ற குருபரனே! அன்புருவாகிய அருளரசே! எனக்கு அப்பனும் அம்மையுமாகிய பெருமானே! அருட் பெருஞ் சோதியே! என்றும் இன்பமே நுகர்ந்திருக்கும் ஞான நிலையில் என்னை உயர்த்திய துணைவனே! என் உயிர்க்கு நாதனே! எனக்குப் பொன் மாலையை அணிந்த ஒப்பற்ற பதிப் பொருளே, வணக்கம். எ.று.

முக்குண வயத்தால் முறை பிறழ்ந்து குற்றம் பல செய்யும் இயல்புடையவனாதலால் என்னைப் பொறுத்தருளி என்னையும் அருளொளி யால் தூய்மை செய்து என்னுடைய இதயமாகிய தாமரையில் எழுந்தருளி ஞானவொளி செய்யும் குருபரன் என்று சிவனைப் பரவுகின்று ராதலால், "என் பிழையனைத்தும் பொறுத்தருள் புரிந்து என் இதயத்தில் இருக்கின்ற குருவே" என்று இயம்புகின்றார். உலகுயிர்கட்கு அப்பனும் அம்மையுமாய் அன்பு செய்து நன்னடை பெறுவிப்பதால், "அன்புடை அரசே அப்பனே அம்மையே" என்று போற்றுகின்றார். திருவருள் ஞான வுருவாய் சிவவொளி பரப்புதலால் சிவபெருமானை, "அருட் பெருஞ் சோதி" என்று புகழ்கின்றார். உலகியல் துன்பங் களிலிருந்து நீங்கி எஞ்ஞான்றும் குன்றாத இன்ப நிலையில் இருக்குமாறு துணை புரிகின்றமை விளங்க, "இன்புறு நிலையில் ஏற்றிய துணையே" எனவும், என் உயிர்க்குயிராய் நின்று நல்லன தீயன காட்டி உய்வித்த லின், "என் உயிர் நாதனே" எனவும் பரவுகின்றார். பொன்னால் அழகுறச் செய்யப்பட்ட மாலை ஒன்றைத் தமக்கு அணிந்து சிறப்பித்தமை

தோன்ற, "என்னைப் பொன்புனை மாலை புனைந்த ஓர் பதியே" என வுரைக்கின்றார். பொன்புனை மாலை - பொன் மாலை. வடலூர் வள்ளலார்க்கு இறைவன் பொன் மாலை புனைந்த வரலாறு தெரிந்திலது.

*இதனால், இறைவன் வடலூர் வள்ளலார்க்குப் பொன் மாலை புனைந்த வரலாறு தெரிவித்தவாறும்.* (15)

**3887.** **சத்திய பதியே சத்திய நிதியே**
**சத்திய ஞானமே வேத**
**நித்திய நிலையே நித்திய நிறைவே**
**நித்திய வாழ்வருள் நெறியே**
**சித்திஇன் புருவே சித்தியின் கருவே**
**சித்தியிற் சித்தியே எனது**
**புத்தியின் தெளிவே புத்தமு தளித்துப்**
**பொதுநடம் புரிகின்ற பொருளே.**

**உரை :** சத்துப் பொருளாகிய தலைவனே! சத்தியச் செல்வமே! சத்தாகிய ஞானப் பொருளே! வேதம் கூறுகின்ற நித்திய ஞான நிலையே! நித்திய தன்மைகள் நிறைந்த பூரணனே! நிலைத்த ஞான வாழ்வை யருளுகின்ற நெறியின் பயனே! சித்திகளால் உண்டாகின்ற இன்பத்தின் வடிவமே! எல்லாச் சித்திகட்கும் காரணமாகிய முதற்பொருளே! சித்திகள் எல்லாவற்றுக்கும் உள்ளுறு சித்தியாய்த் திகழ்கின்ற சித்தி வடிவமே! என்னுடைய புத்திக்குத் தெளிவு நல்குகின்ற தெளிவே! எனக்குப் புதிதாகிய ஞானவமுதம் தந்து அம்பலத்தில் ஆடல் புரிகின்ற பரம் பொருளே, வணக்கம். எ.று.

சத்தாகிய பதி என்றற்கு, "சத்திய பதி" என்றும், சத்தாய்ச் செல்வமாய் நலம் பயப்பது பற்றி, "சத்திய நிதியே" என்றும், உண்மை ஞானப் பொருள் என்றற்கு, "சத்திய ஞானமே" என்றும் இயம்புகின்றார். பொய்ப் பொருளை விலக்கி நிலையாய மெய்ப்பொருளை எடுத்தோதும் இயல்பினவாகலின், "வேத நித்திய நிலையே" எனவும், அழிவில்லாதனவாகிய தன்மைகள் அனைத்தும் குறைவற நிறைந்த பூரணமாதல் பற்றி, "நித்திய நிறைவே" எனவும் சொல்லுகின்றார். அழியாப் பெருவாழ்வு எய்துதற் குரிய ஞான நெறியை மேற்கொள்வோர் அடையும் பயனுதலால் சுகத்தை, "நித்திய வாழ்வருள் நெறியே" எனவும் உரைக்கின்றார். பல்வகைச் சித்திகளையும் செய்ய வல்லார் பெறும் இன்ப வடிவாய் அச்சித்திகள் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாய் இருப்பது பற்றிச் சிவனை, "சித்தியின் புருவே சித்தியின் கருவே" எனவும், சித்திகள் பலவற்றிற்கும் உள்ளுறு சித்தியாய்த் திகழ்வது விளங்க, "சித்தியிற் சித்தியே" எனவும் தெரிவிக்கின்றார். புத்தி தத்துவத்திற்குத் தெளிவு நல்கி நல்ஞானமாகிய அமுதினைத் தந்து சிறப்பிப்பது பற்றி, "புத்தியின் தெளிவே" என்றும், "புத்தமுது அளித்துப் பொது நடம் புரிகின்ற பொருளே" என்றும் புகல்கின்றார்.

இதனால், புத்தி தத்துவத்திற்குத் தெளிவும் இன்பமும் சிவ பரம் பாருள் அருளும் திறம் செப்பியவாறும். (16)

3888. சிதத்தொளிர் பரமே பரத்தொளிர் பதியே
சிவபத அனுபவச் சிவமே
மதத்தடை தவிர்த்த மதிமதி மதியே
மதிநிறை அமுதநல் வாய்ப்பே
சதத்திரு நெறியே தனிநெறித் துணையே
சாமியே தந்தையே தாயே
புதப்பெரு வரமே புகற்கருந் தரமே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

*உரை :* அம்பலத்தில் அருள் நடம் புரிகின்ற பரம்பொருளே! ஞானக் கண்ணுடையார் காணுமாறு ஒளிர்கின்ற பரம்பொருளே! அப்பரவெளியில் விளங்குகின்ற பதியாகிய சிவமே! சிவ பதத்தில் அனுபவிக்கப்படுகின்ற சிவபோகமே! பல்வேறு மதங்களின் கொள்கை வேறுபாடுகளை நீக்கி, உணர்கின்ற உணர்வால் நன்கு மதிக்கப் படுகின்ற ஞானப் பொருளே! துவாதசாந்தத்தில் திகழும் சந்திரனிடத்து நிறைந் தொழுகும் அமுதமாகிய நற்பேற்றின் உருவே! சத்தாகிய திருநெறியை மேற்கொள்வார்க்கு ஒப்பற்ற நெறியாய் அதனைக் கடைபோகச் சென்று பயன் எய்துதற்குத் துணை செய்பவனே! எனக்குச் சாமியும் தந்தையும் தாயுமானவனே! பெருமை வாய்ந்த மேன்மைப் பொருளே! சென்றடைதற் கரிதாகிய உயர்தரச் செல்வமே, வணக்கம். எ.று.

சிதம் - ஞானம். ஞான நாட்ட முடையார் தத்துவங்களைக் கடந்து நோக்க விளங்கும் பரவெளியை, "சிதத்தொளிர் பரம்" என்றும், அப்பரவெளியின்கண் திகழ்கின்ற சிவமாகிய பதிப்பொருளை, "பரத்து ஒளிர்பதியே" என்றும், அப்பதிப் பொருள் நிலவும் இடம் சிவபதமா தலால், அப்பதத்தின்கண் அனுபவிக்கப்படும் சிவானுபவத்தை, "சிவ பத அனுபவச் சிவமே" என்றும் இயம்புகின்றார். உலகில் நிலவுகின்ற மதங்கள் பலவாய், ஒன்றினொன்று உயர்வு தாழ்வு கற்பித்து உண்மை யறிவுக்குத் தடை செய்தலால், அவற்றால் விளையும் குற்றத்தை அறிந்து நீக்குதற்குரிய நல்லறி வுடையோர் தமது அறிவின் நன்மையால் தெளிந்து உணரப்படும் ஞானப் பொருளாதல் பற்றிச் சிவனை, "மதத் தடை தவிர்த்த மதி மதி மதியே" என்று மகிழ்ந்து உரைக்கின்றார். மதத் தடை தவிர்த்த மதி - மதங்களால் விளையும் தடைகளை உண்மை யறிந்து போக்கும் மதி நுட்பமுடைய நல்லறிவுகள். மதி நிறை அமுதம் ஆஞ்ஞையாகிய ஆதாரத்திற்கு மேல் பன்னிரண்டு அங்குல உயரத்தில் காட்சிப் படுகின்ற அமுத சந்திரனை "மதி" எனவும், அதனிடத்தே நிறைந்து ஒழுகுகின்ற ஞானமாகிய அமுதத்தை உண்டு மகிழும் யோக வாய்ப்பினை, "மதி நிறை அமுத நல்வாய்ப்பே" என ஓதுகின்றார். சதத் திருநெறி - சத்தாகிய ஞானம் நல்கும் சிவநெறி. சிவநெறி மேற்கொண்டு ஒழுகுவார்க்கு அந்நெறியின் சிவபோகப் பயனைத் துய்த்தற்குத் துணை செய்தலால், "சதத் திருநெறியே தனி நெறித் துணையே" என்று சாற்று கின்றார். சாமி - தலைவன். அற்புதம் என்பது புதம் என வந்தது. சிவ தத்துவ சிவலோகம் போகப் பேற்றுக்குரிய இடமாய் ஆன்மாக்கள் எளிதிற் புகுதற் கரியதாய் உள்ள உயர்நிலையாதலின், சிவபோக நிலையத்தை, "புகற்கு அருந் தரமே" எனக் குறிக்கிறார்.

இதனால், சிவத்தின் திருநெறியையும் அதற்குச் சிவன் துணை யாவதையும் எடுத்தோதியவாறும். (17)

3889. **கலைவளர் கலையே கலையினுட் கலையே**
**கலைஎலாம் தரும்ஒரு கருவே**
**நிலைவளர் கருவுட் கருஎன வயங்கும்**
**நித்திய வானமே ஞான**
**மலைவளர் மருந்தே மருந்துறு பலனே**
**மாபலம் தருகின்ற வாழ்வே**
**புலைதவிர்த் தெனையும் பொருளெனக் கொண்டு**
**பொதுநடம் புரிகின்ற பொருளே.**

**உரை :** அம்பலத்தில் அருள் நடம் புரிகின்ற சிவ பரம்பொருளே! உலகில் நிலவும் கலைகள் எல்லாவற்றினும் மேன் மேலும் வளர்த்தருளும் கலை யுருவானவனே! கலைகள் எல்லாவற்றுக்கும் உள்ளுறு கலை யுருவாய் ஒளிர்பவனே! கலைகள் எல்லாவற்றையும் உயிர்கட்குத் தந்தருளும் ஒப்பற்ற கருப் பொருளே! நிலையாய பூதங்களின் பரமாணுக்களாகிய கருவாய் விளங்கும் நித்திய வானமாகியவனே! ஞானமாகிய மலையிடத்தே விளைகின்ற மருந்தாயும், மருந்தினது பயனும், அப்பயனால் விளைகின்ற ஞான பலத்தைத் தருகின்ற பெருவாழ்வாகப் பிறங்குபவனே, புலை, களவு முதலிய குற்றங்களை நீக்கி என்னையும் ஒருபொருள் எனக் கருதி ஆண்ட பெருமானே, வணக்கம். எ.று.

கல்வி ஞானமுடையார் கண்டும், செய்தும், அறிந்தும், காட்டும் துறைகள் பலவும் கலை எனப்படும். அக்கலைகளைக் கண்டு அழகு செய்து காண்பார் கருத்தைக் கவரும் நிலையில் உருவாக்கும் துறை, "கலைவளர் கலைத்துறை"யாகும். அக்கலைகளை வளர்த்து உருவாக்கி உலகிற்குப் பயன்படச் செய்தலின் இறைவனை, "கலைவளர் கலையே", "கலையினுட் கலையே", "கலை எலாம் தரும் ஒரு கருவே" எனக் கட்டுரைக்கின்றார். இக்கருத்தையே திருநாவுக்கரசர், "கலையாகி கலைஞானம் தானேயாகி எண்ணாகி எண்ணுக்குள் ஓர் எழுத்துமாகி எழும் சுடராய் எம்மடிகள் நின்றவாறே" என்று உரைப்பது காண்க. "கலையவன் மறையவன்" (சிரபுரம்) என்று ஞானசம்பந்தரும் உரைப்பது காண்க. நிலைவளர் கரு என்பது நிலையாய பூதங்களின் பரமாணுக்கள். அவற்றுக்குள் கருவாய் நின்று வானத்துள் உருவாய்ப் பூதங்களாய்த் தோன்றுவித்தலின், "கருவுட் கருவென வயங்கும் நித்திய வானமே" என்று உரைக்கின்றார். "கருவளர் வானம்" (பரிபாடல்: 2: 5) என்பதற்கு, பூதங்களின் பரமாணுக்கள் வளர்கின்ற வானமாகிய முதற் பூதம் என்று பரிமேலழகர் உரை கூறுவது காண்க. பூதங்களின் கருவாய் அக்கருவுக்குள் கருவாய் நின்று அவை விரிந்து பரந்து உலகமாதற்கு ஏதுவாதல் பற்றிச் சிதாகாச மாகிய ஞான வானத்தை, "கருவுட் கருவென வயங்கும் நித்திய வானமே" என்று வள்ளற் பெருமான் சிவ பரம்பொருளை விளக்குகின்றார். நித்திய வானத்தில் விளங்கும் பூதம் முதற் காரண கருப்பொருளாதலின் கருவினை, "நிலைவளர் கருவுட் கரு" என்று சிறப்பிக்கின்றார். ஞானத்து உச்சியில் பிறவி நோய் தீர்க்கும் மருந்தாய் விளங்குவது பற்றிச் சிவனை

"ஞான மலைவளர் மருந்து'' என்றும், மருந்துண்பார் நோய் நீங்கித் தேக பலம் பெறுவது போல ஞான மருந்துண்டார் அதன் பயனாகிய சிவஞான பலம் பெறுதலால், ''மருந்துறு பலனே மாபலம் தருகின்ற வாழ்வே'' என்று ஏத்துகின்றார். புலை, களவு முதலிய குற்றங்கள் தம்பால் நிகழாதபடி இறைவன் ஆண்டு கொண்டமை விளங்க, ''புலை தவிர்த்து எனையும் பொருளெனக் கொண்டு பொது நடம் புரிகின்ற பொருளே'' என்று போற்றுகின்றார்.

இதனால், கலை யுருவாய்ப் பூத காரணமாகிய கருப் பொருட்கள் தோன்றி வளரும் வானமாய் இறைவன் விளங்குவது எடுத்துரைத்த வாறும். (18)

**3890.** **மெய்ம்மையே கிடைத்த மெய்ம்மையே ஞான**
**விளக்கமே விளக்கத்தின் வியப்பே**
**கைம்மையே தவிர்த்து மங்கலம் அளித்த**
**கருணையே கரிசிலாக் களிப்பே**
**ஐம்மையே அதற்குள் அதுஅது ஆகும்**
**அற்புதக் காட்சியே எனது**
**பொய்ம்மையே பொறுத்துப் புகலளித் தருளிப்**
**பொதுநடம் புரிகின்ற பொருளே.**

**உரை :** என்னிடத்துளவாகும் பொய்ம்மைகளைப் பொறுத்தருளி எனக்கும் அபயமளித்து, அம்பலத்தில் ஆடல் புரிகின்ற பரம்பொருளே! மெய்யாக எனக்குக் கிடைத்த மெய்ப்பொருளே! ஞான விளக்கமே! அவ் விளக்கத்தால் உள்ளத்தில் தோன்றும் வியப்பின் வடிவாகியவனே! இன்ப மில்லாத நிலையைப் போக்கி இன்ப நிலையாகிய மங்கலத்தை எனக்கு அளித்தருளிய கருணைமூர்த்தியே! குற்றமில்லாத களிப்பை நல்குபவனே! வியப்பின் உருவாய் அதற்குள் அதுவதுவாய் நின்று திகழும் அற்புதம் பயக்கும் காட்சிப் பொருளே, வணக்கம். எ.று.

உலகியல் வாழ்வில், மெய் போலப் பொய்யும் விரைவில் உயிர் களுக்குக் குற்றம் எய்துவித்தலின் அதனைப் பொறுத்தருளி அபய வரமளிக்கும் அருளாளனாதல் பற்றிச் சிவனை, ''பொய்ம்மையே பொறுத்துப் புகலளித்து அருளிப் பொது நடம் புரிகின்ற பொருளே'' என்று புகழ்கின்றார். மெய்ப்பொருளாய்த் தம் உணர்வால் உணர் தற்குரியதாய் விளங்குவது பற்றி, ''மெய்ம்மையே கிடைத்த மெய்ம்மையே'' என்று விளம்புகின்றார். மெய்ம்மை யுணர்வால் ஞான மயமாய்த் தோன்றிச் சிவம் உள்ளத்தில் விளங்குவது பற்றி, ''ஞான விளக்கமே'' எனவும், அவ்விளக்கத்தால் தமக்கு உளதாகிய வியப்பை நயந்து, ''விளக்கத்தின் வியப்பே'' எனவும் இயம்புகின்றார். கைம்மை - இன்பமில்லாத நிலைமை. அமங்கலமாகிய துன்ப நிலையைப் போக்கி மங்கலமாகிய இன்ப நிலையைத் தமக்கு அருளினமை பற்றி, ''மங்கலம் அளித்த கருணையே'' என்று கட்டுரைக்கின்றார். கரிசு - குற்றம். இன்பமும் துன்பமும் இரவும் பகலும் போல மாறி வரும் இயல்பின வாதலின் துன்பம் தொடர நிற்கும் களிப்பினை நீக்குதற்கு, ''கரிசிலாக்

களிப்பே'' என்று கூறுகின்றார். இன்பத்தைத் தொடரும் துன்பத்தை ஈண்டுக் கரிசு எனக் குறிக்கின்றார். ஐம்மை - வியப்புக்குரிய தன்மை. வியப்புக்குரிய பொருளாய்க் காணப்படும் பொருளனைத்தும் வியத்தகு நிலைமையில் விளங்கத் தோன்றுதல் பற்றி, "ஐம்மைக்குள் அதுவது வாகும் காட்சியே'' என்று சிவனைச் சிந்திக்கின்றார். எல்லாப் பொருளிலும் கலந்து நின்று அதன்கண் வியப்பு விளைவிக்கும் தன்மை யைத் தோற்றுவித்தலால், "அதுவதுவாகும் அற்புதக் காட்சியே'' என்று போற்றுகின்றார்.

இதனால், உலகியற் பொருட்கள் ஒவ்வொன்றிலும் அறிவுடையார் அறிந்து வியக்கும் தன்மை விளங்க, இறைவன் கலந்திருக்கும் அற்புதக் காட்சியைத் தெரிவித்தவாறும். (19)

3891. காரண அருவே காரிய உருவே
காரண காரியம் காட்டி
ஆரண முடியும் ஆகம முடியும்
அமர்ந்தொளிர் அற்புதச் சுடரே
நாரண தலமே நாரண வலமே
நாரணு காரத்தின் ஞாங்கர்ப்
பூரண ஒளிசெய் பூரண சிவமே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

உரை: அம்பலத்தில் ஆடல் புரிகின்ற சிவ பரம்பொருளே! பொருள்கட் கெல்லாம் காரணமாய் விளங்கும் அருவப் பொருளே! காரியப் பொருட்களுக்கு உருவளிக்கும் முதல்வனே! எல்லாவற்றிற்கும் காரண காரியங்களை யுணர்வித்து வேத முடிவிலும் ஆகம முடிவிலும் இருந்து விளங்கும் அற்புத ஒளியே! நாரண உலகமாய் அவ்வுலகிற் பெறலாகும் ஞான வன்மையாய் நாரண உருவங்களுக்கு மேலாய் நிறைந்த ஒளி செய்கின்ற பரிபூரண சிவபெருமானே, வணக்கம். எ.று.

உருவாய்க் காணப்படுகின்ற பொருள் அனைத்திற்கும் ஏதுவாகிய காரணம் அருவமாதலின், "காரண அருவே காரிய உருவே'' என்று கூறுகின்றார். காணப்படும் நீராகிய காரியப் பொருட்குக் காரணமாகிய நீர்க் காற்று, நெருப்புக் காற்று இரண்டும் அருவமாதலின், "காரண அருவே காரிய உருவே'' என வள்ளற் பெருமான் கூறுவது மெய்ம்மை யாதல் காண்க. உலகிலுள்ள காரியங்கள் அனைத்திற்கும் காரணம் உண்டென்பது அறிவாராய்ச்சியாளர் அறிந்ததாகலின் அதனை, "காரண காரியம் காட்டி'' எனவும், வேத முடியிலும் ஆகம முடியிலும் ஞானி களால் உளதெனப் புணர்ந்துரைக்கப்படுதலின், "ஆரண முடியும் ஆகம முடியும் அமர்ந்தொளிர் அற்புதச் சுடரே'' எனவும் இயம்புகின்றார். நாரண தலம் - நாரணனை வழிபடுவோர் சென்றடையும் உலகம். அவ் வுலகினை யடைந்தோர் பெறும் ஞான நலத்தை, "நாரண வரமே'' எனவும், அவ்வுலகில் அவர்கள் பெறும் நாரண வுருவை "நாரணுகாரம்'' எனவும் நவில்கின்றார். நாரணர்கள் மேற்கொண் டுறையும் நாரண ரூபத்தை "நாரணுகாரம்'' என்று தெரிவிக்கின்றார். நாரண பதத்துக்கு

மேலதாகலின் சிவ பதத்தை "நாரண காரத்தின் ஞாங்கர்ப் பூரண ஒளி செய் பூரண சிவமே" என்று புகல்கின்றார்.

இதனால், வேதாகமங்களின் முடியிலும் 'நாரண உலகத்தின் மேலும் சிவம் காட்சிப் படுமாறு தெரிவித்தவாறும். (20)

திருவருட்பா-வரலாற்றுமுறை-ஆறும் திருமுறை
உரைவேந்தர் உரை-மூன்றும் பகுதி
முடிந்தது

# ஆறாம் திருமுறை

## நான்காம் பகுதி

## 40. ஆனந்தானுபவம்

அஃதாவது, சிவஞானத்தால் பெறப்படும் இன்பத்தை அனுபவித்துப் பாடுவது.

### நேரிசை வெண்பா

3892. கள்ளத்தை எல்லாம் கடக்கவிட்டேன் நின்அருளாம்
வெள்ளத்தை எல்லாம் மிகஉண்டேன்—உள்ளத்தே
காணாத காட்சிஎலாம் காண்கின்றேன் ஓங்குமன்ற
வாணா நினக்கடிமை வாய்த்து.

உரை : புகழ் கொண்டு ஓங்குகின்ற அம்பலத்தில் எழுந்தருளுகின்ற பெருமானே! உனக்கு அடிமையாகும் நலம் எய்தப் பெற்று என்னுள்ளத்தில் படிந்திருக்கும் கள்ள உணர்வுகளெல்லாம் நீக்கி விட்டதோடு நினது திருவருளாகிய இன்ப வெள்ளத்தை மிகவும் உண்டு அதனால் சிறப்புற்ற என்னுள்ளத்தில் இதுகாறும் கண்டறியாத இன்பக் காட்சி எல்லாவற்றையும் கண்டு மகிழ்கிறேன். எ.று.

அம்பலத்தில் எழுந்தருளி அடியார்களுக்கு அருளொளி வழங்குகின்றானாதலால் கூத்தப் பெருமானை, "மன்ற வாணா" எனப் புகழ்கின்றார். மன்றின்கண் எழுத்தருளுவது பற்றி "மன்றவாணன்" என்பது இறைவனுக்குப் பெயராயிற்று. வாணன் - வாழ்நன் என்பதன் மரூஉ. சிவனுக்கு அடிமையாகும் திறம் எல்லார்க்கும் எளிதில் எய்துவதன்றாதலின், "நினக்கு அடிமை வாய்த்து" எனவும், அதனால் தாம் பெற்ற பேறுகள் இவை என்பாராய், நெஞ்சில் படிகின்ற கள்ளத் தன்மை வாய்ந்த எண்ணங்கள் எல்லாவற்றையும் போக்கிக் கொண்டேன் என்பது தோன்ற, "கள்ளத்தை எல்லாம் கடக்க விட்டேன்" எனவும், திருவருள் ஞான இன்பத்தை நிறையப் பெற்று உண்டு மகிழ்ந்தமை புலப்படுத்தற்கு, "நின் அருளாம் வெள்ளத்தை எல்லாம் மிகவுண்டேன்" எனவும், தமது மனத்தின்கண் சிவபரமான ஞான இன்பக் காட்சிகள் பலவற்றையும் கண்டமை விளங்க, "உள்ளத்தே காணாத காட்சி யெல்லாம் காண்கின்றேன்" எனவும் எடுத்துரைக்கின்றார்.

இதனால், அருள் ஞானப் பேற்றால் சிவபரமான ஞான இன்பக் காட்சிகள் கண்டமை தெரிவித்தவாறாம்.

3893. காலையிலே நின்றன்னைக் கண்டுகொண்டேன் சன்மார்க்கச்
சாலையிலே இன்பம் தழைக்கின்றேன்—ஞாலமிசைச்
சாகா வரம்பெற்றேன் தத்துவத்தின் மேல்நடிக்கும்
ஏகா நினக்கடிமை ஏற்று.

உரை : தத்துவ நெறியின் உச்சியில் நின்று நடிக்கும் ஒருவனாகிய சிவனே! யான் நினக்கு அடியவனாகிய தன்மையை மேற்கொண்டு, திருவருள் ஞானம் பெற்ற காலையில் நின்னை எனது ஞான நாட்டத்தால் கண்டு கொண்டு, சன்மார்க்க நெறியிலே நின்று கொண்டு இன்பம் பெருகுகின்றேன்; அதன் மேலும் இந்நிலவுலகில் பிறப்புக்கு ஏதுவாகிய சாகாமை என்னும் வரமும் பெற்றுக் கொண்டேன்; இனி ஒன்றாலும் எனக்குக் குறையில்லை. எ.று.

நிலம் முதல் சிவம் ஈறாக வுள்ள தத்துவம் முப்பத்தாறுக்கும் அப்பாலதாகிய தத்துவாதீத வெளியில் தான் ஒருவனாய் நின்று சிவபெருமான் திருக்கூத்தாடுகின்றானாதலால் அவனை, "தத்துவத்தின் மேல் நடிக்கும் ஏகா" என்று துதிக்கின்றார். ஏகன் - ஒருவன். காலை என்பது அருள் ஞானம் பெற்ற காலத்தின் மேற்று. ஞான நாட்டம் பெற்றாலன்றிச் சிவனைக் காண்டல் இல்லையாதலால், "காலையிலே நின்றன்னைக் கண்டு கொண்டேன்" என்று கூறுகின்றார். சன்மார்க்கச் சாலை - சன்மார்க்கமாகிய பெருவெளி. ஞானம் பெற்ற விடத்துச் சன்மார்க்க நெறியால் இன்பம் பெறுதல் இயல்பாதலால், "சன்மார்க்கச் சாலையிலே இன்பம் தழைக்கின்றேன்" என்றும், சன்மார்க்க நெறியின் பயன் உலகில் மீளப் பிறவாப் பெருநிலைப் பேறாதலின், "ஞாலமிசைச் சாகா வரம் பெற்றேன்" என்றும் இசைக்கின்றார்.

இதனால், சன்மார்க்க நெறி நின்று சாகா வரம் பெற்ற இயல்பு எடுத்துரைத்தவாறாம். (2)

3894. மூவர்களும் செய்ய முடியா முடிபெல்லாம்
யாவர்களுங் காண எனக்களித்தாய்—மேவுகடை
நாய்க்குத் தவிசளித்து நன்முடியும் சூட்டுதல்எந்
தாய்க்குத் தனிஇயற்கை தான்.

உரை : கடைப்பட்ட நாய்க்கு அரசாசனம் தந்து, அதன் தலையில் அழகிய முடியும் சூட்டுதல் போல் எம்போலியர்க்குத் திருவருள் வழங்குவது எந்தாயாகிய உனக்கு ஒப்பற்ற இயல்பாதலால், பிரமன் முதலிய தேவர் மூவரும் செய்ய முடியாத முடிபுகள் எல்லாவற்றையும் ஏனைத் தேவர்களும் மக்களும் காண எனக்குத் தந்தருளினாய்; நின் கருணை இருந்தவாறு என்னே. எ.று.

இறைவன் தமக்குத் திருவருள் வழங்கிய திறத்தை மணிவாசகப் பெருமான், "அடியேற்குப் பொற் றவிசு நாய்க்கு இடுமா றன்றே நின் பொன்னருளே" (ஏசறவு) என்று புகழ்ந்துரைப்பது கொண்டு வள்ளற்

பெருமானும் தம்மை ஆட்கொண் டருளியதை வியந்து இறைவனை, "மேவு கடை நாய்க்குத் தவிசளித்து நன்முடியும் சூட்டுதல் என் தாய்க்குத் தனி இயற்கைதான்" என்று வியந்துரைக்கின்றார். தவிசு - ஆசனம். பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூவரும் தேவர்களுக் கெல்லாம் உயர்ந்த தேவர்களாதலின் அவர்களை, "மூவர்களும்" எனச் சிறப்பிக்கின்றார். அம்மூவரும் காண முடியாத ஞான முடியாகித் திருவருள் இன்ப முடிபொருளைத் தமக்களித்தான் என மகிழ்கின்றாரா தலால், "மூவர்களும் செய்ய முடியா முடிபெல்லாம் யாவர்களும் காண எனக்களித்தாய்" என்று மொழிகின்றார். மக்களில் உயர்ந்த தேவர் களுக்கும் தேவர்களாகிய பிரமன் முதலிய மூவரும் கண்டறிய முடியாத செம்பொருள் முடிபை இறைவன் தமக்கு அறியச் செய்த அருள் நலத்தை, மண்ணுலக மக்களும் காண அருளினான் என்பாராய், "யாவர்களும் காண எனக்கு அளித்தாய்" என்றும் எடுத்துரைக்கின் றார்.

இதனால், திருவருள் ஞானானந்த முடிபை யாவரும் காணத் தமக்கு இறைவன் அளித்த திறம் தெரிவித்தவாறும். (3)

**3895.** **கொள்ளைஎன இன்பம் கொடுத்தாய் நினதுசெல்வப்**
**பிள்ளைஎன எற்குப் பெயர்இட்டாய்—தெள்ளமுதம்**
**தந்தாய் சமரசசன் மார்க்கசங்கத் தேவைத்தாய்**
**எந்தாய் கருணை இது.**

**உரை :** எந்தையே! எனக்கு அளவு கடந்த இன்பத்தைக் கொடுத் தருளினாய்; அன்றியும் நினக்கு என்னைச் செல்வப் பிள்ளை, என்று பெயரும் தந்தருளினாய்; அதன் மேல் ஞானமாகிய தெளிந்த அமுதத்தை யும் தந்தருளினாய்; அதனோடு சமரச சன்மார்க்க சங்கத்திடையே என்னை இருக்க வைத்தாய்; இது நின் கருணைத் திறமாகும், எ.று.

வரையறையின்றி வாரி வழங்குதலைக் "கொள்ளை என இன்பம் கொடுத்தாய்" என்று கூறுகின்றார். சிவஞானப் பேற்றால் தாம் சிவனுக்கு அன்புடைய செல்வப் பிள்ளை எனும் சிறப்புற்றமை தெரிவித்தற்கு, "நினது செல்வப் பிள்ளை என எற்குப் பெயர் இட்டாய்" என்று செப்பு கின்றார். ஞானமருளிய இயல்பைத் "தெள்ளமுதம் தந்தாய்" எனவும், தந்த ஞானத்தை மறவாமை பொருட்டுச் சமரச சன்மார்க்க சங்கத்தில் இருக்க வைத்தான் என்பது விளங்க, "சமரச சன்மார்க்க சங்கத்தே வைத்தாய்" எனவும், இச்செயல் இறைவன் திருவருட் செயலாம் என்பது தோன்ற, "எந்தாய் கருணை யிது" எனவும் இசைக்கின்றார். இது என்பது இன்பம் கொடுத்தாய், பெயரிட்டாய், அமுதம் தந்தாய், சன்மார்க்க சங்கத்தே வைத்தாய் என்பவற்றோடு தனித்தனிச் சென்று சேரும்.

இதனால், இறைவனுடைய கருணைச் செயல்களை விளக்கியவாறும். (4)

3896. கண்டேன் களித்தேன் கருணைத் திருஅமுதம்
உணடேன் உயர்நிலைமேல் ஓங்குகின்றேன்—கொண்டேன்
அழியாத் திருஉருவம் அச்சோஎஞ் ஞான்றும்
அழியாச்சிற் றம்பலத்தே யான்.

**உரை :** ஆ! ஆ! எக்காலத்தும் கெடுதல் இல்லாத திருச்சிற்றம்பலத்தை அடைந்த யான் கூத்தப் பெருமானைக் கண்ணாரக் கண்டு களித்தேன்; அவனது கருணையாகிய ஞான வமுதத்தை நிறைய உண்டேன்; அதனால் ஞான நெறியில் உயர்நிலை எய்தி மேலும் ஓங்குகின்றேன்; அன்றியும் அழிவில்லாத சிவஞான இன்ப வுருவம் பெற்றுக் கொண்டேன். எ.று.

திருச்சிற்றம்பலத்தின் நிலையாய தன்மையை எஞ்ஞான்றும் அழியாச் சிற்றம்பலம் என்று புகழ்கின்றார். அம்பலத்தின்கண் எழுந்தருளும் பெருமானைக் கண்ட அனுபவத்தை, "கண்டேன் களித்தேன்" எனவும், ஆங்கு தான் பெற்ற ஞான இன்பத்தை, "கருணைத் திருவமுதம் உண்டேன்" எனவும், அதனால் ஞான நெறியில் உயர்ந்த இயல்பினை, "உயர்நிலை மேல் ஓங்குகின்றேன்" எனவும், அது காரணமாக, தான் சிவானந்த ஞான வடிவம் பெற்ற திறத்தை, "அழியாத் திருவுருவம் கொண்டேன்" எனவும் கூறுகின்றார்.

இதனால், திருச்சிற்றம்பல, தரிசனம் பெற்ற அனுபவத்தை வடலூர் வள்ளல் சிறப்பித் தோதியவாறும். (5)

3897. பார்த்தேன் பணிந்தேன் பழிச்சினேன் மெய்ப்புளகம்
போர்த்தேன்என் உள்ளம்எலாம் பூரித்தேன்—ஆர்த்தேநின்
றாடுகின்றேன் பாடுகின்றேன் அன்புருவா னேன்அருளை
நாடுகின்றேன் சிற்சபையை நான்.

**உரை :** ஞான சபையின்கண் பெறுதற்குரிய திருவருள் ஞானத்தை நயந்து பெற்ற நான் அப்பேரருள் சபையை அடைந்து கண்ணாரப் பார்த்தேன்; மெய்யாற் பணிந்தேன்; வாயால் துதித்தேன்; உடம்பெல்லாம் புளகம் கொண்டு உள்ளமெல்லாம் பூரித்தேன்; இறைவன் திருப்பெயரை ஓசை மிக ஓதி அங்கே நின்று ஆடுகின்றேன்; அவன் புகழைப் பாடுகின்றேன்; அவன்பால் உண்டாகிய அன்பே உருவாகினேன். எ.று.

பணிதல் - உடல் தரையில் பொருந்த வீழ்ந்து வணங்குதல். பழிச்சுதல் - அன்பால் துதித்தல். புளகம் போர்த்தல் - தேக முற்றும் மயிர்க் கூச்செறிதல். உள்ளம் பூரித்தலாவது இன்ப மிகுதியால் தடித்து வீங்குதல். ஆர்த்தல் - ஆரவாரித்தல். மெய் மறந்து அன்புருவாய் நிற்றலை அன்புருவானேன் என்று விளக்குகின்றார். திருவருள் ஞான நிலையமாதலின் அதனைப் பெறுமிடமாகிய ஞான சபையை, "அருளை சிற்சபையை நான் நாடுகின்றேன்" என வுரைக்கின்றார்.

இதனால், ஞான சபையைத் தரிசித்து ஞானானந்தம் எய்திய திறத்தை வடலூர் வள்ளல் தெரிவித்தவாறும். (6)

3898. எண்ணுகின்றேன் எண்ணங்கள் எல்லாம் தருகின்றான்
உண்ணுகின்றேன் உண்ணஉண்ண ஊட்டுகின்றான்—
நண்ணுதிருச்
சிற்றம் பலத்தே திருநடஞ்செய் கின்றான்என்
குற்றம் பலபொறுத்துக் கொண்டு.

உரை : அடியேன் செய்கின்ற குற்றங்கள் பலவற்றையும் பொறுத்துக் கொண்டு அன்பர்கள் அன்புடன் வந்து வணங்குகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் திருநடம் புரிகின்ற சிவபெருமான், எண்ணுகின்ற நான் எண்ணியவற்றை யெல்லாம் எய்தத் தருகின்றதோடு நான் உண்பனவற்றை மேன் மேலும் உண்ணுமாறு உண்பிக்கின்றான்; அவன் திருவருளை என்னென்பது. எ.று.

கணந் தோறும் மாறுகின்ற முக்குண வயத்தால் குற்றம் புரிவது எனக்கு இயல்பாவதை யறிந்து, யான் செய்கின்ற குற்றங்கள் அனைத்தையும் சிற்றம்பலக் கூத்தப்பெருமான் பொறுத்து அருளுகின்றான் என்பாராய், "என் குற்றம் பலவற்றையும் பொறுத்துக் கொண்டு சிற்றம்பலத்தே திருநடம் செய்கின்றான்" என்று கூறுகின்றார். நாள்தோறும் அன்பர்கள் வந்து வணங்கும் சிறப்புடைமை பற்றி, "நண்ணு திருச்சிற்றம்பலம்" என நவில்கின்றார். கூத்தாடும் பெருமானாயினும் யான் எண்ணியவற்றை எண்ணியாங்குத் தந்தருளுவதோடு யான் நுகர்தற் குரியவற்றையும் மேன் மேலும் நுகர்ந்து மகிழுமாறு நல்கி நுகர்விக்கின்றான் என்பாராய், "எண்ணுகின்றேன் எண்ணங்கள் எல்லாம் தருகின்றான் உண்ணுகின்றேன் உண்ண உண்ண ஊட்டுகின்றான்" என்று இயம்புகின்றார்.

இதனால், அம்பலக் கூத்தனாகிய இறைவன் எண்ணியவை எண்ணியாங்கு யான் பெறுவித்து உண்பனவற்றைத் தடையின்றி உண்டு மகிழுமாறு உதவுகின்றமை தெரிவித்தவாறும். (7)

3899. கொண்டான் அடிமை குறியான் பிழைஒன்றும்
கண்டான் களித்தான் கலந்திருந்தான்—பண்டாய
நான்மறையும் ஆகமமும் நாடுந் திருப்பொதுவில்
வான்மயத்தான் என்னை மகிழ்ந்து.

உரை : பழையனவாகிய நால்வகை வேதங்களும் சிவாகமங்களும் போற்றுகின்ற திருச்சிற்றம்பலத்தில் ஞான மயமாகிய சிவபெருமான் என்பால் மனமுவந்து என்னை அடிமை கொண்டருளியதோடு என்பால் உளவாகும் பிழைகளில் ஒன்றையும் மனத்திற் கொள்ளாராய், தன்னுடைய அருட் பார்வையால் என்னைப் பார்த்து மகிழ்ந்து என் உயிரோடு கலந்து கொண்டான். எ.று.

காலத்தால் மிகவும் பழமையான இருக்கு முதலிய வேதங்கள் நான்கினையும், காமிகம் முதலாகிய சிவாகமங்கள் இருபத்தெட்டினையும் ஓதி யுணர்ந்த பெருமக்கள் நாள்தோறும் தரிசித்து வணங்குதற்கு விரும்பும் சிற்றம்பலமாதலின், "பண்டாய நான்மறையும் ஆகமும் நாடும்

திருப்பொது'' என்றும், அதனை ஞானகாயம் என்பது பற்றி அதன்கண் விளங்கும் சிவனை, "வான் மயத்தான்'' என்றும் கூறுகின்றார். என்னுடைய குணஞ் செயல்களை விரும்பி இறைவன் என்னை அடியவனாகக் கொண்டான் என்பாராய், "என்னை மகிழ்ந்து அடிமை கொண்டான்'' என்றும், யான் செய்யும் பிழைகளைப் பொருளாகக் கருதாமல் அருளுகின்றான் என்பாராய், "குறியான் பிழை ஒன்றும்'' என்றும், என்னைத் தனது அருட் கண்ணால் கண்டு மகிழ்ந்து என் உயிர்க்குயிராய்க் கலந்து கொண்டான் என்பாராய், "கண்டான் களித்தான் கலந்திருந்தான்'' என்றும் கூறுகின்றார். (8)

இதனால், இறைவன் தம்மை அடிமை கொண்டு தன்னுள் உயிர்க்குயிராய்க் கலந்து கொண்டமை தெரிவித்தவாறும்.

**3900.** **கண்டேன் களித்தேன் கருணைத் திருஅமுதம்**
**உண்டேன் அழியா உரம் பெற்றேன்—பண்டே**
**எனைஉவந்து கொண்டான் எழில்ஞான மன்றம்**
**தனைஉவந்து கொண்டான் தனை.**

**உரை :** உயர்ந்த ஞான சபையின்கண் மகிழ்ச்சியோடு எழுந்தருளுபவனும், முன்னமே என்பால் அன்புற்று உரியவனாக ஏன்று கொண்ட கூத்தப் பெருமானைக் கண் குளிரக் கண்டு மகிழ்ந்து அவனுடைய திருவருளாகிய அமுதத்தை உண்டு கெடாத ஞான வன்மை பெற்றேன். எ.று.

எழில் - உயர்ச்சி. ஞான மன்றம் - ஞான சபை. ஞான சபைக்கு நாயகனாக விளங்குவதால், "ஞான மன்றம் தனை உவந்து கொண்டான்'' எனவும், இளமை பருவத்தேயே தமது உள்ளத்தில் மகிழ்வோடு தன்னை ஏன்று கொண்டான் என்பாராய், "பண்டே எனை உவந்து கொண்டான்'' எனவும் இயம்புகின்றார். இறைவனது காட்சி தமக்கு மகிழ்வு தந்தது போல அப்பெருமானுடைய திருவருள் தமது மனத்திற்குக் கெடாத திண்மையை அளித்தது என்றற்கு, "கருணைத் திருவமுதம் உண்டேன் அழியா உரம் பெற்றேன்'' என்று கூறுகின்றார்.

இதனால், இறைவனுடைய திருவருட் காட்சியால் சலியா மனத் திட்பம் பெற்றது கூறியவாறும். (9)

**3901.** **தாதையாம் என்னுடைய தாயாம்என் சற்குருவாம்**
**மேதையாம் இன்ப விளைவுமாம்—ஓது**
**குணவாளன் தில்லைஅருட் கூத்தன் உமையாள்**
**மணவாளன் பாத மலர்.**

**உரை :** சான்றோரால் புகழ்ந்து ஓதப்படுகின்ற எண்வகைக் குணங்களை யுடையவனும், தில்லையம்பலத்தில் அருட் கூத்தாடுபவனும், உமையம்மையை மணந்து கொண்ட கணவனுமாகிய சிவனுடைய மலர் போன்ற இரு திருவடிகளும்எனக்குத்தந்தையும், தாயும், சற்குருவாகிய ஞான முதல்வனும், இன்பம் நுகர்விக்கும் பொருளுமாவான். எ.று.

சிவாகமங்கள் ஓதுகின்ற எண்வகைக் குணங்களையும் கொண்டு விளங்குபவனாதலால் சிவனை, "ஓது குணவாளன்" என்றும், தில்லையம் பலத்தில் ஞானக் கூத்தாடுவது பற்றி, "தில்லை அருட் கூத்தன்" என்றும், உமையம்மையை உலகமறியத் திருமணத்தால் மணந்து கொண்டவனாதலால், "உமையாள் மணவாளன்" என்றும் மகிழ்ந்துரைக்கின்றார். அவருடைய இரண்டு திருவடிகளும் தாமரை போல் அழகும் ஒளியும் உடையவையாதலின், "பாத மலர்" என்று புகழ்கின்றார். தாதை - தந்தை. சற்குருவாம் மேதை, உண்மை ஞான வுருவாகிய மேதக்க ஞானத் திருவுருவினன் என்றும், அவருடைய திருவடி ஞானம் பேரின்பம் விளைவித்தலின், "இன்ப விளைவுமாம்" என்றும் இசைக்கின்றார்.

இதனால், தில்லைக் கூத்தப் பெருமானுடைய திருவடியின் சிறப்பு எடுத்தோதியவாறும். இனி வரும் இரண்டு பாட்டுக்களுக்கும் இதுவே கருத்தாக உரைத்துக் கொள்க. (10)

3902. திருவாம்என் தெய்வமாம் தெள்ளமுத ஞானக்
குருவாம் எனைக்காக்கும் கோவாம்—பருவரையின்
தேப்பிள்ளை யாம்எம் சிவகாம வல்லிமகிழ்
மாப்பிள்ளை பாத மலர்.

உரை : பெரிய மேரு மலையின் தெய்வ மகளாகிய எங்களுடைய சிவகாமவல்லி எனும் அன்னைக்கு மாப்பிள்ளையாகிய சிவனுடைய திருவடித் தாமரைகள் தாம் எனக்குச் செல்வமும் தெய்வமும் தெளிந்த அமுத மயமான ஞானத்தை உபதேசிக்கும் குருவும் என்னைக் காத்தருளுகின்ற அருளரசுமாகும். எ.று.

மேரு மலையினும் உயர்ந்த மலை உலகில் வேறே இல்லாமையால் அதனைப் "பருவரை" என்கின்றார். அந்த மலைக்குரிய பருவத ராசன் மகளாய்ப் பிறந்து வளர்ந்தமை பற்றி உமாதேவியை, "பருவரையின் தேப்பிள்ளை" என்று சிறப்பிக்கின்றார். தேப்பிள்ளை- தெய்வ மகள்; இனிய மகள் என்றாலும் பொருந்தும். உமாதேவிக்குச் சிவகாமவல்லி என்னும் பெயருண்டு. சிவனையே காதலித்தமையால் அவளுக்குச் சிவகாமவல்லி என்று பெயராயிற்று. மாப்பிள்ளை - கணவன். உலகியல் இன்ப வாழ்வுக்குச் செல்வம் இன்றியமையாததாகையால், "பாத மலர்த் திருவாம்" என்றும், நாளும் வணங்குதற்குரிய தெய்வமாதல் விளங்க, "தெய்வமாம்" என்றும், தெளிந்த அமுத மயமாய் அறிவுக்கு ஞானப் பொருளாய் விளங்குவதால், "தெள்ளமுத ஞானக் குருவாய்" என்றும், துன்பம் வந்து சுடச்சுடத் தாக்குமிடத்து அருளாற்றல் தந்து ஆதரித்தலின், "எனைக் காக்கும் கோவாம்" என்றும் கூறுகின்றார். (11)

3903. என்அறிவாம் என்அறிவின் இன்பமாம் என்னறிவின்
தன்அறிவாம் உண்மைத் தனிநிலையாம்—மன்னுகொடிச்
சேலைஇட்டான் வாழச் சிவகாம சுந்தரியை
மாலைஇட்டான் பாத மலர்.

**உரை :** வெற்றி நிலைபெற்ற குடியின்கண் சேல் மீனை எழுதிய பாண்டி வேந்தன் இன்ப வாழ்வு பெறும் பொருட்டுச் சிவகாம சுந்தரி யாகிய அங்கயற் கண்ணியை மாலையிட்டு மணந்து கொண்ட சொக்கநாதப் பெருமானுடைய மலர் போன்ற திருவடி யிரண்டும் எனக்கு நல்லறிவாயும், என் அறிவுக்குள் சுரக்கின்ற இன்பமாகவும், என் அறிவினுள் விளங்கும் உண்மை யறிவாகவும், உண்மைத் தன்மைக்குரிய தனிநிலையாகவும் விளங்குகின்றன. எ.று.

பாண்டி வேந்தனுக்கு மீன் எழுதிய கொடி யுரியதாகலின் பாண்டியனை, "மன்னு கொடிச் சேலை யிட்டான்" என்று சிறப்பிக்கின்றார். இப்பாண்டி வேந்தனை மலையத்துவசன் என்றும் கூறுவர். சிவகாம சுந்தரியை "அங்கயற் கண்ணி" என்றும், "மீனாட்சி" என்றும் புராணங் கள் கூறுகின்றன. மீனாட்சியைத் திருமணம் செய்து கொள்ளுமிடத்து மணமாலை சூட்டினானதலால், "சிவகாம சுந்தரியை மாலை யிட்டான்" என்று புகழ்கின்றார். சிவனுடைய திருவடியே தமக்கு இயற்கை அறிவாகும் என்றற்கு, "என்னறிவாம்" என்றும், அறிவினுள் இன்பம் பிறத்தலால் "என்னறிவின் இன்பமாம்" என்றும், அறிவினால் அறிவது அறியுமிடத்து மயக்கம் தெளிய உள் நின்று விளங்கும் உண்மை யறிவை, "என்னறிவின் தன்னறிவாம்" என்றும், மெய்ம்மைத் தன்மைக்கு ஒப்பற்ற தனிநிலையமாக இறைவன் திருவடி விளங்குவது பற்றி, "உண்மைத் தனிநிலையாம்" என்றும் இயம்புகின்றார். (12)

திருச்சிற்றம்பலம்

# 41. பரசிவ நிலை

அஃதாவது, சுத்த மாயா மண்டலத்துக்கு, அதீதமாய் சிற்பர வியோமமாகிய பரமண்டலத்தில் விளங்குகின்ற சிவ பரம்பொருளின் குணஞ் செயல்களை விரித்தோதிப் பரவுவதாம். பரவியோமம் பராகாசம் எனவும் ஞான நூல்களால் குறிக்கப்படுவது. இதனை ஞானகாசம் எனவும், ஞான சபை எனவும் சான்றோர்கள் புகழ்ந்தோதுவதால் பராகாசப் பரசிவத்தைச் "சிற்சபையில் விளங்குகின்ற தெய்வம்" எனச் சிறப்பித்தோதுகின்றார்.

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3904. அருட்சோதித் தெய்வம்எனை ஆண்டுகொண்ட தெய்வம்
அம்பலத்தே ஆடுகின்ற ஆனந்தத் தெய்வம்
பொருட்சாரும் மறைகள்எலாம் போற்றுகின்ற தெய்வம்
போதாந்தத் தெய்வம்உயர் நாதாந்தத் தெய்வம்
இருட்பாடு நீக்கிஒளி ஈந்தருளும் தெய்வம்
எண்ணியநான் எண்ணியவா றெனக்கருளும் தெய்வம்
தெருட்பாடல் உவந்தெனையும் சிவமாக்கும் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

**உரை :** ஞான சபையில் விளங்குகின்ற தெய்வமாகிய சிவமே திருவருள் ஞானமாகிய சோதியை யுடையதும், என்னை அருள் நெறிக்கண் நிறுத்தி ஆண்டு கொண்டதும், தில்லையம்பலத்தே ஆடு முகத்தால் உயிர்கட்கு இன்பத்தைத் தருவதும், பொருள் நிறைந்த வேதங்கள் யாவும் போற்றுகின்றதும், ஞான யோக நெறியின் முடிவிலும் தத்துவங்களின் உச்சியில் உயர்ந்து விளங்கும் நாத தத்துவத்தின் முடிவில் விளங்குவதும், அஞ்ஞானமாகிய இருளால் வரும் துன்பத்தைப் போக்கி இன்ப ஒளியினைத் தந்தருளுவதும், நான் எண்ணியவற்றை எண்ணியவாறு எய்துவிப்பதும், என்னுடைய தெளிந்த பொருள் நிறைந்த பாடல்களை ஏற்று மகிழ்ந்து என்னைச் சிவமாக்குவதும் ஆகும். எ.று.

திருவருள் ஞானத்தையே தனக்குத் திருவுருவாகக் கொண்ட தெய்வம் என்பாராய், "அருட் சோதித் தெய்வம்" எனவும், உயிர்கட்குத் திருவருள் ஞானம் அருளி ஆளாகக் கொள்கின்ற தெய்வம் என விளக்கு தற்கு, "அருட் சோதித் தெய்வம் என்னை ஆண்டு கொண்ட தெய்வம்" எனவும் தெரிவிக்கின்றார். அம்பலத்தில் நிகழ்த்துகின்ற திருக்கூத்து

ஆன்மாக்கட்கு இன்பமாகிய உறுதிப் பொருளை நல்குவதென்பது பற்றி, "அம்பலத்தே ஆடுகின்ற ஆனந்தத் தெய்வம்" என ஓதுகின்றார். மெய்யுணர்வுக்குரிய மெய்ப்பொருளனைத்தும் தன்னகத்தே கொண்ட வேதங்களால் துதிக்கப் படுவது பற்றி, "பொருட் சாரும் மறைகளெலாம் போற்றுகின்ற தெய்வம்" என்றும், ஞான நூல்களை ஓதியும் உணர்ந்தும் ஞான நெறியினின்றும் பெறலாகும் ஞானப் பெரும் பொருளாதலின் சிவனை, "போதாந்தத் தெய்வம்" என்றும், தத்துவ நெறியில் ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவம் ஆகிய மூன்றிற்கும் உச்சிக் கண்ணதாகிய நாத தத்துவத்தின் அந்தத்தில் பரசிவமாய் விளங்குதலால், "உயர் நாதாந்தத் தெய்வம்" என்றும் விளக்குகின்றார். ஆணவம், மாயை, கன்மம் என்ற மூன்றாலும் ஆன்ம ஞானத்தை இருள் படுத்தித் துன்பமுறுவிக்கும் பாசத் தொடர்பை நீக்கி ஞான ஒளி தந்து உய்விக்கும் சிறப்புடைமை பற்றி, "இருட் பாடு நீக்கி ஒளி ஈந்தருளும் தெய்வம்" என்றும், இருள் நீங்கிய விடத்து எய்துதற்குரிய இன்ப வகையை நான் எண்ணியபடியே எனக்கு எய்துமாறு அருளுகிறது என்பாராய், "எண்ணிய நான் எண்ணியவாறு எனக்கருளும் தெய்வம்" என்றும் உரைக்கின்றார். சிவஞானத்தால் சிவத்தைத் தெளிந்து அது பொருளாகத் தாம் பாடும் பாட்டுக்களை, "தெருட் பாடல்" எனவும், அவற்றை மகிழ்ந்து ஏற்றுக் கொண்டு மன மொழி மெய் முதலிய கரணங்களைச் சிவ கரணமாக்குவது பற்றி, "தெருட் பாடல் உவந்து எனையும் சிவமாக்கும் தெய்வம்" எனவும், அது ஞான சபையில் விளங்குகின்ற தெய்வமாகும் என ஆன்மாக்கள் தெருண்டு உய்யும் பொருட்டு என்றற்கு, "சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்" எனவும் தெரிவிக்கின்றார்.

இதனால், சிவ பரம்பொருளின் பரந்து பட்ட அருட் பண்புகளை விரித்தோதியவாறும். இக்கருத்தையே இனி வரும் பாட்டுக்களிலும் உரைத்துக் கொள்க.

**3905.** **எல்லாஞ்செய் வல்லதெய்வம் எங்கும்நிறை தெய்வம்**
**என்னுயிரில் கலந்தெனக்கே இன்பநல்கும் தெய்வம்**
**நல்லார்க்கு நல்லதெய்வம் நடுவான தெய்வம்**
**நற்சபையில் ஆடுகின்ற நடராசத் தெய்வம்**
**கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுந் தெய்வம்**
**காரணமாந் தெய்வம்அருட் பூரணமாந் தெய்வம்**
**செல்லாத நிலைகளெலாஞ் செல்லுகின்ற தெய்வம்**
**சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.**

உரை : ஞான சபையில் விளங்குகின்ற பரதெய்வமாகிய சிவ பரம்பொருள் எல்லாம் செய்ய வல்லதும், எங்கும் நிறைந்திருப்பதும், என்னுயிரில் ஒன்றாய்க் கலந்து எனக்கு இன்பம் தருவதுமாகிய தெய்வமாம்; இதுவே நல்லார்க்கு நல்லதாய் எல்லாப் பொருட்கும் செயல்கட்கும் நடுவனதாய் நல்லோர் கண்டு பரவும் பொன்னம்பலத்தில் ஆடுகின்ற தெய்வமாகும்; கல்லாதவர் கற்றவர் என்ற வேறுபாடின்றி எல்லார்க்கும் ஒப்ப இன்பம் அருளுவதும், எல்லா வுலகப் பொருள்கட்கும் பொருட் பயன்களுக்கும் காரணமாய், எல்லா வுயிர்கட்கும் நிறைந்த திருவருள்

இன்பத்தை நல்குவதாய், ஆன்ம சிற்சத்திக்கு எட்டாத நிலைகள் பல வற்றிலும் சென்று இயலுவதாய் விளங்குகின்ற பரதெய்வமாகும். எ.று.

எல்லா வன்மையும் உடையதாய் எல்லா உலகப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்து விளங்குவது பற்றிப் பரசிவத்தை, "எல்லாம் செய் வல்ல தெய்வம் எங்கும் நிறை தெய்வம்" எனவும், எல்லா உயிர்களிடத் தும் உயிர்க்குயிராய்க் கலந்து உணர்வு நல்கி இன்பம் பெறுவித்தலால் அதனை, "என்னுயிரில் கலந்து எனக்கே இன்பம் நல்கும் தெய்வம்" எனவும் இயம்புகின்றார். நல்லார்க்கு நலமும் தீயவர்க்குத் தீமையும் தந்தியலும் சிறு தெய்வங்களின் வேறாய், எல்லா வுயிர்கட்கும் நீதி வழங்கும் நடுநிலைப் பரம்பொருளாய் நல்லவர்கள் நாளும் கூடி யிருந்து தரிசித்து மகிழ அம்பலத்தில் திருக்கூத்தாடும் சிறப்பியல்பு இனிது விளங்க, "நற்சபையில் ஆடுகின்ற நடராசத் தெய்வம்" என்று போற்று கின்றார். "கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்" என்று பெரியோர் கூறினும், யாவர்க்கும் நடுவான தெய்வமாதல் பற்றி, கற்றவர் கல்லா தவர் ஆகிய இருதிறத்தார்க்கும் வாழ்க்கை இன்பத்தை நல்கி வாழச் செய்தலின், "கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பு அருளும் தெய்வம்" எனவும், உலகியல் நிகழ்ச்சிகள் எல்லாவற்றிற்கும் காரணமாய் நின்று தன்னுடைய கருணையை நினைந்து பரவும் அன்புடைய உயிர்கட்கு அந்தத் திருவருள் இன்பத்தைக் குறைவறத் தந்து நுகர்வித்தலின், "காரணமாம் தெய்வம் அருட் பூரணமாம் தெய்வம்" எனவும் புகழ் கின்றார். ஆன்ம சிற்சத்தியின் எல்லை மாயா மண்டலத்துக்கு அப்பா லுள்ள வெளிகட்குச் செல்லாதாகலின் அவற்றை, "செல்லாத நிலைகள்" என்றும், அவற்றை எல்லாம் கடந்து அப்பாலுக் கப்பாலாய்ச் செல்லு கின்ற சிவத்தின் தன்மை தோன்ற, "செல்லாத நிலைகள் எல்லாம் செல்லுகின்ற தெய்வம்" என்றும் தெரிவிக்கின்றார். (2)

3906. தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்
தன்னைநிகர் இல்லாத தனித்தலைமைத் தெய்வம்
வாயார வாழ்த்துகின்றோர் மனத்தமர்ந்த தெய்வம்
மலரடிஎன் சென்னிமிசை வைத்தபெருந் தெய்வம்
காயாது கனியாகிக் கலந்தினிக்குந் தெய்வம்
கருணைநிதித் தெய்வம்முற்றுங் காட்டுவிக்குந் தெய்வம்
சேயாக எனைவளர்க்குந் தெய்வமகா தெய்வம்
சிற்சபையில் ஆடுகின்ற தெய்வமதே தெய்வம்.

உரை: ஞான சபையில் ஞானக் கூத்தாடுகின்ற தெய்வம் எதுவோ அதுவே எனக்குத் தாயும் தந்தையுமாய் என்னைத் தாங்கி அருளும் தெய்வமாகும்; அது தனக்கு ஒப்பாக ஒன்றில்லாத தனித்த தலைமை பொருந்திய தெய்வமாகும்; வாயார வாழ்த்தி வணங்குகின்ற நன்மக்களின் மனத்தின்கண் எழுந்தருளுவதும் தாமரை மலர் போன்ற தன்னுடைய திருவடியை என் தலை மேல் வைத்தருளிய பெரிய தெய்வமும் அதுவேயாகும்; பிஞ்சும் காயுமாய் முதிர்தலின்றி எடுத்த எடுப்பிலேயே முற்றவும் கனிந்த பழமாய், என்னுயிரில் கலந்து இனிமை நல்கும் தெய்வமாய், எனக்கு அருட் செல்வமாய், எனது அறிவு அறியு

மாறு எல்லாவற்றையும் குறைவறக் காணச் செய்யும் தெய்வமாய் விளங்குவதாகும்; என்னைச் சிறு குழந்தையாகக் கொண்டு அருள் நெறியில் வளர்த்தருளும் மகா தெய்வமும் அதுவேயாகும். எ. று.

உலக உயிர்களைப் படைத்தளித்து வாழ்விக்கும் அருட் செயல் பற்றிச் சிவமாகிய மகாதெய்வத்தை, "தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்" என்றும், அதற்கு ஒப்பதும் மிக்கதுமாகிய தெய்வம் யாதுமில்லாத தனித் தலைமைப் பெரிய தெய்வம் என்றற்கு, "தன்னை நிகரில்லாத தனித் தலைமைத் தெய்வம்" என்றும் கூறுகின்றார். உண்மை அன்புடன் அதனுடைய எண்ணிறந்த நாமங்களைச் சொல்லித் துதிக்கின்ற அன்பர்களுடைய மனத் தாமரையின்கண் மகிழ்ந்து எழுந்தருளும் அதன் மாண்பு விளங்க, "வாயார வாழ்த்துகின்றோர் மனத்தமர்ந்த தெய்வம்" எனவும், அதனை நினைந்து ஒழுகுவதால் தமக்குத் தெளிந்த அறிவு விளக்கம் எய்த அதன் திருவடியை நினைந்து நினைந்து பராவும் தனிநிலைமை தமக்கு எய்தினமை புலப்பட, "மலரடி என் சென்னி மிசை வைத்த பெருந் தெய்வம்" எனவும் இயம்புகின்றார். நினைக்கும் உள்ளத்தில் நினைக்கும் தோறும் இன்பம் ஊற்றெடுத்து மகிழ்வித்தலின், "காயாது கனியாகிக் கலந்தினிக்கும் தெய்வம்" என்றும், அதனுடைய திருவருளே பெருஞ் செல்வமாய்த் தனக்கு எல்லா நலங்களும் எய்துவிப்பது பற்றி, "கருணை நிதித் தெய்வம்" என்றும், காண்பதற்கரிய நுண்பொருட்கள் பலவற்றையும் முற்றவும் காணச் செய்தலின், "முற்றும் காட்டுவிக்கும் தெய்வம்" என்றும் புகழ்கின்றார். உலகியலில் எல்லாக் கனிகளும் தொடக்கத்தில் பிஞ்சாய்க்காயாகிப் பின்னர்க் கனியாய் இன்புறுத்துவது போலின்றி நினைக்கும் நினைவின்கண் முற்றக் கனிந்த இன்பக் கனியாய் இனிமை செய்வது பற்றி, "காயாது கனியாகிக் கலந்தினிக்கும் தெய்வம்" என்று எடுத்துரைக்கின்றார். உலகியற் காட்சிகளும் அவற்றின் உண்மையை யுணர்த்தும் அறிவுப் பொருட்களும் காண்பார்க்குத் தமது உண்மைத் தன்மையைக் குறைவற முற்றுமாய்க் காட்டுதல் இல்லாமையால், "முற்றும் காட்டுவிக்கும் தெய்வம்" என மொழிகின்றார். என்னை உலகியல் அறியாத இளங் குழவியாகக் கருதிப் பேணிக் காக்கின்ற சிறு தெய்வங்கள் எல்லாவற்றினும் பெரிதாகிய பரதெய்வம் என வற்புறுத்தற்கு, "சேயாக எனை வளர்க்கும் மகா தெய்வம்" என்று துதிக்கின்றார். (3)

**3907.** என்னிதய கமலத்தே இருந்தருளுந் தெய்வம்
என்னிரண்டு கண்மணிக்குள் இலங்குகின்ற தெய்வம்
பொன்னடிஎன் சென்னியிலே பொருந்தவைத்த தெய்வம்
பொய்யாத தெய்வம்இடர் செய்யாத தெய்வம்
அன்னியம்அல் லாததெய்வம் அறிவான தெய்வம்
அவ்வறிவுக் கறிவாம்என் அன்பான தெய்வம்
சென்னிலையில் செம்பொருளாய்த் திகழ்கின்ற தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

**உரை :** ஞான சபையில் எழுந்தருளுகின்ற சிவமாகிய பரதெய்வம் என்னுடைய மனமாகிய தாமரையின்கண் எழுந்தருளி, என்னுடைய

இரண்டு கண்களில் விளங்கும் கருமணிக்குள் ஒளி செய்கின்ற தெய்வமாகும்; தன்னுடைய அழகிய திருவடிகளை என்னுடைய தலைமேல் நன்கு பொருந்த வைத்த அத்தெய்வம் பொய்த்தல் இல்லாததும் எனக்குத் துன்பம் செய்யாததுமாகிய தெய்வமாகும்; மேலும் அது என்னின் வேருகாததாய் எனக்கு அறிவானதாய் என்னுடைய அறிவுக்குள் அறிவாய் என் அன்புமான தெய்வமுமாம்; செம்மை நெறியில் ஒழுகுபவர்க்கு அழியாச் செம்பொருளாய்த் திகழ்வதும் அத்தெய்வமேயாம்.

மக்களின் இதயம் குவிந்த தாமரை மொட்டுப் போல்வதாகலின் அதனை "இதய கமலம்" என வழங்குகின்றனர். இறைவனை நினைந்து வழிபடுபவர் அதனை நிமிர்ந்து மலர்ந்து விளங்கும் தாமரையாகப் பாவித்து அதன்கண் இறைவன் எழுந்தருளுவதாக எண்ணி வழிபடுகின்றாராதலால், "என் இதய கமலத்தே இருந்தருளும் தெய்வம்" எனவுரைக்கின்றார். இறைவனைக் கண்ணாகவும் கண்ணிலுள்ள கருமணியாகவும் அம்மணிக்குள் ஒளிரும் ஒளியாகவும் எண்ணிப் போற்றுவது பற்றி, "என் இரண்டு கண்மணிக்குள் இலங்குகின்ற தெய்வம்" எனப் போற்றுகிறார். பொன்னடி - அழகிய திருவடி. இறைவன் குருமுதல்வனாய் எழுந்தருளித் தன்னுடைய திருவடியிலே அடியார்களின் தலை படியும்படி இருந்தருளுவது பற்றி, "பொன்னடி என் சென்னியிலே பொருந்த வைத்த தெய்வம்" என்று புகல்கின்றார். சிவனடியே சிந்திக்கும் சிவஞானம் பெற்றவர்கள் சிவனது திருவடி தமது தலையில் பொருந்தி அமைந்திருப்பதாக எண்ணுவ துண்மையின், "பொன்னடி என் சென்னியிலே பொருந்த வைத்த தெய்வம்" என்று கூறுவது முண்டு. பலகாலும் பரவினும் பரவுவோர்க்கு அருள் செய்ய மாட்டா தொழியும் சிறு தெய்வங்களை விலக்குதற்கு, "பொய்யாத தெய்வம்" என்றும், தன்னை நினைந்து வழிபடாதவர்க்குத் தீங்கு செய்யும் ஏனைச் சிறு தெய்வங்களை இகழ்தற்கு, "இடர் செய்யாத தெய்வம்" என்றும், உயிர்க்குயிராய் இரண்டறக் கலந்து கொள்வது பற்றிச் சிவ பரம்பொருளை, "அன்னியம் அல்லாத தெய்வம்" என்றும், உயிர்க்குயிராய் அறிவருளும் சிறப்பு விளங்க, "அறிவான தெய்வம்" என்றும், கருவி கரணங்களால் உளவாகும் கரண அறிவுக்கு உள்ளீடாய் உண்மை காண உதவும் மெய்யறிவும் அதுவே என்றற்கு, "அன்புருவாகிய தெய்வம்" என்றும் அறிவிக்கின்றார். செந்நிலை எதுகை நோக்கிச் சென்னிலை என வந்தது. இனிச் செல்லும் நிலை யெனக் கொண்டு "செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழல் போல" (அகம்) செல்லுமிட மெல்லாம் அழியாப் பெரும் பொருளாய் அருள் செய்வது பற்றி, "சென்னிலையில் செம்பொருளாய்த் திகழ்கின்ற தெய்வம்" என்று பொருள் கொள்ளுவது முண்டு. (4)

**3908.** **எண்ணியவா வினையாடென் றெனைஅளித்த தெய்வம்**
**எல்லாஞ்செய் வல்லசித்தே எனக்கீந்த தெய்வம்**
**நண்ணியபொன் அம்பலத்தே நடம்புரியுந் தெய்வம்**
**நானாகித் தானாகி நண்ணுகின்ற தெய்வம்**

பண்ணியஎன் பூசையிலே பலித்தபெருந் தெய்வம்
பாடுகின்ற மறைமுடியில் ஆடுகின்ற தெய்வம்
திண்ணியன்என் றெனைஉலகம் செப்பவைத்த தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

உரை : ஞான சபையில் விளங்குகின்ற பரசிவமாகிய தெய்வம் நான் எண்ணியபடி உலகியலில் வாழ்க வென்று எனக்கு அருள் செய்த தெய்வமும், எல்லாவற்றையும் செய்ய வல்ல சித்தாந் தன்மையை எனக்கு அளித்த தெய்வமுமாகும்; அன்பர்கள் வந்து பரவுகின்ற பொன்னம்பலத்தின்கண் நடம் புரியும் தெய்வமும், தான் நானுகப் பொருந்துமாறு செய்கின்ற தெய்வமுமாகும்; நான் பண்ணுகின்ற பூசையின் பயனுக எழுந்தருளும் பெரிய தெய்வமும், ஓதப்படுகின்ற வேதத்தின் உச்சியில் நின்ருடுகின்ற தெய்வமும் மனத் திட்பம், உடையவன் என்று என்னை உலகவர் உரைக்குமாறு செய்த தெய்வமுமாகும். எ.று.

எண்ணிய செயல்களை எண்ணியவாறு செய்து ஏற்ற மடையும் எல்லாவற்றையும் செய்ய வல்ல சித்துக்களையும் தனக் கருளினுன் என்பது விளங்க, "எண்ணியவா விளையாடு என்றெனை அளித்த தெய்வம் எல்லாஞ் செய் வல்ல சித்தே எனக்கு ஈந்த தெய்வம்" என வுரைக்கின்ருர். பொன்னம்பலத்தே நடம் புரியும் கூத்தப் பெருமானுகிய தெய்வம் என்னுட் கலந்து நானுகியும், வேருய் நின்று எனக்கு அறிவருளும் வகையில் வேருய் தானுகியும் அருளுவது தோன்ற, "நானுகித் தானுகி நண்ணுகின்ற தெய்வம்" எனவும் நவில்கின்ருர். தாம் செய்கின்ற சிவ பூசையின் பயனுக நலங்கள் பல பெற்றமை தோன்ற, "பண்ணிய என் பூசையிலே பலித்த பெருந் தெய்வம்" என்று பரவுகின்ருர். காலந் தோறும் ஓதப்படுவது பற்றி வேதத்தை, "பாடுகின்ற மறை" என்று குறிக்கின்ருர். தாம் மேற் கொண்ட அருள் நெறியில் கலங்கா உள்ளத்துடன் ஒழுகினமை புலப்பட, "திண்ணியன் என்று எனை உலகம் செப்ப வைத்த தெய்வம்" என்று வடலூர் வள்ளல் வழுத்துகின்ருர். திண்ணியன் - அருள் நெறியில் உறைத்த உள்ளமுடையவன். (5)

3909. இச்சைஎலாம் எனக்களித்தே எனைக்கலந்த தெய்வம்
இறந்தவர்கள் அனைவரையும் எழுப்புகின்ற தெய்வம்
எச்சமயத் தெய்வமுந்தான் எனநிறைந்த தெய்வம்
எல்லாஞ்செய் வல்லதெய்வம் எனதுகுல தெய்வம்
பிச்சகற்றும் பெருந்தெய்வம் சிவகாமி எனும்ஓர்
பெண்கொண்ட தெய்வம்எங்கும் கண்கண்ட தெய்வம்
செச்சைமலர் எனவிளங்கும் திருமேனித் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

உரை : ஞான சபையில் விளங்குகின்ற பரதெய்வமாகிய சிவமே என்னுடைய விருப்பங்கள் எல்லாவற்றையும் தூண்டி அவற்றை எனக்குத் தந்து என்னுட் கலந்து கொண்ட தெய்வமாய் இறந்தவர்கள்

அனைவரையும் மீளவும் நல்லுணர்வுடையவர்களாக எழுப்புகின்ற தெய்வம்; எல்லாச் சமயங்களும் போற்றுகின்ற தெய்வ வகைகள் எல்லாம் தானே யென நிறைந்து விளங்கும் தெய்வமாய், எல்லாம் செய்ய வல்லதாய், எனது குலத்துக்குரிய தெய்வமாகும்; மனத்தின்கண் உண்டாகும் மயக்கத்தை நீக்கும் பெரிய தெய்வமாய், சிவகாமி எனும் ஓர் ஒப்பற்ற பெண்ணைத் தனக்குத் தேவியாகக் கொண்ட தெய்வமும், எங்கும் நிலவும் தெய்வமும், 'சிவந்த செச்சை மலர் போல் விளங்கும் திருமேனியையுடைய தெய்வமுமாம். எ.று.

உயிர்களுக்குரிய அறிவு, இச்சை, செயல் ஆகிய மூன்று ஆற்றல்களையும் தூண்டி அறிவன அறிவித்தும், இச்சித்தவற்றை எய்துவிக்கும் செயற்குரியவற்றைச் செய்வித்தும் உயிரோடு கலந்து இயலுவது பற்றிப் பரசிவத்தை, "இச்சை எலாம் எனக் களித்தே எனைக் கலந்த தெய்வம்" என்று கூறுகின்றார். இச்சையை எடுத்தோதியதால் ஏனை அறிவும் செயலுமாகிய சத்திகள் வருவித் துரைக்கப்பட்டன. இறந்தவர்கள் - நல்லுணர்வை யிழந்தவர்கள். "இறந்தார் இறந்தாரனையர்" (குறள்) என்பதற்கு, "சினத்தின் கண்ணே மிக்கார் உயிருடையராயினும் செத்தாரோடு ஒப்பர்" என்று பரிமேலழகர் உரைப்பதால் இது பொருளாதல் காண்க. ஞானம் எய்துதற்குரிய உயிர் உடையராயினும் கலக்கத்தால் உண்மை யுணர்வை இழந்து ஞானத்தை எய்தாது கெடுதலின் அவர்களை, "இறந்தார்" என்று இகழ்கின்றார். அப்பெற்றியோர்க்கும் உணர்வொளி தந்து உய்விப்பது பற்றி, "இறந்தவர்கள் அனைவரையும் எழுப்புகின்ற தெய்வம்" என்று உரைக்கின்றார். இனி இறந்தார் என்பதற்கு உயிரை இழந்தவர்கள் என்றும், எழுப்புகின்ற தெய்வம் என்பதற்கு மீளவும் உயிர் பெற்று எழச் செய்யும் தெய்வம் என்றும் பொருள் கொள்பவரும் உண்டு. அது ஞான நெறி மரபுக்கு ஒவ்வாமையின் அப்பொருள் சிறவாமை அறிக. உலகில் நிலவும் சமயங்கள் யாவும் ஒவ்வொரு தெய்வத்தைக் குறிக் கொண்டு உரைக்குமாயினும் அவை யாவும் தானே என நிற்கும் சிறப்புப் பற்றிப் பரசிவத்தை, "எச்சமயத் தெய்வமும் தானென நிறைந்த தெய்வம்" என இயம்புகின்றார். "யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார் தாம் வருகுவர்" என்றும், "அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறும் குறியது உடைத்தாய் வேதாகமங்களின் குறி யிறந்தங்கு அறிவினில் அருளால் மன்னி அம்மையோ டப்பனாகிச் செறிவொழியாது நின்ற சிவன்" (சிவசித்தி) என்றும் பெரியோர் கூறுவது காண்க. பரம்பொருள் வரம்பில் ஆற்றலுடைய தென்பது பற்றி, "எல்லாம் செய் வல்ல தெய்வம்" என்று இசைக்கின்றார். செய் வல்ல தெய்வம் என்றவிடத்து, செய் என்பது முதனிலைத் தொழிற் பெயர். குலதெய்வம் - குலத்தார்க் கெல்லாம் பொதுவாக வுள்ள தெய்வம். மனத்தில் எழும் இச்சை மீதூர்ந்து அறிவைத் தன்வயமாக்குமிடத்துத் தோன்றும் கடும் பற்று "பிச்சு" எனப்படும். இது பித்து எனவும் வழங்கும். மனத்தின்கண் உண்டாகும் பித்து ஏனை அறிவாற்றலைச் சுருக்கிச் சிறுமைப்படுத்தலின், அதனை நீக்கி நெறிப் படுத்தும் அருளாளனாவது பற்றிச் சிவனை, "பிச்சகற்றும் பெருந் தெய்வம்" என்று போற்றுகின்றார். எங்கும் எல்லார்க்கும் ஞானக் கண்ணில் தோன்ற அருள் இன்பம் வழங்குவது பற்றி, "எங்கும்

கண்கண்ட தெய்வம்'' என்று இயம்புகின்றார். உமாதேவிக்குக் கணவனுய் என்றும் பிரியாமல் உறையும் பெருமானுதல் பற்றி, "சிவகாமி எனுமோர் பெண் கொண்ட தெய்வம்'' எனவும், சிவந்த மேனியுடைமை பற்றிச் சிவனை, "செச்சை மலரென விளங்கும் திருமேனித் தெய்வம்'' எனவும், சிறப்பிக்கின்றார். செச்சை மலர் - சிவந்த வெட்சி மலர். சிவந்த நிறமுடைமை பற்றி இதனை "உதிரச் செச்சை'' என்று திருத்தக்க தேவர் முதலியோர் வழங்குவர். (6)

3910. **சாகாத வரம்எனக்கே தந்ததனித் தெய்வம்**
**சன்மார்க்க சபையில்எனைத் தனிக்கவைத்த தெய்வம்**
**மாகாத லால்எனக்கு வாய்த்தஒரு தெய்வம்**
**மாதவரா தியர்எல்லாம் வாழ்த்துகின்ற தெய்வம்**
**ஏகாத நிலைஅதன்மேல் எனைஏற்றும் தெய்வம்**
**எண்ணுதொறும் என்னுளத்தே இனிக்கின்ற தெய்வம்**
**தேகாதி உலகமெலாஞ் செயப்பணித்த தெய்வம்**
**சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.**

உரை : ஞான சபையில் விளங்குகின்ற சிவமாகிய பரதெய்வம் செத்துப் பிறக்கின்ற நிலைமையை மாற்றிச் சாகா வரத்தை எனக்கு அளித்தருளிய ஒப்பற்ற தெய்வமாகும்; அது என்னைச் சன்மார்க்க சபையில் நிறுத்தித் தனித்து ஓங்க வைத்த தெய்வமாகவும், பெருங் காதலால் அதனையே நினைந்தொழுகும் எனக்கென்று வாய்த்த தெய்வ மாகவும், பெரிய தவச் செல்வர்கள் எல்லாரும் வாழ்த்தி வணங்குகின்ற தெய்வமாகவும், ஞானமில்லாத ஆன்மாக்களால் எய்த வொண்ணுத உயர்ந்த ஞான நிலையில் என்னை ஏற்றி யருளும் தெய்வமாகவும், நினைக்குந் தோறும் நெஞ்சில் நின்று இனிமை தரும் தெய்வமாகவும், தேகத்தோடு கூடிய உயிர்கள் எல்லாவற்றுக்கும் நலம் செய்யப் பணித்த தெய்வமாகவும் விளங்குவதாம். எ.று.

சாகா வரம் என்பது உலகில் மீள மீளப் பிறந்தும் இறந்தும் வருந்தாத இன்ப நிலை. பிறப்பிறப்புக்கள் துன்ப வியல்பினவாதலால் அதற்கு இரையாகாத மேன்மை நிலையை, "சாகா வரம்'' என்று இயம்பு கின்றார். மணிவாசகரும், "பரமானந்தப் பழங் கடல் சேர்ந்து ஆவி யாக்கை யான் எனது என்று யாதுமின்றி யறுதல்'' (பிரார்த்தனை) என விளங்குவது காண்க. உலகில் உயிர்கள் பன்முறையும் பிறந்து பிறந்து, இறந்து இறந்து அவலமுறுவது இயல்பாதலின் அதனை விலக்குதற் பொருட்டு வடலூர் வள்ளல், "சாகாத வரம் எனக்கே தந்த தனித் தெய்வம்'' என்று குறிக்கின்றார். மாணிக்கவாசகரும் "என்றும் மாண்டு மாண்டு வந்து வந்து மன்ன நின்னை வணங்க நாயினேனை ஆவ வென்று அருளுதி'' (சதகம்-74) என்று எடுத்துரைப்பது காண்க. சன்மார்க்க சபையைத் தோற்றுவித்து அச்சபையினருள் ஒருவராய்த் தாமும் இருந்து பணி செய்தற்கு வாய்ப்பளித்தமை பற்றி, "சன்மார்க்க சபையில் எனைத் தனிக்க வைத்த தெய்வம்'' என்றும், சிவன்பால் தமக்குள்ள ஆருக்காதலால் அவரையே நினைந்தும் வாழ்த்தியும் வழிபட்டும் இன்புறும் பேறு தமக்கு எய்தினமையால், "மாகாதலால் எனக்கு

வாய்த்த ஒரு தெய்வம்'' என்றும், தவநெறியில் நிற்கும் ஞானிகள் அனைவரும் இடையறுது வணங்கி வாழ்த்தி வழிபடும் நிலைமை தோன்ற, ''மாதவராதியர் எல்லாம் வாழ்த்துகின்ற தெய்வம்'' என்றும் இசைக்கின்றார். உண்மை ஞானிகளும் தமது ஞானத்தால் கண்டடைய முடியாத பரசிவ நிலையை, ''ஏகாத நிலை'' எனவும், அந்நிலைக்கண் பெறலாகும் இன்பத்தைத் தாம் பெற்று மகிழச் செய்தலின் வடலூர் வள்ளல், ''ஏகாத நிலை அதன் மேல் எனை யேற்றும் தெய்வம்'' எனவும், நினைப்பவர் நெஞ்சில் நிலையாய் நின்று நினைக்குந் தோறும் இன்பம் செய்வது பற்றி, ''எண்ணுதொறும் என்னுளத்தே இனிக்கின்ற தெய்வம்'' எனவும் இயம்புகின்றார். ஏகாத நிலையை ''நினைப்பதாக சிந்தை செல்லும் எல்லையேய வாக்கினால் தினைத்தனையுமாவதில்லை சொல்லலாவக் கேட்பவே அனைத்துலகு மாய நின்னை ஐம்புலன்கள் காண்கிலா எனைத் தெனைத்த தெப்புறத்த தெந்தை பாதம் எய்தவே'' என்று மணிவாசகப் பெருமான் விளக்குவது அறிக. தேகத்தோடு கூடி வாழ்கின்ற மக்கள் வாழும் உலகத்தை அருள் நெறிக்கண் நின்று உயிர்ப்பணி புரியுமாறு அறிவுறுத்தும் திருப்பணியைச் செய்விக்கின்ற சிறப்பு நோக்கி, ''தேகாதி உலக மெலாஞ் செயப் பணித்த தெய்வம்'' என்று சிறப்பிக்கின்றார். இதற்கு உடம்போடு கூடி வாழ்கின்ற உயிர்களுக்குரிய உலக மெல்லாவற்றையும் படைத்தளிக்கும் ஆற்றலை இறைவன் தமக்கு அளித்துள்ளான் என்ற குறிப்புத் தோன்றப் பொருள் கூறுவாருமுண்டு. ''உம்பர் பிரான் உற்பத்தி யாதிகளுக் குரியன் உயிர் தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே'' (சிவசித்தி) என்று சிவஞான நூல்கள் உரைத்தலால் அது பொருளாகாமை உணரப்படும். (7)

**3911.** **தூண்டாத மணிவிளக்காய்த் துலங்குகின்ற தெய்வம்**
**துரியதெய்வம் அரியதெய்வம் பெரியபெருந் தெய்வம்**
**மாண்டாரை எழுப்புகின்ற மருந்தான தெய்வம்**
**மாணிக்க வல்லியைஓர் வலத்தில்வைத்த தெய்வம்**
**ஆண்டாரை ஆண்டதெய்வம் அருட்சோதித் தெய்வம்**
**ஆகமவே தாதிஎலாம் அறிவரிதாந் தெய்வம்**
**தீண்டாத வெளியில்வளர் தீண்டாத தெய்வம்**
**சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.**

**உரை :** ஞான சபையில் விளங்குகின்ற தெய்வமாகிய பரசிவம், தூண்டப் படாத மாணிக்க மணி போலும் விளக்காய் விளங்குகின்றதும், துரியக் காட்சியில் தோன்றுவதும், அருமையும் பெருமையும் வாய்ந்தது மாகிய பெருமை சான்ற தெய்வமாம்; மாண்டவரை எழுப்ப வல்ல மருந்து போன்றதும், மாணிக்க வல்லியாகிய உமாதேவியை ஒருபால் வைத்திருப்பதும், உயிர்கட்கு நல்லன செய்து ஆட்கொள்ளும் பெரியார்களை ஆண்டருளுவதும், அருட் சோதியாய்த் திகழ்வதுமாகிய தெய்வமாம்; ஆகமங்கள் வேதங்கள் முதலியவற்றல் சிறிதும் இத் தன்மைத் தென அறிதற் கரிதாய், எப்பொருளும் தன்பால் கலவாத பரவெளியில் வளர்வதாய், அவ்வெளியால் தீண்டப்படாததாய் விளங்கும் தெய்வமாம். எ.று.

திரியிட்டு நெய் பெய்து எரிக்கப்படுகின்ற உலகியல் விளக்குகளைப் போலாமல், தூய மாணிக்க மணியாலாகிய தூண்டுதல் வேண்டாத ஒளி விளக்கைப் போல் செவ்விய சிவஞான ஒளியை நல்குவது பற்றிச் சிவ பரதெய்வத்தை, "தூண்டாத மணி விளக்காய்த் துலங்குகின்ற தெய்வம்" என்றும் சொல்லுகின்றார். துரியம் என்பது உந்திக்கண் நின்று ஆன்மா உண்மைப் பொருளை நோக்கும் யோக நிலை. அந்தத் துரியக் காட்சியில் விளங்குவது பற்றிச் சிவனை, "துரிய தெய்வம்" என்றும், வேறு பசுபாச ஞானங்களால் அறிதற் கரிதாய் இலங்குவது பற்றி, "அரிய தெய்வம்" என்றும், தெய்வங்கள் எல்லாவற்றினும் பெருமை மிக்க பெருந் தெய்வ மாதலால், "பெரிய பெருந் தெய்வம்" என்றும் போற்றுகின்றார். செத்தாரை எழுப்புகின்ற மருந்து தேவருலகத்தில் நிலவும் சாவா மருந்து. அதுபோல் உயிர்கட்கு என்ஞான்றும் சாதலில்லாத ஞான நிலையை நல்குவது பற்றிச் சிவனை, "மாண்டாரை எழுப்புகின்ற மருந்தான தெய்வம்" என்று புகழ்கின்றார். இதற்குச் செத்தாரை எழுப்புகின்ற சஞ்சீவி போன்ற தெய்வம் எனப் பொருள் கூறுதலுமுண்டு. செத்தாரை எழுப்ப வல்ல மருந்தும் மந்திரமும் உண்டெனப் புராண இதிகாசங்கள் ஓதுவதால் அந்த மருந்தை நினைவிற் கொண்டு வடலூர் வள்ளல் இவ்வாறு கூறுகின்றார் என்பாருமுளர். மாணிக்க வல்லி, மரகத மணியின் நிறத்தை யுடைய மேனியும், மாணிக்க மணி போன்ற சிவந்த வாயும் உடையவளாதலால் உமாதேவியை, "மாணிக்க வல்லி" என்றும், அவளைத் தம் உடலில் ஒருகூறாக வைத்திருப்பது பற்றி, "மாணிக்க வல்லியை ஓர் வலத்தில் வைத்த தெய்வம்" என்றும் கூறுகின்றார். உலகில் உயிர் வகைகட்கு நன்மையாவனவற்றைச் செய்து ஆண்டருளும் பெருமக்களை "ஆண்டார்" எனவும், அவர்களை முடிவில் தாம் அருள் செய்து ஆண்டு கொள்வது பற்றிச் சிவபெருமானை, "ஆண்டாரை ஆண்ட தெய்வம்" எனவும், திருவருள் ஞானமாகிய பேரொளியை யுடையவனாதல் பற்றிச் சிவ பரம்பொருளை, "அருட் சோதித் தெய்வம்" எனவும் ஏத்துகின்றார். ஆகம ஞானத்தாலும் வேத ஞானத்தாலும் எட்டியும் சுட்டியும் அறியப் படாத பரம்பொருளாதல் விளங்க, "ஆகம வேதாதி எலாம் அறிவரிதாம் தெய்வம்" என இயம்புகின்றார். மாயா காரியங்களாகிய தத்துவங்கள் எல்லாவற்றிற்கும் அப்பாலாயுள்ள பெருவெளியை, "தீண்டாத வெளி" எனவும், அவ்வெளியின்கண் விளங்கினும் அவ்வெளியால் தீண்டப் படாத செம்மையுடைமை பற்றி, "தீண்டாத தெய்வம்" எனவும் எடுத்துரைக்கின்றார். (8)

3912. எவ்வகைத்தாந் தவஞ்செயினும் எய்தரிதாந் தெய்வம்
எனக்கெளிதிற் கிடைத்தென்மனம் இடங்கொண்ட தெய்வம்
அவ்வகைத்தாந் தெய்வம்அதற் கப்பாலாந் தெய்வம்
அப்பாலும் பெருவெளிக்கே அப்பாலாந் தெய்வம்
ஒவ்வகத்தே ஒளியாகி ஓங்குகின்ற தெய்வம்
ஒன்றான தெய்வம்மிக நன்றான தெய்வம்
செவ்வகைத்தென் றறிஞரெலாஞ் சேர்பெரிய தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

**உரை :** ஞான சபையில் விளங்குகின்ற சிவமாகிய பரதெய்வம் யார் எவ்வகையான தவங்களைச் செய்தாலும் எய்துதற் கரிதாகிய பரமாந் தன்மையையுடைய தெய்வமாகும்; ஆயினும், அது எனக்கு எளிதிற் கிடைத்து என் மனத்தை யிடமாகக் கொண்டு எழுந்தருளுகிறது; தவம் செய்தார்க்குத் தவப் பயனைய் விளங்குகின்ற தெய்வமாய் தவம் செய்தார் பெறும் தவலோகத்திற்கு அப்பாலாய் அதற்கப்பால் நிலவுகின்ற பெருவெளிக்கும் அப்பாலதாகிய தெய்வமாம்; ஒத்தவிடத்து ஞான வொளியாய் ஓங்குகின்ற தெய்வமாயினும் பரம்பொருளாம் தன்மையில் ஒன்றுன தெய்வமாய் மிகவும் நன்மையே உருக் கொண்டு சிறக்கின்ற தெய்வமாம்; செம்மைத் தன்மையை யுடையதாகிய செம்பொருளென ஞானிகளெல்லாம் சென்றடைகின்ற பெரிய தெய்வமாம். எ.று.

தவஞ் செய்வார் செய்கின்ற தவங்கள் பலவாதலின் எத்தகைய தவங்களைச் செய்தாலும் ஆன்மாக்களால் எய்தலாகாத அருமை யுடையதென்றற்குப் பரசிவத்தை, "எவ்வகைத்தாம் தவஞ் செயினும் எய்தரிதாம் தெய்வம்" என்று பராவுகின்றார். தவஞானிகட்கு அரிய தெய்வமாயினும் எம்போல் எளியவர்களும் எளிதிற் பெறத் தக்கதாய் எம்போல்வார் மனத்தை யிடமாகக் கொள்வதாய்த் திகழும் தெய்வம் என்பாராய், "எனக்கு எளிதிற் கிடைத்து என் மனம் இடங் கொண்ட தெய்வம்" என்று இயம்புகின்றார். எய்தற் கரிதாய் எளிதிற் கிடைப்பதாய் அன்பர்கள் மனத்தை இடங் கொள்வதாய் விளங்கும் அவ்வவ் வகையான தெய்வமாய் அத்தெய்வ மதங்களுக்கு அப்பாலாய் அப்பத பதார்த்தங்களுக்கு அப்பாலாயுள்ள பெருவெளிக்கும் அப்பாலாய் விளங்குவதாம் என்பாராய், "அவ்வகைத்தாம் தெய்வம் அதற்கப்பாலாம் தெய்வம் அப்பாலும் பெருவெளிக்கே அப்பாலாம் தெய்வம்" என்று சொல்லுகின்றார். அப்பொருள் நிலைக்கு ஒத்த இடத்தை ஒவ்வகம் என்றும், அங்கே ஞானப் பேரொளியாய் ஓங்கும் இயல்புடைமை பற்றி, "ஒவ்வகத்தே ஒளியாகி ஓங்குகின்ற தெய்வம்" என்றும் உரைக்கின்றார். மேற் கூறியவாறு இயல்பும் செய்கையும் இருப்பும் கொள்வதால் பலவாகாமல் தான் ஒன்றே ஒன்றுகவும் தமது ஒருமை முழுதும் நன்மையே மிகவும் அமைந்ததாகவும் விளக்குதற்கு, "ஒன்றுன தெய்வம் மிக நன்றுன தெய்வம்" எனவும், அதனுடைய செம்மைத் தன்மையைச் செவ்வகையாக உணர்ந்த ஞானச் செல்வர்கள் சென்று சேரும் பெரிய பொருளாதல் விளங்க, "செவ்வகைத்து என்று அறிஞரெலாம் சேர் பெரிய தெய்வம்" எனவும் விளக்குகின்றார். (9)

**3913.** சத்தியமாந் தனித்தெய்வம் தடையறியாத் தெய்வம்
சத்திகள்எல் லாம்விளங்கத் தாேனோங்கும் தெய்வம்
நித்தியதன் மயமாகி நின்றதெய்வம் எல்லா
நிலைகளுந்தன் அருள்வெளியில் நிலைக்கவைத்த தெய்வம்
பத்திவலைப் படுகின்ற தெய்வம்எனக் கெல்லாப்
பரிசுமளித் தழியாத பதத்தில்வைத்த தெய்வம்
சித்திஎலாந் தருதெய்வம் சித்தாந்தத் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்மவதே தெய்வம்.

**உரை :** ஞான சபையில் விளங்குகின்ற பரசிவமாகிய தெய்வம் சத்தாந் தன்மையே நிறைந்த ஒப்பற்ற தெய்வமாய், எப்பொருளாலும் தடுக்க வொண்ணாத சால்புடைய தெய்வமாம்; எண்ணிறந்த தன்னுடைய சத்திகள் எல்லாம் ஆங்காங்கு விளங்கி நிற்க, சத்தாகிய தான் உயர்ந்தோங்கும் தெய்வமாம்; நித்தப் பொருளாகிய தனது நித்த மயமாய் நிலைபெறுகின்ற தெய்வமாய் எல்லா வகையான நிலைகளும் தனது அருள் வெளியில் நிலைபெற வைக்கின்ற தெய்வமாம்; பத்தி பண்ணுகின்ற ஆன்மாக்களின் பத்தியாகிய வலைக்குள் அகப்பட்டு வேண்டும் நலன்களைப் புரியும் தெய்வமாய் என் போன்ற எளியாருடைய பத்திக்கு இரங்கி எல்லா நலன்களையும் தந்து என்றும் கெடாத இன்பப் பதவியில் இருக்க வைக்கும் இனிய தெய்வமாகும்; சித்தர்கள் விரும்புகின்ற சித்திகளனைத்தையும் தந்தருளும் தெய்வமாவதோடு சிவாகமங்கள் உரைக்கும் சிவானந்தப் பரதெய்வமுமாகும். எ.று.

சத்தாந் தன்மையே தன் றன்மையாகக் கொண்டு விளங்கும் தெய்வ மாதல் பற்றிப் பரசிவத்தை, "சத்தியமாம் தனித் தெய்வம்" என்று சாற்றுகின்றார். எல்லா வகை உயிர்களிலும் எவ்வகைப் பொருள்களிலும் தங்கு தடையின்றித் தோய்ந்து கலந்தருளுவது பற்றி, "தடை யறியாத் தெய்வம்" என்று குறிக்கின்றார். எண்ணிறந்த பொருள்களுக்குள்ளும் கலந்து தனது அருட் சத்தியால் அவ்வவற்றின் எண்ணிறந்த சத்திகள் யாவும் இனிது விளக்கமுறத் தான் உயர்தனிச் சத்தியாய் நிலவுமாறு புலப்பட, "சத்திகள் எலாம் விளங்கத் தானோங்கும் தெய்வம்" என்று விளக்கம் செய்கின்றார். என்றும் பொன்றாத நித்தப் பொருளாகிய தான் தனது நித்தத்தன்மையே விளங்க நிற்பது பற்றி, "நித்திய தன்மயமாகி நின்ற தெய்வம்" எனவும், எல்லா உலகங்களிலும் உள்ள ஆன்மாக்கள் செய்யும் வினைப் பயனுக் கேற்ப அமைந்த நிலைகள் (பதங்கள்) எண்ணிறந்தனவாதலின், அவை யாவும் நின்றாங்கு நின்று தம்கண் உறையும் ஆன்மாக்களுக்குப் போக போக்கியங்களைத் தருதற் கேற்பத் தனது திருவருளாகிய பெருவெளியின்கண் இருக்க வைத்துள்ளமை தோன்ற, "எல்லா நிலைகளும் தன் அருள்வெளியில் நிலைக்க வைத்த தெய்வம்" எனவும் தெரிவிக்கின்றார். அணிமா மகிமா முதலிய சித்திகளைப் பெறுதற்கு முயலும் சித்தர்களுக்கு அவ்வவர் விரும்பும் சித்திகள் பலவற்றையும் தந்தருளும் தெய்வ மென்றும், சித்தாந்தமாகிய சிவாகமங்கள் முடிபொருளாக எடுத்துரைக்கும் பரசிவம் என்றும் வற்புறுத்தற்கு, "சித்தி எலாம் தரும் தெய்வம் சித்தாந்தத் தெய்வம்" என்றும் ஓதி வழிபடுகின்றார். (10)

திருச்சிற்றம்பலம்

## 42. பேரானந்தப் பெருநிலை

அஃதாவது, சிவயோக முயற்சியில் முதிர்ந்து கனிந்த சிவானந்தமாகிய சிவபோகம் நல்கும் பரசிவத்தின் பெருமை சான்ற இயல்பு கூறுவதாம். பேரானந்தம் - பெருமைக்கு எல்லையாகிய சிவபோகம். சிவஞானத்தின் பெரிய நிலை அதுவாதல் பற்றிச் சிவானந்தப் பெரும் போகம் பெருநிலை எனப்படுகிறது. பழுத்த பேரானந்தப் பழம் எனச் சிறப்பிக்கப்பட்டு இப்பகுதிக்கண் பாட்டுத் தோறும் மகுடமாய் விளங்குவது பற்றிப் "பேரானந்தப் பெருநிலை" எனப் பெயர் குறிக்கப் பட்டுள்ளது.

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**3914.** **அணிவளர் திருச்சிற் றம்பலத் தாடும்**
**ஆனந்த போகமே அமுதே**
**மணிவளர் ஒளியே ஒளியினுள் ஒளியே**
**மன்னும்என் ஆருயிர்த் துணையே**
**துணிவுறு சித்தாந் தப்பெரும் பொருளே**
**தூயவே தாந்தத்தின் பயனே**
**பணிவுறும் உளத்தே இனித்திட எனக்கே**
**பழுத்தபே ரானந்தப் பழமே.**

**உரை :** பணிவு அமைந்த தொண்டர்களின் திருவுள்ளத்தில் இனிமை நிலவ விளங்குகின்ற சிவயோகமாகிய மரத்தில் கனிந்த பெரிய சிவானந்தமாகிய பரசிவமாகிய பழமே! அழகு மிகுகின்ற திருச்சிற்றம் பலத்தின்கண் ஆடல் புரிகின்ற சிவமாகிய ஆனந்த போகமே! அமுதமே! மாணிக்க மணியின்கண் ஒளிர்கின்ற ஒளியே! அவ்வொளிக் குள் உள்ளொளியாகத் திகழும் ஒளிப் பொருளே! நிலைபெற்ற என் அரிய உயிர்க்கு துணையாய் விளங்குகின்ற பரம்பொருளே! தெளியப் படுகின்ற சிவாகமங்கள் கூறும் பெரிய பொருளே! தூயதாகிய வேத வேதாந்த நூல்களின் ஞானப் பயனாய் விளங்குபவனே வணக்கம். எ.று.

அன்பும் பணிவுமுடைய மெய்யன்பர்களாகிய தொண்ட ருள்ளத்தில் நினைக்குந்தோறும் தேனினும் இனிமை மிகக் கனிந்த பெரிய ஆனந்தத்தை என் போன்றார்க்கு நல்கும் சிவமாகிய கனி யெனச் சிறப்பித்தற்கு, "பணிவுறும் உளத்தே இனித்திட எனக்கே பழுத்த பேரானந்தப் பழமே" என்று புகழ்கின்றார். அன்பும் பணிவும் இருந்தா லொழியத் தொண்டுள்ளம் பிறவாதாகலினாலும் தொண்டு புரியும்

உள்ளத்தில் சிவ நினைவு மிகுந்து இன்பஞ் செய்தலினலும், "பணிவுறும் உளத்தே இனித்திட" என்று பகர்கின்ருர். "நினைவார் நினைய இனியான்" என்று ஞானசம்பந்தர் உரைப்பது காண்க. திருச்சிற்றம்பலத்தில் நிகழும் திருக்கூத்துக் கண்டு பணிகின்ற ஞானவான்களுக்கு ஞான வமிர்தமாய்ச் சிவானந்தப் பேரின்பத்தை நல்குவது பற்றி, "திருச்சிற்றம் பலத்தாடும் ஆனந்த போகமே அமுதே" என்று போற்றுகின்ருர். சிவத்தின் திருமேனி மாணிக்க மணி போல் விளங்குதலால் அந்த மணி யொளியை வியந்து, "மணிவளர் ஒளியே" என்றும், ஒளிக்கு மூல காரண மாய் உள்ளிருந்து ஒளி திகழச் செய்வது பற்றிச் சிவனை, "ஒளியினுள் ஒளியே" என்றும் உரைக்கின்ருர். எடுத்த உடம்பும் உடம்போடு கூடி வாழும் உலகுகளும் அழிந்தாலும் உயிர் அழிவ தில்லாமையால், "மன்னும் ஆருயிர்" என்றும், அத்தகைய உயிர்க்கு உயிராய் இருந்து உணர்வு தந்து துணை புரிவதால் சிவபெருமானை, "மன்னும் என் ஆருயிர்த் துணையே" என்றும் மகிழ்ந்து பராவுகின்ருர். சித்தாந்தம், சிவாகமங்கள் சிவஞானப் பொருளைத் தடை விடைகளால் விளக்குவது பற்றி அதனை, "துணிவுறு சித்தாந்தம்" எனவும், அந்தச் சிவாகமங் களால் ஆராய்ந்து தெளியப்படும் பெருமை யுடைய தென்றற்கு, "சித்தாந்தப் பெரும் பொருளே" எனவும், வேதங்களும் வேதாந்தமாகிய உபநிடதங்களும் சிவஞானத்தைத் தூய நெறியில் எடுத்தோதுவது பற்றி, "தூய வேதாந்தத்தின் பயனே" எனவும் சொல்லுகின்ருர்.

இதனல், வேதாந்த சித்தாந்தப் பொருட் பயனுய்ச் சிவம் விளங்கு மாறு குறிக்கப் பட்டவாரும். (1)

**3915.** **திருவளர் திருச்சிற் றம்பலத் தாடும்**
**தெய்வமே மெய்ப்பொருட் சிவமே**
**உருவளர் ஒளியே ஒளியினுள் ஒளியே**
**ஓங்கும்என் உயிர்ப்பெருந் துணையே**
**ஒருதனித் தலைமை அருள்வெளி நடுவே**
**உவந்தர சளிக்கின்ற அரசே**
**பருவரல் நீக்கி இனித்திட எனக்கே**
**பழுத்தபே ரானந்தப் பழமே.**

**உரை :** துன்பத்தைப் போக்கி எனக்குள் இன்பமே நிலவுமாறு சிவயோகமாகிய மரத்தில் பழுத்த பெரிய சிவானந்தத்தை நல்கும் கனி போல்பவனே! கண்டார் விரும்பும் அழகு மிக்க திருச்சிற்றம்பலத்தில் ஆடல் புரிகின்ற தெய்வமாய் ஞானிகள் விரும்பும் மெய்ம்மைப் பொருளாய்த் திகழ்கின்ற சிவமே! உருவப் பொருளாய் உலகில் விளங்கும் ஒளிப் பொருளே! அவ்வொளிகட் கெல்லாம் மூல காரண மாகிய உள்ளொளியே! ஓங்குகின்ற என்னுயிர்க்குப் பெரிய அறிவுத் துணை செய்யும் பரம்பொருளே! ஒப்பற்ற தனித் தலைமையால் சிறந்த திருவருள் ஞானமாகிய அருள் வெளியின் நடுவண் இருந்து மகிழ்வோடு அருளரசு புரிகின்ற சிவமாகிய அரசே, வணக்கம். எ.று.

பருவரல் - துன்பம். உலகியல் வாழ்வில் தொடர்ந்து தாக்கும் துன்பங்களால் உயிரின்கண் இன்ப ஒளி மறைந்தொழிதலால்,

"பருவரல் நீக்கி இனித்திட எனக்கே பழுத்த பேரானந்தப் பழமே" என்று சிறப்பிக்கின்றார். தொடர்ந்து வந்து தாக்கும் துன்பத்தால் வாழும் உயிர்கள் மனங் கசந்து வருந்துவதைப் போக்கி இன்பச் சுவை பெறுமாறு ஞான வின்பத்தை நல்குவது பற்றி, "இனித்திட எனக்கே பழுத்த பேரானந்தப் பழமே" என்று போற்றுகின்றார். தெய்வ வடிவில் சடை முடியும் எண்டோளும் முக்கண்ணும் உடையனாய் நின்றாடுதலால், "திருச்சிற்றம்பலத்தாடும் தெய்வமே" எனவும், தெய்வ வடிவொடு நிற்பினும் ஞானிகளின் ஞானக் கண்களுக்கு இன்னவுரு இன்ன நிறம் என்று எடுத்துரைக்க மாட்டாத மெய்ப்பொருளாய் விளங்குவது பற்றி, "மெய்ப்பொருள் சிவமே" எனவும் விளம்புகிறார். சிவனது திருக்கூத்து நிகழும் திருச்சிற்றம்பலம் அன்பொடு வந்து காண்பார்க்கு அயரா இன்பம் நல்குவது பற்றி, "திருவளர் திருச்சிற்றம்பலம்" எனத் தெரிவிக்கின்றார். ஒளி யுருவாய் மக்கள் கண் கொண்டு காண விளங்குதலின் ஒளிப் பொருளை, "உருவளர் ஒளியே" என்றும், ஒளி யெல்லாம் மேன் மேலும் ஓங்குதற்கு ஏதுவாய் உள் நின்றொளிரும் பரம காரண சிவவொளியை, "ஒளியினுள் ஒளியே" என்றும், உயிர்களுக்கு உயிருணர்வாய் உணர்வு நல்கி வாழ்வாங்கு வாழ்தற்குத் துணை புரிதலின், "ஓங்கும் என்னுயிர்ப் பெருந் துணையே" என்றும் உரைக்கின்றார். தத்துவாதீதப் பெருவெளியில் சிவனது திருவருள் ஞான ஒளிகட்கெல்லாம் தனித் தலைமையுடன் எல்லா வுலகுயிர்களையும் நின்றாங்கு நின்று நிலவச் செய்தலின், "அருள் வெளி நடுவே உவந்து அரசு அளிக்கின்ற அரசே" என வுரைக்கின்றார்..

இதனால், பேரானந்தப் பழமாகிய சிவ பரம்பொருள் அருள் வெளியின்கண் அருளரசு புரியும் திறம் எடுத்தோதியவாறும். (2)

**3916.** **துதிவளர் திருச்சிற் றம்பலத் தாடும்**
**சோதியுட் சோதியே எனது**
**மதிவளர் மருந்தே மந்திர மணியே**
**மன்னிய பெருங்குண மலையே**
**கதிதரு துரியத் தனிவெளி நடுவே**
**கலந்தர சாள்கின்ற களிப்பே**
**பதியுறும் உளத்தே இனித்திட எனக்கே**
**பழுத்தபே ரானந்தப் பழமே.**

**உரை :** அன்பர்களின் திருவுள்ளத்தில் கோயில் கொண்டு அவர்கட்கு இன்பம் அளித்தற் பொருட்டுச் சிவயோக நெறியாகிய மரத்தில் முற்றக் கனிந்து சிறக்கும் பேரானந்தத்தை நல்கும் சிவமாகிய பெரிய பழமே! அன்பர்களால் துதிக்கப்படுகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் திருக்கூத்தாடி விளங்கும் சோதியுட் சோதியாகிய சிவபெருமானே! என்னுடைய அறிவின்கண் நிலைபெற்று அறியாமையாகிய நோயைப் போக்குகின்ற மருந்தே! மந்திரமே! நோய் போக்கும் அக்கமணியே! நிலைபெற்ற பெருங்குணங்களின் உருவாகிய மலை போல்பவனே! மேற் கதியைப் பெற அளிக்கின்ற துரிய காட்சியாகிய தனித்த யோக வெளியின் நடுவில் எழுந்தருளி அருளரசு புரிகின்ற இன்பப் பொருளே. வணக்கம். எ.று.

அன்பர் அன்பின்கண் நிலையாக எழுந்தருளுவது பற்றி அவர்களது திருவுள்ளத்தை, "பதியுறும் உளம்" எனவும், அதன்கண் எழுந்தருளி இன்பம் பயத்தலால், "இனித்திட" எனவும், என் போன்ற எளியோர் உள்ளத்தின்கண் பேரானந்தப் பெரும் பழமாய் இன்பம் செய்கின்றாய் என்று புகழ்வாராய், "பதியுறும் உளத்தே இனித்திட எனக்கே பழுத்த பேரானந்தப் பழமே" எனவும் பாடுகின்றார். அன்பர் கூட்டம் எக் காலத்தும் நிறைந்து நின்று துதித்தல் பற்றித் திருச்சிற்றம்பலத்தை, "துதி வளர் சிற்றம்பலம்" என்றும், அங்கே கூத்தப் பெருமான் திருவருள் பேரொளியாய்க் காட்சி வழங்குவது பற்றி, "சோதியுட் சோதியே" என்றும் இயம்புகின்றார். உலக வாழ்வில் உளவாகும் நோய்களைப் போக்குதற்குரிய மருந்து, மந்திரம், மணி என்ற மூன்றுமாய் அறிவின்கண் நிலவி உதவுதல் தோன்ற, "எனது மதிவளர் மருந்தே மந்திர மணியே" என்று புகழ்கின்றார். பெருமையும் சலியாத் தன்மையும் உடைமை தோன்ற, "மன்னிய பெருங் குணமலையே" என்று குறிக் கின்றார். மேலனவாகிய கதிகளைப் பெறுதற்குத் துரியத்தானத்தின்கண் இருந்து யோகம் செய்வார்க்குக் காட்சி தந்து அருள் ஞானம் வழங்குவது பற்றி, "கதி தரு துரியத் தனிவெளி நடுவே கலந்து அரசாள்கின்ற களிப்பே" என்று மொழிகின்றார். மேற் கதிக்குரிய துரியக்காட்சி யோகத்தை, "கதிதரு துரியத் தனிவெளி" என்று சிறப்பிக்கின்றார்.

இதனால், துரியக் காட்சியிலிருந்து பரவெளியைத் தரிசித்துப் போற்றும் ஞானவான்களுக்கு அருள் நலமளிக்கும் திறம் உரைக்கப் பட்டவாறும். (3)

**3917.** **சீர்வளர் திருச்சிற் றம்பலத் தோங்குஞ்**
**செல்வமே என்பெருஞ் சிறப்பே**
**நீர்வளர் நெருப்பே நெருப்பினுள் ஒளியே**
**நிறைஒளி வழங்கும்ஓர் வெளியே**
**ஏர்தரு கலாந்த மாதிஆ றந்தத்**
**திருந்தர சளிக்கின்ற பதியே**
**பாருறும் உளத்தே இனித்திட எனக்கே**
**பழுத்தபே ரானந்தப் பழமே.**

**உரை :** மண்ணுலகில் வாழும் எனது உள்ளத்தில் இனிமை மிகுமாறு முதிர்ந்து கனிந்து விளங்கும் பெரிய ஆனந்த சிவ பரம்பொரு ளாகிய கனியே! சிறப்பு மிகுகின்ற திருச்சிற்றம்பலத்தின் ஓங்குகின்ற சிவஞானச் செல்வமே! எனக்குரிய பெரிய சிறப்புப் பொருளே! நீர் தோன்றி மிகுதற் கேதுவாகிய நெருப்பாகிய பூதமே! நெருப்பின்கண் ஒளிரும் ஒளிப் பொருளே! நிறைந்த ஒளியினை நல்கும் ஒப்பற்ற வான வெளியே! உயர்வு மிகுந்த கலாந்தம் முதற்கொண்டு விளங்கும் அந்தங் கள் ஆறினும் இருந்து அருளரசு புரிகின்ற சிவ பதியே, வணக்கம். எ.று.

மண்ணுலகில் வாழும் என்னுடைய உள்ளத்திற் படியும் துன்பத்தைப் போக்கி இன்பம் நிறைதற் பொருட்டு முதிர்ந்த பேரானந்

த்தை நல்கும் சிவமாகிய கனியே என்று பாராட்டுவாராய், "பாருறும் உளத்தே இனித்திட எனக்கே பழுத்த பேரானந்தப் பழமே" என்று பராவுகின்றார். திருச்சிற்றம்பலத்தின்கண் ஞான நடம்புரிந்து விளங்குவது பற்றி, "திருச்சிற்றம்பலத் தோங்கும் செல்வமே" எனவும், தன்னால் சிறப்புடைய பொருளாகக் கருதப் படுவனவற்றுள் உயர்வற வுயர்ந்த சிறப்புடைப் பொருளாகக் கருதப் படுவது விளங்க, "என் பெருஞ் சிறப்பே" எனவும் சிவபெருமானை நினைக்கின்றார். வானத் தினின்று காற்றும், காற்றிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் தோன்றின என நூலோர் கூறுதலால், நீர் தோன்று தற்கு ஏதுவாகிய நெருப்பை, "நீர் வளர் நெருப்பு" என்றும், அந் நெருப்பின்கண் ஒளி திகழ்வது பற்றி, "நெருப்பினுள் ஒளியே" என்றும், உள் நிலவும் பூத வெளியை "நிறை ஒளியை வழங்குமோர் வெளியே" என்றும் உரைக்கின்றார். கலாந்தம், வேதாந்தம், சித்தாந்தம், யோகாந்தம், போதாந்தம், நாதாந்தம் என்ற ஆறும் ஒன்றினொன்று முறையே சிறந்து நிற்றலின், ஏர்தரு கலாந்தமாதி ஆறந்தம்" என்றும், இந்த அந்தங்களில் ஆங்காங்கிருந்து அருளொளி வழங்குதலால், "ஆறந்தத்திருந்து அரசளிக்கின்ற பதியே" என்றும் புகல்கின்றார்.

இதனால், கலாந்தம் முதல் நாதாந்தம் ஈறாக வுள்ள ஆறந்தங்களிலும் எழுந்தருளி அருளொளி பரப்பும் சிவத்தின் தலைமை நலம் எடுத்தோதிய வாறும். (4)

**3918.** **உரைவளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்**
**ஒள்ளிய தெள்ளிய ஒளியே**
**வரைவளர் மருந்தே மவுனமந் திரமே**
**மந்திரத் தாற்பெற்ற மணியே**
**நிரைதரு சுத்த நிலைக்குமேல் நிலையில்**
**நிறைந்தர சாள்கின்ற நிதியே**
**பரையுறும் உளத்தே இனித்திட எனக்கே**
**பழுத்தபே ரானந்தப் பழமே.**

**உரை :** அருட் சத்தி எழுந்தருளும் என் உள்ளத்தின்கண் இனிமை யுண்டாக எனக்குள் முதிர்ந்து ஒழுகும் பெரிய ஆனந்தத்திற்கு முதலாகிய சிவப் பழமே! புகழ் மிகுகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் ஓங்கி ஒளிரும் ஒள்ளிய தெளிந்த ஞான ஒளிப் பொருளே! மலைகளிற் பெறலாகும் சிறந்த மருந்து போல்பவனே! மௌன நிலையில் இருந்து கணிக்கப்படும் மந்திர வுருவாகியவனே! மந்திர வுரு வேற்றப்பட்ட மணியாகியவனே! முறையாக வுள்ள சுத்த தத்துவ நிலைக்கு மேல் விளங்கும் தத்துவாதீத நிலையில் நிறைந்து வீற்றிருந்து அருளரசு புரிகின்ற அருட் செல்வமே, வணக்கம். எ.று.

பரை - அருட் சத்தி; இதனைப் பரன் என்னும் ஆண்பாற் சொல்லுக் குப் பெண்பாலாகக் கொள்வதுமுண்டு. இது பராசத்தி எனவும் வழங்கும். இவ்வருட் சத்தி உயிர்களின் உள்ளத்தின்கண் இருந்து உடலின் உள்ளும் புறமுமாகிய கருவிகள் ஒழுங்குறப் பணி செய்தற்

பொருட்டு உதவி யருளும் சிறப்புடையதாதல் பற்றி, "பறையுறும் உளத்தே இனித்திட" என்று பகர்கின்றார். உறை - புகழ். திருச்சிற்றம் பலத்தின்கண் கூத்தப் பெருமான் ஞான நாடகம் புரியுமிடத்துச் சிவஞானப் பேரொளியாய்த் திகழ்வதுபற்றி, "சிற்றம்பலத்து ஓங்கும் ஒள்ளிய தெள்ளிய ஒளியே" என்று உரைக்கின்றார். உயிர்க்கு நலம் பயக்கும் மருந்துகள் பலவும் மலைகளில் கிடைக்கின்றன எனச் சித்த வைத்திய நூல்கள் கூறுவதால் சிவனை, "வரை வளர் மருந்தே" என்று குறிக்கின்றார். மானதம், மந்தம், உரை என மூவகையாக எண்ணப் படும் மந்திரங்களும் மௌன நிலையில் மானதமாகச் சிந்திக்கப்படும் மந்திரம் சிறந்ததாகலின் அதுபற்றிச் சிவனை, "மௌன மந்திரமே" எனவும், மந்திர வுருவேற்றிய மணி தன்னை அணிவார்க்கு மிக்க பயன் விளைக்கும் என உயர்ந்தோர் கூறுதலால், "மந்திரத்தால் பெற்ற மணியே" எனவும் போற்றுகின்றார். அசுத்தம், சுத்தாசுத்தம், சுத்தம் எனத் தத்துவ நிலைகள் வரிசையாக மேன் மேலாக வைத்து உரைக்கப் படுதலால், "நிரை தரு சுத்த நிலை" என்றும், சுத்த நிலைக்கு மேல் நிலை தத்துவாதீத நிலை எனப்படுதலால் ஆங்கிருந்து இறைவன் அருளரசு புரிகின்றான் என்பது பற்றி, "மேன் நிலையில் நிறைந்து அரசாள்கின்ற நிதியே" என்றும் கூறுகின்றார். திருவருள் பெருநிதியாகப் பேசப்படுவ தால் அவ்வருளே உருவாக வுடைய சிவபெருமானை "நிதியே" என்று புகழ்கின்றார்.

இதனால், அசுத்தம், சுத்தாசுத்தம், சுத்தம், என்ற தத்துவ நிலை மூன்றுக்கும் அப்பாலுள்ள அதீத நிலையில் எழுந்தருளி இறைவன் அருள் புரிகின்ற திறம் உரைத்தவாறும். (5)

3919. மேல்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்
மெய்யறி வானந்த விளக்கே
கால்வளர் கனலே கனல்வளர் கதிரே
கதிர்நடு வளர்கின்ற கலையே
ஆலுறும் உபசாந் தப்பர வெளிக்கப்
பால்அர சாள்கின்ற அரசே
பாலுறும் உளத்தே இனித்திட எனக்கே
பழுத்தபே ரானந்தப் பழமே.

உரை : தன்பால் அன்பு மிகும் உள்ளத்தின்கண் இன்பம் தழைக்குமாறு என் பொருட்டு முதிர்ந்தோங்கிய பேரானந்தத்தை நல்கும் சிவமாகிய கனியே! மேன் மேல் சிறப்புறும் திருச்சிற்றம் பலத்தின்கண் ஓங்கி விளங்கும் சச்சிதானந்தமாகிய அருள் விளக்காகிய வனே! காற்றாகிய பூதத்திலிருந்து தோன்றிய நெருப்பே! அந் நெருப்பின்கண் எழுந்து மிகுகின்ற ஒளிக் கதிரே! அக்கதிர் நடுவில் வளர்கின்ற கலைச் செல்வமே! உயர்வாகப் பேசப்படும் உபசாந்தமாகிய பரவெளிக்கு, அப்பால் அருளரசு புரிகின்ற சிவபெருமானே வணக்கம். எ. று.

திருச்சிற்றம்பலத்தின் பெருமை மேன்மேலும் மிகுகின்ற இயல்புடைய தாதலின், "மேல் வளர் திருச்சிற்றம்பலம்" என்றும், அதன்கண் நின்று

ஞானத் திருக்கூத்தால் சத்தும் சித்தும் ஆனந்தமுமாகிய மூன்றும் ஓருருவாய் அமைந்த ஞான விளக்கம் என்றற்கு, "மெய்யறி வானந்த விளக்கே" என்றும் விளம்புகின்றார். காற்றாகிய பூதத்திலிருந்து நெருப்பும், நெருப்பினிடத்தே எழுகின்ற ஒளியும், ஒளி நடுவில் திகழ்கின்ற கலாரூபமுமாகிய சிவமே என்றற்கு, "கால் வளர் கனலே கனல் வளர் கதிரே கதிர் நடு வளர்கின்ற கலையே" என்று உரைக்கின்றார். கலாரூபம் ஒளி மயமாவது பற்றி, "கலையே" என்று குறிக்கின்றார். ஆலுதல் - புகழ்ந்தோதுதல்; அசைதல் என்றுமாம். உபசாந்தப் பரவெளி - உபசாந்தப் பாழ். மாயப்பாழ், போதப் பாழ், உபசாந்தப் பாழ் என்ற மூன்றனுள் காரண காரிய ஆராய்ச்சிக்கு இடமில்லாதது உபசாந்தப் பாழ் எனப்படும். இம்மூன்றனுள் உபசாந்தம் மேலதாகலின் அதனை, "ஆலுறும் உபசாந்தப் பரவெளி" என்று பகர்கின்றார். இதனைக் "காரியம் ஏழ் கண்டறும் மாயப்பாழ், காரணம் ஏழ் கண்டறும் போதப் பாழ், காரிய காரண வாதனை கண்டறும் உபசாந்தப் பாழ்" (2495) என்று திருமந்திரம் ஓதுவது காண்க. இம்மூன்றையும் மாயப் பாழ், சீவப் பாழ், வியோமப் பாழ் என்றும் வழங்குவதுண்டு. மாயப் பாழ், சீவப் பாழ் இரண்டற்கும் மேலதாய் சாந்தப் பதமாகிய சிவத்துக்குக் கீழதாய் உள்ள பரவெளி உபசாந்தமாதலின், அதற்கப்பாலதாகிய பரசிவ வெளியின்கண் விளங்குகின்ற பரசிவத்தை, "உபசாந்தப் பரவெளிக் கப்பால் அரசாள்கின்ற அரசே" என்று போற்றுகின்றார். முப்பாழும் கடந்து அப்பாலதாகிய பரவெளியை "முழுப் பாழ்" என்றலும் உண்டு.

இதனால், அன்பர்பால் அவர்களுடைய உள்ளம் இனிக்க, எழுந்தருளிச் சிவ பரம்பொருள் சிவானந்தத்தை ஆன்மா இன்புற அளித்த சிறப்பு ஓதியவாறும். (6)

**3920. இசைவளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்**
**இன்பமே என்னுடை அன்பே**
**திசைவளர் அண்ட கோடிகள் அனைத்தும்**
**திகழுறத் திகழ்கின்ற சிவமே**
**மிசையுறு மௌன வெளிகடந் ததன்மேல்**
**வெளிஅர சாள்கின்ற பதியே**
**பசையுறும் உளத்தே இனித்திட எனக்கே**
**பழுத்தபே ரானந்தப் பழமே.**

**உரை :** அன்பு மிக்க என் உள்ளத்தில் இனிமை யுறுமாறு என் பொருட்டு எழுந்தருளிய கனிந்த பேரானந்தத்தை நல்கும் பரம்பொருளாகிய கனியே! புகழ் மிகுகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் ஓங்கிய இன்பத்தை நல்கும் என்னுடைய அன்புருவாகிய பெருமானே! நாற்றிசையிலும் மிக்குறும் அண்ட கோடிகளனைத்தும் ஒளி மிக்கு விளங்க அருள் புரிந்து திகழும் சிவ பரம்பொருளே! எல்லாத் தத்துவங் கட்கும் மேலதாகிய அதீதப் பரவெளி எனப்படும் மௌன வெளிக்கு அப்பால் அதன் மேலுள்ள பரசிவ வெளியில் அருளரசு புரிகின்ற சிவபதியே! வணக்கம். எ.று.

அன்பர்களின் உள்ளத்தில் ஊற்றெழ இனிமை செய்கின்ற பெருமானுதல் பற்றி, "பசையுறும் உளத்தே இனித்திட எனக்கே பழுத்த பேரானந்தப் பழமே" என்று போற்றுகின்றார். இசை - புகழ். திருச்சிற்றம்பலத்தின்கண் எழுந்தருளும் கூத்தப் பெருமான் தனது காட்சியால் கண்டு பணிபவர்க்கு இன்பமாகவும் அன்பர்களுக்கு அன்புருவாகவும் விளங்குவது பற்றி, "இசை வளர் திருச்சிற்றம்பலத் தோங்கும் இன்பமே என்னுடை அன்பே" என்று புகழ்கின்றார். அழியா இன்பம் தருவது பற்றி, "இன்பமே" என்றும், அன்புருவாய் விளங்கு தலால், "அன்பே" என்றும் சிறப்பிக்கின்றார். திசைகளனைத்திலும் எண்ணிறந்த அண்டங்கள் உளவாதலால், அவையனைத்தும் கெடாது நின்று நிலவச் செய்யும் சிவனது இறைமைத் தன்மையை எடுத்துக் காட்டற்கு, "திசை வளர் அண்ட கோடிகள் அனைத்தும் திகழுறத் திகழ் கின்ற சிவமே" என்று தெரிவிக்கின்றார். இவ்வண்டங்கள் அத்தனையும் மாயா மண்டலத்தின் அகத்தே நிலவுவன என்று பெரியோர் கூறுதலின், அம்மாயையின் மேலதாகிய அதீத வெளியை, "மிசையுறு மௌன வெளி" என்றும், அதற்கு மேலுள்ள பரவெளியை "அதன் மேல் வெளி" என்றும் குறிப்பிட்டு, அப்பரவெளியின்கண் சிவசூரியனாய் விளங்கி அருளரசு புரிவது பற்றி, "அதன் மேல் வெளி அரசாள்கின்ற பதியே" என்று பாடுகின்றார். பசை - அன்பு. அன்பு நிறைந்த உள்ளத்தை, "பசையுறும் உளம்" எனவும், உள்ளத்தால் உள்குவார்க்கு உலவாப் பேரின்பம் தருவது பற்றி, "உளத்தே இனித்திட எனக்கே பழுத்த பேரானந்தப் பழமே" எனவும் பராவுகின்றார்.

இதனால், அண்ட கோடிகள் அனைத்தும் நிலைபெற்றுத் திகழ்வதற்குச் சிவ பரம்பொருள் காரண மென்பது வெளிப்படுத்தியவாறும். (7)

**3921. அருள்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்**
**அரும்பெருஞ் சோதியே எனது**
**பொருள்வளர் அறிவுக் கறிவுதந் தென்னைப்**
**புறம்விடா தாண்டமெய்ப் பொருளே**
**மருவும்ஓர் நாத வெளிக்குமேல் வெளியில்**
**மகிழ்ந்தர சாள்கின்ற வாழ்வே**
**பருவரல் நீக்கி இனித்திட எனக்கே**
**பழுத்தபே ரானந்தப் பழமே.**

**உரை :** அருளொளி மிகுகின்ற திருச்சிற்றம்பலத்தின்கண் உயர்ந் தோங்குகின்ற அருமையும் பெருமையுமுடைய சோதிப் பொருளாகிய சிவமே! உயிர்க்கு உணர்வுப் பொருளாய்ச் சிறக்கின்ற அறிவு தந்து அந்த அறிவுக்கு உண்மையை உள்ளவாறு உணரும் உண்மை யறிவு தந்து என்னை அருள் நெறிக்குப் புறத்தே செல்ல விடாது ஆண்டருள் கின்ற மெய்ப்பொருளே! மாயா மண்டலத்து உச்சியில் பொருந்திய ஒப்பற்ற நாத வெளிக்கு அப்பாலுள்ள பரவெளியில் எழுந்தருளி அருளரசு புரிகின்ற வாழ்வரசே! துன்பத்தை நீக்கி இன்பம் உண்டாகு மாறு என் பொருட்டு அறிவின்கண் பழுத்து முதிர்ந்த பெரிய ஆனந்தத்தை நல்குவதாகிய சிவக் கனியே, வணக்கம். எ.று.

அருள் ஞானவொளி திகழும் ஞானகாசமாதலால், "அருள் வளர் திருச்சிற்றம்பலம்" என்று அதனைச் சிறப்பிக்கின்றார். சிவஞானப் பேரொளி அருமையும் பெருமையும் உடையதாதலால், "அரும் பெரும் சோதி" என்றும் உரைக்கின்றார். உடம்பொடு கூடி வாழும் உயிர்க்குப் பொருளாய் இலங்குவது பொறி புலன்களின் வழியாகக் காணப்படும் பொருள்களைப் பற்றிய அறிவாதலின் அதனை, "பொருள் வளர் அறிவு" எனவும், பொருள் அறிவினும் உண்மையை உள்ளவாறு உணரும் உண்மையறிவும் இன்றியமையாததாய், இறைவனால் அருளப் படுவதாய் இருத்தல் பற்றி, "பொருள் வளர் அறிவுக்கு அறிவு தந்து" எனவும், உலகியற் பொருளின்ப நெறியில் சென்று கெடாதவாறு ஆட்கொண்டு திருவருட் சிவநெறியில் தழுவிக் கொண்டது புலப்பட, "அறிவு தந்து என்னைப் புறம் விடாது ஆண்ட மெய்ப் பொருளே" எனவும் இசைக்கின்றார். நிலம் முதல் நாதம் ஈறாக வுள்ள தத்துவம் முப்பத்தாறும் மாயையாகிய பெருவெளியில் இருத்தலால், "மருவும் ஓர் நாதவெளி" என்றும், நாதவெளிக்கு மேல் உளதாகிய பரசிவ வெளியில் எழுந்தருளி அருளரசு செய்வது விளங்க, "மேல் வெளியில் மகிழ்ந்து அரசாள்கின்ற வாழ்வே" என்றும் ஓதுகின்றார். உலகியல் வாழ்வு விருப்பு வெறுப்புக்களால் துன்பத்தை உண்டாக்கி இன்பப் பேற்றுக்குத் தடையாதல் தோன்ற, "பருவரல் நீக்கி இனித்திட எனக்கே பழுத்த பேரானந்தப் பழமே" எனப் பராவுகின்றார்.

இதனால், நாத வெளிக்கு மேலுள்ள பரநாத வெளிக் கப்பாலதாகிய பரசிவ வெளியின்கண் சிவ பரம்பொருள் இருந்து அருளரசு புரியும் திறன் அறிவித்தவாறும். (8)

**3922.** **வான்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்**
**மாபெருங் கருணைஎம் பதியே**
**ஊன்வளர் உயிர்கட் குயிரதாய் எல்லா**
**உலகமும் நிறைந்தபேர் ஒளியே**
**மான்முதன் மூர்த்தி மானிலைக் கப்பால்**
**வயங்கும்ஓர் வெளிநடு மணியே**
**பான்மையுற் றுளத்தே இனித்திட எனக்கே**
**பழுத்தபே ரானந்தப் பழமே.**

**உரை :** பெருமை பொருந்திய திருச்சிற்றம்பலத்தில் உயர்ந் தோங்குகின்ற மிக்க பெருங் கருணை யுருவாகிய சிவபதியே! உடம்பொடு கூடி வாழும் உயிர்களுக் கெல்லாம் உயிராய் எல்லா உலகத்திலும் நிறைந்து ஒளிரும் பெரிய ஒளிப் பொருளாகிய சிவமே! திருமால் முதலிய மூர்த்திகளின் பதங்கட்கு மேலாய் விளங்குகின்ற ஒப்பற்ற பரவெளியில் நடுமணியாய்த் திகழ்கின்ற பெருமானே! அருளுருக் கொண்டு உள்ளத்தின்கண் இன்பம் உண்டாகுமாறு எழுந்தருளுகின்ற என் போன்றார்க்கெனப் பழுத்து முதிர்ந்த இனிய பெரிய இன்பக் கனியாகிய சிவ பரம்பொருளே, வணக்கம். எ.று.

அழியாப் பெருமை கொண்டு பிறங்குவதாதலால், "வான் வளர் திருச்சிற்றம்பலம்" என்றும், அதன்கண் பெரிய கருணை யுருக் கொண்டு

கூத்தப் பெருமானுய்க் காட்சி தருவது பற்றி, "திருச்சிற்றம்பலத் தோங்கும் மாபெருங் கருணை எம் பதியே" என்றும் ஏத்துகின்றார். உடம்பொடு கூடி வாழும் உயிர்கட்கு உயிராய் உணர்வு தந்தருளுவ தோடு எல்லா உலகுயிர்களிலும் நீக்கமற நிறைந்து ஞானம் நல்குவது பற்றி, "ஊன் வளர் உயிர்கட் குயிரதாய் எல்லா உலகமும் நிறைந்த பேரொளியே" என ஓதுகின்றார். மான் முதல் மூர்த்தி மானிலை, திருமால் பிரம்மன் உருத்திரன் ஆகிய மூவர்க்கும் உரியவாய் ஒன்றன் மேல் ஒன்றாய் உயர்ந்துள்ள பிரம்ம பதம், வைகுந்த பதம், உருத்திர பதம் ஆகிய மூன்றிற்கும் அப்பால் மேலாய் விளங்கும் பரசிவ வெளியின் நடு நின்று ஒளிரும் நாயக மணியாய்த் திகழ்வது விளங்க, "மான் முதன் மூர்த்தி மானிலைக் கப்பால் வயங்கும் ஓர் வெளி நடுமணியே" என விளம்புகின்றார். அருள் வழங்கும் பண்பு மேற் கொண்டு அவரவர் உள்ளத்தின்கண் இன்ப முண்டாக எழுந்தருளும் நலத்தைப் பாராட்டு வாராய், "பயன்மையுற் றுளத்தே இனித்திட எனக்கே பழுத்த பேரானந்தப் பழமே" என்று புகழ்கின்றார்.

இதனால், திருமால் முதலிய தேவர் பதங்களுக்கு மேலாய பரசிவ வெளியில் நடுமணியாய்ச் சிவம் திகழும் திறம் செப்பியவாறும். (9)

**3923.** **தலம்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்**
**தனித்தமெய்ப் பொருட்பெருஞ் சிவமே**
**நலம்வளர் கருணை நாட்டம்வைத் தெனையே**
**நண்புகொண் டருளிய நண்பே**
**வலமுறு நிலைகள் யாவையுங் கடந்து**
**வயங்கிய தனிநிலை வாழ்வே**
**பலமுறும் உளத்தே இனித்திட எனக்கே**
**பழுத்தபே ரானந்தப் பழமே.**

**உரை :** சிவ தலங்களுள் தலைமைத் தலமாக விளங்குகின்ற திருச் சிற்றம்பலத்தின்கண் ஓங்குகின்ற ஒப்பற்ற மெய்ப்பொருளாகிய பெருமை மிக்க சிவபெருமானே! நலம் செய்யும் அருட் பார்வையை என் மேல் செலுத்தி, என்னையும் அன்பனாகக் கொண்டருளிய நண்புருவாகிய பெருமானே! நன்மை மிக்க பதங்கள் யாவையும் கடந்து விளங்குகின்ற தனித் தன்மையை யுடைய வாழ்வுக்குரிய பரம்பொருளே! ஞான பலம் கொண்ட பத்தர் உள்ளத்தின்கண் இன்பம் பெருக என் பொருட்டு நன்கு பழுத்த ஆனந்தம் நிறைந்த சிவக் கனியே, வணக்கம். எ.று.

சிவன் எழுந்தருளும் தலங்கள் எல்லாவற்றுள்ளும் தலைசிறந்தது தில்லைத் திருச்சிற்றம்பலமாதலால், "தலம் வளர் சிற்றம்பலம்" என்றும், அதன்கண் மெய்ம்மைப் பொருளாகிய பரசிவம் ஒப்பற்ற கூத்தப் பெருமானாய் எழுந்தருளுவது பற்றி, "தனித்த மெய்ப் பொருட் பெருஞ் சிவமே" என்றும் புகழ்கின்றார். மெய்ப்பொருட் பெருஞ் சிவம் - மெய்ப் பொருளாகிய பெருமை சான்ற சிவ பரம்பொருள். இறைவனது திருவருள் நாட்டம் எல்லா நலங்களையும் பெருக நல்குவதாதலால், "நலம் வளர் கருணை நாட்டம் வைத்து" எனவும், சித்தாந் தன்மை யுடைமையால்

உயிர்களின்பால் அன்பால் ஒன்றி யிருந்து ஒளி நெறி காட்டி உய்வித் தருளுவது பற்றி, "நண்பு கொண்டருளிய நண்பே" எனவும் இயம்பு கின்றார். சிவபதம் நலம் பலவும் நிறைந்த தேவ பதங்கள் அனைத்தை யும் கடந்து அப்பாலாய் விளங்குவதுடன் ஒப்புயர்வில்லாத உயர்தனி நிலையாக ஓங்குவது பற்றி, "வலமுறு நிலைகள் யாவையும் கடந்து வயங்கிய தனிநிலை வாழ்வே" எனப் பாராட்டுகின்றார். உடம்பாலும் உயிரறிவாலும் உண்டாகின்ற பலங்களை விடப் பக்தி ஞானத்தால் உண்டாகும் பலம் நிலையாய சிறந்த பலமாதலின், அது நிறைந்த உள்ளத்தை, "பலமுறும் உளம்" என்றும், அந்த ஞான பலம் நிறைந்த உள்ளத்திற்கு இனிமை தந்து மேன் மேலும் ஊக்குதல் தோன்ற, "இனித்திட" என்றும், "பழுத்த பேரானந்தப் பழமே" என்றும் பரவி மகிழ்கின்றார்.

இதனால், இறைவன் தனது அருள் நாட்டத்தைச் செலுத்தி உயிர் கட்கு உயர்ந்த நண்பனாய் நலஞ் செய்யும் திறம் தெரிவித்தவாறும். (10)

திருச்சிற்றம்பலம்

# 43. திருவடி நிலை

அஃதாவது, பாட்டுத் தோறும் இறைவன் திருவடிகள் எங்கும் எல்லாப் பொருட்களிலும் கலந்து, பரந்திருக்கும் பெருநிலையை எடுத்தோதுவது. எங்கும் எல்லாமாய்ச் சிறந்து பரந்து விளங்கும் பரம் பொருளின் செம்மை நிலை ஈண்டு அதன் திருவடி மேல் ஏற்றிக் கூறப் படுகிறது. அடியும் முடியும் அறியப் படாத பெருமை யுடையதாயினும் ஆன்மாக்கள் நினைந்து பரவுதற்கு ஏற்புடைமை பற்றித் திருவடி விதந்து பேசப்படுகிறது.

## எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3924. உலகுபல் கோடி கோடிகள் இடங்கொள்
உலப்பிலா அண்டத்தின் பகுதி
அலகுகாண் பரிய பெரியகூட் டத்த
அவைஎலாம் புறத்திறைச் சார்பில்
விலகுறு அணுவில் கோடியுள் ஒருகூற்
றிருந்தென விருந்தன மிடைந்தே
இலகுபொற் பொதுவில் நடம்புரி தருணத்
தென்பர்வான் திருவடி நிலையே.

**உரை :** பலவாகிய கோடி கோடி உலகங்கள் தங்குகின்ற கெடாத அண்டப் பகுதிகள் அளவிடற் கரிய பெரிய கூட்டங்களாகும்; அவை எல்லாவற்றினும் புறமாகிய தனது உருவில் ஒருசிறு கூற்றில் நீங்காமல் உள்ள அணு ஒன்றில் ஒரு கோடியாகப் பிரிந்த ஒருசிறு கூற்றில் இருந்தது போலச் செறிந்து விளங்குகின்ற பொற் சபையில் திருநடம் புரியும் காலத்து, இருந்தன என்று அறிந்தோர் இறைவனது பெரிய திருவடியின் பெருநிலையை உரைக்கின்றனர். எ.று.

"பொற் பொதுவில் நடம்புரி தருணத்து திருவடி நிலை அணுவில் ஒரு கோடியுள் ஒருகூற்றில் இருந்தென மிடைந்திருந்தன" எனவும், "உலப்பிலா அண்டப்பகுதி அலகு காண்பரிய பெரிய கூட்டத்தவாம்" எனவும், "அவை எல்லாவற்றினும் இறைச் சார்பில் நிலவும் அணுவில் ஒரு கோடியுள் ஒருகூற்றில் மிடைந்து இருந்தன" எனவும் இயையும். உலப்பு - கெடுதல். அண்டப் பகுதியின் பெருக்கம் கோடி கோடியாம் என்பது பற்றி, "உலகு பல்கோடி கோடி இடங் கொள் உலப்பிலா அண்டத்தின் பகுதி" என்று கூறுகின்றார். அண்டம் ஒன்றின்கண் பல கோடி கோடி உலகுகள் உள்ளன என்றற்கு, "பல்கோடி கோடி

உலகுகள் இடங் கொள் அண்டம்'' என்று குறிக்கின்றார். எண்ணிறந்த உலகங்களைத் தன்கண் கொண்டிருப்பினும் அவை அழியினும் அண்டங் கள் அழிவில என்பாராய், "உலப்பிலா அண்டத்தின் பகுதி'' என்கின்றார். இத்தகைய அண்டப் பகுதிகள் அளவிறந்தனவாய் பெருங் கூட்டமாய் இருப்பவை என்றற்கு, "அண்டத்தின் பகுதி அலகு காண்பரிய பெரிய கூட்டத்த'' என்று கூறுகின்றார். இவை எல்லாவற்றையும் தன்கண் அமையக் கொண்டு அவற்றிற்குப் புறமாய்ப் பரந்து விளங்குவது பரம்பொருள் என்றற்கு, "அவை எலாம் புறத்திறை'' என்று மொழி கின்றார். இவை எல்லாவற்றுக்கும் புறத்தே தங்குகின்ற பரம்பொருள், தத்தம் சார்பின்கண் ஒட்டி நீங்காது நிறைந்திருக்கும் பல கோடி அணுக்களுள் ஒரு கூற்றில் ஒடுங்கி யிருந்தது போல அண்டத்தின் பகுதிகளில் "மிடைந்து இருந்தன'' எனவும், பொற் சபையில் நடம் புரியு மிடத்துத் திருவடியின் பெருநிலை இவ்வாறு உள்ளன என அறிந்தோர் கூறுகின்றனர் எனத் தெரிவித்தற்கு, "வான் திருவடி நிலை பொற் பொதுவில் நடம்புரி தருணத்து என்பர்'' எனவும் தெரிவிக்கின்றார்.

இதனால், அணுவில் ஒரு கோடி கூற்றுள் ஒன்றின்கண் இருந்தது போல, அண்டத்தின் பகுதி யனைத்திலும் பரமன் திருவடிகள் மிடைந் திருக்கின்றன எனத் தெரிவித்தவாறும். (1)

**3925.** **தடையுறுப் பிரமன் விண்டுருத் திரன்மா**
**யேச்சுரன் சதாசிவன் விந்து**
**நடையுறுப் பிரமம் உயர்பரா சத்தி**
**நவில்பர சிவம்எனும் இவர்கள்**
**இடையுறுத் திருச்சிற் றம்பலத் தாடும்**
**இடதுகாற் கடைவிரல் நகத்தின்**
**கடையுறு துகள்என் றறிந்தனன் அதன்மேற்**
**கண்டனன் திருவடி நிலையே.**

**உரை :** தடுக்கப்படும் சிறுமை யில்லாத திருமால், பிரம்மன், உருத்திரன், மாயேச்சுரன், சதாசிவன், விந்து, பிரமம், பராசத்தி, பரசிவம் எனும் இத்தேவ தேவர்கள் இடை நின்று காண்பதற் கில்லாத திருச்சிற்றம்பலத்தில் கூத்தாடுகின்ற இடது கால் கடை விரல் நகத்தின் கண் கடையில் ஒட்டி யிருக்கின்ற ஒரு துகளென்று அறிந்ததோடு அதற்கு மேலாக விளங்குவது சிவ பரம்பொருளின் திருவடி நிலை யென அறிந்தேன். எ.று.

பிரமன் முதல் விந்து ஈருகக் கூறப்பட்ட அறுவரும் தரிசித்தற் காகாத குறை யுடையவர்கள் அல்ல ரெனத் தெளிவு படுத்தற்கு, "தடையுறுப் பிரமன் விண்டு உருத்திரன் மாயேச்சுரன், சதாசிவன் விந்து'' என வுரைக்கின்றார். பிரமன், பராசத்தி, பரசிவம் எனும் இவர்கள் தமக்கென உருவும் ஒழுக்கமும் சிறப்பாக உடையவரல்லரா தலால், "நடையுறுப் பிரமம் உயர் பராசத்தி நவில் பரசிவம்'' என்று மொழிகின்றார். சிவசத்திகளுள் மேன்மை யுடைமை பற்றிப் பரையை "உயர் பராசத்தி'' என்றும், அதனை யுடைய சத்திமானாகிய சிவத்தைப்

பரசிவம் என ஆகமங்கள் கூறுதலின், "நவில் பரசிவம்" என்றும் நவில்கின்றார். திருச்சிற்றம்பலத்தின்கண் கூத்தாடுகின்ற சிவபெருமானைக் காண்பவர், காட்சிக்கு இடை நின்று தடுத்தலின்மை பற்றி, "இவர்கள் இடையுறாத் திருச்சிற்றம்பலம்" என்று ஏத்துகின்றார். மேலே கூறிய பிரமன் முதல் பரசிவம் ஈறாகக் கூறப்படும் தேவதேவர்கள் பேராற்றலும் பெருஞ் செயலும் உடையவராயினும் கூத்தாடும் சிவபரம்பொருளை நோக்க, அதன் திருவடிக் கடை விரலில் ஒட்டிய சிறு துகளுக்கு ஒப்பாக எண்ணப்படும் சிறுமையுடையவர் என்று கண்டமை புலப்பட, "இடது கால் கடை விரல் நகத்தின் கடையுறு துகள் என்று அறிந்தனன்" என்றும், திருவடியின் பெருமை புலப்பட, "அதன் மேல் கண்டனன் திருவடி நிலையே" என்றும் இயம்புகின்றார்.

இதனால், திருச்சிற்றம்பலக் கூத்தப் பெருமானுடைய இடது திருவடிக் கடை விரல் நகத்தின் கடையில் ஒட்டிய துகளெனப் பிரமன் முதலிய தேவ பதங்கள் அமைந்திருத்தலை அறிந்தமை, எல்லாவற்றுக்கும் மேலாக விளங்குவது திருவடி நிலை என்றும் தெரிந்தமை உரைத்தவாறும். (2)

**3926.** **அடர்மலத் தடையால் தடையுறும் அயன்மால்**
**அரன்மயேச் சுரன்சதா சிவன்வான்**
**படர்தரு விந்து பிரணவப் பிரமம்**
**பரைபரம் பரன்எனும் இவர்கள்**
**சுடர்மணிப் பொதுவில் திருநடம் புரியும்**
**துணையடிப் பாதுகைப் புறத்தே**
**இடர்கெட வயங்கு துகள்என அறிந்தே**
**ஏத்துவன் திருவடி நிலையே.**

**உரை :** மறைத்து வருத்துகின்ற மலங்களின் தடையால் சிறுமையுறும் பிரமன், திருமால், அரன், மயேச்சுரன், சதாசிவன் ஆகியோரும், தத்துவங்கட்கு மேலாய் விரியும் சத்தி மயமாகிய விந்துவும், பிரணவ வடிவாகிய பிரம்மப் பொருளும், பரம்பரையும், பரம்பரனும் என வரும் இவர்களும், ஒளி வீசுகின்ற மணிகள் இழைத்த அம்பலத்தின்கண் திருநடம் புரிகின்ற இரண்டாகிய திருவடிக்கண் பொருந்திய பாதுகையின் புறத்தே தீண்டுவார் துயர் கெடுமாறு விளங்கும் துகளென அறிந்து சிவத்தின் திருவடி நிலையைப் பராவுகின்றேன். எ.று.

நீங்காது நின்று ஆன்ம அறிவை மறைப்பது பற்றி, "அடர் மலத் தடையால் தடையுறும் அயன் மால் அரன் மயேச்சுரன் சதாசிவன்" எனக் குறிக்கின்றார். சுத்த தத்துவத்தின்கண் விளங்குவதாகிய விந்து சத்தியை, "வான் படர் தரு விந்து" எனவும், பிரணவப் பொருளாதல் பற்றி, பிரணவப் பிரமம்" எனவும், பரமனுக்கு நீங்காத சத்தியாதலின், "பரை பரம்பரன் எனும் இவர்கள்" எனவும் இயம்புகின்றார். விந்து, பிரமம், பரை, பரம்பரன் என்ற ஐந்து பதங்கட்கும் அதிதேவதைகளாதல் பற்றி, வான் படர்தரு விந்து முதலாக எடுத்தோதுகின்றார். இத்தேவதைகளின் சிறப்பு, கூத்தாடும் பாதுகையில் ஒட்டிய துகள் எனக் கண்டு விலகுகின்றமை வெளிப்பட, "திருநடம் புரியும் துணையடிப்

பாதுகைப் புறத்தே இடர் கெட வயங்கு துகளென அறிந்தே ஏத்துவன்'' என்றும், மேற்கூறிய பதங்கள் அனைத்தும் துகளென அறிந்தவிடத்து ஏத்துதற் குரியது திருவடி எனத் தெளியப் படுதலால், ''ஏத்துவன் திருவடி நிலையே'' என்றும் இயம்புகின்றார்.

இதனால், பிரம்மன் முதல் பரம்பரன் ஈறாக வுள்ள தேவ பதங்களைத் துகளென அறிந்து விலக்கியவாறும். (3)

3927. **இகத்துழல் பகுதித் தேவர்இந் திரன்மால்**
**பிரமன்ஈ சானனே முதலாம்**
**மகத்துழல் சமய வானவர் மன்றின்**
**மலரடிப் பாதுகைப் புறத்தும்**
**புகத்தரம் பொருந்தா மலத்துறு சிறிய**
**புழுக்கள்என் றறிந்தனன் அதன்மேல்**
**செகத்தொடர் பிகந்தார் உளத்தமர் ஒளியில்**
**தெரிந்தனன் திருவடி நிலையே.**

**உரை :** தேவ பதத்தின்கண் இருந்து வருந்தும் பல பகுதிப்பட்ட தேவர்களும், இந்திரன் திருமால் பிரமன் ஈசானன் முதலாக வேள்வி களில் அவி யுணவு நயந்து திரியும் தேவர்களும், பலவேறு சமயத் தேவர்களும் அம்பலத்தில் ஆடுகின்ற தாமரை மலர் போன்ற திருவடியில் அணியப்பட்ட பாதுகையின் புறச் சூழலிலும் புகுதற்குரிய தகுதி யில்லாத மலத் திரளில் நெளிந்துழலும் சிறு புழுக்கள் என்று அறிந்து அந்நிலைக்கு மேல் உலகியல் தொடர்பினை அறுத் தோங்குகின்ற பெரியோர்களின் திருவுள்ளத்தில் விளங்குகின்ற ஞான ஒளியின்கண், பரம்பொருளின் திருவடியினது உண்மை நிலையை அறிந்து மகிழ்கின்றேன். எ.று.

பர முத்தியை நோக்கப் பதமுத்தி கீழ்ப்பட்டதாகலின் அதன்கண் உறையும் தேவர்களை, ''இகத்துடல் பகுதித் தேவர்'' என்றும், இந்திரன் முதலிய தேவர்கள், மண்ணகத்து மக்களும் மேலுள்ள தேவர்களும் செய்யும் யாகத்தில் எழும் அவியுணவு உண்டு வாழ்பவராதலால், ''இந்திரன் மால் பிரமன் ஈசானன் முதலாம் மகத்துழல் வானவர்'' என்றும், வேறு வேறு சமயத்தவர் உரைக்கும் தேவர்களை, ''சமய வானவர்'' என்றும் கூறுகின்றார். கூத்தப் பெருமானுடைய திருவடி நீழலின் புறச் சூழலிலும் புகுதற்குரிய தகுதி யில்லாமைக்கு ஏது பிணித்திருக்கும் மலங்களின் செறிவு என்பது விளங்க, ''மலரடிப் பாதுகைப் புறத்தும் புகத் தரம் பொருந்தா மலத்துறு சிறிய புழுக்கள்'' என்று இகழ்கின்றார். திருவடியின் தோன்று நிலை விளங்குதற்கு, ''செகத் தொடர்பு இகந்தார் உளத்தமர் ஒளியில் தெரிந்தனன்'' என்று தெரிவிக் கின்றார். செகத் தொடர்பு - உலகியல் தொடர்பு. செகத் தொடர் பிகந்தவர் - சிவஞானச் செல்வராவர்.

இதனால், ஞானவான்களின் திருவுள்ளத்தில் விளக்கமுறும் சிவஞான ஒளியில், திருவடி நிலை காட்சிப் படுமாறு தெரிவித்தவாறும். (4)

3928. பொன்வணப் பொருப்பொன் றதுசகு ணந்தம்
போந்தவான் முடியதாங் கதன்மேல்
மன்வணச் சோதித் தம்பம்ஒன் றதுமா
வயிந்துவாந் தத்ததாண் டதன்மேல்
என்வணச் சோதிக் கொடிபர நாதாந்
தத்திலே இலங்கிய ததன்மேல்
தன்வணம் மணக்கும் ஒளிமல ராகத்
தழுவினன் திருவடி நிலையே.

உரை : பொன்னின் நிறத்தையுடைய மலை யொன்று, அது சகுணந்தத்தில் தோன்றும் பெரிய உச்சியை யுடையது; அதன் மேல் பெருமை வாய்ந்த அழகிய சோதித் தம்பம் ஒன்று உளது; அதுதானும் விந்து தத்துவத்தின் உச்சியின் கண்ணதாம்; அதன்மேல் அழகிய சோதிக் கொடி நின்று பரநாதாந்தமாகிய நிலையிலே விளங்குவதாம்; அதற்கு மேல் சிவத்தின் வண்ணமுடையதாய் மணங் கமழும் ஒளி பொருந்திய மலராகத் திருவடி நிலையைக் கண்டு கொண்டேன். எ.று.

பொன் வண்ணப் பொருப்பு என்றது - பொன் மலை போல் தோன்றும் நிர்க்குண வடிவாகிய சிவம். அதன் கீழ் விளங்குவது பல்வகைக் குணங்களோடு கூடிய சகுண நிலை எனப்படும் தத்துவத்தின் உச்சியில் விளங்குவதாகும். அதன் மேல் நிற்பது சிவவொளி செய்யும் ஒளித் தூணாகும். அதன் கீழது விந்து தத்துவத்தின் முடியாகும். அதனை வைந்துவாந்தம் என்று கூறுவர். அதன் மேல் விளங்குவது விந்து தத்துவத்தின் மேலுளதாகிய பரநாதத் தத்துவம். அந்த விந்து தத்துவத்திற்கு மேல் நாத தத்துவத்தின் முடிவரை நிற்பது சிவசோதி பரப்பும் கொடி. அந்தக் கொடி பறக்கும் இடம் நாத தத்துவத்தின் அந்தமாதலின் அதனைப் "பரநாதாந்தம்" எனவும், அங்கேயது திகழ்வது விளங்க, "சோதிக் கொடி பரநாதாந்தத்திலே இலங்கியது" என இசைக்கின்றார். பரநாதாந்தத்தின் மேலது சுத்த சிவமாதலின் அதனை ஞான ஒளி மலராகத் தரிசிக்கின்றமை புலப்பட, "அதன் மேல் தன்வணம் மணக்கும் ஒளி மலராகத் தழுவினன் திருவடி நிலையே" என்று மொழிகின்றார்.

இதனால், நிர்க்குண சிவம் சகுணந்தத்திலும், சகுணந்தத்தின் முடியில் ஞான ஒளித் தூண் மயமாய் வைந்துவ தத்துவத்தின் மேல் தோன்றுவதும், அத்தூணின் உச்சியில் அருட் சோதிக் கொடி பரநாதாந்த வெளியில் பறப்பதும், அதன் மேல் பரசிவம் ஞானவொளி மலராகக் காட்சி தருவதும் உரைத்தவாறும். (5)

3929. மண்முதல் பகர்பொன் வண்ணத்த வுளவான்
மற்றவற் றுட்புறங் கீழ்மேல்
அண்ணுறு நனந்தர் பக்கம்என் றிவற்றின்
அமைந்தன சத்திகள் அவற்றின்

கண்ணுறு சத்தா எனும்இரு புடைக்கும்
கருதுரு முதலிய விளங்க
நண்ணுறும் உபயம் எனமன்றில் என்று
நவின்றனர் திருவடி நிலையே.

உரை : பொன்னிறமுடைய மண் முதலாக வுள்ள பூதங்கள் ஐந்து உள்ளன; அவற்றின் உள்ளும் புறமும் கீழும் மேலும் நெருங்கி, யுறும் நடுவும் பக்கமும் என்ற இவற்றில் பொருந்திய சத்திகளும் அவற்றை யுடைய சத்தர்களும் என வுரைக்கும் இருபாலுக்கும் கருதப்படுகின்ற உருவம் குணம் முதலியவை விளங்கப் பொருந்துவன அம்பலத்தில் விளங்கும் இரண்டாகு மென்று திருவடி நிலையைப் பெரியோர் உரைத் துள்ளனர். எ.று.

மண் முதலிய பூதங்களுக்கும் முறையே பொன்மை, வெண்மை, செம்மை, கருமை, தூமம் என்ற நிற வகைகளை முறையாக உரைப்ப தால், "மண் முதல் பகர் பொன் வண்ணத்த வுளவான்" என்று கூறுகின்றார். "பொன் பார் புனல் வெண்மை பொங்கும் அனல் சிவப்பு வன்கால் கருமை வளர்வான் தூமம் என்பார்". (உண். விளக்.) என்று திருவதிகை மனவாசகங் கடந்தார் முதலிய பெரியோர்கள் உரைப்பது காண்க. சிவஞான சித்தியாரும் இம்முறையே எடுத்துரைக்கின்றது. இப்பூதங்களின் உள்ளும் புறமும் நடுவும் பக்கமுமாகிய எங்கணும் பல வேறு சத்திகளும் அவற்றை யுடைய சத்திமான்களும் மிகுந்து இப்பூதங்கட்கு உரு, குணம், செயல் முதலியவற்றை யுறுவித்து விளங்கச் செய்தலின், "மற்றவற்று உட்புறம் கீழ் மேல் அண்ணுறு நனந்தர் பக்கம் என்று இவற்றின் அமைந்தன சத்திகள் அவற்றின் கண்ணுறு சத்தர் எனும் இருபுடைக்கும் கருதுரு முதலிய விளங்க" என்று உரைக்கின்றார். அண்ணுறு நனந்தர் - அணுகி யிருக்கும் நடுவிடம். சத்திகள் ஒன்வொன்றின்பாலும் அச்சத்தியையுடைய சத்தர்கள் இருத்தலால் அவர்களை, "கண்ணுறு சத்தர்" என்று குறிக்கின் றார். சத்தர்களைச் சத்திமான் என்பதும் மரபு. சத்தி சத்தர் என்ற இருவர்பாலும் உருவும் குணமும் செயலும் அமைதல் வேண்டி இறைவனுடைய திருவடிகள் பொருந்துவது பற்றி, "இரு புடைக்கும் கரு துரு முதலிய விளங்க நண்ணுறும் உபயம்" என்று மொழிகின்றார். உபயம் - இரண்டு. இறைவனுயைய இரண்டாகிய திருவடிகள் சத்தி சத்தர்களை இயக்குவது விளங்க, "மன்றில் நண்ணுறும் உபயம் என்று நவின்றனர்" என்று நவில்கின்றார்.

இதனால், அம்பலத்தில் விளங்கும் இறைவன் திருவடி இரண்டும் பூதங்களின் நிறம், வடிவம், குணம், செயல் முதலியவற்றை இயக்கும் சத்தி சத்தர்களின் பக்கல் தோய்ந்து விளங்குதல் தெரிவித்தவாறும். (6)

3930. தொகையுள விவைஎன் றறிவரும் பகுதித்
தொல்லையின் எல்லையும் அவற்றின்
வகையொடு விரியும் உளப்பட ஆங்கே
மன்னிஎங் கணும்இரு பாற்குத்

தகையுறு முதலா வணங்கடை யாகத்
தயங்கமற் றதுவது கருவிச்
சிகையுற உபயம் எனமன்றில் ஆடும்
என்பரால் திருவடி நிலையே.

உரை : அளவு இத்துணை எனத் தொடுத்து அறியப்படும் பொருட் பகுதிகளின், பழமையான எல்லையும் அவற்றின் வகையும் விரியும் எனப் புலப்படும் யாவும் உளப்பட ஆங்காங்கு நிலைபெற நின்று எப்பாலும் சத்தியும் சத்தருமாகிய இருபாலுக்கும் அழகு பொருந்திய சத்தியை அடுத்த சத்தனுக விளங்குமாறு அதனதன் கருவியாய்ச் சிறப்புறத் திருவடி இரண்டாய் அம்பலத்தின்கண் இறைவன் திருவடி நிலை ஆடல் பொருந்தி யுள்ளது எனப் பெரியோர் கூறுவர். எ.று.

தொகை யளவு எனப் பொதுப்படக் கூறுகின்றமையின், பொருட் களின் தொகையும் அளவும் கூறப்படும் இயல்பு பற்றி அவற்றை, "தொகை யளவு இவை என்று அறிவரும் பகுதி" என்று சொல்லுகின்ருர். படைப்புக் காலத்தே அவற்றின் அளவும் எல்லையும் வரையறுக்கப் பட்டனவாயினும் சுட்டறிவுக்கு எட்டாமை பற்றி, "அறிவரும் பகுதித் தொல்லையின் எல்லை" என மொழிகின்ருர். அறிவரிய எல்லைத் தாயினும் வகுத்தும் விரித்தும் கண்டறியப்படும் பான்மை யுடைமை பற்றி, "அவற்றின் வகையொடு விரியும் உளப்பட ஆங்கே மன்னி" எனவும், பொருட் டோறும் சத்தியும் சத்தரும் கலந்து இலங்குதலின், "எங்கணும் தகையுறு முதலா வணங்கடையாகத் தயங்க" எனவும் இசைக்கின்ருர். இருபால் என்றது சத்தியும் சத்தருமாகிய இரண்டை. சத்தி முதலாகச் சத்தர் அதனுள் அடங்க அமைந்தமை தோன்ற, "அணங்கு அடையாகத் தயங்க" என்று கூறுகின்ருர். சத்திக்கும் சத்தருக்கும் அருட் சத்தி கருவியாக நின்று இயக்கி உயர்த்துவதால், "அதுவது கருவிச் சிகையுற" எனவும், இரண்டினையும் தனித்தனி நின்று இயங்க இயக்குவது பற்றி அம்பலத்தில் ஆடும் இறைவன் திருவடி இரண்டும், "அதுவதுவாய்க் கருவியாய்ச் சிகையுற உபயம் என மன்றிலாடும்" என்று உரைக்கின்ருர். சிகை - உயர்வு. தகை - தகவு.

இதனல், பொருள் தோறும் வகையும் விரியுமாய் விரிந்து அவ்விரண்டிலும் சத்தியும் சத்தருமாய் நின்று, ஒவ்வொன்றும் மேம்படுமாறு இரண்டாம் என நின்று அம்பலத்தில் இறைவன் திருவடி ஆடுகின்றது என அறிவுறுத்தவாரும். (7)

3931. மன்றலங் கியமா மாயையின் பேத
வகைதொகை விரிஎன மலிந்த
ஒன்றின்ஒன் றனந்த கோடிகோ டிகளா
உற்றன மற்றவை எல்லாம்
நின்றஅந் நிலையின் உருச்சுவை விளங்க
நின்றசத் திகளொடு சத்தர்
சென்றதி கரிப்ப நடித்திடும் பொதுவில்
என்பரால் திருவடி நிலையே.

**உரை :** தெளிவாக உயர்ந்த மாமாயையின் பேதங்களின் தொகை வகை விரி என நிறைந்துள்ள வேறுபாடுகள் ஒன்றுக் கொன்று எல்லையில்லாத கோடி கோடிகளாகப் பொருந்தி யுள்ளன; அவை யாவும் நின்ற நிலையில் உருவும், சுவையும் கொண்டு விளங்குமாறு அவற்றின் ஊடே கலந்து நின்ற சத்திகளும் சத்தர்களும் ஒவ்வொன்றினுள்ளும் செயல்படுத்தும்படி இறைவனுடைய இரண்டாகிய திருவடிகள் அம்பலத்தில் ஆடல் புரிகின்றன என்று பெரியோர் கூறுகின்றனர். எ.று.

எண்ணிறந்த ஆன்மாக்களுக்கு வேண்டப் படுகின்ற உடல் கருவி கரணம் போகம் எனத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் காண நிற்கும் மாமாயையின் வேறு வேறான வகைகள் எண்ணிறந்தவாதலின் அவற்றை, "ஓங்கிய மாமாயையின் பேத வகை தொகை விரி என மலிந்த ஒன்றினென்று அனந்த கோடி கோடிகளா உற்றன" என்று உரைக்கின்றார். மாமாயையின் இயல்பை, "தேகமுறு கரணமொடு புவன போகச் செயலாரும் மாமாயைத் திரட்சி" (சிவப். 32) என்று உமாபதி சிவனார் கூறுவது காண்க. மாமாயையின் கூறாய் அனந்த கோடி கோடிகளாய் விரிந்திருக்கும் ஒவ்வொன்றிலும் சிவத்தின் திருவருள் கலந்து ஆங்காங்கு இருந்து செயல்படும் சத்திகளும் சத்தர்களும் இனிது பணி புரியக் கலந்து நின்று ஒளியாய் விளங்குதல் வேண்டி, "நின்ற அந்நிலையின் உருச்சுவை விளங்க நின்ற சத்திகளொடு சத்தர் சென்றதிகரிப்பப் பொதுவில் நடித்திடும்" எனப் புகல்கின்றார். இக்கருத்தை, "மாயை மாமாயை மாயா வரும் இருவினையின் வாய்மை ஆய ஆருயிரின் மேவும் அருளெனில் ஒளியாய் நிற்கும்" (சிவப். 70) எனப் பெரியோர் உரைப்பது காண்க.

இதனால், மாமாயையின் திரட்சி உயிர்கட்கு உடல், கருவி, கரணம், மோகம் என விரிந்து பயன்படும் திறன் இறைவன் திருக்கூத்தால் நிகழுமாறு விளக்கியவாறும். (8)

**3932.** **பேசும்ஓங் காரம் ஈறதாப் பேசாப்**
**பெரியஓங் காரமே முதலா**
**ஏசறும் அங்கம் உபாங்கம்வே றங்கம்**
**என்றவற் றவண்அவண் இசைந்த**
**மாசறு சத்தி சத்தர்ஆண் டமைத்து**
**மன்அதி காரம்ஐந் தியற்றத்**
**தேசுசெய் தணிபொன் அம்பலத் தாடும்**
**என்பரால் திருவடி நிலையே.**

**உரை :** ஓதப்படாது உண்ணப் படுவதாய் உளதாகிய பெரிய ஓங்காரம் முதல் ஓதப்படுகின்ற ஓங்காரம் ஈறுகக் குற்றமற்ற பிரணவத்திற்கு அங்கமும் உபாங்கமும் வேறாகிய அங்கம் என்ற அங்கப் பகுதிகளில் ஆங்காங்கமைந்த மாசற்ற சத்திகளையும் சத்தர்களையும் அவ்வவ்விடத்து அமைவித்துப் படைத்தல் முதலிய அதிகாரம் ஐந்தினையும் இயற்றுமாறு அருளொளி தந்து, சிவ பரம்பொருளின் திருவடிகள் அழகிய

பொன்னம்பலத்தின்கண் ஆடல் புரிகின்றன என்று பெரியோர்கள் மொழிகின்றனர். எ.று.

மானதமாகவும் மந்தமாகவும் உரைக்கப்படுவதாகவும் உள்ள பிரணவ மந்திரம் மூன்றனுள் முதலது மானதப் பிரணவமாதலின் அதனை, "பேசாப் பெரிய ஓங்காரம்" என்றும், ஈற்றிலுள்ள உரைப் பிரணவத்தை, "பேசும் ஓங்காரம்" என்றும் உரைக்கின்றார். இப்பிரணவம் அகரம், உகரம், மகரம் என மூன்றெழுத்துக்களை அங்கமாகவும், உபாங்கமாகவும், வேறங்கமாகவும் கொண்டதெனக் குறிக்கப்படும். வேறங்கம் என்பது சாங்கம் எனவும் வழங்கும். இதனைப் பொதுவாக ஓங்காரம் என்பர். அகரம், உகரம், மகரம் ஆகிய மூன்றனை யும் அங்கம் எனவும், அகரம் உகரம் என்ற இரண்டினையும் உபாங்கம் எனவும் உரைப்பர். மானதப் பிரணவத்தோடு உரைப் பிரணவத்தையும் உள்ளத்தில் அமைத்துத் தியானிப்பவர் ஆமை போல் புலனைந்தையும் அடக்கும் யோகிகளாவர். மந்தப் பிரணவம் உள்ளொளி பெறுதற்கு உறுதுணை புரிவது என்று பொது நிலையில் வைத்து, "ஊமை எழுத்தோடு பேசும் எழுத்துறில் ஆமை யகத்தினில் அஞ்சும் அடங்கிடும் ஓமய முற்றது உள்ளொளி பெற்றது நாமய மற்றது நாமறியோமே" (2158) என்று திருமந்திரத்தில் திருமூலர் உரைப்பது காண்க. பிரணவத்தின் அங்கமான அகரம் உகரம் மகரம் என்ற மூன்றும் முறையே ஆன்மாக்களையும் பரம்பொருளையும், இவ்விரண்டினின்றும் ஆன்மாவை வேறு படுத்தும் மலத்தையும் குறிக்கும் என்று திருமந்திரம் (975) கூறுகின்றது. ஆன்மா, மலம் என்ற இந்த இரண்டின் இடமாகச் சத்திகளையும் சத்தர்களையும் நிறுத்திப் படைத்தல், காத்தல், அழித்தல், அளித்தல், மறைத்தல் என்ற ஐந்து தொழில்களையும் நடைபெறுமாறு செய்தற்கு இறைவன் திருவடி நிலை அருளொளி வழங்குகின்றது என்பாராய், "அவண் அவண் இசைந்த மாசறு சத்தி சத்தர் ஆண்டமைத்து மன்னதிகாரம் ஐந்தியற்றத் தேசு செய்து அம்பலத்தாடும்" என்று கூறுகின்றார். தேசு - அருளொளி.

இதனால், படைத்தல் முதலிய ஐந்து தொழில்களையும் செய்தற்குரிய அதிகாரத்தைச் சத்தி சத்தர்களுக்குத் திருவருள் தந்துளது என்பது தெரிவித்தவாறும். (9)

**3933.** **பரைதரு சுத்த நிலைமுதல் அதீதப்**
**பதிவரை நிறுவிஆங் கதன்மேல்**
**உரைதர ஒண்ணு வெறுவெளி வெட்ட**
**வெறுவெளி எனஉல குணர்ந்த**
**புரைஅறும் இன்ப அனுபவம் தரற்கோர்**
**திருவுருக் கொண்டுபொற் பொதுவில்**
**திரைஅறும் இன்ப நடம்புரி கின்ற**
**என்பரால் திருவடி நிலையே.**

**உரை :** அருட் சத்தியாகிய பராசத்தி வகுத்தருளும் சுத்த தத்துவ நிலை முதல் அதற்கு மேலுள்ள தத்துவாதீதப் பரவெளி நிலைகளை

ஏற்படுத்தி அதன் மேல் உரைத்தற்கியலாத வெறுவெளியும், வெட்ட வெறுவெளியும் எனத் தத்துவ ஞானிகள் உணர்ந்துரைக்கின்ற வெளி நிலைகளில் ஆன்மாக்கள் புகுந்து குற்றமற்ற இன்ப அனுபவம் பெறுதற்கு ஏற்பத் திருவருள் உருக் கொண்டு அழகிய அம்பலத்தின்கண் மறைக்கப் படாத இன்பத் திருக்கூத்தினை இறைவன் திருவடிகள் ஆடுகின்றன. எ.று.

அசுத்தம், சுத்தாசுத்தம், சுத்தம் ஆகிய மூன்று நிலைகளையும் இறைவனது அருட் சத்தி மாயையைக் கலக்கித் தோற்றுவித்தலின் அதனை, "பரை தரு சுத்த நிலை" எனவும், அதற்கு மேல் மாயா மண்டலத்திற்கு அப்பாலுள்ள அதீத நிலையை, "அதீதப் பதி" எனவும், அப்பதிக்கு அப்பால் இத்தன்மைய என வுணர்ந்து உரைக்கப்படாத தாய் உள்ள அப்பால் நிலையை, "உரை தர வொண்ணு வெறுவெளி" என்றும், அதற்கப்பாலுள்ள நிலையை, "வெட்ட வெறுவெளி" என்றும் வடலூர் வள்ளல் குறிக்கின்றுர். இச்சுத்த நிலை முதலாகிய நிலைகளை யும் அவற்றிற்கு அதீதமாய் உள்ள நிலைகளையும் உணர்பவர் தத்துவ ஞானிகளாதலால் அவர்களை, "உலகு" என்னும் சொல்லால் உரைக்கின்றுர். சுத்த நிலை முதலிய அதீத நிலைகளை யுணர்ந்த ஞானிகள் தமது ஞானப் பயனுகப் பெறற்குரிய குற்றமற்ற இன்பானுபவத்தை அவர்கட்குத் தரும் பொருட்டுப் பொற் சபையில் கூத்தப் பெருமான் திருவுருக் கொண்டு பொன்னம்பலத்தில் திருவடிகள் இன்ப நடம் புரிகின்றன என்பாராய், "உலகுணர்ந்த புரையறும் இன்ப அனுபவம் தரற்கு ஓர் திருவுருக் கொண்டு பொற் பொதுவில் திரையறும் இன்ப நடம் புரிகின்ற என்பரால் திருவடி நிலையே" என்று இயம்புகின்றுர்.

இதனுல், தத்துவ ஞானிகட்கு இன்பம் தரும் பொருட்டுப் பரம்பொருள் கூத்தப் பெருமான் திருவுருக் கொண்டு பொன்னம்பலத்தில் ஆடுகின்றுர் என்பது தெரிவித்தவாறும். (10)

திருச்சிற்றம்பலம்

## 44. காட்சிக் களிப்பு

அஃதாவது, சிவபெருமானுடைய பலவேறு இயல்புகளையும் எடுத்தோதி அப்பெருமானுடைய திருவருள் உருவினைக் கண்டு தரிசித்துப் பெற்ற இன்பத்தை எடுத்துரைப்பதாம்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**3934.** **அறிந்தானை அறிவறிவுக் கறிவா னானை**
**அருட்பெருஞ்சோ தியினானை அடியேன் அன்பில்**
**செறிந்தானை எல்லாஞ்செய் வல்ல சித்தாய்ச்**
**சிறந்தானைச் சிறுநெறியில் சென்றார் தம்மைப்**
**பிறிந்தானை என்னுளத்தில் கலந்து கொண்ட**
**பிரியமுள பெருமானைப் பிறவி தன்னை**
**எறிந்தானை எனைஎறியா தெடுத்தாண் டானை**
**எம்மானைத் கண்டுகளித் திருக்கின் றேனே.**

உரை : எல்லாம் அறிந்த பெருமானும், அறிவுடைய உயிர்களில் அறிவுக் கறிவானவனும், திருவருள் ஞானமாகிய பெரிய ஒளியையுடையவனும், அடியவனுன என்னுடைய அன்பின்கண் தோய்ந்து இருப்பவனும், எதனையும் இனிது எளிதிற் செய்ய வல்ல சித்துத்தன்மையில் மிக்கவனும், சிறுமை பயக்கும் கீழ்மை நெறியில் செல்கின்றவர்களைச் சேராமல் பிரிந்திருப்பவனும், என்னுடைய மனத்தின்கண் ஒன்றாய்க் கலந்து கொண்ட அன்புடைய பெருமானும், எனக்கு இனிப் பிறவி வாரா வண்ணம் அதனைப் போக்கியவனும், என்னை விலக்காமல் நன்னெறியில் நிறுத்தி ஆண்டு கொண்டவனுமாகிய எங்கள் பெருமானைக் கண்ணாற் கண்டு மகிழ்ந்திருக்கிறேன். எ.று.

முற்றும் எல்லாவற்றையும் அறிந்து கொள்ளும் முற்றறிவினன் என நூலோர் கூறுதலால் சிவனை, "அறிந்தான்" எனவும், அறிவதும், அறியப்படுவதும் என வேறாய் நின்று அறிவதின்றி அறியும் அறிவுக்கு அறிவாய் விளங்குவது பற்றி, "அறிவறிவுக் கறிவான்" எனவும் இயம்புகின்றார். அருளின் பேரொளியே தனக்கு உருவாகக் கொண்டவனுதலால் சிவனை, "அருட் பெருஞ் சோதியினன்" என அறிவிக்கின்றார். அவனது திருவடியையே சிந்திக்கும் தம்முடைய அன்பின்கண் செறிந்து கலந்திருத்தல் தோன்ற, "அடியேன் அன்பில் செறிந்தான்" என்றும், எல்லாவற்றையும் எளிதில் இனிது செய்ய வல்ல அறிவுப் பொருளாய் விளங்குவது பற்றி, "எல்லாஞ் செய் வல்ல சித்தாய்ச் சிறந்தான்"

என்றும் தெரிவிக்கின்றார். வரம்பிலாற்ற லுடையவன் என்பது பற்றி வடலூர் வள்ளல் இவ்வாறு கூறுகின்றார். தாழ்ந்தவரையும் கீழ்மையில் வீழ்ந்தவரையும் அருள் கூர்ந்து உயர்த்தும் இயல்பினனாயினும், தனது திருவருள் நெறியின்கண் நில்லாது நீங்கினவர்களைத் தானும் நீங்குபவன் என்றற்கு, "சிறு நெறியில் சென்றார் தம்மைப் பிறிந்தான்" என்று கூறுகின்றார். சிறு நெறியில் சென்றவர்களைச் சேர்ந்த வழித் தமது திருவருட் செம்மை நிலை மாசுறுவது பற்றி, "சிறு நெறியில் சென்றார் தம்மைப் பிறிந்தானை" என்று விளம்புகின்றார். இக்கருத்தே புலப்படத் திருநாவுக்கரசரும், "மறந்தார் மனத்து என்றும் மருவார் போலும் மறைக் காட்டுறையும் மழுவாட் செல்வர்" (கோயில்) என்று கூறுவது காண்க. தம்முடைய உள்ளத்தில் இறைவன் கலந்து கொண்டதற்குக் காரணம் தம் மேல் இறைவன் கொண்ட அன்பு என்பாராய், "என்னுளத்தில் கலந்து கொண்ட பிரியமுள்ள பெருமான்" என்று குறிக்கின்றார். தம்பால் அன்பு கொண்ட நன்மக்களின் பிறவி வேர் அறுத்த பிஞ்ஞகன் எனப்படுவது பற்றி, "பிறவி தன்னை எறிந்தான்" என்றும், தம்மை வந்தடைந்து அருள் கொடுத்து ஆண்ட திறம் விளங்க, "என்னை எறியாது எடுத்தாண்டான்" என்றும் இயம்புகின்றார். என்பாலுள்ள குற்றங்களைக் கண்டு வெறுத் தொதுக்காமல் அன்புடன் ஆண்டு கொண்டான் என்பது விளங்க, "என்னை எறியாது எடுத்தாண்டான்" எனப் புகழ்கின்றார்.

இதனால், எல்லாம் அறிபவன் அறியும் உயிர்கட்கு அறிவாய் இருந்து அறிவன அறிவிக்கின்றான் என்றும், அருட் பெருஞ் சோதியன் என்றும் சிவனைப் புகழ்ந்தவாறும். (1)

**3935.** **பாலானைத் தேனானைப் பழத்தி னானைப்**
**பலனுறுசெங் கரும்பானைப் பாய்ந்து வேகாக்**
**காலானைக் கலைசாகாத் தலையி னானைக்**
**கால்என்றும் தலையென்றும் கருதற் கெய்தா**
**மேலானை மேல்நிலைமேல் அமுதா னானை**
**மேன்மேலும் எனதுளத்தே விளங்கல் அன்றி**
**ஏலானை என்பாடல் ஏற்றுக் கொண்ட**
**எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.**

உரை : பாலும் தேனும் பழமும் சுவை மிக்க செங்கரும்பின் சாறும் போல்பவனும், ஊடுருவிச் சென்று வேறுதல் இல்லாத பிராணக் காற்றையும், கலை வித்தை முதலிய தத்துவங்களால் அழியாத நிலையையுடையவனும், அடி என்றும் முடி என்றும் எண்ணி அறிதற்கியலாத மேல் நிலையையுடையவனும், அம்மேல் நிலையில் அமுதமாய் ஊறி இன்பம் செய்பவனும், மேலும் மேலும் என் உள்ளக் காட்சியில் விளங்குவதன்றிக் கருவி கரணங்களால் எட்டப் படாதவனும், என்னுடைய பாட்டுக்களை ஏற்றருளுகின்ற தலைவனுமாகிய சிவபெருமானைக் கண்களாற் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

சிவ சிந்தனைக்கண் சித்தத்தில் சுரந்து மகிழ்விக்கும் திருவருள் ஞான வின்பத்தை நுகர்ந்து இன்புறுவராதலால் வடலூர் வள்ளல்

சிவபெருமானை, "பாலானைத் தேனானைப் பழத்தினானைப் பலனுறு செங்கரும்பானை" என்று பராவுகின்றார். தீயாகிய பூதம் போலின்றி உடலுள் இயங்கி வெப்பத்தைச் செய்யாத பிராண வாயுவை, "பாய்ந்து வேகாக் கால்" என்றும், ஆன்மாவின் அறிவு இச்சை செயல் முதலிய வற்றை இயக்கும் கலை வித்தை அராகம் முதலியன உயிர் உடம்பிலிருந்து நீங்குமிடத்துக் கெடுவனவாயினும், திருவருள் நெறியில் ஓங்கினவர்க்கு அவை கெடாது நின்று ஞான வாழ்வு பெறுதற்குத் துணை செய்தலின் அதன்கண் சிவம் விளங்குதல் பற்றி, "கலை சாகாத் தலையினான்" என்றும் கூறுகின்றார். சிவபோக நிலை அடி முடி யறிதற் கில்லாத மாயா மண்டலத்திற்கும் அப்பாலதாதலால், "கால் என்றும் தலை என்றும் கருதற்கு எய்தா மேலான்" என்றும், மாயா தீதப் பரநிலையில் சிவயோகத்தால் கூடினவருக்கு அமுதமாய் இன்புறுத்தல் பற்றி, "மேல் நிலை மேல் அமுதானை" என்றும் இசைக்கின்றார். உள்ளத்தின்கண் ஞான நாட்டம் கொண்டு நோக்கும் யோகிகட்கு மேன் மேலும் ஒளி மிக்கு விளங்குவதன்றிக் காண்பாருடைய வாக்கு மனங்கட்கு எட்டாமை பற்றி, "மேன் மேலும் எனதுளத்தே விளங்கலன்றி ஏலானை" என்று இயம்புகின்றார். பாடப் பாட இடையறவு படாது மேன் மேலும் தமது உள்ளம் பாடலில் எழுவது பற்றி, "என் பாடல் ஏற்றுக் கொண்ட எம்மான்" எனப் புகழ்கின்றார். தமக்குள் தோன்றி நின்று இன்பக் காட்சி தந்த வண்ணமிருத்தலின், "கண்டு களித்திருக்கின்றேன்" என உவந்துரைக்கின்றார்.

இதனால், வேகாக் காலும் சாகாத் தலையுமாய் வாக்கு மனங்கட்கு எட்டாத மேல் நிலையிலிருந்து இறைவன் காட்சி இன்பம் தருவது நினைந்தோதியவாறும். (2)

3936. **உள்ளானைக் கதவுதிறந் துள்ளே காண**
**உளவெனக்கே உரைத்தானை உணரார் பாட்டைக்**
**கொள்ளானை என்பாட்டைக் குறிக்கொண் டானைக்**
**கொல்லாமை விரதமெனக் கொண்டார் தம்மைத்**
**தள்ளானைக் கொலைபுலையைத் தள்ளா தாரைத்**
**தழுவானை யான்புரிந்த தவறு நோக்கி**
**எள்ளானை இடர்தவிர்த் திங்கென்னை ஆண்ட**
**எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.**

உரை : என் உள்ளத்தில் இருப்பவனும், உலகியல் மாயையாகிய கதவைத் திறந்து உள்ளத்தினுள்ளே எழுந்தருளும் தன்னைக் காண்பதற் குரிய உபாயத்தை எனக்கு உரைத்தவனும், தனது பரமாம் தன்மையை யுணராதவர் பாடும் பாட்டுக்களை ஏற்றுக் கொள்ளாதவனும், எளியனாகிய யான் பாடும் பாட்டுக்களைச் சிறப்பாகக் கொண்டருளுபவனும், கொல்லாமையைத் தமது சமயத்தின் சிறந்த கொள்கை யெனக் கொண்ட சமண சமயத்தவரை விலக்காதவனும், கொலை புலை முதலிய குற்றச் செயல்களை நீக்காது செய்பவர்களைத் தன் சூழலில் சேர்த்துக் கொள்ளாதவனும், யான் செய்த பிழைகளைப் பார்த்து என்னை இகழ்ந்து விலக்காதவனும், என்னுடைய துன்பங்களைப் போக்கி என்னை ஆண்டு

கொண்ட சிவபெருமானாகிய தலைவனை அவன் திருவருளே கண்ணாகக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

உள்ளத்தின்கண் எழுந்தருளுவது பற்றிச் சிவனை, "உள்ளான்" எனவுரைக்கின்றார். உள்ளத்தின்கண் எழுந்தருளுகின்றானாயினும் அவனைக் காணவொண்ணாதபடி உலகியல் மாயை கதவிட்டு மூடியது போல் இடை நின்று தடுத்தலின், அதனைப் போக்கி ஞானவொளி காட்டிக் கண்டறிந்து இன்புறுதற்கு உபாயமான திருவருள் ஞானத்தை உபதேசித்தருளியது விளங்க, "கதவு திறந்துள்ளே காண உளவு எனக்கே உரைத்தானை" என்றும், சிவமே பரம்பொருள் என்னும் மெய்ம்மையை யுணராதவர் பாடும் பாட்டுக்களைப் பயனில்லாதவை யென ஏற்றுக் கொள்ளாமை தோன்ற, "உணரார் பாட்டைக் கொள்ளான்" என்றும், பாடுந் தோறும் பாடுந்தோறும் மேன் மேலும் பாடுமாறு இன்பம் தந்து தனக்குள் இருந்து ஊக்குதல் புலப்பட, "என் பாட்டைக் குறிக்கொண்டானை" என்றும் கூறுகின்றார். கொல்லாமையை நல்ல கொள்கையாகக் கொண்டவர் பல சமயத்தவர் உளராயினும் சமண் சமயத்தவர் அதனைச் சிறப்பாக மேற் கொள்வது பற்றி அவர்களை, "கொல்லா விரதத்தவர்" என்று கூறுவதுமுண்டு. அவர்கள் சிவனைப் பரம்பொருள் எனக் கொள்ளா தொழியினும் அவர்களை விலக்குவதில்லை என்றற்கு, "கொல்லாமை விரதம் எனக் கொண்டார் தம்மைத் தள்ளானை" எனவும், கொலை புரிதல், புலால் உண்டல் முதலிய தீச்செயல்களை மேற் கொண்டு ஒழுகுபவர்களை வேறு எத்துணை நற்பண்புடையராயினும் அவர்களை ஏற்பதிலன் என்பாராய், "கொலை புலையைத் தள்ளாதாரைத் தழுவானை" எனவும், குற்றம் புரிபவர்களைக் காண்பவர் இகழ்வது இயல்பாகவும் தாம் குற்றம் செயினும் அதனைப் பொறுத்தருளித் தம்மை ஆட்கொள்வது விளங்க, "யான் புரிந்த தவறு நோக்கி எள்ளானை" எனவும், எனக்கு வாழ்வில் உண்டாகும் துன்பங்களைப் போக்கி எனது நல்லறிவு கெடாதபடி ஆண்டருளுகின்றான் என எடுத்தோதுவாராய், "இடர் தவிர்த்து இங்கு என்னை ஆண்ட எம்மானைக் கண்டு களித்திருக்கின்றேன்" எனவும் சொல்லித் துதிக்கின்றார்.

இதனால், கொல்லாமையை விரத மெனக் கொண்டவர்கள் சமணரை உள்ளிட்ட யாவராயினும் இறைவன் ஆண்டருளும் திறம் குறித்தோதியவாறும். (3)

3937. உறவானை என்னுயிர்க்குள் உயிரா னானை
உறுபிழைகள் செயினும்அவை உன்னி என்னை
மறவானை அறவாழி வழங்கி னானை
வஞ்சகர்க்குத் திருக்கோயில் வழிக்க பாடந்
திறவானை என்னளவில் திறந்து காட்டிச்
சிற்சபையும் பொற்சபையும் சேர்வித் தானை
இறவானைப் பிறவானை இயற்கை யானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

உரை : எனக்கு உறவானவனும், என் உயிர்க்குள் உயிராய் இருப்பவனும், யான் மிக்க பிழைகள் பல செய்தாலும் அவற்றைப்

பொருளாக உள்ளத்திற் கொண்டு என்னை மறந்து விலக்காதவனும், அருளறமாகிய சக்கரத்தை எனக்கு வழங்கினவனும், நெஞ்சில் வஞ்ச முடைய கீழ்மக்களுக்குத் தனது திருக்கோயிலுள் புகுகின்ற வாயிலில் உள்ள ஞானக் கதவினைத் திறவாதவனும், என்னைப் பொறுத்த அளவில் எனக்கு அந்த ஞானக் கதவைத் திறந்து காட்டிச் சிற்சபையும் பொற் சபையுமாகிய இரண்டினையும் யான் அடையச் செய்தவனும், இறத்தலும் பிறத்தலும் இல்லாதவனும், என்றும் ஒரு தன்மையான இயல்பை யுடையவனுமாகிய எங்கள் சிவபெருமானை ஞானக் கண்ணால் கண்டு களித்திருக்கின்றேன். எ.று.

எனக்குத் தாயும் தந்தையும் குருவுமாய், என்பால் உறவு கொண்டவன் என்பாராய், "உறவான்" என்றும், எனக்கு உயிர்க்குயிராய் இருந்து உண்மையை உள்ளவாறு உணரச் செய் கின்றான் என்பாராய், "என் உயிர்க்குள் உயிரானான்" என்றும் உரைக் கின்றார். முக்குண வயத்தால் அறிவு மயங்கிப் பொறுத்தற் கரிய குற்றங் கள் பல யான் செய்தவிடத்தும் அவற்றைப் பொறுத்து எனக்கு அறிவருளி ஆதரிக்கின்றான் என்பது புலப்பட, "உறு பிழைகள் செயினும் அவை உன்னி என்னை மறவானை" என்றும், அருள் அறமாகிய நல்லறத்தைத் தமக்குரிய இனிய ஞானப் படையாகத் தந்துள்ளான் என்பாராய், "அறவாழி வழங்கினானை" என்றும் இயம்புகின்றார். நெஞ்சில் வஞ்ச முடையார்க்கு ஞானமாகிய வாயில் திறக்கப் படாது என்பது பற்றி, "வஞ்சகர்க்குத் திருக்கோயில் வழிக் கபாடந் திறவானை" என்று சொல்லுகின்றார். "கள்ள நெஞ்ச வஞ்சகக் கருத்தை விட்டு அருத்தி யோடு உள்ள மொன்றி உருகுவார் உளத்துள் நின்ற சோதியாம்" என்று ஞானசம்பந்தர் உரைப்பது காண்க. மெய்யன்பு செய்யும் தன் பொருட்டு ஞானமாகிய வாயிலைத் திறந்து சிற்சபைக்கும் பொற்சபைக்கும் சென்று கண்டு இன்புற உதவினான் என்பாராய், "என்னளவில் திறந்து காட்டிச் சிற்சபையும் பொற்சபையும் சேர்வித்தானை" என்று மொழிகின்றார். சிற்சபை ஞான நடமும், பொற்சபை ஊன நடமும் நிகழுமிடம் என்பர். தன்னை நினைந்தடையும் உயிர்களில் பிறப்பிறப்புக்களைப் போக்கும் முதல்வனாகிய சிவபெருமான் தான் அவற்றை யுடையனாவது இழுக்காம் என்பது பற்றி, "இறவானைப் பிறவானை" எனவும், என் ஞான்றும் ஒருதன்மைத்தாகிய செம்பொருள் எனச் சிறப்பிக்கப்படுவது பற்றி, "இயற்கையானை" எனவும் எடுத்துரைக்கின்றார்.

இதனால், ஞான வாயிலைத் திறந்து சிற்சபையும் பொற்சபையும் காட்டி மகிழ்வித்தமை புகன்றவாறும். (4)

3938. அகத்தானைப் புறத்தானை அணுவா னானை
அணுவினுக்குள் அணுவானை அதனுள் ளானை
மகத்தானை மகத்தினும்ஓர் மகத்தா னானை
மாமகத்தாய் இருந்தானை வயங்கா நின்ற
சகத்தானை அண்டமெலாம் தானா னானைத்
தனிஅருளாம் பெருங்கருணைத் தாயா னானை
இகத்தானைப் பரத்தானைப் பொதுவில் ஆடும்
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

**உரை :** பொருளின் உள்ளும் புறமுமாய் இருப்பவனும், அணுவாகியவனும், அணுவுக்குள் அணுவாகியும் அதனுள்ளும் உட்பொருளாகியும் இருப்பவனும், பலவேறு பெரும்பொருளாகத் திகழ்பவனும், அப்பெரும் பொருட்களினும் பெரும்பொருளாக இருப்பவனும், பெரிய மகத்துவமாய் இருந்தவனும், பலவாய் விளங்குகின்ற உலகங்களாகியவனும், அவ்வுலகங்கள் அடங்கிய அண்டங்களெல்லாம் தானே ஆகியவனும், ஒப்பற்ற திருவருளாகிய பெருங் கருணைக்குத் தாயாகியவனும், இவ்வுலக வாழ்வை யுடையவனும், மேலுலக வாழ்வை யுடையவனும், அம்பலத்தில் ஆடுகின்ற எங்கள் பெருமானுமாகிய சிவபெருமானைக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

உலகங்கள், உலகங்களின் உள்ளுறும் பொருட்கள் எல்லாவற்றினும் அகமும் புறமுமாய் இலங்குபவன் என விளக்குதற்கு, "அகத்தானைப் புறத்தானை" என்றும், பொருட்கள் அத்தனையும் எண்ணிறந்த அணுக்களால் ஆகியவையாதலின் அவ்வணுக்களாகவும், அணுவுக்குள் அணுவாகவும், அதன் உள்ளுறு ஆற்றலாகவும் இருக்குமாறு புலப்பட, "அணுவானை அணுவினுக்குள் அணுவானை அதன் உள்ளானை" என்றும், அணுக்களின் திரட்சியாகிய பெரிய மலைகளினும் பெரிய பொருளாய் விளங்குபவன் என்றற்கு, "மாமகத்தாய் இருந்தானை" என்றும் இயம்புகின்றார். மகத்து என்பது பெரியவற்றிற் கெல்லாம் பெரியது. மகத்து என்பதைப் பிரகிருதி என்னும் தத்துவமாகவும் உரைப்பது உண்டு. நூலோர் கண்டுரைக்கும் உலகங்கள் யாவுமாய் இருப்பது பற்றி, "வயங்கா நின்ற சகத்தானை" என்றும், உலகங்கள் அத்தனையும் தனக்குள் கொண்ட அண்டம் யாவும் அவனாதல் தோன்ற, "அண்டமெலாம் தானானானை" என்றும் இசைக்கின்றார். அண்டங்களையும் சகங்களையும் மகத்துக்களையும் அணுக்களையும் எல்லாவற்றையும் ஆக்கிப் படைக்கின்ற அருட் சத்தியாகிய தாயைத் தன்பால் உடையவனாதலால், "தனி யருளாம் பெருங் கருணைத் தாயானானை" எனவும், உயிர்கள் எய்துகின்ற இகமும் பரமுமாகிய வாழ்வுகள் யாவுமாய் இருப்பவன் என்றற்கு, "இகத்தானைப் பரத்தானை" எனவும் எடுத்துரைக்கின்றார். அருட் சத்தி பெரிய கருணை யுருவினதாகலின், "தனி யருளாம் பெருங் கருணைத் தாய்" எனப் புகழுகின்றார். சகங்கள் யாவும் பலவாய் ஒளி யுடையனவாய் இருக்குமாறு புலப்பட, "வயங்கா நின்ற சகம்" என்று சிறப்பிக்கின்றார்.

இதனால், அணு முதல் அண்டம் யாவுமாய், அண்டத்தில் வாழுகின்ற உயிர்கள் எய்துகின்ற இகபர வாழ்வுகளாய்ச் சிவம் விளங்கும் திறம் தெரிவிக்கப்பட்டவாறும். (5)

3939. **செய்யானைக் கரியானைப் பசுமை யானைத்**
**திகழ்ந்திடுபொன் மையினானை வெண்மை யானை**
**மெய்யானைப் பொய்யானை மெய்பொய் இல்லா**
**வெளியானை ஒளியானை விளம்பு வார்க்குக்**
**கையானை என்னையெடுத் தணைத்துக் கொண்ட**
**கையானை என்னை என்றும் கையா தானை**
**எய்யானை எவ்வுலகும் ஏத்த என்னை**
**ஈன்றானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.**

உரை : செம்மை நிறமும் கருமை நிறமும் பசுமை நிறமும் ஒளி செய்யும் பொன்மை நிறமும் வெண்மை நிறமும் ஆகியவனும், மெய்ம்மைத் தன்மையும் பொய்ம்மைத் தன்மையும் பொய்யும் மெய்யும் இல்லாத வெளியாகும் தன்மையும் ஒளியாம் தன்மையும் உடையவனும், புகழ்களை எடுத்தோதுபவர்க்கு வெறுக்கப் படாதவனும், எளியனாகிய என்னை எடுத்துத் தழுவிக் கொண்ட கைகளை யுடையவனும், என்றும் வெறுக்காதவனும், எவ்வாற்றாலும் தளராதவனும், எல்லா உலகத்தவரும் புகழுமாறு என்னைப் பெற்ற தந்தையுமாகிய சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ. று.

செம்மை கருமை முதலிய நிறப் பண்புகளை யுடைய ஐம்பூதங் களுமாகி விளங்கு கின்றானாதலால் சிவ பரம்பொருளை, "செய்யானைக் கரியானைப் பசுமையானைத் திகழ்ந்திடு பொன்மையினானை வெண்மை யானை" என்று உரைக்கின்றார். செம்மை முதலிய நிறப் பண்பு களனைத்தையும் தானாகக் கொண்டு நிலம் முதலிய பூதங்கள் தோறும் கலந்து இருப்பது பற்றி, அப்பூதங்கள் இச்செம்மை முதலிய நிறங்கட்கு உரிய வாயின என உரைத்தலு முண்டு. மெய்ம்மையாளர்க்கு மெய்ம்மை யும், பொய்யர்க்குப் பொய்ம்மையும் மேற் கொள்ளுதலால் சிவனை, "மெய்யானைப் பொய்யானை" என விளம்புகின்றார். மெய்யுணர்வுடை யவர்க்கும் பொய்ந்நெறியாளர்க்கும் ஒருவனே மெய்யும் பொய்யும் என இயம்ப வொண்ணாதபடி விளங்குவதால், "மெய் பொய் இல்லா வெளியானை" எனவும், சிவஞானிகட்கு அருளொளியாய்த் திகழ்வது பற்றி, "ஒளியானை" எனவும் உரைக்கின்றார். அவன் புகழை எத்தனை முறை எத்தனைக் காலம் இடையறவின்றி ஓதினாலும் வெறுப்புக் கொள்வது இல்லாதவன் என்பாராய், "விளம்புவார்க்குக் கையானை" என்று சொல்லுகின்றார். கைத்தல் - வெறுத்தல். எத்துணை எளியனா யினும் எளிமை நோக்காது இரு கையாலும் என்னை எடுத்துத் தனது அருளில் அணைத்துக் கொள்கின்றான் என்பாராய், "என்னை எடுத்தணைத்துக் கொண்ட கையானை" என்றும், எனது எளிமைத் தன்மையின் மிகுதி கண்டு என்னை வெறுத்து எடுத்துக் கொள்ள மறுக்காதவன் என்றற்கு, "என்னை என்றும் கையாதானை" என்றும் மொழிகின்றார். ஈண்டுக் கையாதான் என்றவிடத்துக் கைத்தல், எடுத்தல் என்னும் பொருளது. எய்த்தல் - தளர்தல்; இளைத்தல் என்றுமாம். என் போன்ற மலத்தில் ஆழ்ந்து கிடக்கும் இழிந்தவர்களை யும் பிறப்பித்து உய்விக்கும் முகத்தால் எல்லா உலகங்களிலும் உள்ள தேவர்களும் பிறரும் அவனைப் புகழ்கின்றமை தோன்ற, "எவ்வுலகும் ஏத்த என்னை ஈன்றானைக் கண்டு களித்திருக்கின்றேன்" எனக் கூறு கின்றார்.

இதனால், பன்னிறப் பொருளாய்ப் பூதங்கள் தோறும் கலந்து அவை யும் செம்மை முதலிய நிறப் பண்புக்கு உரியவாதலை உரைத்தவாறும். (6)

3940 மருந்தானை மணியானை வழுத்தா நின்ற
மந்திரங்க ளானானை வான நாட்டு
விருந்தானை உறவானை நண்பி னானை
மேலானைக் கீழானை மேல்கீழ் என்னப்

**பொருந்தானை என்னுயிரில் பொருந்தி னானைப்**
**பொன்னானைப் பொருளானைப் பொதுவாய் எங்கும்**
**இருந்தானை இருப்பானை இருக்கின் றானை**
**எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.**

**உரை :** மருத்துவ நூல்கள் உரைக்கின்ற மணி, மருந்து, மந்திரம் ஆகிய மூன்றும் தனித்தனியே ஆகியவனும், விண்ணுலகுக்கும் மண்ணுலகுக்கும் விருந்தானவனும், உறவானவனும், நண்பனானவனும், மேலும் கீழுமாய் மேல் கீழ் என்று சொல்லுதற்குப் பொருந்தாதவனும், என்னுடைய உயிரில் கலந்திருப்பவனும், பொன்னும் பொருளுமானவனும், எல்லா வுலகங்களிலும் எவ்விடத்தும் முன்பே இருந்தவனும், இன்றும் இருப்பவனும், நாளையும் இருப்பவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்டு களித்திருக்கின்றேன். எ.று.

மந்திரம் ஓதியும், மணிமாலை அணிந்தும், மருந்து கொடுத்தும் நோய் நீக்குவது சித்த மருத்துவச் செந்நெறியாதலின் அதனைச் சிறப்பித்து, "மருந்தானை மணியானை வழுத்தா நின்ற மந்திரங்களானானை" என்று உரைக்கின்றார். செய்யுளாகலின் இம்மூன்றும் முறை மாறி நிற்கின்றன. மணி மந்திரம் மருந்து என்பது இவற்றின் நிற்கும் முறை. மந்திரங்கள் வாயால் உரைக்கப்படுவனவாதலால், "வழுத்தா நின்ற மந்திரங்கள்" என்று விதந்துரைக்கின்றார். வானுலகும் மண்ணுலகும் சிவன் உலாவும் நாடுகள் ஆயினும் சிறப்புப் பற்றி, "வான நாட்டு விருந்தானை" என எடுத்து மொழிகின்றார். பழையரில் பழையனாயினும் தோன்றும் போதெல்லாம் புதுமை தோன்ற எழுந்தருளுவது பற்றி, "விருந்தானை" என்றும், நல்லார் பொல்லார் எல்லார்க்கும் உற்றவிடத்து வேண்டுவன உதவி அருளுவது பற்றி, "உறவானை நண்பினானை" என்றும் இசைக்கின்றார். இவ்விரு நாடுகளிலும் மேல் கீழ் என்னும் பாகுபாடு உண்மையின், மேலோர் சூழலிலும் கீழோர் கூட்டத்திலும் கலந்தருளும் தன்மை பற்றிச் சிவனை, "மேலானைக் கீழானை" எனவும், அப்பெருமானது தனிப் பெருமையை நோக்குமிடத்து மேல் கீழ் என்னும் நிலை வேறுபாட்டிற்கு அவன்பால் இடமில்லாமை தோன்ற, "மேல் கீழ் என்னப் பொருந்தானை" எனவும் இயம்புகின்றார். எல்லா உயிர்க் கண்ணும் போல என்னுடைய உயிரிலும் உயிராய்ப் பொருந்தியிருக்கின்றான் என்றற்கு, "என்னுயிரில் பொருந்தினானை" என்றும், உலகில் பொன்னும் பொருளுமாய் வாழ்வார்க்கு வாழ்வளிப்பது பற்றி, "பொன்னானைப் பொருளானை" என்றும் புகல்கின்றார். எக்காலத்தும் எவ்விடத்தும் எல்லாப் பொருட்களுக்கும் பொதுவாய் நின்று அருள் செய்வது பற்றி, "பொதுவாய் எங்கும் இருந்தானை இருப்பானை இருக்கின்றானை எம்மானைக் கண்டு களித்திருக்கின்றேனே" என்று கூறுகின்றார்.

இதனால், இறைவன் மணி மந்திர மருந்துகளாய், உறவும் நண்புமாய், மேலும் கீழுமாய், பொன்னும் பொருளுமாய், எக்காலத்தும் எங்கும் இருக்கும் திறம் எடுத்தோதியவாறும். (7)

3941. ஆன்றானை அறிவானை அழிவி லானை
அருட்பெருஞ்ஜோ தியினானை அலர்ந்த ஜோதி
மூன்றானை இரண்டானை ஒன்றா னானை
முன்னானைப் பின்னானை மூட நெஞ்சில்
தோன்றானைத் தூயருளே தோன்றி னானைச்
சுத்தசிவ சன்மார்க்கந் துலங்க என்னை
ஈன்றானை எல்லாமாய் அல்லா தானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

உரை : எவ்வுயிர்க்கும் அறிவாய் அமைந்தவனும், அறிவே தானாகியவனும், அழிவில்லாதவனும், அருட் பெருஞ் சோதியானவனும், விரிந்த ஒளியை யுடைய சூரியன், சந்திரன், நெருப்பு என்ற மூன்றுமாகியவனும், தண்ணொளி வெவ்வொளி என இரண்டாகியவனும், ஒளிப் பொருளென ஒன்றாகியவனும், முன்னாகியவனும், பின்னாகிய வனும், மூடத் தன்மை பொருந்திய நெஞ்சுடையவர்க்குத் தோன்றாத வனும், தூய ஞானிகளின் உள்ளத்தில் தோன்றுபவனும், சுத்த சிவ சன்மார்க்கம் என்னும் நன்னெறி எங்கும் விளக்கமுற என்னைப் பயந்தவனும், எல்லாமாய் அல்லதுமாய் இருப்பவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

ஆன்றல் - அமைதல். எல்லா நற்குணங்களும் குறைவறக் கொண்ட சான்றோரை ஆன்றோர் என்பது போல நலம் எல்லாம் தனக்கு உருவாகக் கொண்டமைந்தமை பற்றிச் சிவபெருமானை, "ஆன்றானை" எனச் சிறப்பிக்கின்றார். "அகர வுயிர் போல் அறிவாகி எங்கும் நிகரில் இறை நிற்கும் நிறைந்து" என்று சான்றோர் கூறுதலால், "அறிவானை" என்றும், எக்காலத்தும் எவராலும் எவ்வாற்றாலும் அழிவில்லாதவனாதலால் இறைவனை, "அழிவிலானை" என்றும், அவன் அருள் ஞானமாகிய பெருமை சான்ற ஒளியே தனக்கு உருவாகக் கொண்டமை விளங்க, "அருட் பெருஞ் சோதியினானை" என்றும் இயம்பு கின்றார். அலர்தல் - விரிதல். உலகில் ஒளி செய்யும் பொருட்கள் சூரியனும், சந்திரனும், நெருப்புமாகிய மூன்றும் அவனேயாதலால், "அலர்ந்த சோதி மூன்றானை" எனவும், அவ்வொளி தானும் தட்பமும் வெப்பமும் என்ற கூறுபாட்டால் இரண்டாதல் விளங்க, "இரண்டானை" எனவும், பரஞ்சோதி எனப்படும் வகையில் ஒன்றாதல் புலப்பட, "ஒன்றானானை" எனவும் உரைக்கின்றார். முன் பின் என இடமும் காலமும் இரு வகைப்படுதலின், "முன்னானைப் பின்னானை" என மொழி கின்றார். மூடர்கள் நெஞ்சு அறியாமை இருள் செறிந்து ஒன்றும் காண மாட்டாத நிலையில் இருத்தலால் அவர் நெஞ்சின்கண் இறைவன் தோன்றாமை விளங்க, "மூட நெஞ்சில் தோன்றானை" எனவும், உண்மை யறிவு ஒழுக்கங்களால் தூயராகிய நல்லவர் உள்ளத்தின்கண் அருளொளியாய்த் தோன்றுதல் பற்றி, "தூயருளே தோன்றினானை" எனவும் சொல்லுகின்றார். சன்மார்க்கம் என்பது சத்தான மார்க்கம் எனப் பொருள்படும். இச் சன்மார்க்கம் பல திறப்படுதலின், திருவருளே பொருளாகக் கொள்ளும் சன்மார்க்கம் "சுத்த சன்மார்க்கம்" எனப்படும். திருவருளும் சிவத்தின் திருவடிவமாதலின் தாம் மேற்கொண்டுரைக்கும் சன்மார்க்கத்தை, "சுத்த சிவ சன்மார்க்கம்" என்று விளக்குகின்றார்.

அஃது எங்கும் எவர்பாலும் பரந்து விளங்குதல் வேண்டிப் பணி புரிகின்றாராதலின், அதற்கென்றே தம்மை இறைவன் உரிமைப் படுத்தி விட்டான் என்று உரைப்பாராய், "சுத்த சிவ சன்மார்க்கம் துலங்க என்னை ஈன்றானை" என்றும், பொருட்கள் யாவையும் சத்தாயும் அசத்தாயும் இருப்பது பற்றி அவற்றுள் கலந்திருக்கும் இறைவனை, "எல்லாமாய் அல்லாதானை" என்றும் இசைக்கின்றார்.

இதனால், சுத்த சிவ சன்மார்க்கம் உலகில் துலங்குமாறு தன்னைப் பிறப்பித்தான் என வடலூர் வள்ளல் எடுத்தோதியவாறும். (8)

**3942.** **தோய்ந்தானை என்னுளத்தே என்பால் அன்பால்**
**சூழ்ந்தானை யான்தொடுத்த சொற்பூ மாலை**
**வேய்ந்தானை என்னுடைய வினைதீர்த் தானை**
**வேதாந்த முடிமுடிமேல் விளங்கி னானை**
**வாய்ந்தானை எய்ப்பிடத்தே வைப்பா னானை**
**மணிமன்றில் நடிப்பானை வரங்கள் எல்லாம்**
**ஈய்ந்தானை ஆய்ந்தவர்தம் இதயத் தானை**
**எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.**

**உரை :** என்னுடைய உள்ளத்தின்கண் கலந்திருப்பவனும் என்னிடத்திலுள்ள அன்பைக் கண்டு தானும் அன்புற்று என்னைச் சூழ்ந்திருப்பவனும், யான் பாடிய பூப் போன்ற சொல் மாலைகளை அணிந்து கொண்டவனும், என்னுடைய வினைகளைப் போக்கியவனும், வேதாந்தமாகிய நெறியின் உச்சிக்கு மேல் விளங்கினவனும், என் உணர்வுக்கு வாய்ப்பாக அமைந்தவனும், தளருமிடத்து உதவும் செல்வமானவனும், அழகிய அம்பலத்தில் நடிப்பவனும், மேலாகிய நலமனைத்தும் தருபவனும், நுண்ணுணர்வால் ஆராய்ந்தறிந்த சான்றோர்கள் இதயத்தில் இருப்பவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு களித்திருக்கின்றேன். எ.று.

உள்ளத்தின்கண் உள்ளுணர்வாய் ஒளிர்வது பற்றி, "என்னுளத்தே தோய்ந்தானை" எனவும், தன்னுடைய நினைவிலும் சொல்லிலும் செயலிலும் சூழ்ந்து நின்று காண்பது பற்றி, "என்பால் அன்பால் சூழ்ந்தானை" எனவும், தாம் பாடுகின்ற சொல் மாலைகளை மேலும் மேலும் பாடுமாறு உள்ளிருந்து செலுத்துவது பற்றி, "யான் தொடுத்த சொற் பூமாலை வேய்ந்தானை" எனவும், நன்ஞானம் எய்துதற் பொருட்டுத் தடை செய்யும் வினை யிருளைப் போக்கினமை தோன்ற, "என்னுடைய வினை தீர்த்தானை" எனவும், இயம்புகின்றார். பாடுவார் பாடுந் தோறும் மேன் மேலும் பாடுதற்கு இன்ப ஊற்றாய் நின்று ஊக்குவது புலப்பட, "யான் தொடுத்த சொற் பூமாலை வேய்ந்தானை" என்றும், "வினையால் அசத்து விளைதலால் ஞானம் வினை தீரினன்றி விளையாவாம்" என்று மெய்கண்டார் முதலிய சான்றோர் கூறுதலின், "என்னுடைய வினை தீர்த்தானை" என்றும் இயம்புகின்றார். வேதாந்தம் சித்தாந்தம் என்னும் நெறி இரண்டனுள் வேதாந்தத்தின் உச்சியில் விளங்கும் சித்தாந்தத்தின் முடி மேல் சிவ பரம்பொருளாய்த் திகழ்வது விளங்க, "வேதாந்த முடி முடி மேல் விளங்கினானை" எனக் கூறுகின்றார். வேதாந்த முடி

என்பது வேதாந்தத்தின் உச்சியில் விளங்கும் சித்தாந்தம் என அறிக. "ஒரும் வேதாந்த மென்ற உச்சியில் பழுத்த சாரம் கொண்ட சைவ சித்தாந்தம்" என்று குமரகுருபரர் கூறுவது காண்க. "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்" (சிவப்) என்று உமாபதி சிவனூர் உரைப்பதும் ஈண்டு நினைவு கூரத் தக்கது. இரு நெறிகட்கும் ஞானப் பொருளாய் உணரப்படுவது பற்றி, "வாய்ந்தானை" எனக் குறிக்கின்றூர். தளர்ச்சி யுறும் காலத்துப் பயன் கொள்ளுதற் பொருட்டுச் சேமித்து வைக்கும் பொருள் "எய்ப்பினில் வைப்பு" எனப்படும். அதுபோல் சோர்வுற்றவிடத்து அருள் வழங்குவது பற்றிச் சிவனை, "எய்ப்பிடத்தே வைப்பானை" என்று போற்றுகின்றூர். வரங்கள் - எல்லாவற்றினும் மேலாக வேண்டப்படும் பொருள்கள். வேண்டுவனவற்றை யெல்லாம் வேண்டிய போது விரைந்து நல்குவது பற்றி அம்பலத்திலாடும் சிவனை, "வரங்கள் எல்லாம் ஈன்றானை" என்றும், நூலுணர்வும் உண்மை யுணர்வும் ஒருங்கு கொண்டு மெய்ப்பொருளை உணர்பவர்களை, ஆய்ந்தவர்" என்றும், அவர் இதயத்தை இறைவன் தனக்குக் கோயிலாகக் கொள்வது தோன்ற, "ஆய்ந்தவர் தம் இதயத்தானை" என்றும் எடுத்தோதுகின்றூர்.

இதனுல், வேதாந்த முடி முடி மேல் விளங்கி எய்ப்பினில் வைப்பாய் வரம் எல்லாம் தந்து ஆய்ந்தவர் இதயத்தின்கண் இறைவன் எழுந் தருளும் திறம் இயம்பியவாறும். (9)

3943. **நன்றானை மன்றகத்தே நடிக்கின் றானை**
**நாடாமை நாடலிவை நடுவே ஓங்கி**
**நின்றானைப் பொன்றாத நிலையி னானை**
**நிலை அறிந்து நில்லாதார் நெஞ்சி லேசம்**
**ஒன்றானை எவ்வுயிர்க்கும் ஒன்றா னானை**
**ஒருசிறியேன் தனைநோக்கி உளம்நீ அஞ்சேல்**
**என்றானை என்றும்உள இயற்கை யானை**
**எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.**

உரை : நலமனைத்தும் தன்னுருவாக அமைந்தவனும், அம்பலத்தின்கண் நடிக்கின்றவனும், நாடாமையும் நாடுதலுமாகிய இவ்வறிவுச் செயல் இரண்டினுக்கும் நடுவே விளங்கி நிற்பவனும், அழியாத நிலையை யுடையவனும், நன்னிலையை அறிந்து அவ்வறிவின் வழி நில்லாதவருடைய நெஞ்சின்கண் சிறிதும் பொருந்தாதவனும், எவ்வுயிர்க்கும் பொதுவாய் ஒன்றாய் இருப்பவனும், தனியனாய்ச் சிறுமை மிக்கவனாய் உள்ள என்னைப் பார்த்து "நீ மனத்தின்கண் அஞ்சுதல் ஒழிக" என்று தேற்றி யருளினவனும், எக்காலத்தும் சிறு மாற்றமுமின்றி இயல்பாக உள்ளவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

"நன்றுடையான் தீயதில்லான்" என ஞானசம்பந்தர் முதலியோர் கூறுவது பற்றி, "நன்றானை" என நவில்கின்றூர். நாடுதல் - ஆராய்தல். பொருள் உண்மை காணும் முயற்சியில் நாடுதலும் நாடாமையும்

நிகழ்வதுண்டு. சிவ பரம்பொருள் நலம் வேண்டி நாடப்படுதலும் பெருமை நோக்கி நாடப் படாமையும் உடையதாகலின் இரண்டற்கும் நடுவாய் நின்று நாடுவார்க்கு நாட்டமும், நாடாதவர்க்கு வேருயும் உயர்ந்தோங்குவது பற்றி, "நாடாமை நாடலிவை நடுவே ஓங்கி நின்றானை" என மொழிகின்றார். உலகப் பொருட்களனைத்தும் கெட்ட விடத்தும் தான் என்றும் கெடாத நிலையினை உடையதாகலின் சிவனை, "பொன்றாத நிலையினானை" என்றும், சிவம் நின்ற செம்மை நிலை கண்டு அதற்குரிய செந்நெறியில் நில்லா தொழிகின்ற மக்களுடைய நெஞ்சின் கண் சிறிதும் பொருந்தாத தன்மையை வியந்து, "நிலை யறிந்து நில்லாதார் நெஞ்சில் இலேசம் ஒன்றானை" என்றும் உரைக்கின்றார். இலேசம் - சிறிதும். பலவாகிய எல்லா உயிர்களிடத்தும் உயிராய் நிற்கின்றானாயினும் அவன் ஒருவனே என வற்புறுத்தற்கு, "எவ்வுயிர்க்கும் ஒன்றானானை" என்று கூறுகின்றார். உலகியற் பற்றின்றித் தனித்துச் சிறுமையுற்றுச் செய்வ தறியாது அஞ்சி அலமரும் தமது உள்ளத்திற்கு அஞ்ச வேண்டா எனத் தெளிவு நல்கினமை புலப்பட, "ஒரு சிறியேன் தனை நோக்கி உளம் நீ அஞ்சேல் என்றானை" எனவும், காலந் தோறும் வேறுபடும் இயல்புடைய பொருள்கள் பலவற்றினும் வேறாய் எத்தனைக் காலம் கழியினும் தன்மை மாறாது உள்ளது உள்ளவாறு இருக்கும் இயல்பு விளங்க, "என்றும் உள இயற்கையானை" எனவும் இசைக்கின்றார்.

இதனால், நாடுதல் நாடாமை என்ற இரண்டிற்கும் நடுவே ஓங்கி என்றும் உள்ள இறைவனது இயற்கை நலம் எடுத்தோதி இன்புறுத்தியவாறாம். (10)

திருச்சிற்றம்பலம்

## 45. கண் கொளாக் காட்சி

அஃதாவது, காணும் கண்களின் எல்லைக்கு அடங்காது மிக்கு விளங்கும் காட்சி நலம் கூறுவதாகும். இப்பகுதிக்கண் வரும் பாட்டுக்கள் பத்தும் முன்னையதாகிய காட்சிக் களிப்பின்கண் வரும் பாட்டுக்களின் தொடர்ச்சியாக இருத்தலின் இதனை வேருகப் பிரித்திருப்பது சிறப்பாக இல்லை.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**3944.** **அடுத்தானை அடியேனை அஞ்சேல் என்றிங்**
**காண்டானைச் சிறுநெறிகள் அடையா தென்னைத்**
**தடுத்தானைப் பெருநெறிக்குத் தடைதீர்த் தானைத்**
**தன்னருளும் தன்பொருளும் தானே என்பால்**
**கொடுத்தானைக் குற்றம்எலாம் குணமாக் கொள்ளும்**
**குணத்தானைச் சமயமதக் குழிநின் றென்னை**
**எடுத்தானை எல்லாஞ்செய் வல்ல சித்தே**
**ஈந்தானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.**

**உரை :** அடியவனுகிய என்னை விரும்பினவனும், இவ்வுலக வாழ்வின் அச்சம் ஒழிக என்று உரைத்து என்னை ஆட்கொண்டவனும், சிறுமை விளைவிக்கும் நெறிகளை மேற்கொண்டு செல்லாதவாறு என்னைத் தடுத்து ஆதரித்தவனும், பெருமை தரும் ஞான நெறியில் செல்லுதற்கு இடை நின்ற தடைகள் பலவற்றையும் நீக்கினவனும், தனது திருவருளையும் அரிய பொருட்களையும் தானுகவே எனக் களித்தவனும், என்பால் காணப்படும் குற்றங்கள் எல்லாவற்றையும் உயிர்க் குணம் என்று பொறுத்துக் கொள்ளும் நற்குணங்களை யுடையவனும், சமயக் கொள்கைகள் என்னும் ஆழ்ந்த குழியில் விழாவண்ணம் என்னை எடுத்து அருள் புரிந்தவனும், எல்லாவற்றையும் செய்ய வல்ல அறிவாற்றலை எனக்குத் தந்தவனுமாகிய சிவபெருமானைக் கண்ணுரக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

அடியேன் திருவடியைப் பற்றுகக் கொண்டு வாழ்பவன்; இத்தகைய என்னை என்றும் பிரியாமல் எங்கே செல்லினும் அங்கே வந்து எனது மனத்தில் தங்கி நல்லுணர்வு தந்து வாழ்விப்பது பற்றி, "அடியேனை அடுத்தானை" என்று கூறுகின்றூர். "எங்கே போவேனுயினும் அங்கே வந்தென் மனத் தீராய்ச் சங்கை யொன்று மின்றியே தலைநாள் கடைநாள் எக்கவே" என்று இறைவன் தம்மை அடுத்தொழுகிய திறத்தை

நம்பியாரூரர் (ஐயா) உரைப்பது காண்க. உலகியலில் வாழ்வாங்கு வாழ்ந்தாலன்றி உய்தி இல்லையாதலால் வாழும் உயிர்கட்கு எய்தும் இடையூறுகட்கு அஞ்ச வேண்டா மென ஊக்குவது இறைவன் திருவருளாதலின் அது பற்றி, "அஞ்சேல் என்றிங்கு ஆண்டானை" என இயம்புகின்றார். உலகியல் மயக்கத்தால் சிறுமை தரும் நெறிகளில் செல்லுதற்கு வாய்ப்பு உண்டாதலின் அச்சமயத்து நல்லறிவு தந்து அவற்றை மேற் கொள்ளாவாறு தடுத்தருளும் நலம் பற்றியும், பெருமை தரும் ஞான நெறியில் செல்லுதற்கு ஊறு செய்யும் அறிவு செயல்களை நீக்கி யருளுகின்றாதலின், "பெருநெறிக்குத் தடை தீர்த்தானை" என்று உரைக்கின்றார். திருவருள் ஞானத்தையும் அதன் பயனைப் பெறுதற் குரிய உடல் பொருள்களையும் இறைவனே உவந்து கொடுத்தருளுவது பற்றி, "தன் அருளும் தன் பொருளும் தானே என்பால் கொடுத்தானை" என்று கூறுகின்றார். அருளறிவும் பொருள் வகையும் பெருநெறிக்கண் செல்வார்க்குத் துணையாதல் பற்றி இடமும் காலமும் நோக்கி இறைவன் தானே உவந்து வந்து அருளுகின்றான் என்பது கருத்து. செய்யப்படு கின்ற குற்றங்களுக்கு ஏதுவாவது உயிர்க்கு இயல்பாக வுள்ள குணமெனக் கொண்ட வழி அப்பெருமானுடைய திருவுள்ளம் குணங் கொண்டு கோதாட்டும் என்பது பற்றி, "குற்றமெலாம் குணமாக் கொள்ளும் குணத்தானை" என்று எடுத்தோதுகின்றார். பலவேறு சமயங் களும் அவற்றின் கொள்கைகளும் தம்வழி நின்றாரைப் பிணித்துப் பிற சமய நெறிகளை இகழ்ந்து வெறுத்துத் தீது புரியச் செய்தலால், அதற்கு இரையாகாமல் தம்மை நெறி நிறுத்தி அவற்றைச் சம்மதமாக் கொள்ளு மாறு இயக்குவது பற்றி, "சமய மதக் குழி நின்று என்னை எடுத்தானை" என இயம்புகின்றார். எல்லாச் சமயங்களையும் ஒப்ப நோக்கும் திறமின்றித் தம்மையே உறுதியாகக் கொண்டு மேலேற விடாமல் தடுப்பது பற்றிக் குறுகிய சமய மதக் கொள்கைகளை, "குழி" என்று இழித்துரைக்கின்றார். எல்லாச் செயல்களையும் இனிது ஆற்ற வல்ல தன்மைக்கு இன்றியமை யாது வேண்டப்படுவது திருவருள் ஞானமாதலின், "எல்லாம் செய் வல்ல சித்தே ஈந்தானைக் கண்டு களித்திருக்கின்றேன்" என மொழி கின்றார்.

இதனால், திருவடியே பற்றுகக் கொண்ட தமக்கு அச்சம் தீர்த்துப் பெருநெறி மேற்கொள்ளத் துணை புரிந்து சமய மதக் குழியிலிருந்து மேலேற்றி ஆதரித்த அருட் செயலை விதந்தோதியவாறும். (1)

**3945.** **விரித்தானைக் கருவிஎலாம் விரிய வேதம்**
**விதித்தானை மெய்ந்நெறியை மெய்யே எற்குத்**
**தெரித்தானை நடம்பொதுவில் செய்கின் றானைச்**
**சிறியேனுக் கருள்ஒளியால் சிறந்த பட்டம்**
**தரித்தானைத் தானேநா னாகி என்றும்**
**தழைத்தானை எனைத்தடுத்த தடைகள் எல்லாம்**
**எரித்தானை என்உயிருக் கின்பா னானை**
**எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.**

**உரை :** கருவி கரணங்கள் எல்லாவற்றையும் பலவேறு தத்துவங் களாக விரித்தவனும், வேத நெறியை ஏற்படுத்தினவனும், மெய்ம்மை நெறியாகிய சிவநெறியை அதன் மெய்ம்மை விளங்க எனக்குத்

தெரிவித்தவனும், அம்பலத்தில் திருநடம் செய்கின்றவனும், சிறியவனுகிய எனக்குத் தன்னுடைய அருளொளியால் உயர்ந்த தகுதியினை வழங்கினவனும், தானே நானுகி எப்பொழுதும் ஒளிர்பவனும், என் அறிவு செயல்களைத் தடுத்து நிற்கும் குற்றங்களை யெல்லாம் போக்கினவனும், என் உயிர்க்கு இன்பமாய் இருப்பவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்டு களித்திருக்கின்றேன். எ. று.

கருவி கரணங்களைத் தத்துவங்கள் முப்பத்தாருகவும், தாத்துவிகங்களைக் கூட்டித் தொண்ணூற்ருருகவும் விரித்துக் கூறுதலின், "கருவி எலாம் விரிய விரித்தானை" என்று விளம்புகின்ருர். வேத நெறியை இறைவனே வகுத்தான் என ஓதுவ துண்மையின், "வேதம் விரித்தானை" எனவும், சிவாகம நெறியாகிய சிவநெறியை மெய்ந்நெறி என்று சான்ருேர் உரைத்தலால், "மெய்ந்நெறியை மெய்யே எற்குத் தெரித்தானை" எனவும் உரைக்கின்ருர். வேத நெறியை உலகியல் நெறி என்றும், சிவநெறியை மெய்ந்நெறி என்றும் சேக்கிழார் (ஞானசம்) கூறுவர். சிவநெறியின் பொருள்களைக் குற்றமறத் தெளிவாகத் தமக்கு அறிவித்தமை புலப்பட, "மெய்யே எற்குத் தெரித்தானை" என விளங்க உரைக்கின்ருர். அம்பலத்தைப் பொது எனக் கூறுகின்ருராயினும் அன்பர் உள்ளமும் அம்பலமாக இறைவன் ஆடல் புரிகின்ருன் என்பதும் குறித்தவாருகக் கொள்க. அருள் ஞான ஒளியின்றிச் சிறுமையுற்றுக் கிடந்த தமக்கு அதனை நல்கித் தம்மை உயர்வித்தான் என உரைப்பாராய், "சிறியேனுக்கு அருளொளியால் சிறந்த பட்டம் தரித்தானை" எனத் தெரிவிக்கின்ருர். பட்டம் - தகுதி. சிவஞானம் பெற்றவர் சிவமாதல் பற்றி, "தானே நானுகி என்றும் தழைத்தான்" என்று கூறுகின்ருர். "தன்னைக் கண்ட என் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணமாகிய ஈசனுக்குப் பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி" என்று சேரமான் பெருமாள் உரைப்பதும், "மெய்ப் பரம்பொருள் சேர்வார் தாமே தானுகச் செய்யும் அவன்" (கழுமல) என்று ஞானசம்பந்தர் கூறுவதும் இங்கே நினைவு கூரத் தகுவன. சிவமே யாகிய சிவஞானச் செல்வர்கள் பண்டும் இன்றும் என்றும் பலவாதலால், "என்றும் தழைத்தானை" எனக் குறிக்கின்ருர். திருவருள் ஞானப் பேற்றுக்குத் தடையாக உயிரறிவை மறிப்பன பலவாதலால் அவை எல்லாவற்றையும் மீளத் தலை யெடாதவாறு போக்கினமை தோன்ற, "எனைத் தடுத்த தடைகள் எல்லாம் எரித்தானை" என்றும், நினைப்பவர் நினைக்கும் தோறும் இன்ப அமுதூறி மகிழ்விப்பவனுதலால், "என் உயிர்க்கு இன்பானானை" என்றும் இசைக்கின்ருர். "எண்ணித் தம்மை நினைந்திருந்தேனுக்கு அண்ணித்திட் டமுதூறும் என் நாவுக்கே" (வெண்ணி) என்று திருநாவுக்கரசர் செப்புவது காண்க.

இதனுல், தமக்கு அருளொளி தந்து தானே நானுகித் தழைத்துத் தடைகளைப் போக்கி இன்ப மயமாய்ச் சிவம் விளங்குமாறு விளக்கியவாறும். (2)

**3946. நட்டானை நட்டஎனை நயந்து கொண்டே**
**நம்மகன்நீ அஞ்சல்என நவின்றென் சென்னி**
**தொட்டானை எட்டிரண்டும் சொல்லி எனைத்**
**துன்பம்எலாம் தொலைத்தானைச் சோர்ந்து தூங்க**

**ஒட்டானை மெய்அறிவே உருவாய் என்னுள்**
**உற்றானை உணர்ந்தார்க்கும் உணர்ந்து கொள்ள**
**எட்டானை என்னளவில் எட்டி னானை**
**எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.**

**உரை :** என்பால் நட்புற்றவனும், தன்பால் நட்புக் கொண்ட என்னை விரும்பி ஏற்றுக் கொண்டு நீ நமக்கு மகனாவாய் இனி அஞ்சுதல் ஒழிக என வுரைத்து என் தலையைத் தீண்டினவனும், எட்டும் இரண்டு மாகிய எழுத்துக்களால் விளங்கும் ஓங்கார மென்னும் சொல்லைத் தனக்கு உருவாகக் கொண்டு விளங்குபவனும், துன்பங்கள் எல்லாவற்றையும் போக்கினவனும், சோர்வுற்றுச் சோம்பாதபடி ஊக்குபவனும், உண்மை யுணர்வே தனது திருவுருவாக்க் கொண்டு என்னுள் அமர்ந்தவனும், உண்மையை உள்ளவாறு உணர்ந்த பெரியோர்களும் உணர்ந்து கொள்ள மாட்டாதவனும். என் சிற்றறிவின் எல்லையில் அறிய நின்றவனு மாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்திருக் கின்றேன். எ.று.

என்பால் நட்புற்று நல்லன காட்டி வாழ்விக்கின்றமை புலப்பட, "நட்டானை" என்றும், இறைவன்பால் நட்புக் கொண்டு ஒழுகும் தமது நட்பை விரும்பி ஏற்றுக் கொண்டு அச்சம் ஒழிக என அறிவித்து ஊக்கித் தன் திருவடியால் என் தலையைத் தீண்டி அருள் பண்ணினான் என்பாராய், "நட்டானை நயந்து கொண்டே நம் மகன் நீ அஞ்சல் என நவின்று என் சென்னி தொட்டானை" என்றும் நவில்கின்றார். நட்டல் - நட்புக் கொள்ளுதல். தமது நட்பை ஏற்றுக் கொண்டு தமக்கு மகன் எனும் முறைமை தந்து அச்சம் நீக்கித் தலையைத் தீண்டி ஞானத் தொடர்பு உண்டு பண்ணினான் என்பது கருத்து. அ உ என்னும் இரண்டு எழுத்தும் பிரணவமாகிய ஓங்காரத்தின் கூறாதலின் அதனை, "எட்டிரண்டும் சொல்லினானை" என்று கூறுகின்றார். ஓங்காரத்தின் பொருளும் உருவும் அப்பெருமான் என்று பெரியோர் கூறுவர். திருநாவுக்கரசர், "ஓங்காரத் தொருவன் காண்" என்றும், "ஓங்கார மெய்ப்பொருள்" என்றும் (ஆலம் பொழில்) உரைப்பது காண்க. "இன்பம் காண் துன்பங்கள் இல்லாதான் காண்" என்று பெரியோர் கூறுதலின், பிறர் துன்பங் கண்டு பொறான் என்பது பற்றி, "துன்பமெலாம் தொலைத்தானை" என்று சொல்லுகின்றார். சோர்வும் சோம்பலும் துன்பத்திற் கேதுவாதலின் அவற்றை நீக்கி ஊக்கமே உருவாகச் செய்பவன் என்பது தோன்ற, "சோர்ந்து தூங்க வொட்டானை" என இயம்புகின்றார். ஞானமே அவனது திருவுருவாதலின் அன்பர் உள்ளத் தில் எழுந்தருளுகின்ற போது மெய்யறிவின் உருவாய் விளங்குகின்றான் என்றற்கு, "மெய்யறிவே உருவாய் என்னுள் உற்றானை" என்று உரைக் கின்றார். இது போலவே திருநாவுக்கரசர் சிவனை, "மெய் கிளரும் ஞான விளக்குக் கண்டாய்" (மறைக்கா) என்று உரைப்பது காண்க. மெய்ஞ் ஞானிகளாலும் உணர்தற் கரியவன் என்று பெரியோர் கூறுவது பற்றி, "உணர்ந்தார்க்கும் உணர்ந்து கொள்ள வொட்டானை" என இயம்பு கின்றார். "உணர்ந்தார்க்கு உணர்வரியோன்" (கோவை) என்று திருவாதவூரரும், "காண்டற் கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க்கு ஆற்ற எளியன் கண்டாய்" (மறைக்கா) எனத் திருநாவுக்கரசரும்

கூறுவன காண்க. உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவனாயினும் எளியார்க்கு ஆற்ற எளியன் என்பது பற்றி, "என்னளவில் எட்டினானை" என்று இசைக்கின்றார்.

இதனால், இறைவன் அறிவுருவாய், அன்பர் உள்ளத்தில் எழுந் தருளித் துணை புரியும் திறம் உரைத்தவாறாம். (3)

3947. சோற்றானைச் சோற்றில்உறும் சுகத்தி னானைத்
துளக்கம்இலாப் பாரானை நீரா னானைக்
காற்றானை வெளியானைக் கனலா னானைக்
கருணைநெடுங் கடலானைக் களங்கர் காணாத்
தோற்றானை நான்காணத் தோற்றி னானைச்
சொல்லறியேன் சொல்லியபுன் சொல்லை யெல்லாம்
ஏற்றானை என்னுளத்தில் எய்தி னானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

உரை : உண்ணும் சோறாக இருப்பவனும், அதனை உண்ட வழிப் பிறக்கும் சுகத்தின் வடிவமாயினவனும், அசைவில்லாத பூதமாகிய நிலமாகவும் நீராகவும் காற்றாகவும் நெருப்பாகவும் வானவெளியாக இருப்பவனும், கருணையால் நெடிய கடல் போன்றவனும், நெஞ்சில் களங்க முடையவர்களால் காணுதற் கில்லாதவனும், அடியவனாகிய யான் கண்டு களிக்குமாறு தோன்றுபவனும், சொல்லும் வகை யறியாத வனாகிய யான், சொல்லிய புல்லிய சொற்களை எல்லாம் ஏற்றருள்பவனும், என்னுள்ளத்தில் எய்துபவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

ஊனுடம்பைத் தாங்கி ஞான நெறியில் வாழ்தற்கு இன்றியமையாத உணவாதலின் அதன் வடிவமாக இருந்து உடல் உழைத்தற்கு ஏற்ற ஆற்றலை நல்குவது பற்றி, "சோற்றானை" என்று சொல்லுகின்றார். இனிச் சோற்றான் என்பதற்குச் சோற்றுத் துறையில் எழுந்தருளுபவன் என்று கொண்டு அங்குள்ள இறைவனை, "தொண்டு செய்து என்றும் சோற்றுத் துறையற்கே உண்டு நீ பணி செய் மட நெஞ்சமே" என்று திருநாவுக்கரசர் வற்புறுத்துவதும், "சுற்றம் திரு வென்று இன்ன துறந்தார் சேரும் சோற்றுத் துறையே" என்று நம்பியாரூரர் உரைப்பதும் ஈண்டு நோக்கத் தக்கதாம். சோறு என்பது முத்தியைக் குறிப்பதாகக் கொண்டு முத்தி உலகத்தை யுடையவன் என்று கொள்வது முண்டு. நாள்தோறும் காலந்தோறும் சோறுண்டு சுகம் பெறுவது மக்கள் இயல்பாதலின் அச்சுக வடிவம் சிவனே என்றற்கு, "சோற்றில் உறும் சுகத்தினானை" என்று மொழிகின்றார். சோற்றுத் துறையை அடைந்து வழிபடுவார் பெறும் சுக வடிவமும், முத்தி பெற்று இன்புறுவார் பெறும் இன்ப வடிவும் சிவனேயாதல் பற்றி இவ்வாறு கூறுகின்றார் எனினும் பொருந்தும். நிலம் முதல் ஆகாயம் ஈறாக வுள்ள பூதமைந்தும் அவன் வடிவேயாதல் விளங்க, "துளக்கமிலாப் பாரானை நீரானானைக் காற்றானை வெளியானைக் கனலானானை" என வுரைக்கின்றார். எத்துணை ஆழம் அகழ்ந்த விடத்தும் அசைதல் இல்லாத பொறை யுடைமை பற்றி நிலத்தை, "துளக்கமிலாப் பார்" என்று சொல்லுகின்றார். வழங்கக்

குறை படாத பெருங் கருணையை யுடையவன் என்பது பற்றிச் சிவபெருமானை, "கருணை நெடுங் கடலானை" என்று குறிக்கின்ருர். களங்கம் - அழுக்கு. நெஞ்சில் களங்கம் உளதாய விடத்து அறியாமை யிருள் படிந்து நல்லறிவை மறைத்தலால் களங்க முடையோரால் காண வியலா தொழிவது பற்றி, "களங்கர் காணத் தோற்ருனை" எனவும், எளியவனுகினும் நெஞ்சிற் கள்ளமின்றி வழிபடுகின்றேனுதலால் என் அன்பை நயந்து எனக்குக் காட்சி தருகின்ருன் என்பாராய், "நான் காணத் தோற்றினனை" எனவும் வடலூர் வள்ளல் எடுத்துக் கூறுகின்ருர். சொல்லுதற் குரியவற்றைத் தேர்ந்து நெறிப் படுத்தி உரைக்கும் திறம் இல்லாதவன் எனத் தம்மைக் குறிப்பாராய், "சொல்லறியேன்" என்றும், அதனுல் யான் சொல்லுவன பலவும் தூயவை யல்லவாயினும் அவற்றை யெல்லாம் ஏற்றருளினுன் என மகிழ்வாராய், "சொல்லிய புன்சொல்லை எல்லாம் ஏற்ருனை" என்றும், அதனை யான் இனிது உணருமாறு என்னுடைய நெஞ்சின்கண் எழுந்தருளி இன்புறுத்துகின்ருன் என்பாராய், "என் உளத்தில் எய்தினுனை" என்றும் இயம்புகின்ருர்.

இதனுல், நான் காணத் தோன்றி, நான் சொல்லிய புன்சொற்களை ஏற்று, என்னுள்ளத்தில் எழுந்தருளுகின்ருன் என இசைத்தவாரும். (4)

3948. சேர்த்தானை என்றனைத்தன் அன்ப ரோடு
செறியாத மனஞ்செறியச் செம்பொற் ருளில்
ஆர்த்தானை அம்பலத்தில் ஆடா நின்ற
ஆனந்த நடத்தானை அருட்கண் நோக்கம்
பார்த்தானைப் பாராரைப் பாரா தானைப்
பார்ப்பறவே பார்த்திருக்கப் பண்ணி என்னை
ஈர்த்தானை ஐந்தொழில்நீ இயற்றென் ருனை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

**உரை :** தன்பால் அன்பு கொண்ட அடியவர் கூட்டத்தில் என்னைச் சேர்த்துக் கொண்டவனும், அடங்காத என் மனத்தைத் தன்னுடைய, சிவந்த அழகிய திருவடிகளில் அடங்கி அமையுமாறு பிணித்துக் கொண்டவனும், அம்பலத்தின்கண் ஆடுகின்ற ஆனந்த நடனத்தை யுடையவனும், அருள் ஞானம் விளங்கும் தன் திருக்கண்களால் என்னைப் பார்த்தருளினவனும், அருளே கண்ணுகக் கொண்டு பார்க்கும் திறம் இல்லாதவரைப் பாரா தொழிபவனும், பிற பொருள்களைப் பார்க்கும் தன்மை துறந்து தன் திருவருளையே யான் எப்பொழுதும் பார்த்திருக்கப் பண்ணியவனும், என்னைத் தன் திருவருளில் இழுத்தணைத்துச் சிவமாக்கிப் படைத்தல் முதலிய ஐந்து தொழில்களையும் செய்க என்று பணித்தவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணுரக் கண்டு களித்திருக்கின்றேன். எ.று.

அன்பர் அல்லாதாரோடு கூடிய வழி அன்பொழுக்கம் கெடுவது நினைந்து என்னை அன்புடைய தன் அடியார் கூட்டத்தில் சேர்த்துக் கொண்டான் என்பாராய், "தன் அன்பரோடு என்றனைச் சேர்த்தானை" என்று தெரிவிக்கின்ருர். ஐம்பொறிகளின் வழியாக எங்கும் எப்பொருளி

லும் சென்று தோய்ந்து அலமருவது மனத்திற்கு இயல்பாதலின், "செறியாத மனம்" என்றும், அது சிவபெருமானுடைய திருவடிக்கண் சென்று ஒன்றி நிற்பது விளங்க, "செறியாத மனம் செறியச் செம்பொற் ருளில் ஆர்த்தானை" என்றும் கூறுகின்ருர். செறிதல் - அடங்கி ஒடுங்குதல். ஆர்த்தல் - பிணித்தல். தனது திருக்கூத்தால் உயிர் வகைகள் அனைத்தும் இன்ப மெய்த அம்பலத்தில் கூத்தாடுகின்ருன் என்பது பற்றி, "அம்பலத்தில் ஆடா நின்ற ஆனந்த நடத்தானை" என்று அறிவிக்கின்ருர். தனது திருவருள் ஞான நாட்டம் பெற்றுத் தனது சிவக் காட்சியைப் பெற்று உயிர்கள் உய்தி பெறல் வேண்டு மென்னும் திருவுள்ளத்தால் உயிர்களை அருளொழுக நோக்குகின்ருன் என்பதும் விளங்க, "அருட் கண் நோக்கம் பார்த்தானை" எனவும், அருள் நாட்டம் பெற்று அவனைப் பார்க்கும் நற்பேறு இல்லாதவரை அவன் பார்த்தருளுவதில்லை என்பது தெரிவித்தற்கு, "பாராரைப் பாராதானை" எனவும், அருளே கண்ணுகக் கொண்டு சிவத்தைப் பார்ப்பவர் பிற எவற்றையும் பார்ப்பதில்லை; பார்க்கும் நாட்டமும் அடைவதில்லை எனத் தெளிவித்தற்கு, "பார்ப்பறவே பார்த்திருக்கப் பண்ணி என்னை ஈர்த்தானை" எனவும் இயம்புகின்ருர். "பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க வருஞானம் பல ஞானம் அஞ்ஞான விகற்பம்" (சிவசித்தி) என்று அருணந்தி சிவனுர் அறிவுறுத்துவது காண்க. திருவருள் ஞானத்தால் ஆன்மா சிவமாம் தன்மை எய்திய வழி, சிவம் செய்வன யாவும் அவ்வான்மாவும் செய்யலாம் என எண்ணுபவரும் உளராதலின் அவர் கருத்துக்கும் உடன்படுவாராய், "ஐந்தொழில் நீ இயற்று என்ருன்" என இயம்புகின்ருர். சிவஞான நூல்கள், "உம்பர் பிரான் உற்பத்தி யாதிகளுக் குரியன் உயிர் தானும் சிவானுபவ மொன் றினுக்கு முரித்தே" (சிவசித்தி) என்று கூறுவது காண்க.

இதனுல், அருளே கண்ணுகக் கொண்டு நோக்குவார்க்குக் காட்சி வழங்கும் சிவபெருமான் பரஞானத்தால் தன்னைப் பார்ப்பவர் பிற பதார்த்தங்களைப் பார்க்காமல் பண்ணுகின்ருன் என்பதைத் தெரிவித்த வாரும். (5)

3949. முளையானைச் சுத்தசிவ வெளியில் தானே
முளைத்தானை மூவாத முதலா னானைக்
களையானைக் களங்கம்எலாம் களைவித் தென்னைக்
காத்தானை என்பிழையைக் கருதிக் கோபம்
விளையானைச் சிவபோகம் விளைவித் தானை
வேண்டாமை வேண்டல்இவை மேவி என்றும்
இளையானை மூத்தானை மூப்பி லானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

**உரை :** பிறவாதவனும், பரசிவ வெளியில் தானே தோன்றி விளங்குபவனும், நாளும் முதிர்தலில்லாத முதற் பொருளானவனும், குற்றம் பொருந்திப் பின் அதனைக் களைதல் இல்லாதவனும், என்பால் உண்டாகிய குற்றம் எல்லாம் போக்கி, என்னைக் காத்தவனும், யான்

செய்யும் பிழைகளைக் கருத்திற் கொண்டு கோபம் கொள்ளாதவனும், ஞான மெய்திய ஆன்மாக்கட்குச் சிவபோகம் உண்டு பண்ணுபவனும், வெறுப்பு விருப்பு ஆகியவற்றிற் பொருந்தி எக்காலத்தும் இளைப்புறுதல் இல்லாதவனும், உலகுயிர்கள் அத்தனைக்கும் மூத்தவனும், முதுமை எய்தாதவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

வித்தாகி முளையாகி வளர்தல் இல்லாதவனாதலால் சிவனை, "முளையானை" என்று மொழிகின்றார். தத்துவவெளிக்கும் தத்துவாதீத வெளிக்கும் அப்பாலதாகிய தூய பரசிவ வெளியில் பிறர் தோற்றுவிக்கத் தோன்றாது தானே தோன்றுபவனாதலால், "சுத்த சிவ வெளியில் தானே முளைத்தானை" எனவும், மூலப் பொருளாய் மூத்து விளிதல் இல்லாதவனாதலால், "மூவாத முதலானை" எனவும் மொழிகின்றார். களங்க முறுவதும் பின்னர் அதனைக் களைந்தெறிவதும் ஆகிய இயல்புகள் இல்லாதவன் என்றற்கு, "களையானை" என்றும், தன்னை நினைந்தடையும் உயிர்களின்பால் உள்ள குற்றமெலாம் போக்கி மீளவும் அக்குற்றங்களுக்கு ஆளாகாதவாறு காத்தருள்பவனுமாதலால், "களங்கமெலாம் களைவித்து என்னைக் காத்தானை" என்றும், செய்த பிழையை நோக்கி அது செய்தவர்களைச் சினந்து கொள்ளும் சிறுமை யில்லாதவன் என்பாராய், "என் பிழையைக் கருதிக் கோபம் விளையானை" என்றும் இயம்புகின்றார். சிவஞானத்தால் சிவப் பேறு பெறுபவர்க்குச் சிவானந்தத்தை மிகுவிப்பது பற்றி, "சிவபோகம் விளைவித்தானை" எனவும், உலகத்து உயிர்கள் விருப்பு வெறுப்புக்களை யுற்று மெலிவது இயல்பாதல் கண்டு அஃது அவன்பால் இல்லாமை புலப்பட, "வேண்டாமை வேண்டல் இவை மேவி என்றும் இளையானை" எனவும், எல்லா வுலகங் கட்கும் பொருட்களுக்கும் முன்னே தோன்றி விளங்குபவனாதலால், "மூத்தானை" எனவும், இயல்பாகவே முதுமை யுற்று மடிந்தொழியும் தன்மை யில்லாதவன் என்பாராய், "மூப்பிலானை" எனவும் எடுத்துரைக்கின்றார்.

இதனால், சுத்த சிவ வெளியில் தானே முளைத்தலும், ஆன்மாக்கட்குச் சிவபோகம் நல்குவதும், வேண்டுதல் வேண்டாமைகளால் மெலிதலும் இல்லாத இறைமைத் தன்மையை எடுத்தோதிய வாறும்.

(6)

3950. புயலானை மழையானை அதிர்ப்பி னானைப்
போற்றியமின் ஒளியானைப் புனித ஞானச்
செயலானைச் செயல்எல்லாந் திகழ்வித் தானைத்
திருச்சிற்றம் பலத்தானைத் தெளியார் உள்ளே
அயலானை உறவானை அன்பு ளானை
அறிந்தாரை அறிந்தானை அறிவால் அன்றி
இயலானை எழிலானைப் பொழிலா னானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

உரை: மேகமாகவும் மழையாகவும் இடியாகவும் அவற்றிடையே தோன்றும் மின்னல் ஒளியாகவும் விளங்குபவனும், தூய சிவஞானச் செயல்களாகத் திகழ்பவனும், ஞானச் செயல்கள் பலவற்றையும்

விளங்குவிப்பவனும், திருச்சிற்றம்பலத்தின்கண் எழுந்தருள்பவனும், தெளிவில்லாதவருடைய உள்ளத்தின்கண் விளக்கமின்றி அயலாய் இருப்பவனும், தெளிந்தவர்க்கு நெருங்கிய உறவாகா அவருடைய உண்மை யன்பில் ஒளிர்பவனும், ஞானத்தால் தன்னை யறிந்த நன்மக்களின் ஞான நலத்தால் அவர்களை யறிந்து அருள்பவனும், உண்மை யறிவாலன்றி உணரப்படாத இயல்புடையவனும், உயர்ந்தவனும், உலகங்களானவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

மழை முகிலும் மழையும், அதன்கண் தோன்றும் இடியும் மின்னலும் ஆகிய யாவும் இறைவனருளால் நிகழ்வது பற்றி, "புயலானை மழையானை அதிர்ப்பினானைப் போற்றிய மின்னொளியானை" என்று உரைக்கின்றார். இதனையே சுருக்கமாகக் "கார் முகிலாய்ப் பொழிவானை" (எறும்பி) என்று நம்பியாரூரர் நவில்வது காண்க. உயிர்கட்கு ஞானம் விளைந்து சிவபோகப் பேறு எய்துவது குறித்தே இறைவனது செயல்கள் யாவும் இலங்குவது விளங்க, "புனித ஞானச் செயலானைச் செயல் எல்லாம் திகழ்வித்தானை" என்று சிறப்பிக்கின்றார். ஞானத்தால் தெளிவில்லாத மக்களின் உள்ளத்தில் வெளிப்பட விளங்காமை பற்றி, "தெளியார் உள்ளே அயலானை" என்றும், தெளிந்த அன்பர்கட்கு உறவாகியும் அன்பனாகியும் அருளுவது பற்றி, "உறவானை அன்புளானை" என்றும், ஞானத்தால் தனது பரமாந் தன்மையை அறிந்து போற்றும் ஞானச் செல்வர்களை நன்கறிந்து பேணுவதால், "அறிந்தாரை அறிந்தானை" என்றும், அப்பெருமானை உண்மை ஞானத்தாலன்றி உணர முடியாத அருமை புலப்பட, "அறிவாலன்றி இயலானை" என்றும் கூறுகின்றார். திருநாவுக்கரசரும், "அறிவிலங்கு மனத்தானை அறிவார்க் கன்றி அறியாதார்தம் திறந்து ஒன்றறியாதானை" (எறும்பி) என்று தெரிவிப்பது காண்க. எழில் - உயர்ச்சி; அழகுமாம். பொழில் - உலகங்கள். "செழும் பொழில்கள் பயந்து காத்தளிக்கும் மற்றை மூவர் கோனாய் நின்ற முதல்வன்" (சதகம்) என்று மணிவாசகப் பெருமான் மகிழ்ந்து பாடுவது காண்க. "எழிலானைப் பொழிலானை" என்பதை, எழில் ஆனைப்பொழில் ஆனானை எனக் கொண்டு அழகிய திருவானைக்கா என்னும் திருப்பதியை யுடையவன் எனப் பொருள் கொள்வது முண்டு.

இதனால், புனித ஞானச் செயலும், அச்செயலைத் திகழ்விக்கும் சிவபெருமான் தன்னை அறிந்தாரை அறிந்து ஆதரிப்பதும், உண்மை யறிவாலன்றி உணரப்படாத ஒட்ப முடையவன் என்பதும் விளக்கிய வாறும். (7)

3951. தாயானைத் தந்தையெனக் காயி னானைச்
சற்குருவு மானானைத் தமியேன் உள்ளே
மேயானைக் கண்காண விளங்கி னானை
மெய்ம்மையெனக் களித்தானை வேதஞ் சொன்ன
வாயானை வஞ்சம்இலா மனத்தி னானை
வரங்கொடுக்க வல்லானை மணிமன் றன்றி
ஏயானைத் துரியநடு விருக்கின் றானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

உரை : எனக்குத் தாயும் தந்தையும், சற்குருவுமான பெருமானும், தமியனுகிய என்னுள்ளத்தில் பொருந்தினவனும், நான் கண்ணிற் கண்டு மகிழ விளங்குபவனும், எனக்கு மெய்ப்பொருள் ஞான மளித்தவனும், வேதங்களை ஓதி யருளிய திருவாயை யுடைய வனும், வஞ்சம் சிறிதும் இல்லாத திருவுள்ளம் உடையவனும், என் போன்ருர்க்கு வேண்டும் வரங்களைத் தர வல்லவனும், அழகிய அம்பலத்தின் கண்ணன்றி வேறெங்கும் பொருந்தாதவனும், துரிய நிலை யின் நடு நின்று காட்சி தருபவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணுரக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

உலகுயிர்கட் கெல்லாம் தாயும் தந்தையுமாய்த் தலையளி செய்தலாலும், உயிர்கட்குக் குருவாய் எழுந்தருளி ஞான மருளுதலாலும் சிவபெருமானை, "தாயானைத் தந்தை எனக்கானுனைச் சற்குருவுமானுனை" எனப் புகழ்கின்ருர். உலகியற் பற்றும் பாசமுமின்றித் தனிப்பட்டிருக்கும் தமது தன்மையைப் புலப்படுத்தற்கு, "தமியேன்" எனவும், தன்னுள்ளத் தின்கண் உறைவதே யன்றி அருளுருவாய்க் கண்ணிற் காண விளங்குவது பற்றி, "கண் காண விளங்குகின்ருன்" என்பது தோன்ற, "தமியேன் உள்ளே மேயானைக் கண் காண விளங்கினுனை" எனவும் இயம்புகின்ருர். பொருட்களின் மெய்ம்மையை யுணரும் மெய்யுணர்வைத் தமக்களித் துள்ளான் என்றும், அதுதானும் வேதங்கள் சொன்ன மெய்ப் பொருள் என்பது குறிப்பாய் விளங்க, "வேதம் சொன்ன வாயான்" என்றும் ஓதுகின்ருர். வஞ்சனை செய்யாத மனமும், அன்பர்க்கு வேண்டும் வரங்களைக் கொடுக்கும் வள்ளன்மையும், அம்பலத்தின்கண் எழுந்தருளும் இன்ப நலமும் உடையவன் என்பாராய், "வஞ்சமிலா மனத்தினுனை வரம் கொடுக்க வல்லானை மணிமன்றன்றி ஏயானை" என இயம்புகின்ருர். துரிய நிலையிலிருந்து யோக நெறியில் புருவ நடுவில் நோக்கும் சிவயோகிகட்குக் காட்சி தருதலால், "துரிய நடு இருக் கின்ருனை" எனச் சொல்லுகின்ருர்.

இதனுல், அன்பர் உள்ளத்தே இருந்து மெய்யுணர்வு தந்து வரம் பல வும் கொடுத்துத் துரிய நடுவில் எழுந்தருளும் சிவனுடைய திறங்களைச் செப்பியவாரும். (8)

3952. தழைத்தானைத் தன்னைஒப்பார் இல்லா தானைத்
தானேதா னுனைத் தமிய னேனைக்
குழைத்தானை என்கையிலோர் கொடைதந் தானைக்
குறைகொண்டு நின்றேனைக் குறித்து நோக்கி
அழைத்தானை அருளமுதம் அளிக்கின் ருனை
அச்சமெலாம் தவிர்த்தானை அன்பே என்பால்
இழைத்தானை என்னிதயத் திருக்கின் ருனை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

உரை : எங்கும் எல்லாமாய்ப் பரந்து நிறைந்திருப்பவனும், தனக்கு ஒப்பாவார் ஒருவரும் இல்லாதவனும், பிறிதொன்றின் கலப்பின்றித் தானே தானுக இருப்பவனும், தமியனுகிய என் மனமுருகிக் குழையச் செய்பவனும், எளியவனுகிய என் கையில் சமரச சன்மார்க்க

மென்னும் ஞானக் கொடையை நல்கினவனும், ஞானக் குறையுற்று யான் நின்றேனாக என்னை அருட் குறிப்புடன் பார்த்துத் தன்பால் அழைத்துக் கொண்டவனும், திருவருள் ஞானமாகிய அமுதத்தை எனக்குத் தருபவனும், என்னுள்ளத்தில் எழுந்த அச்சங்கள் யாவற்றையும் போக்கினவனும், என்னுள் அன்பே நிறையச் செய்தவனும், என்னுடைய இதயக் கமலத்தில் எழுந்தருளி இருப்பவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். எ.று.

எவ்விடத்தும் எப்பொருளிலும் கலந்து பரந்து ஒன்றி யிருப்பது பற்றி, "தழைத்தானை" என்றும், இங்ஙனம் தழைத்திருக்கும் தன்மையால் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவனாதல் பற்றி, "தன்னை ஒப்பார் இல்லாதானை" என்றும் இயம்புகின்றார். "ஒப்பொருவரில்லாத ஒருவன் தன்னை" (ஆரூர்) எனத் திருநாவுக்கரசர் உரைப்பது காண்க. பரம்பொருளாகிய தான் எல்லாப் பொருள்களிலும் எல்லா வுயிர்களிடத்தும் கலந்திருப்பினும் தன்னை யொன்றும் கலத்தலில்லாத செம்பொருளாதலால் அவனை, "தானே தானானான்" என்று கூறுகின்றார். உலகியல் மயக்கத்தில் மயங்கி உறைப்புண்டு இருக்கும் தன்னுடைய மனத்தைச் சிவனருளில் செலுத்திக் கரைந்து குழையச் செய்தல் பற்றி, "தமியனேனைக் குழைத்தானை" என்றும், தமது வாழ்வில் எங்கும் எப்பொழுதும் சமரச சன்மார்க்க நெறியையே பொருளாகக் கொண்டொழுகச் செய்தமை புலப்பட, "என் கையில் ஓர் கொடை தந்தானை" என்றும் உரைக்கின்றார். தாம் மேற்கொண்ட கொள்கைக்குத் தடை பல தோன்றினமையால் மனத்தில் பெருங் குறையுற்று வருந்திய போது அச்சம் நீக்கித் தன்னை மேற் கொண்ட நெறியிலேயே நிலைபெறச் செய்தமை விளங்க, "குறை கொண்டு நின்றேனைக் குறித்து நோக்கி அழைத்தானை" எனவும், அதற்கேற்ற அறிவும் ஆற்றலும் அருளினமை தோன்ற, "அருளமுதம் அளிக்கின்றானை அச்சமெலாம் தவிர்த்தானை" எனவும், இடையிடையே தோன்றிய தடைகளால் மனம் சலிப்புற்று அன்பு நீங்காவாறு நிறைவித்தமை தெரிவித்தற்கு, "அன்பே என்பால் இழைத்தானை" எனவும் வடலூர் வள்ளல் எடுத்துரைக்கின்றார். எக்காலத்தும் தமது இதயத்தில் எழுந்தருளி மகிழ்விப்பது விளங்க, "என் இதயத்து இருக்கின்றானை" என இசைக்கின்றார்.

இதனால், இறைவனுடைய செம்மைத் தன்மையும் சமரச சன்மார்க்க ஞானத்தைச் சிவனருளிய நலத்தையும் எடுத்தோதிய வாறும். (9)

**3953.** **உடையானை அருட்சோதி உருவி னானை**
**ஓவானை மூவானை உலவா இன்பக்**
**கொடையானை என்குறைதீர்த் தென்னை ஆண்டு**
**கொண்டானைக் கொல்லாமை குறித்தி டாரை**
**அடையானைத் திருச்சிற்றம் பலத்தி னானை**
**அடியேனுக் கருளமுதம் அளிக்க வேபின்**
**இடையானை என்னாசை எல்லாந் தந்த**
**எம்மானைக் கண்டு களித் திருக்கின் றேனே.**

உரை : என்னைத் தனக்கு அடிமையாக யுடையவனும், அருட் சோதி யுருவினனும், என்னை விட்டு நீங்காதவனும், மூத்து விளிவு இல்லாதவனும், கெடாத பேரின்பத்தைக் கொடுக்கும் செயலை யுடைய வனும், எனக்குற்ற குறைகளைப் போக்கி ஆண்டு கொண்டவனும், கொல்லாமையாகிய நல்லறத்தைக் குறிக் கொண்டு மனத்திற் கொள்ளாதவரைச் சேராதவனும், திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளு பவனும், அடியவனாகிய எனக்குத் தன்னுடைய திருவருளாகிய ஞான வமுதத்தை அளிப்பதற்குப் பின்னிடாதவனும், என் கருத்தில் எழும் ஆசை யெல்லாம் தந்து மகிழ்வித்தவனுமாகிய எங்கள் சிவபெருமானைக் கண்ணுரக் கண்டு இன்புற்றிருக்கின்றேன். எ.று.

உலகியற் பொருட்கள் எல்லாவற்றையும் தமக்கு உடைமையாகவும், உயிர் வகை யனைத்தும் தனக்கு அடிமையாகவும் கொண்டவன் என்று சான்றோர் கூறுவது பற்றிச் சிவபெருமானை, "உடையான்" என வுரைக் கின்றார். திருவருள் ஞானமே சிவத்தின் திருவுருவம் எனச் சைவ நூல் பலவும் உரைத்தலால், "அருட் சோதி உருவினனை" எனவும், எல்லாமாய் எங்குமாய் நிறைந்திருப்பது பற்றி, "ஓவானை" எனவும், உலகுயிர்களைப் போல வளர்தலும் தேய்தலும் இல்லாதவன் என்றற்கு, "மூவானை" எனவும் மொழிகின்றார். தன்னை யடைந்தார்க்குச் சிவஞானப் பேரின்பத்தைக் கெடாதவாறு அளிப்பது பற்றி, "உலவா இன்பக் கொடையானை" என்றும், தன்னையடைந்தாருடைய குறையைப் போக்கி அன்பால் ஆண்டு கொள்ளும் அருள் நலத்தை விதந்து, "என் குறை தீர்த்து எனை ஆண்டு கொண்டானை" என்றும் இயம்புகின்றார். "தன்னை யடைந்தார் வினை தீர்ப்ப தன்றோ தலையாயவர்தம் கடனாவது காண்" (அதிகை) என்று திருநாவுக்கரசர் தெரிவித்தருளுவது அறிக. கொல்லாமையாகிய நன்னெறியே சிவநெறியின் வாய்மையாதலால் அதனை மனங் கொள்ளாதவரைச் சிவபெருமான் அடைவதில்லை என்பாராய், "கொல்லாமை குறித்திடாரை அடையானை" எனவும், நினைக்கும் போதெல்லாம் இறைவனுடைய திருவருள் ஞான இன்பம் தமக்குள் தோன்றி மகிழ்வித்தமை விளங்க வடலூர் வள்ளல், "அடியேனுக் கருளமுதம் அளிக்கவே பின்னிடையானை என்னுளை எல்லாம் தந்த எம்மானைக் கண்டு களித்திருக்கின்றேன்" எனவும் எடுத்தியம்புகின்றார்.

இதனால், அருட் சோதி உருவுடைய சிவபெருமான் கொல்லாமை கொண்டவரை அடையாமல் அன்புருவான தமக்கு அருளமுதத்தைப் பெருக வழங்கி ஆசை யெல்லாம் நிறைவித் தருளிய திறம் தெரிவித்த வாறும்.

(10)

திருச்சிற்றம்பலம்

# 46. இறைதிருக் காட்சி

அஃதாவது, இறைவனுடைய அருளுருவைக் கண்டு, மகிழ்ந்த வடலூர் வள்ளல் அக்காட்சி யின்பத்தை எடுத்துரைப்பது. இதன்கண் வரும் முப்பது பாட்டுக்களிலும் திருநாவுக்கரசர் முதலிய பெருமக்கள் எடுத்தோதிய முறையில் தமது காட்சி யனுபவத்தை விரித்துரைக்கின்றார்.

## எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**3954.** **அருளெலாம் அளித்த அம்பலத் தமுதை**
**அருட்பெருஞ் ஜோதியை அரசை**
**மருளெலாம் தவிர்த்து வாழ்வித்த மருந்தை**
**வள்ளலை மாணிக்க மணியைப்**
**பொருளெலாம் கொடுத்தென் புந்தியில் கலந்த**
**புண்ணிய நிதியைமெய்ப் பொருளைத்**
**தெருளெலாம் வல்ல சித்தைமெய்ஞ் ஞான**
**தீபத்தைக் கண்டுகொண் டேனே.**

**உரை :** *திருவருள் ஞானங்கள் எல்லாவற்றையும் எனக்குத்* தந்தருளிய அம்பலத்தில் நடம் புரியும் அமுதம் போல்பவனும், அருட்பெருஞ் சோதி யானவனும், அருளரசானவனும், மயக்க மெல்லாம் போக்கி, என்னை வாழ்வித்த மருந்து போல்பவனும், வள்ளலும் மாணிக்க மணி போல்பவனும், மெய்ப்பொருள் நலம் எல்லாவற்றையும் எனக்குக் கொடுத்து என்னுள்ளத்திற் கலந்து கொண்ட புண்ணியச் செல்வமான வனும், மெய்ப்பொருளாயவனும், தெளிவு முற்றும் அளிக்க வல்ல சித்துப் பொருளானவனும், மெய்ஞ்ஞான விளக்குப் போல்பவனுமாகிய சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ச்சி கொண்டேன். எ.று.

அருள் ஞானத்தால் பெறலாகும் பேறுகள் பலவாதலின் இவை எல்லாவற்றையும் எஞ்சாமல் கொடுத்தருளியது பற்றி, "அருளெலாம் அளித்த அம்பலத்து அமுது" என்று புகழ்கின்றார். அம்பலத்தின்கண் அருளுருவாய்த் தோன்றி உள்ளத்தில் அமுதம் போல் இன்பம் செய்வது பற்றி, "அம்பலத் தமுது" என்று சிறப்பிக்கின்றார். திருவருளாகிய பெரிய ஞான ஒளியையே தனக்கு உருவாகக் கொண்டிருத்தல் பற்றிச் சிவனை, "அருட் பெருஞ் சோதி" என்று தெரிவிக்கின்றார். உயிர் வகை செய்யும்

வினைத் திறங்களை நோக்கி அவற்றிற்குரிய பயனைச் செய்த உயிர்கள் பெறச் செய்யும் ஆட்சி நலம் விளங்க, "அரசு" எனவும், உலகியல் தரும் மயக்க மெல்லாவற்றையும் போக்கி ஞான நெறியை யுணர்ந்து அதன்கண் செலுத்தி வாழ்வித்து இன்ப மெய்துவித்தல் தோன்ற, "அருளெலாம் தவிர்த்து வாழ்வித்த மருந்து" எனவும், அருள் ஞானத்தை வரையாது வழங்குமாறு புலப்பட, "வள்ளல்" எனவும், மாணிக்க மணி போல் சிவந்த நிறமுடையனுதல் பற்றி, "மாணிக்க மணியே" எனவும் மகிழ்ந்துரைக்கின்றார். மெய்ப் பொருளுணர்வால் ஆன்மாக்கள் பெறலாகும் நலங்களைத் தந்து அவர்களின் உள்ளத்திற் கலந்து இன்பங்களை நல்குவதால், "பொருளெலாம் கொடுத்து என் புந்தியில் கலந்த புண்ணிய நிதி" என்றும், அதன் மெய்ம்மைத் தன்மையை விளக்குதற்கு, "மெய்ப் பொருள்" என்றும் விளம்புகின்றார். ஞான நிலை விரிந்து பரந்த இயல்பானதாகலின் அதற்குரிய தெளிவறிவுகள் பலவாதல் விளங்க, "தெருளெலாம் வல்ல சித்து" எனவும், மெய்ஞ்ஞான ஒளியால் ஆன்மாக்களின் உள்ளங்களை விளங்கச் செய்வது பற்றி, "மெய்ஞ்ஞான தீபம்" எனவும் விளம்புகின்றார்.

இதனால், அருட் பெருஞ் சோதியாய், மருள் நீக்கி வாழ்விக்கும் மருந்தாய் மெய்ஞ்ஞான தீபமாய் இறைவன் காட்சி தரும் சிறப்பைப் பாராட்டியவாறும். (1)

**3955. துன்பெலாம் தவிர்த்த துணையைஎன் உள்ளத்**
**துரிசெலாந் தொலைத்தமெய்ச் சுகத்தை**
**என்பொலா மணியை என்சிகா மணியை**
**என்னிரு கண்ணுள்மா மணியை**
**அன்பெலாம் அளித்த அம்பலத் தமுதை**
**அருட்பெருஞ் ஜோதியை அடியேன்**
**என்பெலாம் உருக்கி இன்பெலாம் அளித்த**
**எந்தையைக் கண்டு கொண் டேனே.**

உரை : துன்பங்கள் எல்லாவற்றையும் போக்கி யருளிய துணைவனும், என் உள்ளத்திற் படிந்த குற்றங்கள் எல்லாவற்றையும் நீக்கி மெய்ம்மையான சுகத்தைத் தருபவனும், என்னுடைய துளைக்கப் படாத மணியாகவும், என் முடி மணியாகவும், என்னுடைய இரண்டு கண்களிலுமுள்ள கருமணியாகவும் விளங்குபவனும், அன்பனைத்தும் என்னுள்ளம் நிறையுமாறு கொடுத்தருளிய அம்பலத் தமுதனும், அருட் பெருஞ் சோதியும், அடியேனுடைய எலும்பை யுருக்கி இன்ப வகைகள் எல்லாவற்றையும் அளித்துதவிய எந்தையுமாகிய சிவபெருமானைக் கண்டு கொண்டேன். எ.று.

உயிர்களைத் தாக்கும் துன்பங்கள் எண்ணிறந்த வகையன; அவை யனைத்தையும் போக்குதற்கு அறிவு துணை புரிந்த அருட் செயல் பற்றி இறைவனை, "துன்பெலாம் தவிர்த்த துணை" என்றும், அத்துன்பங்கட் கெல்லாம் ஏது உள்ளத்திற் படியும் குற்றங்களாதலால் அவற்றைப்

போக்கி அழியா ஞான சுகத்தைத் தந்தமை தோன்ற, "என்னுள்ளத் துரிசெலாம் தொலைத்த மெய்ச் சுகத்தை" என்றும் சொல்லுகின்றார். பொல்லா மணி என்பது பொலா மணி என வந்தது. பொள்ளா மணி என்பதன் மரூஉ. சிகாமணி முடியில் அணியும் மணி வகை. கண்களில் உள்ள கருமணியைக் "கண்ணுள் மாமணி" என்று குறிக்கின்றார். மாமணி - கருமணி. நம் உள்ளத் தெழும் அன்பனைத்தும் அம்பலத்தாடும் பெருமானிடமே சென்று சேர்வது பற்றி,"அன்பெலாம் அளித்த அம்பலத் தமுது" என்று அறிவிக்கின்றார். அருளாகிய பேரொளியே அவனுடைய திருவுரு என்பது பற்றி, "அருட் பெருஞ் சோதி" எனப் பன்முறையும் எடுத்தோதிப் பராவுகின்றார். "ஆதியும் அந்தமுமில்லா அரும் பெருஞ் சோதி" எனச் சான்றோர் கூறுவதால், "அருட் பெருஞ் சோதி" என வடலூர் வள்ளல் அடிக்கடி எடுத்தோதுவர். அன்புடன் நோக்குவார்க்கு உடம்பிலுள்ள எலும்புகளெல்லாம் உருகச் செய்து மெய்ம்மையான இன்பம் அளிப்பது இறைவன் இயல்பாதலின், "என்பெலாம் உருக்கி இன்பெலாம் அளித்த எந்தையைக் கண்டு கொண்டேனே" என உரைக் கின்றார். "என்புருகிப் பாடுகின்றிலை" (சதகம்) எனவும், "என்பெலாம் உருக நோக்கி அம்பலத்தாடுகின்ற என் பொலா மணியை ஏத்தி இனிது அருள் பருக மாட்டா அன்பிலாதவர்" (அச்சப்) எனவும் மணிவாசகப் பெருமான் உரைப்பது காண்க. என் பொலா மணி, என் சிகாமணி, என் கண்ணுள் மாமணி என்பன ஆர்வ மொழிகள் எனப்படும்.

இதனால், தம்முடைய என்பெல்லாம் உருக்கி இன்பமெல்லாம் இறைவன் அளித்த நலத்தை எடுத்தோதியவாறும். (2)

3956. சிதத்திலே ஊறித் தெளிந்ததெள் அமுதைச்
சித்தெலாம் வல்லமெய்ச் சிவத்தைப்
பதத்திலே பழுத்த தனிப்பெரும் பழத்தைப்
பரம்பர வாழ்வைஎம் பதியை
மதத்திலே மயங்கா மதியிலே விளைந்த
மருந்தைமா மந்திரந் தன்னை
இதத்திலே என்னை இருத்திஆட் கொண்ட
இறைவனைக் கண்டுகொண் டேனே.

உரை : என் சித்தத்திலே சுரந்து பெருகித் தெளிந்து விளங்கும் தெள்ளிய அமுதமானவனும், சித்துக்களெல்லாம் செய்ய வல்ல மெய்ப் பொருளாகிய சிவனும், உண்டற்குரிய பக்குவமுறப் பழுத்திருக்கும் ஒப்பற்ற பெரிய பழம் போல்பவனும், பரம்பர வாழ்வை யுடையவனும், எங்கட்குத் தலைவனும், மத மென்னும் செருக்கினால் மயங்காத நல்லறி வின்கண் விளங்குகின்ற மருந்து போல்பவனும், பெரிய மந்திரமான வனும், செம்மை நிலையில் என்னை நிறுத்தி ஆட்கொண்டருளிய இறைவனுமாகிய சிவபெருமானைக் கண்டு கொண்டேன். எ.று.

சிதம் - சித்தத்தின் மேற்று. இது சிந்தை என்றும் வழங்கும். "சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப் பொழிவன ஐயாறன் அடித்தலம்" (ஐயா) என்று திருநாவுக்கரசர் கூறுவ தறிக. அணிமா

முதலிய எண்வகைச் சித்திகளையும் செய்ய வல்ல சித்தனாய்த் தோன்றிச் சிவபெருமான் திருவிளையாடல் புரிந்தாராதலின், "சித்தெலாம் வல்ல மெய்ச் சிவம்" என்று கூறுகின்றார். பதம் - உண்டற்குரிய பக்குவம். காய்த்துப் பக்குவமுறப் பழுக்கும் உலகியற் பழம் போலின்றி எடுத்த எடுப்பிலேயே பக்குவமுறப் பழுத்து விளங்கும் தனிப் பெருமை யுடையது சிவமாகிய கனி என்றற்கு, "பதத்திலே பழுத்த தனிப் பெரும் பழம்" என்று பகர்கின்றார். சிவபோக வாழ்வு மேன் மேலாய் உயர்ந்ததாகலின் அதனை, "பரம்பர வாழ்வு" எனக் குறிக்கின்றார். காமம், குரோதம் என வரும் அறுவகைக் குற்றங்களில் மதம் எனும் செருக்கு அறிவை மயக்குவதாதலால், அதன்கண் மயங்கும் மக்கள் அறிவைப் போலாது குற்றமில்லாத ஞானவான்களின் ஞான உள்ளத்தில் தோன்றி இன்புறுத்தும் ஞான மருந்தாதலால் சிவனை, "மதத்திலே மயங்கா மதியிலே விளைந்த மருந்து தன்னை" எனவும், மந்திரப் பொருளாவது பற்றி, "மாமந்திரம்" எனவும், செம்மை நெறியிலே நிறுத்தித் திருவருள் ஞானத்தை வழங்கித் தன்னை ஆட்கொண்டமை விளக்குதற்கு, "இதத்திலே என்னை இருத்தி ஆட்கொண்ட இறைவனைக் கண்டு கொண்டேனே" எனவும் இயம்புகின்றார்.

இதனால், தன்னைச் செம்மை நெறியில் நிறுத்தி, அருள் வழங்கித் தம்மை இறைவன் ஆட்கொண்ட திறத்தைத் தெரிவித்தவாறாம். (3)

3957. **உணர்ந்தவர் உளம்போன் றென்னுளத் தமர்ந்த**
**ஒருபெரும் பதியைஎன் உவப்பைப்**
**புணர்ந்தெனைக் கலந்த போகத்தை எனது**
**பொருளைஎன் புண்ணியப் பயனைக்**
**கொணர்ந்தொரு பொருள்என் கரத்திலே கொடுத்த**
**குருவைஎண் குணப்பெருங் குன்றை**
**மணந்தசெங் குவளை மலர்எனக் களித்த**
**வள்ளலைக் கண்டுகொண் டேனே.**

உரை : மெய்யுணர்ந்த பெரியோர்களின் உள்ளத்தில் எழுந்தருளுவது போல என்னுள்ளத்தில் அமர்ந்தருளும் ஒப்பற்ற பெரிய தலைவனும், எனக்கு உவகை தருபவனும், என்னுட் கூடிக் கலந்து தனது சிவபோகத்தைத் தந்தருளினவனும், என்னுடைய பொருளானவனும், எனது புண்ணியப் பயனாகப் பொலிபவனும், தன்னொடு கொண்டு வந்து என் கையிலே ஞானமாகிய ஒப்பற்ற பொருளைக் கொடுத்தருளிய குருமுதல்வனும், எண் வகைக் குணங்களும் ஒருங்கமைந்த பெரிய குன்று போல்பவனும், மணம் கமழ்கின்ற செங்குவளை மலரை எனக்குத் தந்து மகிழ்வித்த வள்ளலுமாகிய சிவபெருமானைக் கண்டு கொண்டேன். எ.று.

மெய்ப்பொருளை யுணர்ந்த பெரியோர்களை "உணர்ந்தவர்" என்பர். அப்பெருமக்களின் திருவுள்ளத்தில் எப்பொழுதும் எழுந்தருளுவது இறைவனது இயல்பாதலால் அவர்களது உள்ளம் போலத் தமது உள்ளத்தையும் கருதி இறைவன் எழுந்தருளுகின்றான் என்பாராய், "உணர்ந்தவர் உளம் போன்று என் உளத்தமர்ந்த ஒரு பெரும் பதி"

என்று உரைக்கின்றார். உவப்பைத் தருதலால் "உவப்பு" என்றும், சிவபோகத்தை நல்குவதால் "போகம்" என்றும் புகழ்கின்றார். பரம் பொருளாகிய சிவனையல்லது பொருள் எனப்படும் பிற வனைத்தும் அசத்தாதலால் அவற்றைப் பொருள் எனக் கொள்ளாது சிவத்தையே பொருள் எனப் புகழ்வாராய், "எனது பொருள்" என இயம்புகின்றார். குருமுதல்வனாய் எழுந்தருளிச் சிவஞானமாகிய ஒப்பற்ற பொருளைத் தனக்குத் தந்தமை விளங்க, "கொணர்ந்து ஒரு பொருள் என் கரத்திலே கொடுத்த குரு" என்று கூறுகின்றார். எண்வகைக் குணங்களும் ஒருங்கு திரண்டு சலியாமையும் திண்மையும் கொண்டு விளங்குவது போலச் சிவனது அருளுருவம் காணப்படுவது பற்றி, "எண்குணப் பெருங் குன்று" என்று ஏத்துகின்றார். எண் குணங்களாவன: தன் வயத்தனாதல், தூய வுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவில் ஆற்றலுடைமை, வரம்பில் இன்பமுடைமை என்பனவாம். இறைவன் வடலூர் வள்ளலுக்குச் செங்குவளை மலரளித்த வரலாறு தெரிந்திலது.

இதனால், ஒருகால் சிவபெருமான் வடலூர் வள்ளலுக்குச் செங்குவளை மலர் அளித்த திறமொன்று தெரிவிக்கப்பட்டவாறும். (4)

3958. புல்லிய நெறிநீத் தெனைஎடுத் தாண்ட
பொற்சபை அப்பனை வேதம்
சொல்லிய படிஎன் சொல்எலாம் கொண்ட
ஜோதியைச் சோதியா தென்னை
மல்லிகை மாலை அணிந்துளே கலந்து
மன்னிய பதியைஎன் வாழ்வை
எல்லியும் இரவும் என்னைவிட் டகலா
இறைவனைக் கண்டுகொண் டேனே.

**உரை:** தாழ்வு பயக்கும் நெறியின்கண் செல்லாமல் தடுத்து என்னை ஆண்டு கொண்ட பொற் சபையில் விளங்கும் அப்பனாகிய கூத்தப் பெருமானும், வேதம் சொல்லியபடியாக என்னுடைய சொற்களையும் ஏற்றுக் கொண்ட அருட் சோதியும், என்னைச் சோதிக்காமல் எனக்கு மல்லிகை மாலையை அணிந்து, என்னுள் கலந்து நிலையாய் இருக்கும் தலைவனும், என்னுடைய வாழ்வாகியவனும், பகலும் இரவும் என்னை விட்டு நீங்காமல் இருக்கும் இறைவனுமாகிய சிவபெருமானைக் கண்டு கொண்டேன். எ.று.

ஞானம் பயந்து வீடு பேறு நல்கும் செந்நெறியினும் ஏனைய பலவும் தாழ்வு தருவனவாதலால் அவற்றைப் புல்லிய நெறி யெனப் புகன்று அந்நெறியில் செல்லாவாறு இளமையிலே தம்மை அம்பலக்கூத்தன் ஆட்கொண்ட நலத்தை ஓதுவாராய், "எனை எடுத்தாண்ட பொற்சபை அப்பன்" எனவும், அவன் ஓதிய வேத உரைகளைப் போல என் சொற்களையும் ஏற்றருளினன் என்பாராய், "வேதம் சொல்லியபடி என் சொல் எலாம் கொண்ட சோதி" எனவும் சொல்லுகின்றார். அன்பர்களின்

அன்பின் பெருமையை உலகறியச் செய்தல் வேண்டிப் பலவகையால் சோதிப்பது இறைவன் செயலாகவும் அது செய்யாமல் தன்னை ஆட்கொண்டமை புலப்பட, "என்னைச் சோதியாது" என இயம்புகின்றார். ஒருகால் தன்பால் எழுந்தருளி மல்லிகை மாலையை அணிந்து மகிழ்வித்த செய்தி யொன்றை, "மல்லிகை மாலை யணிந்து உளே கலந்து மன்னிய பதி" என மொழிகின்றார். மல்லிகை மாலை யணிந்த வரலாறு தெரியவில்லை. இரவு பகல் என்ற வேற்றுமையின்றித் தம் முன்னே எப்பொழுதும் இறைவன் தங்குகின்றான் என்ற வுண்மையை, "எல்லியும் இரவும் என்னை விட்டகலா இறைவனைக் கண்டு கொண்டேனே" என எடுத்துரைக்கின்றார்.

இதனால், புன்னெறியினின்றும் நீக்கி, நன்னெறிக்கண் தன்னை நிறுத்திச் சோதித்தலின்றித் தனக்கு மல்லிகை மாலை யணிந்து மகிழ்வித்த செய்தி விளம்பியவாறும். (5)

**3959. பண்ணிய தவமும் பலமும்மெய்ப் பலஞ்செய்**
**பதியுமாம் ஒருபசு பதியை**
**நண்ணிஎன் உளத்தைத் தன்னுளம் ஆக்கி**
**நல்கிய கருணைநா யகனை**
**எண்ணிய படியே எனக்கருள் புரிந்த**
**இறைவனை மறைமுடி இலங்கும்**
**தண்ணிய விளக்கைத் தன்னிகர் இல்லாத்**
**தந்தையைக் கண்டுகொண் டேனே.**

**உரை :** செய்த தவமும் அதன் பயனும் மெய்ம்மையாகப் பயன் விளைவிக்கச் செய்யும் தலைவனுமாம் ஒப்பற்ற பசுபதியாகிய சிவனும், என்பால் அடைந்து, என் மனத்தைத் தன் மனமாக்கி யருளிய கருணை யுருவாகிய நாயகனும், தான் எண்ணியபடியே எனக்கு அருள் புரிந்த இறைவனும், வேதத்தின் உச்சியில் விளங்கும் குளிர்ந்த ஒளி விளக்கும், தனக்கு ஒப்பில்லாத தந்தையுமாகிய சிவபெருமானைக் கண்டு மகிழ்ந்தேன். எ.று.

செய்கின்ற தவமும், அதன் பயனும், அப்பயனைத் தவம் செய்த பெரியவர்க்குச் சேர்ப்பிக்கும் தலைவனும் சிவமேயாதல் தோன்ற, "பண்ணிய தவமும் பலமும் மெய்ப் பலஞ் செய் பதி" என்று பகர்கின்றார். தவமாகிய வினையும் அதன் பயனும் அறிவில்லாத பொருட்களாதலால், அவற்றைத் தவஞ் செய்தவர்க்குச் சேர்ப்பித்தல் அறிவுடைய பரம்பொருளாகிய சிவனது அருட் செயலாதலால், "தவமும் பலமும் மெய்ப்பலஞ் செய் பதி" என்று கூறுகின்றார். அப்பெருமான் மலத்தால் கட்டுண்டு உலகிற் பிறந்து வருந்தும் உயிர்கட்குத் தலைவன் என்பது பற்றிச் சிவனை, "பசுபதி" என்று குறிக்கின்றார். அப்பெருமான் அன்பர் உள்ளத்தை யடைந்து தன் அருளொளியால் சிவ மயமாக்கி ஞான இன்பம் அருளுகின்றான் என்று பெரியோர் உரைப்பதால், "நண்ணி என் உளத்தைத் தன்னுளமாக்கி நல்கிய கருணை நாயகனை" என்று நவில்கின்றார். அன்பர்கள் எண்ணிய எண்ணியாங்கு எய்த அருளும் இறைவனாதல் தோன்ற, "எண்ணிய படியே எனக்கு அருள்

புரிந்த இறைவன்" என இயம்புகின்றார். வேதங்களின் உச்சியில் ஞான ஒளி விளக்காய் ஒளி செய்து இன்புறுத்துவது பற்றி, "மறைமுடி இலங்கும் தண்ணிய விளக்கு" என்று இசைக்கின்றார். ஒப்பு ஒருவரும் இல்லாதவனாதலின் சிவனை, "தன்னிகர் இல்லாத் தந்தை" என்று பாராட்டுகின்றார்.

இதனால், செய்வினையையும் அதன் பயனையும் நோக்கி அப்பயன் செய்தவனையே அடையச் செய்து அன்பர் உள்ளத்தைச் சிவ மயமாக்கி எண்ணிய எண்ணியபடி எய்த அருளும் இறைவனது அருட்டன்மையை விளக்கியவாறும். (6)

**3960. பெண்மையை வயங்கும் ஆண்மையை அனைத்தும்**
**பிறங்கிய பொதுமையைப் பெரிய**
**தண்மையை எல்லாம் வல்லஓர் சித்த**
**சாமியைத் தயாநிதி தன்னை**
**வண்மையை அழியா வரத்தினை ஞான**
**வாழ்வைஎன் மதியிலே விளங்கும்**
**உண்மையை என்றன் உயிரைஎன் உயிருள்**
**ஒருவனைக் கண்டுகொண் டேனே.**

**உரை :** விளங்குகின்ற பெண்மையும் ஆண்மையும், அவ்விரண்டு மன்றி ஏனைய எல்லாவற்றினும் உயர்ந்து நிற்கும் பொதுமையும், அருள் நலத்தால் பெரிய தட்ப உருவையும், எல்லாம் செய்ய வல்லதாகிய ஒப்பற்ற சித்தராகிய சாமியும், தயாநிதியும், வள்ளன்மையும், அழியா வரத்தினையும், ஞான வாழ்வையும், தருவதும், என் அறிவில் விளங்கும் உண்மைப் பொருளும், என்னுடைய உயிரும், என் உயிருள் உயிராய் எழுந்தருளும் ஒருவனுமாகிய சிவபெருமானைக் கண்டு கொண்டேன். எ.று.

பெண்மை, ஆண்மை, பொதுமை, தண்மை, வண்மை, உண்மை என்ற குணங்களைக் குணியாக வைத்து உரைப்பது செய்யுள் மரபாதலின் இக்குணங்களை யுடைய சிவபெருமானைப் பெண்மை முதலாகக் குறித்துரைக்கின்றார். ஆணும் பெண்ணுமாய் அடியார்க்கு அருள் நல்குவது இறைவன் செயலாதல் பற்றி, "வயங்கும் பெண்மையை ஆண்மையை" என்று உரைக்கின்றார். ஆண் என்றும் பெண் என்றும் பகுக்கலாகாப் பொருட்களனைத்திலும் இறைவன் கலந்திருப்பது பற்றி, "அனைத்தும் பிறங்கிய பொதுமை" என்று புகல்கின்றார். வரம்பில் ஆற்றலுடைய பெருமானாதலால், "எல்லாம் வல்ல ஓர் சித்த சாமி" என்று கூறுகின்றார். வரையாது அருளும் சிறப்பு நோக்கி, "வண்மை" எனவும், பொய்த்தல் இல்லாத வரங்களையும் ஞான இன்பம் நிறைந்த வாழ்வையும் தருபவன் எனப் புகழ்வாராய், "அழியா வரத்தினை ஞான வாழ்வை" எனவும் நவில்கின்றார். வரந் தருபவனை "வரம்" என்றும், ஞான வாழ்வு அளிக்கும் நலம் பற்றி, "ஞான வாழ்வு" என்றும் மொழிகின்றார். மெய்யறிவாய் உயிரறிவில் இருந்து உண்மை யுணர்த்துவது பற்றிச் சிவனை, "மதியிலே விளங்கும் உண்மை" என்றும், உயிர்க்குயிராய்

ஒளிர்வதால் அப்பரம்பொருளை, "என்றன் உயிரை என்னுயிருள் ஒருவனைக் கண்டு கொண்டேன்" என்றும் இயம்புகின்றார்.

இதனால், இறைவனது எல்லாமாய் இருக்கும் தன்மை எடுத்தோதியவாறும். (7)

3961. ஆதியை ஆதி அந்தமீ தெனஉள்
அறிவித்த அறிவைஎன் அன்பைச்
சோதியை எனது துணையைஎன் சுகத்தைச்
சுத்தசன் மார்க்கத்தின் துணிபை
நீதியை எல்லா நிலைகளும் கடந்த
நிலையிலே நிறைந்தமா நிதியை
ஓதியை ஓதா துணர்த்திய வெளியை
ஒளிதனைக் கண்டுகொண் டேனே.

உரை : எந்தப் பொருட்கும் ஆதியும், எவற்றிற்கும் ஆதியும் அந்தமும் இது வென உணருமாறு உள்ளிருந்து உணர்த்திய உணர்வும், எனது அன்பும், ஒளியும், என்னுடைய துணையும், எனக்குரிய சுகமும், யான் மேற்கொண்ட சுத்த சன்மார்க்கத்தின் முடி பொருளும், நீதியும், எல்லா வகை நிலைகளையும் கடந்ததாகிய மேல் நிலையில் நிறைந்து விளங்கும் பெரிய செல்வமும், எல்லா அறிவு நூல்களையும் ஓதியவனும், எல்லாவற்றையும் ஒவ்வொன்றாகப் பாராமலே உணர்த்துகின்ற ஞான வெளியும், ஒளியுமாகிய சிவனைக் கண்டு கொண்டேன். எ.று.

உலகுகள் அத்தனைக்கும் ஆதியாகிய பெருமானாதலால் சிவனை, "ஆதி" எனத் தெரிவிக்கின்றார். தனது அருட் சத்தியால் மாயையைக் கலக்கிப் பலவேறு அண்டங்களையும், அவற்றினுள் அடங்கிய உலகங் களையும் உலகப் பொருட்களையும் படைத்தளிக்கும் பரமன் என ஞான நூல்கள் உரைப்பதால் இவ்வாறு கூறுகின்றார் எனினும் அமையும். பொருள் வகையின் தோற்றமும் முடிவும் இவை யென்று நுணுகி யறியும் அறிவு தந்திருக்கின்றமை பற்றி, "ஆதி யந்த மீதென உள் அறிவித்த அறிவு" என மொழிகின்றார். தாம் மேற்கொண் டொழுகுகின்ற சுத்த சன்மார்க்கத்தின் முடிபொருள் சிவமாதல் பற்றி அதனை, "சுத்த சன்மார்க்கத்தின் துணிபு" என்று மொழிகின்றார். "நீதி பலவும் தன்ன வுருவாம்" என்று ஞானசம்பந்தர் முதலியோர் உரைப்பதால் சிவனை, "நீதி" என்றும், உயிர்கள் தம் செய்வினைகளால் எய்துதற் குரியவாய் மேல் மேலாய் விளங்கும் பதங்கள் பலவாதலின் அவை எல்லா வற்றுக்கும் அப்பாலாய் நிறைந்து விளங்கும் போகப் பொருளாய்ப் பொலிவது பற்றி, "எல்லா நிலைகளும் கடந்த நிலையிலே நிறைந்த மாநிதி" என்றும் விளக்குகின்றார். மக்கள் நிலைக்கு மேல் இந்திர பதம், வைகுண்ட பதம், பிரம்ம பதம், சிவ பதம் என நிலைகள் பலவாதலின், "எல்லா நிலைகளும் கடந்த நிலை" என்று கூறுகின்றார். எல்லா நூல் களாலும் ஓதப்படும் உண்மைப் பொருளாதல் பற்றிப் பரம்பொருளை, "ஓதி" எனவும், எல்லா நூல்களையும் ஒவ்வொன்றாக ஓதி யுணரும் உயிர்கள் போலின்றி யாவற்றையும் ஒருங்கே குறைவறப் பிறர்க்கு

உணர்த்துகின்ற பரஞான வெளிப் பொருளாதலின், "ஓதாது உணர்த்திய வெளியை" எனவும், ஞான ஒளி யுடைமை பற்றி, "ஒளி" எனவும் உரைத்தருளுகின்றார்.

இதனால், எல்லாவற்றுக்கும் தானே ஆதியும் அந்தமுமாதலே யன்றிப் பிற பொருட்கள் எல்லாவற்றிற்கும் உள்ள ஆதி யந்தங்களை அறியும் வாய்ப்பை அருளும் அறிவுருவாகிய இறைவன் இயல்பு தெரிவித்தவாறும். (8)

3962. என்செயல் அனைத்தும் தன்செயல் ஆக்கி
என்னைவாழ் விக்கின்ற பதியைப்
பொன்செயல் வகையை உணர்த்திஎன் உளத்தே
பொருந்திய மருந்தையென் பொருளை
வன்செயல் அகற்றி உலகெலாம் விளங்க
வைத்தசன் மார்க்கசற் குருவைக்
கொன்செயல் ஒழித்த சத்திய ஞானக்
கோயிலில் கண்டுகொண் டேனே.

உரை: யான் செய்கின்ற செயல்கள் அனைத்தையும் தன் செயலாகக் கொண்டு, என்னைத் தனது அருள் வாழ்வில் வாழச் செய்கின்ற தலைவனும், சிவபோகத்திற் குரியவாய் யான் செய்தற் குரியவாகிய செயல் வகைகளை எனக்கு அறிவித்து என் உள்ளத்தில் எழுந்தருளுகின்ற தெய்வ மருந்து போல்பவனும், எனக்குப் பொருளாகுபவனும், வன்செயல்கள் யாவும் இல்லாதபடிப் போக்கி உலகமெங்கும் நற்செயல்களே விளங்க வைத்தருளுபவனும், சன்மார்க்க ஞான குருவுமாகிய சிவனைப் பயனில் செயல்களே இல்லாத சத்திய ஞானமாகிய கோயிலில் கண்டு கொண்டேன். எ.று.

தன்பால் மெய்யன்பு கொண்டு தன்னுடைய கருவி கரணங்கள் யாவும் சிவ கரணங்களாகத் திகழ்கின்ற அன்பர்களை அவர்கள் செய்யும் வினைகள் அவர்களைப் பற்றாதபடி விலக்கி யருளும் மெய்ம்மை விளங்க, "என் செயலனைத்தும் தன் செயலாக்கி என்னை வாழ்விக்கின்ற பதி" என்றும், சிவஞான யோகத்தால் சிவத்தை அடைந்தவிடத்து, "சிவனும் இவன் செய்தி யெலாம் என் செய்தி யென்றும், செய்ததெனக்கு இவனுக்குச் செய்த தென்றும், பவம் அகல உடனாகி நின்று கொள்வன் பரிவாற் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே" (சிவசித்தி) என்றும், "ஞானத்தால் தனை யடைந்தார் தம்மைத் தானாக்கித் தலைவன் அவர் தாம் செய்வினை தன்னால் நலமுடனே பிறர் செய்வினை யூட்டி ஒழிப்பானாய் நணுகாமல் வினை யவரை நாடிக் காப்பன்" (சிவசித்தி) என்றும் பெரியோர் கூறுவது காண்க. பொன் செயல் வகை என்றவிடத்துப் பொன் என்பது சிவபோகம் பெறுதற்குரிய செயல் வகை. அவற்றைத் தத்துவ ரூபம் முதல் சிவபோகம் ஈருகப் பத்து வகையாக ஞான நூல்கள் உரைக்கின்றன. பத்துமாவன: தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவ ரூபம், சிவ தரிசனம், சிவயோகம்,

சிவபோகம் என்பனவாம். இச்செயல் வகையை உணர்த்திச் சிவம் பெறும் நெறியில் நிறுத்தி ஆண்டமை விளங்க, "பொன் செயல் வகையை உணர்த்தி என்னுளத்தே பொருந்திய மருந்தை என் பொருளை" என்று புகல்கின்றார். உலகில் நிகழ்கின்ற வன்செயல்கள் எல்லாவற்றையும் போக்கி இனிய செயல்களையே புரியுமாறு ஒழுகுவிக்கும் மெய்ம்மை நெறியாதலால் அதனை உணர்த்தியது பற்றி, "வன்செயல் அகற்றி உலகெலாம் விளங்க வைத்த சன்மார்க்க சற்குரு" என்று கூறுகின்றார். கொன் செயல் - பயனில்லாத செயல்கள். பயனுள்ள செயல்கள் யாவும் உண்மை ஞானப் பேற்றுக்குரிய பணியாதலால், அப்பணி நிகழுமிடத்தே இறைவன் எழுந்தருளுவது புலப்பட, "கொன் செயல் ஒழித்த சத்திய ஞானக் கோயிலில் கண்டு கொண்டேனே" என்று பராவுகின்றார்.

இதனால், சன்மார்க்க சற்குருவாய்ச் சத்திய ஞானக் கோயிலில் இறைவன் எழுந்தருளும் திறம் எடுத்தோதியவாறும். (9)

**3963.** **புன்னிகர் இல்லேன் பொருட்டிருட் டிரவில்**
**போந்தருள் அளித்தசற் குருவைக்**
**கன்னிகர் மனத்தைக் கரைத்தெனுட் கலந்த**
**கருணையங் கடவுளைத் தனது**
**சொன்னிகர் எனஎன் சொல்எலாங் கொண்டே**
**தோளுறப் புனைந்தமெய்த் துணையைத்**
**தன்னிகர் இல்லாத் தலைவனை எனது**
**தந்தையைக் கண்டுகொண் டேனே.**

**உரை :** புல்லுக்கும் நிகராகாத அற்பனாகிய என் பொருட்டு இருள் செறிந்த இரவின் கண் என்பால் வந்து அருள் புரிந்த சற்குருவும், கல் போன்ற என் மனத்தைக் கரையச் செய்து என்னுள்ளே கலந்து கொண்ட கருணைக் கடவுளும், தனது சொல்லுக்கு ஒப்பாம் என என் சொற்களை யெல்லாம் ஏற்றுக் கொண்டு என் தோளில் மாலை யணிந்து மகிழ்வித்த மெய்யான துணைவனும், தனக்கு ஒப்பார் ஒருவருமில்லாத தலைவனுமாகிய என் தந்தையாகிய சிவபெருமானைக் கண்டு கொண்டேன். எ.று.

தமது புன்மையும் எளிமையும் சிறுமையும் புலப்படுத்தற்கு, "புன்னிகர் இல்லேன்" என்றும், ஒருகால் இருள் திணிந்த இரவுப் போழ்தின்கண் தம்மிடம் சற்குரு வடிவில் வந்து ஞானம் அளித்த செயல் விளங்க, "இருட் டிரவில் போந்து அருள் அளித்த சற்குரு" என்றும் சாற்றுகின்றார். கல்லைப் போல் உருகிக் கரைதல் இல்லாத தமது மனத்தின் இயல்பை, "கன்னிகர் மனத்தைக் கரைத்து" எனவும், பின்னர் அதனுட் கலந்து இன்புறுத்திய திறம் விளங்க, "என்னுட் கலந்த கருணையங் கடவுள்" எனவும் கூறுகின்றார். தான் பாடுகின்ற பாட்டுக்களையும் சொல்லுகின்ற சொற்களையும் அன்புடன் ஏற்றுத் தமது தோளில் மாலை யணிந்து சிறப்பித்தமை தோன்ற, "தனது சொல் நிகரென என் சொல் எலாம் கொண்டே தோளுறப் புனைந்த மெய்த் துணையை" என்று சொல்லுகின்றார்.

இதனால், யான் சொல்லுவனவற்றைத் தான் சொல்லுவனவாகக் கொண்டு தன்னை இறைவன் சிறப்பித்தமை தெரிவித்தவாறும். (10)

3964. ஏங்கலை மகனே தூங்கலை எனவந்
தெடுத்தெனை அணைத்தஎன் தாயை
ஓங்கிய எனது தந்தையை எல்லாம்
உடையஎன் ஒருபெரும் பதியைப்
பாங்கனில் என்னைப் பரிந்துகொண் டெல்லாப்
பரிசும்இங் களித்ததற் பரத்தைத்
தாங்கும்ஓர் நீதித் தனிப்பெருங் கருணைத்
தலைவனைக் கண்டுகொண் டேனே.

**உரை :** ஒருநாள் என்பால் வந்து என்னை எடுத்து மகனே, நீ கலக்கத்தால் ஏங்குவதும், சோம்பித் தூங்குவதும் கைவிடுக என்று சொல்லி என்னை அன்புடன் அணைத்துக் கொண்ட எனக்குத் தாயும் உயர்ந்த தந்தையுமாகியவனும், என் உடல், ஆவி, உயிர், பொருள் ஆகிய எல்லாம் தனக்கு உரிமையாக யுடைய ஒப்பற்ற பெரிய தலைவனும், நண்பனைப் போல் என்னை அன்புடன் ஆண்டு கொண்டு எல்லா நலங்களையும் இவ்வுலகில் எனக்குத் தந்தருளிய தற்பரனும், நீதி யுருவாய் எல்லா உயிர்களையும் தாங்கி யருளுகின்ற ஒப்பற்ற பெரிய கருணை யுருக் கொண்ட தலைவனுமாகிய சிவபெருமானை யான் கண்டு கொண்டேன். எ.று.

தாயும் தந்தையும் போல என்பால் வந்து எனக்கு அருள் ஞானம் வழங்கினாய் என்பாராய், "ஏங்கலை மகனே தூங்கலை என வந்து எடுத்தெனை யணைத்த என் தாய் ஓங்கிய எனது தந்தையை" என வுரைக்கின்றார். உலகங்கள் அத்தனையும் அவற்றின்கண் உள்ள பொருட்களையும் தனக்கு உடைமையாகவும் உயிர்களைத் தனக்கு அடிமையாக வும் உடையவனாதலாலும், ஆட்பட்ட உயிர்களின் உடல் பொருள் அத்தனையும் ஏன்று கொள்வதனாலும் சிவபெருமானை, "எல்லாம் உடைய என் ஒரு பெரும் பதி" என இயம்புகின்றார். உண்மை நண்பனைப் போலத் தன்பால் அன்பு கொண்டு எல்லா அறிவு நலன்களையும் ஞானங் களையும் அளித்தருளுவது பற்றி, "பாங்கனில் என்னைப் பரிந்து கொண்டு எல்லாப் பரிசும் இங்களித்த தற்பரத்தை" என்று எடுத்தோதுகின்றார். தன்னின் வேறு பரமாய பொருளில்லாத தனிப் பரம்பொருளாதல் பற்றிச் சிவத்தை, "தற்பரம்" எனச் சிறப்பிக்கின்றார். நீதியும் கருணையும் உருவாகக் கொண்டவனாதலால், "நீதித் தனிப் பெருங் கருணை" என்று ஓதுகின்றார். எவ்வுயிரையும் தாங்கும் நீதியும் எவ்வுயிர்க்கும் நலம் புரியும் பெருங் கருணையும் ஒரு தலைவனுடைய தலைமைக்கு இலக்கணமாதலின், "தாங்கும் ஓர் நீதித் தனிப் பெருங் கருணைத் தலைவன்" என்று புகழ்கின்றார்.

இதனால், இறைவன் தாய் தந்தையாகவும், பதியாகவும், பாங்கனாகவும், தலைவனாகவும் அருள் புரியும் திறம் தெரிவித்தவாறும். (11)

3965. **துன்புறேல் மகனே தூங்கலை எனஎன்**
**சோர்வெலாந் தவிர்த்தநற் றாயை**
**அன்புளே கலந்த தந்தையை என்றன்**
**ஆவியைப் பாவியேன் உளத்தை**
**இன்பிலே நிறைவித் தருள்உரு வாக்கி**
**இனிதமர்ந் தருளிய இறையை**
**வன்பிலாக் கருணை மாநிதி எனும்என்**
**வள்ளலைக் கண்டுகொண் டேனே.**

**உரை :** மகனே! மனத்தில் துன்பம் கொண்டு சோம்பி இராதே என்று சொல்லி எனக்கு உண்டாகிய மனச் சோர்வுகள் அனைத்தையும் போக்கிய நல்ல தாயும், உள்ளத்திலே அன்பு நிறைவித்த தந்தையும், என்றன் உயிரும், பாவியாகிய என்னுடைய மனத்தின்கண் இன்பம் நிறையச் செய்து அருளுரு உடையதாக்கி அதன்கண் இனிது எழுந்தருளிய இறைவனும், வன்மையே யில்லாத கருணையாகிய பெரிய செல்வ மென்று சிறப்பிக்கப்படும் என்னுடைய வள்ளலுமாகிய சிவபெருமானைக் கண்டு கொண்டேன். எ.று.

மக்களுக்குக் கவலையும் கையறவும் தோன்றியபோது இனிய சொற்களைச் சொல்லித் தேற்றி உடலும் உள்ளமும் எய்தும் சோர்வுகளைப் போக்குவதில் தந்தையினும் பெற்ற தாய் சிறந்தவளாதலின், "என் சோர்வெலாம் தவிர்த்த நற்றாய்" என்றும், அன்பும் அருளும் கொண்டு அறிவுரை வழங்குவதில் தந்தை சிறந்தமை பற்றி, "அன்புளே கலந்த தந்தையை" என்றும் போற்றுகின்றார். தான் எழுந்தருளும் பொருட்டுப் பாவியாகிய என் உள்ளத்தில் இன்பம் நிறைவித்து என்னையும் அருளுருவாக்கி அமர்கின்றான் என இறைவனைப் பாராட்டுவாராய், "பாவியேன் உளத்தை இன்பிலே நிறைவித்து அருளுருவாக்கி இனிது அமர்ந்தருளிய இறை" என இயம்புகின்றார். கருணையுடையார் பலரினும் ஒருசிலர் ஒரோருகால் வன்மை யுறுதலால் அவர்களின் நீக்கி, வன்மை சிறிதுமில்லாத கருணையாகிய பெரிய நிதி என்று சான்றோர் போற்றுதல் பற்றிச் சிவனை, "வன்பிலாக் கருணை மாநிதி எனும் என் வள்ளலைக் கண்டு கொண்டேன்" என்று வாயாரப் புகழுகின்றார்.

இதனால், இறைவன் தான் எழுந்தருளும் மக்கள் உள்ளத்தை இன்பத்தால் நிறைவித்து அவர்களையும் அருளுருவினராக்கி எழுந்தருளுகின்றான் என்ற கருத்தைப் புலப்படுத்தியவாறும். (12)

3966. **நனவினும் எனது கனவினும் எனக்கே**
**நண்ணிய தண்ணிய அமுதை**
**மனனுறு மயக்கம் தவிர்த்தருட் சோதி**
**வழங்கிய பெருந்தயா நிதியைச்**
**சினமுதல் ஆறுந் தீர்த்துளே அமர்ந்த**
**சிவகுரு பதியைஎன் சிறப்பை**
**உனலரும் பெரிய துரியமேல் வெளியில்**
**ஒளிதனைக் கண்டுகொண் டேனே.**

உரை : என்னுடைய சாக்கிர நிலையிலும் சொப்பன நிலையிலும் என்னுள் எய்தியருளும் குளிர்ந்த அமுதம் போல்பவனும், என் மனத்தின் கண் படிந்திருக்கும் மயக்கத்தைப் போக்கி அருட் சோதியாகிய ஒளியை வழங்கி அருளுகின்ற பெரிய தயாநிதியானவனும், கோபம் முதலாகிய குற்றங்கள் ஆறையும் நீக்கி என் உள்ளத்தில் எழுந்தருளுகின்ற சிவ குருபரனும், எனக்குச் சிறந்த பொருளாகுபவனும், எண்ணுதற்கரிய பெரிய துரிய நிலையின் மேல் உள்ள அதீத வெளியில் விளங்குகின்ற ஞான ஒளிப் பொருளுமாகிய சிவபெருமானைக் கண்டு மகிழ்ந்தேன். எ.று.

கண் முதலிய பொறிகளோடு கலந்து உலகியற் பொருட்களைக் கண்ணுறும் நிலை "சாக்கிரம்" எனப்படும். அதற்குக் கீழ் உள்ளது கனவு காணும் உறக்க நிலை. இவ்விரு நிலைகளிலும் உயிர் தங்கும் போது சாக்கிராவத்தை என்றும், சொப்பனவத்தை என்றும் நூல்கள் கூறும். இவ்விரு நிலையிலும் இறைவன் தம்முள் எய்திக் குளிர்ந்த அமுதம் போல் தமக்கு இனிமை செய்கின்றான் என்பாராய், "நனவினும் எனது கனவினும் எனக்கே நண்ணிய தண்ணிய அமுது" எனவும், அறிவை மயக்கும் மாயா மயக்கம் மனத்தின்கண் படிந்து உயிரறிவை அயர்விப்பது பற்றி அதனை, "மனனுறு மயக்கம்" எனவும், அதனை அருட் சோதியால் நீக்கியருளும் மிக்க பெரும் தயவுடைமை நோக்கி, "மயக்கம் தவிர்த்து அருள் சோதி வழங்கிய பெருந் தயாநிதி" எனவும் பெருமைப் படுத்துகின்றார். கோபம் முதலிய குற்றங்கள் ஆறும் காமம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், குரோதம் என்பனவாம். இவற்றால் ஆன்ம வுணர்வு மறைந்து பல குற்றங்களைச் செய்தற்கு இடமுண்டாதலால் இவற்றின் தீமையை ஞான உரைகளால் போக்குவது பற்றிச் சிவ பரம் பொருளை, "சினம் முதல் ஆறும் தீர்த்து உள்ளே அமர்ந்த சிவகுரு பதி" என்றும், தம்மால் சிறந்தவை என மதிக்கப்படும் பொருட்கள் எல்லாவற்றினும் சிவ பரம்பொருள் ஒப்பற்ற சிறப்பாய்த் திகழ்வது கொண்டு, "என் சிறப்பு" என்றும் ஏத்துகின்றார். சொப்பனத்திற்கும் கீழதாகிய சுழுத்தி நிலைக்கு அப்பால் உயிர் எய்தும் அவத்தை, "துரியம்" எனப்படும். அதன்கண் மேவுங்கால் ஆன்ம வுணர்வு செயல் படுவதன் அருமை பற்றி, "உனலரும் பெரிய துரியம்" என்று உரைக்கின்றார். துரியமும் அதற்கப்பாலதாகிய அதீதமும் அனுபவ நிலைகளாதலால் அங்குப் பரவொளியாய்ச் சிவத்தைத் தாம் கண்டதை விதந்து, "துரிய மேல் வெளியில் ஒளிதனைக் கண்டு கொண்டேன்" என உவந்து புகழ்கின்றார்.

இதனால், ஐவகை அவத்தைக் கண்ணும் ஆண்டவன் எழுந்தருளி இன்புறுத்தும் திறம் எடுத்தோதியவாறும். (13)

**3967.** **கரும்பிலின் சாற்றைக் கனிந்தமுக் கனியைக்**
**கருதுகோற் றேன்கறுஞ் சுவையை**
**அரும்பெறல் அமுதை அறிவைஎன் அன்பை**
**ஆவியை ஆவியுட் கலந்த**
**பெருந்தனிப் பதியைப் பெருஞ்சுகக் களிப்பைப்**
**பேசுதற் கரும்பெரும் பேற்றை**
**விரும்பிஎன் உளத்தை இடங்கொண்டு விளங்கும்**
**விளக்கினைக் கண்டுகொண் டேனே.**

உரை : கரும்பின் இனிய சாறும், நன்கு பழுத்த முக்கனியின் சாறும், உயர்ந்ததாகக் கருதப்படும் கொம்புத் தேனின் நறிய சுவை போல்பவனும், தேவராலும் பெறுதற்கரிய அமுது போல்பவனும், என்னுடைய அறிவு அன்பு உருவாயவனும், என்னுடைய உயிரும், அவ்வுயிரில் கலந்த பெரிய ஒப்பற்ற தலைவனும், பெரிய சுகத்தால் விளையும் களிப்பானவனும், வாயால் இத்தன்மைத் தெனச் சொல்லுதற் கரிய பெரிய பேறுடையவனும், என் மனத்தை விரும்பி அதன்கண் எழுந்தருளி ஞான விளக்கம் தரும் விளக்குப் போல்பவனுமாகிய சிவ பரம்பொருளைக் கண்டு மகிழ்ந்தேன். எ.று.

கனிந்த முக்கனி எனக் கூறுவதால் கரும்பின் சாற்றை முற்றிய கரும்பின் இனிய சாறு எனக் கொள்க. கோட்டுப் பூ, கொடிப் பூ, நீர்ப் பூ, நிலப் பூ எனப்படும் பலவகைப் பூக்களில் பெறலாகும் தேன் வகையுள் கோட்டுப் பூவின் தேன் மிக்க தூய்மையும் சிறப்பும் உடைய தென்பது பற்றி, "கருதுகோற்றேன்" என்று சிறப்பிக்கின்றார். கரும்பின் சாறும், முக்கனியின் சாறும், கோற் றேனும், கலந்த வழி உண்டாகும் சுவை, "நறுஞ் சுவை" என அறிக. அந்தச் சுவையைச் சிவானந்தம் தருவது பற்றிச் சிவனை, "நறுஞ் சுவை" என நவில்கின்றார். தேவர்கட்கும் பெறல் அருமை தோன்றச் சிவமாகிய அமுதத்தை, "அரும் பெறல் அமுது" என்றும், உண்மையறிவும் மெய்யன்பும் இறைவன் திருவுருவா தலால் அவனை, "அறிவு" என்றும், "அன்பு" என்றும் பாராட்டுகின்றார். உயிர்கட்கு உயிராயும், அதனுட் கலந்து நிற்கும் உயிர்க்குயிராயும், உயிர்களை வாழ்விக்கும் அருட் செயலின் சிறப்பு விளங்க, "ஆவியை ஆவியுட் கலந்த பெருந் தனிப் பதி" எனவும், அப்பெருமானால் தமக்கு எய்தும் சிவானந்த அனுபவத்தை, "பெருஞ் சுகக் களிப்பு" எனவும், சிவபோகப் பேற்றை, "வாக்கிறந்த பரிபூரணம்" என்பது பற்றிப் "பேசுதற்கு அரும் பெரும் பேறு" எனவும் மொழிகின்றார். எங்கும் எல்லா வுயிர்களிலும் பொதுவாய் உறைபவனாயினும் தமது உள்ளத்தில் சிறப்புற இடங் பெற்று ஞான இன்பம் தருவது தோன்ற, "என் உளத்தை விரும்பி இடம் கொண்டு விளங்கும் விளக்கு" எனப் பாராட்டுகின்றார்.

இதனால், இறைவன் தமது உள்ளத்தை விரும்பி எழுந்தருளி ஞான விளக்கம் தருமாற்றால் சிவானந்தத்தை நல்கிய திறம் இயம்பியவாறும்.

(14)

3963. களங்கொளுங் கடையேன் களங்கெலாந் தவிர்த்துக்
களிப்பெலாம் அளித்தசர்க் கரையை
உளங்கொளுந் தேனை உணவுணத் தெவிட்டா
துள்ளகத் தூறும்இன் அமுதை
வளங்கொளும் பெரிய வாழ்வைஎன் கண்ணுள்
மணியைஎன் வாழ்க்கைமா நிதியைக்
குளங்கொளும் ஒளியை ஒளிக்குளே விளங்கும்
குருவையான் கண்டுகொண் டேனே.

உரை : உலகியற் பிறப்பில் இடம் பெற்று உறையும் கடையவனாகிய என்னுடைய களங்கமெல்லாம் போக்கி ஆனந்தக்

களிப்பெல்லாம் தந்தருளிய சர்க்கரை போல் இனிப்பவனும், என் உள்ளத்தில் சுரந்து மகிழ்விக்கும் தேன் போன்றவனும், எத்துணை யுண்டாலும் உண்ணத் தெவிட்டாமல் மனத்துள் ஊறுகின்ற இன்ப அமுதாகியவனும், வளம் பொருந்திய பெரிய வாழ்வைத் தருபவனும், என் கண்ணுள் விளங்கும் மணி போல்பவனும், என் வாழ்விற்கு வேண்டும் செல்வமாகியவனும், என் நெற்றியில் இலாடத்தில் ஒளிர்கின்ற ஒளியாயவனும், அவ்வொளிக்குள் விளங்கும் குருபரனுமாகிய சிவபெருமானைக் கண்டு கொண்டேன். எ.று.

களம் - இடம். உலகியற் பிறப்புக்களில் மக்கட் பிறப்பில் இடம் பெற்று இருப்பது தோன்ற, "களங் கொளுங் கடையேன்" எனவும், தமக்குக் கடைமை இயல்பு எய்துதற் கேதுவாகிய குற்றங்களைப் போக்கி இன்பம் தந்து மகிழ்வித்தமை விளக்குதற்கு, "களங்கெலாம் தவிர்த்து களிப்பெலாம் அளிந்த சர்க்கரை" எனவும் துதிக்கின்றார். வாயால் உண்ணுவதின்றி மன வுணர்வால் நுகரப்படுவது பற்றி, "உளங் கொளுந்தேன்" என்று உரைக்கின்றார். உலகியல் தேன் போலாது ஞானத்தால் சிந்தையின்கண் ஊறி மகிழ்விப்பது பற்றி, "உணவுணத் தெவிட்டாது உள்ளகத்து ஊறும் இன்னமுது" எனவும், யாதானும் குறைவின்றி நிறைந்த வளம் மிக்க சிவபோகப் பெருவாழ்வை நல்குபவனுதலால், "வளங் கொளும் பெரிய வாழ்வு" எனவும், வறுமை பிணி முதலிய குறைபாடில்லாத வாழ்க்கையை நல்குவது தோன்ற, "என் வாழ்க்கை மாநிதி" எனவும் இயம்புகின்றார். குளம், நெற்றி, நெற்றியில் புருவ நடுவாகிய இலாடத்தானத்தே ஒளியாய்க் காணப்படுவது பற்றி, "குளம் கொளும் ஒளி" என்றும், அவ்வொளிக்குள் ஒளிரும் ஞானப் பொருளாதல் பற்றி, "ஒளிக்குளே விளங்கும் குரு" என்றும் ஓதுகின்றார்.

இதனுல், உணர்வார் உணர்வின்கண் உண்ண வுண்ணத் தெவிட்டாது அமுதமாய் ஊறியும், இலாடத்தானத்தே ஒளிக்குள் ஒளியாய் விளங்கியும் சிறக்கும் சிவத்தின் பெருமை தெரிவித்தவாறும். (15)

**3969.** **சிதம்பர ஒளியைச் சிதம்பர வெளியைச்**
**சிதம்பர நடம்புரி சிவத்தைப்**
**பதந்தரு பதத்தைப் பரம்பர பதத்தைப்**
**பதிசிவ பதத்தைத்தற் பதத்தை**
**இதந்தரும் உண்மைப் பெருந்தனி நிலையை**
**யாவுமாய் அல்லவாம் பொருளைச்**
**சதந்தருஞ் சச்சி தானந்த நிறைவைச்**
**சாமியைக் கண்டுகொண் டேனே.**

உரை : சிதாகாசத்தில் விளங்குகின்ற சிவ வொளியும், சிதாகாசப் பரவெளியாய்த் திகழ்வதும், சிதம்பரத்தில் திருக்கூத்தாடுகின்ற சிவ பரம்பொருளுமாகிய உயிர்கட்குச் சிவ பதத்தை நல்கும் சிவ பதப் பொருளும், மேன் மேலாக உயர்ந்துள்ள உயர்நிலைப் பொருளும், பதிப் பொருளாகிய சிவமும், இதனக்குத் தானேயாகிய தனிப் பதப் பொருளும்,

நன்மை பயக்கும் உண்மையாகிய பெரிய தனிநிலைப் பொருளும், எல்லாமாய் அல்லதுமாய் இருக்கும் மெய்ப்பொருளும், நித்தத்துவத்தைத் தருகின்ற சச்சிதானந்த நிறைவாகிய நிறை பொருளும், எல்லாவற்றிற்கும் சாமியுமாகிய சிவ பரம்பொருளைக் கண்டு கொண்டேன். எ.று.

சிதம்பரம் என்பது சித்து அம்பரம் எனப் பிரிந்து ஞானகாசத்தைக் குறிக்கின்றமையின் அங்கு ஒளிர்கின்ற பரவொளியாகிய சிவத்தை, "சிதம்பர வொளி" என்றும், ஞானகாசம் பரவெளியே தனக்கு உருவாய் விளங்குதலின் சிவத்தை, "சிதம்பர வெளி" என்றும், தில்லைச் சிதம்பரத்தில் உள்ள அம்பலத்தில் ஆடல் புரிகின்ற கூத்தப் பெருமானை, "சிதம்பர நடம் புரி சிவம்" என்றும் தெரிவிக்கின்றார். ஆன்மாக்கள் தாம் செய்யும் நல்வினைப் பயனால் மேன்மேல் சென்று பெறுகின்ற சிவ பதத்தை, "பதந்தரு பதம்" எனவும், அது தனக்குக் கீழ் உள்ள இந்திர பதம், பிரம்ம பதம் முதலிய பதங்களை நல்குவது விளங்க, "பதந்தரு பதம்" எனவும், எல்லாப் பதங்கட்கும் மேலாக வுள்ள சிவ பதத்தைத் தான் உறையும் பதமாகக் கொள்வது பற்றி, "பரம்பர பதம்" எனவும், அப்பதத்தின்கண் சிவமாகிய தானே பதியாய், நிலை பெறுவது குறித்து, "பதி சிவ பதம்" எனவும், அப்பதந் தானும் பிறிதொன்றால் படைக்கப் படாது தானே தனிப் பதமாய் இருத்தல் பற்றி, "தற்பதம்" எனவும் உரைக்கின்றார். எல்லா வுயிர்க்கும் இன்பம் தரும் உண்மைப் பொருளாகிய சிவத்திற்கு உரித்தாய பெரிய இன்ப நிலையாதலின் சிவத்தின் தனி நிலையை, "இதந் தரும் உண்மைப் பெருந் தனி நிலை" எனக் கூறுகின்றார். அந்தச் சிவபரம் பொருள் எல்லா உலகங்களிலும் உள்ள பொருள்களாகவும் அல்லாத வேறாகவும் விளங்கக் கண்ட சான்றோர், யாவுமாய் அல்லவும் பொருள் எனப் போற்றி யுரைத்தலால், "யாவுமாய் அல்லவாம் பொருள்" எனவும், சத்தாகிய தன்மையுடைய சிவ பரம்பொருளின் உண்மைத் தன்மையை யோக கண் சத்தாம் ஞானக் காட்சிகளால் யாதாம் எனக் கண்டுணர்ந்த சான்றோர் அதன் தன்மையும், சித்தாந் தன்மையும், இன்பமாந் தன்மையும் குறைவற நிறைந்திருப்பது கண்டு சச்சிதானந்தம் சிவம் என்று விளக்குதலால், "சதந் தரும் சச்சிதானந்த நிறைவு" எனவும், அருவுருவில் அந்நிறைவு சிவம் என்னும் சாமியாக ஞானிகள் உரைத்தலால், "சாமி" எனவும் போற்றப்படுகின்றது. சாமி - தலைவன். "தான் ஏறனையான் சீவக சாமி என்பான்" (சீவக) என்று திருத்தக்க தேவர் வழங்குவது காண்க.

இதனால், சிதம்பரப் பொருளும், சிவ பதப் பொருளும், சச்சிதானந்த நிறைவுமாவது பரசிவ மென்பது விளக்கியவாறும். (16)

3970. ஆரண முடிமேல் அமர்பிர மத்தை
ஆகம முடிஅமர் பரத்தைக்
காரண வரத்தைக் காரிய தரத்தைக்
காரிய காரணக் கருவைத்
தாரண நிலையைத் தத்துவ பதியைச்
சத்திய நித்திய தலத்தைப்
பூரண சுகத்தைப் பூரண சிவமாம்
பொருளினைக் கண்டுகொண் டேனே.

**உரை :** வேதங்களின் முடி மேல் வைத்துப் பேசப்படும் பிரம்மமாகிய பொருளும், ஆகமங்களின் முடிபாக ஓதப்படும் பரசிவப் பொருளும், எல்லாப் பொருட்கும் காரணப் பொருளாய் மேம்படும் பொருளும், காரியப் பாட்டால் பகுக்கப்படும் பொருளும், காரிய காரணங்களுக்கு முதற் கருவாய் நிற்கும் கருப் பொருளும், எல்லாவற்றையும் தாங்குவதாகிய நிலைத்த பொருளும், தத்துவங்கட் கெல்லாம் தலைமைப் பொருளும், உண்மையும், நித்தியத்துவமும் கொண்ட சிவ தலமும், நிறைந்த சுக வடிவும், எல்லாம் குறைவற நிறைந்த சிவமுமாம் பரம்பொருளைக் கண்டு கொண்டேன். எ.று.

வைதிக நூல்கள் பலவும் பரம்பொருளைப் பிரம்மம் என்றும், சிவாகமங்கள் யாவும் பரம்பொருளைப் பரசிவ மென்றும் கூறுவதால், "ஆரண முடிமேல் அமர் பிரமத்தை ஆகம முடி அமர் பரத்தை" என்று அறிவிக்கின்றார். தருக்க நூலாரும் விஞ்ஞானிகளும் பொருள்களைக் காரண காரிய முறையில் ஆராய்ந்து உண்மை காண்பவராதலால், மேலாய காரணப் பொருளாயும் காரியப் பொருளாயும், காரண காரியங்களுக்கு முதற் பொருளாயும் விளங்குவது பற்றி அவர்கள் நெறியில் நின்று, "காரண வரத்தைக் காரிய தரத்தைக் காரிய காரணக் கருவை" எனக் கட்டுரைக்கின்றார். எண்ணிறந்த அண்டங்களையும், அவற்றின் கண் நிறைந்துள்ள உலகங்களையும், அவ்வவ் வுலகப் பொருட்களையும் நிலை நின்று தாங்குதல் பற்றிச் சிவத்தை, "தாரண நிலை" எனவும், ஆன்ம தத்துவம் முதலாகச் சிவ தத்துவம் ஈறாக வுள்ள தத்துவந் தோறும் நிற்கும் தேவர்களுக் கெல்லாம் தலைவனாதல் பற்றிச் சிவனை, "தத்துவப் பதி" எனவும், சிவம் எழுந்தருளும் பேரிடம் உண்மையும் நித்தமும் உடையது என்றற்கு அதனை, "சத்திய நித்திய தலம்" எனவும் சாற்றுகின்றார். சிவம் பெற்ற ஆன்மாக்கள் குறையே இல்லாத நிறைந்த சுகத்தைப் பெற நல்கும் பெருநலத்தின் உருவாக உள்ளமை பற்றி, "பூரண சுகம்" என்றும், "பூரண சிவமாம் பொருள்" என்றும் புகன்றுரைக்கின்றார்.

இதனால், வேதங்களும், ஆகமங்களும், தருக்க வாத நூல்களும், தத்துவ நூல்களும் பரம்பொருளை யுரைக்கும் திறன்களை எடுத்துக் காட்டியவாறும். (17)

**3971.** **சுத்தவே தாந்த பிரமரா சியத்தைச்**
**சுத்தசித் தாந்தரா சியத்தைத்**
**தத்துவா தீதத் தனிப்பெரும் பொருளைச்**
**சமரச சத்தியப் பொருளைச்**
**சித்தெலாம் வல்ல சித்தைஎன் அறிவில்**
**தெளிந்தபே ரானந்தத் தெளிவை**
**வித்தமா வெளியைச் சுத்தசிற் சபையின்**
**மெய்ம்மையைக் கண்டுகொண் டேனே.**

**உரை :** தூய வேதாந்த நூல்கள் உரைக்கும் பிரமம் விளங்கும் பெருநிலையும், தூய சித்தாந்த நூல்கள் உரைக்கும் சிவ பதப் பொருளும், தத்துவங்கட் கெல்லாம் மேலாய் விளங்கும் ஒப்பற்ற தத்துவாதீதப்

பொருளும், பொருள்கள் அனைத்தையும் ஒப்ப நோக்கும் உயர் பொருளும், சித்துக்கள் எல்லாவற்றையும் செய்ய வல்ல சித்துப் பொருளும், என்னுடைய அறிவின்கண் தெளிந்த பேரின்பத் தெளிவாகிய பொருளும், சிவஞானப் பெருவெளியுமாய் விளங்குகின்ற தூய ஞான சபையின்கண் யாவரும் காண விளங்கும் மெய்ப் பொருளாகிய சிவத்தைக் கண்டு கொண்டேன். எ.று.

பிரமனுக்குத் தாமரை இடமாதல் போலப் பிரமப் பொருள் இருந்து திகழும் இடத்தை, "பிரம ராசியம்" எனவும், சித்தாந்த முடி பொருளாகிய சிவம் இருந்து திகழும் பரநிலையை, "சித்தாந்த ராசியம்" எனவும் செப்புகின்றார். ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவம் என மூவகைப்பட்டு முப்பத்தாறாக விரியும் தத்துவங்கட் கெல்லாம் மேலாய்த் தத்துவாதீதமாய் ஒப்பற்ற பெரும் பொருளாய் விளங்குவது பற்றி, "தத்துவாதீதத் தனிப் பெரும் பொருள்" என்றும், எண்ணிறந்த வகையினவாயினும் அவை யெல்லாவற்றுள்ளும் பொருண்மை என்ற வகையில் ஒப்ப நின்று நிலை பெறுவது பற்றிப் பரம்பொருளை, "சமரச சத்தியப் பொருள்" என்றும் உரைக்கின்றார். நுண்ணறிவால் கண்டறிந்து செய்யப்படும் செயல்கள் எல்லாவற்றினும் கலந்து அறிவுருவாய் விளங்குதல் பற்றி, "சித்தெலாம் வல்ல சித்து" எனவும், நுண்ணறிவால் நுணுகி ஆராயுமிடத்து அறிவுக்குத் தூய இன்பம் தருவது பற்றி "அறிவில் தெளிந்த பேரானந்தத் தெளிவு" எனவும், பரஞானத்திற்குப் பொருளாகும் பரவெளியை, "வித்த மாவெளி" எனவும், தூய சிவஞானப் பேரவையை, "சுத்த சிற்சபை" எனவும், அதன்கண் மெய் பெற நின்று ஆடல் புரிதலால், "சிற்சபையின் மெய்ம்மை" எனவும் இயம்புகின்றார்.

இதனால், வேதாந்த சித்தாந்த தத்துவாதீதப் பரம்பொருளின் அறிவானந்த சிற்சபையில் விளங்கும் மெய்ப்பொருளாம் தன்மையை விளக்கியவாறும். (18)

**3972.** **சமயமும் மதமும் கடந்ததோர் ஞான**
**சபைநடம் புரிகின்ற தனியைத்**
**தமைஅறிந் தவருட் சார்ந்தமெய்ச் சார்வைச்**
**சத்துவ நித்தசற் குருவை**
**அமையஎன் மனத்தைத் திருத்திநல் அருளார்**
**அமுதளித் தமர்ந்தஅற் புதத்தை**
**நிமலநிற் குணத்தைச் சிற்குண கார**
**நீதியைக் கண்டுகொண் டேனே.**

**உரை : சமயங்கள் கொள்கைகள் ஆகியவற்றின் எல்லையைக் கடந்த ஒப்பற்ற ஞான சபையில் நடம் புரிகின்ற தனிப் பொருளும், தம்மை யறிந்த ஞானிகளின் உள்ளத்தில் இடங் கொண்ட அவர்களுக்கு மெய்ம்மையான சார்பாகிய பரம்பொருளும், சத்துவ குண வடிவாய் நித்தமாய் உள்ள சற்குருவும், என் மனத்தை நன்னெறியில் அமையு மாறு திருத்தி நல்ல திருவருளாகிய அமுதத்தை யளித்தருளி என்னுள் அமர்ந்திருக்கின்ற அற்புதப் பொருளும், நிமலனும், நிர்க்குணத்தனும்,**

ஞான குணமே உருவாகக் கொண்ட நீதிமானுமாகிய சிவபெருமானைக் கண்டு கொண்டேன். எ.று.

சமயங்களும், சமயக் கொள்கைகளும் தம்மை மேற்கொண்டவர் களைத் தம்முடைய எல்லைக் குள்ளே அடக்கிச் சமரச ஞானத்தை விளைவியாது தடுத்தலின் பரம்பொருள் ஞானம் அவற்றைக் கடந்து விளங்குவது பற்றி, "சமயமும் மதமும் கடந்ததோர் ஞான சபை" எனவும், சமய மதாதீத நிலையில் நின்று ஞான நடம் புரிகின்ற பெருமானுதல் பற்றி, "ஞான சபை நடம் புரிகின்ற தனி" எனவும் எடுத்துரைக்கின்றார். தம்மை அறிந்தவர் அதுவே வாயிலாகத் தம்மை யுடைய தலைவனுகிய பெருமானை அறிந்து அவரையே நிலைத்த சார்பாக அடைதலால், "தமை யறிந்தவர் உட்சார்ந்த மெய்ச் சார்பு" என்றும், அந்த மெய்ந்நெறியைச் சத்துவ நித்த சற்குருவாய்ச் சிவன் உபதேசிக்கும் திறத்தைப் புலப் படுத்தற்கு, "சத்துவ நித்த சற்குரு" என்றும் உரைக்கின்றார். ஞான வுணர்வுக்கும் ஒழுக்கத்திற்கும் சத்துவ குணம் நிலைபெற அமைவது இன்றியமையாமையின், "சத்துவ நித்தம்" எனச் சற்குருவைச் சிறப்பிக் கின்றார். தூய்மையே வடிவாக அமைந்த தாம் எழுந்தருளும் உள்ளங் களும் தூயவாதல் வேண்டி அவற்றை முதற்கண் திருத்தித் தூய்மை செய்வது இறைவன் அருட் பண்பாதலின், "என் மனம் அமையத் திருத்தி நல்லருளார் அமுதளித்து அமர்ந்த அற்புதம்" எனக் கூறு கின்றார். "திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை யிடங்கொள் கயிலாயா" (பொது) என்று சுந்தரரும் உரைப்பது காண்க. நிமலன் - மலமில்லாதவன். நிர்க்குணம், மாயா காரியமாகிய குணங்கள் இல்லாதவனுதலால் "நிற்குணம்" என்றும், ஞானமே குணமும் உருவும் கொண்டவனுதலின், "சிற்குணாகாரம்" என்றும், நீதியே உருவாதல் பற்றி, "நீதி" என்றும் சிவ பரம்பொருளை எடுத்துரைக்கின்றார்.

இதனுல், சமயாதீத ஞான சபைத் தலைவனுய், சார்ந்தவர்க்கு மெய்ம்மையான சார்பாய் மனத்தைத் திருத்தி அருளமுதம் அளிக்கும் அற்புதப் பொருளாகும் தன்மையை விளக்கியவாறும். (19)

**3973. அளவைகள் அனைத்தும் கடந்துநின் றோங்கும்**
**அருட்பெருஞ் சோதியை உலகக்**
**களவைவிட் டவர்தங் கருத்துளே விளங்கும்**
**காட்சியைக் கருணையங் கடலை**
**உளவைஎன் றனக்கே உரைத்தெலாம் வல்ல**
**ஒளியையும் உதவிய ஒளியைக்**
**குளவயின் நிறைந்த குருசிவ பதியைக்**
**கோயிலில் கண்டுகொண் டேனே.**

**உரை :** பிரமாண வகைகள் எல்லாவற்றையும் கடந்து அப்பால் நின்று விளங்கும் அருட் சோதியாகிய இறைவனும், உலகியல் வாழ்வு பயக்கும் களவு முதலிய குற்றங்களைந்நீக்கின பெரியோர்களின் மனத்தின் கண் தோன்றித் திகழும் காட்சிப் பொருளும், கருணைக் கடலும், உண்மை ஞானத்தைப் பெறுதற்குரிய உபாய நெறியை எனக்கு அறிவுறுத்தி எல்லாவற்றையும் அறிய வல்ல ஞான வொளியை எனக்கு

உதவிய சிவ வொளிப் பொருளும், நெற்றியில் உள்ள இலாடத்தின்கண் நிறைந்து விளங்கும் சிவ குருவுமாகிய பெருமானைத் திருக்கோயிலில் கண்டு இன்புற்றேன். எ.று.

காட்சி, கருத்து, உரை முதலாக வுள்ள பிரமாணங்கள் அனைத்துக்கும் எட்டாமல் அவற்றை எல்லாம் கடந்து நின்று திகழும் சிறப்புடைமை பற்றி, "அளவைகள் அனைத்தும் கடந்து நின்றோங்கும் அருட் சோதி" எனவும், உலகியல் வாழ்வில் வாழ்வார்க்கு வந்தடையும் களவு, வஞ்சனை, பொய் முதலிய குற்றங்களைத் தம்மிடத்தே இல்லாதபடி போக்கிக் கொண்ட நல்லவர்களின் கருத்தின்கண் விளங்கத் தோன்றும் ஞானப் பொருளாதலின் இறைவனை, "உலகக் களவை விட்டவர்தம் கருக்துளே விளங்கும் காட்சி" எனவும் ஓதுகின்றார். மெய்ம்மை ஞானத்தைப் பெறுதற்குரிய உபாயங்களை ஆசிரியனாய் எழுந்தருளி உரைத்தருளி ஞான ஒளியைத் தந்தருளிய அருள் நலத்தை, "உளவை என்றனக்கே உரைத்து எல்லாம் வல்ல ஒளியையும் உதவிய ஒளி" என்றும், யோகக் காட்சியில் புலனாகும் சிவஞான குருபரனாதல் பற்றி, "குளவையின் நிறைந்த குரு சிவபதி" என்றும், அப்பெருமான் கோயிலில் எழுந்தருளக் கண்டு வழிபட்ட திறம் தெரிவிப்பாராய், "கோயிலில் கண்டு கொண்டேனே" என்றும் கூறுகின்றார்.

இதனால், சிவயோகத்தால் இலாடத்தே விளங்கக் கண்ட சிவபதி யாகிய பரம்பொருளைத் திருக்கோயிலில் கண்டு மகிழ்ந்தமை தெரிவித்த வாறும். (20)

**3974. சார்கலாந் தாதிச் சடாந்தமுங் கலந்த**
**சமரச சத்திய வெளியைச்**
**சோர்வெலாந் தவிர்த்தென் அறிவினுக் கறிவாய்த்**
**துலங்கிய ஜோதியைச் சோதிப்**
**பார்பெறுப் பதத்தைப் பதம்எலாங் கடந்த**
**பரமசன் மார்க்கமெய்ப் பதியைச்**
**சேர்குணந் தத்திற் சிறந்ததோர் தலைமைத்**
**தெய்வத்தைக் கண்டுகொண் டேனே.**

**உரை:** அறிவு நெறியைச் சார்ந்த கலாந்த முதலாக வுள்ள அந்தங்கள் ஆறினும் ஓரொப்பக் கலந்து விளங்கும் சமரச சத்திய ஞான வெளியும், எனக்கு அவ்வப்போது உளதாகிய மனச் சோர்வை நீக்கி என் அறிவுக் கறிவாய் விளங்கிய சோதிப் பொருளும், ஒளி உலகத் தாலும் பெறலாகாத உயர் பதங்கள் எல்லாவற்றையும் கடந்த மேலான சன்மார்க்க நெறிக்குரிய மெய்ம்மைத் தலைவனும், உயிர்களைச் சேர்ந் துள்ள குண தத்துவத்தின் அந்தத்தில் சிறந்து விளங்கும் தலைமைத் தெய்வமுமாகிய சிவபெருமானைக் கண்டு மகிழ்ந்தேன். எ.று.

கலாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என ஆறு வகைப்படுதலின், "கலாந்தாதிச் சடலம்" என்றும், இவை ஆறும் பொருட்களின் உண்மைத் தன்மையை யுணர்தற்கு உதவுவனவாதலின் இவற்றை, "சார் கலாந்தாதிச் சடலம்" என்று சிறப்பித்து இவற்றுள் வேற்றுமை நோக்காது ஓரொப்பச்

சமநிலையில் கலந்து விளங்குவது பற்றி, "சடாந்தமும் கலந்த சமரச சத்திய வெளி" என்றும் எடுத்தோதுகின்றார். உடலோடு கூடி உலகில் வாழும் உயிர்க்குச் சோர்வும், தளர்ச்சியும், மறதியும் இயல்பாதலின், அவை அறிவாராய்ச்சிக்குத் தடையாதலின் அவற்றைப் போக்கி அறிவுக் கறிவாய் அருளொளி நல்கி ஊக்குவது பற்றிச் சிவத்தை, "சோர்வெலாம் தவிர்த்தென் அறிவினுக் கறிவாய்த் துலங்கிய சோதி" எனவும், விண்ணுக்கு மேலுள்ள உலகங்கள் "சோதி உலகங்கள்" எனவும், அங்கு வாழும் தேவர்களும் பெற முடியாத சிவ பதத்தை யுடையனுதல் பற்றிச் சிவனை, "சோதிப் பார் பெருப் பதம்" எனவும், அதன் மேலுள்ள பிரமபதம் முதலாகிய பதங்கள் எல்லாவற்றிற்கும் மேலதாதலால் சிவ பதத்தை, "பதமெலாம் கடந்த மெய்ப் பதி" எனவும், அது சன்மார்க்க நெறியின் மெய்ம்மையான முடிவிடம் என்பாராய், "பரம சன்மார்க்க மெய்ப் பதி" எனவும் பாராட்டப்படுகின்றது. குணந்தம் - தெய்வங்கள் பலவும் குணங்கள் பலவற்றை யுடையவையா தலால் தெய்வாதீதமா யுள்ள சிவ பரம்பொருளை, "குணந்தத்திற் சிறந்ததோர் தலைமைத் தெய்வம்" என்று குறிக்கின்றார்.

இதனால், சமரச சத்திய வெளியாய், சன்மார்க்க மெய்ப் பதியாய், அறிவுக் கறிவாய் விளங்கும் தலைமைத் தெய்வமாகிய சிவத்தைக் கண்டு கொண்டமை தெரிவித்தவாறும். (21)

3975. அடிநடு முடியோர் அணுத்துணை யேனும்
அறிந்திடப் படாதமெய் அறிவைப்
படிமுதல் அண்டப் பரப்பெலாங் கடந்த
பதியிலே விளங்குமெய்ப் பதியைக்
கடியஎன் மனமுங் கல்லையும் கனியிற்
கடைக்கணித் தருளிய கருணைக்
கொடிவளர் இடத்துப் பெருந்தயா நிதியைக்
கோயிலில் கண்டுகொண் டேனே.

உரை: அடியென்றும் நடுவென்றும் முடியென்றும் ஓர் அணுவளவும் அறிதற்காகாத ஆனால் மெய்யறிவால் அறியப் படுவதாகிய மெய்ப் பொருளும், நிலம் முதல் அளவிறந்த அண்டங்கள் நிறைந்த அண்டப் பரப்புக்கள் எல்லாவற்றையும் கடந்து அப்பால் விளங்குகின்ற மெய்ம்மையான தலைவனும், கடிது என விலக்கத் தக்க என் மனமாகிய கல்லையும் கனி போல் மென்மை யுறுமாறு அருள் நோக்கம் செய்தருளிய கருணைக் கொடியாகிய உமாதேவியை இடப் பாகத்தே கொண்ட பெரிய தயாநிதியுமாகிய சிவனைத் திருக்கோயிலில் கண்டு மகிழ்ந்தேன். எ.று.

பரம்பொருள் உலகியல் அறிவாலும் நூலறிவாலும் இஃது ஆதி. இஃது நடுவிடம், இஃது அந்தம் என்று ஓர் அணுவளவும் அறிய முடியாத பொருளாயினும், மெய்யறிவு கொண்டு நோக்குவார்க்குத் தெளிய விளங்குதலின், "அடி நடு முடி ஓர் அணுத் துணையேனும் அறிந்திடப் படாத மெய்யறிவு" என்று இயம்புகின்றார். மணிவாசகரும், "ஆதியும் அந்தமுமில்லா அரும் பெருஞ் சோதி" (எம்பாவை) என்று கூறுவது

காண்க. நிலம் முதலாக அண்டங்கள் எண்ணிறந்தனவாதலின் அவை எல்லாவற்றையும் தனக்குள் அடக்கி யிருக்கின்ற பெருவெளி "அண்டப் பரப்பு" எனப்படுகிறது. அப்பரப்புக்கு அப்பால் நின்றருடுகின்ற பெருமானு தலால், "அண்டப் பரப்பெலாம் கடந்த பதியிலே விளங்கும் மெய்ப்பதி" என்று குறிக்கின்றார். "அண்டத் தண்டத்தின் அப்புறத்தாடும் அமுதன்" என்று பெரியோர் புகழ்ந்துரைப்பது காண்க. கடிதல் - விலக்குதல். கல்லையும் கனியாக்கும் அருட் டிறம் இறைவனுக்கே உரியதாகலின் அதனை, "கடிய என் மனனுங் கல்லையும் கனியிற் கடைக் கணித்தருளிய பெரிய தயாநிதி" எனப் பராவுகின்றார். அருட் சத்தியின் திருவுருவா தலால் உமாதேவியை, "கருணைக் கொடி" என்று புகழ்கின்றார்.

இதனால், உமாதேவியோடு கூடிய சிவபெருமானைத் திருக்கோயிலில் கண்டு மகிழ்ந்த திறம் உரைத்தவாறும். (22)

3976. பயமும்வன் கவலை இடர்முதல் அனைத்தும்
பற்றறத் தவிர்த்தருட் பரிசும்
நயமும்நற் றிருவும் உருவும்ஈங் கெனக்கு
நல்கிய நண்பைநன் னாத
இயமுற வெனது குளநடு நடஞ்செய்
எந்தையை என்னுயிர்க் குயிரைப்
புயனடு விளங்கும் புண்ணிய ஒளியைப்
பொற்புறக் கண்டுகொண் டேனே.

**உரை :** அச்சமும் பெருங் கவலையும் இடர்களும் முதலாக வுள்ள துன்பங்கள் அனைத்தையும் பற்றற நீக்கி யருளும் தன்மையும், நயமும் நல்ல செல்வமும் உருவும் இங்கே எனக்குத் தந்தருளிய நட்பையும், இனிய ஓசை யுண்டாக எனது புருவ நடுவில் நின்று கூத்தாடுகின்ற என் தந்தையும், என் உயிர்க் குயிரானவனும், நீர் மண்டலத்தின் இடையில் நின்று நிலவும் புண்ணிய ஒளியுமாகிய சிவனை அழகுறக் கண்டு கொண்டேன். எ.று.

அச்சம் - மிக்க மனக் கவலை. பிற துன்பங்கள் ஆகிய அனைத்தும் தமக்கு உண்டாகாதபடி விலக்கி அருட் பண்பும், நீதி யுணர்வும், நல்லது புரியும் செல்வமும், அழகிய மேனியும் தமக்கு இறைவன் தந்தருளிய சிறப்பை, "பய மும் வன்கவலை இடர் முதல் அனைத்தும் பற்றறத் தவிர்த்து அருட் பரிசும் நயமும் நற்றிருவும் உருவும் ஈங்கு எனக்கு நல்கிய நண்பு" என்று இறைவனைக் குறிக்கின்றார். புருவ நடு இங்கே குளநடு எனப்படுகிறது. குளம் - நெற்றி. அஃது இங்கே நெற்றியின் பகுதியாகிய புருவ நடுவைக் குறிக்கின்றது. நன்னாத இயம் - நல்ல நாதத்தைச் செய்யும் இசைக் கருவியின் ஓசை மேற்று. புருவ நடுவில் இறைவன் நடம் புரிவதைக் காணுமிடத்து இனிய இசைக் கருவி யோசை கேட்கப்படுகிறது என யோகியர் கூறுவது பற்றி, "நன்னாத இயமுற எனது குளநடு நடஞ் செய் எந்தை" என்று நவில் கின்றார். நீர் மண்டலத்தின்கண் இயல்பாக விளங்கும் தூய ஒளியைப் புண்ணிய ஒளி எனவும், அது சிவத்தின் கூறு எனவும் குறிப்பாராய், "புயல் நடு விளங்கும் புண்ணிய வொளி" என்று புகல்கின்றார்.

இதனால், புருவ நடுவின்கண் யோகக் காட்சிகளில் தோன்றும் இறைவனது திருநடனம் நல்ல மங்கல ஓசையுடன் நிலவும் வகை எடுத்துரைக்கப்பட்டவாறும். (23)

3977. கலைநிறை மதியைக் கனலைச்செங் கதிரைக்
ககனத்தைக் காற்றினை அமுதை
நிலைநிறை அடியை அடிமுடி தோற்றா
நின்மல நிற்குண நிறைவை
மலைவறும் உளத்தே வயங்குமெய் வாழ்வை
வரவுபோக் கற்றசின் மயத்தை
அலையறு கருணைத் தனிப்பெருங் கடலை
அன்பினிற் கண்டுகொண் டேனே.

உரை: கலை நிறைந்த முழு மதியாகவும், தீயாகவும், சிவந்த ஒளிக் கதிர்களையுடைய சூரியனாகவும், வானமாகவும், அமுதமாகவும், காற்றாகவும், நின்ற நிலையில் எங்கும் நிறைந்திருக்கும் திருவடியாகவும், அடி முடி காண மாட்டாத நின்மல நிற்குண நிறை பொருளாகிய சிவ பரம்பொருளும், மயக்கமில்லாத பெரியோர் உள்ளத்தின்கண் எழுந்தருளுகின்ற மெய் வாழ்வாகவும், போக்கு வரவு இல்லாத ஞான மயமாகவும், அலை யில்லாத ஒப்பற்ற பெரிய கருணைக் கடலாகவும் விளங்குகின்ற பெருமானுமாகிய பரமசிவனை அன்பு நிறைந்த என் உள்ளத்தோடு கண்டு மகிழ்ந்தேன். எ.று.

நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், உயிர் ஆகிய எட்டும் தனக்குருவாகக் கொண்டவனாதலால் சிவனை, "கலை நிறை மதி கனல் செங்கதிர் ககனம் காற்று" என்று கூறுகின்றார். சிந்திப்பார்க்குச் சிந்தையின்கண் அமுதம் சுரந்து இன்பம் செய்தலால், "அமுது" என்று போற்றுகின்றார். எங்கும் எல்லாப் பொருளிலும் இறைவன் திருவடி நிறைந்து நிற்கிறபடியால் அதனை யுடைய சிவபெருமானை, "நிலை நிறை அடி" என்று புகழ்கின்றார். அப்பெருமானுடைய அடியையும் முடியையும் யாவராலும் காண முடியாதென்பதோடு அப்பெருமானும் நின்மலனாக வும், நிற்குணனாகவும், நிறை பொருளாகவும் விளங்குவது புலப்பட, "அடி முடி தோற்றா நின்மல நிற்குண நிறைவு" என்று பாராட்டுகின்றார். மலைவு - ஐய விபரீதங்கட்கு ஏதுவாகும் மயக்கம். மலைவில்லாத சான்றோர்களின் உள்ளத்தின்கண் நிலைபெற நின்று விளங்குவது பற்றி இறைவனை, "மலைவறும் உளத்தே வயங்கு மெய் வாழ்வு" என விளம்பு கின்றார். பிறப்பிறப் பில்லாத ஞானிப் பரம்பொருளாதல் பற்றி, "வரவு போக்கற்ற சின்மயம்" என்று செப்புகின்றார். உலகியற் கடல் போல அலை காற்றால் அலைக்கப் படுவதில்லாத தனிப் பெருங்கருணைக் கடலாதல் விளங்க, "அலையறு கருணைத் தனிப் பெருங் கடல்" எனக் கூறுகின்றார்.

இதனால் இறைவனது அட்ட மூர்த்தம் காட்டப்பட்டவாறும். (24)

3978. மும்மையை எல்லாம் உடையபேர் அரசை
முழுதொருங் குணர்த்திய உணர்வை
வெம்மையைத் தவிர்த்திங் கெனக்கருள் அமுதம்
வியப்புற அளித்தமெய் வினைவைச்

**செம்மையை எல்லாச் சித்தியும் என்பால்**
**சேர்ந்திடப் புரிஅருட் டிறத்தை**
**அம்மையைக் கருணை அப்பனை என்பேர்**
**அன்பனைக் கண்டுகொண் டேனே.**

உரை: இம்மையும், மறுமையும், அம்மையும் என்ற மும்மையும் தன் வடிவாக யுடையவனும், எல்லாவற்றையும் தனக்கு உடைமை யாகக் கொண்ட பேரரசனும், எல்லாவற்றையும் எஞ்சாமல் பிறர்க்கு உணர்த்தும் முற்றுணர்வாகியவனும், பிறவி வெப்பத்தைப் போக்கி இம்மையிலே எனக்கு வேண்டிய திருவருள் ஞான வமுதத்தை யானே வியக்கும் வண்ணம் நல்கும் மெய்ஞ்ஞான விளைவாகியவனும், செம்மை யுருவாகியவனும், எல்லாச் சித்திகளும் எனக்கு உண்டாகுமாறு அருளினவனும், எனக்கு அம்மையும், கருணை நிறைந்த அப்பனும், பேரன்பனுமாகிய சிவபெருமானைக் கண்டு கொண்டேன். எ.று.

இம்மை வாழ்வு, மறுமை வாழ்வு, முத்தி வாழ்வு ஆகிய மூன்றும் இறைவன் மயமாதல் பற்றி அவனை, "மும்மை" என்று கூறுகின்றார். பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூவரையும் தன் கூறாக உடையவனாதல் பற்றி இவ்வாறு கூறினார் எனினும் அமையும். "செழும் பொழில்கள் பயந்து காத்தளிக்கும் மற்றை மூவர் கோனாய் நின்ற முதல்வன் மூர்த்தி" (சதகம்) என்று மணிவாசகப் பெருமான் உரைப்பது காண்க. தன் ஆட்சிக்குட்பட்ட நாடு முழுதையும் தன்னுடையதாகக் கொண்ட அரசனைப் போல உலகங்கள் எல்லாவற்றையும் தனக்கு உடைமையாகக் கொண்டவன் என்பது பற்றிச் சிவனை, "பேரரசு" என்று உரைக்கின்றார். முற்றுணர்வுடைய முதல்வனாதலால் அவன் தன்னை யடைந்தார்க்கு யாவற்றையும் குறைவற ஒருங்குணர்த்தும் ஞானப் பொருளாதல் பற்றி, "முழுது ஒருங்குணர்த்திய உணர்வு" என்று மொழிகின்றார். பிறப்பிறப்புக்களால் ஆன்மாவிற்கு உண்டாகும் வெப்பத்தைப் போக்கிக் குளிர்ந்த திருவருளாகிய அமுதத்தை அவரது மெய்யன்பின் விளைவாக நல்குதல் தோன்ற, "வெம்மையைத் தவிர்த்திங்கு எனக்கு அருள் அமுதம் வியப்புற அளித்த மெய் விளைவு" என விளம்புகின்றார். அவனைச் செம்பொருளென உயர்ந்தோர் அனைவரும் உரைப்பதால், "செம்மை" என்று சிறப்பிக்கின்றார். எண்வகைச் சித்திகளையும் செய்ய வல்ல பேராற்றலை இறைவன் தமக்கு அருளி யுள்ளான் என்பாராய், "எல்லாச் சித்தியும் என்பால் சேர்ந்திடப் புரியருள் திறம்" என அறிவிக்கின்றார். உலகுயிர்கட்கு இறைவனை அம்மை யப்பன் என்பது பற்றி, "அம்மையைக் கருணை அப்பனை என் பேரன்பனைக் கண்டு கொண்டேன்" என வுரைக்கின்றார்.

இதனால், மும்மையாகவும், செம்மையாகவும், அம்மையப்பனாகவும் சிவ பெருமான் விளங்கும் திறம் தெரிவித்தவாறாம். (25)

**3979. கருத்தனை எனது கண்அனை யவனைக்**
**கருணையார் அமுதெனக் களித்த**
**ஒருத்தனை என்னை உடையநா யகனை**
**உண்மைவே தாகம முடியின்**

அருத்தனை வரனை அபயனைத் திருச்சிற்
றம்பலத் தருள்நடம் புரியும்
நிருத்தனை எனது நேயனை ஞான
நிலையனைக் கண்டுகொண் டேனே.

உரை : எனக்குத் தலைவனும், என்னுடைய கண் போன்றவனும், திருவருளாகிய ஞான வமுதத்தை எனக்கு அளித்த ஒப்பற்றவனும், என்னை அடிமையாக யுடைய நாயகனும், வேதாகமங்களின் முடிபாகிய உண்மையான பொருளாகியவனும், வரம் தருபவனும், அபய மளிப்பவனும், திருச்சிற்றம்பலத்தின்கண் அருள் நடம் புரியும் கூத்தப் பெருமானும், எனக்கு நேயனும், சிவஞான நிலையை யுடையவனுமாகிய சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்தேன். எ.று.

கருத்தன் - தலைவன்; கருத்தின்கண் இருப்பவன் என்று கூறினும் பொருந்தும். அவனது கருணையாகிய திருவருள் ஞான வமுதமாக அமைந்ததாதலின் அதனை, "கருணை ஆரமுது" எனவும், அதனை யளிக்க வல்லவர் வேறு எவரும் இல்லாமை தோன்ற, "அமுது எனக் களித்த ஒருத்தன்" எனவும் உரைக்கின்றார். தமக்கும் இறைவனுக்கும் தொடர்பு கூறுவாராய், "என்னை யுடைய நாயகன்" என்று இயம்பு கின்றார். வேதம், ஆகமம் என்ற இவற்றின் முடிபு சிவத்தின் பரம்பொருளாம் தன்மையை எடுத்தோதுவதாகலின் அதனை விளக்குதற்கு, "வேதாகம முடியின் உண்மை யருத்தன்" எனத் தெரிவிக்கின்றார். அருத்தம் - பொருள். பொருளாக இருப்பவனாதல் தோன்ற, "அருத்தன்" என அறிவிக்கின்றார். நிருத்தன் - கூத்தப் பெருமான். நேயன் - நண்பன். ஞான நிலையன் - ஞானப் பொருளாகியவன் எனினும் பொருந்தும். ஞானத்தால் உணரப்படுவது நேயம் எனப்படும் என அறிக. ஞானத்தால் பரம்பொருளை யுணரும் ஞானிகள் எய்தும் நிலையினை யுடையவன் என்பது பற்றி, "ஞான நிலையன்" என்று கூறுகின்றார்.

இதனால், வேதாகமங்களின் உண்மைப் பொருள் சிவனே எனவும், அவண் ஞான நிலையினை யுடையவன் எனவும் விளக்கியவாறும். (26)

3980. வித்தெலாம் அளித்த விமலனை எல்லா
விளைவையும் விளைக்கவல் லவனை
அத்தெலாங் காட்டும் அரும்பெறல் மணியை
ஆனந்தக் கூத்தனை அரசைச்
சத்தெலாம் ஆன சயம்புவை ஞான
சபைத்தனித் தலைவனைத் தவனைச்
சித்தெலாம் வல்ல சித்தனை ஒன்றாந்
தெய்வத்தைக் கண்டுகொண் டேனே.

உரை : எல்லாவற்றுக்கும் வித்தாய் நின்று அருள் புரிகின்ற விமலனும், எல்லாக் காரியப் பொருட்கும் உரிய இயல்புகளை விளக்க வல்லவனும், பொருள் வகை எல்லாவற்றையும் முற்றக் காட்டுகின்ற பெறுதற்கரிய மணி போல்பவனும், ஆன்மாக் கட்கு இன்பம் தருகின்ற

கூத்தினை ஆடுபவனும், அருளரசனும், சத்தாகிய பொருட்கெலாம் முதற் பொருளான சிவனும், ஞான சபைக்குரிய ஒப்பற்ற தலைவனும், தவ வடிவானவனும், சித்துக்கள் எல்லாவற்றையும் தர வல்ல சித்தனும், ஒன்றாகிய பெருந் தெய்வமுமாகிய சிவ பரம்பொருளைக் கண்டு மகிழ்ந்தேன். எ.று.

வித்து - முதற் காரணம். எண்ணிறந்த பலவாகிய பொருள்களுக் கெல்லாம் முதற் காரணமாய் நின்று காரியப் பாட்டின்கண் விரிந்து நிலவுமாறு அருள் புரிதல் பற்றி, "வித்தெலாம் அளித்த விமலன்" என விளம்புகின்றார். விமலன் - மலமில்லாதவன். காரியமாகிய உலக நிகழ்ச்சிகள் எல்லாவற்றிலும் அமைந்த காரிய விளைவைக் கருவி, காலம், இடம் முதலிய கூறுகளைக் காட்டி விளக்க வல்லவன் என்பது பற்றி, "எல்லா விளைவையும் விளக்க வல்லவன்" என்று கூறுகின்றார். ஒரு பொருளின் விளைவுக்குரிய நிலம் காலம் முதலிய எட்டுக் கூறுகள் உண்டெனக் காட்டுவதாய், "வினையே செய்வது செயப்படு பொருளே நிலனே காலம் கருவி என்று இன்னதற்கு இது பயனாக எட்டென்ப தொழில் முதல் நிலையே" என்று தொல்காப்பியம் கூறுவது காண்க. அத்து - பொருள். அத்தம் - ஈறு குறைந்து அத்து என வந்தது. உயரிய பொருள் வகைகளை ஈடு எடுப்புக்களால் வரையறுத்துக் காட்டும் வைரமணி போல்பவன் என்றற்கு, "அத்தெலாம் காட்டும் மணி" எனவும், அதன் அருமை புலப்பட, "அரும் பெறல் மணி" எனவும் சிறப்பிக்கின்றார். ஆன்மாக்கட்கு இன்பம் உளதாதற் பொருட்டு ஆடல் புரிகின்றாதலால் சிவனை, "ஆனந்தக் கூத்தன்" என்று புகழ்கின்றார். "ஆனந்த மயமாய் நின்று ஆடும் பிரான்" என்று பெரியோர் கூறுதலால் இவ்வாறு கூறுகின்றார் எனினும் அமையும். சயம்பு - சிவன். சத்தாய பொருட்களுக் கெல்லாம் உரிய சத்தாந் தன்மை முழுதும் தானேயாகிய தனிப் பரமூர்த்தியாதலால், "சத்தெலாம் ஆன சயம்பு" என்று சாற்றுகின்றார். சயம்பு - சுயம்பு எனவும் வழங்கும். தவன் - தவத்தை யுடையவன். செய்யப்படும் தவங்கட்கெல்லாம் தனிப் பயனாக விளங்குதல் பற்றி, "தவன்" என்று சிறப்பிக்கின்றார். சித்தன் - சித்து வகைகள் எல்லாவற்றையும் புரியும் தெய்வம். தன்னின் வேறாகப் பெரிய தெய்வம் ஒன்றும் இல்லாதவன் என்பது பற்றி, "ஒன்றாம் தெய்வம்" என இசைக்கின்றார். "யாதோர் தேவர் எனப்படுவார்க் கெலாம் மாதேவன்னலால் தேவர் மற்றில்லையே" (ஆதிபுரா) என்று திருநாவுக்கரசர் தெளிவாக உரைப்பது காண்க.

இதனால், சிவ பரம்பொருள் சத்தெலாம் ஆன சயம்புவாய் ஞான சபைத் தலைவனாய் விளங்கும் திறம் உரைத்தவாறும். (27)

**3981. உத்தர ஞான சித்திமா புரத்தின்**
**ஓங்கிய ஒருபெரும் பதியை**
**உத்தர ஞான சிதம்பர ஒளியை**
**உண்மையை ஒருதனி உணர்வை**
**உத்தர ஞான நடம்புரி கின்ற**
**ஒருவனை உலகெலாம் வழுத்தும்**
**உத்தர ஞான சுத்தசன் மார்க்கம்**
**ஓதியைக் கண்டுகொண் டேனே.**

**உரை :** உத்தர ஞான சித்திபுரம் எனப்படும் வடலூரின்கண் எழுந்தருளும் ஒப்பற்ற பெரிய தலைவனும், அவ்வூரின்கண் அமைந்துள்ள உத்தர ஞான சிதம்பரத்தின்கண் விளங்குகின்ற பரவொளியாகியவனும், உண்மைப் பொருளாயவனும், ஒப்பின்றித் தனித்தோங்கும் உணர்வாகியவனும், மேலான ஞான நடம் புரிகின்ற ஒருவனும், உலகமெல்லாம் புகழ்கின்ற உயரிய ஞான நெறியாகிய சுத்த சன்மார்க்கத்தை ஓதியருளுபவனுமாகிய சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்தேன். எ.று.

தில்லையம்பதியாகிய சிதம்பரத்திற்கு வட மேற்கில் உளதாதல் பற்றி வடலூர்க்கு, "உத்தர ஞான சித்திபுரம்" என்றும், அவ்வூர்க்கண் அமைந்துள்ள ஞான சபைக்கு, "உத்தர ஞான சிதம்பரம்" என்றும் சிறப்பாகப் பெயர் கூறுவதுமுண்டு. அது பற்றி அவ்வூர்க்கண் எழுந்தருளுவதால், "சித்திமா புரத்தின் ஓங்கிய ஒரு பெரும் பதி" எனவும், வடலூரைத் தனக்குரிய பதியாகக் கொண்டு அங்கே எழுந்தருளும் நலம் விளங்க, "பெரும் பதி" எனவும் குறிக்கின்றார். பதியை யுடையவனைப் "பதி" என்பதும் நூல்வழக்கு. அவ்வூர்க்கண் தமக்குச் சிவஞானம் சித்தியுற்றமை காரணமாக வடலூர் வள்ளல் அவ்வூரை, "உத்தர ஞான சித்திபுரம்" எனப் பெயரிட்டுச் சிறப்பிக்கின்றார். சித்திபுரம் என்பது "உலோக மாபாலன்" (சீவக) என்றாற் போலச் சித்தி மாபுரம் என வந்தது. வலூடரில் உள்ள ஞான சபையும் "உத்தர ஞான சிதம்பரம்" என்று வள்ளற் பெருமானால் குறிக்கப்படுகின்றது. அதன்கண் ஒளிப் பொருளாய் விளங்கும் சிவனை, "உத்தர ஞான சிதம்பர ஒளி" என்று உரைக்கின்றார். அச்சிதம்பர ஒளியைத் தரிசிப்பார்க்கு உளதாகும் சிவஞான உணர்ச்சியை, "ஒரு தனி உணர்வு" என ஓதுகின்றார். ஞான நடம் புரியும் தேவர் பிறர் இல்லாமை விளக்குதற்கு, "உத்தர ஞான நடம் புரிகின்ற ஒருவன்" என்று மொழிகின்றார். வடலூர் வள்ளல் மேற்கொண்டு உரைக்கின்ற சுத்த சன்மார்க்கத்தை நல்லறிஞர் பலரும் நல்லதெனக் கொண்டு பாராட்டினமையின், "உலகெலாம் வழுத்தும் உத்தர ஞான சுத்த சன்மார்க்கம்" எனப் புகழ்ந்தும், அதனைத் தமக்குள் இருந்து இறைவன் உணர்த்தினான் என்பது புலப்பட, "ஓதி" என்றும் உரைக்கின்றார். ஓதி - ஓதுபவன்.

இதனால், வடலூர்க்கண் ஒளி யுருவாய் ஞான நடம் புரிகின்ற கூத்தப் பெருமான் தமக்குச் சுத்த சன்மார்க்க ஞானம் வழங்கிய திறத்தை வடலூர் வள்ளல் எடுத்தோதியவாறும். (28)

3982. புலைகொலை தவிர்த்த நெறியிலே என்னைப்
புணர்த்திய புனிதனை எல்லா
நிலைகளும் காட்டி அருட்பெரு நிலையில்
நிறுத்திய நிமலனை எனக்கு
மலைவறத் தெளிந்த அமுதளித் தழியா
வாழ்க்கையில் வாழவைத் தவனைத்
தலைவனை ஈன்ற தாயைஎன் உரிமைத்
தந்தையைக் கண்டுகொண் டேனே.

**உரை :** புலால் உண்டல், உயிர்க் கொலை புரிதல் முதலிய குற்றங்களை நீக்கி நன்னெறியின்கண் என்னைச் செலுத்திய புனிதனும்,

உயிர்கள் எய்தக் கூடிய நிலைகள் எல்லாவற்றையும் காட்டித் திருவருள் ஞானத்தால் பெறும் பெரிய நிலையில் என்னை நிறுத்திய நிமலனும், எனக்கு மயக்கமறத் தெளிந்த ஞானத்தை நல்கி அழியாத இன்ப வாழ்வில் என்னை வாழ்வித்த பெருமானும், எனக்குத் தலைவனும், என்னைப் பெற்ற தாயும் என்னுடைய உரிமைத் தந்தையுமாகிய சிவபெருமானைக் கண்ணால் கண்டு களித்தேன். எ.று.

புலையும் கொலையும் தீநெறிகளாதலால் அவற்றினின்றும் தம்மை விலக்கி அருள் நெறியில் தம்மைச் செலுத்திய திறம் விளங்க, "புலை கொலை தவிர்த்த நெறியிலே என்னைப் புணர்த்திய புனிதன்" என்று புகல்கின்றார். உயிர்கள் செய்யும் நல்வினைகளுக் கேற்ப மறுமையில் இந்திர பதம் முதலிய பதங்களும், சாலோகம் முதலிய பதங்களும் எய்தும் என நூலோர் கூறுதலால், அவற்றின் இயல்புகளைத் தமக்கு விளங்கக் காட்டிப் பின்னர் சுத்த சன்மார்க்க நெறியால் எய்தப் பெறும் திருவருள் ஞானப் பெருநெறியை மேற்கொண்டு அது நல்கும் சிவநெறியில் தம்மை நிறுத்தினமை பற்றி, "எல்லா நிலைகளும் காட்டி அருட் பெரு நிலையில் நிறுத்திய நிமலன்" என்று கூறுகின்றார். காம வெகுளிகள் போல முற்றவும் நீக்கவியலாத மயக்கத்தைத் தம்மிலிருந்து பற்றற நீக்கி மனவுணர்வு தெளிவு பெறச் சிவஞானமாகிய அமுதத்தை நல்கி அழியாத ஞான இன்பம் நிறைந்த வாழ்வில் வாழ வைத்த சிறப்புணர்த்தற்கு, "மலைவறத் தெளிந்த அமுதளித்து அழியா வாழ்க்கையில் வாழ வைத்தவன்" என மொழிகின்றார். தனக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பை விளக்குதற்குத் தலைவனும், ஈன்ற தாயும், உரிமைத் தந்தையுமாய் இலங்கும் சிவனைக் "கண்டு கொண்டேன்" எனக் களிப்புடன் கூறுகின்றார்.

இதனால், இறைவன் தமக்குத் தெளிந்த ஞான அமுதளித்து அழியா இன்ப வாழ்க்கையில் வாழ வைத்த நலம் தெரிவித்தவாறும். (29)

3983. பனிஇடர் பயந்தீர்த் தெனக்கமு தளித்த
பரமனை என்னுளே பழுத்த
கனிஅனை யவனை அருட்பெருஞ் சோதிக்
கடவுளைக் கண்ணினுள் மணியைப்
புனிதனை எல்லாம் வல்லஒர் ஞானப்
பொருள்எனக் களித்தமெய்ப் பொருளைத்
தனியனை ஈன்ற தாயைஎன் உரிமைத்
தந்தையைக் கண்டுகொண் டேனே.

உரை : பனி, மழை, வெயில் முதலியவற்றால் உண்டாகும் துன்பங்களால் எய்தும் அச்சத்தைப் போக்கி எனக்கு ஞானமாகிய அமுதை நல்கிய பரமனும், என் உள்ளத்திலே பழுத்து முதிர்ந்த கனி போல்பவனும், அருட்பெருஞ் சோதியை யுடைய கடவுளும், என் கண்ணிலுள்ள மணி போல்பவனும் புனிதனும், எல்லாம் வல்ல ஒப்பற்ற சிவஞானமாகிய பொருளை எனக்குத் தந்தருளிய மெய்ப்பொருளும், தனியவனாகிய என்னை ஈன்ற தாயும், என் உரிமைத் தந்தையுமாகிய சிவபரம்பொருளைக் கண்டு கொண்டேன். எ.று.

குளிரால் உள்ளத்தையும் உடம்பையும் நடுக்கஞ் செய்யும் பனியை எடுத்து மொழிந்தமையின் இனம் பற்றி, இடர் செய்யும் மழையும், வெயிலும், காற்றும், இடியும் பிறவும் கொள்ளப்படும். இவற்ருல் உயிர்கட்கு அச்சம் தோன்றி அறிவை மயக்குதலின், "பனி இடர் பயம் தீர்த்து" எனவும், அதன் மேல் ஞானம் அருளிய குறிப்பை, "எனக்கு அமுது அளித்த பரமன்" எனவும் இயம்புகின்ருர். பலகாலும் நினைந்து நினைந்து சிவனருளால் அமுது சுரக்கப் பெற்று இன்புற்றமை தோன்ற இறைவனை, "என்னுளே பழுத்த கனி யனையவன்" என்றும், அருட் பெருஞ் சோதியைத் தனக்கு உடைமையாகக் கொண்டது சிவமாகிய தனிப் பெருங் கடல் என்பதனுல், "அருட் பெருஞ் சோதிக் கடவுளை" எனவும் எடுத்தோதுகின்ருர். சிவபெருமான் தனக்கு வழங்கி யருளிய மெய்ம்மை ஞானத்தின் பெருமை விளங்குதற்பொருட்டு, "எல்லாம் வல்ல ஓர் ஞானப் பொருள்" என்றும், அதனைத் தரவல்லது "மெய்ப் பொருளே" என்றும் இயம்புகின்ருர்.

இதனுல், அச்சம் தீர்த்து ஞானப் பொருள் அளித்துச் சிறப்பித்த சிவமாகிய மெய்ப்பொருளின் இயல்பு கூறியவாறும். (30)

திருச்சிற்றம்பலம்

# 47. உளம் புகுந்த திறம் வியத்தல்

அஃதாவது, சிவபெருமான் திருவடிகளின் சிறப்புக்களை எடுத்தோதி அப்பெருமான் தமது மனமாகிய குடிசைக்குள் எழுந்தருளிய நலத்தை வியந்து புகழ்வதாகும்.

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**3984.** **வானிருக்கும் பிரமர்களும் நாரணரும் பிறரும்**
**மாதவம்பன் னாட்புரிந்து மணிமாட நடுவே**
**தேனிருக்கும் மலரணைமேல் பளிக்கறையி னூடே**
**திருவடிசேர்த் தருள்கஎனச் செப்பிவருந் திடவும்**
**நானிருக்கும் குடிசையிலே வலிந்துநுழைந் தெனக்கே**
**நல்லதிரு அருளமுதம் நல்கியதன் றியும்என்**
**ஊனிருக்கும் குடிசையிலும் உவந்துநுழைந் தடியேன்**
**உள்ளமெனும் சிறுகுடிசை உள்ளும்நுழைந் தனையே.**

**உரை :** மேலுலகில் இருக்கும் பிரமன், நாரணன் முதலிய தேவர்களும், மற்றவர்களும் பல்லாண்டுகள் பெரிய தவம் செய்து இறைவன் எழுந்தருளும் மணிகள் இழைத்த நெடிய வானத்தின் நடுவில் அமைந்த பளிங்குப் பாறை மேல் பரப்பிய தேன் பொருந்திய மலர்கள் நிறைந்த அணை மேல் இருந்தருளும் திருவடிக்கண் எம்மைச் சேர்த்தருள்க எனத் துதித்து வருந்தவும், நான் இருக்கும் குடிசை வீட்டிற்குத் தானே வலிய வந்து உள்ளே நுழைந்து எளியனாகிய எனக்கு நல்ல திருவருள் ஞானமாகிய அமுதத்தைத் தந்தருளியதோடு என் தசையோடு கூடிய உடம்பாகிய குடிசைக்குள் மனமுவந்து நுழைந்து அடியேனுடைய இல்ல மென்னும் சிறு குடிசைக்குள்ளும் போந்தருளினாய்; நினது இவ்வருட் செயலை என்னென்று புகழ்வேன். எ.று.

வானுலகத்திலும் அதற்கப்பால் மேலுள்ள சத்திய பதம், வைகுந்த பதம் முதலிய இடங்களில் வாழும் பிரமர்களும், நாரணர்களும் பிற உயர் பதமாகிய உருத்திர பதம் முதலியவற்றைப் பெற்றிருக்கும் தேவர்களும் நெடுங்காலம் பெரிய பெரிய தவங்களைச் செய்து சிவலோகத்தில் வீற்றிருக்கும் பெருமானாகிய சிவனுடைய சிவமாநகரை யடைந்து அங்குள்ள மணிமாடம் பொருந்திய மாளிகையின் நடுவிடத்தே அமைந்த பளிங்கு மேடை மேல் சிவபிரான் எழுந்தருளும் சிறப்பை, "வானிருக்கும் பிரமர்களும் நாரணரும் பிறரும் மாதவம் பன்னாட் புரிந்து மணிமாட நடுவே தேன் இருக்கும் மலரணை மேல் பளிக்கறையினூடே

திருவடி'' என்று புனைந்துரைக்கின்றார். மணிமாட நடுவே பளிக்கறையினூடே தேனிருக்கும் மலரணை மேல் இருந்தருளும் திருவடி என வேண்டும் சொற்களைப் பெய்து இயைத்துக் கொள்க. பிரமன் நாரணன் முதலிய பதம் பெற்ற தேவர்கள் மிகப் பலராதலால் அவர்களை, "வானிருக்கும் பிரமர்களும் நாரணர்களும்'' எனக் குறிக்கின்றார். திருநாவுக்கரசரும், "நூறு கோடி பிரமர்கள் நுங்கினார் ஆறு கோடி நாராயணர் அங்கனே ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர்'' என வுரைப்பது காண்க. அவர்களும் நெடுங்காலம் பெருந்தவம் புரிந்தே சிவ பரம்பொருளைக் காண்டல் கூடுமெனச் சிவனது அருமையைத் தெரிவித்தற்கு, "மாதவம் பன்னாட் புரிந்து'' என்று கூறுகின்றார். சிவலோகத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளும் சிவமாநகர்க்கண் அவனது திருக்கோயில் இருப்பது தோன்ற, "மணிமாட நடுவே'' எனவும், அதன் நடுவே பளிங்கு மேடையமைத்து அதன் மேல் புது மலர்கள் பரப்பிய அணையில் அவன் இருந்தருளும் காட்சியைப் புனைந்துரைத்து மகிழ்கின்றார். தேன் நிறைந்த புது மலர்கள் பரப்பிய இருக்கை என்பது விளங்க, "தேனிருக்கும் மலரணை'' என்று சிறப்பிக் கின்றார். அந்தச் செல்வ இருக்கையை அடைந்து அங்குள்ள ஞான நிலையமாகிய திருவடிகளில் சேர்த்துக் கொள்ளுமாறு விண்ணப்பிக்கும் திறம் புலப்பட, "திருவடி சேர்த்தருளுக எனச் செப்பி வருந்திடவும்'' என்று தெரிவிக்கின்றார். இங்ஙனம் - இவ்வாறு. பிரமன் முதலியோர்கள் பன்னாள் தவஞ் செய்து சிவலோகத்தை அடைந்து சிவமாநகர்க்கண் உள்ள மணிமாடத்தை அடைந்து அதன் நடுவே பளிங்கு மேடை மேல் திருவடி பொருந்த வீற்றிருக்கும் காட்சியை எடுத்தோதி, அவ்விடத்தே தேவர்கள் தம்மையும் அப்பெருமானுடைய திருவடியைச் சேர்த்து மகிழ்விக்குமாறு வேண்டுவதைக் கூறுதல் காண்க. இவ்வண்ணம் தேவர்களுக்கும் பெறலரியவாகிய திருவடிகள் வருந்தத் தமக்குக் காட்சி தந்தருளிய நலத்தை எடுத்தோதுவாராய், "நானிருக்கும் குடிசையிலே வலிந்து நுழைந்து'' எனவும், வலிய நுழைந்த பெருமான் வெறிது மில்லாது திருவருள் ஞானமாகிய உயர்ந்த அமுதத்தை வழங்கியது சொல்வாராய், "நானிருக்கும் குடிசையிலே வலிந்து நுழைந்து எனக்கு நல்ல திருவருள் அமுதம் நல்கியது'' எனவும் உரைக்கின்றார். மண்ணுலகில் தாம் இருக்குமிடம் ஒரு சிறு குடிசையாயினும் அதனை இகழாமல் வலிய நுழைந்தமை பற்றி, "நானிருக்கும் குடிசையிலே வலிந்து நுழைந்து'' எனத் தெரிவிக்கின்றார். வலிந்து - செய வென்னும் வினை யெச்சத் திரிபு. வலிய நுழைந்த பெருமான் வெறுங் கையொடு வாராது திருவருளாகிய நன்ஞானத்தை நல்கிய நலத்தை, "நல்ல திருவருளமுதம் நல்கியது'' என்றும், அதனொடு அமையாது தமது உடலுக்குள் நுழைந்து அதனுள் இருக்கும் மனத்தின்கண் இடங் கொண்டமை தோன்ற, "அன்றியும் என் ஊனிருக்கும் குடிசையிலும் உவந்து நுழைந்து அடியேன் உள்ளமெனும் சிறு குடிசை யுள்ளும் நுழைந்தனையே'' என்றும் எடுத்துரைத்து வியக்கின்றார். திருவருளாகிய அமுதம் என்பது திருவருட் சிவஞானம். ஊன் பொருந்திய தமது உடம்பைக் குடிசை என உருவகம் செய்கின்றாராதலால் அதனை, "ஊனிருக்கும் குடிசை'' எனவும், அதன்கண் தூயராகிய சிவ பரம்பொருள் விரும்பி நுழைந்தருளினமை பற்றி, "உவந்து நுழைந்து'' எனவும், அதன் உள்ளிருக்கும் மனத்தை உள்ளமெனும் சிறு குடிசை

என்று கூறி அதனுள் இறைவன் வீற்றிருந்தமையைப் புலப்படுத்தற்கு, "உள்ளமெனும் சிறு குடிசை யுள்ளும் நுழைந்தனையே" எனவும் எடுத்தோதுகின்றார். சிவமணம் கமழும் செம்பொருளாகிய தான் ஊன் கலந்து புலால் நாறும் தம் உடம்பிற்குள் உள்ளாக இருக்கும் உள்ளத்தின்கண் வீற்றிருந்தருளுவதை, "உவந்து நுழைந்து" என்றும், "உள்ளும் நுழைந்தனையே" என்றும் உரைக்கின்றார்.

இதனால், சிவபெருமான் தமது உடலுள், உள்ளத்தின்கண் நுழைந்து வீற்றிருந்தருளும் அருள் நலத்தைப் புகழ்ந்தவாறும். (1)

**3985.** படிசெய்பிர மன்முதலோர் பற்பலநாள் வருந்திப்
பன்மணிகள் ஒளிவிளங்கப் பதித்தசிங்கா தனத்தே
அடிசெய்தெழுந் தருளிஎமை ஆண்டருளல் வேண்டும்
அரசேஎன் றவரவரும் ஆங்காங்கே வருந்த
வடிசெய்மறை முடிநடுவே மன்றகத்தே நடிக்கும்
மலரடிகள் சிவப்பஒரு வளமும்இலா அசுத்தக்
குடிசைநுழைந் தனையேஎன் றேசுவரே அன்பர்
கூசாமல் என்னுளமாம் குடிசைநுழைந் தனையே.

உரை : உலகைப் படைக்கின்ற பிரமன் முதலிய தேவர்கள் பற்பல காலம் முயன்று வருந்திப் பலவகை மணிகள் ஒளி திகழப் பதித்தமைந்த சிங்காதனத்தின்கண் திருவடி பொருந்த எழுந்தருளி எங்களை ஆட்கொண்டருள வேண்டும் அருளரசே என அவரவரும் தனித்தனியாக ஆங்காங்கு நின்று வருந்தி வேண்டவும், திருந்திய வேதாந்தத்தின் நடுவாகிய அம்பலத்தின்கண் நடிக்கின்ற மலர் போன்ற திருவடிகள் சிவக்குமாறு ஒருவகை ஞான வளமுமில்லாத அசுத்தம் பொருந்திய என்னுடைய குடிசைக்குள் நுழைந்தருளினாய் என்று உனக்கு அன்பராயினார் பலரும் உன்னைக் குறை கூறுவராகவும், நீ சிறிதும் சுளிக்காமல் எனது மனமாகிய குடிசைக்குள் நுழைந்து வீற்றருளுகின்றாய்; உனது திருவருள் இருந்தவாறு என்னே! எ.று.

படி - உலகம். உலகைப் படைக்கும் செயலைப் புரிகின்ற பிரமனைப் "படி செய் பிரமன்" எனப் பகர்கின்றார். முதலோர் என்றதனால் காத்தலைச் செய்கின்ற திருமாலும் அளித்தலைச் செய்கின்ற உருத்திரனும் கொள்ளப்படும். அவர்கள் தாம்தாம் இருந்து பணி புரியும் இடங்களிலிருந்தே வேண்டுகின்றமை தோன்ற, "பற்பல நாள் வருந்தி ஆங்காங்கே வருந்த" என வுரைக்கின்றார். "பன்மணிகள் ஒளி விளங்கப் பதித்த சிங்காதனத்தே அடி செய்து எழுந்தருளி எமை ஆண்டருளல் வேண்டும் அரசே" என்பது பிரமன் முதலோருடைய வேண்டுகோள். மணிகள் இழைத்த பொற் சிங்காதனம் என்றற்கு, "பன்மணிகள் ஒளி விளங்கப் பதித்த சிங்காதனம்" எனக் குறிக்கின்றார். சிங்காதனம் - சிம்மாசனம் எனவும் வழங்கும். சிங்கத்தின் முகமும், முன் காலும் பொறிக்கப்பட்ட ஆசனம் சிங்காதனம் எனப்படுகின்றது. இது அரசர் இருக்கும் அரிய ஆசனமாதலால், "சிங்காதனத்தே எழுந்தருள வேண்டும்" என்பவர், "அரசே" என ஆர்வத்தோடு மொழிகின்றார். அடி செய்தல் - நடந்து வருதல். பிரமன்

முதலியோர் ஆங்காங்கே நின்று வருந்தி வேண்டவும் அவர் வேண்டு கோளைப் பொருளாக எண்ணுமல் என் மனமாகிய குடிசைக்குள் நுழைந்தருளி இருந்தருளுகின்ருய் என இயையும். வடி செய் மறை - குற்றமின்றித் தூய்மை செய்யப்பட்ட வேத வேதாந்த நூல்கள். வேதாந் தத்தின் முடிந்த நிலை "பிரம ஞானம்" எனப்படும். அதன் நடுவகத்தை அம்பலமாகக் கொண்டு ஆங்கே ஞான நடம் புரிதலால் சிவனுடைய திருவடிகளை, "வடி செய் மறைமுடி நடுவே மன்றகத்தே நடிக்கும் மலரடிகள்" என்று புகழ்கின்ருர். ஞான வளம் நிறைந்த சபையின்கண் பெருமாளுகிய நீ அவ்வளம் சிறிதும் இல்லாமையும், மலக் கலப்பால் சுத்த மில்லாமையுமுடைய எனக்குள் நுழைதல் கூடாது என நின்னுடைய ஞானத்தால் தூயராகிய அன்பர்கள் குறை கூறுவர் என்று எண்ணுகின்ருராதலால், "ஒரு வளமுமில்லா அசுத்தக் குடிசை நுழைந்தனையே என்று ஏசுவர் அன்பர்" என்று மொழிகின்ருர். அவர்கள் அன்பால் அங்ஙனம் நினைப்பாராக அதனைப் பொருளாக எண்ணுமல் என் உள்ளத்திற் புகுந்து கொண்டாய் என்பாராய், "கூசாமல் என்னுளமாம் குடிசை நுழைந்தனையே" என்று கூறுகின்ருர். உனது திருவருள் இருந்தவாறு என்னே என்பது குறிப்பெச்சம்.

இதனுல், பிரமன் முதலியோர் வேண்டி வருந்தவும், அன்பர் ஏசுவாராகவும் நீ என்னுள்ளத்திற் புகுந்தாய் என இறைவனுடைய திருவருள் நலத்தை வியந்து புகழ்ந்தவாறும். (2)

3986. உள்ளபடி உள்ளதுவாய் உலகமெலாம் புகினும்
ஒருசிறிதும் தடையிலதாய் ஒளியதுவே மயமாய்
வெள்ளவெளி நடுவுளதாய் இயற்கையிலே விளங்கும்
வேதமுடி இலக்கியமா மேடையிலே அமர்ந்த
வள்ளன்மலர் அடிசிவப்ப வந்தெனது கருத்தின்
வண்ணம்எலாம் உவந்தளித்து வயங்கியபேர் இன்பம்
கொள்ளைகொளக் கொடுத்ததுதான் போதாதோ அரசே
கொடும்புலையேன் குடிசையிலும் குலவிநுழைந் தனையே.

உரை : உள்ளவாறு உள்ளதாய் உலகங்கள் அத்தனையும் வந்து புகுந்தாலும் இடமில்லை எனச் சிறு தடையும் செய்யாததாய், ஒளி மயமாய், பரவெளியின்கண் நடுவகத்தே இருப்பதாய், தன்னியல்பில் விளக்கமுறும் வேதாந்தத்தின் இலக்காகிய பெரிய மேடையின்கண் இருந்தருளும் தாமரை மலர் போன்ற திருவடி சிவக்குமாறு என்பால் வந்து என்னுடைய கருத்தின்கண் யான் எண்ணிய எண்ணமெல்லாம் எண்ணியவாறு உவகையுடன் எய்துவித்து விளங்குகின்ற சிவானந்தத்தை யான் மிகுதியாகக் கொள்ளுமாறு எனக்குக் கொடுத்தருளியது போதுமன்ரே; அங்ஙனம் இருக்கவும் அருளரசாகிய நீ கொடிய புலைத்தன்மை பொருந்திய என்னுடைய உள்ளமாகிய குடிசைக்குள்ளும் நுழைந்து மகிழ்கின்ருய். எ.று.

இறைவன் திருவுள்ளத்தின்படியே அவனது இருப்பும் இயல்பும் வேற்றுமை சிறிதும் எய்தாது உள்ளது உள்ளபடியே இருத்தல் பற்றி, "உள்ளபடி உள்ளதுவாய்" எனவும், உலகுயிர்கள் அத்தனையும் முத்தி

நிலையுற்று அவன்பால் அடையினும் அவனது பரமாந் தன்மை அவை யனைத்தையும் ஒரு சிறு தடையுமின்றித் தனக்குள் அடக்கிக் கொள்ளு மாறு தோன்ற, "உலகமெலாம் புகினும் ஒரு சிறு தடையிலதாய்" எனவும், பரம்பொருள் பரஞான ஒளி மயமாய் விளங்குவது பற்றி, "ஒளியதுவே மயமாய்" எனவும் உரைக்கின்றார். பரம்பொருளின் பரவெளி உலக முதற் காரணமாகிய மாயா மண்டலத்திற்கப்பால் மாசு மறுவற்ற தூய பரவெளியாதலின் அதனை, "வெள்ள வெளி" என்றும், அதன்கண் நடுவகத்தே எத்துணைக் காலம் கழியினும் தன்னியல்பு மாறாது விளங்குவது பற்றி இயற்கையிலே விளங்கும் இயல்பினதாம் என்றற்கு, "வெள்ள வெளி நடு வுளதாய் இயற்கையிலே விளங்கும் இயல்பினதாம்" என்றும் இயம்புகின்றார். வேதாந்த ஞானத்தின் முடிபாகிய பிரம நிலையை, "வேத முடி இலக்கிய மாமேடை" என்றும், அதன்கண் சிவ பரம்பொருள் எழுந்தருளுவது விளங்க, "மேடையிலே அமர்ந்த வள்ள மலரடி" என்றும் கூறுகின்றார். வள்ள மலர் - கிண்ணம் போல் இதழ் விரிந்து விளங்கும் தாமரை மலர். உண்மை யன்பர்தம் உள்ளத்தில் அவர்கள் உன்னிய எல்லாவற்றையும் உன்னியவாறு உவப்புடன் அளித்து இன்பம் செய்வது சிவத்தின் சிறப்பியல்பாதலால், "எனது கருத்தின் வண்ணமெலாம் உவந்தளித்து வயங்கிய பேரின்பம் கொள்ளை கொளக் கொடுத்தது" எனக் கூறுகின்றார். யான் பெற்றது யாரும் பெறாத பேரின்பமாகவும், அதனொடு அமையாது மேலும் யான் இன்பம் எய்தும் பொருட்டு எனது உள்ளத்திலும் புகுந்து கொண்டாய் எனப் புகழ்வாராய், "என் குடிசையிலும் குலவி நுழைந்தனையே" என்று வியந்து மகிழ்கின்றார். கருதியது கருதியவாறு கைவரப் பெற்ற போது உளதாகிய இன்பத்தை, "பேரின்பம் கொள்ளை கொளக் கொடுத்தது" என்று கூறுகின்றார். அப்பொழுது உளதாகிய இன்பம் பேரின்பமாயினும் கொடுத்த பொருள் அளவே அப்பேரின்பத்தின் எல்லை நிற்றலால் அது மேலும் பெருகுமாறு என் குடிசையில் தானும் உள்ளத்திற் புகுந்து இன்பம் பெருக்குகின்றான் சிவபெருமான் என்பது புலப்பட, "கொள்ளை கொளக் கொடுத்ததுதான் போதாதோ அரசே" என்பதனால் குறிக்கப்படுகின்றது. அப்பேரின்பப் பேற்றிற்கு இடமாகிய தமது உடம்பின் சிறுமையை விளக்குதற்கு, "கொடும் புலையேன் குடிசை" என்று குறைபட்டுக் கொள்கின்றார்.

இதனால், வேத வேதாந்த ஞானத்தின் முடி நிலையாகிய மேடையில் இருந்தருளும் இறைவன் திருவடி மேன் மேலும் இன்பம் பெருகுதல் வேண்டி என் உள்ளத்தில் புகுந்து நிற்கிறது எனப் புகன்றவாறாம். (8)

3987. தடையறியாத் தகையினதாய்த் தன்னிகரில் லதுவாய்த்
தத்துவங்கள் அனைத்தினுக்கும் தாரகமாய் அவைக்கு
விடையறியாத் தனிமுதலாய் விளங்குவெளி நடுவே
விளங்குகின்ற சத்தியமா மேடையிலே அமர்ந்த
நடையறியாத் திருவடிகள் சிவந்திடவந் தெனது
நலிவனைத்தும் தவிர்த்தருளி ஞானஅமு தளித்தாய்
கொடையிதுதான் போதாதோ என்னரசே அடியேன்
குடிசையிலும் கோணாதே குலவிநுழைந் தனையே.

**உரை :** யாதானும் தடுத்தல் இல்லாத அழகு உடையதாய், தனக்கு ஒப்பில்லாததாய், தத்துவங்கள் எல்லாவற்றிற்கும் ஆதாரமாய், அவற்றிற்கு நீக்க முடியாத முதற் காரணமாய் விளங்குகின்ற பரவெளி யின் நடுவிடத்தே இலங்கும் சத்தியமாகிய மேடையிலே வீற்றிருக்கின்ற நடத்தல் இல்லாத திருவடிகள் சிவக்க என்பால் எழுந்தருளி வந்து எனது இடர்கள் அத்தனையும் போக்கி ஞானமாகிய அமுதை எனக்கு அளித்தருளினாய்; இந்தக் ஞானக் கொடை யொன்றே எனக்குப் போதுமன்றோ! அங்ஙனமிருக்க எனக்கு அருளரசாகி நீ அடியேனுடைய உள்ளமாகிய குடிசையிலும் வெறுப்பின்றி மகிழ்ச்சியோடு நுழைந்து கொண்டாய்; உனது திருவருட் பேரருளை என்னென்பேன். எ.று.

பரம்பொருள் எழுந்தருளும் பரவெளி முத்தி பெற்ற ஆன்மாக்கள் சிறுதடையுமின்றி அடையத் தக்க எல்லையும் அழகும் உடையதாய், அதற்கு நிகரெனக் கூறுதற்கு யாதும் இல்லாததாய், ஆன்ம தத்துவம் முதலாக வுள்ள தத்துவங்கள் முப்பத்தாறுக்கும் ஆதாரமாய், அவற்றிற்குத் தனி முதலாய் விளங்குவதாதலால் அதனை, "தடையறியாத் தகையினதாய்த் தன்னிகரில்லதுவாய்த் தத்துவங்கள் அனைத்தினுக்கும் தாரகமாய் அவைக்கு விடையறியாத் தனி முதலாய் விளங்கு வெளி" என்றும், அதன் நடுவே சத்தியம் என்னும் தர்மத்தை மேடையாகக் கொண்டு அதன் மேல் சிவபெருமான் எழுந்தருளுவது தோன்ற, "வெளி நடுவே சத்திய மாமேடையிலே அமர்ந்த திருவடிகள்" என்றும் போற்றுகின்றார். தன்பால் வந்தடையும் சிவமாந் தன்மை எய்திய முத்தான்மாக்களைச் சிறு தடையுமின்றி ஏற்றுக் கொள்வது பற்றிப் பரசிவ வெளியை, "தடையறியாத் தகையினது" என்று சிறப்பிக்கின்றார். மாயா காரியமாகிய தத்துவங்கள் அனைத்திற்கும் முதற் காரணமாகிய மாயை சத்தி வடிவில் தன்னில் ஒடுங்குதற்குத் தானே இடமாதலின், "தத்துவங்கள் அனைத்தினிற்கும் தாரகமாய்" எனவும், அவைகட்குத் "தனிமுதல்" எனவும் சாற்றுகின்றார். ஆன்ம தத்துவம் இருபத்து நான்காகவும், வித்தியா தத்துவம் ஏழாகவும், சிவ தத்துவம் ஐந்தாகவும் விரிவது காண்க. தாரகம் - ஆதாரம். மாயை யாகிய பரிக்கிரக சத்தி ஒடுங்குமிடம் "அருட் சத்தி" எனவும், அதனைத் தன்கண் ஒடுக்குவது பரசிவமாதலின் அதற்குரிய பரவெளியை, "அவைக்குத் தனிமுதலாய் விளங்கு வெளி" என்று விளம்புகின்றார். மாயையாகிய முதற் காரணம் எத்துணை வகையாய்க் காரியப் படினும் தத்துவங்களை விட்டு நீங்குதல் இல்லாமை பற்றி, "விடையறியாத் தனிமுதல்" என்று இயம்புகின்றார். சத்தாந் தன்மையை யுடையது சத்தியமாதலால் அதனைச் சிவம் எழுந்தருளும் பெரிய மேடையாக உருவகம் செய்கின்றார். மக்களையும் தேவர்களையும் போல நடந்து செல்லும் இயல்பு இல்லாமை புலப்பட இறைவன் திருவடிகளை, "நடை யறியாத் திருவடிகள்" என்று நவில்கின்றார். நடத்தல் இல்லாத திருவடி நடக்குமாயின் சிவப்பேறும் என்பது பற்றி, "திருவடிகள் சிவந்திட வந்து" என்றும், அதனால் தம்மை வருத்திய வருத்தங்கள் யாவும் நீங்கினமையால், "எனது நலிவனைத்தும் தவிர்த்தருளி" என்றும், அதனால் தாம் ஞானப் பேற்றிற்குரிய தூய்மை பெற்றமையால், "ஞான அமுதளித்தாய்" என்றும் உரைக்கின்றார். ஞானத்தினும் சிறந்த பொருள் வேறில்லாமை பற்றி, "கொடை யிதுதான் போதாதோ"

எனவும், அதனால் எய்தும் ஞானவின்பத்தை மிகுவிப்பாய்ப் போல என்னுடைய உள்ளத்தின்கண் எழுந்தருளுகின்றாய் என்பாராய், "அடியேன் குடிசையிலும் கோணாதே குலவி நுழைந்தனை" எனவும் கூறுகின்றார். பெருமாளிகையில் இருப்பவர் குடிசையில் நுழைதற்கு நாணுவர் என்பது பற்றி, "குடிசையிலும் கோணாதே நுழைந்தனை" என்று இசைக்கின்றார்.

இதனால், சிவ பரவெளியின் தனி இயல்பு எடுத்துரைத்தவாறும். (4)

3988. இறைஅளவும் துரிசிலதாய்த் தூய்மையதாய் நிறைவாய்
இயற்கையதாய் அனுபவங்கள் எவைக்கும்முதல் இடமாய்
மறைமுடியோ டாகமத்தின் மணிமுடிமேல் முடியாய்
மன்னுகின்ற மெய்ஞ்ஞான மணிமேடை அமர்ந்த
நிறையருட்சீர் அடிமலர்கள் சிவந்திடவந் தடியேன்
நினைத்தஎலாம் கொடுத்தருளி நிலைபெறச்செய் தனையே
குறைவிலதிப் பெருவரந்தான் போதாதோ அரசே
கொடும்புலையேன் குடிசையிலும் குலவிநுழைந் தனையே.

உரை: சிறிதளவும் குற்றமில்லாததாய், தூய்மை மிக்கதாய், குறைவில்லாத நிறைவாய், இயற்கையதாய், அனுபவங்கள் எல்லாவற்றிற்கும் முதன்மையான இடமாய், வேதாந்தத்திற்கும் ஆகமாந்தத்திற்கும் முடிமேல் முடியாய் நிலைபெறுகின்ற மெய்ஞ் ஞானமாகிய மேடை மேல் வீற்றிருக்கின்ற அருள் நிறைந்த நின்னுடைய சிறப்புடைய மலர் போன்ற திருவடிகள் சிவக்குமாறு என்பால் எழுந்தருளி அடியேன் எண்ணிய எல்லாவற்றையும் கொடுத்தருளி அவை யென்பால் என்றும் நிலைபெறச் செய்துள்ளாய்; குறை சிறிதுமில்லாத இந்தப் பெரிய வரம் ஒன்றே எனக்குப் போதுமன்றோ; அதனோடு அமையாது அருள் அரசனாகிய நீ கொடிய புலைத் தன்மையையுடைய என் உடலுள் மனமாகிய குடிசையிலும் மகிழ்வோடு நுழைந்து இடம் பெற்றுள்ளாய்; நினது அருள் நலத்தை என்னென்பேன். எ.று.

பரஞானமாகிய மெய்ம்மை ஞானம் குற்றமே கண்டறியாததாதலால், "இறை யளவும் துரிசிலதாய்" என்றும், தன்னளவில் மிக்க தூய்மையுடையதும் குறைவிலா நிறைவாகவும், தன்னியல்பில் எவ்வாற்றாலும் மாறாத இயற்கையதாய் இருப்பது புலப்பட, "தூய்மையதாய் நிறைவாய் இயற்கையதாய்" என்றும், உயிர்கள் பெறும் அனுபவங்கள் எல்லாவற்றிற்கும் தனித் தன்மை வாய்ந்த முதற் பொருளாய் அமைவது கொண்டு, "அனுபவங்கள் எவைக்கும் முதலிடமாம்" என்றும், வேத ஞானத்திற்கும் ஆகம ஞானத்திற்கும் அந்தத்துக் கந்தமாய் மேன் மேல் ஓங்கி நிலைபெறுவதாய்ச் சிறப்பது பற்றி, "மறைமுடியோடு ஆகமத்தின் மணிமுடி மேல் முடியாய் மன்னுகின்ற மெய்ஞ்ஞானம்" என்றும் விளம்புகின்றார். மெய்ம்மை ஞானத்திற்கும் மேன்மை வாய்ந்தது சிவ பரம் பொருள் என்பது தெரிவிப்பாராய், மெய்ம்மை ஞானத்தை மணி மேடையாக்கி அதன் மேல் சிவத்தின் திருவடி ஞானம் திகழ்கிறது என்று தெரிவிப்பாராய், "மன்னுகின்ற மெய்ஞ்ஞான மணிமேடை

"அமர்ந்த நிறையருட் சீரடி மலர்கள்" எனப் புகழ்கின்றார். திருவடி ஞானத்தைத் திருவடி என்றதனால் தன்பால் அஃது எய்தினமை விளங்க, "அடி மலர்கள் சிவந்திட வந்து" என்று செப்புகின்றார். திருவடிகள் திருவருளின் உருவகமாதலின், "நிறையருட் சீரடி மலர்கள்" என வுரைக்கின்றார். தாம் பெற நினைத்த திருவருள் ஞானம் முற்றும் தமக்குக் கொடுத்தருளின செய்தியைச் சிறப்பித்தற்கு, "நினைத்த வெலாம் கொடுத்தருளி நிலைபெறச் செய்தனை" எனவும், அது தாம் பெறுதற்கரிய பெரும் பேறு என்பாராய், "குறைவிலது இப்பெருவரந் தான் போதாதோ" எனவும், வரமருளிய பெருமானாகிய நீயே என் மனத்தினும் குடி புகுந்து வீற்றிருக்கின்றாய் என்று தாமுற்ற இன்பத்தை வியந்து, "கொடும் புலையேன் குடிசையிலும் குலவி நுழைந்தனை" எனவும் கூறுகின்றார்.

இதனால், பாச ஞானமாகிய மெய்ஞ்ஞானத்தின் மேலதாய் விளங்குகின்ற திருவருட் டிருவடி ஞானத்தின் செம்மை நிலை உரைத்தவாறும். (5)

3989. உருவினதாய் அருவினதாய் உருஅருவாய் உணர்வாய்
உள்ளதுவாய் ஒருதன்மை உடையபெரும் பதியாய்
மருவியவே தாந்தமுதல் வகுத்திடுங்க லாந்த
வரைஅதன்மேல் அருள்வெளியில் வயங்கியமே டையிலே
திருவுறவே அமர்ந்தருளும் திருவடிகள் பெயர்த்தே
சிறியேன்கண் அடைந்தருளித் திருஅனைத்தும் கொடுத்தாய்
குருவேஎன் அரசேஈ தமையாதோ அடியேன்
குடிசையிலும் கோணாதே குலவிநுழைந் தனையே.

உரை: உருவம், அருவம், அருவுருவம் என்ற உருவ வகைகளை யுடையதாய், உணர்வாய், உள்பொருளாய், ஒரு தன்மைத்தாய், விளங்கும் பெரிய தலைவனாய், நூல்கள் உரைக்கும் வேதாந்தம் முதல் அவற்றால் வகுக்கப்படும் கலாந்தம் வரையில் உள்ள அந்தங்களின் மேல் உள்ள அருள்வெளியில் விளக்கமுறுகின்ற மேடை மேல் மங்கலமாக அமர்ந்தருளும் உன்னுடைய திருவடிகளை வைத்துச் சிறுமை யுடையவனாகிய என்பால் வந்தருளி ஞானச் செல்வமனைத்தையும் எனக்குக் கொடுத்தருளினாய்; எனக்குக் குருவும் அருளரசுமாகிய பெருமானே; எனக்கு இது போதுமன்றோ; அதற்கு மேலும் அடியேனுடைய உடலும் உள்ளமும் ஆகிய குடிசையிலும் கூசுதலின்றிப் புகுந்து வீற்றிருக்கின்றாய். எ.று.

உருவம், அருவம், அருவுருவம் என மூவகை உருவம் உடையது சிவம் எனவும், ஞான மயமானது எனவும், என்றுமுள்ள மெய்ப்பொருள் எனவும், அஃது எக்காலத்தும் ஒரு தன்மைத்தானது எனவும் சான்றோர் உரைப்பது பற்றிப் பரசிவத்தை, "உருவினதாய் அருவினதாய் உருவருவாய் உணர்வாய் உள்ளதுவாய் ஒருதன்மை யுடைய பெரும் பதி" என உரைக்கின்றார். எல்லா நூல்களும் வேதவேதாந்தங்களைத் தழுவியே நிற்பதால் அவற்றை, "மருவிய வேதாந்தம்" என்றும்,

வைதிக ஞானத்தால் வேதாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், சித்தாந்தம், கலாந்தம் என ஆறுக அறிஞர் வகுத்தாரா யும் இயல்பு தோன்ற, "வகுத்திடும் கலாந்தம்" என மொழிகின்றார். வேதாந்தம் முதலாகக் கூறிய அறுவகை அந்தங்கட்கு அப்பால் விளங்கும் அருள் வெளி பரசிவ வெளியாதலால் அதனை விளக்குதற்கு, "அதன் மேல் அருள் வெளியில் வயங்கிய மேடை" என்றும், ஆங்குச் சிவ பரம்பொருள் எழுந்தருளும் திறம் தெரிவிக்க, "திருவுறவே அமர்ந்தருளும் திருவடிகள்" என்றும் சிறப்பிக்கின்றார். பரசிவ வெளி "அருள் வெளியில் வயங்கிய மேடை" எனக் குறிக்கின்றார். எங்கும் எப் பொருட்கும் மங்கலம் உண்டாகச் சிவம் எழுந்தருளுவது பற்றி, "திருவுற அமர்ந்தருளும் திருவடி" என்று புகழ்கின்றார். சிவஞானத்திற் கேதுவாகிய ஞான நலங்கள் அத்தனையும் "திருவனைத்தும்" எனத் தொகுத்துரைக்கின்றார். ஞானம் அருளுவது பற்றிச் சிவ பரம்பொருளை, "குருவே" என்று கூறுகின்றார்.

இதனால், மூவகை யுருவும், உணர்வுருவும், உள்பொருளாம் தன்மையுமுடைய பரசிவம் அருள் வெளியில் எழுந்தருளும் இயல்பு கூறியவாறும். (6)

3990. மணமுளதாய் ஒளியினதாய் மந்திர ஆ தரமாய்
வல்லதுவாய் நல்லதுவாய் மதங்கடந்த வரைப்பாய்
வணமுளதாய் வளமுளதாய் வயங்கும்ஒரு வெளியில்
மணிமேடை அமர்ந்ததிரு அடிமலர்கள் பெயர்த்தே
எணமுளஎன் பால்அடைந்தென் எண்ணமெலாம் அளித்தாய்
இங்கிதுதான் போதாதோ என்னரசே ஞானக்
குணமலையே அருளமுதே குருவேஎன் பதியே
கொடும்புலையேன் குடிசையிலும் குலவிநுழைந் தனையே.

உரை : நறுமணமும் பேரொளியும் உடையதாகவும், மந்திரங்கட் கெல்லாம் ஆதாரமாய், எல்லாம் வல்லதாய், நலமே புரிவதாய், எல்லா மதங்களின் வரம்புகளையும் கடந்த எல்லையை யுடையதாய், அழகும் வளமும் உடையதாய், விளங்குவது பரசிவ வெளியில் சிவஞானமாகிய மணி மேடையில் இந்தத் திருவடிகளை எடுத்துரைத்துச் சிவத்தையே எண்ணிக் கொண்டிருக்கும் என்பால் வந்தருளி யான் எண்ணிய எல்லா வற்றையும் எய்த அருளினாய்; எனக்கு இவ்வரு ளொன்றே போது மன்றோ; எனினும் எனக்கு அருளரசும், ஞான வுருக் கொண்ட குணக் குன்றும், அருள் ஞான அமுதமும், குருவுமாகிய என் தலைவனாகிய நீ என்னுடைய உடலும் உள்ளமுமாகிய குடிசைக்குள்ளும் போந்தருளி வீற்றிருக்கின்றாய். எ.று.

மணம் - சிவமணம். ஒளி - அருளொளி. மந்திர ஆதாரம் - மந்திரங் கட்கெல்லாம் ஆதாரம்; மந்திரங்களை விரும்பி ஏற்கும் மந்திரப் பொருள் எனினும் பொருந்தும். உலகில் மதங்களும் சமயங்களும் வரையறுக்கும் எல்லைகள் எல்லாவற்றிற்கும் அப்பாலாய் அவை எல்லாவற்றையும் ஏற்று நிற்பது பற்றிப் பரம்பொருளை, "மதங் கடந்த வரைப்பு" என்று

மாண்புறுத்துகின்றார். வணம் - அழகு. வண்ணம் வணம் என வந்தது. சிறப்புடைய ஞானத்தையே தனக்குச் செல்வமும் பொருளுமாகக் கொண்டமை தோன்ற, "வளமுளதாய்" என வரைந்து கூறுகின்றார். இப்பரவெளியில் பரசிவம் எழுந்தருளும் பரநிலை "மணி மேடை" எனப் படுகிறது. அதன்கண் இருந்து மண்ணுலகில் என்பால் எழுந்தருளி யான் எண்ணிய நலங்கள் எல்லாவற்றையும் எனக் களித்துள்ளாய்; இனி எவற்றாலும் யான் குறைவிலேன் என்பாராய், "இங்கு இதுதான் போதாதோ" என்று இயம்புகின்றார். ஞானத்தாலும் நற்குணங் களாலும் மலை போல் திண்மையும் சலியாத் தன்மையும் கொண்டிருப்பது விளங்க, "ஞானக் குண மலையே" என்று போற்றுகின்றார்.

இதனால், ஞான மணம் ஞான ஒளி முதலாகிய நலம் பலவும் கொண்ட பரசிவ வெளியின் பண்பு கூறி அங்குள்ள சிவ பரம்பொருள் தனக்கு அருள் வழங்கிய திறத்தை விரிய உரைத்தவாறும். (7)

3991. சிரம்பெறுவே தாகமத்தின் அடிநடுவும் முடியும்
செல்லாத நிலைஅதுவாய் எல்லாம்வல் லதுவாய்
பரம்பரமாய்ப் பரம்பரமேற் பரவுசிதம் பரமாய்ப்
பதிவெளியில் விளங்குகின்ற மதிசிவமே டையிலே
தரங்குலவ அமர்ந்ததிரு அடிகள்பெயர்த் தெனது
சார்படைந்தென் எண்ணமெலாம் தந்தனைஎன் அரசே
குரங்குமனச் சிறியேனுக் கிங்கிதுபோ தாதோ
கொடும்புலையேன் குடிசையிலும் குலவிநுழைந்தனையே.

உரை: உயர்ந்ததாகக் கொள்ளப்படும் வேத ஆகமங்களின் முதலிலும் நடுவிலும் முடிவிலும் காணப் படாத நிலையினை யுடையதும், எல்லாம் வல்லதும், எல்லாவற்றிற்கும் மேன் மேலதாய், அதன் மேலும் நின்று போற்றப்படுகின்ற சிதம்பரமாய், விளங்குகின்ற பதிப் பொருளாய், பரவெளியில் இலங்குகின்ற சிவஞானமாகிய மேடையிலே உயர்வு விளங்க எழுந்தருளும் திருவடிகளை முன் வைத்து என்பால் அடைந்து யான் எண்ணிய எண்ணங்கள் எல்லாவற்றையும் எனக்குத் தந்தருளினாய்; என்னுடைய அருளரசே; அலமருகின்ற மனத்தினால் சிறுமையை யுடைய எனக்கு இது போதுமன்றோ; இங்ஙனம் இருக்கவும் கொடிய புலைத் தன்மையை யுடைய என் உள்ளமாகிய குடிசையிலும் எழுந்தருளுகின்றாய்; உனது அருள் நலந்தான் என்னே! எ.று.

வேதம் ஆகமம் என்ற இவற்றின் முடிந்த பொருளை வேத சிரம் ஆகம சிரம் என்றெல்லாம் சான்றோர் குறித்தல் இயல்பாதலால், "சிரம் பெறு வேதாகமம்" என்றும், அவற்றின் அடியிலும் நடுவிலும் முடியிலும் விளங்கும் ஞானத்தால் கண்டறியப்படாத நிலைமையை யுடையதாதல் பற்றிப் பரம்பொருள் நிலையை, "வேதாகமத்தின் அடி நடுவும் முடியும் செல்லாத நிலை யதுவாய்" என்றும், தத்துவ வகைகள் எல்லாவற்றுக் கும் படிப்படியாய் உயர்ந்தோங்குவது புலப்பட, "பரம்பரமாய் மேற் பரவு சிதம்பரமாய் விளங்குகின்ற சிவம்" என்றும் இயம்புகின்றார். சிதம்பரம் என்பதற்கு ஞான ஆகாசம் என்பது பொருள். ஞான

ஆகாசத்தில் நிலவுவது ஞானமேயான சிவ பரம்பொருள் என்பாராய், "பதி வெளியில் விளங்குகின்ற மதி சிவம்" என மொழிகின்றார். அச்சிவ பதத்தைச் "சிவ மேடை" என உருவகம் செய்து ஆங்கிருந்து சிவ பெருமான் தன்பால் எழுந்தருளித் தான் எண்ணிய எல்லாவற்றையும் எய்த அருள் புரிந்தான் என்பாராய், "சிவ மேடையிலே தரங் குலவ அமர்ந்த திருவடிகள் பெயர்த்து எனது சார்படைந்து என் எண்ண மெலாம் தந்தனை" என்று இசைக்கின்றார். குரங்கு போல எங்கும் எப்பொருளிலும் ஆசை கொண்டு அலையுந் தன்மையை யுடையதாதல் பற்றித் தமது மனத்தை, "குரங்கு மனம்" எனப் பழிக்கின்றார்.

இதனால், வேத சிவாகம ஞான எல்லைக்கு அப்பால் உயர்வற உயர்ந்த சிவத்தின் சிறப்பியல்பு தெரிவித்தவாறும். (8)

**3992.** **பற்றியபற் றனைத்தினையும் பற்றற விட் டறிவாம்**
**பான்மைஒன்றே வடிவாகிப் பழுத்தபெரி யவரும்**
**உற்றறிதற் கரியஒரு பெருவெளிமேல் வெளியில்**
**ஓங்குமணி மேடைஅமர்ந் தோங்கியசே வடிகள்**
**பெற்றறியப் பெயர்த்துவந்தென் கருத்தனைத்துங் கொடுத்தே**
**பிறவாமல் இறவாமல் பிறங்கவைத்தாய் அரசே**
**கொற்றமுளேன் தனக்கிதுதான் போதாதோ கொடியேன்**
**குடிசையிலும் கோணாதே குலவிநுழைந் தனையே.**

**உரை :** உலக வாழ்வில் என்னை வந்து பற்றிய பற்றுக்கள் அத்தனையும் எஞ்சாமல் துறந்து அறிவாகிய தன்மை ஒன்றே வடிவமாய் முதிர்ந்த பெரியவர்களும் கண்டறிதற் கரிதாகிய ஒப்பற்ற பெரிய பரவெளிக்கு அப்பாலுள்ள ஞான வெளியில் உயர்ந்த சிவமாகிய மணி மேடையில் எழுந்தருளி ஓங்குகின்ற திருவடி ஞானத்தை அடியேன் பெற்று அறிதற் பொருட்டு என்பால் வந்து யான் கருதும் கருத்துக்கள் அத்தனையும் கைவரத் தந்து யானும் இனிப் பிறப்பிறப்பின்றி உயர்வடை யும்படிச் செய்தருளினாய்: இவ்வாற்றால் வெற்றி யுடையனாய் இருக்கும் எனது அருளரசாகிய நீ உதவிய இது போதுமன்றோ; அங்ஙனமிருக்க, கொடுமை யுடையவனாகிய என்னுடைய குடிசையிலும் சுணக்கமின்றி எழுந்தருளி என்னை மகிழ்விக்கின்றாய். எ.று.

முன்னை வினைகளாலும் பின்னர்த் தோன்றிய வினைகளாலும் பற்றிய உலகியல் பற்றுக்கள் அனைத்தையும் பற்றறத் துறந்து மெய்யறிவாகிய உண்மை ஞானமே வடிவமாகி உயர்ந்தோங்கிய சான்றோர்களை, "பற்றிய பற்றனைத்தினையும் பற்றற விட்டு அறிவாம் பான்மை ஒன்றே வடிவாகிப் பழுத்த பெரியவர்" என வள்ளற் பெருமான் விளங்க உரைக் கின்றார். ஞானத்தால் முதிர்ந்த பெருமக்கள் என்று பொருள்பட அவர் களைப் பழுத்த பெரியவர் என்பது குறிக்கத் தக்கது. அவர்களை ஞான சம்பந்தர், "அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று ஐம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர்" (மிழலை) என விளம்புவர். ஞானமே வடிவாகிய தூய ஞானிகளுக்கும் அறிய வொண்ணாதது பரசிவப் பரவெளி எனக் காட்டுதற்கு, "பழுத்த பெரியவரும் உற்று அறிதற் கரிய

ஒரு பெருவெளி மேல் வெளி" என உரைக்கின்றார். தத்துவ மண்டலத்திற்கு அப்பாலுள்ள வெளிகட்கெல்லாம் மேலதாகிய உபசாந்தப் பேரொளியை, "மேல் வெளி" என்று இயம்புகின்றார். அப்பரசிவ வெளியில் இருந்தொளிரும் சிவபோக நிலை "மணி மேடை" எனக் குறிக்கப்படுகிறது. அவ்விடத்தினின்றும் சிவபெருமான் மண்ணகம் போந்து தம்பால் வந்ததாகக் கற்பனை செய்கின்றாராதலின், "மணி மேடையமர்ந்து ஓங்கிய சேவடிகள் பெயர்த்து வந்து" என்றும் தாம் கருதிய பொருள்கள் யாவையும் தமக்கு எய்துவித்தமை தோன்ற, என் கருத்தனைத்தும் கொடுத்து அதுவே ஏதுவாகப் பிறவா இறவாப் பெருநிலையில் தம்மை வாழ வைத்தார் என்பாராய், "பிறவாமல் இறவாமல் பிறங்க வைத்தாய்" என்றும் பேசுகின்றார். இவ்வாற்றால் பிறப்பு இறப்புக்களை வென்ற வெற்றி யுடையேன் என்று மகிழ்ந்தவராய் எனக்கு இது போதும் எனப் போற்றுகின்றாராதலால், "அரசே குற்ற முடையேன் தனக்கு இது போதாதோ" எனக் கூறுகின்றார். பிறப் பிறப்பை வென்ற இன்பப் பெருநிலையில் இருப்பது புலப்பட, "கொற்றம் உளேன்" எனக் குறிக்கின்றார்.

இதனால், பழுத்த ஞானிகளாலும் அறிதற் கரியது பரசிவ வெளி என்பது விளக்கியவாறும். (9)

3993. கருவியொடு கரணமெலாம் கடத்துகடந் ததன்மேல்
காட்சியெலாம் கடந்ததன்மேல் காணாது கடந்து
ஒருநிலையின் அனுபவமே உருவாகிப் பழுத்த
உணர்ச்சியினும் காணாமல் ஓங்குமொரு வெளியில்
மருவியதோர் மேடையிலே வயங்கியசே வடிகள்
மலர்த்திவந்தென் கருத்தனைத்தும் வழங்கினைஇன் புறவே
குருமணியே என்னரசே எனக்கிதுபோ தாதோ
கொடும்புலையேன் குடிசையிலும் குலவிநுழைந் தனையே.

உரை: கருவி கரணங்களைக் கொண்டு, காணும் காட்சி எல்லையைக் கடந்து அதன் மேல் புருவ நடுவில் வைத்துக் காணும் யோகக் காட்சியின் எல்லையும் கடந்து, அதன் மேல் காணப்படாத ஞானக் காட்சி எல்லையையும் கடந்து விளங்கும் ஒப்பற்ற நிலையில் உளதாகும் அனுபவமே உருவாகப் பெற்று, முதிர்ந்த உணர்வுக்கும் காணப்படாமல் உயர்ந்தோங்கும் பெருவெளியில் இருக்கின்ற சிவபோகமாகிய மேடையிலே விளக்க முறுகின்ற சிவந்த திருவடிகள் நிலத்திற் பொருந்த என்பால் வந்து யான் கருதிய பொருள்கள் யாவற்றையும் யான் பெற்று இன்புறுமாறு எனக்கு வழங்கியருளினாய்; எனக்குக் குருமணியும் அருளரசனுமாகிய பெருமானே! எனக்கு இது போதுமன்றோ; அதனோடமையாது மிக்க புலைத் தன்மையை யுடைய என் மனமாகிய குடிசையிலும் நுழைந்து என்னை மகிழ்விக்கின்றாய்; என்னே நின் திருவருள் இருந்தவாறு. எ.று.

கண் முதலிய கருவிகளாலும், மனம் முதலிய கரணங்களாலும் காண்கின்ற வாயிற் காட்சிக்கும், மானதக் காட்சிக்கும் உரிய

எல்லைகளைக் கடந்து நோக்கியதை, "கருவியொடு கரணமெலாம் கடந்து கடந்து" எனவும், அதன் மேல் புருவ நடுவின்கண் அறிவு நாட்டத்தால் புருவ நடுவில் நின்று காணும் யோகக் காட்சி எல்லையைக் கடந்து நோக்கிய திறத்தை, "அதன் மேல் காட்சி யெலாம் கடந்து" எனவும் கூறுகின்றார். அதன் மேல் அறிவுக் காட்சிக்கு எட்டாத பெருநிலையில் கருவி கரண காட்சி யின்மையின் அதனை யோகத்தால் கடந்தமை விளங்க, "காணாது கடந்து" என்றும், அவ்விடத்தே ஞானமும் ஞானனுபவமும் கண்டு அதுவே உருவாகி முதிர்ந்த உணர்வெல்லையிலும் சிவபோகம் உணரப் படாமை பற்றி, "அனுபவமே உருவாகிப் பழுத்த உணர்ச்சியினும் காணமல்" என்றும், அதன் மேல் ஓங்கித் தோன்றும் உயர்ந்த பரவெளியை, "அதன் மேல் ஓங்கும் ஒரு வெளி" என்றும் இயம்புகின்றார். அப்பரசிவ வெளியில் சிவஞான பீடத்தில் இருந்தருளும் சிவ பரம்பொருளை, "வெளியில் மருவியதோர் மேடையிலே வயங்கிய சேவடிகள்" எனப் புகழ்கின்றார். ஞானத்தால் பெற்ற இன்பத்தை, "என் கருத்தனைத்தும் இன்புறவே வழங்கினை" எனப் பாராட்டுகின்றார். மேற் கொண்ட செயல் முடிவின்கண் இன்பம் பிறப்பது இயல்பாதலால், "இன்புற வழங்கினை" என இசைக்கின்றார்.

இதனால், கருவி கரண யோகக் காட்சிகளால் காணப்படாது ஞானத்தால் உணரப்படும் பரசிவ வெளியின் இயல்பு தெரிவித்தவாறும்.

(10)

திருச்சிற்றம்பலம்

## 48. வரம்பில் வியப்பு

அஃதாவது, இறைவனுடைய அருளிப் பாட்டின், பெருமையைக் கண்டு எல்லையில்லாது பெருகும் வியப்பு மேலீட்டால் அதனைப் புகழ்ந்தோதுவது.

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3994. பொன்புனை புயனும் அயனும்மற் றவரும்
புகலரும் பெரியஓர் நிலையில்
இன்புரு வாகி அருளொடும் விளங்கி
இயற்றலே ஆதிஐந் தொழிலும்
தன்பொதுச் சமுகத் தவர்கள் இயற்றத்
தனிஅர சியற்றும்ஓர் தலைவன்
அன்பெனும் குடிசை நுழைந்தன னானால்
அவன்தனை மறுப்பவர் யாரே.

உரை: திருமகளைத் தோளிலே கொண்ட திருமாலும் பிரமனும் மற்றவரும் அடைதற் கரிய பெரிய ஒப்பற்ற நிலையில் இன்ப வடிவாய் அருளொடு கூடி, விளக்க முற்றுப் படைத்தல் முதலிய தொழில்கள் ஐந்தையும், பொதுவான தனது திருமுன் பிரமன் முதலிய தேவர்கள் ஐவரும் செய்யத் தனியரசு புரிகின்ற ஒப்பற்ற தலைவனாகிய சிவபெருமான் அன்பு நிறைந்த மனமென்னும் என் குடிசைக்குள் புகுந்து கொண்டான் எனில், அவனை யாவர் விலக்க வல்லார். எ.று.

பொன் புனை புயன், திருமகள் வீற்றிருக்கின்ற தோள்களை யுடைய திருமால். வெற்றித் திருமகள் வீற்றிருப்பது பற்றித் திருமாலை இவ்வாறு கூறுகின்றார். திருமகள் பொன்னிற முடையவளாதலின், அவளைப் பொன் என்று குறிக்கின்றார். புயன் - புயங்களை யுடையவன். புயம் - தோள். உருத்திரன் முதலிய தேவர்களை மற்றவர் எனக் கூறுகின்றார். திருமால் முதலிய தேவர் பதங்கள் அனைத்திற்கும் மேலாய் அப்பாலாய் விளங்கும் சிவ பதத்தை, "பெரிய ஓர் நிலை" என்று உரைக்கின்றார். புகல் - புகுதல். தன்னியல்பில் வடிவினனாதல் பற்றிச் சிவனை, "இன்புருவாகி" என்றும், அவ்வின்பத்தைத் தனக்கே உரியதாக்கிக் கொள்ளாமல் எல்லா ஆன்மாக்களுக்கும் அளித்து மகிழ்விக்கும் அருட் சத்தியோடு கூடியிருத்தல் பற்றி, "அருளொடு விளங்கி" என்றும் இயம்புகின்றார். இயற்றல் ஆதி ஐந்தொழில், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்துமாம். சிவத்தின் திருமுன் அருட்

சத்தி துணை புரிய பிரமன், திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகிய ஐவர்களும் முறையே படைத்தல் முதலிய தொழில் வகை ஐந்தையும் செய்யா நிற்கத் தான் அரசு வீற்றிருத்தல் பற்றிச் சிவனை, "இயற்றலே ஆதி ஐந்தொழிலும் தன் பொதுச் சமூகத்து ஐவர்கள் இயற்றத் தனியர சியற்றும் ஓர் தலைவன்" என மொழிகின்றார். தேவ தேவர்கட் கெல்லாம் மாபெரும் தலைவனாகிய சிவபெருமான், எல்லா உலகங்கட்கும் மேலாய் அப்பாலாய் உள்ள சிவ பதத்தில் ஒப்பற்ற தலைவனாய் வீற்றிருப்பவன்; அதனை விடுத்து அன்பு நிறைந்த என் மனமாகிய சிறு குடிசைக்குள் புகுந்து கொண்டான் எனில், இது வியக்கும் எல்லைக்கும் அப்பாற்பட்ட வியப்புத் தருவ தொன்றும் என்றும், இவ்வாறு எல்லாருக்கும் மேலாய்ப் பெருமைதயப் பிறங்குகின்ற சிவபெருமான் பெருமையையும் மனமென்னும் குடிசையின் சிறுமையையும் நோக்கிச் சிறு குடிசைக்குள் எழுந்தருளுதல் கூடாதென விலக்க வல்லார் ஒருவருமிலர் என்றும் உரைப்பாராய், "அன்பெனும் குடிசை நுழைந்தனன் ஆதல் அவன்தனை மறுப்பவர் யாரே" என எடுத்துரைக்கின்றார்.

இதனால், இறைவன் பெருமையும் அவன் எழுந்தருளுகின்ற மனத்தின் சிறுமையையும் எண்ணி வியந்தவாறும். இதுவே இனி வரும் பாட்டுக்களிலும் கருத்தாக உரைத்துக் கொள்க. (1)

3995. மன்பதை வகுக்கும் பிரமர்நா ரணர்கள்
மன்னுருத் திரர்களே முதலா
ஒன்பது கோடித் தலைவர்கள் ஆங்காங்
குறுபெருந் தொழில்பல இயற்றி
இன்புறச் சிறிதே கடைக்கணித் தருளி
இலங்கும்ஓர் இறைவன்இன் றடியேன்
அன்பெனும் குடிசை நுழைந்தனன் அந்தோ
அவன்தனை மறுப்பவர் யாரே.

**உரை :** உலகில் மக்களாயினார் வகுத்தும் விரித்தும் உரைக்கும் பிரமர்கள் நாரணர்கள் பெரிய உருத்திரர்கள் முதலிய, ஒன்பது கோடி யென எண்ணப்பட்ட தலைமைத் தேவர்கள் ஆங்காங்குத் தங்களுக்குரிய பதங்களில் இருந்து கொண்டு தமக்குற்ற படைத்தல் முதலிய தொழில் கள் பலவற்றையும் செய்து இன்புறுமாறு சிறிதளவு கடைக்கண் புரிந்து அருள் செய்து விளங்கும் ஒப்பற்ற இறைவனாகிய சிவபெருமான் இப் பொழுது அடியேனுடைய அன்பு நிறைந்த மனமாகிய குடிசைக்குள் எழுந்தருளி யுள்ளான்; ஐயோ, அவனது பெருமை நோக்கி இக் குடிசைக்குள் புகுதல் கூடாதென மறுக்க வல்லவர் யாவர். எ.று.

மன்பதை, மக்களினம். மக்களுள் உலகப் படைப்புப் பற்றி எடுத்துரைக்கும் புராணிகர்களை இங்கே "மன்பதை" என்று குறிக் கின்றார். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களைச் செய்யும் பிரமன் முதலியோர் மிகப் பலராதலால் அவர்களை, "பிரமர் நாரணர்கள் மன்னுருத்திரர்கள்" என மொழிகின்றார். படைக்கும் பிரமர்கள், காக்கும் நாரணர்கள் ஆகியோரினும் உருத்திரர்கள் பெரியவர்கள் ஆதலால்,

"மன்னுருத்திரர்கள்" என்று சிறப்பிக்கின்றார். இவர்களின் தொகை இத்துணை எனத் தெரிவித்தற்கு, "ஒன்பது கோடித் தலைவர்கள்" என உரைக்கின்றார். இத்தேவ தேவர்கள் அனைவரும் தத்தமக்குரிய பிரம பதம், வைகுண்ட பதம், உருத்திர பதம் முதலாக வுள்ள பதங்களிலே இருந்து கொண்டு மேற்கூறிய தொழில் வகை ஐந்தையும் முறையே செய்தொழுகுவதும், அச்செயல் முடிவின்கண் எய்தும் இன்பத்தில் திளைப்பதும் விளங்க, "ஒன்பது கோடித் தலைவர்கள் ஆங்காங்கு உறுபெருந் தொழில் பல இயற்றி இன்புற" என உரைக்கின்றார். தொழில் பல செய்வதும், தொழில் முடிவில் இன்புறுவதும் உலகியல் முறையாதலால், "பெருந் தொழில் பல இயற்றி இன்புற" எனக் கூறுகின்றார். பிரமன் முதலிய தேவ தேவர்கள் தாம் செய்யும் பெரிய தொழில்களைக் குறைவறச் செய்து முடிப்பதற்கு இறைவனது திருவருள் நோக்கம் இன்றியமையாதலால், "சிறிதே கடைக்கணித் தருளி இலங்கும் ஓர் இறைவன்" என்று புகழ்கின்றார். கடைக் கணித்தல், கடைக் கண்ணால் பார்த்தருளல். சிறிது பார்த்த அளவிலே பெருந் தொழில் செய்பவர் அனைவரும் அவற்றை முட்டின்றி ஒரு சிறு குறையுமின்றிச் செய்து முடிக்கும் பேராற்றலைப் பெறுவதால் அதுவே அமையும் என்றற்கு, "சிறிதே கடைக்கணித் தருளி" என்று தெரிவிக்கின்றார். யாவர்க்கும் மேலாம் அளவிலாப் பெரியவனாகிய சிவபெருமான், மனமென்னும் சிறு குடிசைக்குள் எழுந்தருளுவது எண்ணிறந்த வியப்பாக இருத்தலால், "இறைவன் இன்று அடியேன் அன்பெனும் குடிசை நுழைந்தனன்" எனவும், அவனது பெருமைக்குச் சிறு குடிசைக்குள் புகுந்தருளுவது பொருந்தா தென எண்ணி விலக்குபவர் ஒருவருமிலர் என்றற்கு, "அந்தோ அவன்தனை மறுப்பவர் யாரே" எனவும் இயம்புகின்றார். (2)

3996. தன்னிகர் இல்லாத் தலைவஎன் றரற்றித்
தனித்தனி மறைகள்ஆ கமங்கள்
உன்னிநின் றோடி உணர்ந்துணர்ந் துணரா
ஒருதனிப் பெரும்பதி உவந்தே
புன்னிகர் இல்லாப் புலையனேன் பிழைகள்
பொறுத்தருட் பூரண வடிவாய்
என்னுளம் புகுந்தே நிறைந்தனன் அந்தோ
எந்தையைத் தடுப்பவர் யாரே.

உரை : தனக்கு ஒப்பவர் ஒருவருமில்லாத தலைவனே என்று ஓலமிட்டுத் தனித்தனியாக வேதங்களும் ஆகமங்களும் நின்று நினைந்தும், தேடியும், பன்முறை நுணுகி நுணுகி உணர முயன்றும் உணர வொண்ணாத ஒரு தனிப் பரம்பொருளாகிய சிவப் பெரும்பதி மனமுவந்து சிறு புல்லுக்கும் ஒப்பாகாத புலையனாகிய என்னுடைய குற்றங்களைப் பொறுத்தருளி, நிறைந்த அருளுருவாய் என் மனத்திற்குள் புகுந்து நிறைந்து வீற்றிருப்பானாயினான்; ஐயோ எனக்கு எந்தையாகிய அவனைத் தடுக்க வல்லவர் யாவர். எ.று.

தனக்கு உவமை யில்லாத தலைவனாதலால் சிவபெருமானாகிய தலைவனை வேதங்களும் ஆகமங்களும் ஒப்பில்லாத பெருமானே என்று

பன்முறையும் தனித்தும் பலராகக் கூடியும் துதிப்பது விளங்க, "தன்னிகரில்லாத் தலைவ என்று அரற்றி" எனவும், இவ்வாறு துதிப்பதோடு அவன் நலங்கள் பலவற்றையும் எடுத்தோதும் வேத நூல்களையும் அப்பெருமானை வழிபடுதற்குரிய நெறி முறைகளையும் உரைக்கின்ற ஆகமங்களையும் நன்கு நினைந்து ஓரிடத்தே இருந்து சிந்தித்து ஓதிப் பன்முறையும் நுணுகி நுணுகி ஆராய்ந்தும் அவனது உண்மைத் தன்மையை உணர வொண்ணாது ஒழிவது பற்றி, "மறைகள் ஆகமங்கள் உன்னி நின்று ஓடி உணர்ந்துணர்ந் துணரா ஒரு தனிப் பெரும் பதி" எனவும் இயம்புகின்றார். மறைகள் ஆகமங்கள் என்பது வைதிக ஞானமும் ஆகம ஞானமும் உடையவர்களாகிய ஞானவான் களை என அறிக. உணர்ந்துணர்ந்து என்னும் அடுக்கு பன்முறை ஆராய்ந்தமை குறிக்கின்றது. தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனிப் பெருந் தலைவனாதலால் அப்பெருமானை, "ஒரு தனிப் பெரும் பதி" என்று போற்றுகின்றார். பதிப் பொருளாகிய பரம்பொருளை எவரும் தாமே முயன்று அடைவது அரிதாகலின் அப்பெருமான் தானே மனமுவந்து ஆன்மாக்களை நோக்கி வந்தருளினாலன்றி அவனை அடைதல் முடியாது என்பது பற்றி, "உவந்து" என்றும், புலைத் தன்மையை யுடைய தமது சிறுமை புலப்பட, "புன்னிக ரில்லாப் புலையனேன்" என்றும் புகல் கின்றார். புலைத் தன்மை, பல்வேறு குற்றங்களைப் புரியும் சிறுமை. அப்பெருமான் தானே மனமுவந்து வந்தருளுதற்குச் செய்யப்படும் பிழைகள் ஒழிய வேண்டுதலின் அவற்றை மன்னித்தருளிய மாண்பு விளங்க, "பிழைகள் பொறுத்து" எனவும், நிறைந்த பேரருளே தனக்கு வடிவமாய் எழுந்தருளினமை விளங்க, "அருட் பூரண வடிவாய் என்னுளம் புகுந்து நிறைந்தனன்" எனவும் ஓதுகின்றார். பிழை செய்யும் பண்பு பொருந்திய மனத்தினுள் அஃது ஒரு சிறிதும் இல்லாத பரம் பொருள் எழுந்தருளுகின்றதே என இரங்குவாராய், "அந்தோ எந்தையைத் தடுப்பவர் யாரோ" என இயம்புகின்றார். (8)

3997. பால்வகை ஆணோ பெண்கொலோ இருமைப்
பாலதோ பால்உரு அதுவோ
ஏல்வகை ஒன்றோ இரண்டதோ அனாதி
இயற்கையோ ஆதியின் இயல்போ
மேல்வகை யாதோ எனமறை முடிகள்
விளம்பிட விளங்கும்ஓர் தலைவன்
மால்வகை மனத்தேன் உளக்குடில் புகுந்தான்
வள்ளலைத் தடுப்பவர் யாரே.

உரை: பால்வகை இரண்டனுள் ஆணோ பெண்ணோ எனவும், ஆணும் பெண்ணும் ஆகியதோ எனவும், பால் பகுக்க வொண்ணாத, பால் பகாப் பொருளாகிய அதுவோ எனவும், யாவரும் ஏற்கும் வகையில் ஒன்றோ இரண்டோ எனவும், அனாதியோ ஆதியோ எனவும், மேன்மைத் தன்மை பொருந்திய அதன் வகை யாதோ எனவும், வேத முடிபுகளைக் கூறும் வேதாந்த சாத்திரங்கள் எடுத்துரைக்க விளங்குகின்ற பரம்பொருளாகிய சிவ பெருமானாகிய தலைவன் மயங்கும் இயல்பின தாகிய மனத்தை யுடைய எனது உள்ளமாகிய குடிசைக்குள் புகுந்த

ருளி றள்; அருள் வள்ளலாகிய அப்பெருமானைப் புகாதபடி விலக்க வல்லவர் யாவர். எ.று.

தமிழ் இலக்கணங்கள் பொருளியல்பு உரைக்குமிடத்து அதனை ஐம்பால்களால் பிரித்துக் காண்பது பற்றி, "பால் வகை ஆணோ பெண்கொலோ" என்றும், ஆண் என்றும் பெண் என்றும் வரையறுத்துக் கூற வொண்ணாத உருவங்களும் உளதாகலின், "இருமைப் பாலதோ" என்றும், பால் பகுக்கலாகாத அஃறிணை யினத்துப் பொருளோ என்பாராய், "பால் உரு அதுவோ" என்றும் இயம்புகின்றார். எண்ணு வகையில் ஒன்றோ இரண்டோ எனத் தெளியலாகாமை பற்றி, "ஏல் வகை ஒன்றோ இரண்டதோ" என எடுத்தோதுகின்றார். "பெண்ணல்லை ஆண்ணல்லை பேடுமல்லை பறிதல்லை பிறனும் பெரியோய் நீயே" (ஒற்றி) என்று தமிழ்முறை கூறுதலால், "பால் வகை ஆணோ பெண் கொலோ இருமைப் பாலதோ பாலுரு அதுவோ" என்று பகர்கின்றார். ஆண்மை பெண்மை என்ற இரு தன்மையுமுடைய பேடு அலி என்பவற்றை, "இருமைப் பாலதோ" எனவும், பால் பகா அஃறிணை ஒருமைப் பொருளைக் குறித்தற்கு, "பால் உரு அது" எனவும் கூறுகின்றார். ஒன்றோ இரண்டோ பலவோ என ஒண்ணுமை பற்றி, ஏவ் வகை ஒன்று இரண்டதோ" என இசைக்கின்றார். ஏல் வகை- ஏற்கும் வகை. தோற்றக் கேடுகள் இல்லாமையால், "அநாதி இயற்கையோ" எனவும், தோற்றக் கேடுகள் உண்மையின், "ஆதியின் இயல்போ" எனவும் ஆராயும் மரபு பற்றி எடுத்துரைக்கின்றார். இந்தத் தன்மைத் தென வேதங்களாலும் வேதாந்த நூல்களாலும் வரையறுத்து உணர்த்த முடியாமை புலப்பட, "மேல் வகையாதோ என மறைமுடிகள் விளம்பிட" எனவும், இவ்வாறு வைதிக நூல் ஆராய்ச்சிக்கும் தெளியப் படாமை பற்றி இல்பொருள் ஆகாமல் உள்பொருளாய் விளக்க முறுகின்றானாதலால் சிவனை, "விளங்கும் ஓர் தலைவன்" எனவும் விளம்புகின்றார். காணப்படும் பொருள்கள் அத்தனையும் தெளியக்காணாது ஐயம் திரிபுகட்கு இரையாகி மயங்கும் இயல்பினதாதலால், "மால் வகை மனம்" என இயம்புகின்றார். குடில், குடிசை. மனத்தின் உட்கூறு உளமாதலால், "மனத்தேன் உளக் குடில்" என்று குறிக்கின்றார். (4)

3998. வரம்பெறும் ஆன்ம உணர்ச்சியும் செல்லா
வருபர உணர்ச்சியும் மாட்டாப்
பரம்பர உணர்ச்சி தானும்நின் றறியாப்
பராபர உணர்ச்சியும் பற்று
உரம்பெற உணர்வார் யாரெனப் பெரியர்
உரைத்திட ஓங்கும்ஓர் தலைவன்
கரம்பெறு கனிபோல் என்னுளம் புகுந்தான்
கடவுளைத் தடுப்பவர் யாரே.

உரை: மேன்மை பொருந்திய ஆன்ம ஞானமும், கெடாமல் ஒழுகி வருகின்ற பரஞானமும், வீழ்ச்சிகாண மாட்டாத பரம்பர ஞானமும், உடனின்று அறிய லாகாத பராபர ஞானமும், பற்ற முடியாத வன்மை யுண்டாக விளங்கும் சிவஞானத்தை, ஒருமை மிக உணர வல்லவர்

யாவர் எனப் பெரிய ஞானவான்கள் எடுத்துப் பேச அவரிடையே உயர்ந்தோங்குகின்ற ஒப்பற்ற சிவபெருமானுகிய தலைவன் அங்கையில் பெற்ற நெல்லிக்கனி போல் என் உள்ளத்துள் புகுந்து கொண்டருளினுறு தலால் அக்கடவுளைப் புகாதபடித் தடுக்க வல்லவர் யாவர்; ஒருவருமில்லை. எ.று.

ஆன்ம உணர்ச்சி, ஆன்ம ஞானம். ஆன்ம ஞானத்தால் எய்துவது மேன்மையாதலால் அதனை "வரம் பெறும் ஆன்ம உணர்ச்சி" என்னும் அதனினும் மேம்பட்டதாப் வழி வழியாக வந்து கொண்டிருக் கும் பரஞானத்தைப் "பர உணர்ச்சி" என்றும் உரைக்கின்றுர். ஈண்டுச் செல்லுதப் இடையறவு படுதல். பொருட்களின் மேன்மை கீழ்மை நோக் கும் அறிவுபரம்பர உணர்ச்சியாகும். அது நிறைந்த பயன் தராமைபற்றி, "மாட்டாப் பரம்பர உணர்ச்சி" எனப்படுகிறது. பராபர உணர்ச்சியாவது மெய்ஞ்ஞானம். மெய்ஞ்ஞானத்தால் மெய்ம்மை காண முயல்வார்க்கு அருள் ஞான மல்லது ஆன்ம உடனிருந்தறிதல் வேண்டாமையின் தானும் நின்றறியாப் பராபர உணர்ச்சி என்று குறிப்பிட்டு இவ்வுணர்வு களால் பசுபாச ஞானப் பேறே எய்துதலால் அவற்றைப் பற்று என விலக்குகின்றுர். சிவஞானத்தால் சிவபோகமாகிய உண்மைப்பயன் எய்த உணர வல்லவர் யார் என மெய்ம்மை ஞானிகள் கையற் றுரைப்பது பற்றி, "உரம் பெற உணர்வார் யாரெனப் பெரியர் உரைத்திட" என்று உரைக்கின்றுர். இறைவன் தன்னுள்ளத்துட் புகுந்ததை மெய்ம்மை தோன்ற விளம்புகின்றுராதலின், "கரம் பெறு கனி போல் என்னுளம் புகுந்தான்" எனக் கட்டுரைக்கின்றுர். கடவுள்-எல்லாவற்றையும் கடந்து உட்புகுந்து அருள்பவன். இத்தகைய கடவுள் என்னுள் புகுந்து கொண்டானுதலால் அவனை "யாவர் தடுக்க வல்லார்" எனப் பெருமிதம் தோன்ற உரைப்பது காண்க.

3999. படைத்திடல் முதல்ஐந் தொழில்புரிந் திலங்கும்
பரம்பர ஒளிஎலாம் அணுவில்
கிடைத்திடக் கீழ்மேல் நடுஎனக் காட்டாக்
கிளர்ஒளி யாய்ஒளிக் கெல்லாம்
அடைத்தகா ரணமாய்க் காரணங் கடந்த
அருட்பெருஞ் ஜோதியாம் ஒருவன்
கடைத்தனிச் சிறியேன் உளம்புகுந் தமர்ந்தான்
கடவுளைத் தடுப்பவர் யாரே.

உரை: படைத்தல் முதலிய ஐவகைத் தொழில்களைச் செய்து, விளங்கும் மேலும் கீழுமாகிய ஒளிப் பொருட்கள் எல்லாவற்றையும் ஓர் அணுவில் காணுமாறு, கீழ் என்றும், மேல் என்றும், நடு வென்றும் காட்ட லாகாது ஒளிரும் ஒளியாய், ஒளிப் பொருட்கள் எல்லாவற்றிற்கும் பொருந்திய மூல காரணமாய், அக்காரணத்தையும் கடந்து அப்பாலதாகிய அருட் பெருஞ் சோதியாகும் ஒருவனுகிய சிவபெருமான் கீழ்மைப்பட்ட மிக்க சிறுமையை யுடைய எனது உள்ளமாகிய குடிசைக்குள் புகுந்து வீற்றிருக்கின்றுனுயினும் அவனைப் புகாவாறு தடுக்க வல்லவர் யாவர்! எ.று.

படைத்தல் முதலிய தொழில் ஐந்துமாவன; படைத்தல், காத்தல், அழித்தல், அருளுதல், மறைத்தல் என்ற ஐந்துமாம். அத்தொழில்களைப் புரியும் பிரமன் முதலிய தேவர்கள் ஒளி யுருவாய் ஒருவர்க்கு ஒருவர் உயர்வு தாழ்வு கற்பிக்கும் நிலையில் அமைந்திருப்பதால் அவர்களைப் பரம்பர ஒளி யென்று கூறுவாராய், "படைத்திடல் முதல் ஐந்தொழில் புரிந்திலங்கும் பரம்பர ஒளி" என்று கூறுகின்றார். பரம்பரம் - மேன் மேல் உயர்தல். ஒளியுருவாய் விளங்கும் அவர்கள் அனைவரையும் ஓர் அணுப் பொருளில் காணுமாறு அமைத்து அவ்வொளிகளினிடையே மேல் நடு கீழ் என நிலவும் வேறுபாடு காட்டாமல் ஓங்கும் பேரொளியாய் விளங்கு வது பற்றி, "ஒளி எலாம் அணுவில் கிடைத்திடக் கீழ் மேல் நடு வெனக் காட்டாக் கிளர் ஒளியாய்" என்று மொழிகின்றார். படைத்தல் முதலிய தொழில்களைச் செய்யும் ஒளி யுருவினராகிய தேவர்கள் அனைவரையும் தனக்குள் ஒடுக்கித் தான் பேரொளியாய் நின்று திகழ்வது விளங்கச் சிவனை, "கிளர் ஒளியாய்" எனவும், சிவ வொளியாகிய தனக்குள் பிரமன் முதலிய ஒளிகளினிடையே வேறுபாடு தோன்றுவண்ணம் விளங்குவது பற்றி, "கீழ் மேல் நடு வெனக் காட்டாக் கிளர் ஒளி" எனவும் கிளர்ந்து உரைக்கின்றார். இவ்வொளிகள் எல்லாவற்றிற்கும் மூல காரணமாக இருத்தலால் சிவனை, "ஒளிக்கெலாம் அடைத்த காரணம்" எனவும், அக் காரண நிலையும் கடந்து அதற்கு அப்பாலாய் உயிர்கட்கெல்லாம் பேரருள் வழங்கும் பேரொளியாய்ப் பிறங்குவது பற்றி, "காரணம் கடந்த அருட் பெருஞ்சோதியாம் ஒருவன்" எனவும் இயம்புகின்றார். சிறுமை குணத் வால் கடைப்பட்டவன் என்றற்கு, "கடைத் தனிச் சிறியேன்" என்று எடலூர் வள்ளல் தம்மைக் குறிக்கின்றார். எனது சிறுமை நோக்காமல் புன்னுள் புகுந்து இருந்தருளுகின்றான் என்பாராய், "சிறியேன் உளம் புகுந்து அமர்ந்தான்" என்றும், எல்லாம் வல்ல அவனை இனித் தடுப் பவர் ஒருவருமில்லை என்று பெருமிதங் கொண்டு பேசுகின்றாராதலால், "கடவுளைத் தடுப்பவர் யாரே" என்றும் எடுத்து மொழிகின்றார். (6)

4000. அளவெலாம் கடந்த பெருந்தலை அண்ட
அடுக்கெலாம் அம்மஓர் அணுவின்
பிளவில்ஓர் கோடிக் கூற்றில்ஒன் றாகப்
பேசநின் றோங்கிய பெரியோன்
களவெலாந் தவிர்த்தென் கருத்தெலாம் நிரப்பிக்
கருணைஆர் அமுதளித் துளமாம்
வளவிலே புகுந்து வளர்கின்றான் அந்தோ
வள்ளலைத் தடுப்பவர் யாரே.

உரை: நியாய நூல்கள் உரைக்கும் பிரமாண வகைகள் எல்லாவற்றிற்கும் அப்பாலாய் உள்ள, பேரிடத்தனவினும் எண்ணிறந் தனவாய், ஒன்றுக் கொன்று மேலாய் அமைந்துள்ள அண்டங்கள் எல்லாவற்றிலும் ஓர் அணுவின் பிளவினுள் உள்ள கோடிக் கணக்கான கூறுகளில் ஒரு கூறாகச் சிறுமைப் படுத்தி அறிஞர் கூறுமாறு நின்று உயர்ந்தோங்குகின்ற பெருமானாகிய சிவ பரம்பொருள் என்னுடைய வஞ்ச நினைவுகள் எல்லாவற்றையும் போக்கி என் கருத்து முழுதும் நிறைந்து தனது கருணையாகிய அரிய அமுதத்தை யளித்து என்

உள்ளமாகிய இடத்துக்குள்ளே புகுந்து சிறக்கின்றனாயினும் அவ்வள்ளற் பெருமானைத் தடுக்க வல்லவர் யாவர்? எ.று.

நியாய நூல்கள் பிரமாணங்களை மூன்றாகவும் எட்டாகவும் பத்தாகவும் பலபடக் கூறுதலால் அவை யனைத்தும் அடங்க, "அளவெலாம்" என அறிவிக்கின்றார். இந்த அளவை வகைகளுக் கெட்டாத பேரிடமாய் அண்ட வகைகள் அனைத்தையும் தன்கண் அடக்கிக் கொண்டிருக்கின்ற பெரும் பரப்பாகிய இடத்தை, "அளவெலாம் கடந்த பெருந்தலை" எனவும், அதன்கண் ஒடுங்கிக் கிடக்கின்ற பல கோடி அண்டங்களை ஒரு சேரத் தொகுத்து, "அண்ட அடுக்கெலாம்" எனவும் இயம்புகின்றார். அண்டங்கள் எல்லாம் அணுத் திரளாதலின் அத்திரளினுள் அமைந்த நுண்ணிய அணுவினுள் அணுவாக விளங்குகிறான் என்று அறிஞர்கள் அறிந்துரைத்தலால், "ஓர் அணுவின் பிளவில் ஓர் கோடிக் கூற்றில் ஒன்றாகப் பேச நின்றோங்கிய பெரியோன்" என்று கூறுகின்றார். இதனை மணிவாசகப் பெருமான், "அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம் அளப்பருந் தன்மை வளப் பெருங் காட்சி ஒன்றனுக் கொன்று நின்று எழில் பகரின் நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச் சிறியவாகப் பெரியோன்" (அண்ட) என உரைப்பது காண்க. இவ்வாறு அணுவுக் கணுவாய் இருந்தோங்கும் பெருமானாகிய சிவபிரான் எனது சிறிய உள்ளத்தின்கண் எழுந்தருளும் பொருட்டு அதன்கண் உள்ள கள்ள நினைவுகளாகிய அழுக்கினைப் போக்கி உள்ளகம் நிரம்பத் தனது சிவவொளியைப் பரப்பி அருளுகின்றான் என்பாராய், "களவெலாம் தவிர்த்து என் கருத்தெலாம் நிரப்பி" என்றும், பின்னர் அவன் தனது திருவருள் ஞானத்தை வழங்கினான் என்பாராய், "கருணை ஆரமுதளித்து" என்றும் இயம்புகின்றார். இத்தகைய பெருங் கருணையாளனாகிய சிவபெருமான் என்னுள் புகுந்து கொண்டதனால் இனி அவனை அவ்வாறு செய்யாவாறு தடுக்க வல்லவர் ஒருவரும் இல்லை என்று வடலூர் வள்ளல் பெருமிதம் கொண்டு கூறுகின்றார். (7)

4001. **உள்ளவாம் அண்ட கோடி கோடிகளில்**
**உளவுயிர் முழுவதும் ஒருங்கே**
**கொள்ளைகொண் டிடினும் அணுத்துணை எனினும்**
**குறைபடாப் பெருங்கொடைத் தலைவன்**
**கள்ளநெஞ் சகத்தேன் பிழைஎலாம் பொறுத்துக்**
**கருத்தெலாம் இனிதுதந் தருளித்**
**தள்ளரும் திறத்தென் உள்ளகம் புகுந்தான்**
**தந்தையைத் தடுப்பவர் யாரே.**

**உரை :** உள்பொருளவாய்க் கோடி கோடியாக இருக்கின்ற, அண்டங்களில் உள்ள உயிர்கள் எல்லாவற்றையும் ஒருங்கு ஆட்கொண்டு, ஒன்று விடாமல் அவற்றிற்கு அருள் வழங்குகின்றனா யினும் தனது அருட் பெருக்கத்தில் ஓர் அணுவளவும் குறைபடுதல் இல்லாத பெரிய கொடையினைச் செய்கின்ற தலைவனாகிய சிவபெருமான் வஞ்சனை பொருந்திய நெஞ்சினை யுடைய என் பிழை யனைத்தையும்

பொறுத்துக் கொண்டு நான் கருதிய எல்லாவற்றையும் நன்கு உதவி, விலக்க முடியாத வகையில் எனது உள்ளமாகிய குடிசைக்குள் புகுந்து கொண்டான்; அத்தகைய அருள் தந்தையாகிய அவனைத் தடுக்க வல்லவர் யாவர். எ.று.

நினைப்பவர் நினைவுக் கெல்லாம் அகப்படாத அளவில் பெருகின வாகக் கூறப்படுதலால் இவ்வண்டங்கள் உள்பொருளோ உள்ளீடில்லாத கற்பனையோ என ஐயுறுவாரும் உண்மையின், "உள்ளவாம் அண்ட கோடி" என உரைக்கின்றார். அண்டங்களின் பெருக்கத்தைப் புலப்படுத்தற்கு, "அண்ட கோடி கோடிகள்" என்று கூறுகின்றார். அண்டங்கள் தோறும் எண்ணிறந்த உயிர்கள் வாழ்கின்றன எனவும், அவ்வுயிர்கள் அனைத்திற்கும் இறைவன் அருள் வழங்குகின்றான் எனவும் பெரியோர்கள் உரைத்தலால், "உள வுயிர் முழுவதும் ஒருங்கே கொள்ளை கொண்டிடினும்" எனவும், அவற்றிற்கு வரையாது வழங்குதலால் அப்பெருமானுடைய அருட் செல்வம் குறைவு படுமோ என ஐயுறுமைப் பொருட்டு, "அணுத்துணை எனினும் குறைபடாப் பெருங் கொடைத் தலைவன்" எனவும் புகழ்ந்துரைக்கின்றார். தமது திருவுள்ளத்தில் தானே உவந்து எழுந்தருளுகின்றானாதலின் முன்னணியாக நெஞ்சிலுள்ள வஞ்சனை பொய் முதலிய அழுக்குகளைத் துடைத்துக் கருதியவற்றைப் பெருமையால் உண்டாகும் குறைக்கு இடமின்றி அவற்றை நன்கு தந்து நிறைவித்தமை தோன்ற, "கள்ள நெஞ்சகத்தேன் பிழை யெலாம் பொறுத்துக் கருத்தெலாம் இனிது தந்தருளி" என வுரைக்கின்றார். இவ்வண்ணம் தானாகவே உளம் உவந்து அருளுகின்ற பெருமானை விலக்குதல் கூடாமை பற்றி, "தள்ளரும் திறத்து என் உள்ளகம் புகுந்தான்" என்று கூறுகின்றார். (8)

4002. அறிந்தன அறிந்தாங் கறிந்தறிந் தறியா
 தையகோ ஐயகோ அறிவின்
மறிந்தன மயர்ந்தேம் எனமறை அனந்தம்
 வாய்குழைந் துரைத்துரைத் துரையும்
முறிந்திட வாளா இருந்தஎன் றறிஞர்
 மொழியும்ஓர் தனிப்பெருந் தலைவன்
செறிந்தென துளத்தில் சேர்ந்தனன் அவன்றன்
 திருவுளம் தடுப்பவர் யாரே.

உரை: முன் அறிந்தவற்றை அறிந்தது போல அறிவால் பன்முறை ஆராய்ந்தும் அறிய மாட்டாது ஐயோ அறிவு மறுக்கப் பட்டேன் மயங்கினேம் என்று எண்ணிறந்த வேதங்கள் வாய் குழறிச் சொல்லிச் சொல்லி மாட்டாமை யுற்றுச் சோர்ந்து மோனமுற்றன என்று ஞானவான்கள் உரைக்கின்ற ஒப்பற்ற தனிப் பெருந் தலைவனான சிவபெருமான் அன்பு நிறைந்து எனது உள்ளமாகிய இடத்தினுள் எழுந்தருளுகின்றான்; ஆகவே அவனுடைய திருவுள்ளத்தை யாவரால் தடுக்க முடியும். எ.று.

பொறி புலன்களும் மனமும் கலந்து நின்று பொருட்களை அறிவது இயல்பாதலின், "அறிந்தது அறிந்தாங்கு" எனவும், அவற்றால் பன்முறை

ஆய்ந்தாய்ந் தறிந்தும் அறிய மாட்டாமை யுற்றமை புலப்பட, "அறிந்தறிந்து அறியாது ஐயகோ ஐயகோ" எனவும் இயம்புகின்றார். மாட்டாமை எய்திய வேதங்கள் அறிவு மழுங்கிச் செயலற்றுப் போத முற்றமை தோன்ற, "அறிவின் மறிந்தனம் அயர்ந்தேம் என மறை அனந்தம் வாய் குழைந்து உரைத்து உரைத்து உரையும் முறிந்திட வாளா இருந்த" என்று இசைக்கின்றார். அறிவு மறிதலாவது அறிவு அறிய மாட்டாது மழுங்குதல். மயர்தல் - மயங்குதல். மறை அனந்தம் என்பது எண்ணிறந்த வேதங்களை. மறைகள் ஓதப்படும் இயல்பினவா தலால் ஓத மாட்டாமை விளங்க, "மறை யனந்தம் வாய் குழைந்து உரைத்துரைத்து" எனவும், "உரையும் முறிந்திட வாளா இருந்த" எனவும் சொல்லுகின்றார். உரை முறிதலாவது மேலும் ஓத மாட்டாமல் ஒழிதல். வாளா இருத்தலாவது மௌனம் எய்துதல். இவ்வாறு வேத விற்பன்னர்கள் மொழிகின்றார்கள் என்பாராய், "என்று அறிஞர் மொழியும் ஓர் தனிப் பெருந் தலைவன்" என்று கூறுகின்றார். செறிந்து என்பதற்குஉரிய எழுவாயான அன்பு அறிவிக்கப்பட்டது. எல்லாம் வல்ல பெருமானாதலின் அவனுடைய திருவுள்ளத்தின் விருப்பை ஒருவராலும் தடுக்கமுடியாது என்றற்கு, "அவன் தன் திருவுளம் தடுப்பவர் யாரோ" என்று புகல்கின்றார். (9)

4003. கருமுதற் கருவாய்க் கருவினுட் கருவாய்க்
கருஎலாங் காட்டும்ஓர் கருவாய்க்
குருமுதற் குருவாய்க் குருஎலாம் கிடைத்த
கொள்கையாய்க் கொள்கையோ டளவா
அருமுதல் அருவாய் அல்லவாய் அப்பால்
அருட்பெருஞ் ஜோதியாந் தலைவன்
மருவிஎன் உளத்தில் புகுந்தனன் அவன்தன்
வண்மையைத் தடுப்பவர் யாரே.

**உரை:** கருக் கொண்டு தோன்றும் பொருள்கள் எல்லாவற்றிற்கும் முதற் கருவாகவும், அக்கருவுக்குள் நிலவும் உட்கருவாகவும், கரு வகைகள் எல்லாவற்றையும் தோற்றுவிக்கும் ஒப்பற்ற கருவாகவும், ஞானம் வழங்கும் குருமுதல்வர்கள் எல்லார்க்கும் முதற் குருவாகவும், அக்குரு முதல்வர்களின் கருத்தெல்லாம் திரண்ட கொள்கையாகவும், கொள்கையோடு கலவாத அருவப் பொருட் கெல்லாம் அருவாயும், அல்லதாயும், அதற்கப்பாலதாயும் விளங்கும் அருட் பெருஞ் சோதியாகிய தலைவன் என்பால் அடைந்து என் உள்ளத்திற் புகுந்தருளினான்; ஆகவே அவனது அருள் வண்மையைத் தடுக்க வல்லவர் யாவர். எ.று.

உயிர்ப் பொருள்கள் அனைத்தும் கரு இடமாகத் தோன்றும் இயல் பினவாதலின் அக்கருவிற்கு முதலும் இறைவன் என்பது விளக்குதற்கு, "கரு முதற் கருவாய்" என்றும், அக்கருப் பொருட்கள் அத்தனையும் தோற்றுவிப்பவன் இறைவனாதல் பற்றி, "கருவினுட் கருவாய்" என்றும், "கருவெலாம் காட்டும் ஓர் கருவாய்" என்றும் உரைக்கின்றார். உயிர் வகைகள் அறிவுடையவாயினும் காட்டக் காண்பதல்லது தாமே எவற்றையும் முற்றவும் கண்டறியும் மொய்ம்பின

அல்லவாதலின் அவற்றிற்கு உண்மை காட்டும் அறிவுப் பொருள் இறைவனேயாதலால் அவனை, "குரு முதற் குருவாய்" எனவும், குருமார்களால் உணர்த்தப்படுவன அவரவர் கொள்கைகளாதலின் அக் கொள்கைகள் எல்லாவற்றிற்கும் முதலிடமாவது இறைவன் திருவருளாதல் பற்றி, "குரு வெலாம் கிடைத்த கொள்கையாய்" எனவும் குறிக்கின்றார். அருவப் பொருட்களுக்கு உருவம், கொள்கை இல்லாமையால் அதனை, "கொள்கையோடு அளவா அரு" என்றும், அருவப்பொருட்கள் அனைத்திற்கும் முதலாதல் விளங்க, 'முதல் அருவாய்' என்றும், அருவமும் உருவமும் இல்லாதவன் இறைவன் என்பது பற்றி, "அல்லவாய்" என்றும், உருவமும் அருவமுமாகிய பொருள் வகைகளுக்கு இடமும் காலமும் உண்மையின் இறைவனாகிய பரம் பொருட்கு அவை யில்லை என்பது தோன்ற அப்பால் இவை எல்லாவற்றையும் கடந்த சிவ பரம்பொருள் அருள் ஞான சோதிப் பொருள் என்பது பற்றி, "அருட் பெருஞ் சோதியாம் தலைவன்" என்றும் இயம்புகின்றார். அப்பெருமான் அன்போடு என்னை அடைந்து என்னுள்ளத்தில் எழுந்தருளுகின்றானாதலால் அவனைக் கண்டு தியான வாயிலாக வழிபடுவதல்லது ஏன் வந்தருளினாய் எனத் தடுப்பவர் ஒருவரும் இல்லை என்று வலியுறுத்தற்கு, "மருவு என்னுளத்தில் புகுந்தனன் அவன்தன் வன்மையைத் தடுப்பவர் யாரே" என உரைக்கின்றார். (10)

திருச்சிற்றம்பலம்

## 49. கண்டேன் கனிந்தேன் கலந்தேன் எனல்

அஃதாவது, வள்ளற் பெருமானுடைய திருவுள்ளத்தில் எழுந்தருளிய சிவபெருமானது திருவருட் காட்சியைத் தியான வாயிலாக ஞானக் கண்ணுல் கண்டு, வழிபட்டு அவ்விடத்துச் சுரந்து பெருகும் இன்பத்தில் திளைத்து ஒன்றிய திறம் கூறுவதாம்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4004. அருளரசை அருட்குருவை அருட்பெருஞ் ஜோதியை என்
அம்மையைஎன் அப்பனைஎன் ஆண்டவனை அமுதைத்
தெருளுறும்என் உயிரைஎன்றன் உயிர்க்குயிரை எல்லாம்
செய்யவல்ல தனித்தலைமைச் சித்தசிகா மணியை
மருவுபெரு வாழ்வைஎல்லா வாழ்வும்எனக் களித்த
வாழ்முதலை மருந்தினைமா மணியைஎன்கண் மணியைக்
கருணைநடம் புரிகின்ற கனகசபா பதியைக்
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன்
கலந்துகொண்டேன் களித்தே.

உரை : அருளரசனும், அருட் குருவும், அருட் பெருஞ் சோதியும் எனக்கு அம்மை அப்பனும், ஆண்டவனும், அமுதாகியவனும், தெளிவு மிக்க என்னுடைய உயிரும், என் உயிர்க்குயிரும், எல்லாம் செய்ய வல்ல ஒப்பற்ற தலைமை சான்ற சித்த சிகாமணியும், பெறுதற்குரிய பெருவாழ்வையும் ஏனைய எல்லா வாழ்வையும் எனக்குத் தந்தருளிய என்னுடைய வாழ்முதலும், மருந்தும், மாமணியும், என் கண்மணியுமாய் அருள் கூத்தாடுகின்ற கனக சபாபதியாகிய சிவபெருமானைக் கண் குளிரக் கண்டு மனங் கனிந்த மகிழ்வுடன் கலந்து கொண்டேன். எ.று.

அருளரசு - அருளாட்சி புரிபவன். திருவருள் ஞானத்தை நல்குபவனுதலால் சிவபெருமானை, "அருள் குரு" என்று கூறுகின்றுர். திருவருள் ஞான வொளியையே பெரிய ஒளியாக உடையவனுதலால் சிவபெருமானை, "அருட் பெருஞ் சோதி" என்று புகழ்கின்றுர். உருவில்லாத உயிர்க்கு மலப்பிணிப்பு நீங்கும் பொருட்டு உலகு, உடல், கருவி, கரணம், உலகியற் போகம் ஆகியவற்றைத் தந்து அருள் புரி கின்றுனுதலால் இறைவனை, "ஆண்டவன்" என்று பாராட்டுகின்றுர். நினைக்குந் தோறும், பேசுந் தோறும், வழிபடுந் தோறும் இன்ப அமுதமாய் மகிழ்வித்தலால் ஆண்டவனை, "அமுது" எனக் கூறுகின்றுர். அறிவால் தெளிவுறும் பொருளாதலால் உயிரை, "தெருளுறும் உயிர்" என்று சிறப்பிக்கின்றுர். உயிர்க்குயிராய் இருந்து உயிரை இயக்குபவன்.

வரம்பிலாற்றல் உடையவன் என்பது பற்றியும், ஆன்மாக்களின் சிந்தைக் கண் உயர்ந்து விளங்குதலும் உடையவனுதலால், "எல்லாம் செய்ய வல்ல தனித் தலைமைச் சித்த சிகாமணி" என்று செப்புகின்றார். சித்தர்களுக் கெல்லாம் முடிமணியாக விளங்குபவன் என்றற்கு, "சித்த சிகாமணி" என உரைக்கின்றார் எனினும் அமையும். பெருமைக்கு எல்லையாகிய பெருவாழ்வை நல்குபவனுதலால், "பெருவாழ்வு" என்று புகழ்கின்றார். மண்ணக வாழ்வு, தேவருலக வாழ்வு முத்தி வாழ்வு என வாழ்வு வகை பல கூறப்படுதலின், "எல்லா வாழ்வும்" என இயம்பு கின்றார். எல்லா வகை வாழ்வும் தமக்குக் கிடைத்தமை பற்றி, "எல்லா வாழ்வும் எனக்கு அளித்த வாழ்முதல்" என இசைக்கின்றார். சிவபெருமானுடைய திருநடனத்தால் உயிர்கள் எல்லா நலங்களையும் பெறுவதால் அதனை, "கருணை நடம்" என்றும், அந்த நடனத்தைப் பொற் சபையின்கண் புரிவது பற்றி, "கனக சபாபதி" என்றும் இயம்பு கின்றார். கூத்தாடும் பெருமானை ஞான நாட்டம் கொண்டு கண்டு கண் குளிரப் பார்த்து ஆங்குப் பெருகும் பேரின்பத்தால் உளம் குழைந்து ஒன்றி விடுகின்றமை புலப்பட, "கண்டு கொண்டேன் கனிந்து கொண்டேன் களித்துக் கலந்து கொண்டேன்" என்று கூறுகின்றார்.

இதனால், வடலூர் வள்ளல் கூத்தப் பெருமானைக் கண்டு மனம் குழைந்து அவனது அருளில் கலந்து ஒன்றிய திறம் உரைத்தவாறும். (1)

4005. திருத்தகுவே தாந்தமொடு சித்தாந்த முதலாத்
திகழ்கின்ற அந்தம்எலாம் தேடியுங்கண் டறியா
ஒருத்தனைஉள் ஒளியைஒளிர் உள்ஒளிக்குள் ஒளியை
உள்ளபடி உள்ளவனை உடையபெருந் தகையை
நிருத்தனைமெய்ப் பொருளான நின்மலனைச் சிவனை
நித்தியனைச் சத்தியனை நிற்குணனை எனது
கருத்தனைச்சிற் சபையோங்கு கடவுளைஎன் கண்ணால்
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன்
கலந்துகொண்டேன் களித்தே

உரை : திருவிளங்குகின்ற வேதாந்தம் சித்தாந்தம் முதலாக விளக்கமுறும், அந்தங்களெல்லாம் வல்லவர்கள் தத்தமக்குரிய நெறியில் முயன்று தேடியும் கண்டறியாத சிவபெருமானுகிய ஒருவனும், உள்ளத்தின்கண் ஒளிர்கின்ற ஒளிப் பொருளும், அவ்வொளிக்குள் ஒளியாய் ஒளிர்பவனும், உள்ளதன் உண்மைத் திரிபின்றி உள்ளவனும்; உலகுயிர்களை உடைமையும் அடிமையுமாக உடையவனும், சபையின் கண் கூத்தாடும் பெருமானும், மெய்ப்பொருளாகிய நின்மலனும், சிவனும், நித்தியனும், சத்தியனும், நிற்குணனும், என்னுடைய தலைவனும், ஞான சபையின்கண் ஓங்குகின்ற கடவுளுமாகிய சிவ பரம் பொருளை என் ஞானக் கண்களால் நன்கு கண்டு மனம் குழைந்து அவரது திருவருள் இன்பத்தில் கலந்து கொண்டேன். எ.று.

நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என அந்தங்கள் ஆறு உண்மையின், "திருத்தகு

வேதாந்தமொடு சித்தாந்த முதலாத் திகழ்கின்ற அந்தமெலாம்" எனவும், அவ்வந்தங்களை யுணர்த்தும் நூல்களைப் பயின்று வல்ல பெருமக்களை, "அந்தம்" எனவும் குறிக்கின்றார். அவர்கள் அனைவரும் வேதாந்த சித்தாந்த முதலாக வுள்ள அந்தங்கள் நல்கும் ஞானக் கண் கொண்டு பன்னாள் முயன்று தேடியும் காண முடியாதவனாயினான் சிவபெருமான் என்பதை விளக்குதற்கு, "அந்தமெலாம் கண்டறியா ஒருத்தன்" என வுரைக்கின்றார். ஆன்மாக்களின் உள்ளத்தின்கண் தங்கி ஒளிர்வதோடு அவ்வொளிக்குள்ளும் நுண்ணிய ஒளியாய்த் திகழ்வது பற்றி, "உள்ளொளியை ஒளிர் உள்ளொளிக்கு உள்ளொளியை" என்று குறிக்கின்றார். எத்துணை உலகங்களைப் படைத்தளிக்கினும் எத்துணைக் காலம் கழியினும் முன் உள்ளபடி ஒரு திரிபுமின்றி என்றுமுள்ள பொருளாதலால் சிவ பரம்பொருளை, "உள்ளபடி உள்ளவன்" எனவும், உலகுகள் அத்தனையும் தனக்கு உடைமையாகவும் உயிர்த்தொகை அத்தனையும் தனக்கு அடிமையாகவும் உடைய பெருமானாதலால், "உடைய பெருந்தகை" எனவும் கூறுகின்றார். கூத்தப் பெருமானாதல் பற்றி, "நிருத்தன்" எனவும், மலக் கலப்பில்லாத உண்மைப் பொருளா தலால், "மெய்ப் பொருளான நின்மலன்" எனவும், சாந்தம் மங்கலம் இன்பம் அன்பு ஆகிய எல்லாம் திரண்டு ஒருருவாய் விளங்குகின்ற பரம்பொருள் என்பது பற்றி, "சிவன்" எனவும், என்றும் உள்ளது பற்றி, "நித்தியன்" எனவும், "சத்தியன்" எனவும் இயம்புகின்றார். மாயா மண்டலத்துக் காரியப் பொருளாகிய குண தத்துவத்தையும் கடந்தவனா தலின், "நிர்க்குணன்" என்றும், அப்பெருமான் தனக்குத் தலைவன் என்பது தோன்ற, "எனது கருத்தன்" என்றும், ஞான சபைக்கண் ஞானவான்களுக்குக் காட்சி வழங்கும் ஞான மூர்த்தியாதல் விளங்க, "சிற்சபை ஓங்கு கடவுள்" என்றும் எடுத்துரைக்கின்றார். அப்பெருமானை ஞானக் கண்ணால் கண்டு அவனது அருளொளியால் குழைந்து களிப்புற்று அவரது திருவருள் ஞான இன்பத்தில் ஒன்றினமை புலப்பட, "என் கண்ணால் கண்டு கொண்டேன் கனிந்து கொண்டேன் களித்துக் கலந்து கொண்டேன்" என்று கூறுகின்றார்.

இதனால், ஞான சபையின்கண் ஓங்குகின்ற கடவுளாகிய சிவ முதற் கடவுளைக் கண் குளிரக் கண்டு வடலூர் வள்ளல் கலந்து கொண்டமை தெரிவித்தவாறாம். (2)

4006. பாட்டுவந்து பரிசளித்த பதியைஅருட் பதியைப்
பசுபதியைக் கனகசபா பதியைஉமா பதியைத்
தேட்டமிகும் பெரும்பதியைச் சிவபதியை எல்லாம்
செய்யவல்ல தனிப்பதியைத் திகழ்தெய்வப் பதியை
ஆட்டியல்செய் தருள்பரம பதியைநவ பதியை
ஆனந்த நாட்டினுக்கோர் அதிபதியை ஆசை
காட்டிஎனை மணம்புரிந்தென் கைபிடித்த பதியைக்
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன்
கலந்துகொண்டேன் களித்தே.

உரை : அன்பர்கள் பாடுகின்ற பாட்டுக்களை மகிழ்ந்து அவ்வப் போது பரிசளித்து அருளிய பதிப் பொருளும், அருள் ஞானம் வழங்கும்

பதிப் பொருளும், பசுபதியும், கனக சபாபதியும், உமாதேவிக்குத் தலைவனாகிய பதிப் பொருளும், தேடுவார் தேடத் தேட மிக்குச் சிறக்கும் பெரிய பதிப் பொருளும், சிவமாகிய பதிப் பொருளும், எல்லாம் செய்ய வல்ல தனிப் பதியும், விளங்குகின்ற தெய்வத் தன்மையை யுடைய பதிப் பொருளும், பலவகை நடனங்களைச் செய்தருளும் பரம பதியும், நவ பதியும், இன்ப உலகமாகிய முத்தி உலகுக்கு அதிபதியும், இல்லாத ஆசையைக் காட்டி என்னை மணம் செய்து கொண்டு என் கையைப் பிடித்த ஞானத் தலைவனுமான சிவபெருமானைத் திருவருட் கண் கொண்டு கண்டு உளங் குழைந்து அவனதருள் இன்பத்தில் திளைத்து ஒன்றினேன். எ.று.

ஞானசம்பந்தர், சுந்தரர், பாணபத்திரர் முதலிய பலர்க்கு இறைவன் பரிசளித்த வரலாறுகளைப் புராணங்கள் உரைத்தலால், "பாட்டு வந்து பரிசளித்த பதி" என்று பகர்கின்றார். "பாடுவார்க் கருளும் எந்தை" (முதுகுன்) என்றும், "பண்ணென்ற இசை பாடும் அடியார்கள்குடியாக மண்ணின்றி விண் கொடுக்கும் மணிகண்டன்" (புள்ளிருக்கு) என்றும் ஞானசம்பந்தர் முதலியோர் கூறுவது காண்க. பசுபதி - உயிர்களுக் கெல்லாம் தலைவன். அன்பர்கள் அன்பினால் காண்டற்குப் பலகால் முயன்று தேடுந்தோறும் தேடும் எல்லைக்கு அப்பாற் சென்று திகழ்தலின் சிவனை, "தேட்ட மிகும் பெரும் பதி" எனவும், தெய்வங்களுக் கெல்லாம் பரதெய்வமாய் அவர்களை ஆண்டருளுவது பற்றி, "தெய்வப் பதி" எனவும் சிறப்பிக்கின்றார். ஆடல் வகை பலவாயினும் அவற்றை ஆட வல்லார்க் கெல்லாம் மேலான ஆடற் பதியாவது பற்றி இறைவனை, "ஆட்டியல் செய்தருள் பரமபதி" என்று இயம்புகின்றார். ஆனந்த நாடு - வற்றாத பேரின்பம் நிறைந்த நாடாகிய முத்தி யுலகம். அவ்வுலகிற்குத் தனிமுதற் பதியாதல் தோன்ற, "ஆனந்த நாட்டினுக்கு ஓர் அதிபதி" என்று கூறுகின்றார். சிவநெறிக்கண் ஆசை உண்டுபண்ணித் திருவருள் இன்பத்தின் வேட்கை மிகுவித்துத் தன்பால் நீங்காத காதல் கொள்ளச் செய்தமை விளங்க வடலூர் வள்ளல், "ஆசை காட்டி எனை மணம் புரிந்தென் கை பிடித்த பதி" என்றும், அவருடைய சிவஞான போகத்தை அனுபவித்தமை புலப்பட, "கண்டு கொண்டேன் கனிந்து கொண்டேன் களித்துக் கலந்து கொண்டேன்" என்றும் இயம்புகின்றார்.

இதனால், சிவ பரம்பொருள் வடலூர் வள்ளலார்க்குச் சிவநெறிக்கண் ஆசையுறுவித்துச் சிவபோகத்தில் ஒன்றச் செய்தமை உரைத்தவாறும். (8)

4007. மதித்திடுதல் அரியஒரு மாணிக்க மணியை
வயங்கியபேர் ஒளியுடைய வச்சிரமா மணியைத்
துதித்திடுவே தாகமத்தின் முடிமுடித்த மணியைச்
சுயஞ்சோதித் திருமணியைச் சுத்தசிவ மணியை
விதித்தல்முதல் தொழில்இயற்று வித்தகுரு மணியை
விண்மணியை அம்மணிக்குள் விளங்கியமெய்ம் மணியைக்
கதித்தசுக மயமணியைச் சித்தசிகா மணியைக்
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன்
கலந்துகொண்டேன் களித்தே.

உரை : விலை மதிக்கவொண்ணாத ஒப்பற்ற மாணிக்க மணியும், விளங்குகின்ற பேரொளியை யுடைய வைர மாமணியும், போற்றப்படுகின்ற வேதாகமங்களின் முடிவில் இருக்கின்ற ஞான மணியும், தானாக ஒளிர்கின்ற ஒளியையுடைய திருமணியும், சுத்த சிவ மணியும், படைத்தல் முதலிய தொழில்களைச் செய்விக்கும் குருமணியும், விண்மணியும், அம் மணிக்குள் மணியாய் விளங்குகின்ற மெய்ம்மணியும், விளைகின்ற சுக மயமான சுக மணியும், சித்த சிகாமணியுமாகிய சிவ பெருமானைத் தியான வாயிலாக ஞானக் கண்ணால் கண்டு உளம் குழைந்து ஆங்குத் தோன்றிய இன்பத்தில் திளைத்து மகிழ்ந்து ஒன்றினேன். எ.று.

மதித்திடுதல் - விலை மதித்தல். மாணிக்க மணி - சிவந்த ஒளி பரப்பும் செம்மணி. தூய வெண்மையான ஒளி பரப்புவது வைரமணி. சிவபெருமானுடைய திருமேனியில் அணிந்த திருநீற்றின் தூய ஒளியைப் புலப்படுத்தற்கு "வைர மணி" என்கின்றார். வச்சிர மணி - வைர மணி. வேதாகமங்களின் முடிந்த ஞானமாதல் பற்றி, "வேதாகமத்தின் முடி முடித்த மணி" எனச் சிவமாகிய ஞான மணியைச் சிறப்பிக்கின்றார். ஏனை மணிகள் சிவத்தின் ஒளி பெற்றுத் திகழ்வது போலின்றிச் சிவனது திருமேனி ஒளி தானே தனி ஒளியாதல் பற்றி, "சுயஞ் சோதித் திருமணி" என்று சொல்லுகின்றார். விதித்தல் - படைத்தல். படைத்தல் முதலிய தொழில்களைச் செய்யும் பிரமன் முதலாக வுள்ள தேவர்களை அவரவர்க்குரிய தொழில்களை முறையே செய்யுமாறு இயக்குவது பற்றி, "விதித்தல் முதல் தொழில் இயற்றுவித்த குருமணி" என இயம்புகின்றார். விண் மணி - ஞாயிறு திங்கள் முதலிய வாய் வானத்தில் விளங்குகின்ற ஒளிப் பொருள்கள். அப் பொருட்கள் ஒளி செய்வதற்கு ஏதுவாகிய காரண ஒளியை நல்குவது பற்றி, "விண் மணியை அம்மணிக்குள் விளங்கிய மெய்ம்மணி" என்று விளம்புகின்றார். கதித்தல் - விளைத்தல்; தோன்றுதல். ஆன்மாக்கள் பெற விரும்பும் ஆனந்த மயமாக விளங்குதலால் சிவ பரம்பொருளை, "சுக மய மணி" என்று சொல்லுகின்றார். புருவ நடுவுற்ற தியானத்தால் திருவருள் ஞான நாட்ட மெய்திச் சிவானுபவத்தைத் தாம் பெறுவது விளங்க வடலூர் வள்ளல், "கண்டு கொண்டேன் களிந்து கொண்டேன் களித்துக் கலந்து கொண்டேன்" என்று கட்டுரைக்கின்றார்.

இதனால், தியானத்தால் எய்திய ஞான நாட்டமுற்றுச் சிவானந்தத்தில் மூழ்கி திளைத்தமை தெரிவித்தவாறும். (4)

4008. மாற்றைஅளந் தறிந்திலம்என் றருமறைஆ கமங்கள்
வழுத்தமணி மன்றோங்கி வயங்கும்அருட் பொன்னை
ஆற்றல்மிகு பெரும்பொன்னை ஐந்தொழிலும் புரியும்
அரும்பொன்னை என்தன்னை ஆண்டசெழும் பொன்னைத்
தேற்றமிகு பசும்பொன்னைச் செம்பொன்னை ஞான
சிதம்பரத்தே விளங்கிவளர் சிவமயமாம் பொன்னைக்
காற்றனல்ஆ காயம்எலாம் கலந்தவண்ணப் பொன்னைக்
கண்டுகொண்டேன் களிந்துகொண்டேன்
கலந்துகொண்டேன் களித்தே.

உரை : ஒத்த பொருள் என வேறு ஒன்றையும் அறிகிலேம் என்று அருமை வாய்ந்த வேதாகமங்கள் சொல்லித் துதிக்க, மணி இழைத்த சபையின்கண் உயர்ந்து விளங்கும் திருவருளே உருவாக யுடைய பொன்னையும், பேராற்றல் படைத்த பெருமை மிக்க பொன்னையும், படைத்தல் முதலிய ஐவகைத் தொழில்களையும் செய்கின்ற பெறற்கரிய பொன்னையும், எளியவனாகிய என்னை ஆண்டருளும் செழும் பொன்னையும், தெளிந்த ஒளி மிக்க பசும் பொன்னையும், செம்பொன்னையும், ஞான மயமாகிய சிதம்பரத்தின்கண் விளங்குகின்ற சிவ மயமான பொன்னையும், ஆகாயம், காற்று, தீ, நீர், மண் ஆகிய பூதங்களனைத்தும் கலந்த அழகிய பொன்னையும் ஒப்பவனாகிய சிவ பரம்பொருளைத் தியானத்தால் அருள் நாட்டம் பெற்று, அங்குத் தோன்றிய பேரின்பத்தில் கலந்து திளைத்து மகிழ்ந்து இன்புற்றேன். எ.று.

மாற்று – ஒத்த பொருள். மறை ஆகமங்களை முற்றவும் ஓதிய ஞான வான்கள் சொல்வதை வேதாகமங்களின் மேல் ஏற்றிக் கூறுவதால், "அருமறை ஆகமங்கள் வழுத்த" எனவும், அம்பலத்தின் தோற்றப் பொலிவு தோன்ற, "மணி மன்று" எனவும், பொன் போல் மேனி யுடையவனாதலால் சிவனை, "அருட் பொன்" எனவும் புகல்கின்றார். மாற்றறிய வாராத பொன் மிக்க வன்மை யுடையதாதலால், "ஆற்றல் மிகு பெரும் பொன்" என்றும், அருள் ஞானம் வழங்கித் தம்மை ஆண்டு கொண்டமை விளங்க, "என்றனை ஆண்ட செழும் பொன்" என்றும் வடலூர் வள்ளல் உரைக்கின்றார். தெளிந்த ஒளியும் மரகதத்தின் நிறமுமுடைய உமாதேவியை உடன் கொண்டுறையும் குறிப்புப் புலப் பட, "தேற்ற மிகு பசும்பொன்" என்றும், சிவத்தின் தனியருட் திருமேனி தூய பொன்னிறம் உடையதாதல் பற்றி, "செம்பொன்" என்றும் தெரிவிக்கின்றார். ஞான சிதம்பரம் – ஞானமே உருவாகிய சிதம்பரம். "மெய்ஞ் ஞானமேயான அம்பலம்" (ஞான) என்று சேக்கிழார் பெருமானும் எடுத்துரைப்பது காண்க. சிதம்பரத்தில் காட்சி தரும் கூத்தப் பெருமான் சிவ மயமாய்த் திகழ்வது பற்றி, "சிதம்பரத்தே விளங்கி வளர் சிவ மயமாம் பொன்" என்று சிறப்பிக்கின்றார். நிலம் முதலிய ஐந்தும் கலந்த பேருருவமே சிவமாதலின், "காற்று அனல் ஆகாயம் எலாம் கலந்த வண்ணப் பொன்" என்று சொல்லி மகிழ்கின்றார்.

இதனால், சிவ பரம்பொருளைப் பொன் மயமாகக் கண்டு பூரித்து மகிழ்ந்த திறம் புகன்றவாறும். (5)

4009. **ஆய்தருவே தாகமத்தின் அடிமுடிநின் றிலங்கும்**
**அரியபெரும் பொருளைஅவைக் கனுபவமாம் பொருளை**
**வேய்தருதத் துவப்பொருளைத் தத்துவங்கள் விளங்க**
**விளங்குகின்ற பரம்பொருளைத் தத்துவங்கள் அனைத்தும்**
**தோய்தரல்இல் லாததனிச் சுயஞ்சோதிப் பொருளைச்**
**சுத்தசிவ மயமான சுகாதீதப் பொருளைக்**
**காய்தரல்இல் லாதென்னைக் காத்தஅருட் பொருளைக்**
**கண்டுகொண்டேன் களித்துகொண்டேன்**
**கலந்துகொண்டேன் களித்தே.**

**உரை:** ஆய்ந்து ஓதப்படுகின்ற வேதாகமங்களின் அடி, நடு, முடி என்ற எல்லா விடத்தும் நின்று விளங்கும் அறிதற்கரிய பெரும் பொருளும், அவற்றின் ஞானத்தால் அனுபூதியாகும் பொருளும், மேன் மேலாய் உள்ள தத்துவப் பொருளும், தத்துவங்கள் தனித்தனி நின்று விளங்குகின்ற பரம்பொருளும், அத்தத்துவங்கள் யாவற்றுலும் கலத்தலில்லாத தனித்த சுயஞ் சோதிப் பொருளும், சுத்த சிவ மயமான கரணங்கட் கெல்லாம் சுகாதீதமாய் நிலவும் பொருளும், என்பால் வெறுப்புக் கொள்ளாமல் காத்தருளிய அருட் பெரும் பொருளுமாகிய சிவத்தை ஞானத்தாற் கண்டு, கருவி கரணங்கள் குழைந்து மகிழ்ந்து கலந்து கொண்டேன். எ.று.

ஞானிகளால் நாள்தோறும் ஆய்ந்தாய்ந்து உண்மை காண்டற்கு ஓதும் உயர் நூலாக விளங்குதலால், "ஆய்தரு வேதாகமம்" எனவும், அவற்றின் பொருளனைத்தும் சிவ பரம்பொருளேயாக இருத்தலால், "அடிமுடி நின்றிலங்கும் அரிய பெரும் பொருள்" எனவும், அவ்வேதாகம ஞானங்களால் அனுபவிக்கப்படும் பொருளாதல் விளங்க, "அவைக்கு அனுபவமாம் பொருள்" எனவும் அறிவிக்கின்றூர். அவற்றிற்கு எனற்பாலது சாரியைப் பெருமல் அவைக்கு என வந்தது. அடிப்படையில் ஆன்மதத்துவமும், அதன் மேல் வித்தியா தத்துவமும், அதன் மேல் சிவ தத்துவமும் ஒன்றின் மேல் ஒன்ருய் அடுக்கி நிற்றலால் தத்துவங் களை, "வேய்தரு தத்துவம்" என்றும், அத்தத்துவங்களால் உணரப்படுவது பற்றி, "தத்துவப் பொருள்" என்றும், அத்தத்துவங்கள் தாமும் ஆன்ம ஞானப் பொருள் விளக்கத்திற்குத் துணையாவது தோன்ற, "தத்துவங்கள் விளங்க விளங்குகின்ற பரம்பொருள்" என்றும் உரைக்கின்றூர். பரம் பொருளை அறிதற்குக் கருவியாவதல்லது அப்பரம்பொருளாவது இன்மை பற்றி, "தத்துவங்கள் அனைத்தும் தோய்தரல் இல்லாத தனிச்சுயஞ் சோதிப் பொருள்" எனவும், அச்சுயஞ் சோதிப் பொருளின் இயல்பு இது வென விளக்குதற்கு, "சுத்த சிவ மயமான சுகாதீதப் பொருள்" எனவும் சொல்லுகின்றூர். சுகாதீதம், கருவி கரணங்களால் ஆன்மாக்கள் பெறும் ஞான சுகத்திற்கும் அப்பாலாய் ஓங்கிய பரசுகப் பொருளாதலின் சிவ பரம்பொருளை "சிவ மயமான சுகாதீதப் பொருள்" எனச் சுட்டிக் கூறு கின்றூர். உயர்ந்த ஞானவான்களும் முனிபுங்கவர்களும் தேவ தேவர் களும் இருப்பத் தம்மைப் புறக்கணிக்காமல் அன்பால் ஆண்டு கொண்ட திறம் புலப்பட, "காய்தரல் இல்லாது என்னைக் காத்த அருட் பொருள்" என்று மகிழ்ந்து மொழிகின்றூர்.

**இதனுல், சுகாதீதப் பொருளாகிய சிவத்தைத் தியான ஞானத்தால் கண்டு சிவானுபவம் பெற்ற சிறப்பு தெரிவித்தவாறும். (6)**

4010. **திருத்தமிகு முனிவர்களும் தேவர்களும் அழியாச்**
**சித்தர்களும் சிருட்டிசெயும் திறத்தர்களும் காக்கும்**
**அருத்தமிகு தலைவர்களும் அடக்கிடவல் லவரும்**
**அலைபுரிகின் றவர்களும்உள் அனுக்கிரகிப் பவரும்**

பொருத்துமற்றைச் சத்திகளும் சத்தர்களும் எல்லாம்
பொருள்எதுவோ எனத்தேடிப் போகஅவர் அவர்தம்
கருத்தில்ஒளித் திருக்கின்ற கள்வனைஎன் கண்ணால்
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன்
கலந்துகொண்டேன் களித்தே.

உரை: குற்றமின்றி உயர்ந்த முனிவர்களும், தேவர்களும், இறத்தலில்லாத சித்தர்களும், படைத்தலைச் செய்யும் தேவர் இனங்களான பிரமர்களும், காத்தலைச் செய்கின்ற பொருள் மிக்க தலைவர்களான நாரணர்களும், அழித்தலைச் செய்து வருத்தும் உருத்திரர்களும், அருள் புரிகின்ற தேவர்களும், செய்பவர்களையும் செயல்களையும் பொருத்துகின்ற சத்திகளும் சத்திமான்களும் ஆகிய எல்லோரும் மெய்யாகிய பரம்பொருள் எதுவோ என்று தேடிச் செல்ல அவரவர் மனத்தின்கண் மறந்திருக்கின்ற சிவ பெருமானை என் கண்ணால் கண்டு மனம் கனிந்து மகிழ்ந்து கலந்து கொண்டேன். எ.று.

பொறி புலன்களின் சேட்டைகளால் விளையும் குற்றங்களின் நீங்கியவர் முனிவர்களாதலால் அவர்களை, "திருத்தமிகு முனிவர்கள்" எனச் சிறப்பிக்கின்றார். எண்வகைச் சித்திகளையும் உடைமையால் சித்தர்களை, "அழியாச் சித்தர்" என்று புகழ்கின்றார். காத்தற் தொழிலைச் செய்யும் நாரணர்கள் பல்வகைத் திரு நிரம்பியவர்களாதலால் அவர்களை, "காக்கும் அருத்த மிகு தலைவர்கள்" என்று கூறுகின்றார். பிறந்திறந்து வரும் உயிர்களின் ஆற்றலை அடக்கி ஒய்வு பெறுவிக்கும் திறன் உடையவனாதலின் உருத்திரர்களை, "அடக்கிட வல்லவர்" எனவும், அந்நெறியில் அவர்களை அலைத்து அனுக்கிரகம் செய்பவரும் அவர்களேயாதலால், "அடக்கிட வல்லவரும் அலை புரிகின்றவர்களும் உள் அனுகிரகிப்பவரும்" என்று உரைக்கின்றார். சத்திகள் ஆன்மாவின் இச்சை, ஞானம், கிரியை என்ற மூவகைச் சத்திகளை எழுப்பிச் செய்தற் குரிய செயல்களைச் செய்தற்குச் செலுத்துதலால் சத்திகளை, "பொருத்தும் மற்றைச் சத்திகள்" என்றும், அச்சத்திகளை யுடைய முதல்வர்களை, "சத்தர்கள்" என்றும் இயம்புகின்றார். இவர்கள் பலரும் தத்தமக்குரிய தொழில் வகையில் வேறுபடுவராயினும் மெய்ப்பொருள் நாட்டத்தில் ஒத்த கருத்துடையவர்களாதலை நாம் உணரும் பொருட்டு, "எல்லாம் பொருள் எதுவோ எனத் தேடிப் போக" என்றும், அவர்கள் உள்ளத்து இறைவன் அவனை யறியாமல் உண்ணின்று ஊக்கும் நலம் புலப்பட, "அவரவர்தம் கருத்தில் ஒளித்திருக்கின்ற கள்வன்" என்றும் இசைக்கின்றார்.

இதனால், முனிவர்களுக்கும், பிரமர்கள் முதலிய தேவ தேவர்களுக் கும், சத்தி சத்திமான்களுக்கும் உள் நின்று ஒளிரும் சிவத்தின் சிறப்பைத் தெரிவித்தவாறும். (7)

4011. கோணாத நிலையினராய்க் குறிகுணங்கண் டிடவும்
கூடாத வண்ணம்மலைக் குகைமுதலாம் இடத்தில்
ஊணாதி விடுத்துயிர்ப்பை அடக்கிமனம் அடக்கி
உறுபொறிகள் அடக்கிவரும் உகங்கள்பல கோடித்

**தூணாக அசைதல் இன்றித் தூங்காது விழித்த**
**தூயசதா நிட்டர்களும் துரியநிலை இடத்தும்**
**காணாத வகைஒளித்த கள்வனைஎன் கண்ணால்**
**கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன்**
**கலந்துகொண்டேன் களித்தே.**

**உரை:** நேர்மை குன்றாத நிலையினை யுடையவராயும், குறி குணங்கள் காண்பதற் கியலாதவாறு மலைகளிலும் குகைகளிலும் பிற இடங்களிலும் ஊணுறக்கமின்றி உயிர்க்காற்றையும் மனத்தையும் பொறி புலன்களையும் அடக்கிப் பல கோடி யுகங்களாகத் தூண் போல் அசைவின்றித் தூங்கா திருக்கின்ற தூய சதா நிட்டர்களாயும் உள்ள பெரியோர்கள் துரியக் காட்சியினும் காண மாட்டாவாறு மறைந்து விளங்கும் கள்வனாகிய சிவ பெருமானைக் கண்களால் கண்ணாரக் கண்டு மனங் குழைந்து மகிழ்ந்து கண்டு கொண்டேன். எ.று.

முதுகெலும்பு கோணாதபடி நிமிர்ந்திருந்து தலை சாயாமல் நேரிய நிலையில் அமர்ந்து யோகம் புரிதலின் யோகிகளை, "கோணாத நிலையினர்" என்று குறிக்கின்றார். அவர்கள் இருந்த நிலையில் அவர்களுடைய பெயரும் குணஞ் செயல்களும் அறிய முடியாத வகையில் இருப்பது பற்றி, "குறி குணம் கண்டிடவும் கூடாத வண்ணம்" எனவும், மலைகளிலும் மலைக் குகைகளிலும் தனித்திருந்து நிட்டை புரிவது அவர்களது இயல்பாதலால், "மலைக்குகை முதலாம் இடம்" எனவும், நிட்டையின் கண் ஊணுறக்கமின்றி மூச்சை யடக்கி மனத்தையும் ஒறிக்கிப் பொறி புலன்களின் சேட்டைகளை அடக்கி ஒழுகுதலால், "ஊணாதி விடுத்து உயிர்ப்பை அடக்கி மனம் அடக்கி உறு பொறிகள் அடக்கி" எனவும், இவ்வாறு நெடுங்காலம் யோகம் புரிவதால் அதனை, "உகங்கள் பல கோடி" எனவும், எத்தனைக் காலம் கழியினும் உடல்நிலை கெடாது அசைவின்றித் தூண் போலிருந்து நிட்டை புரிதலின், "தூணாக அசைதலின்றி" எனவும், இத்தனைக்கும் தளர்ச்சியால் தூங்குதலுமின்றிக் கண் மூடி மோனியாய் இருப்பது விளங்க, "தூங்காது விழித்த தூய சதா நிட்டர்கள்" எனவும் இயம்புகின்றார். சாக்கிரம் முதலாக அவத்தை ஐந்தையும் இயல்பாக யுடைய உயிர் இவ்யோக நிலையில் அவர் உடலின் கண் மேலும் கீழும் போக்குவரவு புரியினும் துரியாவத்தையில் ஞான வொளி பெற்று மெய்ப்பொருளைக் காணும் காட்சியினராயினும் அவர் களாலும் சிவபெருமான் காணப் படாமை தோன்ற, "தூய சதா நிட்டர் களும் துரிய நிலை இடத்தும் காணாத வகை ஒளித்த கள்வன்" என்று உரைக்கின்றார். சதா நிட்டர்கள், எக்காலத்தும் இடையறவின்றி யோகம் புரியும் பெரியோர்கள். இப்பெரியோர்களை, "ஞானிகளாய் உள்ளார்கள் நான்மறையை முழுதுணர்ந் தைம்புலன்கள் செற்று மோனிகளாய் முனிச் செல்வர்" (முதுகுன்) என்று ஞானசம்பந்தர் கூறுகின்றார்.

இதனால், சதா நிட்டர்களின் துரியக் காட்சியிலும் காண்பரியன் சிவன் என்பது தெளிவித்தவாறும். (8)

4012. நீட்டாய சித்தாந்த நிலையினிடத் தமர்ந்தும்
நிகழ்கின்ற வேதாந்த நெறியினிடத் திருந்தும்
ஆட்டாய போதாந்தம் அலைவறுநா தாந்தம்
ஆதிமற்றை அந்தங்கள் அனைத்தினும்உற் றறிந்தும்
வேட்டாசைப் பற்றனைத்தும் விட்டுலகம் போற்ற
வித்தகராய் விளங்குகின்ற முத்தர்கட்கும் தன்னைக்
காட்டாமல் ஒளித்திருக்குங் கள்வனைஎன் கண்ணால்
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன்
கலந்துகொண்டேன் களித்தே.

உரை: நெடிய ஆகமாந்தத்திலும் நிகழ்கின்ற வேதாந்த நெறியி லும், அசைகின்ற போதாந்தத்திலும், அசைவற்ற நாதாந்தம் முதலிய மற்ற அந்தங்கள் அனைத்திலும் பொருந்தி ஆராய்ந்தும், விருப்பத்தைச் செய்கின்ற ஆசை பற்று முதலிய எல்லாவற்றையும் விடுத்து, உயர்ந் தோர்கள் போற்றுகின்ற ஞானிகளாய் விளங்குகின்ற சீவன் முத்தர் களுக்கும் தன்னைக் காண வொண்ணாதபடி மறைத்துக் கொண்டு நிலவும் சிவ பரம்பொருளை என் கண்களால் கண்டு மனங் குழைந்து மகிழ்வுடன் கலந்து கொண்டேன். எ.று.

சிவாகமங்கள் நெடிது பரந்து விரிந்து கிடத்தலின் அவற்றை, "நீட்டாய சித்தாந்தம்" என்றும், யாவராலும் எளிதில் பயிலப்படுவது பற்றி, "நிகழ்கின்ற வேதாந்த நெறி" என்று கூறுகின்றார். ஞானா சிரியனிடத்துப் பலகாற் பயின்று தீராத ஐயங்களால் அலைப்புண்டு ஞானம் பெறும் நெறி போதாந்தமாதல் பற்றி அதனை, "ஆட்டாய போதாந்தம்" எனவும், சிவ தத்துவத்தின் மத்தகத்திருக்கும் நாத தத்து வத்தின்கண் கருவி கரணங்கள் இன்றி ஆன்மா சாந்த நிலை பெறுவ தால் அதனை, "அலைவறு நாதாந்தம்" எனவும் இசைக்கின்றார். ஏனை அந்தங்களாவன: யோகாந்தம், கலாந்தம் என்பன. சித்தாந்தம் முதலிய அந்தங்கள் ஆறும் சிவ பரம்பொருளைக் கண்டறிந் தடைதற்குரிய நிலை களாதலின் அந்நிலைகளில் நின்றோடும் காண்பரியன் சிவன் என்பதற்கு அவற்றை எடுத்தோதுகின்றார். பெத்த நிலை, முத்தி நிலை என்ற இரண்டனுள் ஆசையும், பற்றும், அவலமும், கவலையும் பிறவும் நிறைந்த பெத்த நிலையைத் துறந்து ஒரு பற்றுமில்லாத முத்தி நிலையை அடைய முயலும் சீவன் புத்தர்களுக்கும் அப்பெருமான் பெறுதற் கருமையன் என்பது புலப்படுத்தற்கு, "வேட்டாசைப் பற்றனைத்தும் விட்டு உலகம் போற்ற வித்தகராய் விளங்குகின்ற முத்தர்கட்கும் தன்னைக் காட்டாமல் ஒளித்திருக்கும் கள்வன் என்று உரைக்கின்றார். இதன்கண் புத்தர் என்பது சீவன் முத்தர்களை.

இதனால், சித்தாந்தம் முதலிய அந்தங்கள் ஆறினுள்ளும் முயல் கின்ற பெரியோர்களுக்கும், சீவன் முத்தர்களுக்கும் அடைதற் கரியவன் சிவன் என்று இயம்பியவாறும். (9)

4013. மருள்நெறிசேர் மலஉடம்பை அழியாத விமல
வடிவாக்கி எல்லாஞ்செய் வல்லசித்தாம் பொருளைத்
தருணமது தெரிந்தெனக்குத் தானேவந் தளித்த
தயாநிதியை எனைஈன்ற தந்தையைஎன் தாயைப்
பொருள்நிறைசிற் றம்பலத்தே விளங்குகின்ற பதியைப்
புகல்அரிதாம் சுத்தசிவ பூரணமெய்ச் சுகத்தைக்
கருணைஅருட் பெருஞ்சோதிக் கடவுளைஎன் கண்ணால்
கண்டுகொண்டேன் களித்துகொண்டேன்
கலந்துகொண்டேன் களித்தே.

**உரை:** மயக்க நெறியின்கண் செல்லுகின்ற மலம் பொருந்திய உடம்பை, அழியாத மலமில்லாத தூய உடம்பாக்கி, எல்லாம் செய்ய வல்லதாகிய சித்தாகிய ஞானப்பொருளைச் சமயமறிந்து எனக்குத் தானாகவே மனமுவந்து அளித்த அருட் செல்வரும், என்னைப் பெற்ற தந்தையும் தாயும், ஞானப் பொருள் நிறைந்த திருச்சிற்றம்பலத்தின் கண் விளங்குகின்ற தலைவனும், சொல்லுதற் கரிய சுத்த சிவ பூரணமாகிய மெய்ம்மைச் சுக வடிவினனும், கருணையாகிய அருட் பெருஞ் சோதிக் கடவுளுமாகிய சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு, மனம் முதலிய கரணங்கள் குழைந்து மகிழ்ந்து சிவ போகத்தில் கலந்து கொண்டேன். எ.று.

உணவின் பொருட்டு உழைப்பதும், உழைப்பின் பொருட்டு உறங்குவதும் செய்யு முகத்தால் மயக்க நெறியில் மன்னுயிரைச் செலுத்துதலால் உடம்பை, "மருள் நெறி சேர் உடம்பு" எனவும், அதன்கண் மலம் நிறைதலின், "மல வுடம்பு" எனவும் இயம்புகின்றார். மலப்பை போன்றதாயினும் இறக்கும் இயல்பினதாகிய உடம்பை இறவாத தூய உடம்பாக்கினமை புலப்பட, "மருள் நெறி சேர் மல வுடம்பை அழியா விமல வடிவாக்கி" என்று கூறுகின்றார். மெய்ம்மைச் சிவஞானம் கைவரப் பெற்றார்க்குத் திருவருள் ஆற்றலால் எல்லாவற்றையும் இனிது எளிது செய்யும் திறம் உண்டாதலால், அதனை வடலூர் வள்ளலுக்கு இறைவன் அளித்தருளிய குறிப்பு விளங்க, "எல்லாம் செய் வல்ல சித்தாம் பொருளைத் தருணமது தெரிந்து எனக்குத் தானே வந்தளித்த தயாநிதி" என்றும், கொடுப்பவர் கொடுப்பது அரியதாயினும் எளியதாயினும் காலமறிந்து கொடுப்பது சிறப்பாதலால், "தருணமது தெரிந்து எனக்குத் தானே வந்தளித்த தயாநிதி" என்றும் மொழிகின்றார். திருச்சிற்றம்பலம் - தில்லைக்கண் உள்ள ஞான சபை. பொற் சபை எனினும் அமையும். சிவஞானத்தால் சிவபோகத்தைத் துய்ப்பவர்க்கு உளதாகும் மெய்ம்மைச் சுகம் குறைவற நிறைந்த இன்பமயமாக அளித்தலால் சிவனை, "சுத்த சிவ பூரண மெய்ச்சுகம்" என்று பராவுகின்றார். கருணையாகிய அருளொளியே தனது சிவப் பேரொளியாகக் கொண்டமை பற்றிச் சிவனை, "அருட் பெருஞ் சோதிக் கடவுள்" என்று விளக்குகிறார்.

இதனால், அருட் பெருஞ் சோதிக் கடவுளைக் கண்களாற் கண்டு அகம் குழைந்து ஆங்குப் பெருகும் இன்பத்தில் மகிழ்ந்து திளைத்தமை தெரிவித்தவாறும். (10)

திருச்சிற்றம்பலம்

## 50. ஆண்டருளிய அருமையை வியத்தல்

அஃதாவது, அருட் பெருஞ் சோதிக் கடவுளாகிய இறைவன் தன்னைக் காணுமாறு காட்சி தந்து மனம் குழைவித்துத் தனது காட்சிக் கண் ஊறுகின்ற இன்பத்திற் கலந்து மகிழுமாறு அருளிய நலத்தை வியந்து பாராட்டுதலாம். இவ்வருட் பேற்றின் அருமையை வியந்த வடலூரடிகள் இப்பத்திலும் மேல்வரும் பத்திலும் ஆருமையுற்றுப் பாடுகின்றார்.

### எழுச்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4014. அம்பலத் தாடும் அமுதமே என்கோ
அடியனேன் ஆருயிர் என்கோ
எம்பலத் தெல்லாம் வல்லசித் தென்கோ
என்னிரு கண்மணி என்கோ
நம்பிடில் அணைக்கும் நற்றுணை என்கோ
நான்பெற்ற பெருஞ்செல்வம் என்கோ
இம்பர்இப் பிறப்பே மெய்ப்பிறப் பாக்கி
என்னைஆண் டருளிய நினையே.

உரை : இவ்வுலகில் இப்பொழுது எடுத்துள்ள என் பிறப்பையே இறவாப் பிறப்பாக்கி என்னை ஆண்டருளிய பெருமானாகிய உன்னை அம்பலத்தில் ஆடுகின்ற அமுதம் என்பேனோ; அடியவனாகிய என்னுடைய அருமையான உயிர் என்பேனோ; எம்மிடத்து எய்திய எல்லாம் வல்ல சித்தர் என்பேனோ; என்னுடைய இரண்டாகிய கண்மணி என்பேனோ; விரும்பிய வழி தழுவி அணைக்கும் நல்ல துணை என்பேனோ; நான் பெற்ற பெருஞ் செல்வம் என்பேனோ; என்னென்று சொல்லுவேன். எ.று.

அம்பலத்தில் ஆடுகின்ற பெருமானைக் காணும்போது மனத்தில் அமுதமயமான இன்ப உணர்ச்சி தோன்றுதலால், "அம்பலத்தாடும் அமுதமே என்கோ" என்று கூறுகின்றார். என்கோ - என்கு ஓ எனப் பிரியும். ஈற்றிலுள்ள ஓகாரம் வியப்பு குறித்து நின்றது. என்கு என்பது குற்றுகர வீற்றுத் தன்மை; ஒருமை வினைமுற்று. ஆருயிர் - பெறுதற் கரிதாகிய உயிர்; அருமை வாய்ந்த உயிர் எனினும் அமையும். எம்பலத்து - எம்மிடத்து. என்வலம் எனற் பாலது எம்பலம் என வந்தது. வலம் என்பது இடப் பொருளுணர்த்தும் இடைச் சொல். நம்புதல் - விரும்புதல். விருப்பம் மிக்கவிடத்து நண்பர்கள் ஒருவரை யொருவர் தழுவிக் கொள்ளும் இயல்பு பற்றி, "நம்பிடில் அணைக்கும் நற்றுணை" என்று இயம்புகின்றார். பெருஞ் செல்வத்

தினிடத்து அதனைப் பெற்றார்க்குப் பெருவிருப்பம் உண்டாதல் பற்றி, "நான் பெற்ற பெருஞ் செல்வம்" என்று புகல்கின்றார். இவ்வுலகில் எய்தும் பிறப்புக்கள் யாவும் நிலையின்றிக் கெடுவதாகலின், "இம்பர் இப்பிறப்பு" என்று சுட்டிக் கூறுகின்றார். மெய்ப் பிறப்பு - இறவாப் பிறவி. அருள்கூர்ந்து தன்னை ஆண்டு கொண்டதலால் தமது பிறப்பு அழியாப் பிறப்பாகியது என்பாராய், "மெய்ப்பிறப் பாக்கி என்னை ஆண்டருளிய நின்னை" என வுரைக்கின்றார். நின்னை "அமுதமே ஆருயிரே சித்தே கண்மணியே நற்றுணையே பெருஞ் செல்வமே என்கோ" என இயையும்.

இதனால், தமது பிறப்பை அழியா இயல்பினதாக்கி ஆண்டருளிய சிவபெருமானுடைய திருவருளை வியந்தவாறும். இதனையே இனி வரும் பாட்டுக்கள் எல்லாவற்றுக்கும் கருத்தாகக் கூறிக் கொள்க. (1)

**4015. அம்மையே என்கோ அப்பனே என்கோ**
**அருட்பெருஞ் சோதியே என்கோ**
**செம்மையே எல்லாம் வல்லசித் தென்கோ**
**திருச்சிற்றம் பலத்தமு தென்கோ**
**தம்மையே உணர்ந்தார் உளத்தொளி என்கோ**
**தமியனேன் தனித்துணை என்கோ**
**இம்மையே அழியாத் திருஉரு அளித்திங்**
**கென்னை ஆண் டருளிய நினையே.**

உரை : இப்பிறப்பிலேயே கெடாத அழகிய இவ்வுடல் உருவை அளித்து என்னை ஆண்டருளிய பெருமானாகிய உன்னை அம்மை என்பேனோ? அப்பன் என்பேனோ? அருட்பெருஞ் சோதி என்பேனோ? செம்மை நெறியிலேயே எல்லாவற்றையும் செய்ய வல்ல சித்தர் என்பேனோ? திருச்சிற்றம்பலத்தின்கண் அமுத மயமாய் விளங்கும் ஆடலரசன் என்பேனோ? தம்மை யுணர்ந்த ஞானிகளின் உள்ளத்தில் திகழும் ஒளிப் பொருள் என்பேனோ? தனியவனாகிய எனக்குக் கிடைத்த ஒப்பற்ற துணை என்பேனோ? என்னென்று சொல்லுவேன். எ.று.

இம்மை - இப்பிறப்பு. அழியாமையே ஒரு பெருஞ் செல்வமாதலின் அதனையுடைய தமது உடம்பை, "அழியாத் திருவுரு" என்று சிறப்பிக்கின்றார். எல்லா அரிய செயல்களையும் நீதி வழுவாமல் செய்ய வல்லவர் என்பாராய்ச் சித்தர்களை, "செம்மையே எல்லாம் வல்ல சித்து" என்று கூறுகின்றார். சித்து-சித்தர். அரசரை அரசு என்றும், வேந்தரை வேந்து என்றும் கூறுவது போலச் சித்தர்களைச் சித்து எனச் செப்புகின்றார். திருச்சிற்றம்பலம் - தில்லையம்பலம். தில்லையம்பலத்தின்கண் ஆடுகின்ற கூத்தப் பெருமானது ஆடற் காட்சி காண்பார்க்கு அமுதமயமான இன்பம் தருவதால், "திருச்சிற்றம்பலத்து அமுது" என்று புகழ்கின்றார். தம்மையும், தம்முள் இருக்கும் ஆன்மாவையும், தான் வாழ்ந்திருக்கும் உலகத்தையும் நோக்கி அவற்றின் இயல்புகளை யுணர்ந்து அவற்றோடு கூட்டி வாழ்விக்கும் இறைவனையும் உணர்ந்தவர்களை, "தம்மை யுணர்ந்தார்" என்று குறிக்கின்றார். அவர்களின் திருவுள்ளத்தில் ஞான ஒளிப் பொருளாய் இலங்குவது பற்றிச் சிவனை, "உணர்ந்தார்

உளத்தொளி என்கோ'' என மொழிகின்றார். உலகப் பற்றுக்களை ஒழித்துச் சிவன் அருளே பற்றாகக் கொண்டு வாழ்கின்றமை புலப்பட வடலூர் வள்ளல் தம்மை, ''தமியனேன்'' என்று இயம்புகின்றார். அம்மையும், அப்பனும், அருட் பெருஞ் சோதியும், எல்லாம் வல்ல சித்தும், அம்பலத் தமுதும், உணர்ந்தார் உளத்தொளியும், தனித் துணையும் என்கோ என இயையும். (2)

4016. எய்ப்பிலே கிடைத்த வைப்பது என்கோ
என்னுயிர்க் கின்பமே என்கோ
துய்ப்பிலே நிறைந்த பெருங்களிப் பென்கோ
சோதியுட் சோதியே என்கோ
தப்பெலாம் பொறுத்த தயாநிதி என்கோ
தனிப்பெருந் தலைவனே என்கோ
இப்பிறப் பதிலே மெய்ப்பயன் அளித்திங்
கென்னைஆண் டருளிய நினையே.

உரை: இப்பிறப்பிலேயே பெறுதற்குரிய இறவா நிலையாகிய மெய்ப் பயனை எனக்கு அளித்து, என்னை ஆண்டு கொண்டருளிய பெருமானாகிய உன்னைத் தளர்ச்சி யுற்ற பொழுதில் கிடைத்த செல்வ மென்பேனோ; என்னுயிர்க்குரிய இன்பம் என்பேனோ; நுகர் பொருளை நுகருமிடத்து மனத்தின்கண் நிறைகின்ற மிக்க பெரும் மகிழ்ச்சி என்பேனோ; சோதியுட் சோதி என்பேனோ; யாம் செய்த தவறுகள் எல்லாவற்றையும் பொறுத் தாளும் அருள் நிதி என்று சொல்வேனோ; தனிப் பெருந் தலைவன் என்பேனோ; யாது சொல்லி மகிழ்வேன். எ.று.

எய்ப்பு - தளர்ச்சி. வைப்பு - செல்வம். இதனைச் சேமநிதி என்று கூறுவர். துய்ப்பு- நுகர் பொருளை நுகர்தல். அனுபவித்தற்குரிய பொருள் களை நன்கு அனுபவிக்கும் இடத்து அனுபவிப்பவர் மனத்தின்கண் மிக்க மகிழ்ச்சி உண்டாதலின் அதனை, ''துய்ப்பிலே நிறைந்த பெருங் களிப்பு'' என்று சொல்லுகிறார். பெருமை - ஈண்டு மிகுதி குறித்து நின்றது. ஒளிப் பொருளுக் கெல்லாம் ஊன ஒளியாய் நிற்பதாகலின் சிவபர ஒளியை, ''சோதியுட் சோதியே என்கோ'' என்று பராவுகின்றார். தப்பு - தவறு. தயாநிதி - அருட் செல்வம். சிவனுக்கு ஒப்பாகவோ உயர்வாகவோ தலைவர் வேறு இல்லாமை விளங்க, ''தனிப் பெருந் தலைவனே என்கோ'' என்று சாற்றுகின்றார். இப்பிறப்பின்கண் பெறுவன யாவும் நிலையின்றிக் கெடுவதால் இறவாமையாகிய நிலைத்த பயனை, ''மெய்ப்பயன்'' என்று விளம்புகின்றார். எய்ப்பில் வைப்பு, என்னுயிர்க் கின்பம், பெருங் களிப்பு, சோதியுட் சோதி, தயாநிதி, தனிப் பெருந் தலைவன் என்கோ என இயைக்க. (3)

4017. அச்சம்நீக் கியஎன் ஆரியன் என்கோ
அம்பலத் தெம்பிரான் என்கோ
நிச்சலும் எனக்கே கிடைத்தவாழ் வென்கோ
நீடும்என் நேயனே என்கோ

பிச்சனேற் களித்த பிச்சனே என்கோ
பெரியரிற் பெரியனே என்கோ
இச்சகத் தழியாப் பெருநலம் அளித்திங்
கென்னை ஆண் டருளிய நினையே.

உரை : இவ்வுலகத்தில் என்றும் அழியாமையாகிய பெரிய நன்மையை எனக்குத் தந்து, என்னை ஆண்டருளிய பெருமானாகிய உன்னை எனக்குளதாகிய அச்சத்தைப் போக்கி யருளிய உயர்ந்தவன் என்று சொல்வேனோ? அம்பலத்தில் ஆடல் புரிகின்ற எம்பிரான் என்பேனோ? நாள்தோறும் இன்பமுற எனக்குக் கிடைத்த வாழ்முதல் என்பேனோ? அன்பு பெருகும் எனக்கு நண்பன் என்பேனோ? பித்தனாகிய எனக்குக் கிடைத்த பெரும் பித்தன் என்பேனோ? பெருமை மிக்க பெரியோர்களுக் கெல்லாம் பெரியவன் என்பேனோ? யாது சொல்லி ஏத்துவேன். எ.று.

சகம் - உலகம். அழியும் பொருள்கள் நிறையும் உலகத்தில் அழியாமையினும் பெரிய நன்மை வேறு இல்லாமையால் அதனை, "இச்சகத் தழியாப் பெருநலம்" என்று இயம்புகின்றார். ஆரியன் - அருமை யுடையவன்; மேலோன் என்றுமாம். நித்தம் என்பது நிச்சல் என வருவதுண்மையின் நிச்சலும் என உரைக்கின்றார். நாள்தோறும் அன்பு பெருக நட்புச் செய்தல் பற்றிச் சிவபெருமானை, "நீடும் என் நேயன்" என்று கூறுகின்றார். அல்லும் பகலும் ஆண்டவன் திருவருளில் ஆசை மீதூர்ந்து ஒழுகுதலால் வடலூர் வள்ளல் தம்மைப் "பிச்சன்" என்றும், தமக்கு அப்பித்து நாளும் மிகுவித்தலால் சிவ பெருமானையும் "பிச்சன்" என்றும், அப்பெருமானை விடப் பெரியவர் பிறரில்லை என்பது பற்றி, "பெரியரிற் பெரியன்" என்றும் உரைக்கின்றார். பிச்சன் என்றவிடத்து எளிமை போக்குதற்குப் "பெரியரிற் பெரியன்" என அடுத்து மொழிகின்றார் என உரைத்தலும் ஒன்று. ஆரியன், எம்பிரான், நேயன், பிச்சன், பெரியன் என்கோ என இயையும். (4)

4018. அத்தம்நேர் கிடைத்த சுவைக்கனி என்கோ
அன்பிலே நிறைஅமு தென்கோ
சித்தெலாம் வல்ல சித்தனே என்கோ
திருச்சிற்றம் பலச்சிவம் என்கோ
மத்தனேன் பெற்ற பெரியவாழ் வென்கோ
மன்னும்என் வாழ்முதல் என்கோ
இத்தனிப் பிறப்பை நித்தியம் ஆக்கி
என்னை ஆண் டருளிய நினையே.

உரை: இந்த என் பிறப்பை அழியா இயல்பினதாக்கி என்னை ஆண்டு கொண்டருளிய பெருமானாகிய உன்னை அங்கையில் பெற்ற சுவை மிக்க பழம் என்று சொல்வேனோ; அன்பு நிறைந்த அமுதம் என்பேனோ; சித்துக்கள் எல்லாவற்றையும் செய்ய வல்ல சித்தன் என்பேனோ; தில்லையம்பலத்தில் ஆடல் புரிகின்ற சிவ பரம்பொருள் என்பேனோ; மதி மயங்கிய யான் பெற்ற பெரிய வாழ்பொருள் என்பேனோ; என்னுடைய நிலைத்த வாழ்முதல் என்பேனோ; யாது சொல்லிப் புகழ்வேன். எ.று.

அத்தம் - கை; சுவைக் கனி - சுவை நிறைந்த பழம். நெல்லிக் கனி எனினும் அமையும். சித்துக்கள் - அணிமா மகிமா முதலியன, தில்லையம் பலத்தில் காட்சி வழங்கும் கூத்தப் பெருமான் சிவ பரம்பொருளாதலின், "சிற்றம்பலச் சிவம் என்கோ" என்று தெரிவிக்கின்றார். "சித்தர் சூழச் சிவபிரான் தில்லை மூதூர் நடம் செய்வான்" (சென்னி) என்று மணிவாசகப் பெருமான் உரைத்தலால், தில்லைச் சிற்றம்பலத்தை நினைக்கும் வடலூர் வள்ளல் சித்தர் கணத்தை நினைந்து, "சித்தெலாம் வல்ல சித்தனே" என்று சொல்லுகின்றார். மத்தன் - பித்தேறியவன்; பித்தன் எனினும் பொருந்தும். வாழ்வளிக்கும் பரம்பொருளாதலின் இறைவனை, "பெரிய வாழ்வு" என்றும், உயிர்கள் பெறும் வாழ்வுகள் எல்லாவற்றுக்கும் முதற் பொருளாதல் பற்றிச் சிவபெருமானை, "மன்னும் வாழ்முதல்" என்றும் மகிழ்ந்துரைக்கின்றார். சுவைக் கனி, நிறையமுது, எல்லாம் வல்ல சித்தன், சிற்றம்பலம் சிவம், பெரிய வாழ்வு, வாழ்முதல் என்கோ என இயையும். (5)

4019. **மறப்பெலாம் தவிர்த்த மதிஅமு தென்கோ**
**மயக்கநீத் தருள்மருந் தென்கோ**
**பறப்பெலாம் ஒழித்த பதிபதம் என்கோ**
**பதச்சுவை அனுபவம் என்கோ**
**சிறப்பெலாம் எனக்கே செய்ததாய் என்கோ**
**திருச்சிற்றம் பலத்தந்தை என்கோ**
**இறப்பிலா வடிவம் இம்மையே அளித்திங்**
**கென்னை ஆண் டருளிய நினையே.**

உரை: இறப்பில்லாத வடிவத்தை இப்பிறப்பிலேயே எனக்கு அளித்தருளிய இறைவனாகிய உன்னை மறதி வகை எல்லாவற்றையும் நீக்கி யருளிய ஞானவமுதம் என்று சொல்வேனோ; மயக்க மெல்லாம் போக்கி யருளிய மருந்தென்று சொல்வேனோ; எங்கும் பறந்து செல்லும் ஆசைகளைப் போக்கி யருளிய பதிபதம் என்று சொல்வேனோ; திருவடி இன்ப அனுபவம் என்று சொல்வேனோ; எல்லா வகையான சிறப்புக்களை யும் எனக்கே செய்தருளிய தாய் என்று சொல்வேனோ; திருச்சிற்றம் பலத்தில் எழுந்தருளும் தந்தை என்று சொல்வேனோ; யாது சொல்லிப் புகழ்வேன். எ.று.

சிவஞான வடிவம் இறத்தலில்லாத பெருவடிவமாதலின் அவற்றைத் தனக்கு அருளினமை பற்றி, வடலூர் வள்ளல் சிவபெருமானை, "இறப்பிலா வடிவம் இம்மையே அளித்திங் கென்னை ஆண்டருளிய நின்னை" என்று புகழ்கின்றார். முக்குண வயத்தால் முறை திரிந்து மறத்தல் உயிர் இயல்பாதலால் மறவா நிலைமையைத் தந்தமை விளங்க, "மறப்பெலாம் தவிர்த்த மதியமுது என்கோ" என்றும், மாயை காரணமாக மறப்பு வகைகள் தோன்றுவது பற்றி அவற்றிற்குக் காரண மாகிய மயக்கத்தையும் போக்கினமை புலப்பட, "மயக்கம் நீத்தருள் மருந்து என்கோ" என்றும் இயம்புகின்றார். பறப்பு நாற்றிசையும் பறந்து திரியும் பறவைகளைப் போல ஆசைகள் தோன்றி எல்லாப் பொருள் மீதும் பரவுவதால் அவை அங்ஙனம் தோன்றி அலைக்காவண்ணம் மனத் திண்மையைத் தந்தமையின் சிவனது திருவருளை, "பறப்பெலாம்

ஒழித்த பதிபதம் என்கோ'' என்றும், திருவருள் இன்ப அனுபவத்தை, ''பதச்சுவை அனுபவம் என்கோ'' என்றும் சொல்லுகின்றார். எவ்வுயிர்க்கும் தந்தையாதலின் கூத்தப் பெருமானை, "திருச்சிற்றம்பலத் தந்தை" என்று உரைக்கின்றார். மதியமுது, அருள் மருந்து, பதி பதம், பதவனுபவம், தாய் தந்தை, என்கோ என இயையும். (6)

4020. அன்பிலே பழுத்த தனிப்பழம் என்கோ
அறிவிலே அறிவறி வென்கோ
இன்பிலே நிறைந்த சிவபதம் என்கோ
என்னுயிர்த் துணைப்பதி என்கோ
வன்பிலா மனத்தே வயங்கொளி என்கோ
மன்னும்அம் பலத்தர சென்கோ
என்புரி அழியாப் பொன்புரி ஆக்கி
என்னை ஆண் டருளிய நினையே.

உரை: என்னுடைய உடம்பை அழிதல் இல்லாத பொன்னுடம்பாக்கி, ஆண்டு கொண்ட ஐயனாகிய உன்னை அன்பாகிய மரத்திலே பழுத்த தனிப் பழம் என்று சொல்வேனோ; அறிவால் அறியப்படுவதாகிய மெய்யுணர்வு என்று சொல்வேனோ; இன்பம் நிறைந்த நிலையமாகிய சிவபதம் என்று சொல்வேனோ; என் உயிர்க்கு உறுதுணையாகிய முதல்வன் என்று மொழிவேனோ; வன்கண்மை யில்லாத நன்மனத்தின் கண் விளங்குகின்ற தெய்வ ஒளி என்பேனோ; நிலை பெற்ற அம்பலத்தின்கண் எழுந்தருளும் அரசென்று சொல்வேனோ; யாது சொல்லிப் பாராட்டுவேன். எ.று.

புரி - உடம்பு. ஞானவான்களின் உடம்பு பொன்னிறம் கொண்டு பொலிவுறுவது பற்றி அதனை, ''பொன் புரி'' என்கிறார். சிவபெருமானுடைய திருமேனியும் பொன்னிறமுடையதாதல் பற்றிச் சிவ மயமான தனது தேகத்தை, ''பொன் புரியாக்கி'' என்றும், அஃது எக்காலத்தும் பொன்றாப் பெருமை யுடையது என்பது பற்றி, ''அழியாப் பொன் புரி'' என்றும் புகல்கின்றார். ''அன்பிலே பழுத்த தனிப் பழம்'' என்பது ஏகதேச உருவகம். அறிவால் அறிவின்கண் அறிவது உண்மை யறிவாதலால், ''அறிவிலே அறிவறிவு'' எனவும், இன்ப நிலையம் சிவானுபவப் பெரும் பதம் எனச் சான்றோர் கூறுவதால் அதனை, ''இன்பிலே நிறைந்த சிவபதம்'' எனவும், அது தானும் உயிர்கட்கு உயிர்த் துணையாய் உதவுவது பற்றி, ''என் உயிர்த் துணைப் பதி'' எனவும் ஓதுகின்றார். வன்பிலா மனம் - வன்கண்மை யில்லாத மென்மை சான்ற அன்பு மனம். உண்மை யன்பு ஞானமாம் எனச் சான்றோர் உரைப்பது பற்றிச் சிவத்தை, ''வன்பிலா மனத்தே வயங் கொளி'' எனக் கூறுகின்றார். தனிப் பழம், அறிவறிவு, சிவபதம், துணைப் பதி, வயங் கொளி, அம்பலத் தரசு என்கோ என இயையும். (7)

4021. தடையிலா தெடுத்த அருளமு தென்கோ
சர்க்கரைக் கட்டியே என்கோ
அடைவுறு வயிரக் கட்டியே என்கோ
அம்பலத் தாணிப்பொன் என்கோ

உடைய மாணிக்கப் பெருமலை என்கோ
உள்ளொளிக் குள்ளொளி என்கோ
இடைதல்அற் றோங்கும் திருஅளித் திங்கே
என்னைஆண் டருளிய நினையே.

உரை: நீங்குதலின்றி நின்று ஓங்குகின்ற திருவருள் ஞானமாகிய செல்வத்தை எனக்களித்து, ஆண்டருளிய பெருமானாகிய நின்னைச் சிறு தடையுமின்றி யான் பெற்றுக் கொள்ள அமைந்த திருவருள் ஞானமாகிய அமுதமென்று உரைப்பேனோ; சர்க்கரைக் கட்டி என உரைப்பேனோ; என்பால் தானே வந்து அடைந்து பொருந்துகின்ற வைரக் கல் என்பேனோ; அம்பலத்தில் ஆடுகின்ற ஆணிப் பொன் என்று உரைப் பேனோ; எனக்கே உரிய மாணிக்கப் பெருமலை என்று உரைப்பேனோ; உள்ளத்தே ஒளிர்கின்ற ஒளியின் உள்ளொளி என்று உரைப்பேனோ; யாதென்று உரைத்து மகிழ்வேன். எ.று.

இடைதல் - ஈண்டு நீங்குதல் என்னும் பொருட்டு. சிவனது திருவருள் ஞானம் "சென்றடையாத திரு" என்று தெரிவிக்கப்படுதலால் அதனை "இடைதலற்று ஓங்கும் திரு" என்று கூறுகின்றார். தடையின்றிப் பெற அமைந்தது பற்றி, "தடையிலா தெடுத்த அருளமுது" என்றும், இனிமை பற்றி, "சர்க்கரைக் கட்டி" என்றும், விலை மதிப்பில்லாத அருமை பற்றி "அடைவுறு வயிரக் கட்டி" என்றும், அம்பலத்தே காணப் பெறுதலின், "அம்பலத்து ஆணிப் பொன்" என்றும், மாணிக்க மலை போல் விளங்குதலின், "மாணிக்கப் பெருமலை" என்றும், உள்ளத்தின் உள்ளே உள்ளொளியாய் விளங்குதல் தோன்ற, "உள்ளொளிக்கு உள்ளொளி" என்றும் உரைக்கின்றார். அருளமுது, சர்க்கரைக் கட்டி, வைரக் கட்டி, ஆணிப் பொன், உள்ளொளி என்கோ என இயையும். (8)

4022. மறைமுடி விளங்கு பெரும்பொருள் என்கோ
மன்னும்ஆ கமப்பொருள் என்கோ
குறைமுடித் தருள்செய் தெய்வமே என்கோ
குணப்பெருங் குன்றமே என்கோ
பிறைமுடிக் கணிந்த பெருந்தகை என்கோ
பெரியஅம் பலத்தர சென்கோ
இறைமுடிப் பொருள்என் உளம்பெற அளித்திங்
கென்னைஆண் டருளிய நினையே.

உரை: இறைமைத் தன்மை யுடைய தெய்வப் பொருள்களுக் கெல்லாம் முடிப் பொருளாக வுள்ள தன்மை என் உள்ளத்திலே நான் பெறுமாறு அளித்தருளிய பெருமானாகிய உன்னை வேத முடியில் விளங்கு கின்ற பெரும் பொருள் என்று மொழிவேனோ; நிலை பெற்ற ஆகமாந்தப் பொருள் என்று மொழிவேனோ; எனக்கு இன்றியமையாத செயல்களைச் செய்து முடிக்க வல்ல வன்மையைத் தந்து அருள் செய்கின்ற தெய்வம் என்று மொழிவேனோ; பெரிய குணக் குன்றம் என்று பேசுவேனோ; பிறைச் சந்திரனை முடியில் அணிந்து விளங்குகின்ற பெருந்தகை

என்று மொழிவேனே; அம்பலத்தின்கண் விளங்குகின்ற பெரிய அரசு என்று மொழிவேனே; யாதென்று சொல்லிப் புகழ்வேன். எ.று.

தேவ தேவர்களுக் கெல்லாம் தலை சிறந்த தேவனாதலின் சிவபெருமானை, "இறைமுடிப் பொருள்" என்று இயம்புகின்றார். இறைமுடிப் பொருள், இறைவன் என ஞான நூல்களால் முடிவு செய்யப் பெற்ற பரம்பொருள் என்பதும் உண்டு. தன்னை யான் கண்டு இன்புறுமாறு என் உள்ளத்தில் எழுந்தருளுகின்றான் என்ற உண்மை புலப்பட, "இறைமுடிப் பொருள் என்னுளம் பெற அளித்து இங்கு என்னை ஆண்டருளிய நின்னை" என்று இசைக்கின்றார். மறைமுடி - வேதாந்தம். பெரும் பொருள்-பிரம்மப் பொருள். ஆகமப் பொருள் - ஆகமாந்தங்களில் காணப்படும் சிவ பரம்பொருள். குறை - இன்றியமையாத பொருள்; செயலுமாம். பெரும் பொருள், ஆகமப் பொருள், தெய்வம், குணக் குன்றம், பெருந்தகை. அம்பலத் தரசு என்கோ என இயையும். (9)

4023. என்உளம் பிரியாப் பேரொளி என்கோ
என்உயிர்த் தந்தையே என்கோ
என்உயிர்த் தாயே இன்பமே என்கோ
என்உயிர்த் தலைவனே என்கோ
என்உயிர் வளர்க்கும் தனிஅமு தென்கோ
என்னுடை நண்பனே என்கோ
என்ஒரு வாழ்வின் தனிமுதல் என்கோ
என்னைஆண் டருளிய நினையே.

உரை : எளியனாகிய என்னை ஆண்டு கொண்டருளிய பெருமானாகிய உன்னை என் உள்ளத்தினின்றும் பிரியாமல் ஒளிரும் பெரிய ஒளி என்று சொல்லுவேனோ; என் உயிர்க்குத் தந்தை என்றும் தாய் என்றும் சொல்லுவேனோ; யான் பெறும் இன்பம் என்று சொல்லுவேனோ; என்னுயிர்க்குத் தலைவன் என்றும், என் உயிரை வளர்க்கின்ற தனி ஞான அமுது என்றும், நண்பன் என்றும் சொல்லுவேனோ; என்னுடைய சிறிய வாழ்வுக்கும் தனிமுதல்வன் நீ என்று சொல்லுவேனோ; யாது சொல்லி ஏத்துவேன். எ.று.

சிவஞானம் உள்ளொளியாய் உள்குவார் உள்ளத்தின்கண் ஒளிர்வது பற்றி, "என்னுளம் பிரியாப் பேரொளி" எனவும், உயிர் வளர்ச்சி என்பது ஞானத்தால் உயர்தலாதலால் ஞானமாகிய அமுதளித்து ஓங்குவிக்கும் பெருமானை, "என்னுயிர் வளர்க்கும் தனியமுது என்கோ" எனவும், தமது வாழ்வு மிகச் சிறுமை யுடையதாயினும் அதனைச் சிவபெருமான் முதல்வனாய் நின்று வாழச் செய்வது விளங்க, "என் ஒரு வாழ்வின் தனிமுதல்" எனவும் இயம்புகின்றார். பேரொளி, தந்தை, தாய், இன்பம், தலைவன், தனியமுது, நண்பன், தனிமுதல் என்கோ என இயையும். (10)

திருச்சிற்றம்பலம்

## 51. இறைவனை ஏத்தும் இன்பம்

அஃதாவது, இறைவனாகிய பரம்பொருளை, எண்ணிப் பராவி ஏத்துமிடத்து உளதாய் அனுபவிக்கப்படும் இன்பம் என்பதாம். சொற்களால் சொல்லித் துதிப்பதிலும், சொற்களாலாகிய பாட்டுக்களை அமைத்தும், பாடியும் பெறும் இன்பம் பெரிய தொன்றாகலின் அதனை இப்பத்தின்கண் விதந்தோதுகின்றார். இப்பத்தினை ஆற்றாமை கூறல் என்றும் கூறுவர்.

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4024. கருணைமா நிதியே என்னிரு கண்ணே
கடவுளே கடவுளே என்கோ
தருணவான் அமுதே என்பெருந் தாயே
தந்தையே தந்தையே என்கோ
தெருள்நிறை மதியே என்குரு பதியே
தெய்வமே தெய்வமே என்கோ
அருள்நிறை தரும்என் அருட்பெருஞ் ஜோதி
ஆண்டவ நின்றனை அறிந்தே.

**உரை :** திருவருள் நிறைந்த என்னுடைய அருட்பெருஞ் சோதி ஆண்டவனாகிய நின்னை நன்கறிந்து கருணையாகிய பெருஞ் செல்வமே, என்னுடைய இரண்டாகிய கண்ணே, கடவுளே என்று போற்றுவேனோ; சமயத்தில் வாய்த்த வான அமுதமே; என்னுடைய பெரிய தாயே, தந்தையே என்று சொல்லுவேனோ; தெளிவு நிறைந்த மதியமே; என்னுடைய குருபரனே, தெய்வமே என்று உரைப்பேனோ; என்னென்று சொல்லுவேன். எ.று.

திருவருட் செல்வமாகிய இன்பம் நிறைந்திருத்தல் பற்றி, "அருள் நிறை தரும் என் அருட் பெருஞ் சோதி ஆண்டவ" என்றும், நினது அருள் நலத்தை அறிந்த பிறகு எனக்கு உளதாகும் இன்பத்தால் உன்னைப் பாராட்டுதல் வேண்டு மென்னும் ஆசை எழுகின்றது என்று கூறுவாராய், "ஆண்டவ நின்றனை அறிந்து" என்றும் இயம்புகின்றார். திருவருளையே மிகப் பெரும் செல்வமாகப் பெரியோர் கூறுவதால் சிவபிரானை, "கருணை மாநிதியே" என்று உரைக்கின்றார். காண்டற்கரிய பொருளனைத்தையும் நன்கு காணக் காட்டுவது பற்றி, "என் இரு கண்ணே" எனவும், கருவி கரணங்களால் காணப்படும் பொருள்கள் அனைத்தையும் கடந்து நிற்றலை யுணர்தலால், "கடவுளே கடவுளே" எனவும் பாராட்டுகின்றார். வானமுது - வானுலகத்தில் தேவர்களால்

நுகரப்படும் அமுதம். தக்க காலத்தில் அது கிடைக்கப் பெற்றால் தேவர்களும், தேவ தேவர்களும் எய்தும் இன்பத்தைத் தாம் பெறுவது போலும் இன்பம் பெறுதலின், "தருண வானமுதே" என இறைவனைப் புகழ்கின்றார். தருணம் - தக்க சமயம். உலகியல் சந்திரனில் களங்கமிருந்து அதன் ஒளியைக் குறைப்பது போலின்றிக் களங்கம் ஒரு சிறிதும் இன்றித் தெளிந்த ஞானப் பேரொளியைச் செய்தலால் சிவ பரம் பொருளை, "தெருள் நிறை மதி" என்றும், ஞானம் அருளும் நலம் பற்றி, "குருபதியே" என்றும், ஞானப் பேற்றால் அடி பணிந்து வணங்கச் செய்தலின், "தெய்வமே தெய்வமே" என்றும் பாராட்டுகின்றார். அருட் பெருஞ் சோதி ஆண்டவனே நின்னை யறிந்து, "மாநிதியே, இரு கண்ணே, கடவுளே, வான் அமுதே, பெருந்தாயே, தந்தையே, மதியே, குருபதியே, தெய்வமே என்கோ" என இயைக்க. (1)

4025. ஒட்டியே என்னுள் உறும்ஒளி என்கோ
ஒளிஎலாம் நிரம்பிய நிலைக்கோர்
வெட்டியே என்கோ வெட்டியில் எனக்கு
விளங்குறக் கிடைத்தஓர் வயிரப்
பெட்டியே என்கோ பெட்டியின் நடுவே
பெரியவர் வைத்ததோர் தங்கக்
கட்டியே என்கோ அம்பலத் தாடும்
கருணையங் கடவுள்நின் றனையே.

**உரை :** அம்பலத்தில் ஆடுகின்ற கருணை யுருவாகிய கடவுளே! உன்னை என்னுள் ஒட்டி நின்று நிலவும் பேரொளி என்று புகழ்வேனோ; ஒளி வகைகள் எல்லாம் நிறைந்த நிலையத்திற்குச் செல்லும் ஒரு வழி என்று உரைப்பேனோ; அவ்வழியில் எனக்கு விளக்கம் உண்டாகக் கிடைத்த ஒரு வைரம் வைத்த பெட்டி என்று போற்றுவேனோ; அப்பெட்டியின் நடுவில் ஞானவான்களாகிய பெரியோர் வைத்ததொரு தங்கக் கட்டி என்று சாற்றுவேனோ; என்னவென்று பாராட்டுவேன். எ.று.

தனக்குள் நோக்கும் வடலூர் வள்ளலுக்குத் தம்மைப் பிரியாத ஓர் ஒளி நிறைந்து தோன்றுதல் கண்டு அஃது அருளொளி என உணர்கின்றாராதலால் அதனை, "என்னுள் ஒட்டி உறும் ஒளி என்கோ" என எடுத்துரைக்கின்றார். அவ்வொளிக்குள் ஒளி வகை பலவும் நிறைந்து ஒளிக்கெலாம் பொதுவாய் அமைந்த ஒளி நிலையம் தோன்றி அதனை அடைதற்கு ஒரு வழியும் தோன்றக் காண்கின்றாராதலால் அதனை, "ஒளியெலாம் நிரம்பிய நிலைக்கு ஓர் வெட்டி" என்று இயம்புகின்றார். மண்ணையும் தூறுகளையும் வெட்டிச் செய்யப் பட்டவை "வெட்டி" எனப்படும். மாயையின் இருட் செறிவின்கண் வெட்டிப் பிளந்து செய்யப்பட்ட ஞான ஒளி நெறியை இங்கே, "ஒளியெலாம் நிரம்பிய நிலைக்கோர் வெட்டி" என விளம்புகின்றார். அவ்வெட்டி வழியாகச் சிவத்தை அடையச் செல்லும் தமது ஆன்மாவுக்குத் தடையின்றிச் செல்லுதற் கேற்ற ஒளியொடு கூடிய வைரப் பெட்டி போல் அருள் ஞானப் பிரபை தோன்றுதலால் அங்ஙனம் தோன்றும் சிவத் தோற்றத்தை, "வெட்டியில்

எனக்கு விளங்குறக் கிடைத்த ஓர் வைரப் பெட்டியே" என வழுத்து கின்றார். அந்தச் சிவஞானப் பிரபையின் நடுவே பொன்னிறம் கொண்டு சிவம் பொலிதலின், "பெட்டியின் நடுவே பெரியவர் வைத்ததோர் தங்கக் கட்டியே" எனவும், சிவத்தின் நிறம் பொன்னிறமாதலின் அதனை, "தங்கக் கட்டி" எனவும் இயம்புகின்றார். ஒளி, வெட்டி, வைரப் பெட்டி, தங்கக் கட்டி என்கோ என இயையும். (2)

4025. **துன்பெலாம் தவிர்த்த துணைவனே என்கோ**
**சோதியுட் சோதியே என்கோ**
**அன்பெலாம் அளித்த அன்பனே என்கோ**
**அம்மையே அப்பனே என்கோ**
**இன்பெலாம் புரிந்த இறைவனே என்கோ**
**என் உயிர்க் கின்அமு தென்கோ**
**என்பொலா மணியே என்கணே என்கோ**
**என்னுயிர் நாதநின் றனையே.**

உரை : என் உயிர்க்கு நாதனாகிய உன்னை எனக்குற்ற துன்பங்கள் எல்லாவற்றையும் போக்கிய துணைவன் என்று சொல்வேனோ; ஒளிப் பொருட்கள் எல்லாவற்றிற்கும் உள்ளொளி என்று உரைப்பேனோ; அன்பு முழுதும் எனக்களித்த அன்பன் என்று சொல்வேனோ; அம்மை என்றும் அப்பன் என்றும் ஆதரித்து உரைப்பேனோ; இன்பங்கள் எல்லாவற்றை யும் எனக்களித்த இறைவன் என்று சொல்வேனோ; என் உயிர்க்கு இனிய அமுதம் என்று இசைப்பேனோ; எனக்குக் கிடைத்த துளைபடாத மணி என்று சொல்வேனோ; என் கண் என்று சொல்வேனோ; யாது என்று கூறுவேனோ. எ.று.

மனம், மெய், மொழி என்ற மூன்றன் அசைவாலும், அசைவின்மை யாலும் வினை தோன்றித் துன்பங்களைச் செய்தலின் அவற்றை, "துன் பெலாம்" என்றும், துணைவனாய் நின்று அத்துன்பங்களைப் போக்கினமை விளங்க, "துன்பெலாம் தவிர்த்த துணைவனே" என்றும் கூறுகின்றார். ஒளியுற்றுத் திகழும் உலகிலுள்ள ஒளிப் பொருட்கள் எல்லாவற்றிற்கும் உள்ளொளியாய் நின்று ஒளிரச் செய்வது புலப்பட, "சோதியுட் சோதியே" என்று சொல்லுகின்றார். அன்புற்று இன்பமனைத்தையும் நல்குதலால், "அன்பெலாம் அளித்த அன்பனே" எனவும், "இன்பெலாம் புரிந்த இறைவனே" எனவும் இசைக்கின்றார். உணர்வு வடிவினதாகிய உயிர்க்கு அதன் உணர்வின்கண் ஞானமாய் இன்பம் செய்தலின், "என்னுயிர்க்கு இன்னமுது என்கோ" எனக் கூறுகின்றார். பொலா மணி- பொள்ளாத மணி. உலகியல் மணிகள் துளைத்தும் சாணையில் தீட்டியும் செம்மை செய்யப்படுவது போலாது இயல்பாகவே செம்மையும் அழகும் ஒளியும் கொண்டு திகழும் மாணிக்க மணி போல்வதால் சிவ பெருமானை, "பொலா மணி" எனப் புகழ்கின்றார். ஊனக் கண் உலகியற் பொருள்களைக் காட்டுதல் போல ஞானக் கண்ணாய் ஞானக் காட்சியை வழங்குதலால், "என் கண்ணே" என்று ஏத்துகின்றார். துணைவன், அம்மை, அப்பன், இறைவன், இன்னமுது, பொலா மணி, என் கண்ணே என்கோ என இயையும். (3)

4027. கருத்தனே எனது கருத்தினுக் கிசைந்த
கணவனே கணவனே என்கோ
ஒருத்தனே எல்லாம் உடையநா யகனே
ஒருதனிப் பெரியனே என்கோ
திருத்தனே எனது செல்வமே எல்லாம்
செயவல்ல சித்தனே என்கோ
நிருத்தனே எனக்குப் பொருத்தனே என்கோ
நிறைஅருட் சோதிநின் றனையே.

உரை: நிறைந்த திருவருளால் ஒளி நிறைந்தொளிரும் சிவ பரம் பொருளாகிய உன்னை என் கருத்தில் எழுந்தருள்பவனே, என் கருத்துக்கு ஏற்ற கணவனே என்று சொல்லுவேனோ; ஒப்பற்றவனே, உலகங்கள் எல்லாவற்றையும் தனக்கு உடைய தலைவனே, ஒப்பற்ற பெருமை யுடையவனே என்று சொல்லுவேனோ; உயர்ந்தவனே, எனது செல்வனே, அரிய செயல்கள் எல்லாவற்றையும் செய்ய வல்ல சித்தர் பெருமானே என்று சொல்லுவேனோ; கூத்தாடுபவனே, எனக்குப் பொருத்தமானவனே என்று புகழ்வேனோ; என்னென்று சொல்லுவேன். எ.று.

கருத்தன் - கருத்தை இடமாகக் கொண்டு எழுந்தருளுபவன்; தலைவன் எனினும் அமையும். கணவன் - தலைவன்; கண் போன்றவன் எனினும் பொருந்தும். ஒருத்தன் - ஒப்பற்றவன். திருத்தன் - உயர்ந்தவன்; திருந்தாரைச் செந்நெறியிற் செலுத்தித் திருத்துபவன் எனினும் அமையும். நிருத்தன் - கூத்தாடுபவன். பொருத்தன் - பொருத்தமானவன். நின்னைக் கருத்தனே, கணவனே, ஒருத்தனே, நாயகனே, பெரியனே, திருத்தனே, செல்வனே, சித்தனே, நிருத்தனே, பொருத்தனே என்கோ என இயைக்க. (4)

4028. தாயனே எனது தாதையே ஒருமைத்
தலைவனே தலைவனே என்கோ
பேயனேன் பிழையைப் பொறுத்தருள் புரிந்த
பெருந்தகைப் பெரும்பதி என்கோ
சேயனேன் பெற்ற சிவபதம் என்கோ
சித்தெலாம் வல்லசித் தென்கோ
தூயனே எனது நேயனே என்கோ
சோதியுட் சோதிநின் றனையே.

உரை: உலகிலுள்ள ஒளிப் பொருட்கள் எல்லாவற்றிற்கும் உள்ளொளியாய் ஒளிர்பவனாகிய உன்னை எனக்குத் தாயுமாய்த் தந்தையுமாகியவனே என்பேனோ தன்னிகரில்லாத ஒருமைத் தலைவன் என்பேனோ; பேய் போல் ஆசை மிக்குச் செய்யும் என் பிழைகளைப் பொறுத்து நல்லருள் புரிந்த பெருந்தகைமையை யுடைய பெருமை சான்ற தலைவன் என்று புகழ்வேனோ; சிறிய குழந்தை போன்ற நான் பெற்ற சிவபதம் என்று சொல்லுவேனோ; அரிய சித்துக்கள் எல்லாவற்றையும் செய்ய

வல்ல சித்துப் பொருள் என்பேனே; தூயவனும் நேயனுமாகிய பெருமானே என்று பேசுவேனே; யாதென்று மொழிவேன். எ.று.

தாய் போன்றவனைத் தாயன் என்று உரைக்கின்றார். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனித் தலைவனாதலால் சிவனை, "ஒருமைத் தலைவன்" என வுரைக்கின்றார். ஆசை மிக்கு அலைவதைப் பேய் என்பது பற்றி, "பேயனேன்" என்று கூறுகின்றார். ஆசை மிக்க வழிக் குற்றங்கள் பெருகுதலால் அவற்றைப் பொறுத்தருளும் தகவினும் பெருமை தருவது பிறிதில்லையாதலால், "பிழையைப் பொறுத்தருள் புரிந்த பெருந்தகைப் பெரும் பதி" என வுரைக்கின்றார். சேய் அன்னேன் என்பது சேயனேன் என வந்தது. சேய் - சிறு குழந்தை. நேயன் - நண்பன். தாயனே, தாதையே, ஒருமைத் தலைவனே, தலைவனே, பெரும் பதியே, சிவபதம், சித்து, தூயன், நேயன், என்கோ என இயையும். (5)

4029. அரும்பிலே மலர்வுற் றருள்மணம் வீசும்
ஆனந்தத் தனிமலர் என்கோ
கரும்பிலே எடுத்த சுவைத்திரள் என்கோ
கடையனேன் உடையநெஞ் சகமாம்
இரும்பிலே பழுத்துப் பேரொளி ததும்பி
இலங்கும்ஓர் பசும்பொனே என்கோ
துரும்பினேன் பெற்ற பெரும்பதம் என்கோ
சோதியுட் சோதிநின் றனையே.

உரை: ஒளிப் பொருட்கள் எல்லாவற்றிற்கும் உள்ளொளியாய் ஒளிர்கின்ற பெருமானாகிய உன்னை, அரும்பி மலர்ச்சியுற்று அருள் ஞான மணத்தை வீசி இன்பம் செய்கின்ற ஒப்பற்ற மலர் என்று வாழ்த்துவேனே; கரும்பின் சாற்றைக் காய்ச்சி எடுத்த சுவை யுருவாகிய திரள் என்று சொல்வேனே; கீழ்மகனாகிய என்னுடைய நெஞ்சமாகிய இரும்பினால் பற்றிப் பழுக்கக் காய்ச்சிய மிக்க ஒளி நிறைந்து விளங்கும் ஒப்பற்ற பசும்பொன் என்று பகர்வேனே; துரும்பு போல் அற்பனாகிய யான் பெற்ற பெறுதற்கரிய சிவபதப் பொருளே என்று செப்புவேனே; யாதென்று சொல்லிப் புகழ்வேன். எ.று.

முகை அரும்பி முற்றி மலர்ந்த பூ நிறைந்த மணம் கமழ்வதாதலின் அதுபோல் திருவருள் ஞானமாகிய நறுமணம் பரப்பி எல்லா வுயிரும் இன்புறச் செய்யும் ஒப்பற்ற தெய்வ மலர் போல்வதால் சிவனை, "அரும்பிலே மலர்வுற்று அருள் மணம் வீசும் ஆனந்தத் தனிமலர் என்கோ" என்றும், இனிமை மிகுதிக்குக் கரும்பின் சாற்றைக் காய்ச்சி எடுத்த கட்டியினும் நிகர் வேறில்லாமையால் அதனைச் சிவானந்தத்திற்கு உவமை கூறுவாராய், "கரும்பிலே எடுத்த சுவைத் திரள் என்கோ" என்றும் இயம்புகின்றார். இருப்புக் கருவியால் பொன்னைப் பற்றித் தீயில் இட்டுத் தீயின் நிறம் பெறுமாறு நன்கு காய்ச்சிய பசும் பொன், நிறமும் ஒளியும் கொண்டு விளங்குவது போலச் சிவபெருமான் தமது நெஞ்சின்கண் இருந்து பொன்னிறம் பொலியும் திருவுருவில் காட்சி தருவது பற்றி, "கடையனேன் உடைய நெஞ்சகமாம் இரும்பிலே

பழுத்துப் பேரொளி ததும்பி இலங்கும் ஓர் பசும்பொன்" என்று இயம்புகின்றார். நெஞ்சுக்கு இரும்பை ஒப்புக் கூறுகிறாராதலால் அதற்கு ஒப்ப, "கடையனேனுடைய நெஞ்சகமாம் இரும்பு" என்றும், நெஞ்சின்கண் சிவ பரம்பொருள் விளங்க, "நெஞ்சகமாம் இரும்பிலே பழுத்துப் பேரொளி ததும்பி இலங்கும் ஓர் பசும்பொன்னே" என்றும், சுடச் சுடரும் இயல்பினதாதலால், "பேரொளி ததும்பி இலங்கும் பசும்பொன்" என்றும் எடுத்துரைக்கின்றார். ஆனந்தத் தனிமலர், சுவைத் திரள், பசும்பொன், பெரும் பதம் என்கோ என இயையும். (6)

4030. **தாகமுள் எடுத்த போதெதிர் கிடைத்த**
**சர்க்கரை அமுதமே என்கோ**
**மோகம்வந் தடுத்த போதுகைப் பிடித்த**
**முகநகைக் கணவனே என்கோ**
**போகமுள் விரும்பும் போதிலே வலிந்து**
**புணர்ந்தஓர் பூவையே என்கோ**
**ஆகமுட் புகுந்தென் உயிரினுட் கலந்த**
**அம்பலத் தாடிநின் றனையே.**

**உரை :** உடலுட் புகுந்து அதனுள் உறையும் உயிரின்கட் கலந்து அம்பலத்தில் ஆடுகின்ற பெருமானாகிய உன்னைப் பசி தாகம் எடுத்த போது எதிரிலே கிடைக்கப் பெற்ற சர்க்கரை கலந்த பாலமுதம் என்று புகழ்வேனோ; காம மோகம் வந்து பொருந்தியபோது கையைப் பற்றி முகத்தில் நகை யரும்பிக்கூடும் கணவன் என்று சொல்லுவேனோ; காம வேட்கை உள்ளத்தில் தோன்றி ஆசை உணர்வு மிகும்போது தானாகவே வலிய வந்து கூடுகின்ற ஒப்பற்ற பூவைப் போன்ற இளநங்கை என்று சொல்லுவேனோ; என்னென்று உன்னைப் புகழ்வேன். எ.று.

சர்க்கரை அமுதம், முகநகைக் கணவன், பூவை, என்கோ என இயையும். தாகம், பசியோடு கூடிய நீர் வேட்கை. சர்க்கரை கலந்த பாலைச் "சர்க்கரை அமுதம்" என்று கூறுகின்றார். மோகம் - காம மயக்கம். முகநகைக் கணவன் - முகத்தில் அன்பு நகை மலரக் கொண்ட கணவன். போகம் - காம இன்பம். பூவை - பூச்சூடிய இளநங்கை. (7)

4031. **தத்துவம் அனைத்தும் தவிர்த்துநான் தனித்த**
**தருணத்தில் கிடைத்ததொன் றென்கோ**
**சத்துவ நிரம்பும் சுத்தசன் மார்க்கந்**
**தனில்உறும் அனுபவம் என்கோ**
**ஒத்துவந் தெனைத்தான் கலந்துகொண் டெனக்குள்**
**ஓங்கிய ஒருமையே என்கோ**
**சித்துவந் தாடுஞ் சித்தனே என்கோ**
**திருச்சிற்றம் பலத்தவ நினையே.**

**உரை :** தில்லையம்பலத்தில் ஆடுகின்ற பெருமானாகிய உன்னைத் தத்துவங்களின் தொடர்பை அறுத்தொழித்து அதீதத்தில் தனித்திருக்கும் சமயத்தில் எனக்குக் கிடைத்த தத்துவாதீத ஞானப் பொருள்

என்று சொல்லுவேனே; சத்துவ குணம், செயல்களே நிறைந்து விளங்கும் சுத்த சன்மார்க்க நெறியில் உளதாகும் ஞானானுபவம் என்று சொல்லுவேனே; என் மனதுக்கு ஒப்ப வந்து என்னைக் கலந்து என்னுள் உயர்ந்தோங்குகின்ற ஒருமைப் பொருளாகிய சிவம் என்று சொல்லு வேனே; அனிமா முதலிய சித்துச் செயல்களை விரும்பிப் புரிந்தொழுகும் சித்தன் என்று சொல்லுவேனே; என்னென்று சொல்லுவேன். எ.று.

தத்துவங்களைக் கடந்த நிலை சாக்கிரத்தில் எய்தும் அதீத நிலை. இதனைச் சாக்கிராதீதம் என்பர். அதன்கண் ஆன்மா சென்று அடங்கும் இடத்துச் சிவமாகிய செம்பொருள் ஞானவான்களுக்குக் காட்சி வழங்குதலின் அதனை, "தத்துவம் அனைத்தையும் தவிர்த்துத் தனித்த தருணத்தில் கிடைத்தது ஒன்று" எனவும், அந்தத் தத்துவாதீதக் காட்சிப் பொருள் இன்ன தன்மைத்தென எடுத்துரைக்கலாகாமையின் அதனை, "கிடைத்தது ஒன்று" எனக் கிளர்ந்துரைக்கின்றார். சுக துக்க போகம் என்ற குணநிலை மூன்றனுள் சுகத்துக்குரிய சத்துவ குணமே சுத்த சன்மார்க்கத்திற்கு வேண்டப்படுவதாகலின், அதனை, "சத்துவம் நிரம்பும் சுத்த சன்மார்க்கம்" எனவும், அந்தச் சுகானுபவமாகிய ஞானானுபவத்தை, "சன்மார்க்கம் தனில் உறும் அனுபவம்" எனவும் இயம்புகின்றார். மனத்தின் சிறுமையையும் தனது பெருமையையும் நோக்கி மனங்கொள்ளும் அளவுக்கு எழுந்தருளிக் காட்சி தந்து உணர்வில் கலந்து, உடல் உயிர் யாவும் தனது சிவ மயமாய் ஒருமையுற இன்புறுத்தியது விளங்கச் சிவ பரம்பொருளை, "ஒத்து வந்து எனைத்தான் கலந்து கொண்டு எனக்குள் ஓங்கிய ஒருமையே" என வுரைக்கின்றார். ஒன்று, அனுபவம், ஒருமை, சித்தன் என்கோ என இயையும். (8)

4032. யோகமெய்ஞ் ஞானம் பலித்தபோ துளத்தில்
ஓங்கிய காட்சியே என்கோ
ஏகமெய்ஞ் ஞான யோகத்திற் கிடைத்துள்
இசைந்தபேர் இன்பமே என்கோ
சாகலைத் தவிர்த்தென் தன்னைவாழ் விக்கச்
சார்ந்தசற் குருமணி என்கோ
மாகமும் புவியும் வாழ்வுற மணிமா
மன்றிலே நடிக்கின்றோய் நினையே.

உரை : வானத்தில் உள்ளவர்களும் மண்ணுலகில் உள்ளவர்களும் இன்ப வாழ்வு பெறுதல் வேண்டி மணிகள் இழைத்த பெரிய அம்பலத்திலே கூத்தாடுகின்ற பெருமானாகிய உன்னை யோக நெறியில் மெய்ம்மை ஞானம் கைவந்த போது மனத்தின்கண் உயர்ந்து தோன்றுகின்ற காட்சிப் பொருள் என்று புகல்வேனே; சிவத்தோடு ஏகனாய் நின்று நோக்கும் மெய்ம்மை ஞான யோகத்தில் எய்தப் பெற்று உயிரெலாம் கலந்த பேரின்பப் பொருள் என்று புகழ்வேனே; இறத்தலைப் போக்கி என்னை இறவா நிலையில் வாழச் செய்தற்கு என்னை அடைந்த சற்குரு மணி என்று சாற்றுவேனே; என்னென்று சொல்லி ஏத்துவேன். எ.று.

யோக நெறியில் பெறலாகும் உண்மை ஞானம் யோக மெய்ஞ் ஞானம் எனப்படுகிறது. ஞானக் கண் கொண்டு சிந்தையில்

நோக்குவார்க்கு ஆண்டுக் காட்சிப் படுகின்ற பரம்பொருள் ஞானக் காட்சி மயமாய்ப் புலப்படுதல் தோன்ற, "யோக மெய்ஞ்ஞானம் பலித்த போது உளத்தில் ஓங்கிய காட்சியே" என வுரைக்கின்றார். ஞானக் காட்சியும் பொருளுருவாய் இன்றித் தூய காட்சி மயமாய் விளங்குதல் பற்றி, "ஓங்கிய காட்சி" என ஓதுகின்றார். இதனை, "ஞானக் கண்ணினில் சிந்தை நாடுக" எனச் சிவஞான போதம் (சூ. 9) கூறுகிறது. மெய்ஞ்ஞான யோகத்தைச் சான்றோர் ஏகனாகி நிற்றல் என்பர். சிவத்தோடு ஏகனாகி நிற்கும் இடத்துச் சீவன் செய்யும் செயல் அனைத்தும் சிவன் செயலாய் இன்பம் செய்தலின் அதனை, "ஏக மெய்ஞ் ஞான யோகத்திற் கிடைத்து உள்ளிசைந்த பேரின்பமே" என்று இயம்புகின்றார். இதனை, "யான் செய்தேன் பிறர் செய்தார் என்னது யான் என்னும் இக்கோணை ஞான எரியால் வெதுப்பி நிமிர்த்துத் தான் செவ்வே நின்றிட அத்தத்துவன் தான் நேரே தனை யளித்து முன் நிற்கும் வினை ஒழித்திட்டோடும்" என்று சிவஞான சித்தியார் உரைப்பது காண்க. மெய்ஞ்ஞான யோகப் பயன் இன்ப மயமாதலின் அதனை, "இன்பமே" என இசைக்கின்றார். "சாதலின் இன்னாதது இல்லை" (குறள்) எனச் சான்றோர் உரைத்தலின், அஃது எய்தாவாறு காத்தலே சான்றாண்மையாதல் பற்றி, "சாகலைத் தவிர்த்து என்றனை வாழ்விக்கச் சார்ந்த சற்குரு மணி" எனவும், சாகா வாழ்வு சற்குருவின் அருள் ஞானத்தால் பெறலாவது என்பது விளங்க, "சற்குரு மணி" எனவும் இயம்புகின்றார். மன்றில் நடிக்கின்ற நின்னை, உளத்தில் ஓங்கிய காட்சி, உள்ளிசைந்த பேரின்பமே, சற்குரு மணி என்கோ என இயையும். (9)

4033. இரவிலா தியம்பும் பகலிலா திருந்த
இயற்கையுள் இயற்கையே என்கோ
வரவிலா வுரைக்கும் போக்கிலா நிலையில்
வயங்கிய வான்பொருள் என்கோ
திரையிலா தெல்லாம் வல்லசித் தெனக்கே
செய்ததோர் சித்தனே என்கோ
கரவிலா தெனக்குப் பேரருட் சோதி
களித்தளித் தருளிய நினையே.

உரை : வஞ்சமின்றிப் பேரருள் ஞானமாகிய சோதியை எனக்கு மகிழ்ந்து நல்கி அருளிய நின்னை, சொல்லப்படுகின்ற இரவும் பகலும் இல்லாதிருந்த காலத்து நிலவிய இயற்கையுள் இயற்கையாய் உள்ளவனே என்று சொல்லுவேனோ; அது குறித்துப் பேசப்படுகின்ற தோற்றக் கேடுகள் இல்லாத நிலையில் விளங்கிய உயர் பரம்பொருள் என்று சொல்லுவேனோ; அசைவு சிறிதுமின்றி அரிய பொருள்கள் எல்லாவற்றையும் முட்டின்றிச் செய்ய வல்லதாகிய சித்தாந்தன்மையை எனக்கு அளித்த ஓர் சித்தர் பெருமானே என்று சொல்லுவேனோ. எ.று.

படைப்புக் காலத்தில் இருந்த சூழ்நிலையாகிய இரவு பகல் இல்லாத மருள் நிலையிலும் பரம்பொருள் அவ்வியற்கைக்குள் இயற்கையாய் இருந்தருளிய இயல்பு புலப்படுத்தற்கு, "இயம்பும் இரவிலாது பகலிலாது

இருந்த இயற்கையுள் இயற்கையே என்கோ" என்று இயம்புகின்றார். அந்நாளில் நிலவிய பொருள்கள் போக்குவரவின்றி ஒரு தன்மையவாய் இருந்தனவாக, அக்காலத்தும் விளக்கமுற்றிருந்த பரம்பொருள் நிலையை, "உரைக்கும் வரவிலா போக்கிலா நிலையில் வயங்கிய வான் பொருள் என்கோ" என்று மொழிகின்றார். இரவு பகலற்ற சூழ்நிலையில் போக்குவரவில்லாத பொருள் நிலையில் ஞானிகளின் சொல்லளவில் நிலவின என்பதற்கு, "இயம்பும் இரவும் உரைக்கும் இரவும்" என்று குறிக்கின்றார். திரைதல் - அசைதல். எல்லாம் வல்ல என்றவிடத்து முட்டின்றிச் செய்ய வல்ல என்பது ஆற்றலால் வருவிக்கப்பட்டது. சித்துச் செயல்கள் பலவற்றையும் செய்தற்கேற்ற சித்தாந் தன்மையைத் தனக்குப் பரம்பொருள் நல்கிய செய்தியை வடலூர் வள்ளல் இதனால் குறிப்பது காண்க. கரவு - வஞ்சனை. திருவருள் ஞானம் ஒளி மயமாய் விளங்குதலின் அதனை, "பேரருட் சோதி" என்றும், அஃது இல்வழிச் சித்தாந் தன்மை கைவராதாகலின் அதனைத் தமக்கருளிய நலம் பாராட்டி, "பேரருள் சோதி களித்து அளித்தருளிய நின்னை" என்றும் சிறப்பிக்கின்றார். பேரருட் சோதி நல்கிய நின்னை, இயற்கையுள் இயற்கை, வான் பொருள், சித்தன் என்கோ என இயையும். (10)

திருச்சிற்றம்பலம்

## 52. பாமாலை ஏற்றம்

அஃதாவது, வடலூர் வள்ளல் தாம் பாடிய சொல் மாலைகளை அன்புடன் ஏற்றுக் கொண்ட நலத்தைப் பாராட்டுவதாகும்.

### நேரிசை வெண்பா

**4034.** **நான்புனைந்த சொன்மாலை நன்மாலை என்றருளித்**
**தான்புனைந்தான் ஞான சபைத்தலைவன்—தேன்புனைந்த**
**சொல்லாள் சிவகாம சுந்தரியைத் தோள்புணர்ந்த**
**நல்லான்தன் தாட்கே நயந்து.**

உரை: ஞான சபைக்குத் தலைவனும், தேன் போன்ற சொற்களைப் பேசும் சிவகாமசுந்தரியை மணந்து அவளுடைய தோளைக் கூடிய நல்லவனுமாகிய சிவபெருமான், என்பால் அருள் கொண்டு, நான் பாடிய சொன்மாலைகளை அழகிய மாலையாகக் கொண்டருளி விருப்புற்றுத் தன் திருவடிகளில் அணிந்து கொண்டு மகிழ்கின்றான். எ.று.

ஞான சபைக்கு உரியனாய் எழுந்தருளி அதன்கண் ஆடல் புரிகின்றானாதலால் கூத்தப் பெருமானை, "ஞான சபைத் தலைவன்" என்றும், தேனினும் இனிய சொற்களை வழங்கும் இயல்பினள் என்பது தோன்ற உமாதேவியை, "தேன் புனைந்த சொல்லாள் சிவகாம சுந்தரி" என்றும் கூறுகின்றார். சிவகாம சுந்தரி இன்ப அன்பு வடிவாகிய சிவத்தை விரும்புகின்ற அழகி. எவ்வுயிர்க்கும் எக்காலத்தும் நன்மையே செய்பவன் என்பது தோன்றச் சிவனை, "நல்லான்" என்று நயந்து போற்றுகின்றார். நான் புனைந்த சொன்மாலை என்றவிடத்து நான் என்பது மிகவும் எளியனாகிய நான் என்று பொருள்பட நிற்கிறது.

இதனால், ஞான சபைத் தலைவனாதலால் நான் பாடியது புல்லிய மாலையாயினும் விரும்பி ஏற்றுக் கொண்டான் என மகிழ்ந்தவாறும். (1)

**4035.** **சொல்லுகின்ற என்சிறுவாய்ச் சொன்மாலை அத்தனையும்**
**வெல்லுகின்ற தும்பையென்றே மேல்அணிந்தான்—வல்லிசிவ**
**காம சவுந்தரிக்குக் கண்ணனையான் ஞானசபைச்**
**சேமநட ராஜன் தெரிந்து.**

உரை: கொடி போன்ற சிவகாம சுந்தரியாகிய உமாதேவிக்குக் கண் போன்றவனும், ஞான சபையின்கண் நலம் நிறைந்த கூத்தப் பெருமான், சொல்லுகின்ற என்னுடைய சிறுமை நிறைந்த வாய்

வழியாகத் தொடுக்கின்ற சொன்மாலைகள் எல்லாவற்றையும் தான் பகைவரை வெல்லுகின்ற தும்பை மாலையாகத் தன்மேல் அணிந்தருளினுன். எ.று.

கொடி போன்ற இடையை யுடையவளாதலால் உமாதேவியை, "வல்லி சிவகாம சவுந்தரி" எனவும், கண் போல் அவளுக்கு ஞான நாட்டம் தந்து சிறப்பிக்கின்ருனுதலால், "சிவகாம சவுந்தரிக்குக் கண்ணனையான்" எனவும், ஞான சபையின்கண் உலகிலுள்ள ஆன்மாக்களுக் கெல்லாம் நலம் உண்டாகக் கூத்தாடுகின்ருனுதலால், "ஞான சபைச் சேம நடராசன்"எனவும் தெரிவிக்கின்ருர். சிறப்பில்லாத சொற்களால் ஞானச் சிறப்பில்லாத தனது சிறு சொற்களால் ஆகிய சொன்மாலைகள் என்பதற்கு, "சொல்லுகின்ற என் சிறுவாய்ச் சொன் மாலை" என்றும், அவற்றை மேன் மேலும் பாடுதற்கு ஊக்கம் எழுந்த வண்ணம் இருத்தலால் தன்னுடைய பாட்டுக்களை இறைவன் ஏற்றருளு கின்ருன் என்று நினைக்கின்ருராதலால், "வெல்லுகின்ற தும்பை என்றே மேல் அணிந்தான்" என்றும் விளம்புகின்ருர். தும்பை - போர் செய்யும் வீரர்கள் அணியும் மாலை. இது தும்பைப் பூக்களால் தொடுக்கப்படு தலால் தும்பை எனப்படுகிறது. கண்ணனையானும் நடராசனுமாகிய சிவ பெருமான் சொல்மாலை அத்தனையும் தும்பை என்றே மேல் அணிந்தான் என இயையும். என் வாய்ச் சிறு சொல்மாலை எனற்பாலது, என் சிறு வாய்ச் சொல்மாலை என மாறி நின்றது.

இதனுல், தான் பாடும் பாட்டுக்களைத் தும்பை மாலை போல இறைவன் அணிந்தருளுகின்ருன் என வடலூரார் வள்ளல் மகிழ்ந்தேற் கின்ருர் என்பதாம். (2)

4036. ஏதாகு மோஎன நான் எண்ணி இசைத்தஎலாம்
வேதாக மம்என்றே மேல்அணிந்தான்—பாதார
விந்தம் எனதுசிர மேல்அமர்த்தி மெய்அளித்த
எந்தைநட ராஜன் இசைந்து.

உரை: தனது திருவடிகளாகிய தாமரை மலரை, நின்னுடைய தலைமேல் வைத்து மெய்யுணர்வு தந்த எந்தையாகிய நடராசப் பெரு மான் மனமுவந்து யாது விளையுமோ என நினைந்து நான் சொன்ன பாட்டுக்கள் எல்லாவற்றையும் வேத உரை எனவும், ஆகம வுரை எனவும் ஏற்றுக்கொண்டு தன்மேல் அணிந்து கொண்டான் அவன் அருள் இருந்தவாறு என்னே. எ.று.

பாதார விந்தம் - பாதமாகிய அரவிந்தம். அரவிந்தம் - தாமரை. பாதம் - திருவடி. சிரம் - தலை. தனது திருவடியை வணங்குபவர் தலையில் பொருந்த வைத்தல். திருவடி தீக்கை எனப்படும். திருவடி தீக்கை மெய்யுணர்வு நல்கும் சிறப்புடையதாகலின் அதனை யுணர்த்து நிலையில், "பாதார விந்தம் எனது சிர மேல் அமர்த்தி மெய்யளித்த எந்தை" என்று விதந்து ஓதுகின்ருர். தான் பாடுகின்றவற்றை இறைவன் ஏற்பானே ஏலாது புறக்கணிப்பானே என எண்ணி வருந்தினமை தோன்ற, "ஏதாகுமோ என நான் எண்ணி இசைத்த

எலாம்'' என்றும், அவற்றைத் தான் ஒருகாலத்து உரைத்தருளிய வேத வாக்கு என்றும், ஆகம வசனம் என்றும் ஏற்றுக்கொண்டு மகிழ்ந்தான் என்பாராய், ''வேதாகமம் என்றே மேல் அணிந்தான்'' என்றும் இயம்புகின்றார். எந்தையாகிய நடராசப் பெருமான் நான் இசைத்த எல்லாம் வேதாகமம் என்று அணிந்தான் என இயையும்.

இதனால், தாம் பாடுகின்ற பாட்டுக்களை, இறைவன் ஏற்றருளிய சிறப்பைப் புகழ்ந்தவாறும். (3)

4037. **இன்உரைஅன் றென்றுலகம் எல்லாம் அறிந்திருக்க**
**என்உரையும் பொன்உரைஎன் றேஅணிந்தான்—தன்உரைக்கு**
**நேர்என்றான் நீடுலகில் நின்போல் உரைக்கவல்லார்**
**ஆர்என்றான் அம்பலவன் ஆய்ந்து.**

உரை: அம்பலவாணனாகிய நடராசப் பெருமான், இனிமை பொருந்திய சொல்லாகாது என்று உலகவர் எல்லோரும் அறிந்திருக்கவும் என்னுடைய புல்லிய பாக்களையும் பொருள் நிறைந்த சிறந்த பாட்டுக்கள் என்று அணிந்து கொண்டதோடு, என் சொற்களைத் தன்னுடைய சொற்களுக்கு நிகராகுமென்றும், நீண்ட இவ்வுலகத்தில் உன்னைப் போல் பாட வல்லவர் யார் என்றும் என்னைப் புகழ்கின்றான். எ.று.

அம்பலத்தில் ஆடும் பெருமானாதலால் அவனை, ''அம்பலவன்'' எனக் குறிக்கின்றார். உலகில் அறிஞர் பலரும் தம்முடைய பாட்டுக்களைச் சிறந்தவை அல்லவெனக் கருதுகின்றார்கள் என்பாராய், ''இன்னுரை அன்றென்று உலகமெல்லாம் அறிந்திருக்க'' எனவும், எனினும் என்னுடைய பாட்டுக்களைச் சிறந்தவையாகக் கருதி ஏற்றுக் கொள்ளுகின்றான் எனக் கூறுவாராய், ''என்னுரையும் பொன்னுரை என்றே அணிந்தான்'' எனவும் உரைக்கின்றார். சிறந்தவை அல்ல வென்று உலகத்தோர் கூறவும் எங்கள் பெருமானாகிய சிவபிரான் என்பால் வந்து நின்னுடைய சொற்கள் யான் உரைக்கும் வேதாகமங்களைப் போல் உள்ளன என்பாராய், ''தன் உரைக்கும் நேர் என்றான்'' என்றும், நீ பாடுவது போலப் பரந்த இவ்வுலகில் பாடுபவர் பிறரில்லை எனப் பாராட்டுவானாய், ''நீடு உலகில் நின்னைப் போல் உரைக்க வல்லார் ஆர் என்றான்'' என்றும் எடுத்துரைக்கின்றார். பாராட்டு முகத்தால் இவ்வாறு கூறினானே என எண்ணுவாறு ஆய்ந்து கூறினான் எனத் தெளிவுறுத்தற்கு ''அம்பலவன் ஆய்ந்து'' உரைத்தான் எனப் புகல்கின்றான். அணிந்தான் அணிந்து எனப் பொருள்படும் முற்றெச்சம். அம்பலவன், அணிந்து, ஆய்ந்து, தன்உரைக்கு நேர் என்றான், நின் போல் உரைக்க வல்லார் ஆர் என்றான் என இயையும்.

இதனால், தாம் பாடும் பாட்டுக்களை இறைவன் பாராட்டி மேற்கொண்ட திறம் தெரிவித்தவாறும். (4)

4038. என்பாட்டுக் கெண்ணுத தெண்ணி இசைத்தேனென்
தன்பாட்டைச் சத்தியமாத் தான்புனைந்தான்—முன்பாட்டுக்
காலையிலே வந்து கருணை அளித்தேதருமச்
சாலையிலே வாஎன்ருன் தான்.

**உரை:** முன்னே யான் பாடிய காலத்தில் என்பால் வந்து திருவருள் ஞானமளித்துத் தருமச் சாலைக்கு வருக வென்று அருளிய பெருமான் முன்பெல்லாம் எண்ணுதவற்றை எண்ணி என் வாய் வந்தன பாடினேனுக நின் பாட்டுக்களை உளம் கலந்து ஒன்றி நான் பாடியதாகக் கொண்டு ஏற்றருளினுன். எ.று.

உள்ளம் ஒன்றி நினைந்து ஓதாமல் என் வாய் வந்த சொற்களால் முன் எண்ணுத எண்ணங்களை எண்ணிப் பாடினேன் என்பாராய், "என் பாட்டுக்கு எண்ணுதது எண்ணி இசைத்தேன்" என்றும், அப்பாட்டினை யும் நான் உளம் கலந்து பாடியதாகக் கருதி ஏற்றருளினுன் என்பாராய், "என்றன் பாட்டைச் சத்தியமாத் தான் புனைந்தான்" என்றும் கூறுகின்ருர். முன்பொருகால் இறைவனை நினைந்து பாடிக் கொண்டிருக் கையில் தன்முன் எழுந்தருளி இறைவன் அருள் செய்த குறிப்பை, "முன் பாட்டுக் காலையிலே வந்து கருணை அளித்து" என்று இசைக் கின்ருர். தருமச் சாலை வள்ளற் பெருமான் வடலூரின்கண் அமைத் திருந்த சாலை.

இதனுல், வடலூர் ஞான சபையில் இருந்த வள்ளற் பெருமானை இறைவன் தருமச் சாலைக்கு வரச் செய்த திறம் தெரிவித்தவாறும். (5)

4039. என்னே அதிசயம்ஈ திவ்வுலகீர் என்னுரையைப்
பொன்னே எனமேற் புனைந்துகொண்டான்—தன்னேரில்
நல்ஆர ணங்கள்எலாம் நாணியவே எல்லாஞ்செய்
வல்லான் திருக்கருணை வாய்ப்பு.

**உரை:** தனக்கு ஒப்பில்லாத நலம் நிறைந்த வேதங்கள் எல்லாம், எல்லாம் செய்ய வல்லவனுகிய சிவபெருமானுடைய திருவருளைப் பெறும் வாய்ப்பு இல்லாமையால் நாணி ஒடுங்கினவாயினும், என்னுடைய புல்லியப்பாட்டுக்களைப் பொன் போல் உயர்ந்தவையாக ஏற்று அணிந்து கொண்டான்; உலகத்தில் உள்ளவர்களே இந்த அதிசயத்தை என்னென்று சொல்வேன். எ.று.

ஆரணங்கள்- வேதங்கள். அவை ஒப்பற்ற சிறப்புடையனவா தலால் அவற்றை, "தன்னேரில் நல்லாரணங்கள்" என்று குறிக்கின்ருர். இறைவனுடைய திருவருள் நலத்தை முற்ற வுணர்ந்து ஓதும் சிறப்பு இல்லாமையால், இறைவனுடைய திருவருள் ஞானத்தைப் பெற முடியாமையால் ஒடுங்குகின்றன என்பதற்கு, "திருக்கருணை வாய்ப்பு நாணியவே" எனத் தெரிவிக்கின்ருர். வாய்ப்புப் பெற மாட்டாமையால் "நாணியவே" என இயையும். பெற மாட்டாமை என்பது ஆற்றலால் வருவிக்கப்பட்டது. வேதங்களும் பெற முடியாத

திருவருள் வாய்ப்பைத் தாம் பெற்றுணர்ந்து பாடுவது தமக்கே மிக்க வியப்பைத் தருவதால் வடலூரார் வள்ளல், "என்னே அதிசயம் ஈது இவ்வுலகீர்" என்று உரைக்கின்றார்.

இதனால், திருவருள் வாய்ப்பு தமக்கு எய்தியதால் தாம் இனிது பாட நேர்ந்தமையை எண்ணி மகிழ்ந்தவாறும். (6)

4040. முன்பின் அறி யாது மொழிந்தமொழி மாலைஎலாம்
அன்பின்இசைந் தந்தோ அணிந்துகொண்டான்—என்பருவம்
பாராது வந்தென் பருவரல்எல் லாம்தவிர்த்துத்
தாரா வரங்களெலாம் தந்து.

உரை: என்னுடைய பக்குவம் நோக்காமல் என்பால் வந்து, என் துன்பமெல்லாம் போக்கி இதுகாறும் நல்கியிராத எல்லா வரங்களையும் தந்து காரண காரியம் நோக்காமல் யான் மொழிந்த சொன்மாலைகள் எல்லாவற்றையும் அன்போடு இசைந்து அணிந்து கொண்டான். எ.று.

பருவம் - பதி பக்குவ நிலை. அன்பர்களுடைய பதி பக்குவத்திற்கு ஏற்ப ஞானமும் பிற வரங்களும் தருவது இறைவனுடைய இயல்பாகும். இப்பொழுது அது நோக்காமல் என்பால் வந்து என்னுடைய துன்பங்களைப் போக்கியதோடு பெறுதற்கரிய வரங்கள் எல்லாவற்றையும் தந்தருளினான் சிவபெருமான் என்பாராய், "என் பருவம் பாராது வந்தென் பருவரல் எல்லாம் தவிர்த்துத் தாரா வரங்களெலாம் தந்து" என்று உரைக்கின்றார். ஒரு நிகழ்ச்சிக்குரிய காரண காரியங்கள் முன்பின் எனப்படுகின்றன. யான் சொன்ன மாலைகளை ஏற்பதற்குரிய காரணத்தை முன் என்றும், அதனால் விளையும் பயனைப் பின் என்றும் குறித்து, இவ்விரண்டையும் நோக்காமல் ஏற்றருளிய பெருநலத்தை வியந்துரைக்கின்றாராதலால், "முன்பின் அறியாது மொழிந்த மாலை எலாம் அன்பின் இசைந்து அந்தோ அணிந்து கொண்டான்" என்று மொழிகின்றார். இவ்வாறு செய்தருளியதற்குக் காரணம் எனக்கு அவன்பாலும் அவனுக்கு என்பாலும் உளதாகிய அன்பு காரணம் என அறிவிப்பாராய், "அன்பின் இசைந்து அணிந்து கொண்டான்" என்று இயம்புகின்றார். அந்தோ என்பது வியப்புக் குறித்து நின்றது.

இதனால், அன்பு காரணமாக என்னுடைய சொன் மாலைகளை இறைவன் ஏற்றருளுகின்றான் என்றவாறும். (7)

4041. பொன்னைப்ப தாம்ஒருநீ போற்றியசொன் மாலைஎன்றே
என்னப்பன் என்சொல் இசைந்தணிந்தான்—தன்ஒப்பில்
வல்லான் இசைந்ததுவே மாமாலை அற்புதம்ஈது
எல்லாம் திருவருட்சீ ரே.

உரை: எனக்கு அப்பனாகிய சிவபெருமான் என்பால் அருள் கூர்ந்து ஒப்பற்ற நீ விரும்பித் துதித்தளித்த சொன்மாலை பொன் போல் உயர்ந்ததாம் என்று சொல்லி என்னுடைய சொன்மாலையை விரும்பி

அணிந்து கொண்டான்; தனக்கு ஒப்பு ஒருவருமில்லாத எல்லாம் வல்லவனாகிய சிவபெருமான் விரும்பிய சொன்மாலை எதுவோ அதுவே பெரிய மாலையாகும்; இதுவும் ஓர் அற்புதமாகும்; இங்ஙனம் நிகழ்வதெல்லாம் அவனுடைய திருவருள் சிறப்பேயாகும். எ.று.

எனக்குத் தந்தையாகவும் நான் அவனுக்கு மகனாகவும் முறைமை யுற்றதனால் மகன் செயலைப் பாராட்டித் தந்தை மகிழ்வது போல, நான் செய்த சொன் மாலையைப் பொன் னெப்பதாம் ஒரு நீ போற்றிய சொன் மாலை என்று பாராட்டி என் சொன்மாலையை ஏற்றுக் கொண்டான் என்பாராய், "என் சொல் இசைந்து அணிந்தான்" என்று இயம்பு கின்றார். எல்லா வல்லமையையும் உடைய பெருமானுக்கு ஒப்பாவது ஒன்றும் இல்லை, ஒப்பாவார் ஒருவரும் இல்லை என விளக்குதற்குச் சிவனை, "தன்னெப்பில் வல்லான்" என்று சாற்றுகின்றார். அவன் விரும்பி அணிவது எத்தகையது ஆயினும், அஃது ஒரு பெரிய மாலையேயாதலால், "இசைந்ததுவே மாமாலை" என்று இசைக்கின்றார். இச்செயல் நமக்கெல்லாம் அற்புதமாம் என்பார், "அற்புதம் ஈதெல்லாம்" எனவும், இதற்கெல்லாம் காரணம் அவரது திருவருட் பெருமையே என வலியுறுத்தற்கு, "ஈதெல்லாம் திருவருட் சீரே" எனவும் எடுத்துரைக் கின்றார்.

இதனால், என் சொல் மாலைகளை உயர்ந்தனவாகப் போற்றி இறைவன் அணிந்து கொள்வது அற்புதம் எனவும், திருவருட் சீர் என வும் செப்பியவாறும். (8)

4042. **பின்முன் அறி யேன்நான் பிதற்றியசொன் மாலைஎலாம்**
**தன்முன் அரங் கேற்றெனவே தான்உரைத்தான்—என்முன்**
**இருந்தான்என் னுள்ளே இருக்கின்றான் ஞான**
**மருந்தான்சிற் றம்பலத்தான் வாய்ந்து.**

உரை: எனக்கு முன்னிலையில் இருந்தவனும், தன்மையில் என்னுள்ளே இருக்கின்றவனும், ஞானமாகிய மருந்தாகுபவனும், சிற்றம் பலத்தில் எழுந்தருளுபவனுமாகிய சிவபெருமான், அருள் நிறைந்து காரிய காரணங்களை அறியாதவனாகிய நான் பாடிய சொன் மாலைகள் எல்லாவற்றையும் தனது திருமுன் அரங்கேற்றுக வென்று எனக்கு உரைத்தருளினன்; ஆதலால் இச்சொன்மாலையை அவனுடைய திருமுன் உரைக்கின்றேன். எ.று.

படர்க்கை நிலையில் எங்கும் எல்லாப் பொருளிலும் கலந்து ஒன்றி யிருப்பவ னாயினும், என்னுடைய முன்னிலையிலும் தன்மை நிலையில் என்னுள்ளும் ஒன்றி உடனாய் இருக்கின்றான் என்று விளக்குவாராய், "என் முன் இருந்தான் என்னுள்ளே இருக்கின்றான்" என்று கூறு கின்றார். ஞானமாகிய மருந்தாய் இருந்து அறியாமையாகிய நோயைத் தீர்ப்பதால் சிவனை, "ஞான மருந்தான்" என்றும், திருச்சிற்றம்பலத்தின் கண் காட்சி தருதலால், "திருச்சிற்றம்பலத்தான்" என்றும் போற்று கின்றார். சொன் மாலைகளைத் தொடுத்துச் சிவனுக்கு அணிவதால் தான் எய்த இருக்கும் பயன் ஈது எனவும், இம்மாலைகளைப் பாடுதற்குக்

காரணம் ஈது எனவும் எண்ணிச் செய்யாமை விளங்க, "பின் முன் அறியேன் நான்" எனவும், இம்மாலைகளை அப்பெருமானுக் கென்றே பாடினமையால் இச்சொல் மாலைகளைத் தன் முன்னே பாடிக் காட்டுமாறு பணித்தான் என்பாராய், "சொன் மாலை எலாம் தன்முன் அரங்கேற் றெனவே தான் உரைத்தான்" எனவும் இயம்புகின்றார்.

இதனால், தாம் பாடிய பாட்டுக்களை இறைவன் திருமுன் ஓதுமாறு பணித்தமை தெரிவித்தவாறும். (9)

4043. நீயேஎன் பிள்ளைஇங்கு நின்பாட்டில் குற்றம்ஒன்றும்
ஆயேம்என் றந்தோ அணிந்துகொண்டான்—நாயேன்செய்
புண்ணியம்இவ் வானிற் புவியின் மிகப்பெரிதால்
எண்ணியஎல் லாம்புரிகின் றேன்.

உரை : நீ எனக்கு மகனாதலால் இங்கே நீ பாடுகின்ற பாட்டில் குற்றம் ஒன்றும் காண மாட்டோம் என்று சொல்லி என் பாமாலையைப் பரிவோடு அணிந்து கொண்டான்; இதனால் நாய் போன்ற நான் செய்த புண்ணியம் இம்மண்ணுலகினும் விண்ணுலகினும் மிகப் பெரிதாம்; ஆகவே நான் எண்ணிய எண்ணங்கள் எல்லாவற்றையும் பாட்டுருவில் எழுதுகின்றேன். எ.று.

தமது சிறுமையைப் புலப்படுத்தற்கு "நாயேன்" என்று கூறுகின்றார். நான் பாடுகின்ற பாட்டுக்களில் உள்ள குணம் குற்றங்கள் யாதும் நோக்காமல் இறைவன் ஏற்றருளுகின்றான் என்ற மகிழ்ச்சி புலப்பட, "நீயே என் பிள்ளை இங்கு நின் பாட்டில் குற்றம் ஒன்றும் ஆயேம் என்று அந்தோ அணிந்து கொண்டான்" என்றும், குணமோ குற்றமோ ஏற்றுக் கொண்டதற்குக் காரணம் இதுவென விளக்குதற்கு, "நீயே என் பிள்ளை இங்கு நின் பாட்டில் குற்றம் ஒன்றும் ஆயேம்" என்றும் அறிந்து கொண்டான் எனப் புகல்கின்றார். இந்த அருளிப் பாட்டுக்குக் காரணம், "நான் செய்த புண்ணியம்" என்றும், அது மண்ணுலகினும் விண்ணுலகினும் பெரியது ஒன்றாம் என்பாராய், "இவ்வானிற் புவியின் மிகப் பெரிதால்" என்றும் இயம்புகிறார். இப்பெருமிதத்தால் நான் எண்ணும் எண்ணங்கள் எல்லாவற்றையும் பாட்டுருவில் பாடுகின்றேன் என்பார், "எண்ணிய எல்லாம் புரிகின்றேன்" என வுரைக்கின்றார்.

இதனால், தாம் செய்த புண்ணியப் பயனை வடலூர் வள்ளல் உணர்ந்து வியந்தவாறும். (10)

4044. எண்ணுகின்றேன் எண்ணுதொறென் எண்ணமெலாம் தித்திக்க
நண்ணுகின்ற தென்புகல்வேன் நானிலத்தீர்—உண்ணுகின்ற
உள்ளமுதோ நான்தான் உஞற்றுதவத் தாற்கிடைத்த
தெள்ளமுதோ அம்பலவன் சீர்.

உரை : நிலவுலகத்து நன்மக்களே! அம்பலவாணனாகிய சிவனுடைய புகழ் உண்ணப் படுகின்ற உள்ளமுதம் என்றோ, நான் செய்த தவத்தால் கிடைத்த தெள்ளமுதம் என்றோ, சொல்லத் தக்க வகையில், எண்ணும் இயல்பினனாகிய யான் நினைக்குந் தோறும் என் நினைவகமெல்லாம் இனிக்கும்படி எய்துகின்றதாதலால் அதன் சிறப்பை என்னென்று சொல்லுவேன். எ.று.

நானிலம் - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு கூறுகளையுடைய நிலவுலகம். நிலத்தீர் எனப் பொதுப்படக் கூறினாரா யினும் சிறப்புடைய நன்மக்களே குறிக்கப்படுகின்றார்கள் எனக் கொள்க. அவர்களை யல்லது பிறர் இறைவனுடைய புகழ்களைக் கேட்க விரும்பாராதலால், உள்ளமுதம் - உள்ளத்தால் உள்கிச் சுவைக்கப்படும் ஞான அமுதம். உஞற்றுத் தவம் - செய்யப்படும் தவம். அம்பலத்தாடும் பெருமானாதலால் சிவனை, "அம்பலவன்" என்று குறிக்கின்றார். எண்ணுவார் எண்ணுந் தோறும் சிவனது திருப்புகழ் இன்பமுறுத்தலின், "எண்ணுகின்றேன் எண்ணுதொறு என் எண்ணமெலாம் தித்திக்க நண்ணுகின்றது என் புகல்வேன்" என்று உரைக்கின்றார்.

இதனால், சிவனது திருப்புகழ் நினைக்குந் தோறும் இன்பமுறும் இயல்பின தென்பது கூறப்பட்டதாம். (11)

4045. ஆக்கி அளித்தல்முதல் ஆந்தொழில்ஓர் ஐந்தினையும்
தேக்கி அமுதொருநீ செய்என்றான்—தூக்கி
எடுத்தான் அணைத்தான் இறவாத தேகம்
கொடுத்தான்சிற் றம்பலத்தென் கோ.

உரை : திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளும் தலைவனாகிய சிவபெருமான் உலகியலில் வீழ்ந்து கிடக்கும் என்னைத் தூக்கி எடுத்து என்னை மார்பில் அணைத்துச் கொண்டு, என்றும் பொன்றாத ஞான தேகத்தைக் கொடுத்தருளினான்; அதனோடு அமையாது ஆக்கல், அளித்தல் முதலாகிய ஐவகைத் தொழில்களையும் செய்யும் ஆற்றலை நிறைத்து அந் நலத்தை நீ உண்பாயாக என்று மொழிந்தருளினான். எ.று.

ஆக்கி அளித்தல் முதலாம் தொழில் : ஆக்குதல், காத்தல், அழித்தல், அளித்தல், மறைத்தல் என்ற ஐந்துமாம். தொழில் ஐந்தினையும் புரிய வல்ல ஆற்றலை அமுதமாக்கி இதனை நீ உண்க என்றான் என்பது கருத்து. இறவாத தேகம் என்பது ஞான வுடம்பு.

இதனால், இறவாத தேகம் அளித்து ஆக்கல் முதலிய தொழில் செய்யும் ஆற்றலை இறைவன் அருளினமை எடுத்தோதியவாறும். (12)

திருச்சிற்றம்பலம்

# 53. உத்தர ஞான சிதம்பர மாலை

அஃதாவது, உத்தர ஞான சிதம்பரம் என்பது வடலூரில் உள்ள ஞான சிதம்பரச் சபையைக் குறிப்பது. அதனைச் சிறப்பிக்கும் பாமாலையாதலின் இஃது இவ்வாறு சிறப்பித்து ஓதப்படுகிறது.

## கட்டளைக் கலித்துறை

4046. அருளோங்கு கின்ற தருட்பெருஞ் சோதி யடைந்ததென்றன்
மருளோங்கு றாமல் தவிர்த்தது நல்ல வரமளித்தே
பொருளோங்கி நான்அருட் பூமியில் வாழப் புரிந்ததென்றும்
தெருளோங்க ஓங்குவ துத்தர ஞான சிதம்பரமே.

உரை : எப்பொழுதும் தெளிந்த நிலை உள்ளத்தில் ஓங்க, விளங்குவதாகிய உத்தர ஞான சிதம்பரம் திருவருளால் உயர்வுடையது; அருட்பெருஞ் சோதியாகிய ஆண்டவன் எழுந்தருளுவது; என்பால் உள்ள மயக்க வுணர்வு மிக்கு எழாமல் போக்குவது; நல்ல வரங்களைத் தந்து ஞானப் பொருளால் உயர்ந்து திருவருள் இன்ப உலகில் நான் வாழ்வதற்கு அருளுவதாம். எ-று.

தில்லைச் சிதம்பரத்திற்கு, வடமேற்கில் உள்ளதாகலின் வடலூரில் உள்ள ஞான சபை உத்தர ஞான சிதம்பரம் எனப்படுகிறது. சிதம்பரம் - ஞானாகாசம் எனப் பொருள்படும். உத்தர ஞான சிதம்பரம் கண்டு வழிபடுவார்க்கு அருட் செல்வம் மிகுவிப்பது என்பாராய், "அருள் ஓங்குகின்றது" எனவும், அதற்குக் காரணம் அதன்கண் அருள் ஞானமே உருவாகிய சிவபெருமான் எழுந்தருளுவது என்பாராய், "அருட் பெருஞ் சோதி அடைந்தது" எனவும் கூறுகின்றார். காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்றும், உயிரின்கண் கிடந்து முற்றவும் நீக்கப் படாது இருப்பதாதலாலும், அவற்றுள் காமம் வெகுளி என்ற இரண்டினும் மயக்கம் வலி யுடையதாய் உணர்வை மறைப்பதாதலாலும் அதனை விதந்து எடுத்து அதனை ஒழிக்கும் திறம் விளங்க, "என்றன் மருள் ஓங்குறாமல் தவிர்த்தது" என்றும், மீளவும் அம்மருட்கையால் தாக்கப் படாமைப் பொருட்டு ஞான நலத்தை அளிப்பது என்றற்கு "நல்ல வரமளித்து" என்றும், அந்த ஞானப் பயனால் பெறுதற்குரிய சிவபோகமாகிய பொருளால் நிறைந்து திருவருள் இன்ப வாழ்வு பெறுதற்கு உதவுவது என்பாராய், "பொருளோங்கி நான் அருட் பூமியில் வாழப் புரிந்தது என்றும் புகல்கின்றார். அருட் பூமியில் உளதாகும் வாழ்வு வாழ்வார்க்கு ஞான விளக்கமாய் நின்று நிலவும் நீர்மை சிறந்தது என வலியுறுத்தற்கு, "என்றும் தெருள் ஓங்க ஓங்குவது" என மொழிகின்றார்.

இதனால், உத்தர ஞான சிதம்பரம் அருள் வாழ்வு பெற்றுச் சன் மார்க்க ஞானத் தெளிவை நல்கும் சிறப்புடையது என்று சொல்லிய வாறும். இனிவரும் பாட்டுக்களுக்கும் இதுவே கருத்தாகக் கொள்க. (1)

4047. **இணைஎன்று தான்தனக் கேற்றது போற்றும் எனக்குநல்ல**
**துணைஎன்று வந்தது சுத்தசன் மார்க்கத்தில் தோய்ந்ததென்னை**
**அணைஎன் றணைத்துக்கொண் டைந்தொழில் ஈந்த தருளுலகில்**
**திணைஐந்து மாகிய உத்தர ஞான சிதம்பரமே.**

உரை: உத்தர ஞான சிதம்பரம் தானே தனக்கு நிகர் எனப் பெறுவது; நாளும் போற்றி வழிபடுகின்ற எனக்கு நல்ல துணையாக வந்தது; சுத்த சன்மார்க்க நெறியில் கலந்திருக்கின்ற என்னை என்பால் வருக என என்னைச் சேர்த்துக் கொண்டது; ஆக்குதல், காத்தல் முதலிய ஐந்து தொழிலும் செய்ய வல்ல ஆற்றலை எனக்கு நல்கியது; திருவருள் இன்ப உலகில் புணர்தல் முதலிய திணை ஐந்தும் கலந்ததீ மாகும். எ.று.

இணை - ஒப்பு. தனக்கு ஒப்பதும் உயர்ந்ததும் இல்லாதது என விளக்குதற்கு, "இணை என்று தான் தனக்கு ஏற்றது" என வுரைக் கின்றார். நல்ல துணை - ஞானப் பேற்றுக்கு அமைந்த துணை. சுத்த சன் மார்க்க ஞான நிலையமாய்த் தன்னைச் சார்ந்தாரைத் தன்பால் தடை யின்றி ஏற்றருளுவது எனச் சிறப்பித்தற்கு, "சுத்த சன்மார்க்கத்தில் தோய்ந்தது என்னை அணை என்று அணைத்துக் கொண்டது" என்றும், படைத்தல் முதலிய தொழில் ஐந்தையும் செய்தல் சிவனுக்கே உரியதா யினும் அப்பெருமான் எல்லாம் செய்ய வல்லவனுதலால், அவ்வைந் தொழில் ஆற்றலையும் எனக்கு அருளுகின்றான் என்பாராய், "ஐந்தொழில் ஈந்தது" என்றும் இசைக்கின்றார். பொருள் உலகில் உயிர்களிடையே நுகரப்படும் இன்பம் கூடுதல், பிரிதல், இருத்தல், ஊடுதல், இரங்குதல் ஆகிய ஐந்தாலும் நுகரப்படுவது போல அருளுலகிலும் நுகரப்படுகிறது என்பாராய், "அருளுலகில் திணை ஐந்துமாகியது" என இயம்புகின்றார். கூடுதல் முதலிய ஐந்தும் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் முதலிய திணை ஐந்துக்கும் ஏற்ற உரிப் பொருளாதலின் அவற்றைத் திணை என்றே குறிக்கின்றார். அகப் பாட்டுக்குத் திணை வகுப்பவரும் உரிப் பொருளையே திணைக்குச் சிறந்ததாகக் கொள்வது, "முதல் கரு உரிப் பொருள் என்ற மூன்றே நுவலும் காலை முறை சிறந்தனவே" (தொல். போ. 3) என்று சான்றோர் கூறுவதாற் காண்க. (2)

4048. **உலகம் எலாந்தொழ உற்ற தெனக்குண்மை ஒண்மைதந்தே**
**இலகஎ லாம்படைத் தாருயிர் காத்தருள் என்றதென்றும்**
**கலகம்இ லாச்சுத்த சன்மார்க்க சங்கம் கலந்ததுபார்த்**
**திலகம் எனநின்ற துத்தர ஞான சிதம்பரமே.**

உரை: மண்ணுலகிற்குத் திலகம் என்று புகழ்ந்தோத விளங்கி நிற்பதாகிய உத்தர ஞான சிதம்பரம் உலகத்திலுள்ள உயர்ந்தோர்கள் எல்லோரும் தொழுதேத்தும் சிறப்புடையது; எளியவனுகிய எனக்கு

உண்மை ஞான ஒளியினைத் தந்து விளக்கமுற எல்லா நலங்களையும் ஆக்கி அளித்து உலகில் நிறைந்த உயிர்களைத் தீங்கு செய்யாமல் காத்து அன்பு செய்க என்று உபதேசித்ததும்; எப்பொழுதும் கலகம் இல்லாத சுத்த சன்மார்க்க சங்கம் பொருந்தியதுமாகும். எ.று.

திலகம் - உயர்ந்தது. பூ மகட்குத் திலகம் போல்வது எனினும் பொருந்தும். உலகம் எனப் பொதுப்படக் கூறினமையின் உலகத்துச் சான்றோர் என்பது வருவிக்கப்பட்டது. எல்லா உயிர்களையும் தன்னுயிர் போல் எண்ணி ஓம்பும் உணர்வு உண்மை ஞானத்தால் உளதாவதாகலின், "எனக்கு உண்மை ஒண்மை தந்தே இலக எல்லாம் படைத்து ஆருயிர் காத்தருள் என்றது" என வுரைக்கின்றார். ஈண்டு அருள் என்றது மிக்க அன்பு செய்க என்பதாம். கலகம் உளதாகிய விடத்துச் சன்மார்க்க சங்கம் இனிது உருவாகித் தொழிற் படாதாதலால், "என்றும் கலகமிலாச் சுத்த சன்மார்க்க சங்கம்" என்று சொல்லுகின்றார். கலகத்திற்கு இடமின்றி ஒத்த அன்பும், உயர்ந்த அருட் பண்பும், அற வுணர்வும் பொருந்திய நன்மக்கள் கூடி யிருப்பது பற்றி, "சுத்த சன்மார்க்கம்" என்று சிறப்பித் துரைக்கின்றார். (3)

4049. **பவமே தவிர்ப்பது சாகா வரமும் பயப்பதுநல்**
**தவமே புரிந்தவர்க் கின்பந் தருவது தான்தனக்கே**
**உவமேய மான தொளிஓங்கு கின்ற தொளிருஞ்சுத்த**
**சிவமே நிறைகின்ற துத்தர ஞான சிதம்பரமே.**

**உரை:** உத்தர ஞான சிதம்பரம் அன்பர்களின் பிறப்பை நீக்குவதும், இறவா வர மளிப்பதும், நன்னெறியில் தவம் புரிபவர்களுக்கு இன்பப் பயனை நல்குவதும், தனக்கு உவமம் தானேயாவதும், தெய்வ ஒளி கொண்டு விளங்குவதும், சுத்த சிவமே நிறைந்ததுமாகும். எ.று.

பவம் - பிறப்பு. பிறப்பு துன்பம் தரும் இயல்பிற்றுதலால், "பவமே தவிர்ப்பது" எனவும், சாதல் பிறப்புக்கு ஏதுவாதலால் அத்துன்பத்தையும் நீக்குவது என்பதற்கு, "சாகா வரமும் பயப்பது" எனவும், நற்றவம் புரிபவர்க்குப் பயன் இன்பமேயாயினும், அது தானே செய்பவரை வந்தடையாதாகலால் அதனைக் கூட்டுவிக்கும் சிறப்புடைமை பற்றி, "நல்தவமே புரிந்தவர்க்கு இன்பம் தருவது" என நவில்கின்றார். உவமம், உவமேயம் என்ற இரண்டனுள் உவமம், உவமேயத்தினும் உயர்ந்தது என்னும் கருத்துப் பற்றி, உத்தர ஞான சிதம்பரத்திற்கு உயர்ந்தது வேறின்மையை வலியுறுத்தற்கு, "தான் தனக்கு உவமேயம் ஆனது" என வுரைக்கின்றார். சங்கச் சான்றோரும், "பிறர்க்கு நீ வாயின் அல்லது நினக்குப் பிறர் உவமம் ஆகா ஒரு பெருவேந்தே" (பதிற்று: 73) என்பது காண்க. ஒளி மயமானது உத்தர ஞான சிதம்பரம் என வுரைப்பாராய், "ஒளி ஓங்குகின்றது" எனவும், அதற்குக் காரணம் அங்கே அருள் ஞான ஒளி யுருவாகிய சுத்த சிவம் எழுந்தருளுகின்றது என்பாராய், "ஒளிரும் சுத்த சிவமே நிறைகின்றது உத்தர ஞான சிதம்பரம்" எனவும் உரைக்கின்றார். (4)

**4050. ஒத்தா ரையும்இழிந் தாரையும் நேர்கண் டுவக்கஒரு**
**மித்தாரை வாழ்விப்ப தேற்றூர்க் கமுதம் விளம்பிஇடு**
**வித்தாரைக் காப்பது சித்தாடு கின்றது மேதினிமேல்**
**செத்தாரை மீட்கின்ற துத்தர ஞான சிதம்பரமே.**

உரை : உத்தர ஞான சிதம்பரம் ஒத்தவர்களையும், உயர்ந்தவர்களையும், தாழ்ந்தவர்களையும், நேரே கண்டு மகிழுமாறு மன வொருமையுற்ற நன்மக்களை இனிது வாழச் செய்வதும், இன்மை யுற்று இறப்பவர்களுக்கு அமுதம் போன்ற சொற்களைச் சொல்லி ஆவன உதவுமாறு செய்யும் நன்மக்களுக்குக் காப்பு அளிப்பதும், அணிமா முதலிய சித்துக்களைச் செய்வதும், நிலவுலகில் இறப்பவர்களை மீட்பதுமாகும். எ.று.

ஒத்தாரையும், இழிந்தாரையும் உரைத்தலால் உயர்ந்தார் என்பது வருவிக்கப்பட்டது. முத்திறத்தாரையும் ஓரிடத்தே ஒப்ப நோக்குமிடத்துப் பார்ப்பவர்க்குக் கருத்தில் வேறுபாடு தோன்றுவதால் அதற்கு இடமின்றி முத்திறத்தாரையும் ஒப்ப நோக்கும் சமரச சன்மார்க்கர்களை, "ஒத்தாரையும் இழிந்தாரையும் நேர் கண்டுவக்க ஒருமித்தாரை வாழ்விப்பது" என மொழிகின்றூர். அமுதமயமான இனிய உரைகளை அமுதம் என்கின்றூர். இறந்தார்க்குத் தாம் உதவுவதே யன்றிப் பிறரையும் உதவச் செய்தல் நல்லறமாதலின் அவர்களை, "அமுதம் விளம்பி இடுவித்தாரைக் காப்பது" என்று கூறுகின்றூர். மேதினி - நிலவுலகம்; செத்தார் - உயிர் இழந்தவர். சாதல் - மீளப் பிறப்பதற்கு ஏதுவாகலின் செத்தாரை மீட்பது நற்செயலாகக் கூறப்படுகிறது. "உறங்குவது போலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" என்று திருவள்ளுவர் உரைப்பது காண்க. (5)

**4051. எத்தாலும் மிக்க தெனக்கருள் ஈந்ததெல் லாமும்வல்ல**
**சித்தாடல் செய்கின்ற தெல்லா உலகும் செழிக்கவைத்த**
**தித்தா ரணிக்கணி ஆயது வான்தொழற் கேற்றதெங்கும்**
**செத்தால் எழுப்புவ துத்தர ஞான சிதம்பரமே.**

உரை : உத்தர ஞான சிதம்பரம், எல்லாவற்றுலும் உயர்ந்தது. எனக்குத் தன்னுடைய திருவருள் ஞானத்தை நல்கியது; எல்லாம் வல்ல சித்தராய்த் திருவிளையாடல் செய்வது; எல்லா உலகத்தவர்களும் செழித்து வாழ வைத்தது; இந்நிலவுலகிற்கு அழகாய் விளங்குவது; வானுலகத்தவர் தொழத் தக்க ஏற்ற முடையது; எவ்வுலகிலும் செத்தாரை எழுப்புவதாகும். எ.று.

எல்லாவற்றுலும் என்பது எத்தாலும் என வந்தது. திருவருள் இல்வழி எவ்வுயிரும் உய்தி பெறுது என்பது பற்றி, "எனக்கு அருள் ஈந்தது" என்று கூறுகின்றூர். மதுரையில் எல்லாம் வல்ல சித்தராய்ச் சிவன் திருவிளையாடல் புரிந்தான் என்ற செய்தியை நினைவிற் கொண்டு, "எல்லாமும் வல்ல சித்தாடல் செய்கின்றது" என்று உரைக்கின்றூர். எல்லா உலகுயிர்களும் பெறுவன பெற்று இனிது வாழ அருள்வது பற்றி, "எல்லா உலகும் செழிக்க வைத்தது" என்றும், இப்பூமியில் வடலூர் உத்தர ஞான சிதம்பரம் புவி மகட்டு அணி செய்வது பற்றி,

"இத்தாரணிக் கணியாயது" என்றும், வானுலகத்துத் தேவர் பலரும் வந்து வணங்கத் தக்க சிறப்புடையது என்றற்கு, "இத்தாரணிக் கணியாயது வான் தொழற்கு ஏற்றது" என்றும் செப்புகின்றார். எவ்வுலகத்தும் பசுபாச ஞானமே யுற்று இறந்தவர்களை மீளவும் இறவா வாழ்வு பெறுதற் பொருட்டுச் செத்தவர்களை எழுப்புவது என்பாராய், "எங்கும் செத்தால் எழுப்புவது" என்று இயம்புகின்றார். (6)

4052. குருநெறிக் கேஎன்னைக் கூட்டிக் கொடுத்தது கூறரிதாம்
பெருநெறிக் கேசென்ற பேர்க்குக் கிடைப்பது பேய்உலகக்
கருநெறிக் கேற்றவர் காணற் கரியது காட்டுகின்ற
திருநெறிக் கேற்கின்ற துத்தர ஞான சிதம்பரமே.

**உரை :** உத்தர ஞான சிதம்பரம் குரு உபதேசிக்க வழிவழி வருகின்ற நெறியிலே என்னைச் செலுத்தி ஒழுகுவிப்பதும், சொல்லுதற்கரிய பெருமை சான்ற ஞான நெறிக்கண் ஒழுகுபவர்க்குக் கிடைக்கத் தக்கதும், பேய் உணர்வு மிக்க உலகியல் வாழ்க்கை நெறிக்கு அமைந்த கீழ்மக்கள் அறிவதற்கு அரியதும், உண்மை நெறியைக் காட்டுகின்ற சிவநெறிக்கு ஏற்றதுமாகும். எ.று.

குரு மாணவர்க்குச் சொல்ல, அவர் தமது மாணவர்க்குச் சொல்ல இவ்வாறு வழி வழியாக வருவது குறிநெறி எனப்படும். அந்நெறியில் வழி வழியாக வரும் ஞானம் தூய்மையும், எளிமையுமுற்று நலம் பயப்பதாதலின் அந்நெறிக்கண் செலுத்தி நன்மக்களை உய்விக்கும் அந்நெறியில் தம்மை இறைவன் செலுத்தி ஆட்கொண்டமை தோன்ற, "குருநெறிக்கே என்னைக் கூட்டிக் கொடுத்தது" என்று கூறுகின்றார். இயல்பிலேயே திருவருள் ஞானப் பேறு பெற்று அதனால் முதிர்ந்த நல்லோர்க்கும் இந்தக் குருநெறிப் பயன் எய்துவது பற்றி, "பெரு நெறிக்கே சென்ற பேர்க்குக் கிடைப்பது" என்று கிளந்துரைக்கின்றார். இயல்பிலேயே திருவருள் ஞானம் எய்துவது முன்னைப் பிறப்புக்களில் தவஞ் செய்து உயர்ந்தார்க்காதலால், அது காரண காரிய முறையில் எடுத்துரைப்பதற்கு அருமை யுடைமையால், "கூற அரிதாம் பெருநெறி" என்று கூறுகின்றார். ஆசை வழி உழன்று அல்லலுறும் உலகத்தவரை, "பேய் உலகு" என்றும், இப் பேய் உலகியல் பிறந்து இறந்து வருந்துதற்கே காரணமாதலால் அவ்வழி உழல்பவரை, "கருநெறிக்கு ஏற்றவர்" என்றும், அவர்களுக்கு அமைவது பாச ஞானமாதலால் அருள் ஞானம் எய்துவது அரிது என்பது புலப்பட, "கருநெறிக் கேற்றவர் காணற் கரியது" என்றும் இயம்புகின்றார். திருநெறி என்பது சிவநெறி. திருவருள் ஞானத்தை விளங்கக் காட்டி நலம் எய்துவிப்பது பற்றி, "காட்டுகின்ற திருநெறிக் கேற்கின்றது" என இசைக்கின்றார். (7)

4053. கொல்லா நெறியது கோடா நிலையது கோபமிலார்
சொல்லால் உவந்தது சுத்தசன் மார்க்கந் துணிந்ததுல
கெல்லாம் அளிப்ப திறந்தால் எழுப்புவ தேதம்ஒன்றும்
செல்லா வளத்தின துத்தர ஞான சிதம்பரமே.

**உரை :** உத்தர ஞான சிதம்பரம், எவ்வுயிரையும் கொல்லாத ஒழுக்கத்தை யுடையதும், நன்னெறியினின்றும் பிறழாத தன்மை யுடையதும், எத்துணையும் சினங் கொள்ளாத நல்லவர்களின் சொற்களால் மகிழ்ந்து பாராட்டப்படுவதும், சுத்த சன்மார்க்கத்தையே நன்மார்க்கம் எனத் துணிந்து கைக் கொண்டதும், உலகுயிர்கட் கெல்லாம் அருளாதரவு செய்வதும், இறந்தாரை எழுப்புவதும், குற்றம் சிறிதும் பொருந்தாத குண உருவாகியதுமாகும். எ.று.

எவ்வுயிரையும் கொல்லுதல் இல்லாத ஒழுக்கம், "கொல்லா நெறி" என்று குறிக்கப்படுகிறது. கோடுதல் - நன்னெறியினின்றும் பிறழ்தல். கோபமிலார் - குணமென்னும் குன்றேறி நிற்பவர். இப்பெருமக்களால் பெரிதும் மகிழ்ந்து பாராட்டப் படுவது பற்றி உத்தர ஞான சிதம்பர நெறி, "கோபமிலார் சொல்லால் உவந்தது" என்று சொல்லுகின்றார். பன்முறையும் பிறந்திறந்து உழல்பவரைப் பிறவா நிலையில் பிறங்கச் செய்தற்கு உபாயமாதலின், "இறந்தார் எழுப்புவது" என இயம்புகின்றார். உத்தர ஞான சிதம்பரத் திருநெறி துன்பம் பயக்கும் குற்றங்கட்கு இடமில்லாதது என்பாராய், "ஏதம் ஒன்றும் செல்லா வளத்தினது" என்று புகழ்கின்றார்.
(8)

**4054.** **காணாத காட்சிகள் காட்டுவிக் கின்றது காலம் எல்லாம்**
**வீணாள் கழிப்பவர்க் கெய்தரி தானது வெஞ்சினத்தால்**
**கோணாத நெஞ்சில் குலாவிநிற் கின்றது கூடிநின்று**
**சேணாடர் வாழ்த்துவ துத்தர ஞான சிதம்பரமே.**

**உரை :** உத்தர ஞான சிதம்பரம் காணப் படாத காட்சிகளைக் காணச் செய்கின்றதும், காலம் அனைத்தையும் வீணாய்க் கழிப்பவர்க்கு எய்த வொண்ணாததும், மிக்க கோபமுற்ற போதும் நன்னெறியில் வழுவுதலில்லாத நன்னெஞ்சின்கண் இன்புற்று நிற்பதும், வானவரும் தம்மிற் கூடி நின்று வாழ்த்தி வழிபடுவதுமாகும். எ.று.

காணாத காட்சிகள் - ஊனக் கண்களால் காணப்படாத இனிய தெய்வக் காட்சிகள். ஞான மயமாதலால் உத்தர ஞான சிதம்பரத்தைக் கண்ட கண்களுக்குத் தெய்வீகக் காட்சிகள் பலவற்றையும் கண்டு வியக்குமாறு அது காட்டுகின்றது என்பது கருத்து. ஒரு கணமும் நில்லாது கழிந்தவண்ணம் இருக்கும் காலத்தின் அருமையை நினையாது வீண் பொழுது போக்குபவர் ஞானப் பயன் எய்தாதவராதலால், அவர்கட்கு உத்தர ஞான சிதம்பரத்தின் நற்பயன் உண்டாகாமை தோன்ற, "காலமெல்லாம் வீணாள் கழிப்பவர்க்கு எய்த அரிதானது" என்று இயம்புகின்றார். சினம் மிகுந்த வழி மனம் தடுமாற்றமுற்று நன்னெறியில் செல்லா தொழிதலின் சினத்தை ஆளும் நற்பண்புடையவர்க்கு அவை நன்கு பயன்படுவதால், "வெஞ்சினத்தால் கோணாத நெஞ்சில் குலாவி நிற்கின்றது" என்று கூறுகின்றார். சேணாடர் - தேவர் உலகத்தவர். அவர்கள் கூட்டம் கூட்டமாய் வந்து வழிபடுகின்றமை புலப்பட, "கூடி நின்று சேணாடர் வாழ்த்துவது" என்று தெரிவிக்கின்றார்.
(9)

4055. சொல்வந்த வேத முடிமுடி மீதில் துலங்குவது
கல்வந்த நெஞ்சினர் காணற் கரியது காமம்இலார்
நல்வந் தனைசெய நண்ணிய பேறது நன்றெனக்கே
செல்வந்தந் தாட்கொண்ட துத்தர ஞான சிதம்பரமே.

உரை : உத்தர ஞான சிதம்பரம் சொல் வடிவாகிய வேதாந்தத்தின் முடி மேல் விளங்குவதும், கல்லொத்த நெஞ்சை யுடையவர்கள் காண்பதற்கரியதும், காம இச்சை முதலியன இல்லாத நல்லவர்கள் நன்கு பணிந்து வழிபடுதற்கு ஏற்ற பேருய் விளங்குவதும், எளியனுகிய எனக்கு மிக்க அருட் செல்வத்தைத் தந்து என்னை ஆட்கொண்டதுமாகும். எ.று.

வேதம் சொல் உருவினதாதலால் அதன் அந்தமாகிய உபநிடதங்களின் உச்சியில் பிரமப் பொருளாய் விளங்குவது பற்றி, "சொல் வந்த வேத முடிமுடி மீதில் துலங்குவது" என்றும், இரக்கப் பண்பு இல்லாமையால் கல் போல் உறைப்புண்ட மனத்தினை யுடைய வன்னெஞ்சம் உடையவர்களை, "கல் வந்த நெஞ்சினர்" என்றும், அவர்கள் மென்மைப் பண்பும், அருள் நாட்டமும் இல்லா தொழிதலால் அவர்களால் காண்பதற்கு அரிது என்பாராய், "கல் வந்த நெஞ்சினர் காணற் கரியது" என்று கட்டுரைக்கின்ருர். காம வேட்கை அறிவை மயக்கும் இயல்பினதாதலால் அதனைத் தவிர்த்து விளங்கும் ஞானிகள் நன்கு வழிபட்டுத் தாம் கருதிய பேறுகளை இனிது பெற உதவுகின்றமை விளங்க, "நல் வந்தனை செய நண்ணிய பேறது" எனவும், தமக்கு வேண்டிய பொருட் செல்வத்தையேயன்றி ஞானப் பேற்றிற்குரிய அருட் செல்வத்தையும் தந்து சன்மார்க்கத்தில் தம்மை ஆண்டு கொண்டமை புலப்பட, "எனக்கு நன்று செல்வம் தந்து ஆட்கொண்டது" எனவும் இயம்புகின்ருர். (10)

4056. ஏகாந்த மாகி வெளியாய் இருந்ததிங் கென்னைமுன்னே
மோகாந்த காரத்தின் மீட்டதென் நெஞ்ச முயங்கிரும்பின்
மாகாந்த மானது வல்வினை தீர்த்தெனை வாழ்வித்தென்றன்
தேகாந்த நீக்கிய துத்தர ஞான சிதம்பரமே.

உரை : உத்தர ஞான சிதம்பரப் பொருளாகிய சிவ பரம்பொருள் ஒன்றுகிய முடிபொருளாய்ப் பரவெளியாய் இருந்ததும், எளியனுகிய என்னை முன் காலத்தே காம மோகமாகிய இருளில் வீழாவாறு காத்தருளியதும், என் நெஞ்சமாகிய இரும்பைக் கவர்ந்து கொள்ளும் பெரிய காந்தமாக விளங்குவதும், என்னுடைய வல்வினைகளைப் போக்கி நல்வினை செய்து வாழச் செய்து என்னுடைய தேக முடிவாகிய இறப்பை நீக்கியதுமாகும். எ.று.

ஏக அந்தம் - ஏகாந்தம். பரம்பொருள் ஒன்றே இரண்டும் பலவும் அல்ல என வேதாந்த, சித்தாந்த நூல்கள் பலவும் உரைப்பதால் அதனை, "ஏகாந்தமாகி" என்றும், அஃது மாயா மண்டலத்திற்கு அதீதமாகிய பரவெளியில் வெளி மயமாய் விளங்குவது பற்றி,

"வெளியாய் இருந்தது" என்றும் இசைக்கின்றார். மண்ணிற் பிறந்தவர் அனைவரும் காம மோகமாகிய இருளில் அழுந்துவது இயல்பாயினும், அதன்கண் வீழாவாறு தன்னை இறைவன் இளமைப் பருவத்தேயே காத்தருளினான் என்பாராய், "மோகாந்த காரத்தில் என்னை முன்னே மீட்டது" என மொழிகின்றார். மோகாந்த காரம் - காம மோகமாகிய இருள். மோகாந்த காரத்தில் வீழ இருந்த தன்னை வீழாவாறு காத்தமை தோன்ற, "மீட்டது" என விளம்புகின்றார். இரும்பைத் தன்கண் ஈர்க்கும் காந்தம் போல வள்ளற் பெருமானுடைய உள்ளத்தைத் தன்பால் கவர்ந்து கொண்டது என்பார், "என் நெஞ்சம் முயங்கிரும்பின் மாகாந்தமானது" என வுரைக்கின்றார். இரும்பினை ஈர்க்கும் பெரிய காந்தம் போல என் நெஞ்சைத் தன்கண் ஈர்த்துக் கொண்டது என்றற்கு, "நெஞ்சம் முயங்கிரும்பின் மாகாந்தமானது" எனப்படுகிறது. முயங்கிரும்பு - ஈர்க்கப்படும் இரும்பு. தேகாந்தம் - சாக்காட்டால் என் உடல் கெடாதவாறு செய்தது என்பாராய், "தேகாந்தம் நீக்கியது" எனக் கூறுகின்றார். அஃதாவது, அழியாத் தேகமுடையவனாகச் செய்து விட்டது என்பது கருத்து. (11)

திருச்சிற்றம்பலம்

## 54. செய்பணி வினவல்

அஃதாவது, திருவருள் ஞான நலம் சிறக்கப் பெற்ற, வடலூர் வள்ளல் இவ்வுலகில் தாம் செய்தற்குரிய பணி வகைகளைத் தெரிவித் தருளுமாறு வேண்டுவதாம். இப்பகுதியில் முதல் எட்டுப் பாட்டுக்களில் திருவருளை நினைந்து ஆடிப் பாடி மகிழ்தற்கும், பின் நான்கு பாட்டுக் களில் அருள் பணி புரிதற்கும் திருவருள் வேண்டுமென விண்ணப்பிக் கின்றார்.

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**4057.** அருளே பழுத்த சிவதருவில் அளிந்த
பழந்தந் தடியேனைத்
தெருளே சிற்றம் பலவாநின் செல்வப்
பிள்ளை ஆக்கினையே
மருளே முதலாம் தடைஎல்லாம் தீர்ந்தேன்
நின்பால் வளர்கின்றேன்
பொருளே இனிநின் தனைப்பாடி ஆடும்
வண்ணம் புகலுகவே.

**உரை :** தெளிவே உருவாகிய திருச்சிற்றம்பலத்தை உடையவனே! அடியவனாகிய என்னை அருளாகிய கனிகள் பழுத்துள்ள சிவமாகிய மரத்தில் முற்றக் கனிந்த பழத்தைத் தந்து, நினக்கு என்னை நினக்குரிய செல்வப் பிள்ளை யாக்கினாய்; நானும் மருட்சி முதலிய தடைகள் எல்லாம் நீங்கி நின்னிடத்தே வளர்கின்றேன்; ஆதலால் இப்பொழுது நீயே பொருளாக உன்னைப் பாடி மகிழ்ந்தாடும் திறத்தை எனக்குச் சொல்லுவாயாக. எ.று.

சிவ பரம்பொருளை மரமாக உருவகம் செய்தலால் சிவத்தின் திருவருளைக் கனியாக உருவகம் செய்து அதனைத் தமக்கு செய்தருளிய நலத்தை, "அருளே பழுத்த சிவ தருவில் அளிந்த பழம் தந்து அடியேனை நின் செல்வப் பிள்ளை ஆக்கினை" என்று தெரிவிக்கின்றார். கனிகள் பலவற்றுள் நன்கு கனிந்த பழத்தைத் தேர்ந்து அளித்தமை யால் அவ்வுரிமை பற்றித் தம்மை இறைவனுக்குச் சிறந்த பிள்ளையாகக் கொண்டுள்ளான் என்பாராய், "அடியேனை நின் செல்வப் பிள்ளை ஆக்கினை" என்று விளக்குகின்றார். பெற்ற பிள்ளைகளில் தனது அன்பை மிகுதியும் ஈர்க்கும் பிள்ளையைப் பெற்றோர்க்குச் செல்வப் பிள்ளை என வழங்கும் உலகியல் பற்றி, "நின் செல்வப் பிள்ளை ஆக்கினாய்" என்று தெரிவிக்கின்றார். மயக்கம், வெகுளி, காமம் முதலிய குற்றங்கள் ஞான வளர்ச்சிக்குத் தடையாதலால் அவற்றைப் போக்கிக் கொண்டு வளர்வது விளங்க, "மருளே முதலாம் தடை யெல்லாம் தீர்ந்தேன்

நின்பால் வளர்கின்றேன்'' எனச் செப்புகின்ருர். தீர்ந்தேன் என்பது முற்றெச்சம்; மயக்கம் ஈண்டு மருள் எனப்படுகிறது. இனி - இப்பொழுது. பாடுதற் கமைந்த பொருள் அது முட்டின்றித் தமக்கு எய்தவும், அது பொருளாகப் பாடி மகிழ்ந்து ஆடவும் அருள் புரிய வேண்டும் என வேண்டுவாராய், "பொருளே இனி நின்றனைப் பாடி ஆடும் வண்ணம் புகலுகவே'' என்று பாராட்டுகின்ருர்.

இதனல், சிவமே பொருளாகப் பாடி மகிழ்ந்து ஆடுதற்கு அருள் புரிக என வேண்டியவாரும். (1)

4058. ஒருவா தடியேன் எண்ணியவா றெல்லாம்
அருளி உளங்களித்தே
திருவார் சிற்றம் பலவாநின் செல்வப்
பிள்ளை ஆக்கினையே
பெருவாழ் வடைந்தேன் பெருங்களிப்பால் பெருமான்
நின்பால் வளர்கின்றேன்
உருவார் உலகில் உனைப்பாடி ஆடும்
வண்ணம் உரைத்தருளே.

உரை : திருவருட் செல்வம் நிறைந்த திருச்சிற்றம்பலத்தை உடையவனே! அடியேனுகிய நான் எண்ணியபடி எல்லாம் நீக்கமின்றி உதவி யருளித் திருவுள்ளம் மகிழ்ந்து என்னை நின்னுடைய செல்வப் பிள்ளை ஆக்கி விட்டாய்; அதனல் பெருவாழ்வு பெற்ற யான் மிக்க மகிழ்ச்சியால், பெருமானுகிய உன்னுடைய திருவருளில் வளர்ந்து வருகின்றேன்; உருவுடைய பொருள் நிறைந்த இவ்வுலகில் அருவுருவாக விளங்கும் உன்னைப் பாடி மகிழ்ந்தாடுமாறு அருள் செய்க. எ.று.

திருவார் சிற்றம்பலம் - திருவருட் செல்வம் நிறைந்த திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலத்தைத் தான் திருக்கூத்தாடுதற்குரிய இடமாகக் கொண்டமையின் சிவனை, "சிற்றம்பலவா'' என்று உரைக்கின்ருர். தான் எண்ணியது எண்ணியவாறு குறைவின்றி எய்த அருளினமை விளங்க, "அடியேன் எண்ணியவாறு எல்லாம் ஒருவாது அருளி'' எனவும், ஈத்துவக்கும் இன்பக் குறிப்புத் தோன்ற, "உளம் களித்து'' எனவும் ஓதுகின்ருர். ஒருவுதல் - ஈண்டு குறைதற் பொருட்டு. செல்வப் பிள்ளைகட்கு அவர் எண்ணிய அறிந்து குறைவறக் கொடுத்தல் மக்கள் உலகியல் செயலாதலால், "நின் செல்வப் பிள்ளை ஆக்கினையே'' என்று பாராட்டுகின்ருர். எண்ணிய எண்ணியாங்கு பெறுவது வாழ்வுக்குப் பெருமையாதலால், "பெருவாழ்வு அடைந்தேன்'' எனவும், அதனல் உளதாகும் இன்பம் பெரிதாதலால், "பெருங் களிப்பால்'' எனவும் எடுத்துரைக்கின்ருர். நிலம் நீர் முதலியன உலகக் கூறுகளனைத்தும் உருவுடையனவாதலால், "உருவார் உலகு'' என்று இயம்புகின்ருர்.

இதனல், பெறுவன எல்லாம் பெற்று இறைவனுடைய செல்வப் பிள்ளையாய் வளர்கின்ற வடலூர் வள்ளல் இறைவனைப் பாடி ஆடும் வண்ணத்தை உரைத்தருள வேண்டியவாரும். (2)

4059. அவமே புரிந்தேன் தனைமீட்டுன் அருளார்
அமுதம் மிகப்புகட்டிச்
சிவமே சிற்றம் பலவாநின் செல்வப்
பிள்ளை ஆக்கினையே
பவமே தொலைத்தேன் பெருங்களிப்பால் பதியே
நின்பால் வளர்கின்றேன்
நவமே அடியேன் நினைப்பாடி ஆடும்
வண்ணம் நவிலுகவே.

உரை : சிவ பரம்பொருளே! திருச்சிற்றம்பலத்தை உடையவனே! குற்றம் புரிந்தொழுகிய என்னை அச்சூழலினின்றும் மீட்டு உனது திருவருள் ஞானமாகிய அமுதத்தை மிகுதியும் தந்து என்னை உன்னுடைய செல்வப் பிள்ளையாக்கி விட்டாய்; அதனால் பிறவித் துன்பத்தைப் போக்கி மிக்க மகிழ்ச்சி கொண்டு தலைவனாகிய நின் திருமுன் வளரா நிற்கின்றேன்; ஆகவே அடியவனாகிய யான் நின்னைப் புதுமையுறப் பாடி ஆடி மகிழும் திறத்தை எனக்குச் சொல்லுவாயாக. எ.று.

அவம் - குற்றம். அருளாரமுதம் - திருவருள் ஞானமாகிய அமுதம். மிகைப்பட ஊட்டினமை பற்றி, "நின் செல்வப் பிள்ளை ஆக்கினை" என்று செப்புகின்றார். பவம் - பிறவித் துன்பம். துன்பத்தைப் போக்கின படியால் உளதாகும் இன்பம் மிகுவது பற்றி, "பெருங் களிப்பால் நின்பால் வளர்கின்றேன்" என்று புகல்கின்றார். நவம் - புதுமை.

இதனால், பிறவித் துன்பம் நீங்கினமை நினைந்து மகிழ்கின்றவாறும். (3)

4060. பல்வா தனையும் தவிர்த்தெனக்கே பரமா
னந்த அமுதளித்துச்
செல்வா சிற்றம் பலவாநின் செல்வப்
பிள்ளை ஆக்கினையே
வல்வா தனைசெய் மனச்செருக்கை மாற்றி
நின்பால் வளர்க்கின்றேன்
நல்வாழ் வளித்தாய் நினைப்பாடி ஆடும்
வண்ணம் நவிலுகவே.

உரை : அருட் செல்வமுடையவனே! திருச்சிற்றம்பலத்தை யுடைய தலைவனே! பலவகைப்பட்ட துன்பங்களையும் போக்கிப் பரமானந்தமாகிய ஞான வமுதத்தை எனக்குத் தந்து என்னை நினக்குச் செல்வப் பிள்ளை ஆக்கி விட்டாய்; அதனால் நான் கொடிய துன்பத்தை விளைவிக்கின்ற மனச் செருக்கை நீக்கி நின் திருவருளில் வளர்கின்றேன் இவ்வாறு நல்வாழ் வளித்த பெருமானாகிய உன்னை நான் பாடி மகிழ்ந்து ஆடும் நெறியை உரைத்து அருளுக. எ.று.

வாதனை - துன்பம். பொறி புலன்களால் உளதாகும் ஆசை பற்றி உண்டாகும் துன்பங்கள் எண்ணிறந்தனவாதலால் அவற்றை, "பல்வாதனை" என்று பகர்கின்றார். உலகியல் அறிவின்பம் சிறிதாய் விரைந்து கெடும் இயல்பிற்றாதலால் சிவஞான ஆனந்தமாகிய அமுதம் மேன்மை யுடையதாதல் பற்றி அதனை, "பரமானந்த அமுது" என்று பகர்கின்றார். மேலான ஆனந்தத்தைத் தருதலால் தாம் சிவனுக்குச் செல்வப் பிள்ளை ஆகினமை தெரிவித்தற்கு, பரமானந்த அமுதளித்து நின் செல்வப் பிள்ளை ஆக்கினை" என்று தெரிவிக்கின்றார். மனத்தின் கண் தடித்தோங்கும் மயக்கத்தை, "மனச் செருக்கு" எனவும், அதனால் எளிதிற் நீக்குதற்கரிய வினைகள் தோன்றுவதால், "வல்வாதனைச் செய் மனச் செருக்கு" எனவும் கூறுகின்றார். செருக்காகிய இருள் சிவஞானத்தால் கெடுகின்றமையால், "மனச் செருக்கை மாற்றி நின்பால் வளர்கின்றேன்" என்றும், மனச் செருக்கு அகன்ற விடத்து நன்ஞான வாழ்வு எய்துவது பற்றி, "நல்வாழ்வு அளித்தாய்" என்றும் நவில்கின்றார்.

இதனால், மன விருளைக் கெடுத்து ஞான வாழ்வைத் தாம் பெற்றது கூறியவாறும். (4)

4061. ஓவா இன்ப மயமாகி ஓங்கும்
அமுதம் உதவிஎனைத்
தேவா சிற்றம் பலவாநின் செல்வப்
பிள்ளை ஆக்கினையே
பூவார் மணம்போல் சுகந்தருமெய்ப் பொருளே
நின்பால் வளர்கின்றேன்
நாவால் அடியேன் நினைப்பாடி ஆடும்
வண்ணம் நவிலுகவே.

உரை : தேவ தேவனே! திருச்சிற்றம்பலத்தை யுடைய பெருமானே! ஒரு போதும் கெடாத இன்ப மயமாய் உயர்ந்து ஒளிரும் ஞான வமுதத்தை எனக்குத் தந்தருளி என்னை நினக்குச் செல்வப் பிள்ளை ஆக்கிக் கொண்டாய்; அதனால் பூவினிடத்து உளதாகிய நறுமணம் இன்பம் தருவது போல மெய்ம்மையான சுகத்தைத் தருகின்ற பரம்பொருளாகிய நின் திருவருளில் வளரா நிற்கின்றேன்; ஆகவே அடியவனாகிய யான் வாயால் மனமாரப் பாடி மகிழ்ந்து ஆடும் நெறியை அருளுவாயாக. எ.று.

ஓவா இன்பம் - கெடுதலில்லாத நிலைத்த பேரின்பம். திருவருள் ஞானம் இன்பமாய் மேன் மேலும் பெருகும் இயல்பினதாதலால் சிவஞானத்தை, "ஓவா இன்ப மயமாகி ஓங்கும் அமுதம்" என்று உரைக்கின்றார். பசுபாச ஞானம் கொண்டு பலவாதனைக்கு உள்ளாகும் சிறுமை யுடைய தமக்கு இன்ப மயமாய் ஓங்கும் பதி ஞானமாகிய சிவஞானம் அருளினமையால் நான் நினக்குச் செல்வப் பிள்ளை ஆகி விட்டேன் என்று கூறுவாராய், "நின் செல்வப் பிள்ளை ஆக்கினையே" என்று இசைக்கின்றார். பூக்களின் நறுமணம் நுகர்வார்க்கு மெய்ம்மையான

இன்பத்தைத் தருவது போலச் சிவஞானத்தால் பரஞானப் பரபோகம் எய்தினமை விளங்க, "பூவார் மணம் போல் சுகம் தரும் மெய்ப் பொருளே" என்று போற்றுகின்றார். பாட்டுக்களை நவில்வதற்குச் சிறப்புடைய கருவியாதலின், "நாவால் நினைப் பாடி ஆடும் வண்ணம்" என்று இயம்புகின்றார். பாடுதலும் மகிழ்ந்து ஆடுதலும் அவனருளால் அன்றி ஆகாவாதலின், "பாடி ஆடும் வண்ணம் நவிலுக" என்று பகர்கின்றார்.

இதனால், பரஞானம் தந்து தம்மைச் சிவபெருமான் சிறப்பித்தமை தெரிவித்தவாறும். (5)

4062. **இளிவே தவிர்த்துச் சிறியேன்தன் எண்ணம்**
**முழுதும் அளித்தருளித்**
**தெளிவே சிற்றம் பலவாநின் செல்வப்**
**பிள்ளை ஆக்கினையே**
**ஒளிவேய் வடிவு பெற்றோங்கி உடையாய்**
**உன்பால் வளர்கின்றேன்**
**தளிவேய் நினது புகழ்பாடி ஆடும்**
**வண்ணம் சாற்றுகவே.**

உரை : தெளிந்த ஞான வடிவு உடையவனே! சிற்றம்பலத்துக் கூத்தப் பெருமானே! இளிவரலைப் போக்கிச் சிறியவனாகிய நான் எண்ணிய எல்லாம் தந்துதவி என்னை நினக்குச் செல்வப் பிள்ளையாக்கிக் கொண்டாய்: ஒளி பொருந்திய திருமேனி கொண்டு ஓங்குதலை உடையவனே! உன் திருவருளில் வளர்கின்றேனாதலால் என்கண் கோயில் கொண்டருளும் உன்னுடைய அருட் புனலைப் பாடி மகிழ்ந்து ஆடும் நெறியை எனக்குச் சொல்லி யருளுக. எ.று.

இளிவரல் - தாழ்வு மனப்பான்மை. இது "மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு யாப்புற வந்த இளிவரல்" (தொல். பொ. 254) எனச் சான்றோர் கூறுவர். எண்ணியது எண்ணியவாறு பெற்றவிடத்து இளிவரலால் பிறக்கும் சிறுமை நீங்குவது பற்றி, "எண்ணம் முழுதும் அளித்தருளி என்னை நின் செல்வப் பிள்ளை ஆக்கினாய்" என்று தெரிவிக்கின்றார். அருட் பெருஞ் சோதி வடிவாய் உயர்ந்தோங்கும் இயல்பு பற்றி "ஒளி வேய் வடிவு பெற்று ஓங்கி உடையாய்" என்று உரைக்கின்றார். தளி - கோயில்.

இதனால், சிவனது அருட் பெருஞ் சோதி வடிவத்தின் இயல்பைக் கூறியவாறும். (6)

4063. **மறப்பே தவிர்த்திங் கெனைஎன்றும் மாளா**
**நிலையில் தனியமர்த்திச்**
**சிறப்பே சிற்றம் பலவாநின் செல்வப்**
**பிள்ளை ஆக்கினையே**

**பிறப்பே தவிர்ந்தேன் பெருங்களிப்பால் பெருமான்**
**நின்பால் வளர்கின்றேன்**
**திறப்பேர் உலகில் உனைப்பாடி ஆடும்**
**வண்ணம் செப்புகவே.**

உரை : உள்ளெனப்படுவன எல்லாவற்றுள்ளும் சிறந்த பொருளாக இருப்பவனே! சிற்றம்பலத்தை உடையவனே! எனக்கு உளதாகும் மறதி என்னும் குற்றத்தைப் போக்கி என்றும் பொன்றாத உயர்நிலையில் என்னை இருக்கச் செய்து நினக்கு ஒரு செல்வப் பிள்ளை ஆக்கிக் கொண்டாய்; ஆதலால் யான் பிறவித் துன்பம் நீங்கிப் பெரு மகிழ்ச்சி யுற்றுப் பெருமானாகிய நினது திருவருளில் வளரா நிற்கின்றேன். ஆகவே பல தரப்பட்ட பெரிய இவ்வுலகின்கண் நான் உன்னை வாயாரப் பாடி மகிழ்ந்து ஆடும்வண்ணம் எனக்கு அருளுவாயாக. எ.று.

மறதி - மறப்பு என வந்தது. மறதியால் உளதாகும் கேடுகள் பலவாதலால் அதனைப் போக்கினமை விளங்க, "மறப்பே தவிர்த்து" என மொழிகின்றார். மாளா நிலை - சாவாப் பெருநிலை. மறவா நிலையால் சிவயோகம் நீங்காது நிலைபெறுதலால் பிறவிக் கேதுவாகாமை உணர்ந்து, "பிறப்பே தவிர்ந்தேன்" என்றும், அதனால் உளதாகும் பெருமகிழ்ச்சியில் திளைப்பது புலப்பட, "பெருங் களிப்பால் நின்பால் வளர்கின்றேன்" என்றும் இயம்புகின்றார். உலகில் மக்களுடைய வாழ்வுக் கூறுகள் பலவகைப் படுவதால் அவற்றின்கண் வீழ்ந்து வருந்தாமல் நின்னைப் பாடியும், மகிழ்ந்தும், கூத்தாடியும் ஒழுகும் வாழ்வு தமக்கு எய்த வேண்டும் என்பதற்காக, "திறப்பேர் உலகில் உனைப்பாடி ஆடும்வண்ணம் செப்புகவே" என்று தெரிவிக்கின்றார்.

இதனால், இறைவனைப் பாடி மகிழ்ந்து இன்புறும் வாழ்வே தாம் வேண்டுவதென விண்ணப்பித்தவாறும். (7)

4064. **ஊனே புகுந்தென் உளங்கனிவித் துயிரில்**
**கலந்தே ஒன்றாகித்**
**தேனே சிற்றம் பலவாநின் செல்வப்**
**பிள்ளை ஆக்கினையே**
**நானே அழியா வாழ்வுடையேன் நானே**
**நின்பால் வளர்கின்றேன்**
**தானேர் உலகில் உனைப்பாடி ஆடும்**
**வண்ணம் சாற்றுகவே.**

உரை: தேன் போல் இனிப்பவனும், சிற்றம்பலத்தை உடையவனு மாகிய பெருமானே! என்னுடைய உடலுக்குள் புகுந்து என் உள்ளத்தைக் கனியச் செய்து உயிரிற் கலந்து ஒன்றாய் நினக்கு என்னைச் செல்வப் பிள்ளை ஆக்கினாய்; அம்முறையில் நான் அழியா வாழ்வுடையவனாய் நின் திருவருளில் வளர்ந்து வருகின்றேன்; ஆகவே நேரிய முறையில் இவ்வுலகில் உன்னை வாயாரப் பாடி மகிழ்ந்து கூத்தாடும் இயல்பு இது வென எனக்கு உரைத்தருளுக. எ.று.

இனிமைப் பண்பு உடையனுதல் பற்றி, "தேனே" என்று புகழ்கின்ருர். இவ்வாறே ஏனைச் சான்ருேர்களும், "திருவே என் செல்வமே தேனே வானேர் செஞ்சுடரே" (ஆவடு) உரைப்பது காண்க. உடற்குள் உள்ளமும், உள்ளத்துள் உயிரும் இருக்கின்றன எனச் சான்ருேர் வழிவழியாகக் கூறி வருதலால் சிவபெருமான் உடல் புகுந்து, உள்ளம் புகுந்து, உயிருட் கலந்து ஒன்ருய் விளங்குமாற்ருல் வடலூர் வள்ளலைத் தமக்குச் செல்வமகனுகக் கொண்டுள்ளான் என்ற கருத்து இனிது விளங்க, "ஊனே புகுந்து என் உளங்கனிவித்து உயிரில் கலந்து ஒன்ருகி நின் செல்வப் பிள்ளை ஆக்கினை" என்று உரைக்கிருர். அழியா வாழ்வு உடையவன் சிவபெருமானுதலால் அவன் தன் உயிரிற் கலந்து ஒன்ருகியிருத்தலால் தமக்கும் அழியா வாழ்வும் உரியது என்பாராய், "நானே அழியா வாழ்வுடையேன்" எனவும், அவ்வுரிமையால் நின் திருமுன் வளர்கின்றேன் என இயம்புவாராய், "நானே அழியா வாழ்வுடையேன் நானே நின்பால் வளர்கின்றேன்" எனவும் மொழிகின்ருர். வளர்வ தன் பயன் நின் திருப்புகழைப் பாடியும், மகிழ்ந்து ஆடியும் பணி புரிவது என் செய்கடனுதலால் அதனை ஆற்றுதற்கு நினது அருள் இன்றியமையா ததாதலால், "உனைப் பாடி ஆடும் வண்ணம் சாற்றுகவே" என்று விண்ணப்பிக்கின்ருர்.

இதனுல், தாம் அழியா வாழ்வு பெற்றிருத்தல் தெரிவித்தவாரும். (8)

4065. **ஆரா அமுதம் அளித்தருளி அன்பால்**
**இன்ப நிலைக்கேற்றிச்**
**சீரார் சிற்றம் பலவாநின் செல்வப்**
**பிள்ளை ஆக்கினையே**
**ஏரார் இன்ப அனுபவங்கள் எல்லாம்**
**பொருந்தி இருக்கின்றேன்**
**தீரா உலகில் அடிச்சிறியேன் செய்யும்**
**பணியைத் தெரித்தருளே.**

**உரை:** சீர்த்தி நிறைந்த சிற்றம்பலத்தை யுடைய சிவ பெருமானே! யாரும் அருந்தி அமையாத திருவருள் ஞானமாகிய அமுதத்தை எனக்குத் தந்தருளி என்பால் கொண்ட அன்பினுல் என்னை இன்ப நிலையத்தில் இருத்தி நினக்குரிய செல்வப் பிள்ளை ஆக்கி விட்டாய்; அதனுல் மேன்மையான இன்ப அனுபவங்கள் எல்லாம் நான் நிறைந்திருக்கின்றேன்; ஆகவே நீங்குதல் இல்லாத உலகத்தில் அடியரிற் சிறியனுகிய யான் இனிச் செய்யத்தக்க பணிகளை எனக்குத் தெரிவித்தருளுக. எ.று.

திருவருள் ஞானமாகிய அமுதத்தின் பெறலருமை புலப்பட, "ஆரா அமுதம் அளித்தருளி" என்றும், திருவருள் ஞானத்தின் பயன் குறைவின்றி நிறைந்த சிவபோக நிலையமாதலின் அதன்கண் தம்மைச் செலுத்தி இருக்கச் செய்தமை புலப்பட, "அன்பால் இன்ப நிலைக் கேற்றி" என்றும், இவ்வகையால் தான் சிவனுக்குச் செல்வ மகனுகிய முறைமையை வெளிப்படுப்பாராய், "நின் செல்வப்பிள்ளை ஆக்கினையே"

என்றும் இசைக்கின்ருர். திருவருள் ஞான இன்பப் பயனை, "ஏரார் இன்ப அனுபவங்கள்" என்று இயம்புகின்ருர். சிவப்பேறு எய்துங்காலும் உயிர்கள் இவ்வுலகின் நீக்கமின்றிப் பிறப்பு இறப்புக்களை யுற்று வாழ வேண்டுதலின் இதனை, "தீரா உலகு" என்று செப்புகின்ருர். திருவருள் ஞானம் பெற்றவர், இறைவனுக்குரிய ஆன்ம நேயப் பணியை ஆற்றுவது கடனுதலால் அதனைச் செய்தற்கு வேண்டும் நல்லருளை வழங்குதல் வேண்டுமென முறையிடுகின்றமை தோன்ற, "அடிச் சிறியேன் செய்யும் பணியைத் தெரித்தருள்" என்று விண்ணப்பிக்கின்ருர்.

இதனுல், திருவருள் ஞானப் பேற்றுக்கு ஒத்த சிவப் பணி செய்தல் கடன் என்பது குறிப்பாய்ப் புலப்படுத்தியவாரும். (9)

**4066. மெய்வைப் பழியா நிலைக்கேற்றி விளங்கும்**
**அமுதம் மிகஅளித்தே**
**தெய்வப் பதியே சிவமேநின் செல்வப்**
**பிள்ளை ஆக்கினையே**
**ஐவைப் பறிந்தேன் துரிசெல்லாம் அறுத்தேன்**
**நின்பால் வளர்கின்றேன்**
**பொய்வைப் படையேன் இவ்வுலகில் புரியும்**
**பணியைப் புகன்றருளே.**

உரை: தெய்வங்களுக் கெல்லாம் தலைவனுக உள்ளவனே! சிவ பரம்பொருளே! மெய்ம்மைத் தன்மை குன்ருத திருவருள் நிலையத்தின் கண் என்னை உயர்த்தி, அதற்கென்று விளங்கும் ஞானமாகிய அமுதத்தை மிகுதியாக அளித்து என்னை நினக்குச் செல்வ மகனுக்கிக் கொண்டாய்; அதனுல் நான் ஐவகை ஆசைகளையும் ஒடுக்குமிடம் அறிந்து குற்ற வகை எல்லாம் போக்கி, நின் திருவருள் ஒளியில் வளர்ந்து வருகின்றேன்; அவ்வாற்ருல் பொய்ம்மைக்கு இடமாகா தொழிந்தேன்; ஆகவே இவ்வுலகில் நான் இருந்து செய்தற்குரிய பணி வகைகளை எனக்குத் தெரிவித்தருளுக. எ. று.

தெய்வங்கட் கெல்லாம் தலைமைத் தெய்வமாதலால், "தெய்வப் பதியே" என்று சிவபெருமானைக் குறிக்கின்ருர். மெய் வைப்பு - மெய்ம்மைத் தன்மை. திருவருள் நிலைக்கு உயர்த்தி அது நல்கும் ஞானத்தை மிகுதியாக அளித்துச் சிறப்பித்தமை விளங்க, "விளங்கும் அமுதம் மிக அளித்து" என்றும், அதனுல் தாம் சிவனுக்குச் சிறந்த மகனுயினமை விளக்குவாராய், "மிக அளித்தே செல்வப் பிள்ளை ஆக்கினையே" என்றும் விளம்புகின்ருர். ஐ வைப்பு - ஆசை ஐந்தையும் ஒடுக்குமிடம். புலன்கள் ஐந்தாதலால் அவற்றின் மேற் செல்லுகின்ற ஆசையும் ஐந்தாதலும், அவை ஞான வாய்ம்மைக்கண் சேட்டையின்றி ஒடுங்கிக் கெடுதலை யறிந்து அவ்வழியில் நிற்பது தோன்ற, "ஐவைப்பு அறிந்தேன்" எனவும், ஆசை வழி எய்தும் துன்பங்கள் எல்லாவற்றிற்கும் ஏதுவாகிய பற்றென்னும் குற்றம் கெட்டமை விளங்க, "துரிசெல்லாம் அறுத்தேன்" எனவும் வடலூர் வள்ளல் சொல்லுகின்ருர். இவ்வாற்ருல் பொய்யும் வழுவும் இனி யான் எய்த மாட்டேன் என அறுதியிட்டு

உரைக்கின்றாராதலால், "பொய் வைப்பு அடையேன்" என்று தமது துணிபு இனிது தோன்ற எடுத்துரைக்கின்றார்.

இதனால், குற்றம் எய்துதற்கு ஏதுவாகிய ஆசையும் பிற குற்றங்களும் போக்கிக்கொண்டு, இறை பணி புரிதற்குரிய பக்குவம் எய்தி உள்ளமை விளக்கியவாறும். (10)

4067. .......................
.................
நாரா யணனு நான்முகனு நயந்து
வியக்க நிற்கின்றேன்
ஏரார் உலகில் இனி அடியேன் செய்யும்
பணியை இயம்புகவே.

**உரை :** திருமாலும் நான்முகனும் கண்டு வியந்து மகிழ இருக்கின்றேன்; ஆகவே அழகிய இவ்வுலகில் இனி அடியவனாகிய யான் செய்யும் பணியை உரைத்தருளுக. எ.று.

இவ்வருட்பாவின் முற்பகுதி சிதைந்து விட்டது. தமக்குக் கிடைத்தற்கரிய திருவருளின் நலம் வடலூர் வள்ளலார்க்கு எய்தியது கண்டு தேவதேவர்களும் வியக்கின்றமை தோன்ற, "நாராயணனும் நான்முகனும் நயந்து வியக்க நிற்கின்றேன்" என்று கூறுகின்றார். நன்ஞான ஒழுக்கத்திற்கும் நல்யோகப் பேற்றுக்கும் சிறந்த இடமாதல் விளங்க, "ஏரார் உலகு" என்று இயம்புகின்றார்.

4068. பிறந்தேற் கென்றும் இறவாது பிறவா
தோங்கும் பெருமைதந்து
சிறந்தே சிற்றம் பலவாநின் செல்வப்
பிள்ளை ஆக்கினையே
திறந்தேர் முனிவர் தேவரெலாந் தேர்ந்து
நயப்ப நிற்கின்றேன்
அறந்தேர் உலகில் இனிஅடியேன் செய்யும்
பணியை அருளுகவே.

**உரை :** சிறந்தோங்கும் திருச்சிற்றம்பலத்தை யுடைய பெருமானே! உலகில் பிறந்து வாழும் எளியவனாகிய எனக்கு இறந்தும் பிறந்தும் உழலும் அவல நிலையைப் போக்கிப் பிறவாப் பெருமை தந்து என்னை நின்னுடைய செல்வப் பிள்ளை ஆக்கினாய்; அதனால் சிவ ஞானப் பேற்றுக்குரிய செயற் கூறுகளை ஆய்ந்துணரும் முனிவர்களும் தேவர்களும் என்னை நோக்கி என்பால் விருப்பம் கொள்ளுமாறு ஒளிர்கின்றேன்; ஆகவே அறம் செய்தற்கமைந்த இவ்வுலகில் இப்பொழுது அடியவனாகிய யான் செய்தற்குரிய சிவப் பணியை எடுத்தோதி அருளுக. எ.று.

நிலவுலகில் பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் பிறத்தலும் இயல்பாதலின், அவ்வியல்பு பற்றி யான் மண்ணுலகில் பிறந்துள்ளேன்

என்றற்கு, "பிறந்தேற்கு" எனவும், இனித் தமக்கு எய்தக் கடவப் பிறப் பிறப்புக்களினின்றும் என்னை உய்வித்தாய் என்று கூறுவாராய், "என்றும் இறவாது பிறவாது ஓங்கும் பெருமை தந்து என்னை நின் செல்வப் பிள்ளை ஆக்கினை" எனவும் தெரிவிக்கின்றார். செய்வார் செய்வினைக் கூறுகளை யும், அதற்குரிய ஞான நலன்களையும் தெரிந்துணர்ந்து ஊக்குபவர்களா தலின், "திறந்தேர் முனிவர் தேவர்" என்றும், அவர்கள் என்னுடைய அறிவு செயல் நலங்களை அறிந்தாய்ந்து ஊக்குவிக்கின்றனர் என்று உரைப்பாராய், "எல்லாம் தேர்ந்து நயப்ப நிற்கின்றேன்" என்றும் இசைக்கின்றார். ஆகவே நான் இனிச் செய்தற்குரிய பணிகளை விளக்கி அருளுதல் வேண்டுமென முறையிடுவாராய், "அறந்தேர் உலகில் இனி அடியேன் செய்யும் பணியை அருளுகவே" என விண்ணப்பிக்கின்றார்.

இதனால், முன்னைய பாட்டுக்களைப் போலச் செய்பணி தெரிவித் தருளுமாறு வேண்டிக் கொண்டவாறும். (12)

திருச்சிற்றம்பலம்

## 55. ஆன்ம தரிசனம்

அஃதாவது, ஆன்மாவாகி தான் ஏனைத் தத்துவக் கூறுகள் அனைத்தையும் தேர்ந்துணர்ந்து, தாம் அவற்றின் வேறு என்பது உணர்ந்து, அவனது திருவருளின் துணையின்றித் தான் ஒன்றும் செய்ய மாட்டாமையை இனிது உணர்ந்து, தன்னை அவனருளில் தோய்வித்தல். ஆயினும் சைவ நூல்கள் கூறும் ஏகனுதலும், இறை பணி நிற்றலும் எல்லாப் பாட்டுக்களிலும் உரைக்கப்படுகின்றன. ஆன்ம ஞானத்தால் ஆன்மாவிற்குத் தன் செயலென ஒன்று இல்லை என்பது உணரப்படுவது பற்றி இப்பகுதியை ஆன்ம தரிசனம் என்பதும் பொருத்தமேயாகும்.

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4069. திருஎலாம் தரும்ஓர் தெய்வமாய் ஒருவன்
திருச்சிற்றம் பலந்திகழ் கின்றான்
உருஎலாம் உணர்ச்சி உடல்பொருள் ஆவி
உளஎலாம் ஆங்கவன் தனக்கே
தெருளெலாம் அறியக் கொடுத்தனன் வேறு
செயலிலேன் எனநினைத் திருந்தேன்
அருஎலாம் உடையாய் நீஅறிந் ததுவே
அடிக்கடி உரைப்பதென் நினக்கே.

உரை : நலங்கள் எல்லாவற்றையும் தரும் ஒப்பற்ற தெய்வமாகிய முதல்வன் ஒருவன் திருச்சிற்றம்பலத்தின்கண் விளங்குகின்றான்; உருவங்கள் எல்லாவற்றோடும், உணர்வு, உடல், பொருள், உயிர் முதலாக உள்ளன எல்லாவற்றையும் அப்பெருமானுக்கே உரியவை என நாட்டவர் அறியக் கொடுத்து விட்டேன்; இனி வேறே எனக்கெனச் செயலொன்றும் இல்லை என நினைத்துக் கொண்டிருக்கின்றேன்; அருவம், அருவுருவம் எனப்படுவன அனைத்தையும் உடைய பெருமானே! இது நீ நன்கறிந்தது; ஆதலால் நான் உனக்கு அடிக்கடி உரைப்பது எற்றுக்கு? எ.று.

செல்வத்தாலும் திருவருளாலும் எய்தப்படும் நலங்கள் யாவும் திரு என்ற சொல்லினுள் அடங்குதலின் நலம் பலவற்றையும் தொடுத்து, "திரு எலாம் தரும் தெய்வமாம் ஒருவன்" என்று சிவ பரம்பொருளைக் குறிக்கின்றார். அப்பெருமான் கூத்தப் பெருமானாய் அருளுருக் கொண்டு சிற்றம்பலத்தில் காட்சி தருகின்றானாதலால், "திருச்சிற்றம்பலம் திகழ்கின்றான்" என்று தெரிவிக்கின்றார். நிறத்தாலும், குணஞ் செயல்களாலும் மக்கள் உரு பலதிறப்படுதலின், "உரு எலாம்" எனவும்,

தன்னுடையவை என உயிரால் கருதப் படுபவையாதலால், "உணர்ச்சி உடல் பொருள் ஆவி உள எலாம்" எனவும் உரைக்கின்றார். இவற்றின் செயல் வழி நில்லாது இவற்றைத் தந்த இறைவனே இவற்றிற்கு முதல்வன் என்பதற்கு, "அவன் வயம் நிற்றல் தன்னை அவனுக்குக் கொடுத்தல்" என நூல்களில் கூறப்படும். "நாமவல்ல விந்திரியம் நம் வழியினல்ல வழி நாமல்ல நாமும் அரனுடைமை" (சிவபோ) என்று சான்றோர் கூறுவது காண்க. இதனை, "ஏகனாகி இறை பணி நிற்றல்" என்றும் கூறுவர். தாம் ஏகனாகி இறை பணி நிற்கும் தன்மையை வடலூர் வள்ளல், "உள எலாம் ஆங்கவன் தனக்கே தெரு எலாம் அறியக் கொடுத்தனன்" என்று கூறுகின்றார். இக்கருத்தையே அருணந்தி சிவனார், "உலகினில் என்செயல் எல்லாம் உன் விதியே நீயே உண்ணின்றும் செய்வித்தும் செய்கின்றாய் என்றும் நிலவுவதோர் செயலெனக்கு இன்றுன் செயலே என்றும் நினைவார்" (சிவசித்தி) என்று விளக்குவது காண்க. தெரு எலாம் அறியக் கொடுப்பதாவது, ஊரில் உள்ளவரும் நாட்டில் உள்ளவரும் அறிந்து கொள்ளுமாறு ஒழுகுதல். தாம் ஏகனாகி நிற்கும் திறத்தை இறைவன் நன்கறிந்துள்ளான் என்பது புலப்பட, "நீ அறிந்ததுவே அடிக்கடி உரைப்பதென் நினக்கே" என மொழிகின்றார்.

இதனால், தனது நினைவு, சொல், செயல் யாவும் இறைவனுடைய நினைவும், சொல்லும், செயலுமாம் என இறைவனோடு ஒன்றி நிற்கும் திறம் எடுத்தோதியவாறும். (1)

4070. **நினைத்தபோ தெல்லாம் நின்னையே நினைத்தேன்**
**நினைப்பற நின்றபோ தெல்லாம்**
**எனைத்தனி ஆக்கி நின்கணே நின்றேன்**
**என்செயல் என்னஓர் செயலும்**
**தினைத்தனை எனினும் புரிந்திலேன் எல்லாம்**
**சிவன்செய லாம்எனப் புரிந்தேன்**
**அனைத்தும்என் அரசே நீஅறிந் ததுவே**
**அடிக்கடி உரைப்பதென் நினக்கே.**

**உரை:** அருளரசாகிய பெருமானே! நினைவு கருவியாக நினைக்கலுற்ற பொழுதெல்லாம் யான் நின்னையே நினைத்தேன்; நினைவு ஒன்றுமின்றி இருந்தபொழுது என்னை நின்பால் ஒடுக்கி நின் அருளின்கண் ஒன்றி நின்றேன்; என் செயல் என்று சொல்லத்தக்க வகையில் ஒரு செயலையும் சிறிதளவும் நான் செய்யவில்லை; செய்வன யாவும் சிவன் செயல் என்றே எண்ணினேன்; இவை யாவும் நீ அறிந்தவையாதலால் நான் அடிக்கடி நின்பால் முறையிடுவது எற்றுக்கு? எ.று.

நினைப்பற நின்றபோது என்பதற்கு, உலகியல் வாழ்வு பற்றிய நினைவுகளின்றி இருந்த பொழுது என்று பொருள் கூறுவதும் உண்டு. உலகியல் வாழ்வை நினையாதபொழுது தமது நினைவு திருவருளையே நினைந்து நின்றமை தோன்ற, "எனைத் தனி ஆக்கி நின்கணே நின்றேன்" என்று கூறுகின்றார். நின்கண் – நின் திருவருளின்கண். திருவருள் நினைவில் அழுந்தியபொழுது செயலனைத்தும் திருவருள்

மயமாதல் பற்றி, "என் செயல் என்ன ஓர் செயலும் நினைத்தனை எனினும் புரிந்திலேன்" என்றும், "எல்லாம் சிவன் செயல் எனப் புரிந்தேன்" என்றும் தெரிவிக்கின்றார். திருவருளே உருவாகியவனாதலால் திருவருள் என்னாமல், சிவன் செயலாம் என்று கூறுகின்றார்.

இதனால், உலகியல் நினைப்பின்றி இருந்தபொழுது வடலூர் வள்ளலின் நினைவு திருவருள் உணர்வில் கலந்து ஒன்றி இருக்கின்றமை தெரிவித்தவாறும். (2)

4071. **களித்தபோ தெல்லாம் நின்இயல் உணர்ந்தே**
**களித்தனன் கண்கள்நீர் ததும்பித்**
**துளித்தபோ தெல்லாம் நின்அருள் நினைத்தே**
**துளித்தனன் சூழ்ந்தவர் உளத்தைத்**
**தெளித்தபோ தெல்லாம் நின்திறம் புகன்றே**
**தெளித்தனன் செய்கைவே றறியேன்**
**ஒளித்திரு உளமே அறிந்ததில் வனைத்தும்**
**உரைப்பதென் அடிக்கடி உனக்கே.**

உரை: என் மனத்தில் மகிழ்ச்சி உண்டான போதெல்லாம் நின்னுடைய இன்ப இயல்புகளை உணர்ந்து மகிழ்ச்சி கொண்டேன்; கவலை தோன்றி வருத்திய போதெல்லாம் நின் திருவருளையே நினைந்து கண்களில் நீர் சொரிந்தேன்; கலக்கமுற்று என்பால் வந்தவரோடு உசாவி, அவரது கலக்கத்தைப் போக்கி அறிவு தெளிவுறச் செய்த போதெல்லாம் நினது திருவருளின் திறத்தையே எடுத்தோதி அவர்களைத் தெளியச் செய்தேன்; வேறு செய்கை ஒன்றும் செய்திலேன்; இவை யனைத்தும் ஒளிமயமான உன்னுடைய திருவுள்ளம் நன்கறியும்; ஆதலால் நான் அடிக்கடி உரைத்துக் கொள்வது எற்றுக்கு? எ.று.

மகிழ்தலும், கவலையால் துயர்தலும் மனத்துக்கு இயல்பாதலால் களிப்புற்றபோது எய்திய தமது மன வியல்பை, "களித்த போதெல்லாம் நின் இயல் உணர்ந்தே களித்தனன்" எனவும், துயருற்று மனம் கலங்கிய போதும் இறைவன் திருவருளையே நினைந்தொழுகிய திறத்தை, "கண்கள் நீர் ததும்பித் துளித்த போதெல்லாம் நின் அருள் நினைத்தே துளித்தனன்" எனவும் இயம்புகின்றார். மகிழ்ச்சிக்காலத்தில் நினையா தொழியினும், துன்பக் காலத்தில் அறிவு சோர்வுற்று அறிந்தோரை அணுகிக் கவலைகளை எடுத்தோதித் தெளிவு காண்பது மக்கள் இயல்பா தலால், வள்ளற் பெருமானிடத்திற் கவலை மிக்கு வந்தவர்களை அளவளாவி மனம் தெளிவு பெறச் செய்த செயலை விளக்குதற்கு, "சூழ்ந்தவர் உளத்தை தெளித்த போதெல்லாம் நின் திறம் புகன்றே தெளித்தனன்" என்று உரைக்கின்றார். தமது உரையை யாப்புறுத்தற் பொருட்டு, "செய்கை வேறறியேன்" என்று செப்புகின்றார். அருட் பெருஞ் சோதி ஆண்டவனாதலால், "ஒளித் திருவுளமே" எனப் பாராட்டுகின்றார்.

இதனால், உவகையும் கவலையும் உற்றபொழுது வடலூர் வள்ளல் திருவருளே நினைவாக இருந்தமை தெளிவித்தவாறும். (3)

4072. உண்டதும் பொருந்தி உவந்ததும் உறங்கி
உணர்ந்ததும் உலகியல் உணர்வால்
கண்டதும் கருதிக் களித்ததும் கலைகள்
கற்றதும் கரைந்ததும் காதல்
கொண்டதும் நின்னோ டன்றிநான் தனித்தென்
குறிப்பினில் குறித்ததொன் றிலையே
ஒண்தகும் உனது திருவுளம் அறிந்த
துரைப்பதென் அடிக்கடி உனக்கே.

உரை : உண்பன மனம் பொருந்தி மகிழ்ந்ததும், பின்பு உறங்கியதும், உறங்கி விழித்ததும், உலகியல் உணர்வுகொண்டு பொருட்களைக் கண்டதும், அவற்றின் கவின் கருதி உவந்ததும், கலைகள் பலவற்றைக் கற்றதும், கற்றவற்றைப் பிறர்க்கு உரைத்ததும், உரைக்குமிடத்துச் சுவை கண்டு அன்புற்றதும் எல்லாம் நின் திருவருளோடன்றி யான் தனித்து என் குறிப்பின் வழிக் கருதியது ஒன்றும் இல்லை; ஒண்மை பொருந்திய உனது திருவுள்ளம் இவை யெல்லாம் அறிந்ததாகும்; அங்ஙனமிருக்க, யான் அடிக்கடி தெரிவிப்பது எற்றுக்கு? எ.று.

உண்பனவற்றை விரும்பி உண்பதும், உண்டபின் களைப்பு நீங்க உறங்குவதும் நாளும் நிகழும் செயல்களாதலின் அவற்றையும் தான் திருவருள் உணர்வோடு செய்தமை புலப்படுத்தற்கு, "உண்பதும் பொருந்தி உவந்ததும் உறங்கி உணர்ந்ததும்" எடுத்துரைக்கின்றார். விழித்திருக்கும் நிலையில் உலகியல் வாழ்வின்கண் கருத்துப் படர்வதால் அதற்கேற்பக் காண்பன காண்பதும், கருதுவன கருதுவதும், நல்லன கண்டு மகிழ்வதும் பிறவும் நிகழ்வதால், "கண்டதும் கருதிக் களித்ததும்" கூறுகின்றார். அதே நிலையில் கற்பன கற்பதும், பிறர்க்குக் கற்றவற்றை உரைப்பதும் கல்வியின் செயலாதல் பற்றித் தானும் அவ்வாறு செய்தமை விளங்க, "கலைகள் கற்றதும் கரைந்ததும்" மொழிகின்றார். இச் செயல்களினிடையே அழகிய பொருள்களைக் காணுமிடத்தும், கேட்குமிடத்தும், தானே எண்ணி அறியுமிடத்தும் பொருள்களின்பால் இச்சை உண்டாதலின், "காதல் கொண்டதும்" சொல்லுகின்றார். கற்பன கற்குமிடத்தும், கேட்குமிடத்தும், ஆராயுமிடத்தும் இன்பம் தோன்றி மேலும் மேலும் அவற்றின்பால் ஆர்வம் எழுவது பற்றி இவ்வாறு கூறுகின்றார். "தான் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு காமுறுவர் கற்றறிந்தார்" (குறள்) என்று சான்றோரும் கூறுவது காண்க. இவை யனைத்தும் உயிர்க்கு உறுதி வேண்டிச் செய்யப்படுவன வாயினும், இவற்றையும் இறைவன் திருவருளோடு ஒன்றி யிருந்து செய்தமை பற்றி, "நின்னோ டன்றி நான் தனித்து என் குறிப்பினில் குறித்தது ஒன்றிலை" எனவும், இதுதானும் இறைவன் அறிந்தது என்றற்கு, "உனது திருவுளம் அறிந்தது" எனவும் உரைக்கின்றார்.

இதனால், உண்பது முதலிய உறுதி பயக்கும் செயலனைத்தும் திருவருளோடு ஒன்றி நின்று செய்தமை தெரிவித்தவாறும். (4)

4073. களவிலே களித்த காலத்தும் நீயே
களித்தனை நான்களித் தறியேன்
உளவிலே உவந்த போதும்நீ தானே
உவந்தனை நான்உவந் தறியேன்
கொளஇலே சமும்ஓர் குறிப்பிலேன் அனைத்தும்
குறித்தனை கொண்டனை நீயே
அளவிலே எல்லாம் அறிந்தனை அரசே
அடிக்கடி உரைப்பதென் நினக்கே.

உரை : மனத்தில் கள்ள நினைவு கொண்டு செயல் பல செய்து யான் மகிழ்ந்த பொழுதும், மகிழ்ந்தது நீயே யன்றி நானன்று; உபாயமாகச் சிலவற்றைச் செய்து நான் மகிழ்ந்த போதும், மகிழ்ந்தவன் நீயே யன்றி நானல்ல; இக்களிப்பும் உவப்பும் என் குறிப்பில் இன்றி உன் குறிப்பில் நிகழ்ந்தனவாக நீ ஏன்று கொண்டாய்; மேலும் என்னளவில் எல்லாவற்றையும் நீ அறிந்துள்ளாயாதலின் அருளரசாகிய உனக்கு அடிக்கடி உரைப்பது எற்றுக்கு? எ.று.

களவில் களித்தலாவது - பிறர் அறியாமல் தன்னுள் நினைத்தலும் சொல்லுதலும் செய்தலும் அவற்றால் மகிழ்தலுமாம். அரிது முயன்று செய்தவனைச் சிறு முயற்சியால் செய்து முடித்துக் கொள்ளற்குரிய அறிவு ஒட்பத்தை "உளவு" என்பர். உபாயம் என வழங்குவதும் இதுவேயாகும். களவில் களிப்பதும், உளவில் உவப்பதும் செய்தற் குரியனவாயினும் இவை திருவருளால் நிகழ்வன என்று உணர்ந்து ஒழுகுபவனாதலால், "நான் களித்தறியேன்" எனவும், "நான் உவந்தறியேன்" எனவும் இயம்புகின்றார். இலேசம் - சிறிதளவு. இவற்றை நினைத்தலும் செய்தலும் என் செயலன்று; எல்லாம் நின் செயலேயாம் என்றற்கு, "இலேசமும் ஓர் குறிப்பிலேன் அனைத்தும் குறித்தனை கொண்டனை நீயே" எனக் கூறுகின்றார். குறித்தனை, கொண்டனை என்றவிடத்து, குறித்தனை என்பது முற்றெச்சம். என்னளவில் எல்லாவற்றையும் நீ உன் செயலாகக் கொண்டனை என்றற்கு, "அளவிலே எல்லாம் அறிந்தனை" என்று உரைக்கின்றார்.

இதனால், தம் செயலனைத்தும் இறைவன் செயலாதல் விளக்கிய வாறும். (5)

4074. திலகவாள் நுதலார் தமைக்கன விடத்தும்
சிறிதும்நான் விழைந்திலேன் இந்த
உலகவாழ் வதில்ஓர் அணுத்துணை எனினும்
உவப்பிலேன் உலகுறு மாயைக்
கலகவா தனைநீர் காலம்என் றுறுமோ
கடவுளே எனத்துயர்ந் திருந்தேன்
அலகிலாத் திறலோய் நீஅறிந் ததுநான்
அடிக்கடி உரைப்பதென் நினக்கே.

**உரை :** பொட்டிட்ட ஒளி பொருந்திய நெற்றியை யுடைய மகளிரை நான் கனவிலும் சிறிதும் விரும்பினதில்லை; இந்த உலக வாழ்விலும் ஓர் அணுவளவும் விருப்பம் கொண்டிலேன்; உலகியல் செய்யும் மாயையால் விளையும் கலக்கமும் துன்பமும் நீங்கும் காலம் எப்பொழுது எய்துமோ என்று வருந்திக் கொண்டிருக்கிறேனே யன்றி வேறில்லை; அளவில்லா ஆற்றல் உடையவனே! எனது இக்கருத்து நீ நன்கு அறிந்ததாதலால் நான் அடிக்கடி சொல்லுவது எற்றுக்கு? எ.று.

உலகியல் விளைவிக்கும் ஆசைகளில் மகளிரின்மேல் உளதாகும் ஆசை ஏனைய ஆசைகள் எல்லாவற்றினும் முந்தும் வலிமை உடையதாதலால் அதனை முற்பட எடுத்து, "திலக வாள் நுதலார்தமைக் கனவிடத்தும் சிறிதும் நான் விழைந்திலேன்" என்று மொழிகின்றார். உலக வாழ்வில் பொன்னும் பொருளும் போகமும் தோன்றி வாழ்வாரை வாழ்வின்கண் பிணித்தலால் அதுவும் துன்ப மயமாதல் பற்றி, "இந்த உலக வாழ்வதில் ஓர் அணுத்துணை எனினும் உவப்பிலேன்" என்று கூறுகின்றார். மாயைக் கலக வாதனை - மயக்கம் விளைவிக்கும் கலக்கங்களும் துன்பங்களும். கலக்கம் - கலகம் என வந்தது. வாதனை - துன்பம். உலகம் மாயா காரியமாதலின் தன்கண் வாழ்வாரது அறிவை மயக்கித் துன்பங்களை எய்துவித்தல் உலகுக்கு இயல்பென அறிக. கலக வாதனை - உயிரின் இயற்கை அறிவைச் சோர்வுறச் செய்தலின், அது நீங்கும் காலம் என்று வருமோ என்று ஏங்குவது ஆன்மாக்களின் இயல்பு. துயர்ந்திருந்தேன் - துயர் என்றன் வினையடியாகப் பிறந்த வினை. துயருற்றேன் என்பது பொருள். வரம்பி லாற்றல் உடையவனாதலால் இறைவனை, "அலகிலாத் திறலோய்" என்று கூறுகின்றார். அலகு - அளவு.

இதனால், திருவருளில் ஒன்றி யிருக்கும் வள்ளலாரின் திருவுள்ளம் உலகியல் பற்றி நினைத்திருந்த திறம் தெரிவித்தவாறும். (6)

**4075. சாதியும் மதமும் சமயமும் தவிர்ந்தேன்**
**சாத்திரக் குப்பையும் தணந்தேன்**
**நீதியும் நிலையும் சத்தியப் பொருளும்**
**நித்திய வாழ்க்கையும் சுகமும்**
**ஆதியும் நடுவும் அந்தமும் இல்லா**
**அருட்பெருஞ் சோதிஎன் றறிந்தேன்**
**ஓதிய அனைத்தும் நீஅறிந் ததுநான்**
**உரைப்பதென் அடிக்கடி உனக்கே.**

**உரை :** சாதி சமயக் கொள்கைகளை விட்டொழிந்தேன்; அவற்றை விதிக்கும் சாத்திரத் தொகுதிகளையும் கை யொழித்தேன்; நீதி முறையும், வாழ்க்கை நிலையும், மெய்ப் பொருளும், நிலைத்த வாழ்வும், வாழ்க்கை இன்பமும், தோற்றமும், இடையும், ஈறும் இல்லாத அருட் பெருஞ் சோதியேயாம் என்று தெளிந்து கொண்டேன்; இங்கே யான் சொன்ன அனைத்தும் நீ அறிந்தவையாதலால் நான் அடிக்கடி உனக்கு முறையிடுவது எற்றுக்கு? எ.று.

மதம் - கொள்கை. ஒவ்வொரு சமயத்திலும் கொள்கையில் பலவா தலால் அவற்றை மதம் என வழங்குவர். சாதிதோறும் ஒழுக்கமும், உள்ளப்பான்மையும், சூழ்நிலையால் வேறுபடுதலின் அதனை வேறு வைத்து விளம்புகின்றார். சாதியும், மதமும், சமயங்களும் மக்களினத்தை ஒன்றுபடுத்தாது வேறுபடுத்துவது பற்றி "சாதியும், மதமும், சமயமும் தவிர்ந்தேன்" என்று கூறுகின்றார். ஒரு சாதிக்குள்ளே சமயங்களும் மதங்களும் வேறுபட்டு அவர்களைத் தனித் தனியாகப் பிரிந்தொழியச் செய்தலால், "தவிர்ந்தேன்" என எடுத்து மொழிகின்றார். சாதி சமய வேறுபாடுகளைத் தோற்றுவித்துப் பிரிந்து நின்று வாழ்தற்குரிய சூழ்ச்சி களையும் வகைகளையும் எடுத்துரைப்பதால் சாத்திரங்கள் ஒன்றோ டொன்று ஒவ்வாமல் ஒருமை நிலைமைக்கு ஊறு செய்வதால், "சாத்திரக் குப்பையும் தணந்தேன்" என்று சலித்து உரைக்கின்றார். தணத்தல் - நீங்குதல். யாவர்க்கும் ஒத்த நீதியும் ஒத்த நிலைமையும், யாவர்க்கும் பொதுவாய் நிற்கும் மெய்ப்பொருளும், நிலைத்த வாழ்வும், அவ்வாழ்க்கை வழி எய்தும் நலமும் மக்களினத்தின் ஒருமித்த வாழ்வுக்கு உறுதி யாதலால் அவையே வேண்டும் என்றற்கு, "நீதியும் நிலையும் சத்தியப் பொருளும் நித்திய வாழ்க்கையும் சுகமும் அருட் பெருஞ் சோதி" என்று உரைக்கின்றார். திருவருள் ஞான ஒளியே தனக்கு உருவாகக் கொண்ட தாதலின் சிவ பரம்பொருளை, "அருட் பெருஞ் சோதி" என்கின்றார். அதற்குத் தோற்றமும் நடுவும் கேடும் இல்லை என்பது பற்றி, "ஆதியும் நடுவும் அந்தமும் இல்லா அருட் பெருஞ் சோதி" என்று விளக்குகின்றார். அருட் பெருஞ் சோதியே முழுமுதலாகக் கொண்டமையின் அதுவே எல்லாம் என வடலூர் வள்ளல் கருதுகின்றமை காண்க.

இதனால், அருட் பெருஞ் சோதி ஒன்றொழிய ஏனைய அனைத்தையும் பொருள் எனக் கொள்ளாதொழிந்தமை புகன்றவாறும். (7)

4076. பித்தெலாம் உடைய உலகர்தங் கலகப்
பிதற்றெலாம் என்றொழிந் திடுமோ
சத்தெலாம் ஒன்றென் றுணர்ந்தசன் மார்க்க
சங்கம்என் றோங்குமோ தலைமைச்
சித்தெலாம் வல்ல சித்தன்என் றுறுமோ
தெரிந்திலேன் எனத்துயர்ந் திருந்தேன்
ஒத்தெலாம் உனது திருவுளம் அறிந்த
துரைப்பதென் அடிக்கடி உனக்கே.

உரை: பித்து வகைகள் எல்லாவற்றையும் உடைய உலக மக்களின் கலகம் விளைவிக்கும் பிதற்றுரைகள் எல்லாம் என்று நீங்குமோ? சத்தாகிய பொருளனைத்தும் மெய்ம்மை உணர்வார்க்கு ஒன்றென்று உணர வல்ல சன்மார்க்க சங்கம் எக்காலத்தும் இவ்வுலகில் ஓங்கி நிற்குமோ? தலைமை பொருந்திய சித்துச் செயல்கள் எல்லாவற்றையும் செய்ய வல்ல சித்தனாகிய சிவ பெருமான் எப்போது எழுந்தருளுவானோ; இவற்றுள் ஒன்றையும் நான் அறிகிலேன் என வருந்தினேன்; எல்லா வற்றையும் ஓரொப்ப உன்னுடைய திருவுள்ளம் நன்கு அறியுமாதலால் நான் உனக்கு அடிக்கடி முறையிட்டு உரைப்பது எற்றுக்கு? எ.று.

உலகில் பித்தேறினுர் பலவகை உளராதலால் அவர் எய்திய பித்து வகைகள் எல்லாம் அடங்க, "பித்தெலாம்" எனத் தொகுத்துரைக் கின்ருர். சாதிப் பித்து, சமயப் பித்து, பொருள் பித்து, கொள்கைப் பித்து, காமப் பித்து எனப் பித்து வகை மிகப் பலவாதலால் இவ்வாறு கூறுகின்ருர். பித்துக் கொண்டவர்களின் பேச்சுக்களில் தெளிவில்லாமை யால் அவற்றைப் "பிதற்றல்" என்று பேசுகின்ருர். இப்பிதற் றுரைகளால் ஆன்ம நேய ஒருமை யுணர்வு சிதைந்து கெடுவது எண்ணி இவை எப் பொழுது ஒழிந்திடுமோ என ஏங்குகிருர். சத்து - உளதாம் தன்மை; என்றும் உளதாம் தன்மையை யுடைய பொருள். பல தன்மைகளே உடையதாதல் இல்லாமையால் சத்துப் பொருளேயே தேர்ந்தொழுகும் நன்னெறியை, "சன்மார்க்கம்" என்று உரைக்கின்ருர். சத்தாகிய பொருளேத் தேறும் நெறி நிலே பெற்ருலன்றி மக்களினத்தில் வேற்றுமை யின்மையால் உளவாகும் துன்பங்கட்கும் பூசல்கட்கும் இடமின்மையை எண்ணி, "சன்மார்க்க சங்கம் என்று ஓங்குமோ" என்று விழைகின்ருர். அணிமா முதலிய எண்வகைச் சித்துக்களேயும் செய்ய வல்ல யோகிகட் கெல்லாம் தலேவனுதலின் இறைவனே, "சித்தெலாம் வல்ல தலேமைச் சித்தன்" என்று சிவபெருமானேக் குறிக்கின்ருர். அப்பெருமான் தன்பால் எழுந்தருளுவதை நாளும் தான் எதிர்பார்த்திருக்கின்றமை புலப்பட, "என்று உறுமோ தேர்ந்திலேன்" என்றும், இவ்வாறு பலவும் எண்ணி வருந்துகின்றமை பற்றி, "துயர்ந்திருந்தேன்" என்றும் சொல்லுகின்ருர்.

இதனுல், சன்மார்க்க சங்கம் உயர்ந்தோங்க வேண்டுமென வடலூர் வள்ளல் விழைவது தெரிவித்தவாரும். (8)

4077. **ஒன்றெனக் காணும் உணர்ச்சிஎன் றுறுமோ**
**ஊழிதோ றூழிசென் றிடினும்**
**என்றும்இங் கிறவா இயற்கைஎன் றுறுமோ**
**இயல்அருட் சித்திகள் எனேவந்**
**தொன்றல்என் றுறுமோ அனைத்தும்என் வசத்தே**
**உறுதல்என் றேஎனத் துயர்ந்தேன்**
**உன்திரு உளமே அறிந்ததிவ் வனேத்தும்**
**உரைப்பதென் அடிக்கடி உனக்கே.**

உரை: தெய்வம் பல என்பதின்றி ஒன்றே என்று அறிந்துணரும் உணர்வு மக்களிடையே எப்பொழுது உண்டாகுமோ; ஊழிகள் பல கழியினும் எப்பொழுதும் இறவாத இயல்பு எப்பொழுது உண்டாகுமோ; திருவருள் சித்திகள் பலவும் என்னே என்று வந்தடையுமோ, அவை யனேத்தும் என் வசமாகுமோ என்றெல்லாம் எண்ணி நான் வருந்தினேன்; என் வருத்தம் யாவும் நின் திருவுள்ளம் அறிந்ததாகை யால் நான் அடிக்கடி எடுத்துரைப்பது எற்றுக்கு? எ.று.

பலவேறு தெய்வங்களேப் படைத்துக்கொண்டு அவற்றின்பால் பத்தி வெறிகொண்டு மக்களினம் தம்மில் வேறுபட்டுப் பிணங்கியது கண்டு உள்ளம் வருந்தினமை புலப்பட, வடலூர் வள்ளல், "ஒன்றெனக் காணும் உணர்ச்சி என்று உறுமோ" என இயம்புகின்ருர். உலகில்

உயிர்கள் பல்லூழி காலமாகப் பிறந்தும் இறந்தும் துன்புறுவது நினைந்து ஆற்றாமையால் வடலூர் வள்ளல் அவலிக்கின்றாராதலின், "ஊழி தோறும் ஊழி சென்றிடினும் என்றும் இங்கு இறவா இயற்கை என்று உறுமோ" என்று கூறுகின்றார். திருவருட் பெருக்கால் எய்தக் கடவனவாகிய சித்திகள் தம்பால் அமைதல் வேண்டுமென்ற ஆர்வத்தால், "இயல் அருட் சித்திகள் எனை வந்து ஒன்றல் என்று உறுமோ" எனவும், அவை யனைத்தும் தம் வசமாகிய வழி உயிர்கட்கு வேண்டிய நலம் பலவும் தம்மால் ஆற்ற முடியும் என்ற எண்ணத்தால், "அனைத்தும் என் வசத்தே உறுதல் என்றோ எனத் துயர்ந்தேன்" எனவும் மொழிகின்றார்.

இதனால், தெய்வம் ஒன்றெனக் காணும் நல்லுணர்வு நாட்டில் நிலை பெற வேண்டுமென விழைகின்றமை தெரிவித்தவாறும். (9)

4078. கள்ளவா தனையைக் களைந்தருள் நெறியைக்
காதலித் தொருமையில் கலந்தே
உள்ளவா றிந்த உலகெலாம் களிப்புற்
றோங்குதல் என்றுவந் துறுமோ
வள்ளலே அதுகண் டடியனேன் உள்ளம்
மகிழ்தல்என் றோஎனத் துயர்ந்தேன்
ஒள்ளியோய் நினது திருவுளம் அறிந்த
துரைப்பதென் அடிக்கடி உனக்கே.

**உரை:** கள்ளச் செய்கைகளைப் போக்கி அருள் நெறியை விரும்பி மேற்கொண்டு ஒற்றுமையால் பிறக்கும் ஒருமையில் உள்ளம் கலந்து உலகத்தில் உள்ள மக்கள் எல்லாம் இன்புற்று உயர்தல் எக்காலத்து எய்துமோ; அது கண்டு அடியவனாகிய என் மனம் களிப்பது எக்காலத்தோ என எண்ணி வருந்தினேன். என் வருத்தங்கள் யாவும் நின் திருவுள்ளம் அறிந்ததாகையால் அவற்றை அடிக்கடி நான் எடுத்துரைப்பது எற்றுக்கு? எ.று.

நெஞ்சிற் கள்ள நினைவும் செய்கையில் வஞ்சனையும் கொண்டு ஒழுகுவதால் மக்களிடையே நிலவும் துன்பத்தை, "கள்ள வாதனை" என்று குறிக்கின்றார். பலவகை வேற்றுமைகளையும் போக்கி மனமொன்றி மக்கள் மனவொருமை உடையராகிய வழி எங்கும் எல்லாம் இன்பமே உடையராய் இன்புற்று உயர்வர் என்ற கருத்தால், "கள்ள வாதனையைக் களைந்து அருள் நெறியைக் காதலித்து ஒருமையில் கலந்தே உள்ளவாறு இந்த உலகெலாம் களிப்புற்று ஓங்குதல் என்று வந்துறுமோ" என்று கூறுகின்றார். உலகம் இன்புறக் கண்டு தாம் இன்புறுவது உயர்ந்தோர் இயல்பாதலின், "அது கண்டு அடியனேன் உள்ளம் மகிழ்தல் என்றோ எனத் துயர்ந்தேன்" என உரைக்கின்றார். திருவருள் ஞானத் திருவுரு உடையனாதலால் சிவனை, "ஒள்ளியோய்" எனப் போற்றுகின்றார்.

இதனால், மக்கள் உலகு கள்ள வாதனையின் நீங்கி அருட் செல்வராய் இன்புற்று ஓங்க வேண்டுமென விரும்புகின்றமை தெரிவித்தவாறும். (10)

திருச்சிற்றம்பலம்

## 56. சுத்த சன்மார்க்க வேண்டுகோள்

அஃதாவது, சன்மார்க்க நெறியில் நிற்பவர் விரும்பத் தகுவன இவை என இறைவன் திருமுன் விண்ணப்பித்தலாம்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4079. அப்பாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம்நான் அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே
எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேல் சுத்தசிவ மார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான்செயினும் நீபொறுத்தல் வேண்டும்
தலைவநினைப் பிரியாத நிலைமையும்வேண் டுவனே.

உரை : அப்பனே! நான் வேண்டிக் கொள்வனவற்றை அன்பு கூர்ந்து கேட்டு அருள் செய்ய வேண்டுகிறேன்; நான் உயிர்கட் கெல்லாம் அன்பு செய்பவனாக வேண்டும்; எவ்வுலகத்தும் எத்தகைய நிலைகட்கும் எவ்விடத்திற்கும் நான் சென்று எனக்குத் தந்தையாகிய நின்னுடைய அருள் நிறைந்த புகழை எடுத்தோத வேண்டும்; நூல்களால் சொல்லப்படாத மேன் மேல் உயர்ந்த நிலைக்குரிய சுத்த சிவ நெறி விளங்கி மேம்பட நின்னுடைய அருள் ஒளியைப் பரப்புதல் வேண்டும்; யான் ஏதேனும் தவறு செய்வேனாயினும் நீ பொறுத் தருளுதல் வேண்டும்; இவற்றோடு தலைவனாகிய நின்னை விட்டுப் பிரியாத நிலைமையையும் அருள வேண்டுகிறேன். எ.று.

உலகில் உயிர்கள் எண்ணிறந்தனவாதலால் அவற்றை, "ஆருயிர் கட்கெல்லாம்" என்று குறிக்கின்றார். நாடுகளும், நாட்டின் நிலைமை களும் பலவேறு திறத்தனவாதலால் அவற்றை, "எப்பாரும் எப்பதமும்" என்று சுட்டுகின்றார். ஓதுவார்க்கு நிரம்பிய திருவருட் செல்வத்தை நல்குவது பற்றி இறைவன் புகழை, "அருட் புகழ்" என்று உரைக் கின்றார். ஞான நாட்டத்தால் கண்டு எய்துதற்குரிய சிவபோக நிலை, "செப்பாத மேனிலை" எனப்படுகிறது. அதுவே உயிர்களால் பெறுதற் குரியதாதலின் அதற்குரிய நெறி, "சுத்த சிவ மார்க்கம்" எனக் குறிக்கப் படுகிறது. சிவ மார்க்கத்தை அறிந்து சென்றடைதற்குத் திருவருள் ஞான ஒளி இன்றியமையாமை பற்றி, "திகழ்ந் தோங்க அருட் சோதி செலுத்தி யிடல் வேண்டும்" என்று செப்புகின்றார். திகழ்தல் - விளங்குதல். சிவ நெறியினும் மேலானது பிறிதின்மை தோன்ற, "மேல் சுத்த சிவமார்க்கம்" என்று கூறுகின்றார். சிவ மார்க்கம் - சிவஞானத்

தால் எய்துதற்குரிய சிவபோகத்தைப் பெறும் நெறி. அந்நெறியின்கண் கடைபோகச் சென்று சேருதற்கு அருள் ஒளி வேண்டியிருத்தலின், "சிவ மார்க்கம் திகழ்ந்தோங்க அருட் சோதி செலுத்துக" என விண்ணப்பிக்கின்றார். முக்குண வயத்தால் தவறு செய்தல் உயிர்கட்கு இயல்பாதலால், "தப்பேது நான் செயினும்" எனவும், தப்பும் தவறும் உயிர்க் குணவியல்பால் உளவாவன என்று எண்ணிய வழிப் பொறுக்கும் பண்பு இடையீடின்றித் தோன்றுதலின், "நீ பொறுத்தல் வேண்டும்" எனவும், தலைவனாகிய சிவனைப் பிரியா தொழுகும் நிலையில் நிலவும் சிவ வொளியால் உயிரின்பால் தவறு நிகழா தென்பது பற்றி, "தலைவ நினைப் பிரியாத நிலைமையும் வேண்டுவனே" எனவும் இயம்புகின்றார்.

இதன்கண், வேண்டுவன எய்திய வழிச் சன்மார்க்க நெறி எளிதில் கைகூடும் என்பது உய்த்துணரத் தெரிவித்தவாறும். இக்கருத்தையே இனிவரும் பாட்டுக்களிலும் உரைத்துக் கொள்க. (1)

4080. **ஐயாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்**
**அடிமுடிகண் டெந்நாளும் அனுபவித்தல் வேண்டும்**
**பொய்யாத வாய்மைகளே புகன்றிடுதல் வேண்டும்**
**புகன்றபடி புகன்றபடி புரிந்திடுதல் வேண்டும்**
**எய்யாத அருட்சோதி என்கையுறல் வேண்டும்**
**இந்தஉயிர் தமைமீட்டும் எழுப்பியிடல் வேண்டும்**
**நையாத வண்ணம்உயிர் காத்திடுதல் வேண்டும்**
**நாயகநின் தனைப்பிரியா துறுதலும்வேண் டுவனே.**

**உரை :** ஐயனே, நான் வேண்டிக் கொள்வனவற்றை எனக்கு அருள வேண்டுகிறேன்; நான் நின்னுடைய திருவடியையும் திருமுடியையும் கண்டு எந்நாளும் உனது அழகை அனுபவிக்க வேண்டும்; பொய் கலவாத வாய்மை உரைகளையே நான் பேசுதல் வேண்டும்; அன்றியும் பேசியபடியே எதனையும் செய்தல் வேண்டும்; பெறுதற் கரிதாகிய நினது திருவருள் ஒளி என் கைவரப் பெற வேண்டும்; இறந்த உயிர்களை மீட்டும் எழுப்பும் திறத்தை எனக்கு அருள வேண்டும்; வருந்தி மெலிந்து கெடாதவண்ணம் உயிர்களைக் காப்பதும் அதற்கேதுவாகிய உனது அருள் நிலையை நீங்காத நிலைமையையும் எய்த வேண்டுகிறேன். எ.று.

ஐயன் - தலைவன். திருவடியும் திருமுடியும் கண்டாலன்றித் திருவுருவை முழுதும் கண்டு அனுபவிக்க முடியாதாகலின், "அடி முடி கண்டு அனுபவித்தல் வேண்டும்" எனவும், அவ்வனுபவம் இடையறுத தாய் இருத்தல் வேண்டும் என்றற்கு, "எந்நாளும் அனுபவித்தல் வேண்டும்" எனவும் இசைக்கின்றார். பொய் கலந்த வாய்மையும் உண்டாதலின் அதனை விலக்குதற்கு, "பொய்யாத வாய்மைகளே புகன்றிடுதல் வேண்டும்" என ஓதுகின்றார். "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரை தீர்ந்த நன்மை பயக்குமெனின்" (குறள்) என்று பெரியோர் உரைப்பது காண்க. "யார்க்கும் சொல்லிய வண்ணம் செயல் அரியவாம்" (குறள்) என்று சான்றோர் கூறுதலால், "புகன்றபடி

புகன்றபடி புரிந்திடுதல் வேண்டும்'' என்று புகல்கின்றார். அருட் சோதி-திருவருள் ஞானம். அஃது ஒளி மயமாதலின், ''அருட் சோதி'' எனப்படுகிறது. ஏனை ஒளிகள் போல இடையறவு படாத இயல்பின தென்பது விளங்க, ''எய்யாத அருட் சோதி'' என்று சிறப்பிக்கின்றார். பசுபாச ஞானங்களால் பெறலாகாமை விளங்க, ''எய்யாத அருட் சோதி'' என இயம்புகின்றார் என அறிக. திருவருள் ஞானம் கைவந்தாலன்றி இறந்த உயிர்களை மீட்பதும், அவற்றுக்கு வருத்தமும் மெலிவு முதலியன எய்திய வழிகாத்தலும் கைகூடாத தென்பது பற்றி, ''அருட் சோதி என் கையுறல் வேண்டும்'' என விண்ணப்பிக்கின்றார். திருவருட் சோதியினின்றும் பிரியாதிருத்தல், தாம் வேண்டுவன அனைத்தும் பெறுதற்கு ஏதுவாதலால் பாட்டுத்தோறும் அதனை உரைத்தருளுகின்றார். நாயகன் - தலைவன். (2)

4081. அண்ணாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அழியாத தனிவடிவம் யானடைதல் வேண்டும்
கண்ணார நினைஎங்கும் கண்டுவத்தல் வேண்டும்
காணாத காட்சிஎலாம் கண்டுகொளல் வேண்டும்
பண்ணார நின்றனையே பாடியுறல் வேண்டும்
பரமானந் தப்பெருங்கூத் தாடியிடல் வேண்டும்
உண்ணாடி உயிர்கள்உறும் துயர்தவிர்த்தல் வேண்டும்
உனைப்பிரியா துறுகின்ற உறவதுவேண் டுவனே.

உரை : தலைவனாகிய பெருமானே! நான் செய்து கொள்ளும் வேண்டுகோளை ஏற்றருளல் வேண்டும்; அழிவில்லாத ஒப்பற்ற ஞான வடிவத்தை யான் அடைதல் வேண்டும்; அதனால் எப்பொருளின் கண்ணும் எவ்விடத்தும் நான் உன்னைக் கண்ணாரக் கண்டு மகிழ்வதும், ஏனை மக்களால் காணப்படாத உன் அருட் காட்சி எல்லாவற்றையும் கண்டு இன்புற வேண்டும்; மேலும் நான் உன்னையே பொருளாகக் கொண்டு பண்ணிறைந்த பாடல்களைப் பாடி மேலான ஆனந்தக் கூத்தினை ஆட வேண்டும்; ஏனை உயிர்கள் அடைகின்ற துன்பத்தை உள்ளவாறு அறிந்து போக்குதல் வேண்டும்; இதற்கு ஏதுவாக உன்னை நீங்காது உறையும் நிலைமையை அருளுமாறு வேண்டுகிறேன். எ.று.

அண்ணன் - தலைவன். இது அண்ணா என விளி யேற்றது. சிவானந்தத்தை நுகர்தற்குரிய ஞான வடிவம் எய்த வேண்டுகின்றாராதலால் அதனை, ''தனு வடிவம்'' என்றும், அஃது என்றும் அழியாத சிறப்புடைய தென்றற்கு, ''அழியாத தனி வடிவம்'' என்றும் குறிக்கிறார். இதனைச் சேக்கிழார் பெருமான், ''நண்ணரிய சிவானந்த ஞான வடிவம்'' (திருநாவுக்) என்று கூறுகின்றார். ஞான வடிவம் பெற்ற விடத்துச் சிவத்தின் எங்கும் நிறைந்த இன்ப வடிவம் காணப்படுதலால், ''கண்ணார நினை எங்கும் கண்டுவத்தல் வேண்டும்'' எனவும், ஞானக் கண்களால் காணலுறும் காட்சி மற்றைய ஊனக் கண்ணால் யாவராலும் காணப்படாமை பற்றி, ''காணாத காட்சி எலாம் கண்டு கொளல் வேண்டும்'' எனவும் கட்டுரைக்கிறார். பண் பொருந்திய பாடல்களையே பரமன் விரும்புகின்றான் என்பது பற்றி, ''பண்ணார'' என்றும், பரமன்

ஒருவனே பாட்டின் பொருளாக அமைதல் வேண்டும் என்றற்கு. "நின்றனையே பாடியுறல் வேண்டும்" என்றும் இயம்புகின்றார். "பண்ணொன்ற இசை பாடும் அடியார்கள் குடியாக மண்ணின்றி விண் கொடுக்கும் மணிகண்டன்" (புள்ளிருக்கு) என்று ஞானசம்பந்தர் உரைப்பது காண்க. பாட்டின் பொருளும் இசையும் பாடுவார் உள்ளத்தை மயக்கி ஆடச் செய்தலின், "பரமானந்தப் பெருங் கூத்தாடியிடல் வேண்டும்" என்று பகர்கின்றார். துன்புறும் உயிர்களைக் கண்டவிடத்து அதற்கேதுவாகிய அவற்றின் உள்ளத்திருந்து நோய் செய்யும் காரணங்களையும் கண்டறிந்து துயர் தீர்த்தல் முறையாதலின், "உள்நாடி உயிர்கள் உறும் துயர் தவிர்த்தல் வேண்டும்" என்றும், அச்செயல் கைக்கொள்ளுதற்கு இறைவனது பிரியா உறவின் இன்றியமையாமை பற்றி "உனை பிரியாது உறுகின்ற உறவது வேண்டுவனே" என்றும் உரைக்கின்றார். (3)

4082. அத்தாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அருட்பெருஞ்சோ தியைப்பெற்றே அகங்களித்தல் வேண்டும்
செத்தாரை மீட்டும்இங்கே எழுப்பியிடல் வேண்டும்
திருச்சபைக்கே அடிமைகளாச் செய்வித்தல் வேண்டும்
ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்
ஒருமைஉளர் ஆகிஉல கியல்நடத்தல் வேண்டும்
எத்தாலும் அழியாத வடிவதிலே நானும்
எந்தாயும் ஒன்றாக இனிதுறல்வேண் டுவனே.

உரை: தந்தையே! நான் செய்து கொள்ளும் வேண்டுகோளை ஏற்று எனக்கு அருள் புரிய வேண்டுகிறேன்; அருட் பெருஞ் சோதியாகிய திருவருள் ஞானத்தை அடியேன் பெற்று மனமகிழ்தல் வேண்டும்; இறந்தவர்களை இவ்வுலகில் மீட்டும் உயிருணர்வு உடையவர்களாக எழுப்பி இவ்வுலகில் வாழ்வித்தல் வேண்டும்; வாழுமிடத்தும் அவர்கள் நின் அருட் சபைக்கு அடிமைகளாய் உலாவச் செய்தல் வேண்டும்; ஒப்பவர்களும் உயர்ந்தவர்களும் தாழ்ந்தவர்களும் யாவரும் வேற்றுமையின்றி ஒருமை மனப்பான்மை உடையவர்களாய் உலகியலில் வாழ்தல் வேண்டும்; எவ்வகையாலும் அழிதல் இல்லாத உன்னுடைய ஞான வடிவத்திலே நானும் கலந்து எந்தையாகிய நீயும் நானும் ஒன்றாக இனிது அமைந்திருக்க வேண்டுகிறேன். எ.று.

அத்தன் - தந்தை. ஞானமாகிய நன்பொருளை நல்குவதால் தந்தைக்கு அத்தன் என்பது பெயராயிற்று. திருவருள் ஞானப் பேறு இன்ப வாழ்வுக்கு ஏதுவாதலால், "அருட் பெருஞ் சோதியைப் பெற்றே அகங் களித்தல் வேண்டும்" என்று கூறுகின்றார். செத்தார் - இறந்தவர். இறத்தல் - துன்பம் தருவதாகலின், "செத்தாரை மீட்டும் இங்கே எழுப்பியிடல் வேண்டும்" என்று வேண்டுகின்றார். "சாதலின் இன்னாதது இல்லை" (குறள்) என்று சான்றோர் கூறுவது காண்க. உயிருணர்வு பெற்றவர்கள் மீளவும் இறப்புத் துன்பத்திற்கு ஆளாகாதவாறு வாழ்தற்கு வழி உரைப்பாராய் அவர்கள் அருள் நடனம் புரியும்

திருச்சிற்றம்பலத்திற்கு அடிமைகளாய் அடிப் பணி புரிதல் என்றற்கு, "திருச்சபைக்கே அடிமைகளாகச் செய்வித்தல் வேண்டும்" என்று தெரிவிக்கின்றார். ஒப்பாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் என உலகியலில் மக்களிடையே வேற்றுமைகள் தோன்றி அவர்களிடையே இருத்தற் பாலதாகிய ஒருமை இன்பநிலையைச் சிதைத்து வாழ்க்கை இன்பத்தை நுகரவொண்ணாதபடிச் சிதைப்பதால் அவ்வவல நிலையைப் போக்குதல் வேண்டும் என்பாராய், "ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும் ஒருமையுளராகி உலகியல் நடத்தல் வேண்டும்" என்று உரைக்கின்றார். இந்நாளில் மக்களினத்தில் நிலவுகின்ற சாதி சமய வேற்றுமைகளை நோக்குகின்ற தலைவர்கள் இந்த ஒருமை நிலையையே வேண்டுவதை நாள்தோறும் செய்தித்தாள்களும், வானொலிகளும் உரைத்தவண்ணம் இருப்பது காணலாம். சாதி சமய பொருளாதார வேற்றுமையற்ற சமுதாயமே உலகியல் இன்ப வாழ்வுக்கு இன்றியமையாத தென்பதை வடலூர் வள்ளல் முன்னமே அறிந்துரைத்திருப்பதை இன்றைய உலகம் அறிதல் வேண்டும். அருட் பெருஞ் சோதி ஆண்டவனுடைய சிவானந்த ஞான வடிவம் எவ்வாற்றாலும் அழிவில்லதாகலின் அதனை விளக்குதற்கு, "எத்தாலும் அழியாத வடிவு" எனவும், ஆன்மாக்களும் அத்தன்மை எய்தி அதனோடு உடனிருந்து சிவபோகத்தை நுகர்வது அருள் நெறியின் பயன் என வற்புறுத்தற்கு, "நானும் எந்தாயும் ஒன்றாக இனிதுறல் வேண்டும்" என உரைத்தருளுகின்றார். (4)

4083. அரைசேநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அருட்பெருஞ்சோ தியைப்பெற்றே அகமகிழ்தல் வேண்டும்
வரைசேர்எவ் வுலகமும்ஓர் ஒழுக்கமுறல் வேண்டும்
மடிந்தாரை மீளவும்நாள் வருவித்தல் வேண்டும்
புரைசேரும் கொலைநெறியும் புலைநெறியும் சிறிதும்
பொருந்தாமல் எவ்வுயிரும் புரிந்துவத்தல் வேண்டும்
உரைசேர்மெய்த் திருவடிவில் எந்தாயும் நானும்
ஒன்றாகி எஞ்ஞான்றும் ஓங்குதல்வேண் டுவனே.

உரை : அருளரசனாகிய பெருமானே! நான் வேண்டுவனவற்றைத் திருச்சபையில் கேட்டு எனக்கு அருள் புரிய வேண்டுகின்றேன்; நான் அருட் பெருஞ் சோதியாகிய திருவருள் ஞானத்தைப் பெற்று இன்புற வேண்டும்; மலைகள் சூழ்ந்த நிலத்தில் உள்ள இவ்வுலகத்தவரும் நல்லொழுக்கம் உடையவர்களாதல் வேண்டும்; இறந்தவர்களை மறுபடியும் நான் உயிர் பெற்று வாழச் செய்தல் வேண்டும்; உலகின்கண் குற்றம் பொருந்திய கொலைச் செய்கையையும், புலால் உண்ணும் நெறியும் சிறிதளவும் மேற்கொள்ளாமல் எல்லா வுயிர்களும் மகிழ்வுடன் வாழ்தல் வேண்டும்; புகழ் பொருந்திய மெய்ம்மை சான்ற உனது அருள் ஞான வடிவில் எந்தையாகிய நீயும் எளியவனாகிய நானும் ஒன்றாய் இயைந்து நாளும் உயர்ந்தோங்க வேண்டுகிறேன். எ.று.

திருவருள் நெறிக்குத் தலைவனாதலால் சிவபெருமானை, "அரைசே" எனப் புகழ்கின்றார். நிலவுலகைச் சுற்றி மலைகள் இருக்கின்றன என்பது புராண வழக்காதலின் நிலவுலகை, "வரை சேர் உலகு" என உரைக்

கின்றார். உலகைச் சுற்றியுள்ள மலையை, "நேமி மால் வரை" என்று புராணங்கள் உரைக்கின்றன. மேன் மேலும் உயர்வு நல்குவதாகலால் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படுவது பற்றி, "எவ்வுலகமும் ஓர் ஒழுக்க முறல் வேண்டும்" என்று வேண்டுகின்றார். புரை - குற்றம். உயிர்க் கொலை புரிவதும், புலால் உண்பதும் குற்றமாய் உயிர்கட்குத் துன்பம் விளைவிப்பது பற்றி, "புரை சேரும் கொலை நெறியும் புலைநெறியும் சிறிதும் பொருந்தாமல் எவ்வுயிரும் புரிந்து உவத்தல் வேண்டும்" என்று கூறு கின்றார். உயிர்களை வேட்டையாடிக் கொல்வதே தமக்குரிய தொழிலாகக் கொள்பவரும் உளராதலின் அவர்களது தொழில் இயலை, "கொலை நெறி" என்று குறிக்கின்றார். தாமும் இறுதியில் சிவமாம் தன்மை எய்தி இன்புற விழைகின்றாராதலின் வடலூர் வள்ளல், "ஒன்றாகி எஞ்ஞான்றும் ஓங்குதல் வேண்டுவனே" என்று இயம்புகின் றார். (5)

4084. அடிகேள்நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அண்டம்எலாம் பிண்டம்எலாம் கண்டுகொளல் வேண்டும்
துடிசேர்எவ் வுலகமும்எத் தேவரும்எவ் வுயிரும்
சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றிடுதல் வேண்டும்
படிவானும் படைத்தல்முதல் ஐந்தொழிலும் ஞானம்
படைத்தல்முதல் ஐந்தொழிலும் நான்புரிதல் வேண்டும்
ஒடியாத திருவடிவில் எந்தாயும் நானும்
ஒன்றாகி எஞ்ஞான்றும் ஓங்குதல்வேண் டுவனே.

உரை : அடிகளாகிய பெருமானே! நான் வேண்டுவதைச் செவி சாய்த்துக் கேட்டு எனக்கு அருள் புரிய வேண்டும்; அண்டங்கள் பிண்டங்கள் எல்லாவற்றையும் தெளிவாகக் கண்டு அவற்றின் இயல் நலங்களை நான் அறிந்து கொள்ள வேண்டும்; நுண்ணிய கால அளவிற் குட்பட்ட எவ்வகை உலகங்களிலும் வாழும் எவ்வகைத் தேவரும் எவ்வகை உயிர்களும் சுத்த சிவ நெறியாகிய சன்மார்க்கத்தைப் பெற்று ஒழுகுதல் வேண்டும்; நிலம் முதலாக வானம் ஈறாக வுள்ள எல்லாவற்றையும் படைத்தல், காத்தல் முதலிய ஐவகைத் தொழில்களையும், ஞானத்தை நல்குதல், பேணுதல் முதலிய ஐந்து தொழில்களையும் நான் செய்தற்கு அருள் புரிய வேண்டும்; அழிவில்லாத நின்னுடைய ஞானத் திருவுருவில் நானும் நீயும் ஒன்றாய் எப்பொழுதும் ஓங்குமாறு வேண்டுகிறேன். எ.று.

அடிகள் - உயர்ந்தோரை அழைக்கும் சொல். அண்டம் - பெரியது. பிண்டம் - சிறியது. சிறியவும் பெரியவுமாகிய பொருள்களை அண்ட பிண்டம் என்பது நூல் வழக்கு. நாம் வாழும் நிலவுலகம் ஒரு அண்டம். அதன்கண் உள்ள ஒவ்வொரு அணுவும் பிண்டம் எனப்படும். பெருமை மிகுதியால் அண்டமும் மிக்க சிறுமையால் பிண்டமும் காண்டற்கு அரியவையாதலின், "அண்டமெலாம் பிண்டமெலாம் கண்டு கொளல் வேண்டும்" என்று குறிக்கின்றார். துடி - நுண்ணிய கால அளவு. தத்துவாதீதமாகிய சிவமே மெய்ப் பொருளெனக் கொண்டு ஒழுகும்

நெறி - சுத்த சிவ சன்மார்க்கமாகும் - சிவ சன்மார்க்கம் - சிவமாகிய மெய்ப்பொருள் நெறி. படி - நிலவுலகம். வான் - விண்ணுலகம். நிலம் முதலியவற்றைப் படைத்தல் காத்தல் முதலிய ஐந்து தொழிலும் சிவத்துக்கே உரிய செயலாயினும் அதனைச் சிவத் தன்மை எய்தித் தானும் செய்தல் வேண்டுமென விழைவாராய், "படி வானும் படைத்தல் முதல் ஐந்தொழிலும் நான் புரிதல் வேண்டும்" என்று வேண்டுகின்றார். ஞானம் - படைத்தல் முதல் ஐந்தொழிலாவன : சிவஞானத்தை நல்குதல், அதனை மறவாமல் காத்தல் முதலிய ஐந்தொழிலுமாம். ஒடிதல் - அழிதல். நன்னெறிய சிவானந்த ஞானமே சிவத்தின் திருவடிவமாதலால் அதனை, "ஒடியாத திருவடிவு" என்று உரைக்கின்றார். (6)

4085. அம்மாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆணவம்ஆதி யமுழுதும் அறுத்துநிற்றல் வேண்டும்
இம்மாலைத் தத்துவங்கள் எல்லாம்என் வசத்தே
இயங்கிஒரு தீமையும்இல் லாதிருத்தல் வேண்டும்
எம்மான்நான் வேண்டுதல்வேண் டாமையறல் வேண்டும்
ஏகசிவ போகஅனு போகம்உறல் வேண்டும்
தம்மானத் திருவடிவில் எந்தாயும் நானும்
சார்ந்துகலந் தோங்குகின்ற தன்மையும்வேண் டுவனே.

உரை : எனக்குத் தாயாகிய பெருமானே! நான் செய்து கொள்ளும் வேண்டுகோளை நின்னுடைய திருச்செவியில் ஏற்று எனக்கு அருள் புரிய வேண்டுகிறேன்; ஆணவம் முதலிய மலங்கள் மூன்றையும் நீக்கி நினது அருள் நெறியில் நிற்றல் வேண்டும்; இந்த மயக்கத்தைத் தரும் இயல்பினவாகிய தத்துவங்கள் எல்லாம் என் வசம் நின்று தத்தமக்குரிய செயல்களைச் செய்து ஒருவகைத் தீங்கையும் எனக்குச் செய்யாதனவாய் அமைதல் வேண்டும்; என்றன் பெருமானே! நான் வேண்டுதல் வேண்டாமை என்ற இரண்டும் இல்லாதவனாதல் வேண்டும்; ஒன்றாகிய நினது சிவபோக அனுபவம் எனக்கு உண்டாதலையும், தேவரீருடைய பெருமை பொருந்திய ஞானத் திருவுருவில் எந்தையாகிய நீயும் நானும் சேர்ந்து கலந்து ஓங்கும் உயர்ந்த தன்மையைப் பெறுதலும் வேண்டுகின்றேன். எ.று.

அம்மா என்பது தாயைக் குறிக்கும் முறைப் பெயர்ச் சொல். ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றும், "ஆணவம் ஆதிய" எனப்படுகின்றது. இவற்றின் தொடர்பால் ஆன்மாக்கள் பிறப் பிறப்புக்களை எய்தி வருந்துகின்றனவாதலால், "ஆணவம் ஆதிய முழுதும் அறுத்து நிற்றல் வேண்டும்" என விண்ணப்பிக்கின்றார். மால் - மயக்கம். மாலை - இயல்பு. மயக்கத்தைச் செய்கின்ற இயல்பினை யுடைய தத்துவங்கள் முப்பத்தாறையும், "இம்மாலைத் தத்துவங்கள்" என இயம்பு கின்றார். ஆன்மாக்கள் இத்தத்துவங்களின் வழி நின்று பிறப்பிறப்புக் கேதுவாகிய நல்வினை தீவினைகளைச் செய்து துன்புறுதலின், "தத்துவங்கள் எல்லாம் என் வசத்தே இயங்கி ஒரு தீமையும் இல்லா திருத்தல் வேண்டும்" என்று மொழிகின்றார். வேண்டுதல் வேண்டாமை

என்ற இரண்டும் இன்பமும் துன்பமுமாகிய பயன்களை விளைவித்துப் பிறப்புக்கு ஏதுவாக்குதலால், "வேண்டுதல் வேண்டாமை யறல் வேண்டும்" என்றும், சிவ பரம்பொருள் ஒன்றேயாதலின் அதன்பால் பெறலாகும் இன்பம், "ஏக சிவபோகம்" என்றும், சிவபோகானந்தம் சிவானுபவமாதலால் அதன் இன்றியமையாமை விளங்க, "சிவபோக அனுபோகம் உறல் வேண்டும்" என்றும் எடுத்துரைக்கின்றார். அனுபோகம் - அனுபவம் எனவும் அனுபூதி எனவும் வழங்கும். மானம்- பெருமை. சிவனும் தானுமாய்க் கலவாவிடத்துச் சிவபோகம் இன்மையின், "திருவடியில் எந்தாயும் நானும் சார்ந்து கலந்து ஓங்குகின்ற தன்மையும் வேண்டுவனே" என்று முறையிடுகின்றார். (7)

**4086.** **அச்சாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்**
**ஆறந்த நிலைகள்எலாம் அறிந்தடைதல் வேண்டும்**
**எச்சார்பும் ஆகிஉயிர்க் கிதம்புரிதல் வேண்டும்**
**எனைஅடுத்தார் தமக்கெல்லாம் இன்புதரல் வேண்டும்**
**இச்சாதி சமயவிகற் பங்களெலாம் தவிர்த்தே**
**எவ்வுலகும் சன்மார்க்கப் பொதுவடைதல் வேண்டும்**
**உச்சாதி அந்தமிலாத் திருவடிவில் யானும்**
**உடையாயும் கலந்தோங்கும் ஒருமையும்வேண் டுவனே.**

உரை : எனக்குத் தந்தையாகிய பெருமானே! நான் செய்து கொள்ளும் வேண்டுகோளை அன்புடன் ஏற்று அருள் செய்தல் வேண்டும்; நாதாந்தம் முதலிய அந்தங்கள் ஆறினுடைய நுட்பங்கள் எல்லாவற்றையும் யான் அறிந்து கைவரப் பெறுதல் வேண்டும்; உயிர்கட் கெல்லாம் யான் எல்லாத் துணையுமாகி நன்மையே செய்தல் வேண்டும்; என்னை அடுத்தவர்களுக் கெல்லாம் யான் இன்பம் செய்பவனாதல் வேண்டும்; இவ்வுலகில் நிலவும் சாதி, சமய வேறுபாடு களினின்றும் நீங்கி எல்லா உலகத்தும் சமதர்மமாகிய சன்மார்க்கப் பொது நெறி நிலவுதல் வேண்டும்; எல்லாப் பொருட்களுக்கும் உயர்ந்த தாகிய ஆதி அந்தம் இல்லாத நின்னுடைய சிவஞான உருவில் யானும் உடையவனாகிய நீயும் கலந்து உயர்ந்து ஒளிரும் ஒருமை நிலையையும் பெற வேண்டுகின்றேன். எ.று.

தந்தையாகிய முறைமையைக் குறிக்கும் அச்சன் என்னும் முறைப் பெயர் "அச்சா" என விளி கொண்டது. ஆறந்தங்களாவன : நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என்ற ஆறுமாம். நாதாந்தம் முதலிய ஆறும் அறிவாராய்ச்சி வடிவாய் ஆராய்வார் அமையும் நிலையாய் உள்ளவையாதலால், "ஆறந்த நிலைகளெலாம் அறிந்தடைதல் வேண்டும்" என்று அறிவிக் கின்றார். உயிர்கள் பலவாகவும் அவற்றிற்கு வேண்டும் துணையும் எண்ணிறந்தனவாகவும் இருத்தலால், அவற்றிற்குக் குறைவறத் துணை புரிந்து நலமே விளைவித்தல் வேண்டும் என்ற தமது பரந்த அருட் பண்பினை ஆர்வமுடன் விளக்குகின்றாராதலின், "எச்சார்புமாகி உயிர்க்கு இதம் புரிதல் வேண்டும்" என்றும், ஞான நலம் விளைந்து தன்பால் அடைந்த நன்மக்களுக்கு அந்நலமனைத்தும் தான் வழங்குதல்

வேண்டும் என்ற ஆர்வ மிகுதியால், "எனை அடுத்தார் தமக்கெல்லாம் இன்பு தரல் வேண்டும்" என்றும் இயம்புகின்றார். சாதி சமய விகற்பங்களால் மக்களினம் வேற்றுமை மிகுந்து போர்களுக்கும் பூசல்களுக்கும் இரையாகித் துன்பமுறுவது பற்றி, இவற்றின் தொடர்பு தம் உள்ளத்தில் எய்துதல் கூடாது என்னும் உணர்வு மிக்கவராதலின், "இச்சாதி சமய விகற்பங்கள் எல்லாம் தவிர்ந்து" எனவும், நிலவுலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் சன்மார்க்கமாகிய சமதர்ம ஞானமும் ஒழுக்கமும் நிலை பெறுதல் வேண்டும் என்ற நன்னெறி ஓங்குதற்கு உதவுதல் வேண்டுமென விண்ணப்பிப்பாராய், "எவ்வுலகும் சன்மார்க்கப் பொது அடைதல் வேண்டும்" எனவும் எடுத்துரைக்கின்றார். விகற்பம் - வேறுபாடு. வேற்றுமை எனினும் பொருந்தும். சாதி தோறும், சமயங்கள் தோறும் கொள்கைகளும் ஒழுக்கங்களும் வேறுபடுவதால் அவற்றை, "சாதி சமய விகற்பங்கள்" என்று விளம்புகின்றார். சன்மார்க்கப் பொது - சன்மார்க்க மாகிய சமதர்மப் பொது நெறி. உச்சம் - உச்சி எனவும் வழங்கும். உலகிலுள்ள உயிர்ப் பொருள், உயிரில் பொருள் ஆகிய எல்லாவற்றிற்கும் உச்சியில் விளங்குவது இறைவன் திருவுருவமாதலாலும், சிவ பரம் பொருளின் ஞான வடிவம் ஆதியும் அந்தமுமில்லாத அருள் ஞான வடிவமாதலாலும் அதனை, "உச்சாதி அந்தமிலாத் திருவடிவு" என்றும், அதன்கண் ஒன்றி யுடனுறதலே உயிர்கள் பெறும் இன்பப் பேறுதலின், "திருவடிவில் யானும் உடையாயும் கலந்தோங்கும் ஒருமையும் வேண்டுவனே" என விண்ணப்பிக்கின்றார். (8)

4087. அறிவானான் வேண்டுதல்கேட் டருல்புரிதல் வேண்டும்
ஐந்தொழில்நான் புரிந்துலகில் அருள்விளக்கல் வேண்டும்
செறியாத கரணம்எலாம் செறித்தடக்கல் வேண்டும்
சித்தாந்த வேதாந்தப் பொதுசிறத்தல் வேண்டும்
எறியாதென் எண்ணம்எலாம் இனிதருளல் வேண்டும்
எல்லாஞ்செய் வல்லசித்தே எனக்களித்தல் வேண்டும்
பிரியாதென் னுடுகலந்து நீஇருத்தல் வேண்டும்
பெருமான்நின் தனைப்பாடி ஆடுதல்வேண் டுவனே.

உரை : அறிவுருவாகிய பெருமானே! நான் செய்து கொள்ளும் வேண்டுகோளை செவியேற்று அருள் புரிய வேண்டுகிறேன்; உலகில் படைத்தல் முதலிய ஐவகைத் தொழில்களையும் செய்து உனது திருவருள் ஞானத்தின் பெருமையை உலகவர் அறிய விளக்குதல் வேண்டும்; அடங்காது பரந்து விரிந்தோடும் கருவி கரணங்களெல்லாவற்றையும் அடக்கி ஆள்பவனாதல் வேண்டும்; சித்தாந்தம் வேதாந்தம் என்ற இரண்டிற்கும் பொதுவான ஞான ஒழுக்கம் எங்கும் சிறந்தோங்க வேண்டும்; யான் எண்ணுகின்றவற்றை எல்லாம் புறக்கணிக்காமல் இனிது எய்த அருள் புரிய வேண்டும்; எல்லாவற்றையும் செய்ய வல்ல சித்தாந் தன்மையை எனக்குத் தந்தருள வேண்டும்; மேலும் நீயும் என்னோடு கலந்து என்னிற் பிரியாமல் இருத்தல் வேண்டும்; நானும் இடையறவின்றி நின்னையே அன்புடன் பாடி ஆடுதல் வேண்டும். எ. று.

சிவம் ஞானத் திருவுருவமாதலின், சிவனை "அறிவா" என அழைக்கின்றார். ஐந்தொழில்கள் : படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் என இவை. படைத்தல் முதலிய ஐந்தொழிலுக்கும் சிவமே உரியதாயினும் படைக்கப்பட்ட உலகின்கண் இவை ஐந்தையும் தாம் புரியும் திறத்தை விரும்புகின்றாராதலால் வடலூர் வள்ளல், "ஐந்தொழில் நான் புரிந்துலகில் அருள் விளக்கல் வேண்டும்" என்று உரைக்கின்றார். படைத்தல் முதலிய ஐந்தும் இறைவன் திருவருட் செயலாதலின் அந்தப் பேரருளின் நலத்தை விளக்குமுகத்தால் தாம் ஐந்தொழில் செய்ய விரும்புகின்றமை புலப்பட, "அருள் விளக்கல் வேண்டும்" என மொழிகின்றார், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற கருவி ஐந்தும், மனம், சித்தம், அகங்காரம், புத்தி என்ற கரணம் நான்கும் பொது வகையில் கரணம் எனப்படுகின்றன. காணப்படும் பொருட்கள் எல்லாவற்றிலும் தானே பரந்து சென்று படர்வனவாதலால், "செறியாத கரணம்" என்று கூறுகின்றார். சித்தாந்த வேதாந்தங்கள் முடிவு நிலையில் வேறுபட்டுப் பிணங்குவனவாதலால், அப்பிணக்கு நீக்குதல் வேண்டி, "சித்தாந்த வேதாந்த பொது சிறத்தல் வேண்டும்" என்று புகல்கின்றார். பொது - ஈண்டு நடுவு நிலை குறித்து நிற்கின்றது. எறிதில் - புறக்கணித்தல். எண்ணுவன எண்ணியாங்குப் பெற்றவிடத்துச் சிந்தையுள் தெளிவும் அமைதியும் தோன்றுவது பற்றி, "என் எண்ணமெலாம் இனிதருளல் வேண்டும்" என்று கூறுகின்றார். அனிமா மகிமா முதலிய அனைத்தும் செய்யக் கூடிய வன்மை யுளதாகிய வழி உலகம் தம் சொல்வழி நிற்கும் என்ற கருத்தால், "எல்லாம் செய் வல்ல சித்தே எனக்கு அளித்தல் வேண்டும்" என்று இசைக்கின்றார். பிரியாதிருந்தவிடத்து இன்பமும் மகிழ்ச்சியும் தோன்றி ஆடலும் பாடலுமாகிய செயல்களைப் புரிதற்கு ஊக்குதலால் அவற்றை, "பிறியாது என்னொடு கலந்து நீ இருத்தல் வேண்டும் பெருமான் நின்றனைப் பாடி ஆடுதல் வேண்டுவனே" என்று மொழிகின்றார். (9)

4088. **அருளாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்**
**அணுத்துணையும் சினங்காமம் அடையாமை வேண்டும்**
**மருளாய உலகம்எலாம் மருள்நீங்கி ஞான**
**மன்றிடத்தே வள்ளல்உனை வாழ்த்தியிடல் வேண்டும்**
**இருளாமை உறல்வேண்டும் எனை அடுத்தார் சுகம்வாய்ந்**
**திடல்வேண்டும் எவ்வுயிரும் இன்படைதல் வேண்டும்**
**பொருளாம்ஓர் திருவடிவில் உடையாயும் நானும்**
**புணர்ந்துகலந் தொன்றாகிப் பொருந்துதல்வேண் டுவனே.**

உரை: அருளுருவாகிய பெருமானே! யான் செய்கின்ற வேண்டுகோளைத் திருச்செவியில் ஏற்று எனக்கு அருள் செய்ய வேண்டுகிறேன்; என்னைக் கோபம் காமம் ஆகிய குற்றங்கள் அணுவளவும் வந்து பொருந்துதல் கூடாது; மருட்சி நிறைந்த எல்லா உலகங்களும் அம் மருட்சி நீங்கித் தெளிவுற்று அம்பலத்தின்கண் எழுந்தருளும் வள்ளலாகிய உன்னை வாழ்த்தி வழிபடல் வேண்டும்; அறியாமையாகிய இருள் வந்து என்னைப் பொருந்துதல் கூடாது; அன்பால் என்னை அடுத்

தவர்கள் சுகம் பெறுதல் வேண்டும்; அவர்களோடு ஏனை எல்லா உயிர்களும் இன்பமடைய வேண்டும்; மெய்ப்பொருளாகிய உனது திருவுருவில் என்னை உடையவனுகிய நீயும் நானும் கூடிக் கலந்து ஒன்றி உயர்தலை வேண்டுகிறேன். எ.று.

சிவபெருமானுக்கு அருளே திருமேனியாதல் பற்றி, "அருளா" எனவுரைக்கின்ருர். அருளன் என்பது அருளா என விளியேற்றது. கோபம் காமம் ஆகிய குற்றங்கள் சிறிது உண்டாயினும் அவற்ருல் விளையும் தீங்கு பெரிதாதலால், "அணுத் துணையும் சினம் காமம் அடையாமை வேண்டும்" என்று விண்ணப்பிக்கின்ருர். மருள் என்பது திரிபுணர்ச்சி. பொருளல்லவற்றைப் பொருளென்று உணர்வது மருள் என்று சான்ருேர் தெரிவிக்கின்றனர். "பொருளல்லவற்றைப் பொருளென்று உணரும் மருளாணும் மாணுப் பிறப்பு" (குறள்) என்று சான்ருேர் கூறுவது காண்க. இத்திரிபுணர்ச்சி உலக மக்களிடையே நிறைந்திருத்தலின், "மருளாய உலகம்" எனவும், உலகியல் துன்பமயமாய் இருப்பதற்கே அஃது ஏதுவாதல் பற்றி, "உலகமெலாம் மருள் நீங்கி" எனவும், மருள் நீங்கியவிடத்து எங்கும் எவரிடத்தும் ஞானத் தெளிவு நிலையே நிலவுதலின் அவர்கள் ஞானசபையிடத்து விளங்கும் சிவத்தை யுணர்ந்து அதன் நலம் பெற்று வாயார வாழ்த்தி வழிபடுவாராதலின், "ஞான மன்றிடத்தே வள்ளல் உனை வாழ்த்தியிடல் வேண்டும்" எனவும் வேண்டுகின்ருர். அறியாமை இருள் மயமாதலின் அது தம்மைப் பற்றிய வழிப் பலவகைக் குற்றங்கள் தோன்றித் துன்பம் விளைவிக்குமாதலின், "இருளாமை யுறல் வேண்டும்" என வுரைக்கின்ருர். தம்மை அடைந்தவர் சுகம் பெற்ருலன்றி அடுப்பதனுல் பயனின்மை பற்றி, "எனை அடுத்தார் சுகம் வாய்ந்திடல் வேண்டும்" என்று விண்ணப்பிக்கின்ருர். அடுத்தவர் சுகம் பெறுதல் வேண்டும் என்பது பிறர் அதனை எய்தலாகாது என்று கருதுதற்கு இடந் தருதலின், அக்குற்றத்தை விலக்குதற்கு, அடுத்தவரை யன்றித் தம்மை அடையாமல் விலகி யிருப்பவரும் ஏனை உயிர்களும் இன்பம் பெறுதல் வேண்டும் என விண்ணப்பிப்பாராய், "எவ்வுயிரும் இன்படைதல் வேண்டும்" என முறையிடுகின்ருர். இறைவனது அருள் வடிவத்தினும் மெய்யாய பொருள் வேறில்லாமை விளங்க, "பொருளாம் ஓர் திருவடிவு" எனப் புகழ்கின்ருர். பரம்பொருளோடு கலந்து ஒன்றி இன்புறுதலே முத்திப் பேருதலால், "உடையாயும் நானும் புணர்ந்து கலந்து ஒன்ருகிப் பொருந்துதல் வேண்டும்" என்று புகல்கின்ருர். (10)

4089. **அமலாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்**
**ஆடிநிற்குஞ் சேவடியைப் பாடிநிற்க வேண்டும்**
**எமனுதித் தடைஎன்றும் எய்தாமை வேண்டும்**
**எல்லாம்செய் வல்லதிறன் எனக்களித்தல் வேண்டும்**
**கமையாதி அடைந்துயிர்கள் எல்லாம்சன் மார்க்கம்**
**காதலித்தே திருப்பொதுவைக் களித்தேத்தல் வேண்டும்**
**விமலாதி உடையஒரு திருவடிவில் யானும்**
**விமலாநீ யுங்கலந்தே விளங்குதல் வேண்டுவனே.**

உரை: தூய வடிவினனாகிய சிவபெருமானே! நான் செய்து கொள்ளும் விண்ணப்பத்தைச் செவி குளிர ஏற்று அருள் புரிய வேண்டு கிறேன்; அம்பலத்தில் ஆடுகின்ற உனது சிவந்த திருவடிகளை நான் பாடிப்பரவ வேண்டும்; எமன் முதலியவர்களால் உண்டாகும் சாக்காடு என்னும் தடை எனக்கு உண்டாதல் கூடாது; எல்லாவற்றையும் இனிது செய்து முடிக்கக்கூடிய திறமையை எனக்கு நல்க வேண்டுகிறேன்; பொறுமை முதலிய நற்பபுண்கள் பொருந்தி உயிர்கள் யாவும் சன்மார்க் கத்தை விரும்பி யேற்று நின்னுடைய திரு விளங்கும் அம்பலத்தை மகிழ்ச்சியுடன் துதிக்க வேண்டும்; விமலம் முதலிய உயர் குணங்களை யுடைய உனது திருவருள் ஞான வடிவில் யானும் விமலனாகிய நீயும் கலந்து ஒன்றி விளங்குதலை வேண்டுகிறேன். எ.று.

அமலம், விமலம் என்பன மலமின்மையைக் குறிக்கும் சொற்கள். இயல்பாகவே மலக் கலப்பில்லாதவனாதலால் சிவனை, "அமலன்" என்றும், "விமலன்" என்றும் அறிஞர் புகழ்ந்துரைப்பர். அம்பலத்தில் ஆடுகின்ற பெருமானாதலின் சிவனுடைய திருவடிகளை, "ஆடி நிற்கும் சேவடி" எனவும், அதனைப் பாடிப் பரவுவது உயிர்கட்கு உறுதிப் பொருளாதல் பற்றி, "சேவடியைப் பாடி நிற்க வேண்டும்" எனவும் பகர்கின்றார். உயிர்களுக்குச் சாக்காட்டை விளைவிப்பவனாதலால், அச்சாக்காட்டையே எமன் எனக் குறித்துச் சாவாப் பெருநிலையை எய்துதல் வேண்டும் என்னும் தமது விழைவு புலப்பட, "எமனாதித் தடை என்றும் எய்தாமை வேண்டும்" என்று இயம்புகின்றார். சாக்காடு இன்னாததாதலின் அதனை வேண்டா என விலக்குகின்றார். எல்லாம் செய்ய வல்ல ஆற்றல் இறைவன் ஒருவனுக்கே உளதாயினும் அவன் அருளைப் பெறுவார்க்கு அத்திறமை இனிது எய்துதலால், "எல்லாம் செய் வல்ல திறன் எனக்களித்தல் வேண்டும்" என்று உரைக்கின்றார். கமை- பொறுமை. அடக்கம் முதலிய நற்பண்புகளை, "கமையாதி" எனக் குறிக்கின்றார். இந்த நற்பண்புகள் சன்மார்க்கத்திற்கு இன்றியமை யாவாதலின், "கமையாதி அடைந்து உயிர்கள் எல்லாம் சன்மார்க்கம் காதலித்து" எனவும், காதல் அளவாய் நில்லாது இறைவன் எழுந்தருளி ஆடும் ஞான அம்பலத்தை நினைந்து வணங்கித் துதித்தல் வேண்டும் என்பாராய், "திருப்பொதுவைக் களித்து ஏத்தல் வேண்டும்" எனவும் இசைக்கின்றார். விமலாதி, தூய்மை முதலிய உயர்ந்த குண நலன்களின் திருவுருவமே பரம் பொருளாதலின் அதன் ஞானத் திருவுருவை "விமலாதி உடைய ஒரு திருவடிவு" எனவும், அதனை ஒன்றி உடனாய் நின்று சிவபோகம் பெறுவதே உயிர் வாழ்வின் முடிபொருளாதலால், "ஒரு திருவடிவில் யானும் விமலா நீயும் கலந்தே விளங்குதல் வேண்டுவனே" என வேண்டிக் கொள்ளுகின்றார். (11)

திருச்சிற்றம்பலம்

## 57. அருள் மாலை விளக்கம்

அஃதாவது, திருவருள் ஞான விளக்கம் எய்திய வடலூர் வள்ளல், ஆருமை மிகுந்து உள்ளத்தில் பொங்கி எழுந்த இன்ப உணர்ச்சிகளைச் சொன்மாலைகளாய்த் தொடுத்துரைத்தல். இதன்கண் வரும் நூறு பாட்டுக்களும் தமது சொன்மாலையில் ஏற்றருளுமாறு இறைவனை வேண்டும் குறிப்பினவாகும்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4090. அருள்விளக்கே அருட்சுடரே அருட்சோதிச் சிவமே
அருள்அமுதே அருள்நிறைவே அருள்வடிவப் பொருளே
இருள்கடிந்தென் உளமுழுதும் இடங்கொண்ட பதியே
என்அறிவே என்உயிரே எனக்கினிய உறவே
மருள்கடிந்த மாமணியே மாற்றறியாப் பொன்னே
மன்றில்நடம் புரிகின்ற மணவாளா எனக்கே
தெருள்அளித்த திருவாளா ஞானஉரு வாளா
தெய்வநடத் தரசேநான் செய்மொழிஏற் றருளே.

உரை : அருள் விளக்கமும் அருட் சுடருமாகிய அருள் சோதி உருக்கொண்ட சிவ பரம்பொருளே! ஞான அருள் அமுதமே! அருளே நிறைந்த அருள் வடிவப் பொருளே! மனத்திற் படியும் இருளைப் போக்கி என் உள்ளம் முழுதும் இடம் கொண்ட தலைவனே! எனக்கு அறிவும், உயிரும், இனிய உறவுமாகிய பெருமானே! மயக்கத்தை நீக்கி யருளிய பெரிய மாணிக்க மணியே! மாற்றுக் காண மாட்டாத பொன் போன்றவனே! அம்பலத்தில் கூத்தாடுகின்ற ஞான மணவாளனே! எனக்கு ஞான விளக்கம் தந்த திருவருளை ஆள்பவனும், ஞானத் திருவுருவை உடையவனும், தெய்வ நடம் செய்பவனுமாகிய பெருமானே! நான் தொடுக்கின்ற சொல் மாலையை ஏற்றருளுக. எ.று.

திருவருள் ஒளியையும், அதன் சுடரையும், இவ்விரண்டும் கலந்த திருவருள் ஞானப் பேரொளியின் திருவுருச் சோதி என்றற்கு, "அருள் விளக்கே அருட் சுடரே அருட் சோதி" என்றும், அதுவே சிவ வடிவம் என்றற்கு, "அருட் சோதிச் சிவமே" என்றும் உரைக்கின்றார். "சோதியே சுடரே சூழொளி விளக்கே" (அருட்) என்று திருவாசகம் ஓதுவது காண்க. தேவர்கள் கடல் கடைந்து பெற்ற சாவா மருந்தாகிய அமுதத்தின் வேறுபடுத்தற்கு, "அருள் அமுதே" என்று கூறுகின்றார். அருள் ஞானமாய் அயரா இன்பம் தருவது பற்றிச் சிவபெருமானை,

"அருளமுதே" என்றும், அதுதானும் குறைவற நிறைந்திருத்தல் விளங்க, "அருள் நிறைவே" என்றும், சிவத்தின் திருவடிவம் அருள் ஞான மயமாதலின், "அருள் வடிவப் பொருளே" என்றும் இயம்புகின்றார். உலகியல் மாயா காரியமாய்த் தன்கண் வாழ்வார்க்கு இருள் செய்யும் இயல்பினதாதலின், உலகியல் போகத்திற் செல்லும் பொய்யறிவைப் போக்கி உண்மை ஞான ஒளி மயமாய்ச் சிவ பரம்பொருள் மெய் யுணர்ந்தோர் உள்ளமெல்லாம் ஞான ஒளி செய்தல் பற்றி, "இருள் கடிந்து என் உளமுழுதும் இடம் கொண்ட பதியே" என்று பகர்கின்றார். அறிவாகவும் உயிர்க்குயிராகவும் பிரியாப் பெருந் துணையாகவும் பிறங்குவதால் சிவத்தை, "என் அறிவே என் உயிரே எனக்கினிய உறவே" என்று ஏத்துகின்றார். மலக் கலப்பால் உயிர் மருளும் இயல்பினதாதலின் அதனைப் போக்கினாலன்றி மாணிக்க மணிமலைபோல் வயங்கும் சிவத்தைக் காண்டல் அரிதென்பது பற்றி, "மருள் கடிந்த மாமணியே" என்றும், உரைத்து மாற்றுக் காணப்படும் உலகியற் பசும் பொன்னின் வேறுபட் டொளிரும் பொன்னிற முடையனாகலின் சிவனை, "மாற்றறியாப் பொன்னே" என்றும் இசைக்கின்றார். அம்பலத்தில் ஆடுகின்ற நிலையில் அருள் ஞான மணம் கமழ விளங்குதலின், "மன்றில் நடம் புரிகின்ற மணவாளா" எனப் போற்றுகின்றார். மணவாளன் - சிவஞானத் திருமணம் கமழத் திகழ்பவன். தெருள் - சிவஞானம். சிவஞானத்தினும் செல்வம் பிறிது வேறின்மை தோன்ற, "தெருள் அளித்த திருவாளா" எனவும், அவருடைய திருமேனியும் சிவானந்த ஞானத் திருவுருவமாதலின், "ஞான உருவாளா" எனவும், இவ்வகைத் திருவும் உருவும் உடையவனாய் அம்பலத்தில் ஆடல் புரிதலால், "தெய்வ நடத்தரசே" எனவும் பாராட்டிப் பரவுகின்றார். செய்மொழி - சொற்களைக் கொண்டு செய்கின்ற சொன் மாலை.

இதனால், தாம் தொடுக்கின்ற சொன் மாலையை ஏற்றருள வேண்டுமென விண்ணப்பித்தவாறும். இதுவே கருத்தாக இனி வரும் பாட்டுக்கள் நூறும் அமைந்திருத்தலைப் பாட்டு உரைதோறும் உரைத்துக்கொள்க. (1)

4091. கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த
குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே
ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே
உகந்ததண்ணீர் இடைமலர்ந்த சுகந்தமண மலரே
மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே
மென்காற்றில் விளைசுகமே சுகத்தில்உறும் பயனே
ஆடையிலே எனைமணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

உரை : கோடை வெயிலில் வெதும்பினார்க்கு இளைப்பாற்றிக் கொள்ளுமாறு எதிர்ப்பட்ட தழைத்துக் குளிர்ந்த மரம் போல்பவனே! அம்மரம் அவர்க்குத் தருகின்ற தண்ணிய நிழல் போல்பவனே! அந்நிழலினிடத்தே மரத்தில் நன்கு பழுத்த கனி போல்பவனே! அம்மரச் சூழலிடையே அமைந்த நீரோடையில் சுரக்கின்ற இனிய

சுவை பொருந்திய தண்ணீர் போல்பவனே! விரும்பத்தக்க அத் தண்ணீரில் மலர்ந்து தோன்றும் நறுமணம் கமழும் மலர் போல்பவனே! ஓடை யருகே உள்ள மேடையில் வீசுகின்ற மென்மையான பூங்காற்றுப் போல்பவனே! அந்த மென்மையான காற்றினால் தேகத்தில் உண்டாகின்ற இந்தச் சுகம் போல்பவனே! சுகானுபவத்தில் பிறக்கும் இன்பப் பயனாகியவனே! விளையாடும் பருவத்தே என்னை மணந்துகொண்ட மணவாளனே! அம்பலத்தில் ஆடுகின்ற அருளரசே! என்னுடைய சொன் மாலையை ஏற்று மகிழ்ந்தருளுக. எ.று.

வெயில் மிகுந்து தாக்கும் வேனிற் காலத்தைக் கோடை என்று குறிக்கின்றார். கோடை வெயிலில் இயங்குவார்க்கு வேண்டப்படுவ தெல்லாம் குளிர்ந்த மர நிழலாதலால் அது கிடைத்த வழி அவர்க்கு உளதாகும் இன்பம் பெரிதாதலின் அதனைச் சிவானுபவமாகக் கருதி, "கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர் தருவே" என்று கூறுகின்றார். இருள்படத் தழைத்த மரத்தின் நிழல் குளிர்ச்சி உடையதாகலின் அச்சிறப்பு விளங்க, "குளிர் தருவே" என்று குறிக்கின்றார். குளிர் நிழலை அடைந்து இளைப்பாறினார்க்கு அம்மரத்தில் நன்கு கனிந்த சுவை மிக்க கனியின்பால் வேட்கை செல்லுமாதலின் அதனைப் புலப்படுத்தற்கு, "தரு நிழலே நிழல் கனிந்த கனியே" என்றும், சுவைமிகக் கனிந்த நற்கனி என்பது தெரிவித்தற்கு, 'கனிந்த கனியே' என்றும் இயம்புகின்றார். ஓடை - நீர்நிலை. இளைப்பாறிக் கனி உண்டு மகிழ்வார்க்கு நீர்ப் பருகும் வேட்கை அடுத்துத் தோன்றுதலின் அந்நிலையில் நீரோடை இளநீர் போலும் இன்சுவை பொருந்திய நீர் உடையதாயின் அவர்க்கு உளதாகும் மிக்க இன்பத்தை உய்த்துணர்விப்பாராய், "ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரே" எனச் செப்புகின்றார். அந்த இனிய நீர்நிலையில் நறுமணம் கமழும் மலர் தோன்றிக் கண்ணுக்கினிய இன்பம் தருமாயின், அதனைக் காணும் இன்பத்தோ டமையாது படித்து மணம் நுகரப் பெறும் வேட்கை தணிய அம்மலர் விளங்குமாயின் அது பெரியதோர் இன்பத்தைத் தருமாதலால் அவ்வின்பம் சிவானந்தமாதல் விளங்க, "உகந்த தண்ணீரிடை மலர்ந்த சுகந்த மணமலரே" என்று சொல்லுகின்றார். தண்ணிய நிழல் பெற்று இளைப்பாறிக் கனிந்த கனி கொண்டு ஓடையில் சுவை மிக்க தண்ணீரைப் பருகி நறுமலரின் மணம் நுகர்ந்து மகிழ்பவர்க்கு நடந்து போந்தத் தளர்ச்சி நீங்க மெல்லிய பூங்காற்று வீசும் மேடையில் கிடந்து ஓய்வு பெறுதற்கு உள்ளம் செல்லுமாதலின் அக்கருத்துப் புலப்பட, "மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே" எனவும், ஓய்வு பெறும் உடம்பிற்கு மெல்லிய காற்று இன்பம் பயக்கும் இனிய சுகமாய் உள்ளத்திற்குச் சிவபோகமாகிய அனுபவத்தை நல்குதலால் அதனை, "மென் காற்றில் விளைசுகமே சுகத்தில் உறும் பயனே" எனவும் விளம்புகின்றார். ஆடுதல் - ஆடையென வந்தது. அஃது விளையாடும் பருவத்தின் மேற்று - மிக்க இளம் பருவத்தேயே தமக்குச் சிவநேசம் உண்டாகினமை தெரிவித்தற்கு, "ஆடையிலே எனை மணந்த மணவாளா" என்று தெரிவிக்கின்றார். பொது - அம்பலம். (2)

4092. இன்புறநான் எய்ப்பிடத்தே பெற்றபெரு வைப்பே
ஏங்கியபோ தென்றன்னைத் தாங்கியநல் துணையே
அன்புறஎன் உட்கலந்தே அண்ணிக்கும் அமுதே
அச்சமெலாம் தவிர்த்தென்னை ஆட்கொண்ட குருவே
என்பருவம் குறியாதே எனைமணந்த பதியே
இச்சையுற்ற படிஎல்லாம் எனக்கருளும் துரையே
துன்பறமெய் அன்பருக்கே பொதுநடஞ்செய் அரசே
தூயதிரு அடிகளுக்கென் சொல்லும் அணிந் தருளே.

**உரை:** *தளர்ச்சி யுற்று வருந்தும் காலத்து இன்பம் எய்துமாறு* பெறப்பட்ட பெரிய செல்வம் போல்பவனே! துணையின்றி வருந்திய பொழுது நான் வருந்தாவண்ணம் என்னைத் தாங்கி யருளிய நல்ல துணை வனே! என்னுட் கலந்து நின்பால் எனக்கு அன்பு மீதூற நின்று இனிமை செய்யும் அமுதம் போல்பவனே! என்னை அலைக்கின்ற அச்ச மெலாம்போக்கி என்னை ஆட்கொண்டருளிய ஞானாசிரியனே! என்னு டைய மனப் பக்குவத்தை எண்ணுமல் என்னை மணந்துகொண்ட தலை வனே! நான் விரும்பியபடி எல்லாம் எனக்கு அருள் புரிந்த தலைவனே! மெய்யன்புடைய பெருமக்களுக்கு உண்டாகும் துன்பங்களைப் போக்குதற் பொருட்டு அம்பலத்தில் ஆடல் புரிகின்ற அருளரசே! உன்னுடைய தூய திருவடிகளில் என்னுடைய இந்தச் சொன் மாலையை அணிந்தருளுக. எ.று.

எய்ப்பு- தளர்ச்சி. வறுமையாலும் நோய் வகைகளாலும் உளதாகும் தளர்ச்சி. அக்காலத்தே மனத்தின்கண் துன்பமே நிலவுவதால் அது வேண்டிய செல்வத்தால் அல்லது நீங்காமையும், "எய்ப்பிடத்தே நான் இன்புற பெற்ற பெருவைப்பே" என்று கூறுகின்றார். வைப்பு- வைத்த செல்வம். துன்பத்தைப் போக்கி இன்பம் பெறுவித்தலின் அதனை, "பெருவைப்பு" என்று சிறப்பிக்கின்றார். துன்பக் காலத்தில் அது நீக்கும் துணைவரில்லாதபோது மனத்தின்கண் கையறவு தோன்றி வருத்து தலின், அந்நிலையில் தோன்றாத் துணையாய் நின்று துன்பம் துடைக்கும் பெருமானுதல் பற்றிச் சிவனை, "ஏங்கிய போது என்றன்னைத் தாங்கிய நல்துணையே" என்று சொல்லுகின்றார். நல்துணை, காலமும் இடமும் அறிந்து உற்ற துணையை ஒழியாது செய்து உயிர்க்குயிராய் நின்று அறிவு நல்கி இன்பம் செய்தலின் இறைவனை, "அன்புற என்னுட் கலந்தே அண்ணிக்கும் அமுதே" என்று அறிவிக்கின்றார். அண்ணித்தல் - இனித்தல். "எண்ணித் தம்மை நினைந்திருந்தேனுக்கு அண்ணித்திட் டமுதூறும் என் நாவுக்கே" (திருவெண்ணி) என்று பெரியோர் வழங்குவது காண்க. அறிவறியாமையால் உளதாகும் அச்சத்தை ஞான உரைகளால் போக்கி யருளுவது பற்றி, "அச்சமெலாம் தவிர்த்து என்னை ஆட்கொண்ட குருவே" என்று உரைக்கின்றார். இளமைப் பருவத்தி லேயே இறைவன்பால் தமக்கு அயரா அன்பும் ஆர்வமும் உண்டானமை விளங்க, "என் பருவம் குறியாதே எனை மணந்த பதியே" என்று இசைக்கின்றார். விரும்பியன விரும்பியவாறு இறை யருளால் தமக்கு எய்தினமை விளங்க, "இச்சை யுற்றபடி எல்லாம் எனக்கு அருளும் துரையே" என்றும், மெய்யன்பர்களின் துன்பங்களைப் போக்குதற்

பொருட்டே சிவபெருமான் அம்பலத்தில் ஆடுகின்றான் என்ற கருத்து இனிது தோன்ற, "துன்பற மெய்யன்பருக்கே பொது நடஞ் செய் அரசே" என்றும், பெருமானுடைய திருவடிகளை நற்றுள் எனச் சான்றோர் குறித்தலால், "தூய திருவடி" என்றும் துதிக்கின்றார். (3)

4093. ஒசித்தகொடி அனையேற்குக் கிடைத்தபெரும் பற்றே
உள்மயங்கும் போதுமயக் கொழித்தருளும் தெளிவே
பசித்தபொழு ததிர்கிடைத்த பால்சோற்றுத் திரளே
பயந்தபொழு தெல்லாம்என் பயந்தவிர்த்த துரையே
நசித்தவரை எழுப்பிஅருள் நல்கியமா மருந்தே
நான்புணர நாணுகி நண்ணியமெய்ச் சிவமே
கசித்தமனத் தன்பர்தொழப் பொதுநடஞ்செய் அரசே
களித்தெனது சொன்மாலை கழலில்அணிந் தருளே.

உரை : தளர்ந்த கொடி போன்ற எனக்குக் கிடைத்த பெருத்தப் பற்றுக் கோடாக விளங்குபவனே! என் உள்ளம் மயங்கும் பொழுது மயக்கத்தைப் போக்கித் தெளிவு நல்கும் பரம்பொருளே! பசித்த பொழுது எதிர்பாரா வகையில் கிடைத்த பால் பெய்து பிசைந்த சோற்றுத் திரள் போன்றவனே! அச்சத்தால் நான் அஞ்சிய பொழுதெல்லாம் என்னுடைய அச்சத்தை நீக்கி யருளிய பெருமானே! இறந்தவரை உயிர் பெற்றெழ அருள் நல்குகின்ற பெரிய தெய்வாமிருதம் போல்பவனே! நான் கலந்து கொள்ளுமாறு நாணுகி என்னை அடைந்த மெய்ப்பொருளாகிய சிவமே! உருகிய மனத்தை யுடைய அன்பர்கள் கண்டு தொழுமாறு அம்பலத்தில் ஆடல் புரிகின்ற அருளரசே! திருவுள்ளம் உவந்து என் சொன் மாலையைத் திருவடியில் அணிந்தருள்வாயாக. எ.று.

ஒசிந்த என்பது ஒசித்த என வலித்தது. கொழு கொம்பின்றி அலைகின்ற கொடி என்றற்கு, "ஒசித்த கொடி" என வுரைக்கின்றார். உலகில் சிறந்த பற்றுக்கோ டின்றி அலமருகின்ற எனக்கு மெய்ம்மை அமைந்த ஞானப் பற்றுக் கோடாய் விளங்குவது புலப்படச் சிவனை, "எனக்குக் கிடைத்த பெரும் பற்றே" என இசைக்கின்றார். பற்று - பற்றுக்கோடு. வன்மையும் நிலைபேறும் உடைமை தோன்ற, "பெரும் பற்று" என்று புகல்கின்றார். முக்குண வயத்தால் மனம் தெளிவின்றி மயங்கும்போது தெளிவருளும் சிறந்த ஞானமாய்த் திகழ்வது பற்றிப் பரசிவத்தை, "உள் மயங்கும்போது மயக்கு ஒழித்தருளும் தெளிவே" என வுரைக்கின்றார். பசி மிக்க பொழுது உண்பொருளென யாது கிடைப்பினும் ஏற்றுக் கொள்ளும் நிலையில் பாற் சோறு கிடைத்தது போலவும், அச்ச மிகுதியால் செய்வதறியாது மனம் கலங்கும் நிலையில் தோன்றி அச்சத்தைப் போக்குகின்ற தலைவன் போலவும் அருள் புரிவது பற்றிச் சிவபெருமானை, "பால் சோற்றுத் திரளே" என்றும், "என் பயம் தவிர்த்த துரையே" என்றும், பாராட்டுகின்றார். செத்தாரை எழுப்பும் தேவாமிருதம் போன்றத் திருவருள் நல்கிய சிறப்பு விளங்க, "நசித்தவரை எழுப்பி அருள் நல்கிய மாமருந்தே" என்றும், சிவயோகம் பெறுமிடத்து ஆன்மாவும் சிவமாந் தன்மை பெறுவதால், "நான் புணர நாணுகி நண்ணிய

மெய்ச் சிவமே'' என்றும் நவில்கின்றார். ''சிவனைக் கண்ட என் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணமாகிய ஈசன்'' (பொன்வன்) என்று சான்றோர் கூறுவது காண்க. மெய்யன்பர் உள்ளம் மெழுகு போல் இளகிய மென்மை உடைத்தாதலால் அவர்கள் இனிது கண்டு பரவும் வண்ணம் அம்பலத்தில் சிவபெருமான் ஆடல் புரிவது விளங்க, ''கசித்த மனத்தன்பர் தொழப் பொது நடஞ் செய் அரசே'' என்று சொல்லுகின்றார். கசிந்த மனம் என்பது எதுகை நோக்கி மனம் என வந்தது. தமது சிறுமை புலப்படுத்தற்கு வடலூர் வள்ளல், ''எனது சொன்மாலை கழலில் அணிந்தருளே'' என்று வேண்டுகின்றார். கழல்-திருவடி. (4)

4094. மனம்இளைத்து வாடியபோ தென்எதிரே கிடைத்து
வாட்டம்எலாம் தவிர்த்தெனக்கு வாழ்வளித்த நிதியே
சினமுகத்தார் தமைக்கண்டு திகைத்தபொழு தவரைச்
சிரித்தமுகத் தவராக்கி எனக்களித்த சிவமே
அனம்உகைத்தான் அரிமுதலோர் துருவிநிற்க எனக்கே
அடிமுடிகள் காட்டுவித்தே அடிமைகொண்ட பதியே
இனம்எனப்போர் அன்பர்தொழப் பொதுநடஞ்செய் அரசே
என்னுடைய சொன்மாலை யாவும்அணிந் தருளே.

உரை : மனம் சோர்ந்து வாடியபொழுது என் எதிரே தோன்றி என் வாட்டமெலாம் நீக்கி எனக்கு அருள் வாழ்வு நல்கிய அருட் செல்வமே; சினம் பொருந்திய முகத்தை யுடையவர்களைப் பார்த்து நான் அறிவு மயங்கியபோது அவர்களைச் சிரித்த முகமுடையவர்களாக்கி என்னை மகிழ்வித்த சிவபெருமானே! அன்னப் பறவையை ஊர்தியாகக் கொண்டு செலுத்துபவனாகிய பிரமன், திருமால் முதலியோர் துருவிச் சென்று காணு தொழிந்தாராக, எளியனாகிய எனக்குத் தன்னுடைய திருவடியையும் திருமுடியையும் நான் காணக் காட்டி என்னை அடிமை கொண்ட சிவபதியே! அடியார் இனமெனக் கருதி வரும் மெய்யன்பர்கள் தொழுமாறு அம்பலத்தில் ஆடல் புரிகின்ற அருளரசே! என்னுடைய சொன்மாலை யாவையும் ஏற்று அணிந்தருள வேண்டும். எ.று.

உலகியலில் துன்பங்களால் மனம் சோர்ந்து வாடிய காலத்தும் என் எதிரே தோன்றி என் வாட்டத்தைப் போக்கி நான் ஊக்கமுடன் வாழ்வாங்கு வாழுதற்கு வழிவகையும் ஆற்றலும் நல்கிய அருட் செல்வ மாகியவன் சிவபெருமான் என்ற கருத்து விளங்க, ''மனம் இளைத்து வாடிய போது என் எதிரே கிடைத்து வாட்டமெலாம் தவிர்த்து எனக்கு வாழ்வளித்த நிதியே'' என்று கூறுகின்றார். நிதி இல்வழி வாழ்வு வளமாகாது என்பது பற்றி, ''வாழ்வளித்த நிதியே'' என்று குறிக்கின்றார். சினம் கொண்ட முகத்தாரைக் காணுமிடத்துத் தீங்கு செய்வரோ என்றெழும் எண்ணத்தால் அறிவு திகைப்புறுதலால், அவரைக் காணு தொழியாமை நோக்கி அவர்களது சினத்தைத் தணித்து மனத்தைக் குளிர்வித்து உவகையால் அதனை நிறைவித்து என்பால் நகுமுகம் உடையவராய் ஒழுகுவித்த அருள் நலம் தோன்ற, ''சின முகத்தார் தமைக் கண்டு திகைத்தபொழுது அவரைச் சிரித்த முகத்தவராக்கி

எனக்களித்த சிவமே" என்று செப்புகின்றார். அனம் உகைத்தான்- அன்னப் பறவையை ஊர்தியாகவும் கொடியாகவும் உடையவனாதலால் பிரமதேவனை, "அனம் உகைத்தான்" என்று தெரிவிக்கின்றார். பிரமனும், திருமாலும் சிவனுடைய திருமுடியும் திருவடியும் காண்டற் பொருட்டு அன்னமாகவும் பன்றியாகவும் உருக்கொண்டு முறையே மேனோக்கியும் கீழ்நோக்கியும் சென்று முயன்றும் காண மாட்டாராயின வரலாறு புலப்பட, "அனம் உகைத்தான் அரி முதலோர் துருவி நிற்க" எனவும், அவர்கள் காண மாட்டா தொழிந்த திருவடிகளையும் திருமுடிகளையும் தாம் கண்டு பரவுமாறு காட்டி யருளி அதுவே பற்றுக்கோடாகத் தாம் இறைவனுக்கு அடிமையாகிய திறம் தோன்ற, "எனக்கே அடிமுடிகள் காட்டுவித்தே அடிமை கொண்ட பதியே" எனவும் புகழ்கின்றார். காட்டிய என்னும் செய்வினைப் பொருளில் காட்டுவித்து என்பது வந்துளது. மெய்யன்பர்கள் தம்மிற் கூடி நின்று தொழுதற்குக் காரணம் அனைவரும் அன்பரினம் என்ற உணர்வாதலால் அவர்களை, "இனம் எனப் பேரன்பர் தொழ" என்று இயம்புகின்றார். தாம் பாடுகின்ற சொன் மாலைகள் அனைத்தும் சிவனுக்கே உரியவையாதல் புலப்பட, "என்னுடைய சொன் மாலை யாவும் அணிந்தருளே" என்று இசைக்கின்றார். (5)

4095. கங்குலிலே வருந்தியஎன் வருத்தம்எலாம் தவிர்த்தே
காலையிலே என்உளத்தே கிடைத்தபெருங் களிப்பே
செங்குவளை மாலையொடு மல்லிகைப்பூ மாலை
சேர்த்தணிந்தென் தனைமணந்த தெய்வமண வாளா
எங்கும்ஒளி மயமாகி நின்றநிலை காட்டி
என்அகத்தும் புறத்தும்நிறைந் திலங்கியமெய்ப் பொருளே
துங்கமுறத் திருப்பொதுவில் திருநடஞ்செய் அரசே
சொன்மாலை சூட்டுகின்றேன் தோளில்அணிந் தருளே.

உரை : இரவுப் பொழுதில் பலவற்றை நினைந்து வருந்திய என் வருத்தங்கள் எல்லாம் போக்கிக் காலைப் பொழுதில் என் மனத்தின்கண் மகிழ்ச்சியைத் தோற்றுவித்த பெருமானே! செங்குவளை மாலையும் மல்லிகைப் பூமாலையும் சேர அணிந்து என்னை மணந்து கொண்ட தெய்வ மணவாளனே! எங்கும் ஒளி மயமாய் நிற்கின்ற நினது நிலைமையை அடியேன் காணக் காட்டி என்னுடைய உள்ளும் புறமும் நிறைந்து விளங்குகின்ற மெய்ப் பொருளாகிய சிவனே! உயர்வு பொருந்த அழகிய அம்பலத்தின்கண் திருக்கூத்தாடுகின்ற அருளரசே! நான் சொல்லுகின்ற சொன் மாலையை நின்னுடைய தோளில் அணிந்து கொண்டு எனக்கு அருள் செய்க. எ.று.

உடம்பில் உளவாகும் நோய்கள் இராக் காலத்தில் மிக்குத் தோன்றி வருத்துவதும், காலைப் பொழுதில் அவற்றின் வருத்தங்கள் மறைந்து விடுவதும் இயல்பாதலால், "கங்குலிலே வருத்திய என் வருத்த மெலாம் தவிர்த்தே காலையிலே என் உளத்தே கிடைத்த பெருங் களிப்பே" என்று கூறுகின்றார். களிப்பு - உவகை. களிப்புத் தருகின்ற சிவபெருமானை, "களிப்பே" என மொழிகின்றார். உவகையும் வருத்தமும் உள்ளத்து

உணர்வு வகைகளாதலால், "என் உளத்தே" எனக் குறித்துரைக்கின்றார். குவளை மாலையையும் மல்லிகை மாலையையும் சேர்த்து எனக்கு அணிந்து மகிழ்ந்தாயாதலின் என்னுடைய சொன் மாலையை நீ உனது தோளில் அணிந்தருளுவாயாக என வேண்டுகின்றார். ஞான ஒளி யுருவினதாதலால் அவ்வுருவைத் தான் கண்ட திறம் விளங்க, "எங்கும் ஒளி மயமாகி நின்ற நிலை காட்டி" எனவும், அவ்வொளியைத் தம்முடைய சிந்திக்கும் மனத்தினும் புறத்தே காண்கின்ற கண்ணினும் தம்மைக் காணச் செய்தமை புலப்படுத்தற்கு, "என் அகத்தும் புறத்தும் நிறைந்திலங்கிய மெய்ப்பொருளே" எனவும் இயம்புகின்றார். துங்கம் - உயர்வு. (6)

4096. **கரைந்துவிடா தென்னுடைய நாவகத்தே இருந்து**
**கனத்தசுவை தருகின்ற கற்கண்டே கனிவாய்**
**விரைந்துவந்தென் துன்பமெலாம் தவிர்த்தஅருள் அமுதே**
**மெய்அருளே மெய்யாகி விளங்குகின்ற விளக்கே**
**திரைந்தஉடல் விரைந்துடனே பொன்உடம்பே ஆகித்**
**திகழ்ந்தழியா தோங்கஅருள் சித்தேமெய்ச் சத்தே**
**வரைந்தென்னை மணம்புரிந்து பொதுநடஞ்செய் அரசே**
**மகிழ்வொடுநான் புனைந்திடுஞ்சொன் மாலைஅணிந் தருளே.**

**உரை :** பெய்யப்பட்ட நாவின்கண் ஊறும் நீரால் கரைந்தொழியாது நாவிடத்தேயே நின்று மிக்க பெரும் இனிப்பைத் தருகின்ற கற்கண்டு போல்பவனே! உள்ளக் கனிவோடு என்பால் விரைந்து வந்து என் துன்ப மெல்லாவற்றையும் துடைத் தருளிய அருளுருவாகிய அமுதமே! மெய்ம்மையான அருட் செல்வமே! மெய்ப்பொருளாய் விளங்குகின்ற ஞான விளக்காகியவனே! தோல் சுருங்கிய எனது உடல் விரைவில் பொன்னிற உடம்பாய் ஒளிர்ந்து, ஒளிர்வதின்றி ஓங்குமாறு அருள் புரிந்த சித்துப் பொருளாகிய மெய்ம்மை சான்ற சத்துப் பொருளே! பலருள்ளும் என்னை வரைந்து கொண்டு ஞான மணம் புரிந்து கொண்ட அம்பலத்தில் ஆடும் அருளரசே! மிக்க மகிழ்வோடு நான் தொடுக்கின்ற இச்சொன் மாலையை அணிந்தருளுக. எ.று.

நாவின்கண் வைத்த கற்கண்டு வாயில் ஊறும் நீரால் விரைந்து கரைந்து போவது போலின்றி நாவிடத்தேயே நிலைபெற நின்று மிக்க இனிப்புச் சுவையைத் தருகின்றமை விளங்கச் சிவனை, "கரைந்து விடாது என்னுடைய நாவகத்தே இருந்து கனத்த சுவை தருகின்ற கற்கண்டே" என்றும், அருட் பெருக்கால் உள்ளம் கனிந்து நொடிப் பொழுதும் தாமதமின்றித் தம்பால் வந்து துன்பத்தைப் போக்கி ஞான இன்பத்தை நல்கியது பற்றிச் சிவபெருமானை, "கனிவாய் விரைந்து வந்து என் துன்பமெல்லாம் தவிர்த்த அருளமுதே" என்றும் வடலூர் வள்ளல் போற்றுகின்றார். தாக்குகின்ற துன்பத்தைத் தாங்க மாட்டாத என் மென்மை கருதி விரைந்து போந்தமை பற்றி, "கனிவாய் விரைந்து வந்து" என்று கட்டுரைக்கின்றார். கனிவு - அருள் மிகுதியால் இரங்குகின்ற மனநிலை. அருவப் பொருளாயினும் நின் திருவருள் சிவன் வடிவில் காணத் தோன்றுவது பற்றி, "மெய்யருளே" என்று

புகழ்கின்றார். பொய்ப் பொருளுமாகாது புனைந்துரையுமாகாது மெய்ம்மையாகத் தோன்றி ஞான ஒளி நல்குவது பற்றிச் சிவபெருமானை, "மெய்யாகி விளங்குகின்ற விளக்கே" என்று புகல்கின்றார். திரைந்த உடல் என்பது தோல் சுருங்கிய உடம்பு. திருவருள் ஞானம் கைவரப் பெற்றார்க்கு மேனி பொன்னிற மடைதல் பற்றி, "திரைந்த உடல் விரைந்து உடனே பொன்னிற உடம்பே யாகி" என்றும், அவ்வுடம்பு தானும் பொன்னிற ஒளி கொண்டு அழிவின்றித் திருவருள் ஞானமாய் ஓங்குதலால், "பொன் னுடம்பே ஆகித் திகழ்வது அழியா" என்றும், அது திருவருள் ஞான உருவாகிய சித்துப் பொருளாகவும் எக்காலத்தும் அழிவில்லாத ஞான மெய்ப்பொருளாதலின், "அருள் சித்தே மெய்ச் சத்தே" என்றும் சிறப்பிக்கின்றார். உலகிற் அன்பர்கள் பலர் இருக்கத் தமக்கு எய்திய திருவருள் நலத்தை வியந்துரைப்பாராய், "வரைந்து என்னை மணம் புரிந்து பொது நடஞ்செய் அரசே" எனக் கூறுகின்றார். (7)

4097. **கதிக்குவழி காட்டுகின்ற கண்ணேஎன் கண்ணில்**
**கலந்தமணி யேமணியில் கலந்தகதிர் ஒளியே**
**விதிக்கும்உல குயிர்க்குயிராய் விளங்குகின்ற சிவமே**
**மெய்யுணர்ந்தோர் கையகத்தே விளங்கியதீங் கனியே**
**மதிக்குமதிக் கப்புறம்போய் வயங்குதனி நிலையே**
**மறைமுடிஆ கமமுடிமேல்வயங்கும்இன்ப நிறைவே**
**துதிக்கும்அன்பர் தொழப்பொதுவில் நடம்புரியும் அரசே**
**சொன்மாலை சூட்டுகின்றேன் தோளில்அணிந் தருளே.**

உரை : மேல் கதி செல்வதற்கு வேண்டும் நன்னெறியைக் காட்டுகின்ற கண் போன்றவனே! என் கண்ணில் கலந்திருக்கின்ற கருமணியாகவும், மணியில் கலந்து ஒளிர்கின்ற ஒளியாகவும் இருப்பவனே! படைக்கப்படுகின்ற உலகுகளில் வாழும் உயிர்கட்கெல்லாம் உயிராய் விளங்குகின்ற சிவ பரம்பொருளே! மெய்ப்பொருள் உணர்ந்த ஞானிகளிடத்தே அகங்கையில் வைத்த நல்ல இனிய கனி போல்பவனே! அறிவு எல்லைக்கு அப்பாலாய் விளங்குகின்ற தனிப் பெரும் ஞான நிலையமே! வேதாகமங்களின் உச்சியில் விளங்கும் இன்பம் நிறைந்த பரம்பொருளே! ஆடித் துதிக்கும் அன்பர்கள் தொழுது நிற்க அம்பலத்தில் ஆடல் புரிகின்ற அருளரசே! நான் சூட்டுகின்ற சொன் மாலையைத் தோளில் அணிந்தருளுக. எ.று.

மேற்கதி பெற முயல்வார்க்கு நெறி காட்டுவது ஞானக் கண்ணாதலின் அதனை, "கதிக்கு வழி காட்டுகின்ற கண்" என்றும், கண்ணாகிய ஞானமே சிவனுக்கு வடிவமாதலின், "கண்ணே" என்றும் கூறுகின்றார். உலகியற் பொருளைக் காட்டுவது ஊனக் கண்ணாதலின் அதனைச் சிறப்பிக்கும் கருமணியை, "என் கண்ணிற் கலந்த மணி" என்றும், மணியே பொருள்களைக் காண்பதற்கு ஒளி கொண்டு விளங்குவதால், "மணியில் கலந்த கதிரொளி" என்றும் உரைக்கின்றார். கண்ணுக்குச் சிறப்புத் தருவது கருமணியும், மணிக்குச் சிறப்பளிப்பது அதனுட் கலந்திருக்கும் ஒளியாதலின் மூன்றையும் சேரக் கூறுகின்றார்.

விதித்தல் - படைத்தல். உயிர்கள் வாழ்தற்பொருட்டு உலகுகள் படைக்கப்படுதலின், "விதிக்கும் உலகு" என விதந்துரைக்கின்றார். உயிர்க்குயிராய் நின்று ஞானம் பெறுவித்தலின், "உயிர்க்குயிராய் விளங்குகின்ற சிவமே" என விளம்புகின்றார். மெய்யுணர்ந்தோர் - ஞானிகள். அவர்கட்கு ஐயம் திரிபின்றுகத் தெளிய விளங்குதலின் பரம் பொருளை, "மெய்யுணர்ந்தோர் கையகத்தே விளங்கிய தீங்கனி" என இயம்புகின்றார். கையகத்தே விளங்கிய தீங்கனி - அங்கையில் நெல்லிக் கனி என்பது வழக்கு. மதிக்கும் மதி - அறியும் அறிவு. இயற்கையும் செயற்கையுமாகிய உயிரறிவு எல்லைக்கு அப்பால் மெய்ஞ்ஞான நிலையமாய் மேம்படுவது பற்றிச் சிவத்தை, "மதிக்கு மதிக்கு அப்புறம் போய் வயங்கு தனி நிலை" என்று தெரிவிக்கின்றார். மறைமுடியை வேதாந்தம் என்றும், ஆகம முடியைச் சித்தாந்தம் என்றும், இரண்டாலும் உண்மை யுணர்வார்க்கு இன்பமயமாய் விளங்குதலின் சிவ பரம்பொருளை, "மறைமுடி ஆகம முடி மேல் வயங்கும் இன்ப நிறைவே" என்று இசைக்கின்றார். சிவானந்தம் குறைவற நிறைந்த இயல்பின தாதலின் "இன்ப நிறைவே" என எடுத்து மொழிகின்றார். அம்பலத்தின் கண் இறைவனது ஆடலைக் காணுகின்ற மெய்யன்பர்கள் கைகளைக் குவித்து வாயாரத் துதித்துத் தொழுதலின், "துதிக்கும் அன்பர் தொழப் பொதுவில் நடம் புரியும் அரசே" என்று சொல்லுகின்றார். (8)

**4098.** **அண்டவள வெவ்வளவோ அவ்வளவும் அவற்றில்**
**அமைந்தசரா சரஅளவெவ் வளவோஅவ் வளவும்**
**கண்டதுவாய் ஆங்கவைகள் தனித்தனியே அகத்தும்**
**காண்புறத்தும் அகப்புறத்தும் புறப்புறத்தும் விளங்க**
**விண்டகுபேர் அருட்சோதிப் பெருவெளிக்கு நடுவே**
**விளங்கிஒரு பெருங்கருணைக் கொடிநாட்டி அருளாம்**
**தண்டகும்ஓர் தனிச்செங்கோல் நடத்திமன்றில் நடிக்கும்**
**தனிஅரசே என்மாலை தாளில்அணிந் தருளே.**

உரை : அண்டங்கள் எவ்வளவோ அத்தனையும், அவற்றிலுள்ள சராசரங்கள் எத்தனையோ அத்தனையும் தோற்றுவித்த பெரும் பொருளாய், அவை ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே அகத்தும், புறத்தும், அகப்புறத்தும், புறப்புறத்தும் விளக்கமுற நின்று மேலுள்ள உலகங்களுக்கெல்லாம் மேலாய் ஒளிரும் அருட் சோதிப் பெருவெளி யாகிய ஞானவெளியின் நடுவே யிருந்து ஒப்பற்ற பெரிய கருணையாகிய கொடியை உயர்த்தித் திருவருளாகிய குளிர்ந்த ஒப்பற்ற செங்கோல் நடத்தி அம்பலத்தில் நடிக்கின்ற ஒப்பற்ற அருளரசே! அடியேனுடைய சொன் மாலையை நின்னுடைய திருவடியில் அணிந்தருளுக. எ.று.

அண்டங்கள் எண்ணிறந்தனவாதலால் அவை யெல்லாம் அடங்க, "அண்ட அளவு எவ்வளவோ அவ்வளவும்" என்றும், அண்டங்கள் தோறும் சரம் அசரம் என்னும் இருவகைப்பட்ட பொருள்கள் எவ்வளவோ அவ்வளவும் தோற்றுவிக்கும் பரம்பொருளாதலால் அதனை, "அவ்வளவும் கண்டதுவாய்" என்றும் குறிக்கின்றார். சரம் - இயங்கு திணை. அசரம் - நிலைத் திணை என வழங்கும். ஒவ்வொன்றுக்கும் அகம்,

புறம், அகப்புறம், புறப்புறம் என நால்வகைச் சூழ்நிலை உண்மையின் அற்நிலைகளிலும் சிவம் நிலவுதல் பற்றி, "அகத்தும் காண்புறத்தும் அகப்புறத்தும் புறப்புறத்தும் விளங்க" என்று உரைக்கின்றார். இவ்வண்ட சராசரங்களின் நால்வகைச் சூழ்நிலைக்கும் அப்பால் விளங்குவது சிவபோகப் பெருவெளியாதலால் அதனை, "விண்டகு பேரருட் சோதிப் பெருவெளி" என விளக்குகின்றார். பெருவெளியில் நிலவுவது திருவருள் ஞான ஒளியாதல் பற்றி, "அருட் சோதிப் பெருவெளி" எனச் சிறப்பிக்கின்றார். இப்பெரிய சிவஞானப் பெருவெளியில் நடுவே நிறுத்தப்பட்ட கொடி நலத்தை, "பெருங் கருணைக் கொடி" என்று புகழ்கின்றார். அக் கொடியை உயர்த்தி அருட் செங்கோல் நடாத்தும் அருமை விளங்க, "பெருங் கருணைக் கொடி நாட்டி" என்றும், அக்கொடி நிழலில் இருந்து அருளரசு புரிவது பற்றிச் சிவ பெருமானை, "அருளாம் தண்டகும் ஓர் தனிச் செங்கோல்" நடத்துகிறார் என உரைக்கின்றார். அண்ட வெளிக்கெல்லாம் அப்புறத்ததாய் அருட் சோதிப் பெருவெளிக்கு நடுவினதாய்ப் பெருங் கருணைக் கொடி நாட்டி அருளரசு புரியும் சிவமே மன்றில் திருக்கூத்தாடுகின்றது என்றற்கு. "தனிச் செங்கோல் நடத்தி மன்றில் நடிக்கும் தனியரசு" என்று போற்றுகின்றார். (9)

4099. நல்லார்சொல் யோகாந்தப் பதிகள்பல கோடி
நாட்டியதோர் போதாந்தப் பதிகள்பல கோடி
வல்லார்சொல் கலாந்தநிலைப் பதிகள்பல கோடி
வழுத்தும்ஒரு நாதாந்தப் பதிகள்பல கோடி
இல்லார்ந்த வேதாந்தப் பதிகள்பல கோடி
இலங்குகின்ற சித்தாந்தப் பதிகள்பல கோடி
எல்லாம்பேர் அருட்சோதித் தனிச்செங்கோல் நடத்தும்
என்அரசே என்மாலை இனிதுபுனைந் தருளே.

**உரை :** யோக நூல் வல்லவர்கள் சொல்லுகின்ற யோகாந்தத்தில் பல கோடித் தலங்கள் உள்ளன; உண்டென நாட்டப்பட்டு உரைக்கும் போதாந்தத்தில் பல கோடிப் பதிகள் உள்ளன: கலை வல்லுநர்கள் கண்ட கலாந்தத்தில் பல கோடிப் பதிகள் உள்ளன; இவ்வாறே சொல்லப்படும் நாதாந்தத்தில் பல கோடிப் பதிகள் உள்ளன; இல்லங்களில் ஓதப்படும் வேதாந்த நூல்களில் பல கோடிப் பதிகள் உள்ளன; விளங்குகின்ற சித்தாந்த நூல்களில் பல கோடிப் பதிகள் கூறப்படுகின்றன; இவை யெல்லாவற்றிலும் அருட் சோதியாகிய தனியாட்சி நடத்துகின்ற அருளரசே என்னுடைய சொன் மாலையை இன்பத்துடன் ஏற்றருளுக. எ.று.

யோகாந்தம், போதாந்தம், கலாந்தம், நாதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என வரும் அந்தங்கள் ஆறனுள்ளும் எண்ணிறந்த பதிகள் உரைக்கப்படுகின்றன. பதிகள் - ஈண்டு உலகுகள் மேற்று. இப்பதிகள் தோறும் எண்ணிறந்த சராசரங்கள் வாழுகின்றன. இவற்றுக்கெல்லாம் அருள் ஞானம் வழங்கி அரசு புரிகின்றான் சிவபெருமான் என்ற கருத்து விளங்க, "எல்லாம் பேரருட் சோதித் தனிச் செங்கோல் நடத்தும் என்

அரசே" என்று இசைக்கின்றார். யோக நூல்களைப் பயின்று செயல் வகை சிறப்புற்ற பெரியோர்களை நல்லார் என்று கூறுகின்றார். போதாந்தம் என்பது புனைந்துரை யன்று பொருளுடை என அறிஞர்களால் நாட்டப்பட்டமை புலப்பட, "நாட்டியதோர் போதாந்தம்" என்று நவில்கின்றார். ஆகமங்களில் நுணுக்கமாய்க் காட்டப்படுவதாகலின் கலாந்த நிலையை, "வல்லார் சொல் கலாந்தம்" என வழங்குகின்றார். வேத நூல்கள் உலகியல் வாழ்க்கைக்குரிய அறங்களை உரைப்பனவாதலால் அவற்றை, "இல்லார்ந்த வேதாந்தம்" எனவும், சித்தாந்த நூல்களில் ஆங்காங்கு விளக்கப்படுவது பற்றி, "இலங்குகின்ற சித்தாந்தம்" எனவும் சிறப்பிக்கின்றார். (10)

**4100. நாட்டியதோர் சுத்தபரா சத்திஅண்டம் முதலா**
**ஞானசக்தி அண்டமது கடையாக இவற்றுள்**
**ஈட்டியபற் பலசத்தி சத்தர்அண்டப் பகுதி**
**எத்தனையோ கோடிகளும் தன்நிழற்கீழ் விளங்கச்**
**சூட்டியபொன் முடிஇலங்கச் சமரசமெய்ஞ் ஞானச்**
**சுத்தசிவ சன்மார்க்கப் பெருநிலையில் அமர்ந்தே**
**நீட்டியபேர் அருட்சோதித் தனிச்செங்கோல் நடத்தும்**
**நீதிநடத் தரசேஎன் நெடுஞ்சொல்அணிந் தருளே.**

**உரை :** சுத்த பராசத்தி அண்டம் முதல் ஞான சத்தி அண்டம் ஈறுகக் கற்பித்துச் சொல்லப்படுகின்ற அண்டங்களாகிய இவற்றுள் அடங்கிய பற்பல சத்தி, சத்திமான்களின் அண்டப் பகுதிகள் எத்தனையோ கோடி உள்ளன; அவை யனைத்தும் தன் திருவடிக் கீழ் அடங்கி விளக்கமுறவும், தலையில் அணிந்த பொன்முடி விளங்கச் சமரசமாகிய மெய்ம்மை சான்ற ஞான நெறியாகிய சுத்த சிவசன்மார்க்கம் காட்டுகின்ற பெருமை பொருந்திய நிலையில் இருந்து எங்கணும் பரந்த அருட் சோதியை யுடைய செங்கோலைச் செலுத்தும் நீதி சான்ற நடம் புரிகின்ற அருளரசாகிய பெருமானே! எளியேன் தொடுத்தணியும் சொன்மாலையை ஏற்றருளுக. எ.று.

பராசத்தி அண்டம் முதல் ஞான சத்தி அண்டம் ஈறுக வுள்ள அண்டங்கள் அத்தனையும் அவற்றை உள்ளடக்கிய பலவாகிய அண்டங்களையும், நூலறிவும் நுண்ணறிவும் ஒருங்கு பெற்ற சான்றோர்களால் மனத்தால் கண்டு நாட்டப் பட்டவையாதலின் அவற்றை, "நாட்டியதோர் அண்டம்" என நவில்கின்றார். முதலும் ஈறுமாகிய அண்டங்களுக் கிடையே எண்ணிறந்த அண்டங்கள் இருப்பது புலப்பட, "அண்டப் பகுதி எத்தனையோ கோடிகள்" எனவும், அவை சத்திகளுக் குரியவுமாய், அச்சத்திகளை யுடைய சத்திமான்களுக் குரியவுமாய்ச் சத்தி சத்தர்களும் எண்ணிறந்தனராய் இருத்தலின் அவற்றை, "ஈட்டிய பற்பல சத்தி அண்டப் பகுதி" எனவும் குறிக்கின்றார். இவ்வண்டப் பகுதிகள் அனைத்திற்கும் மேலாய்ப் பரசிவம் விளங்குவதால் அவற்றை, "தன் குடை நிழற் கீழ் விளங்க" என்று இயம்புகின்றார். அண்டப் பகுதிகள் எல்லாவற்றிற்கும் மேலாய்ப் பொன்முடி அணிந்து பரசிவம் வீற்றிருப்பது விளங்க, "சூட்டிய பொன்முடி இலங்க" என்று சொல்லு

கின்றார். அண்டத்திற் கெல்லாம் அதீதமாய் ஒளி யுற்று விளங்கும் பரம்பொருளின் உண்மைப் பாங்கினை, "அண்டமா இருளூடு கடந்து உம்பர் உண்டு போலும் ஓர் ஒண்சுடர் அச்சுடர் கண்டிங் காரறிவார் அறிவாரெலாம் வெண்டிங்கக்கண்ணி வேறு என் என்பரே" (சித்தத்) என்று நாவுக்கரசர் உரைப்பது காண்க. சிவ சன்மார்க்கம் என்பது தூய உண்மை ஞான நெறியாதலால் அதனை இன்னார்க்கு உரியதன்று எனப் பேதிக்கப் படாமல் உரிய ரல்லாதார் பிறரில்லை என்று நிலவும் இயல்பிற் றென்பது விளங்க, "சமரச மெய்ஞ்ஞான சுத்த சிவசன்மார்க்கம்" என்று சிறப்பிக்கின்றார். அண்டாதீதப் பெருநிலையில் பரசிவம் வீற்றிருக்கும் உயர்நிலை இதுவாம் என்றற்கு, பெருநிலை என்று குறிப்பிட்டு அதன்கண் இருந்து தனது திருவருள் ஞான ஒளியினை அண்டங்களனைத்திலும் பரப்பி வீற்றிருந்து அருள் புரிந்தொழுகும் தன்மையை விளக்குதற்கு, "பெருநிலையில் அமர்ந்தே நீட்டிய பேரருட் சோதித் தனிச் செங்கோல் நடத்தும் நீதி நடத்தரசே" என்று புகழ்கின்றார். அருட் பெருஞ் சோதி பரவாத இடம் யாண்டும் இல்லாமை விளக்குதற்கு, "நீட்டியதோர் அருட் சோதி" எனவும், நீதியே தனக்கு உருவாக அமைந்து திருக்கூத்தாடுவது பற்றிச் சிவனை, "நீதி நடத்தரசே" எனவும் சொல்லிப் பரவுகின்றார். "நீதி பலவும் தன்ன உருவாம் என மிகுத்ததவன்" (வைகா) என ஞானசம்பந்தர் உரைப்பது காண்க. (11)

4101. **தன்பெருமை தான்அறியாத் தன்மையனே எனது**
**தனித்தலைவா என்னுயிர்க்குள் இனித்ததனிச் சுவையே**
**நின்பெருமை நான்அறியேன் நான்மட்டோ அறியேன்**
**நெடுமால்நான் முகன்முதலா மூர்த்திகளும் அறியார்**
**அன்புறும்ஆ கமமறைகள் அறியாவே எனினும்**
**அவரும்அவை களும்சிலசொல் அணிகின்றார் நினக்கே**
**என்பருவம் குறியாதே எனையாண்ட அரசே**
**யானும்அவர் போல்அணிகின் றேன்அணிந்திங் கருளே.**

**உரை:** தன்னுடைய பெருமை இத்துணையது எனத் தானே அறியாத தன்மையை யுடையவனும், என்னுடைய தனித் தலைவனும், என் உயிர்க்குள் இருந்து இனிமை மிக்க ஒப்பற்ற சுவையாகிய சிவபெருமானே! நின்னுடைய பெருமையை நான் அறிய மாட்டேனாக, அறியாதவர்களுள் நான் ஒருவன்தான் அறியாதவன் என எண்ணற்க, நானேயன்றித் திருமால், பிரமன் முதலாகிய மூர்த்திகளும் அறிகிலர்; நின்பால் அன்பு உண்டு பண்ணும் ஆகமங்களும் வேதங்களும் அறிய மாட்டா வென்றாலும் அம்மூர்த்திகளும் அந்த நூல்களும் சில சொல் மாலைகளை அணிதலால் என்னுடைய பக்குவம் அறியாமல் ஆண்டு கொண்ட அருளரசனாகிய நினக்கு யானும் அம்மூர்த்திகளைப் போலவும், ஆகமாதி நூல்களைப் போலவும் சொன் மாலை அணிகின்றேனாதலால் நீ என்னை ஏற்றருளுக. எ.று.

"தம் பெருமை தானறியாத் தன்மையன்" (சாழல்) என்று சான்றோர் கூறுதலால் வடலூர் வள்ளலும், "தன் பெருமை தானறியாத் தன்மையன்" என்று சிவனைக் கூறுகின்றார். தனித் தலைவன்- ஒப்பாரும்

மிக்காரும் இல்லாத ஒரு தலைவன். உயிர்க்குள் உயிராய் இருந்து உணர்வுக்குப் புத்தின்பம் நல்குதலால், "என்னுயிர்க்குள் இனித்த தனிச் சுவையே" என்று இயம்புகின்றார். சுட்டியிருந்து எல்லாவற்றையும் எஞ்சாமல் முழுதும் அறியும் முதல்வனை நோக்கச் சிற்றறிவும் சிறு தொழிலும் உடைய மக்களுயிரால் அறிதற் கரிதலால், "நின் பெருமை நானறியேன்" எனவும், அறியாமைக்குரிய சிறுமை தன்னிடத்தே யன்றித் தேவ தேவர்கள்பாலும், அவர்கள் விரும்பி ஓதிப் பரவும் வேதாகமங்களின்பாலும் உளது என வெளிப்படுத்தற்கு, "நான் மட்டோ அறியேன் நெடுமால் நான்முகன் முதலா மூர்த்திகளும் அறியார் அன்புறும் ஆகம மறைகள் அறியாவே" எனவும் இயம்புகின்றார். ஆகமாதி நூல்கள் பயில்வோர் உள்ளத்தில் இறைவன்பால் அன்பு தோற்றுவிப்பதில் தலைசிறந்தனவாதலின், "அன்புறும் ஆகம மறைகள்" என உரைக்கின்றார். மிக்க இளம் பருவத்தே தமக்குச் சிவனிடத்தே ஆருக் காதல் உண்டாகினமை தெரிவிப்பாராய் வடலூர் வள்ளல், "என்பருவம் குறியாதே எனை ஆண்ட அரசே" எனக் குறிக்கின்றார். மூர்த்திகளாகிய தேவர்களும் அவர் பயின்று ஓதும் ஆகமங்களும் வேதங்களும் சிவனை முழுதறிந்து மொழியும் முதுக்குறை யுடையன அல்லவாயினும், நின் புகழை எடுத்து மொழிதலின் நானும் இச்சொன் மாலையை அணிகின்றேன்; ஏற்றருள் என்பது கருத்து. (12

4102. உண்ணஉண்ணத் தெவிட்டாதே தித்தித்தென் உடம்பொ
டுயிர்உணர்வும் கலந்துகலந் துள்ளகத்தும் புறத்தும்
தண்ணியவண் ணம்பரவப் பொங்கிநிறைந் தாங்கே
ததும்பிஎன்றன் மயம்எல்லாம் தன்மயமே ஆக்கி
எண்ணியஎன் எண்ணம்எலாம் எய்தஒளி வழங்கி
இலங்குகின்ற பேர்அருளாம் இன்னமுதத் திரளே
புண்ணியமே என்பெரிய பொருளேஎன் அரசே
புன்மொழிஎன் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே.

உரை : உள்ளுந்தோறும் தெவிட்டுதல் இல்லாமல் தித்தித்து என் உடம்பிலும் உயிருணர்விலும் பன்முறையும் கலத்து என் உள்ளும் புறமும் நின்னுடைய குளிர்ந்த அருள்வண்ணம் பரவுமாறு பொங்கி நிறைந்து மேலே வடிந்து என்மயமனைத்தும் தன்மயமாக்கி எண்ணிய என் எண்ணமெல்லாம் எண்ணியவாறு எனக்கு உண்டாகுமாறு ஒளி நல்கி விளங்குகின்ற பெருமை பொருந்திய திருவருளாகிய இனிய அமுதத் திரளாகியவனே! நான் செய்த புண்ணியமே! எனக்கு அமைந்த பெரிய பொருளே! என்னுடைய அருளரசே! என் மொழிகளைப் புன்மொழி என்று புறக்கணிக்காமல் ஏற்று இன்புற்றருளுக. எ.று.

தெவிட்டுதல்- வேண்டா என விலக்கும் நிலை உண்டாதல். உண்ணுந்தோறும் உண்ணுந்தோறும் மேலும் உண்டற்கே விழைவு தோற்றுவிப்பது பற்றி, "உண்ணவுண்ணத் தெவிட்டாதே தித்தித்து" என்றும், உடம்புள்ளும் உயிருணர்விலும் மாறி மாறிக் கலந்து கொண்டமை பற்றி, "உடம்போடு உயிருணர்வும் கலந்து கலந்து" என்றும், உடம்பின் உள்ளும் புறத்தும் குளிர்ந்த அருள்வண்ணம் பரவும்

படி உள்ளுக்குள்ளே பொங்கி நிறைந்து வழிந்தமை தோன்ற, "உள்ள கத்தும் புறத்தும் தண்ணியவண்ணம் பரவப் பொங்கி நிறைந்து ஆங்கே ததும்பி" என்றும், இங்ஙனம் பொங்கி நிறைந்து ததும்பிய அருளமுதம் உடம்பையும் உயிரையும் சிவமயமாக்கிய தன்மை புலப்பட, "என்றன் மயமெல்லாம் தன்மயமே யாக்கி" என்றும், அதனுல் தாம் பெற்ற பயன் இதுவென உரைப்பாராய், "எண்ணிய என் எண்ணமெல்லாம் எய்த" என்றும் இயம்புகின்ருர். இதனுல் தமக்கு விழைந்த நலத்தை, "ஒளி வழங்கி" என்று கூறுகின்ருர். இங்ஙனம் ஞான வொளி நல்கிய அருள் நலத்தை, "இலங்குகின்ற பேரருளாம் இன்னமுதே" என ஓதுகின்ருர். புண்ணியம் - புண்ணியத்தின் விழைவு. பெரிய பொருள் - பிரமப் பொருள் என உபநிடதங்களால் உரைக்கப்படுவது. புன்மொழி-இனிய பொருளில் லாத வெறுமைச் சொல். இறைவனுடைய திருவருளாகிய அமுதம் உடம் பிலும் உயிருணர்விலும் கலந்து நிறைந்து தமது சீவத் தன்மையைப் போக்கிச் சிவத் தன்மையை நல்கிற்று என்பது கருத்து. (13)

4103. நாட்டார்கள் சூழ்ந்துமதித் திடமணிமே டையிலே
நடுஇருக்க என்றனையே நாட்டியபேர் இறைவா
பாட்டாளர் பாடுதொறும் பரிசளிக்கும் துரையே
பண்ணுமறைப் பாட்டேமெய்ப் பாட்டினது பயனே
கூட்டாளா சிவகாமக் கொடிக்கிசைந்த கொழுநா
கோவேஎன் கணவாஎன் குரவாஎன் குணவா
நீட்டாளர் புகழ்ந்தேத்த மணிமன்றில் நடிக்கும்
நீதிநடத் தரசேஎன் நெடுமொழிகொண் டருளே.

உரை: நாட்டு மக்கள் கண்டு என்னைச் சூழவிருந்து நன்கு மதிக்கும்படியாக மணிகள் இழைத்த மேடையின் நடுவே உயர்ந்திருக்கு மாறு என்னை உயர்த்தி அருளிய இறைவனே! பாடுகின்ற புலவர்கள் பாடுந்தோறும் அவர்களுக்கு நல்ல பரிசுகளை நல்கும் தலைவனே! ஓது கின்ற வேதங்களின் பாட்டாக இருப்பவனே! மெய்ம்மை சான்ற பாட்டுக் களால் எய்தும் இன்பப் பயனாக இருப்பவனே! அன்பர் கூட்டத்தை ஆள்பவனே! சிவகாமக் கொடியாகிய உமாதேவிக்குப் பொருந்திய கணவனே! எங்கள் கோவே! எனக்குக் கண் போன்றவனே! என்னைப் பெற்றவனே! எனக்கு இனிய குணங்களை யுடையவனே! நெடிய கல்வி வல்ல சான்ருேர் புகழ்ந்து துதிக்க மணி யிழைத்த அம்பலத்திலே நடித்தருளும் அருளும் நிதியும் உடைய அரசனே! எனது நெடிய இப் பாட்டை ஏற்றுக் கொண்டருளுக. எ.று.

நாட்டில் சிறப்புடன் வாழ்கின்ற பெருமக்களை நாட்டார்கள் என்று கூறுகின்ருர். கல்வி அறிவால் உயர்ந்தமை விளங்க, "நாட்டார்கள் மதித்திட மேடையிலே நடுவிருக்க நாட்டிய பேர் இறைவா" என்று நவில்கின்ருர். மேடையிலே நடுவிருத்தலாவது உயர்ந்தோர் அவையில் முந்தி யிருத்தல். பண் சுமந்த பாடல்களைப் பாடுவோர்க்குப் பரிசளித்து ஊக்கும் பரமன் என்பது பற்றி, "பாட்டாளர் பாடுதொறும் பரிசளிக்கும் துரையே" என்றும், வேத மந்திரங்களாகிய பாட்டும், பாட்டின் பொருளும், அவற்ருல் விளையும் பயனும் பரம்பொருளின் உரு வென்பது

பற்றி, "பன்னுமறைப் பாட்டே மெய்ப் பாட்டினது பயனே" என்றும் பாடுகின்றார். வேத மந்திரப் பாட்டுக்களை யன்றிப் பிற சான்றோர் மெய்ம்மை ஞானத்தால் பாடுகின்ற பாட்டும் அவனையே பொருளாகக் கொண்டவையாதல் பற்றி, "மெய்ப் பாட்டினது பயனே" என்று சிறப்பிக்கின்றார். மெய்யன்பர்கள் தம்பால் அன்போடு கூடி யிருந்து பரவுகின்ற கூட்டத்தில் சிறப்புடைய மெய்ம்மைப் பொருளாக விளங்குபவனாதலால், "கூட்டாளா" எனக் கூறுகின்றார். உமாதேவிக்கு மனமுவந்த கணவராதலின், "சிவகாமக் கொடிக்கு இசைந்த கொழுநா" எனவும், எல்லா உலகுயிர்களுக்கும் அருள் வழங்கும் வேந்தனாதல் தோன்ற, "கோவே" எனவும் பரவுகின்றார். கணவன் - கண் போன்றவன். தாயும் தந்தையுமாதல் பற்றி, "என் குரவா" எனக் குறிக்கின்றார். நற்குணங்கள் எல்லாம் திரண்ட திருவுருவினன் என்பது பற்றி, "குரவா" எனப் புகழ்கின்றார். கல்வி, அறிவு ஒழுக்கங்களால் நீண்ட புகழ் படைத்த பெரியோர்களை, "நீட்டாளன்" என்பர். சான்றோர்களும் முனிவர்களும் இவ்வகையில் அடங்குவது பற்றி அவர் அனைவரையும் இவ்வாறு தொகுத்துரைக்கின்றார். இறைவனது நீண்ட புகழை எடுத்தோதுவது பற்றி அவன் புகழ்பாடும் பாட்டுக்களை, "நெடுமொழி" என்று உரைக்கின்றார். நாட்டிய நூலின் விதி முறைப்படி அம்பலத்தில் ஆடுவது பற்றிச் சிவனை, "நீதி நடத்து அரசே" என்று பாராட்டுகின்றார். நீதியே உருவாகக் கொண்டு ஆடுபவன் என்பது பற்றி இவ்வாறு கூறுகின்றார் எனினும் அமையும். (14)

4104. **கைக்கிசைந்த பொருளேஎன் கருத்திசைந்த கனிவே**
**கண்ணேஎன் கண்களுக்கே கலந்திசைந்த கணவா**
**மெய்க்கிசைந்த அணியேபொன் மேடையில்என் னுடனே**
**மெய்கலந்த தருணத்தே விளைந்தபெருஞ் சுகமே**
**நெய்க்கிசைந்த உணவேஎன் நெறிக்கிசைந்த நிலையே**
**நித்தியமே எல்லாமாஞ் சத்தியமே உலகில்**
**பொய்க்கிசைந்தார் காணாதே பொதுநடஞ்செய் அரசே**
**புன்மொழிஎன் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே.**

**உரை :** கையால் பற்றுதற் கமைந்த உயர் பொருளும், என் கருத்துக்கு இசைந்த மென்மையுறக் கனிந்த கனிவுப் பொருளும், கண்களும், கண்களின் காட்சிக்கு இசைந்த இனிய கணவனும், உடம்பில் அணிந்து கொள்ளற்கு இனிய அணியுமாய், அழகிய மேடையில் என்னுடனே மெய் தோயக் கலந்த பொழுதில் உண்டாகின்ற சுகமாகியவனே! நெய் கலந்த உணவும், நன்னெறிக்கண் அமைந்த நெறிவகையும், நித்தியப் பொருளும், எல்லாமாய் விளங்கும் சத்தியப் பொருளும், உலகின்கண் பொய்ந்நெறி உடையார்க்குக் காணப் படாமல் அம்பலத்தில் ஆடல் புரிகின்ற பெருமானுமாகிய சிவபெருமானே! என்னுடைய சொற்களைப் பொருளில்லாத வெறுமை மொழி என்று புறக்கணிக்காமல் ஏற்று அணிந்து கொள்வாயாக. எ.று.

வன்மையும் மென்மையுமாகிய உலகியற் பொருட்களில் பற்றி இன்புறுதற் கமைந்த பொருள் போல் பற்றும் பொருளாய்ப் பற்றிய விடத்து இன்பம் தருவதாய் விளங்குவது பற்றி, "கைக்கிசைந்த

பொருளே" எனவும், நினைவார்க்கு இனியாம் என்பது பற்றி, "கருத்திசைந்த கனிவே" எனவும் கூறுகின்றார். கனிவு உடையதைக் கனிவு என்பது உபசாரம். கண் போற் சிறந்தும், காட்சிக்கு இசைந்தும் விளங்குவது பற்றி, "கண்ணே என் கண்களுக்கு இசைந்த கணவா" என்று போற்றுகின்றார். வடலூர் அடிகளின் உள்ளம் சிவன்பால் உளதாகிய அன்பால் குழைந்து பெண்மைத் தன்மை எய்துகின்றது தோன்ற, "கண்களுக்கே கலந்திசைந்த கணவா" என வுரைக்கின்றார். கண் நிறைந்த கணவன் என்ற சொல் வழக்கை ஒட்டி நிற்பது, கண்ணிற் கலந்து காட்சிக்கு இனிமை பொருந்த இலங்குகின்றது என்பது கருத்து. உடம்பில் அணியும் அணி வகைகளும் உடம்பின் நிறத்துக்கும் உருவியல்புக்கும் ஒத்தமைதல் இன்றியமையாதல் பற்றி, "மெய்க்கு இசைந்த அணியே" என விளம்புகின்றார். மெய்யும் மெய்யும் பொருந்தக் கூடுமிடத்தில் உண்டாகும் இன்பக் குவிப்பை, "பொன் மேடையில் என்னுடனே மெய் கலந்த தருணத்தே விளைந்த பெருஞ் சுகமே" என்று பேசுகின்றார். இனித் திருவருள் முயக்க இன்பம் சுற்றி நின்றது. உணவுக் கிசைந்த நெய் என்றது நெய்க்கு இசைந்த உணவு என மாறி மொழிந்தது பெய்யப்படும் நெய்யின் மேம்பாடு விளங்க நிற்கின்றது. செல்லும் நெறியும் அந்நெறி நின்றருடைய சிறப்பால் மேம்படுதலின், "நெறிக்கு இசைந்த நிலையே" என்று சிறப்பிக்கின்றார். எங்கும் எல்லாப் பொருட்கும் ஒத்த இயல்பினது என்றற்கு, "எல்லாமாம் சத்தியமே" எனப் புகழ்கின்றார். நுண்ணுணர்வுடைய சான்றோர்க்கே காண்டற் கரிதாகிய அம்பல நடனம் பொய் யறிவுடையோர்க்குக் காட்சி அரிதாம் என்பது பற்றி, "உலகில் பொய்க்கு இசைந்தார் காணாதே பொது நடஞ்செய் அரசே" என்று புகல்கின்றார். (15)

4105. கொடுத்திடநான் எடுத்திடவும் குறையாத நிதியே
கொல்லாத நெறியேசித் தெல்லாஞ்செய் பதியே
மடுத்திடவும் அடுத்தடுத்தே மடுப்பதற்குள் ஆசை
வைப்பதன்றி வெறுப்பறியா வண்ணநிறை அமுதே
எடுத்தெடுத்துப் புகன்றாலும் உலவாத ஒளியே
என்உயிரே என்உயிருக் கிசைந்தபெருந் துணையே
தடுத்திடவல் லவர்இல்லாத் தனிமுதற்பேர் அரசே
தாழ்மொழிஎன் றிகழாதே தரித்துமகிழ்ந் தருளே.

உரை: பிறர்க்குக் கொடுத்தாலும் தனக்கென எடுத்தாலும் குறைதலில்லாத அருட் செல்வமே! உயிர்க் கொலை செய்யாத அருள் நெறித் தலைவனே! சித்துக்கள் எல்லாவற்றையும் செய்ய வல்ல பதிப் பொருளே! உண்டாலும் அடுத்தடுத்து உண்பதற்கே ஆசை உண்டாக்குவதன்றி வெறுப்புணர்வு உண்டாகாத வகையில் நிறைகின்ற அமுதமே! எத்தனை முறை எடுத்தெடுத்துச் சொன்னாலும் சொல்லி முடியாத பரவொளிப் பொருளே! என்னுடைய உயிராய் என்னுயிர்க்கென அமைந்த பெரிய துணைவனே! தடுத்து நிறுத்த வல்லவர்களே இல்லாத ஒப்பற்ற பெரிய அருளரசே! குற்றங்களால் தாழ்வு பட்ட சொன்மாலை என்று இகழாமல் ஏற்று மகிழ்ந்தருள்க. எ.று.

கொடுக்க எடுக்கக் குறையும் இயல்புடையது உலகியற் செல்வமாதலால் அதனை விலக்குதற்கு, "கொடுத்திட நான் எடுத்திடக் குறையாத நிதியே" என்று கூறுகின்றார். எல்லா நல்லறங்களுக்கும் தலையாய தாதலின் கொல்லா நெறியையே சிவமாகக் கருதி, "கொல்லா நெறியே" என்றும், எல்லாம் வல்ல பரம்பொருளாதல் தோன்ற, "சித்தெல்லாம் செய் பதியே" என்றும் தெரிவிக்கின்றார். உண்ணுந் தொறும் உண்ணுந் தொறும் உணர்வின்கண் ஆரு வேட்கையை மிகுவிப்பது பற்றி, "மடுத்திடவும் அடுத்தடுத்தே மடுப்பதற்குள் ஆசை வைப்பதன்றி வெறுப்பறியா வண்ண நிறையமுதே" என்று மொழிகின்றார். மடுத்தல் - உண்டல். உள்ளத்துணர்வாய் அளவிறந்த ஆசையை மிகுவிப்பது "உள்ளாசை வைப்பது" என்று குறிக்கப்படுகின்றது. தெவிட்டாத நிலையை வெறுப்பறியாவண்ணம் என விளம்புகின்றார். சொற்கு எட்டாப் பொருள் என்றும் சொற்றெறியாப் பொருள் என்றும் சான்றோர் புகழ்தலின், "எடுத்தெடுத்துப் புகன்றாலும் உலவாத ஒளியே" என உரைக்கின்றார். இறைவன் செய்கின்ற அருட் செயல்களைத் தடுத்து நிறுத்த வல்லவர் வேறு ஒருவரும் இல்லாமை விளங்க, "தடுத்திட வல்லவர் இல்லாத் தனிமுதற் பேரரசே என்று சொல்லுகின்றார். குற்ற மிகுதியால் தாழ்ச்சி யுடைய சொற்கள் தாழ் மொழி எனப்படும். குற்ற முடைய சொற்களால் ஆகியது இந்தச் சொல் மாலை என வெறுத்தொதுக்கலாகாது என்றற்கு, "தாழ் மொழி என்று இகழாதே தரித்தருளுக" என வேண்டுகின்றார். (16)

**4106.** **தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாக் கூட்டிச்**
**சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே**
**தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலும் தேங்கின்**
**தனிப்பாலுஞ் சேர்த்தொருநீம் பருப்பிடியும் விரவி**
**இனித்தநறு நெய்அளைந்தே இளஞ்சூட்டின் இறக்கி**
**எடுத்தசுவைக் கட்டியினும் இனித்திடுந்தெள் ளமுதே**
**அனித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே**
**அடிமலர்க்கென் சொல்லணியாம் அலங்கல்அணிந்**
**தருளே.**

உரை : மா பலா வாழை ஆகிய மூவகைக் கனிகளையும் தனித் தனியாகப் பிழிந்து வடிகட்டி ஒன்றாய்க் கூட்டி அதன்கண் சர்க்கரையும் கற்கண்டின் தூளும் சிறிதளவு மிகுப்படக் கலந்து அக் கலவையின்கண் தூய மணம் கமழும் தேனைச் சொரிந்து பின்னர்ப் பசுவின் பாலையும், தேங்காயிலிருந்து எடுத்துப் பிழிந்து கொண்ட தனிப் பாலையும் ஒன்றாய்ச் சேர்த்து ஒரு பிடி அளவான பாசிப் பருப்பின் பொடியையும் கலந்து இனிய சுவையும் மணமும் உடைய நெய்யைப் பெய்து அடுப்பேற்றி இளஞ் சூட்டில் இறக்கி எடுத்த இன்சுவைக் கட்டியினும் இனிக்கின்ற தெளிந்த அமுது போல்பவனே! என்றும் நிலைபெறத் திருச்சிற்றம்பலத்தில் செய்கின்ற விளக்க மிக்க நடனத்தை உடைய அருளரசே! உன் திருவடிக்கு அணியாக எனது சொன் மாலையை அணிந்தருளுக. எ.று.

முக்கனி, மா பலா வாழை ஆகிய மூவகைக் கனிகள். வாழையின் மிகக் கனிந்த பழத்தில் நெய் ஊறுவது பற்றித் தனித்தனியே விழியச் சொல்லுகின்றார். மாம்பழத்தைப் பிழிந்த வழிக் கோதுகள் கலத்தலின் வடித்தல் வேண்டிற்று. சர்க்கரை அளவினும் கற்கண்டின் பொடி சிறிது மிகைப்பட இருக்க வேண்டுமென்பதற்காக, "மிகக் கலந்து" என மொழிகின்றார். கோற்றேன் - கொம்புத் தேன் என வகை பல உண்மையின் எவ்வகையதாயினும் ஒரு வகையே கொள்ளல் வேண்டும் என்றற்கு, "தனித்த நறுந்தேன்" என்றும், தேங்காயைத் துருவிப் பிழிந்தெடுத்த தனிப் பாலைக் குறிப்பதற்கு, "தேங்கின் தனிப் பால்" என்றும் கூறுகின்றார். பாசிப் பருப்பின் தோலை நீக்கி உள்ளுறு பருப்பினை அரைத்தெடுத்த மா எனற்கு, "ஒரு தீம் பருப்பிடி" என உரைக்கின்றார். தீம் பருப்பு என்பதனால் பாசிப் பருப்பு கொள்ளப்பட்டது. ஒரு என்பதைப் பிரித்துப் பிடியொடு கூட்டி 'ஒருபிடி' என அளவு கூறுவோரும் உண்டு. சூடு சிறிது மிக்க வழிச் சுவை கெட்டு விடும் என்பதுபற்றி, "இளஞ் சூட்டில் இறக்கி" என இயம்புகின்றார். அருளமுதம் இன்சுவைக் கட்டியினும் சிறந்தது எனப் புலப்படுத்தற்கு, "சுவைக் கட்டியினும் இனித்திடும் தெள்ளமுது" என மொழிகின்றார். அனித்தம் - நிலையாமை. திருச்சிற்றம்பலம் - திருப் பொது எனப்படுகிறது. அலங்கல் - மாலை. (17)

4107. **மலைவறியாப் பெருஞ்சோதி வச்சிரமா மலையே**
**மாணிக்க மணிப்பொருப்பே மரகதப்பேர் வரையே**
**விலைஅறியா உயர்ஆணிப் பெருமுத்துத் திரளே**
**விண்ணவரும் நண்ணரும்ஓர் மெய்ப்பொருளின் விளைவே**
**கொலைஅறியாக் குணத்தோர்தங் கூட்டுறவே அருட்செங்**
**கோல்நடத்து கின்றதனிக் கோவேமெய் அறிவால்**
**நிலைஅறிந்தோர் போற்றுமணி மன்றில்நடத் தரசே**
**நின்னடிப்பொன் மலர்களுக்கென் நெடுஞ்சொல்அணிந் தருளே.**

உரை: ஐயுறுதற் கில்லாத பெரிய ஒளியை யுடைய வைர மணிகளாலாகிய பெரிய மலையையும், மாணிக்க மணியாலாகிய மலையும், பசுமை நிறமுடைய மரகதக் கல்லாலாகிய பெரிய மலையும், விலை மதிக்க வொண்ணாத உயர்ந்த தூயதாகிய பெரிய முத்துத் திரளும் போல்பவனே! தேவர்களும் நெருங்குதற்கரிய ஒப்பற்ற மெய்ப்பொருட் பயனே! கொலை புலை முதலிய செயல்களில்லாத நற்குணத்தை யுடைய பெரியோர்களோடு கூடி உறவாடும் பெருமானே! அருட் செங்கோலைச் செலுத்துகின்ற ஒப்பற்ற தலைவனே! மெய்யுணர்வால் உண்மை நிலையை அறிந்துகொண்ட ஞானிகள் போற்றுகின்ற அழகிய அம்பலத்தின்கண் திருக்கூத்தாடுகின்ற அரசே! உன்னுடைய திருவடிகளாலாகிய அழகிய தாமரைகளுக்கு உனது பெரிய சொல் மாலையை அணிந்தருளுக. எ.று.

மலை வறியாப் பெருஞ் சோதி, நன்றோ தீதோ என ஐயுறுதற் கிடமின்றி மிக்க ஒளியை யுடைய வைரமணி போல்பவனே என்றற்கு,

"மலை வறியாப் பெருஞ் சோதி வச்சிர மாமலையே" என்றும், சிவந்த ஒளியைப் பரப்பும் மாணிக்க மலை போல் விளங்குவது பற்றி, "மாணிக்க மணிப் பொருப்பே" என்றும், மரகத மணி போல் பசுமையான ஒளியைப் பரப்பும் பெரிய மலை போல் விளங்குவது தோன்ற, "மரகதப் பேர் வரையே" என்றும், மேனி எங்கும் வெண்ணீறு அணிந்து வெண்மை யான ஒளி திகழ விளங்குதல் பற்றி, "ஆணிப் பெருமுத்துத் திரளே" என்றும் போற்றுகின்றார். விலை மதிக்கப் பெறும் உலகியல் முத்துக்களின் வேறுபடுத்தற்கு, "விலை யறியா ஆணிப் பெருமுத்துத் திரளே" எனப் புகழ்கின்றார். ஆணி - முத்து. ஆணிப் பொன் என்பது போல வந்தது. ஆணி - திண்மையும் தூய்மையும் சுற்றி நின்றது. மக்களின் உயர்ந்த ஞானச் சிறப்புடைய தேவர்களும் உணர்தற் கரிய மெய்ப்பொருளால் விளையும் பேரின்பப் பொருள் என்றற்கு, "விண்ணவரும் நண்ணரும் ஓர் மெய்ப்பொருளின் விளைவே" என விளம்புகின்றார். கொலையும், புலால் உண்டலும் இல்லாத உயர்ந்த குணமுடைய அருளார் கூட்டத்தில் எழுந் தருளி அவர் உறவை நயந்து இன்பம் செய்தலால், "கொலை யறியாக் குணத்தோர்தம் கூட்டுறவே" எனவும், அருளே திருவுருவாய் நின்று எவ் வுயிர்பாலும் அருளறமே நிலவ இயலுதல் பற்றி, "அருட் செங்கோல் நடத்துகின்ற தனிக் கோவே" எனவும் போற்றுகின்றார். உண்மை யறிவால் சிவத்தின் செம்மை நிலையை அறிந்து அஃது அருள் ஞான வுருக் கொண்டு அம்பலத்தில் ஆடல் புரிவது அறிந்து மெய்ஞ்ஞானிகள் துதிக்கும் இயல்பை விளக்குகின்றாராதலின், "மெய்யறிவால் நிலை அறிந் தோர் போற்று மணி மன்றில் நடத்தரசே" என்று போற்றுகின்றார். (18)

4108. **கண்களிக்கப் புகைசிறிதும் காட்டாதே புருவக்**
**கலைநடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே**
**பண்களிக்கப் பாடுகின்ற பாட்டில்விளை சுகமே**
**பத்தருளே தித்திக்கப் பழுத்ததனிப் பழமே**
**மண்களிக்க வான்களிக்க மணந்தசிவ காம**
**வல்லிஎன மறைகள்எலாம் வாழ்த்துகின்ற வாமப்**
**பெண்களிக்கப் பொதுநடஞ்செய் நடத்தரசே நினது**
**பெரும்புகழ்ச்சே வடிகளுக்கென் அரும்பும்அணிந் தருளே.**

உரை: கண் களிக்குமாறு புகை சிறிதுமின்றி இரு புருவங்கட்கு இடையிலுள்ள இலாடத்தானத்தின் நடுவே தோன்றித் திகழ்கின்ற கற்பூர விளக்கம் போல்பவனே! இசை இன்பம் பெருகப் பாடுகின்ற பாட்டிடத்தே தோன்றுகின்ற இன்பமாகியவனே! மெய்யன்பர் உள்ளத் தில் இனிமை மிகுமாறு பழுத்துவிளங்கும் ஞானப் பழம் போல்பவனே! மண்ணவரும் விண்ணவரும் கண்டு மகிழுமாறு திருமணம் செய்து கொள் ளப்பட்டவள் சிவகாமவல்லி என்று வேதங்கள் எல்லாம் போற்றி வாழ்த்து கின்ற இடப்பால் மடந்தையாகிய உமாதேவி கண்டு களிக்குமாறு அம்பலத்தில் திருக்கூத்தாடுகின்ற அருளரசே! நின்னுடைய பெரும் புகழ் பொருந்திய சிவந்த திருவடிகளில் என் சொல் மாலையை அணிந்த ருளுவாயாக. எ.று.

புகை தோற்றுவிக்கும் உலகியல் கற்பூரம் போலாது புருவ நடுவாகிய இலாடத்தானத்தே அகக்கண் கண்டு களிக்குமாறு தெய்வக் கற்பூர

விளக்கு போல்பவன் சிவபெருமான் என்பது விளங்க, "கண் களிக்கப் புகை சிறிதும் காட்டாது புருவக் கலை நடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே" என்று குறிக்கின்றார். புருவக் கலையாவது இரு புருவங்கட்கும் இடைவெளியதாகிய இலாடத்தானம். அகக்கண் கொண்டு புறத்தைக் காண்பார்க்கு இலாடத்தின் நடுவே ஞான வொளி விளக்காய் மணம் கமழத் தோன்றுதலின், "புருவக் கலை நடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே" என விரித்துரைக்கின்றார். பண் நிறைந்த பாட்டில் இசையும் பொருளும் அமைந்து இன்பம் செய்தலால் அதனை, "பண் களிக்கப் பாடுகின்ற பாட்டில் விளை சுகம்" எனப் பராவுகின்றார். மெய்யன்பருடைய உள்ளத்தில் அன்பு முதிர முதிர இன்பம் ஊற்றெடுத்துப் பெருகுதலால் அதற்கேதுவாகிய பரம்பொருளை, "பத்தருளே தித்திக்கப் பழுத்த தனிப் பழமே" எனப்பாடுகின்றார். வேதங்கள் உமாதேவியை வாழ்த்துகின்ற இயல்பைத் தெரிவித்தற்கு, "மண் களிக்க வான் களிக்க மணந்த சிவகாமவல்லி என மறைகள் எலாம் வாழ்த்துகின்ற வாமப் பெண்" என்று சிறப்பிக்கின்றார். உமையாள் காண அம்பலத்தில் ஆடுகின்றானுதலால் கூத்தப் பெருமானை, "வாமப் பெண் களிக்கப் பொது நடஞ்செய் நடத்தரசே" என்று போற்றுகின்றார். (19)

4109. உருவெளியே உருவெளிக்குள் உற்றவெளி உருவே
 உருநடுவும் வெளிநடுவும் ஒன்றான ஒன்றே
 பெருவெளியே பெருவெளியில் பெருஞ்சோதி மயமே
 பெருஞ்சோதி மயநடுவே பிறங்குதனிப் பொருளே
 மருஒழியா மலர் அகத்தே வயங்குஒளி மணியே
 மந்திரமே தந்திரமே மதிப்பரிய மருந்தே
 திருஒழியா தோங்குமணி மன்றில்நடத் தரசே
 சிறுமொழிஎன் றிகழாதே சேர்த்துமகிழ்ந் தருளே.

**உரை:** உருவெளியாய்த் தோன்றும் பரம்பொருளே! அவ்வுரு வெளியில் நிலவும் வெளியுருவாயவனே! உருவின் நடுவிலும் வெளியின் நடுவிலும் ஒரொப்ப நிற்கின்ற ஒரு பொருளே! பெருவெளியாகிய பெருமானே! அப் பெருவெளியில் விளங்குகின்ற பெரிய சோதிமயமான சிவமே! அப் பெரிய சோதியின் நடுவே உயர்கின்ற ஒப்பற்ற பரம் பொருளே! மணம் நிறைந்த மலரின்கண் விளங்குகின்ற ஒளியே! மணியும் மந்திரமும் மதிக்க வொண்ணாத மருந்தும் சாத்திரமுமாகிய சிவனே! கண்டார் விரும்பும் அழகு மிக்குயர்ந்த மணி யிழைத்த அம்பலத்தில் ஆடல் புரிகின்ற கூத்தப் பெருமானே! சிறுமை யுடையதென்று புறக்கணிக்காமல் என் சொன் மாலையைத் தோளில் அணிந்து மகிழ்ந்து அருளுக. எ.று.

உருவெளி - பரந்த வெளியில் கண்ணுக்கு உருவாய்த் தோன்றும் கருத்துப் பொருள். உருவாய்த் தோன்றும் பொருளையும் அதற்கிடமாகிய பொருளையும் தனி முறையில் எடுத்து அவ்வெளி நடுவில் விளங்கும் உருவை மனக் கண்ணில் கண்டு அதனைச் சிவமாகக் கொண்டு, "உருவெளிக்குள் உற்ற வெளி யுருவே" என்வும், உருவின் நடுவிலும் வெளியின் நடுவிலும் நோக்கிச் சிவமே நிலவக் கண்டு, "உருநடுவும்

வெளி நடுவும் ஒன்றுன ஒன்றே'' எனவும் உரைக்கின்றுர். அவ்வுரு வெளிக் கிடமாகிய பரந்த வெளியை, ''பெருவெளி'' என்றும், அப்பெரு வெளியில் தோன்றித் திகழ்கின்ற பேரொளியை, ''பெருவெளியில் பெருஞ் சோதி மயமே'' என்றும், அப் பெரிய சோதியின்கண் நுண்ணி தாய்ப் புலப்படும் பரம்பொருளைச் சிவமாகக் கருதி, ''பெருஞ் சோதி மய நடுவே பிறங்கு தனிப் பொருளே'' என்றும் கூறுகின்றுர். மணம் மிக்க மலர் மலர்ந்தவிடத்துக் காணப்படும் அழகிய ஒளி போல் சிவம் உறைவது பற்றி, ''மரு ஒழியா மலரகத்தே வயங்கும் ஒளியே'' என்று உரைக்கின்றுர். மணியும், மந்திரமும், மருந்துமாய் உயிர்கட்கு நலஞ் செய்தலின், ''மணியே மந்திரமே மதிப்பரிய மருந்தே'' எனவும், இவற்றின் நலங்களை உரைக்கும் சாத்திரங்களை, ''தந்திரம்'' எனவும் குறிக்கின்றுர். மணி, மந்திரம், மருந்து என்பதே முறையாயினும் செய்யு ளாதலின் மாறி நின்றது. தந்திரம் - நூல். மதிப்பரிய என்பதை மணி யோடும் மந்திரத்தோடும் கூட்டுக. திரு - கண்டார் விரும்பும் அழகும் ஒளியுமாம். சிறுமொழி, குற்றமுடைமையால் சிறுமை யுற்ற மொழி. மொழி - சொல். ஈண்டு ஆகுபெயராய்ச் சொன் மாலை மேலதாயிற்று. (20)

4110. நான்என்றும் தான்என்றும் நாடாத நிலையில்
ஞானவடி வாய்விளங்கும் வானநடு நிலையே
ஊன்என்றும் உயிர்என்றும் குறியாமே முழுதும்
ஒருவடிவாம் திருவடிவம் உவந்தளித்த பதியே
தேன்என்றும் கரும்பென்றும் செப்பரிதாய் மனமும்
தேகமும்உள் உயிர்உணர்வும் தித்திக்கும் சுவையே
வான்என்றும் ஒளிஎன்றும் வகுப்பரிதாம் பொதுவில்
வயங்குநடத் தரசேஎன் மாலையும்ஏற் றருளே.

உரை : நான் எனவும், சிவம் எனவும் பிரித்தறிய மாட்டாத வகை யில் ஞான வடிவமாய் விளங்கும் சிதாகாசத்தின் நடுநிலையாய் விளங்கும் பரம்பொருளே! உடம்பென்றும் உயிரென்றும் கருதாமல் இரண்டினும் முழுதும் ஒருதன்மைத்தாகிய திருவடிவத்தை என்பால் மகிழ்ந்தளித்த தலைவனே! தேன் எனவும், கரும்பின் சாறெனவும் சொல்லுதற் கரியதாய் என் மனமும் உடம்பும், உடம்பினுள் நிலவும் உயிருணர்வும் ஒருங்கு இனிக்கும் சுவையாகியவனே! வானம் என்றும் அங்கு நிலவும் ஒளி யென்றும் பிரித்தறிய மாட்டாத சபையின்கண் திருக்கூத்தினை யாடுகின்ற அருளரசே! என்னுடைய சொன் மாலையையும் ஏற்றருளு வாயாக. எ.று.

ஞானகாசத்தில் தோய்ந்த ஆன்மா தன் தன்மை யிழந்து சிவமாந் தன்மை எய்தி ஒன்றினென்று தனித்தனியே காண மாட்டாத நிலைமையை அடைவது புலப்பட, ''நான் என்றும் தான் என்றும் நாடாத நிலையில் ஞான வடிவாய் விளங்கும் வான நடுநிலையே'' என்றும், உடம்பும் உயிரும் வேறு வேருகவும், வேற்றுமை கருதாது சிவமாந் தன்மையுற்றுச் சிவானந்த ஞான வடிவு பெறுதலால், ''ஊன் என்றும் உயிர் என்றும் குறியாமே முழுதும் ஒரு வடிவாம் திருவடிவம் உவந்தளித்த பதியே'' என்றும் இயம்புகின்றுர். உடம்பும், உயிரும்,

உயிருணர்வும் வேறு வேறு நிலையினவாகவும் எல்லாம் ஞான வின்ப வடிவம் பெற்றுச் சிறக்குமாறு விளங்க, "தேன் என்றும் கரும்பு என்றும் செப்பரிதாய் மனமும் தேகமும் உள்ளுயிர் உணர்வும் தித்திக்கும் சுவையே" எனத் தெரிவிக்கின்றார். தில்லையம்பலம் ஞான வானம் என்றும், சிவப்பிரகாசத் தனி வெளி என்றும் பெரியோர்களால் போற்றப் படுவதால், "வான் என்றும் ஒளி என்றும் வகுப்பரிதாம் பொது" என்று புகழ்கின்றார். (21)

4111. எட்டிரண்டும் என்என்றால் மயங்கியஎன் றனக்கே
எட்டாத நிலைஎல்லாம் எட்டுவித்த குருவே
சுட்டிரண்டுங் காட்டாதே துரியநிலை நடுவே
சுகமயமாய் விளங்குகின்ற சுத்தபரம் பொருளே
மட்டிதுஎன் றறிவதற்கு மாட்டாதே மறைகள்
மவுனம்உறப் பரம்பரத்தே வயங்குகின்ற ஒளியே
தட்டறியாத் திருப்பொதுவில் தனிநடஞ்செய் அரசே
தாழ்மொழிஎன் றிகழாதே தரித்துமகிழ்ந் தருளே.

உரை : எட்டும் இரண்டும் என்னவென்று வினவினால் தெரியாது மயங்கிய எனக்கு அறியாத நிலைகள் எல்லாவற்றையும் அறியச் செய்த ஞான குருவே! அண்மையிலும் சேய்மையிலும் வைத்துரைக்கும் சுட்டுப் பொருளிரண்டையும் காட்டாமல் துரியத்தானத்தின் நடுவே இன்ப மயமாய் விளங்குகின்ற தூய பரம்பொருளே! இதன் அளவு இஃதென்று அறிய மாட்டாமல் மறைகள் மௌனமுறும் பரம்பர நிலையில் விளங்கு கின்ற ஞான ஒளிப் பொருளே! தடையில்லாத திருச்சபையின்கண் ஒப்பற்ற நடனத்தைச் செய்கின்ற அருளரசே! குற்றத்தால் தாழ்வுடையது என்று என் சொல் மாலையை இகழாமல் ஏற்று அணிந்து மகிழ்ந்தருளுக. எ.று.

"எட்டிரண்டும் அறியேன்" (சதகம்) என்ற செம்மொழியின் பொருள் யாதென வினவினற்கு அகர உகரங்கள் என உரைக்க முடியாமல் மயங்கிய நிலையைக் குறிப்பதற்கு வடலூர் வள்ளல், "எட்டிரண்டும் என்னென்றால் மயங்கிய என்றனக்கே" எனவும், அவை யிரண்டையும் விளக்கி அவற்றின் மேலும் அறிய மாட்டாத ஞான நிலை கள் பலவற்றையும் ஆசிரியனாய்ப் போந்து இறைவன் தமக்கு அறிவித்த செய்தியைப் புலப்படுத்த, "எட்டாத நிலைகள் எல்லாம் எட்டுவித்த குருவே" எனவும் இயம்புகின்றார். அண்மைச் சுட்டு, சேய்மைச் சுட்டு எனச் சுட்டு இரண்டாதலின் அவற்றை, "சுட்டிரண்டும் காட்டாதே" எனச் சொல்லுகின்றார். ஐவகை அவத்தைகளுள் சுற்றி அறியப்படும் கனவு நனவு நிலைகளைக் காட்டாமல் சுழுத்தியின் கீழதாகிய துரிய நிலையை ஆசிரியர் காட்டிய திறம் விளங்க, "சுட்டிரண்டும் காட்டாதே துரிய நிலை நடுவே" என்றும், துரியமும் அதீதமும் ஆகிய நிலைகள் சுட்டிறந்தனவாதலின் அங்கிங்கெனச் சுட்டி அறியப்படும் நனவு கனவாகிய அவத்தை நிலைகளை, "சுட்டிரண்டு" என்றும் வரைந்தோது கின்றார். துரியத்தானத்தில் ஒளி யுருவிற் காணப்படும் பரம்பொருள் காட்சிக்கு இன்ப மயமாய் இலங்குவது விளங்க, "சுக மயமாய் விளங்கு

கின்ற சுத்த பரம்பொருளே" என மொழிகின்றார். பரம்பொருளை ஓதிப் புகழும் ஒட்பமுடையவாயினும் வேதங்களால் இவ்வளவிற்று என உரைக்க மாட்டாமையால் வேதங்கள் ஓய்ந்து விடுதலின், "மட்டு இது வென்று அறிவதற்கு மாட்டாது மறைகள் மௌனமுற" என்று இயம்பு கின்றார். "வேதம் கிடந்து தடுமாறுகின்ற வஞ்ச வெளி" (திருவிளை) என்று பெரியோர் பரசிவ நிலையை உரைப்பது ஈண்டு நினைவு கூரத் தக்கது. மேலும் கீழுமாகிய எங்கும் எப்பொருளிலும் ஒளி மயமாய் ஓங்குவது பற்றிப் பரசிவ வொளியை, "பரம்பரத்தே வயங்குகின்ற ஒளியே" என்று பரவுகின்றார். தடை சிறிதுமின்றி யாவரும் கண்டு களிக்குமாறு உயர்ந்து விளங்குதலின் அம்பலத்தை, "தட்டறியாத திருப்பொது" எனவும், அதன்கண் ஞானத் திருக்கூத்தாடுவது பற்றிச் சிவபெருமானை, "திருப் பொதுவில் தனி நடஞ்செய் அரசே" எனவும் போற்றுகின்றார். தட்டு - தடை. குற்றம் நிறைந்த மொழி என்றற்கு, "தாழ்மொழி" எனக் கூறுகின்றார். (22)

4112. சாதிகுலம் சமயமௌலாம் தவிர்த்தெனைமேல் ஏற்றித்
தனித்ததிரு அமுதளித்த தனித்தலைமைப் பொருளே
ஆதிநடுக் கடைகாட்டா தண்டபகிர் அண்டம்
ஆருயிர்கள் அகம்புறம்மற் றனைத்தும்நிறை ஒளியே
ஓதிஉணர்ந் தவர்எல்லாம் எனைக்கேட்க எனைத்தான்
ஓதாமல் உணர்ந்துணர்வாம் உருவுறச்செய் உறவே
சோதிமய மாய்விளங்கித் தனிப்பொதுவில் நடிக்கும்
தூயநடத் தரசேஎன் சொல்லும்அணிந் தருளே.

உரை : சாதி என்றும் குலம் என்றும் சமயம் என்றும் பேசப்படும் வேறுபாடுகள் எல்லாவற்றையும் போக்கி மேன் நிலையில் என்னை யிருத்தி ஒப்பற்ற அருள் ஞானமாகிய அமுதத்தைத் தந்தருளிய சிறந்த தலைமைப் பொருளாகியவனே! முதல், இடை, கடை எனப் பிரித்துக் காட்டாமல் அண்டங்களிலும் வெளி அண்டங்களிலும் அவற்றுள் நிறைந்திருக்கும் உயிர்களிலும், அகமும், புறமும், அகப்புறமும், புறப் புறமும் எல்லாவற்றிலும் நிறைந்து விளங்குகின்ற ஒளியாகியவனே! நூல் பலவும் ஓதி யுணர்ந்த பெரியோர்கள் எல்லாம் என்னை யடைந்து கேட்குமாறு என்னை ஒன்றும் ஓதாமலே யுணர்ந்து உரைக்கத் தக்க உணர்வாகிய நல்லுருவு பெறச் செய்த என்னுறவே! அம்பலத்தின் கண் ஒளி மயமாய் விளங்கி நின்று நடிக்கும் தூய நடராசப் பெருமானே! என்னுடைய சொன் மாலையையும ஏற்று மகிழ்ந்தருளுவாயாக. எ.று.

உலகியலில் மக்களிடையே நிலவும் சாதி வேற்றுமை, குல வேற்றுமை, சமய வேற்றுமை ஆகிய வேற்றுமை பலவற்றையும் நோக்காது போக்கி அவற்றுக் கெல்லாம் மேலாய் உயர்த்தி, அவை யனைத்தையும் ஒன்றுய்ச் சமமாய்க் கருதத் தக்க சமரச ஞானமாகிய திருவருள் உணர்வைத் தனக்கு நல்கினமை புலப்பட வடலூர் வள்ளல், "சாதி குலம் சமயமெலாம் தவிர்த்து எனை மேலேற்றித் தனித்த திருவமுது அளித்த தனித் தலைமைப் பொருளே" என்று சாற்றுகின்றார். அண்டங்களிலும், அண்டங்கட்கு வெளியே உள்ள அண்டங்களை,

"பகிரண்டம்" என்பர். அண்டங்கள் தோறும் எண்ணிறந்த உயிர்கள் வாழ்தலால், "ஆருயிர்கள்" என வுரைக்கின்றார். அகம் புறம் மற்றனைத்தும் என்பதில் மற்றனைத்து என்பது அகப்புறத்தும், புறப்புறத்தும் உள்ள பிரிவுகளை உணர்த்திற்று. அண்டங்களிலும் பகிரண்டங்களிலும் அவற்றில் உறையும் உயிர்களிலும் ஆதி என்றும், அந்தமென்றும், நடுவென்றும் உள்ள பகுதிகள் அனைத்திலும், அவற்றின் அகத்தும் புறத்தும், அகப்புறத்தும், புறப்புறத்தும் எங்கும் நிறைந்து சிவத்தின் அருளொளி பரவுவதால், "ஆதி நடுக் கடை காட்டாது அண்ட பகிரண்டம் ஆருயிர்கள் அகம் புறம் மற்றனைத்தும் நிறை ஒளியே" என்று உரைக்கின்றார். கற்றறிந்தவர் பலரும் ஐயம் தெளியுமாறு தம்மைப்பணிந்து கேட்கத்தான் வீற்றிருந்து உரைக்கும்வண்ணம் பன்னூல்களையும் ஓதாதே உணர்ந்துரைக்க வல்ல ஒள்ளிய ஞான நிலை தமக்கு எய்தியமை புலப்பட, "ஓதி யுணர்ந்தவர் எலாம் எனைக் கேட்க எனைத்தான் ஓதாமல் உணர்ந்து உணர்வாம் உருவுறச் செய்யுறவே" என இசைக்கின்றார். சோதி மயம் - ஞானவொளி மயம். என் சொல் - யான் தொடுத்திருக்கின்ற சொன் மாலை. (23)

4113. அடிக்கடிஎன் அகத்தினிலும் புறத்தினிலும் சோதி
அருள்உருவாய்த் திரிந்துதிரிந் தருள்கின்ற பொருளே
படிக்களவின் மறைமுடிமேல் ஆகமத்தின் முடிமேல்
பதிந்தபதம் என்முடிமேல் பதித்ததனிப் பதியே
பொடிக்கனகத் திருமேனித் திருமணங்கற் பூரப்
பொடிமணத்தோ டகம்புறமும் புதுமணஞ்செய் அமுதே
அடிக்கனக அம்பலத்தே திருச்சிற்றம் பலத்தே
ஆடல்புரி அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

**உரை :** என்னுடைய அகத்திலும் புறத்திலும் அடிக்கடி தோன்றி, அருளொளி உருவாய்த்திரிந்து தோன்றி அருளுகின்ற திருவருட் செம் பொருளே! உலகின்கண் அளவில்லாத வேதங்களின் முடிமேலும் ஆகமங்களின் முடிமேலும் தோய்ந்த திருவடியை என் தலைமேல் பதிவித்த ஒப்பற்ற தலைவனே! திருநீறு அணிந்த பொன்னிறத் திருமேனியின்கண் நறுமணமும் கற்பூரப் பொடியின் மணமும் கலந்து என் அகத்திலும் புறத்திலும் புது மணம் கமழச்செய்யும் அமுத மாகியவனே! பொன்னம்பலமாகிய திருச்சிற்றம்பலத்தின்கண் திருவடி பொருந்த திருக்கூத்தாடுகின்ற அருளரசாகிய சிவனே! என் சொன் மாலையை ஏற்று அணிந்தருளுக. எ.று.

தம்முடைய மனத்தின்கண்ணும், தமக்குப் புறத்திலும் அடிக்கடி அருளொளியுருவாய் ஆங்காங்குத் தோன்றித் தமக்குக் காட்சி தந்ததை இனிது விளங்க, "அடிக்கடி என் அகத்தினிலும் புறத்தினிலும் சோதி அருள் உருவாய்த் திரிந்து திரிந்து அருள்கின்ற பொருளே" என்று புகல் கின்றார். சோதியுருவாய்த் திரிந்து திரிந்து அருள்வது, "உலப்பிலா ஆனந்தமாய்த் தேனினைச் சொரிந்து புறம் புறம் திரிந்த செல்வமே சிவபெருமானே" (பிடித்த) என்ற மணிவாசகத்தை நினைப்பித்து துணர்க. படி-உலகம். வேதகங்களில் உரைக்கப்படுகின்ற மந்திரங்கள்

எண்ணிறந்தனவாதல் பற்றி, "அளவில் மறை" என உரைக்கின்றார். வேதத்தின் முடிவிலும் ஆகமத்தின் முடிவிலும் பரசிவத்தின் திருவடி ஞானம் விளங்குதலின், "மறைமுடிமேல் ஆகமத்தின் முடிமேல் பதிந்த பதம்" எனவும், அத் திருவடி ஞானம் தமக்கும் எய்தினமைதோன்ற, "என் முடிமேல் பதித்த தனிப் பதியே" எனவும், திருநீறு அணிந்த பொன்னிறமேனியை, "பொடிக் கனகத் திருமேனி" எனவும், தமது திருமேனியின்கண் சிவ மணமும் கற்பூர மணமும் உள்ளும் புறமும் ஒப்பக் கமழ்வது பற்றி, "திருமேனித் திருமணம் கற்பூரப் பொடி மணத்தோடு அகம் புறமும் புது மணஞ் செய் அமுதே" எனவும் போற்றுகின்றார். சிவத்தின் திருமேனி பொன்னிறமாதலின் அதன்கண் எழும் சிவ மணத்தைக் "கனகத் திருமேனித் திருமணம்" என்று சிறப்பிக்கின்றார். தில்லையிலுள்ள பொன்னம்பலத்தில் திருச்சிற்றம்பலம் உளதாகலின், "கனக அம்பலத்தே திருச்சிற்றம்பலத்தே" என்று சிறப்பித்துக் காட்டுகின்றார். அலங்கல் - மாலை. (24)

4114. அறையாத மிகுபெருங்காற் றடித்தாலும் சிறிதும்
அசையாதே அவியாதே அண்டபகிர் அண்டத்
துறையாவும் பிண்டவகைத் துறைமுழுதும் விளங்கத்
தூண்டாதே விளங்குகின்ற ஜோதிமணி விளக்கே
மறையாதே குறையாதே களங்கமும் இல்லாதே
மயக்காதே பனிக்காதே வயங்குகின்ற மதியே
இறையாய்எவ் வுயிரகத்தும் அகப்புறத்தும் புறத்தும்
இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

உரை : மோதுதலின்றி மிக்கெழும் பெருங்காற்று வந்து அடித்தாலும் சிறிதும் அசைவதும் அவிவதுமின்றி, அண்ட பகிரண்ட வகைகள் யாவிலும் பிண்ட வகைகள் முழுவதும் ஒளி பெறத் தூண்டுதலின்றித் திகழ்கின்ற அருட்சோதியையுடைய அழகிய விளக்குப் போல்பவனே! மறைவதும், தேய்வதும், களங்க மடைதலும் இல்லாமல் மக்கள் உயிரை மயக்குவதும், நடுக்குவதும் செய்யாத முழுத் திங்கள் போல்பவனே! எவ்வுயிரிடத்தும் அகத்தும் புறத்தும் தங்குபவனாய் விளங்குகின்ற கூத்தப் பெருமானே! யான் இசைக்கின்ற சொன் மாலையை அணிந்தருள்வாயாக. எ.று.

அறைதல் - மிக்கு நின்று தாக்குதல். உலகியல் விளக்குகள் காற்றடித்தால் அசைவதும் அவிதலும் இயல்பாதலால் அவற்றின் நீக்குதற்கு, "மிகு பெருங்காற்று அடித்தாலும் சிறிதும் அசையாதே அவியாதே தூண்டாதே விளங்குகின்ற சோதி மணி விளக்கே" என்று சொல்லுகின்றார். சிவத்தின் அருளொளி தோயாத இடம் எங்குமில்லை என்பது புலப்படுத்தற்கு, "அண்ட பகிரண்டத் துறையாவும் பிண்ட வகைத் துறை முழுதும் விளங்க" என்று உரைக்கின்றார். அண்டம் - பெரியது. பிண்டம் - சிறிய அணு வுருவானது. சிவபெருமானைப் பூரண சந்திரனாக வைத்துப் புகழ்கின்றாராதலால் அச் சந்திரனிடத்து உள்ள குறைகளெல்லாம் போக்குதற்கு, "மறையாது குறையாது களங்கமும்

இல்லாது மயக்காது பனிக்காது வயங்குகின்ற மதியே'' என்று இயம்புகின்றார். நில வொளிக்கு மக்களை மயக்கம் உறுவிப்பதும், குளிரால் நடுங்கச் செய்வதும் இயல்பாதலால், ''மயக்காதே பனிக்காதே வயங்குகின்ற மதியே'' என மொழிகின்றார். இறை, இறைவன்; எங்கும் தங்குபவன். எவ்வுயிரிடத்தும் உயிர்க்குயிராய்த் தங்கும் இயல்பினனாதலின், ''எவ்வுயிரகத்தும் அகப்புறத்தும் புறத்தும் இறையாய் இலங்கும் அரசே'' என இயைக்க. இசை, ஈண்டு இசைக்கின்ற சொல். மாலை மேற்று. (25)

4115. பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப்
பக்கம்நின்று கேட்டாலும் பரிந்துஉணர்ந் தாலும்
ஈர்த்தாலும் பிடித்தாலும் கட்டிஅணைத் தாலும்
இத்தனைக்கும் தித்திக்கும் இனித்தசுவைக் கரும்பே
வேர்த்தாவி மயங்காது கனிந்தநறுங் கனியே
மெய்ம்மைஅறி வானந்தம் விளக்கும்அருள் அமுதே
தீர்த்தாஎன் றன்பர்எலாம் தொழப்பொதுவில் நடிக்கும்
தெய்வநடத் தரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

உரை : கண்களால் பார்த்தாலும், மனத்தால் நினைத்தாலும், வாயாற் படித்தாலும், பிறர் படிக்கப் பக்கத்தே நின்று செவியாற் கேட்டாலும், கேட்ட பொருளை ஆர்வத்தோடு உள்ளத்தில் உணர்ந் தாலும், கைகளால் இழுத்தாலும், பிடித்தாலும், கட்டியணைத்தாலும் இத்தனைக்கும் தித்திக்கின்ற இனிய சுவை பொருந்திய கரும்பு போல்பவனே! வெம்மையுற்றுக் கயங்காமல் கனிந்து முதிர்ந்த மணமிக்க மாங்கனி போல்பவனே! சத்து, சித்து, ஆனந்தமாகிய மூன்றையும் விளங்கச்செய்யும் திருவருள் ஞான அமுதமே! தீர்த்தனே என்று மெய்யன்பர்கள் எல்லாம் தொழுது வணங்க அம்பலத்தின் தெய்வ நடம் புரிகின்ற சிவபெருமானே! சிறியவனாகிய எனது சொன் மாலையை ஏற்றருளுக. எ.று.

உலகியற் கரும்பாலையில் இட்டு ஆட்டியும் துண்டு துண்டாக வெட்டி மென்றும் சுவைக்கும் இயல்பினதாக, இச் சிவக்கரும்பு பார்த் தாலும், நினைத்தாலும், படித்தாலும் படிக்கப் பக்க நின்று கேட்டாலும், பரிந்து உள்ளுணர்ந்தாலும், ஈர்த்தாலும், பிடித்தாலும், கட்டியணைத் தாலும் இத்தனைக்கும் தித்திக்கும் ஏற்றமுடையது'' என்று இயம்புகின்றார். வெயில் வெம்மையால் வெதும்பியும், மேல் தோல் சுருங்கியும் கனியும் உலகியல் மாங்கனி போலின்றித் தனக்குரிய நலம் குறைதலின் இன்பமாய் இயலுதலின் சிவமாகிய கனியை, ''வேர்த்தாவி மயங்காது கனிந்த நறுங்கனி'' என்று விளம்புகின்றார். மெய்ம்மை, அறிவு, ஆனந்தம் என்ற மூன்றும் முறையே சத்து, சித்து, ஆனந்தம் என வழங்கும். இதுவே சச்சிதானந்தம் எனவுமாகும். சச்சிதானந்தத்தின் உண்மைத் தன்மையையுணரும் அறிவு சிவஞானத்தால் விளங்குவது பற்றி, ''மெய்ம்மை அறிவானந்தம் விளக்கும் அருளமுதே'' என்று போற்றுகின்றார். சிவபெருமானை, ''பூந்துருத்தி நகர் தீர்த்தன்'' என்று திருநாவுக்கரசர் பாடிப் பரவுதல் பற்றி, ''தீர்த்தா என்றன்பர் எலாம்

தொழப் பொதுவில் நடிக்கும் தெய்வ நடத்தரசே" என்று பாராட்டுகின்றார். தமது எளிமையைப் புலப்படுத்தற்கு அருள் விளக்கச் சொன்மாலையை, "சிறு மொழி" என்று கூறுகின்றார். (26)

4116. பற்றுதலும் விடுதலும்உள் அடங்குதலும் மீட்டும்
படுதலொடு சுடுதலும்புண் படுத்தலும்இல் லாதே
உற்றொளிகொண் டோங்கிஎங்கும் தன்மயமாய் ஞான
உருவாகி உயிர்க்குயிராய் ஓங்குகின்ற நெருப்பே
சுற்றுதலும் தோன்றுதலும் மறைதலும்வெச் சென்றே
சுடுதலும்இல் லாதென்றும் துலங்குகின்ற சுடரே
முற்றும்உணர்ந் தவர்உளத்தே திருச்சிற்றம் பலத்தே
முயங்கும்நடத் தரசேஎன் மொழியும்அணிந் தருளே.

உரை: பொருள்களைப் பற்றுவதும், பற்றுமல் விடுவதும், பற்றிய பொருளுக்குள் ஒடுங்குவதும், மீளவும் புகைந்து ஓங்குவதும், சுடுவதும், தீண்டிய பொருளைச் சுட்டுப் புண்ணுறுவிப்பதுமின்றி, ஒளி மிக்கு ஓங்குவதும், எவ்விடத்தும் தன்மயமாய் ஞானவுருக் கொண்டு உயிர்க்குயிராய் விளங்குகின்ற நெருப்பைப் போல்பவனே! வளைந்தெழுதலும், ஒளிர்ந்து தோன்றுவதும், தோன்றாது மறைதலும், சுரீல் எனச் சுடுதலும் இல்லாமல் எப்பொழுதும் விளக்கமுறுகின்ற சுடர் போன்றவனே! முழுதுமுணர்ந்த ஞானிகளின் உள்ளத்திலும் திருச்சிற்றம்பலத்திலும் நடம் புரிகின்ற அருளரசே! என்னுடைய சொன்மாலையை ஏற்று அணிந்தருளுக. எ.று.

பற்றுதற்குரிய பொருள்களைப் பற்றியெரிப்பதும், அல்லாதவற்றைத் தீண்டாதொழிவதும் தீக்கு இயல்பாதலின், "பற்றுதலும் விடுதலும் இல்லாது" எனவும், சில பொருள்களில் உள்ளே கனைந்து பின்புறத்தே விளங்குவது பற்றி, "உள்ளடங்குதலும் மீட்டும் படுதலும் சுடுதலும் இல்லாது" எனவும் இசைக்கின்றார். நீர்க்குள் அடங்குவதும் மிகுவதும் காண்க. தீச் சுட்ட வுடம்பின்கண் புண்ணுண்டாதலால், "புண் படுத்தலும்" எனவுரைக்கின்றார். ஒளியுடன் உயர்ந்து தன்னைச் சார்ந்த பொருளையும் தன்னுடைய நிறமும் தன்மையும் உடையதாக்கும் நெருப்புப் போலத் தன்னைச் சார்ந்தாரைச் சிவஞானவுருவினராக்குவது விளங்க, "தன்மயமாய் ஞானவுருவாகி" எனவுரைக்கின்றார். வெச்சென்று சுடுதல் - சுரீல் எனச் சுடுதல்; குறிப்பு மொழி. முற்றும் உணர்ந்தவர் - முழுதுணர்ந்த சிவஞானிகள். ஞானிகளில் தூய வுள்ளத்தில் எழுந்தருளுவது பற்றி, திருச்சிற்றம்பலத்தோடு ஒப்ப நிறுத்தி ஓதுகின்றார். முயங்குதல் - ஈண்டுக் கலந்து நின்று ஆடுதல் மேற்று. (27)

4117. ஐம்பூத பரங்கள்முதல் நான்கும்அவற் றுள்ளே
அடுத்திடுநந் நான்கும்அவை அகம்புறமேல் நடுக்கீழ்
கம்பூத பக்கமுதல் எல்லாந்தன் மயமாய்க்
காணும்அவற் றப்புறமும் கலந்ததனிக் கனலே

செம்பூத உலகங்கள் பூதாண்ட வகைகள்
செழித்திடநற் கதிர்பரப்பித் திகழ்கின்ற சுடரே
வெம்பூதத் தடைதவிர்ந்தார் ஏத்தமணி மன்றில்
விளங்குநடத் தரசேஎன் விளம்பும்அணிந் தருளே.

உரை : நில முதலிய பூதங்கள் ஐந்தனுள் நிலத்துக்கு மேலன வாகிய பூதங்கள் நான்கினும் அவற்றிற்குள் அடுத்தடுத்து நிற்கும் புறமும் அகமுமாகிய தூலமிரண்டும் சூக்குமம் அதிசூக்குமமிரண்டும் என நந்நான்காய் விரியும் பூத வகைகளிலும், அகம், புறம், நடு, மேல், கீழ் எனக் கூறுபடும் வான முதலாக நிற்கும் பூதங்கள் எல்லாவற்றினும் தன்மயமாய்க் காணப்படும் அவற்றுக்கு அப்புறமாய்க் கலந்து நிற்பதாகிய தனிக் கனலாகிய பெருமானே! செவ்விய பூத வகை களாகிய உலகங்களும், இத்தகைய பூதங்களையுடைய அண்ட வகை களும் செழிப்புடன் விளங்க நல்ல கிரணங்களைப் பரப்பியிலங்குகின்ற சுடராகிய பரம்பொருளே! வெவ்விய மாயா காரியமாகிய நில முதலிய பூதங்கள் விளைவிக்கும் தடைகளையறுத்துயர்ந்தோர் வழிபடும் வகையில் அழகிய அம்பலத்தின்கண் திருக்கூத்தியற்றும் அருளரசாகிய சிவ பெருமானே! நான் சொல்லும் சொன் மாலையையும் அணிந் தருளுவாயாக. எ.று.

ஐம்பூதங்கள் நிலம், நீர், தீ, காற்று, வானம் என்பன. நிலமாகிய பூதத்துக்கு மேலுள்ளன நீர் முதல் நான்கும் பரம் எனப்படுகின்றன. ஒவ்வொரு பூதமும் அகம், புறம், தூலம், சூக்குமம் என நான்கு கூறுபட்டு, தூலம் அகமும் புறமுமாதல் போலச் சூக்குமமும், சூக்குமம் அதிசூக்குமமென இரண்டாதலின், அவற்றுள்ளே அடுத்திடும் நன்நான்கும் என்றும், ஒவ்வொன்றும் அகம், புறம், மேல், கீழ், நடு எனப் பக்கக் கூறுகளைப் பெறுவதால், "அகம் புறம் மேல் நடுக் கீழ்ப் பூத பக்க முதல் எல்லாம்" என்றும் எடுத்தோதுகின்றார். கம்பூதம், வானமாகிய பூதம். இக்கூறுபாடுகள் வானமாகிய பூதத்துக்கும் உண்மை புலப்படுத்தற்கு, "கம்பூத பக்க முதல்" எனக் கூறுகின்றார். பூதம் ஐந்தினும் அவற்றைத் தன்கண் அடக்கி நிற்கும் அண்டவெளியிலும் நீக்கமறக் கலந்தொளிர்வதால் சிவத்தைக் கனலாக வைத்து, "அவற்று அப்புறமும் கலந்த தனிக் கனலே" என்று போற்றுகின்றார். பூத காரியக் கனலின் வேறுபடுத்தல் வேண்டி, "தனிக் கனலே" எனச் சிறப்பிக்கின்றார். அகமும் புறமும் தூலமும் சூக்குமமும் எனப் பகுக்கப்படாத நிலையில் பொது வகைப் பூதங்களாகப் புகல்கின்றமை விளங்க, செம்பூதவுலகங்கள்" என்று செப்புகின்றார்; இடைச் சொல் முதலியன கலவாத சொற்களைச் "செஞ்சொல்" என வழங்குதல் போல என்க. பல்வகையுலகங்களையும் உலகந்தோறும் பல்வகை பூதங்களையும் தன்னுட் கொண்டது அண்டமெனத் தெரிவித்தற்கு, "பூதாண்ட வகைகள்" என மொழிகின்றார். கனலிடத்தெழும் ஒளிச்சுடர் போலச் சிவமாகிய கனலிடத்தில் எழும் அருட் கதிர்த் தண்சுடரைச் சிறப்பித் தற்கு, "நற்கதிர் பரப்பித் திகழ்கின்ற சுடரே" என விளம்புகின்றார். மாயா காரியமாதலால் நில முதலிய பூதங்கள் தன்கண் வாழும் உயிர்கட்கு உலகியற் பற்றை விளைவித்துச் செம்பொருளாகிய சிவத்தை

நாடா வகையில் தடைசெய்வது கண்டு சிவஞானச் செல்வர்களை, "வெம்பூதத் தடை தவிர்த்தார்" என்று போற்றுகின்றார். விளிம்பு, முதனிலைத் தொழிலாகுபெயர். (28)

4118. வாதுறும்இந் தியகரண பரங்கள்முதல் நான்கும்
வகுத்திடுநந் நான்கும்அகம் புறமேல்கீழ் நடுப்பால்
ஓதுறும்மற் றெல்லாந்தன் மயமாகக் கலந்தே
ஓங்கவற்றின் அப்புறமும் ஒளிர்கின்ற ஒளியே
சூதுறுமிந் தியகரண லோகாண்டம் அனைத்தும்
சுடர்பரப்பி விளங்குகின்ற சுயஞ்சோதிச் சுடரே
போதுறுவார் பலர்நின்று போற்றநடம் பொதுவில்
புரியும்நடத் தரசேஎன் புகலும்அணிந் தருளே.

உரை : பிணக்கம் செய்யும்கண் முதலிய இந்திரியங்களையியக்கும் மன முதலிய கரணங்களாகிய நான்கும், அவற்றை அகம், புறம், தூலம், சூக்குமம் என வகுக்க வரும் நந்நான்கும், அகம் புறம் மேல் கீழ் நடு எனப் பகுத்துக் கண்டு ஓதப்படும் எல்லாக் கூறுகளிலும் தன்மயமாக்கிக் கலந்து நின்று அக்கரணக் கூறுகட்கு அப்பாலும் சென்று திகழும் அறிவொளியாகிய சிவமே! சூது விளைவிக்கும் இவ்விந்திரிய கரண தத்துவ புவனங்கள் அனைத்திலும் தன் கரணங்களைப் பரப்பி விளங்கும் தனித்த சிவபரஞ் சுடரே! தன்பால் வருவோர் அனைவரும் கண்டு போற்ற அம்பலத்தில் நடம் புரியும் அருளரசே! யான் சொல்லுகின்ற சொன் மாலையை ஏற்று அணிந்தருளுக. எ.று.

கண் முதலிய இந்திரியங்கள் மன முதலிய கரணங்களோடு இணங்கியும் பிணங்கியும் நிலவுதலால், "வாதுறும் இந்திரிய கரணம்" எனவும், இந்திரியங்களுக்குப் பரமாதலின் கரண நான்கினையும், "பரங்கள்" எனவும் இயம்புகின்றார். மன முதலிய நான்கும், அகம் புறம் தூலம் சூக்குமம் என நந்நான்காய் விரிவது கண்டு, "வகுத்திடும் நந்நான்கும்" என்றும், அவை ஒவ்வொன்றிற்கும் அகம், புறம், மேல், கீழ், நடு என்று கூறுதலுண்மையின், "அகம் புறம் மேல் கீழ் நடுப்பால் ஒன்றும் எல்லாம்" என்றும், இவை யாவும் சிவ கரணங்களாகுமிடத்துச் சிவவொளி பெறுதலால், "எல்லாம் தன்வயமாகக் கலந்து ஓங்க அவற்றில் அப்புறமும் ஒளிர்கின்ற ஒளியே" என்றும் உரைக்கின்றார். கரணங்களைத் தத்துவமெனக் கொண்டு அத் தத்துவங்களிலுள்ள புவனங்களிலும், அவற்றைத் தமக்குள் கொண்ட அண்டங்களிலும் சிவத்தின் சுடரொளி பரந்து திகழ்கிறது என்பாராய், "கரண லோகாண்டம் அனைத்தும் சுடர் பரப்பி விளங்குகின்ற சுயஞ் சோதிச் சுடரே" என்று சொல்லுகின்றார். ஒளிப் பொருள்கள் யாவும் சிவத்தின் அருளொளியால் திகழ்வது போலாது சிவவொளி தனித்த பேரொளியாதலால், "சுயஞ் சோதிச் சுடரே" எனச் சிறப்பிக்கின்றார். போதுறுதல் - வருதல். (29)

4119. பகுதிபர முதல்நான்கும் அவற்றுறுநந் நான்கும்
பரவியெலாம் தன்மயமாம் படிநிறைந்து விளக்கித்
தகுதிபெறும் அப்பகுதிக் கப்புறமும் சென்றே
தனிஒளிச்செங் கோல்நடத்தித் தழைக்கின்ற ஒளியே
மிகுதிபெறு பகுதிஉல கம்பகுதி அண்டம்
விளங்கஅருட் சுடர்பரப்பி விளங்குகின்ற சுடரே
தொகுதிபெறு கடவுளர்கள் ஏத்தமன்றில் நடிக்கும்
துரியநடத் தரசேஎன் சொல்லும்அணிந் தருளே.

உரை : மூலப் பகுதியின் பரமாகிய மான், அகங்காரம், மனம், தன்மாத்திரையாகிய நான்கினும், அவை ஒவ்வொன்றின் அகம், புறம், தூலம், சூக்கும மென்ற நந்நான்கினும் நிறைந்து ஒளி செய்து இவற்றிற்குத் தக நிற்கும் அம்மூலப் பகுதிக்கு அப்புறத்தவாகிய கலை, வித்தை முதலியவற்றிற்கும் அப்பாலும் சென்று, தனித்த ஒளியை யுடைய செங்கோலைச் செலுத்தும் அருட் சிவ வொளியே! மிக்கதாகிய பிரகிருதி தத்துவ புவனங்களிலும் அண்டங்களிலும் அருளொளி பரப்பி விளங்குகின்ற சிவ பரம்பொருளே! கூட்டமாயுள்ள தேவர்கள் கூடிநின்று போற்றும் அம்பலத்தில் ஆடல் புரிகின்ற துரிய நடத்தையுடைய பெருமானே! என்னுடைய இச்சொல் மாலையை ஏற்று அணிந்தருளுக. எ.று.

மூலப் பிரகிருதியாகிய மாயை அவ்வியத்த நிலையில் பகுதியாகவும், வியத்த நிலையில் குணம், ஆங்காரம், மனம், தன்மாத்திரை என்று நான்காதலால், "பகுதி பர முதல் நான்கும்" எனக் கூறுகின்றார். இந்நான்கினை மேற்பாட்டுரைகளில் விரித்து உரைத்துக்கொள்க. பிரகிருதியின் கூறுகள் யாவற்றினும் சிவத்தின் தன்மையும் ஒளியும் நிறைந்திருப்பது பற்றி, "எல்லாம் தன்மயமாம்படி நிறைந்து விளங்கி" எனவும், மூலப்பகுதிக்கு அப்பாலுள்ள வித்திய, தத்துவக் கூறுகட்கும் சிவவொளி பாய்ந்து பரவுகின்றமை விளங்க, "அப்பகுதிக்கு அப்புறமும் சென்றே தனியொளிச் செங்கோல் நடத்தித் தழைக்கின்ற ஒளியே" எனவும் இசைக்கின்றார். தத்துவங்கள் ஒவ்வொன்றிற்கும் புவன வகைகள் கூறப்படுதலால், "பகுதியுலகம் பகுதியண்டம்" என்று பகிர்கின்றார். தொகுதி - கூட்டம். கடவுளர் - தேவர்கள். துரிய நடம் - துரியத்தானத்தில் நின்று சிவம் நடிக்கும் சூக்கும நடனம்! (30)

4120. மாமாயைப் பரமாதி நான்கும்அவற் றுள்ளே
வயங்கியநந் நான்குந்தன் மயத்தாலே விளக்கி
ஆமாறம் மாமாயைக் கப்புறத்தும் நிறைந்தே
அறிவொன்றே வடிவாகி விளங்குகின்ற ஒளியே
தாமாயா புவனங்கள் மாமாயை அண்டம்
தழைத்துவிளங் கிடக்கதிர்செய் தனித்த பெருஞ் சுடரே
தேமாலும் பிரமனும்நின் றேத்தமன்றில் நடிக்கும்
தெய்வநடத் தரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

**உரை :** மாமண்டலத்தில் பரமாகிய மாமாயை, சுத்தம், அசுத்தம் சுத்தாசுத்தமென்ற நான்கினையும், அவற்றின் நந்நான்கு கூறுகளையும் தன் அருட் சக்தியால் விளங்கச் செய்து அதன் இன்றியமையாமை தோன்றுமாறு அம் மாயைக்குள்ளும் புறத்தும் நிறைந்து அறிவுவடிவாய் விளங்குகின்ற சிவவொளியே! மாயா புவனங்களிலும் மாய அண்டங் களிலும் அவை தழைக்குமாறு கலந்து நின்று ஒளி செய்கின்ற தனிப் பெருஞ்சுடரே! தேவனாகிய திருமாலும் பிரமனும் நின்று போற்ற அம்பலத்தில் தெய்வ நடம் புரியும் சிவபெருமானே! எளிய என் சொன் மாலையைத் தோளில் ஏற்று அணிந்தருளுக. எ-று.

சிவசத்தியில் ஒடுங்கியிருக்கும் மாயை, சிவசத்தி கலக்கக் கலக்குண்டு சுத்தம், அசுத்தம், சுத்தாசுத்தம் என நிற்பது கொண்டு, "மாமாயைப் பரம்" என வுரைக்கின்றார். இவற்றையும் நந்நான்காய்ப் பிரித்துக் காணும் வகையில், "அவற்றுள்ளே வயங்கிய நந்நான்கும்" என்றும், அவற்றின் அகத்தும் புறத்தும் அறிவொளியாய்ச் சிவம் நிறைவது புலப்பட, "நந்நான்கும் தன்மயத்தாலே விளக்கி" என்றும், இக்கூறுகள் அனைத்திலும் அறிவு வடிவாய்ச் சிவவொளி பரவுதல் விளங்க, "அறிவொன்றே வடிவாகி விளங்குகின்ற ஒளியே" என்றும் இயம்புகின்றார். மாயையும் தத்துவக் கூறுகளிலும் புவனங்களும் அண்டங்கள் கூறப்படுதலால் அவற்றையும் ஈண்டுக் கூறுகின்றார். தே - தேவு; தெய்வமுமாம். (31)

4121. சுத்தபர முதல்நான்கும் அவற்றுறுநந் நான்கும்
துயஒளி வடிவாகத் துலங்கும்ஒளி அளித்தே
நித்தபரம் பரநடுவாய் முதலாய்அந் தமதாய்
நீடியஓர் பெருநிலைமேல் ஆடியபேர் ஒளியே
வித்தமுறும் சுத்தபர லோகாண்டம் அனைத்தும்
விளக்கமுறச் சுடர்பரப்பி விளங்குகின்ற சுடரே
சத்தியஞா னனந்தச் சித்தர்புகழ் பொதுவில்
தனித்தநடத் தரசேஎன் சாற்றும் அணிந் தருளே.

**உரை :** சுத்த தத்துவத்தின் மேலுள்ள பரவித்தை, பரவீசுரம், பரவிந்து, பரநாதம் ஆகிய நான்கும் அவற்றின் அகம், புறம், தூலம், சூக்குமம் என வரும் நந்நான்கும் தூய ஒளி வடிவில் திகழச் செய்து, அழியாத பரம்பரமாய் முதல் இடை கடையாய் நீடுகின்ற பெரிய பரசிவ நிலையில் நிருத்தமிடுகின்றதாகிய பெரிய ஒளிப் பொருளாகிய சிவனே! ஞானத்தாற் காண்டலுறும் சுத்த தத்துவ புவனங்களும் அவற்றைத் தம்முட்கொண்ட அண்டங்கள் யாவும் விளக்கமுறச் சுடர் பரப்பி நிற்கின்ற அருட் சுடரே! உண்மை ஞானவின்பம் நுகரும் சிந்தனை யாளர்கள் புகழ்ந்தோதுகின்ற அம்பலத்தில் தனிநடம் புரிகின்ற அருளரசே! யான் சாற்றுகின்ற சொன் மாலையையும் ஏற்று அணிந்தருள் வாயாக. எ-று.

சுத்த பரம், சுத்த மாயா தத்துவம். அதன் மத்தகத்துறுவது நாதம். அதற்கு மேலன பரவித்தை, பரவீசுரம், பரவிந்து, பரநாதம்

நான்குமாகும். பரநிலையில் சதாசிவத்துக்கு இடமில்லையாதலின் நான்குமே கொள்ளப்பட்டன. பரசிவநிலை இவற்றிற்கெல்லாம் முழு முதலாதல் பற்றி, "நித்த பரம்பர நடுவாய் முதலாய் அந்தமதாய் நீடுவோர் பெருநிலை" என மொழிகின்றார். சத்திய ஞானம், - உண்மை ஞானம். தத்துவந்தோறும் கண்டுரைக்கப்படும் உலகங்களும் அண்டங்களும் தத்துவ ஞானிகட்கு விளக்கமாதலைக் குறித்தற்கு, "வித்தமுறும் சுத்த பரலோகாண்டம்" எனப் பகர்கின்றார். வித்தம் - ஞானம். சித்தர் - சிந்தனையாளர். சித்தத்தில் வைத்துக் காண்பவர் என்றற்குச் "சித்தர்" என்று செப்புகின்றார். (32)

4122. சாற்றுகின்ற கலைஐந்தில் பரமாதி நான்கும்
தக்கஅவற் றூடிருந்த நந்நான்கும் நிறைந்தே
ஊற்றுகின்ற அகம்புறமேல் நடுக்கீழ்மற் றனைத்தும்
உற்றிடுந்தன் மயமாகி ஒளிர்கின்ற ஒளியே
தோற்றுகின்ற கலைஉலகம் கலைஅண்ட முழுதும்
துலங்குகின்ற சுடர்பரப்பிச் சூழ்கின்ற சுடரே
போற்றுகின்ற மெய் அடியர் களிப்பநடித் தருளும்
பொதுவில்நடத் தரசேஎன் புகலும் அணிந் தருளே.

உரை: நிவிர்த்தி முதலாகச் சொல்லப்படுகின்ற கலையைந்தனுள், அந்நிவர்த்திக்கு மேலுள்ள பிரதிட்டை, வித்தை, சாந்தி, அதீதை என்ற நான்கினும் அவற்றின் உள்ளீடாக விரியும் அகம், புறம், தூலம், சூக்குமம் நந்நான்கிலும் நிறைந்து மிகுகின்ற அகம், புறம், மேல், கீழ், நடு என்ற பக்க வகைகளிலும் செறிந்து தற்சிவமயமாய்த் திகழ்கின்ற ஒளிப்பொருளாகிய பரம்பொருளே! இக் கலை வகைகளில் தோன்றுகின்ற புவனங்கள், அண்டங்கள் யாவற்றிலும் சுடர் பரப்பி விளக்குகின்ற சிவபரஞ் சுடரே! திருமுன்னின்று துதிக்கின்ற மெய்யடியார்கள் மகிழ்வுற அம்பலத்தில் நடித்தருளும் கூத்தப் பெருமானே! யான் புகலும் சொல் மாலையை ஏற்று மகிழ்ந்தருள்க. எ.று.

நிவிர்த்தி முதலிய கலைவகை யைந்தின் இயல்புகளையும், இவற்றுள் காண நிற்கும் புவனங்களின் இயல்களையும் சிவஞான போதச் சிவாக்கிர பாடியத்தும் சிவஞான மாபாடியத்தும் காண்க. கலைக்குள்ளடங்கும் புவனம் கலையுலகம் எனப்படுகிறது. அல்லும் பகலும் இடையறவின்றித் துதிப்பதால், "போற்றுகின்ற மெய்யடியார்" என்று புகழ்கின்றார். புகல் - புகன்றுரைக்கப்படும் சொன்மாலை. (33)

4123. நாட்டியஓங் காரம்ஐந்தில் பரமுதல்ஓர் நான்கும்
நந்நான்கு மாறிடத்தும் நயந்துநிறைந் தருளி
ஈட்டியசெம் பொருள்நிலையோ டிலக்கியமும் விளங்க
இனிதுநின்று விளங்குகின்ற இன்பமய ஒளியே
கூட்டியஓங் காரஉல கோங்கார அண்டம்
குடிவிளங்கக் கதிர்பரப்பிக் குலவுபெருஞ் சுடரே
பாட்டியல்கொண் டன்பரெலாம் போற்றமன்றில் நடிக்கும்
பரமநடத் தரசேஎன் பாட்டும்அணிந் தருளே.

உரை : ஐந்தாகவுரைக்கின்ற ஓங்காரத்தின் பரமாகிய வாசகம், தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என்ற நான்கினும், அகம், புறம், அகப்புறம், புறப்புறம் என நந்நான்காய் விரியுமாறு நிறுத்தி அவற்றினிடத்தும் நிறைந்து, தொகுக்கப்பட்ட ஞானப்பொருள் போல ஞானத விலக்கியமாய் உள்ளத்தே இனிது நின்று விளங்குகின்ற இன்ப வொளியாகிய பரசிவனே! பிரணவாகாரமாய் அமைந்த உலகுகளிலும் அண்டங்களிலும் நிலைபெற இருந்து ஒளி பரப்பித் திகழ்கின்ற சிவபரஞ் சுடரே! பாட்டு வகைகளைக் கொண்டு பராவுகின்ற மெய்யன்பர்கள் தொழுது துதிக்க அம்பலத்தில் நடிக்கின்ற பரம நடத்தையுடைய நடராசப் பெருமானே, எனது இப்பாட்டையும் ஏற்றருள்க. எ.று.

அகார வுகார மகாரமாகிய வன்ன ரூபத்தைக்கொண்டு, பிரணவ மென நாட்டப்பட்டமை புலப்பட, "நாட்டிய ஓங்காரம்" எனவும், ஞானதம், வாசகம், தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என ஐந்தாயினும், ஞானதம் அபரமாகலின், ஏனை நான்கையும், "பர முதல் நான்கு" எனவும் இயம்புகின்றார். செம்பொருள் - ஞானப்பொருள். இதுவும் படிப்படியாய்ப் பெருகும் தன்மையதென்பது தோன்ற, "ஈட்டிய செம்பொருள்" என இசைக்கின்றார். அகார வுகார மகாரங்கள் கூட்டொளியாதலால், "கூட்டிய ஓங்காரம்" என்றும், இதுவும் தத்துவம், கலைகள் ஆகியவை போலப் புவனண்டங்கட்கு இடமாவ தென்பது விளங்க, "ஓங்காரவுலகு ஓங்கார அண்டம்" என்றும் உரைக் கின்றார். பாவும் பாவினமும் எனப் பாட்டியல் பலவாதலால், எல்லாம் அடங்கப் "பாட்டியல்" எனப் பொதுப்படக் கூறுகின்றார். பரமநடம் - மேலான திருக்கூத்து; பஞ்ச கிருத்திய நடனம் எனினும் அமையும். (34)

4124. மன்னுகின்ற அபரசத்திப் பரமாதி அவற்றுள்
வகுத்தநிலை யாதிஎலாம் வயங்கவயின் எல்லாம்
பன்னுகின்ற பற்பலவாம் விசித்திரசித் திரங்கள்
பரவிவிளங் கிடவிளங்கிப் பதிந்தருளும் ஒளியே
துன்அபர சத்திஉல கபரசத்தி அண்டம்
சுகம்பெறவே கதிர்பரப்பித் துலங்குகின்ற சுடரே
உன்னும்அன்பர் உளங்களிக்கத் திருச்சிற்றம் பலத்தே
ஓங்கும்நடத் தரசேஎன் உரையும்அணிந் தருளே.

உரை : சிவத்தின்கண் நிலைபெறுகின்ற சத்திகளுள் அபர சத்திக்குப் பரமாகிய சத்திகள் பலவாம்; அவற்றுள் வகுத்துரைக்கும் சத்தி வகைகள் யாவும் அவ்வச் சத்தர்களின் இடமெங்கும் அமைந்த வகையையுரைக்கின்ற பற்பல வகையாகிய விசித்திர சித்திரங்களிற் பரந்து விளங்குமாறு பதித்துத் திகழும் சிவவொளியே; சேர்ந்துள்ள அபர சத்திகளின் புவனங்களும் அண்டங்களும் நலம் பெறற் பொருட்டு அருட் கதிரைப் பரப்பியொளிர்கின்ற அருட் சுடரே! நினைக்கின்ற அன்பர்களின் மனம் மகிழத் திருச்சிற்றம்பலத்தில் ஓங்குகின்ற நடனத்தையுடைய அருளரசே! என் சொன் மாலையையும் ஏற்றருளுக. எ.று.

சிவ பரம்பொருளில் ஒடுங்கியிருக்கும் சிவசத்தி மிகப் பலவாய் விரிதலின், அவற்றைப் பரம் எனவும், அபரமெனவும் பகுத்துக் காணும் அறிஞர், அபர சத்திக்கண் பல்வேறு சத்திகளைக் கண்டுரைத்தலால், "பன்னுகின்ற பரமாதி" என்றும், அச்சத்திகட்கு இடமாகிய சத்தர்கள் பால் அவை நிலைபெறுவது காட்டற்கு, "அவற்றுள் வயங்கு நிலையாதி யெலாம் வயின் எல்லாம் பற்பலவாம்" என்றும் கூறுகின்றார். சத்திகள் தங்குவதற்குரிய சத்தர் அவற்றிற்கு இடமாதலின், "வயின்" என்கின்றார். வயின் - இடம். சத்தரிடத்தே தங்கும் சத்திகளின் வியாபாரம் சைத்திரியமாகவும் விசித்திரமாகவும் நிலவுதல் பற்றி, அவை இனிது விளங்குமாறு, "விசித்திர சித்திரங்கள் பரவி விளங்கிட விளங்கிப் பதித்தருளும் பதியே" எனப் பராவுகின்றார். சத்தியின் செயல் வகைகள் பொருள் தோறும் பதிந்து இயக்கினாலன்றித் தொழில் வகைகள் இயங்காமை புலப்பட, "பரவி விளங்கிட விளங்கிப் பதித் தருளும் ஒளியே" என வுரைக்கின்றார். பலவாகிய சத்திகளும் தத்துவங்களாதலின், அவற்றிற்கமைந்த புவனங்களையும் அண்டங் களையும் நினைப்பிப்பாராய், "துன்னபர சக்தி உலக பரசத்தி அண்டம்" என விளம்புகின்றார். பன்னுதல் - சொல்லுதல். துன்னுதல் - சேர்தல்; செறிதலுமாம். (35

4125. விளங்குபர சத்திகளின் பரமாதி அவற்றுள்
விரிந்தநிலை யாதிஎலாம் விளங்கிஒளி வழங்கிக்
களங்கமிலாப் பரவெளியில் அந்தம்முதல் நடுத்தான்
காட்டாதே நிறைந்தெங்கும் கலந்திடும்பேர் ஒளியே
உளங்குலவு பரசத்தி உலகமண்ட முழுதும்
ஒளிவிளங்கச் சுடர்பரப்பி ஓங்குதனிச் சுடரே
வளங்குலவு திருப்பொதுவில் மாநடஞ்செய் அரசே
மகிழ்ந்தெனது சொல்எனும்ஓர் மாலைஅணிந் தருளே.

உரை : சிவசத்தி வகைகளில் பரசத்தி வகைகள் பலவாதலால் அவற்றுள் எண்ணிறந்து நிற்கும் பரசத்தி சத்தர்கள் முதலாகிய யாவும் சிவவொளி பரந்து சிறக்க, களங்கம் யாதும் இல்லாத பரசத்தி வெளியாகும் பரவெளியில் முதலிடை கடையெனப் பகுக்கலாகாதவாறு எங்கும் நிறைந்து யாவற்றிலும் கலந்து ஒளிதரும் பரசிவவொளியாகிய பெருமானே! உள்ளத்தாற் காணலுறும் பரசத்தி தத்துவ புவனங்கள் அண்டங்கள் முழுதும் ஒளி பெற்றோங்க அருட்சுடரைப் பரப்பி நிலவும் சிவச் சுடரே! அருள்வளம் பொருந்திய அம்பலத்தில் பெரிய திருக்கூத்தையியற்றுகின்ற பரசிவனே! என் சொன் மலையையும் உவந்தேற்று அணிந்தருளுக. எ.று.

முன்னைப் பாட்டில் அபர சத்தி நிலைகளையுரைத்த வடலூர் வள்ளல் இப்பாட்டில் பரசத்தி நிலைகளையுரைக்கின்றார். பரசத்தியின் வியாபாரம் நிலவுமிடத்தைப் பரவெளியெனவும், அஃது ஆதியந்தம் நடு எனக் கூறுசெய்து காணவியலாதது என்றற்கு, "அந்த முதல் நடுத்தான் காட்டாதே" எனவும் இயம்புகின்றார். பேரருள் நிலைய மாதலால், திருவம்பலத்தை, "வளங் குலவு திருப்பொது" என்று

சிறப்பிக்கின்றார். சொன் மாலையைச் சொல்லாலாகிய மாலையென விளக்குதற்கு, "சொல்லெனும் ஓர் மாலை" என்று விளம்புகின்றார். (86)

4126. தெரிந்தமகா சுத்தபர முதலும்அவற் றுள்ளே
சிறந்தநிலை யாதிகளும் தெளிந்துவிளங் குறவே
பரிந்தஒரு சிவவெளியில் நீக்கம்அற நிறைந்தே
பரமசுக மயமாகிப் பரவியபேர் ஒளியே
விரிந்தமகா சுத்தபர லோகஅண்ட முழுதும்
மெய்அறிவா னந்தநிலை விளக்குகின்ற சுடரே
புரிந்ததவப் பயனாம் பொதுவில்நடத் தரசே
புன்மொழிஎன் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே.

உரை : மகாசுத்தம் எனப்படும் சுத்த தத்துவத்தின் மேலுள்ள, மாயாதீதமாகிய முதற்பொருளும், அதன் வகைகளும் மேம்பட்ட நிலைகளும் தெளிவாக விளக்கம் பெற அமைந்த ஒப்பற்ற சிவ வெளியில் நீக்கமற நிறைந்து பெரிய இன்ப மயமாய்ப் பரந்துள்ள பெரிய ஒளிப் பொருளே! மகாசுத்தமாகிய தத்துவத்திலுள்ள பர புவனங்களும் அண்டங்களும் நிலவும் சச்சிதானந்த நிலையை விளக்குகின்ற சுடர்ப் பொருளாகிய சிவ பரம்பொருளே! செய்த தவப் பயனாக விளங்குகின்ற அம்பலத்தில் ஆடல் புரிகின்ற அருளரசே! தாழ்ந்தது என்று இகழாமல் என்னுடைய சொல் மாலையை மகிழ்வுடன் ஏற்று அணிந்தருளுக. எ.று.

சுத்த மாயைக்கு அப்பாலான அண்மைப் பரவெளியை "மகா சுத்தம்" எனக் குறிக்கின்றார். அவ்வெளியில் மகாசுத்தாவித்தை முதல் மகாசுத்த நாதம் வரை ஐந்து உள்ளனவாதலால் அவற்றை, "மகாசுத்த பரமுதலும் அவற்றுள்ளே சிறந்த நிலையாதிகளும்" என்று கூறுகின்றார். அவைகள் மாயையின் கலப்பின்றித் தூய இன்பமயமாக விளங்குவதால் அவற்றின்கண் சிவவொளி குறைவற நிறைந்து ஒளிர்கின்ற இயல்பை, "ஒரு சிவவொளியில் நீக்கமற நிறைந்து பரமசுக மயமாகிப் பரவிய பேரொளியே" என்று விளக்குகின்றார். ஐந்தாக "விரிந்து மகாசுத்தப் பகுதியாய் இலகுவது பற்றி அதனை, "விரிந்த மகாசுத்தம்" என்று விளம்புகின்றார். அவையும் மாயாதீதத் தத்துவங்களாகக் கொண்டு அவற்றுள் நிற்கும் புவனண்டங்களை, "மகாசுத்த பரலோக அண்டம்" என்று பகருகின்றார். அவற்றுள் நிறைந்து விளங்குவது சச்சிதானந்தம் எனத் தெரிவித்தற்கு, "மெய்யறிவானந்த நிலை" என்று சொல்லுகின்றார். திருவம்பல நடனக் காட்சி கண்டு மகிழ்வார்க்கு அவர் செய்த தவப் பயனாக அமைதலால், "புரிந்த தவப் பயனாகும் பொது" என்று புகழ்கின்றார். புன்மொழி - குற்ற மிகுதியால் தாழ்வுடைய சொன் மாலை. (87)

4127. வாய்ந்தபர நாதம்ஐந்தில் பரமுதலும் அவற்றுள்
மன்னுநிலை யாதிகளும் வயங்கியிட நிறைந்தே
ஆய்ந்தபர சிவவெளியில் வெளிஉருவாய் எல்லாம்
ஆகியதன் இயல்விளக்கி அலர்ந்திடும்பேர் ஒளியே

**தோய்ந்தபர நாதஉல கண்டமெலாம் விளங்கச்**
**சுடர்பரப்பி விளங்குகின்ற தூயதனிச் சுடரே**
**வேய்ந்தமணி மன்றிடத்தே நடம்புரியும் அரசே**
**விளம்புறும்என் சொன்மாலை விளங்கஅணிந் தருளே.**

*உரை : மாயாதீதச் சிவவெளிக்கு மேலதாகிய பரவியோமமும், அதன்கண் விரியும் ஐவகைப் பரநாத முதலிய நிலைகளும் நிறைந்த ஒளி விளங்க அறிவுடையோரால் நுணுகிக் காணப்பட்ட சிவவெளியில் வெளி யுருவாய் அவ்வெளியில் இயலும் பொருள்கள் எல்லாவற்றின் இயல்புகளையும் விளக்கித் தெரிவிக்கும் பேரொளியாகிய சிவ பரம் பொருளே! அவ்வெளியில் கலந்துள்ள பரநாத தத்துவ புவனுண்டங்கள் எல்லாவற்றிலும் ஒளி பரப்பி விளக்கமுறுகின்ற தூய தாகியபரசிவ தனிச் சுடரே! பொன் வேயப்பட்ட அழகிய அம்பலத்தின்கண் ஆடல் புரிகின்ற அருளரசே! இங்கே சொல்லுகின்ற என் சொல் மாலை இனிது விளங்க நின் தோளில் அணிந்தருளுவாயாக. எ.று.*

*சுத்த மாயா மண்டலத்துக்கு அப்பால் மேலுள்ள வியோமமாகிய பரநாத வெளியை, "வாய்ந்த பரநாதம்" எனவும், அதன்கண் நிலவு கின்ற பரநாதம் முதலிய தத்துவ நிலைகளையும் தன்னுள் அடக்கி நிற்கும் பராகாசத்தைச் சிவவெளி என்றும் வடலூர் வள்ளல் குறிப்பாராய், "பரநாதம் ஐந்தில் பரமுதலும் அவற்றுள் மன்னு நிலையாதிகளும் வயங்கியிட நிறைந்தே ஆய்ந்த பரசிவவெளி" எனவும் இயம்புகின்றார். நிலைகள் என்றது பரநாத, பரவிந்து முதலிய தத்துவ நிலை ஐந்தையு மாகும். சிவவெளியில் இந்நிலைகள் தத்துவ வடிவின்றி ஆகாச மயமாய் நிற்பதால், "வெளி யுருவாய்" என்றும், அவற்றைத் தனது சிவமயமாய்க் காணச் செய்தலின், வெளி யுருவாய் எல்லாமாகிய தன் இயல் விளங்கச் செய்கின்றமை புலப்பட, "எல்லாமாகிய தன்னியல் விளக்கி" என்றும் இசைக்கின்றார். எல்லாமாகிய தன்னியல் - எப்பொருளும் எவ்வுயிரும் எல்லாம் சிவமயமாக்கும் பரசிவத்தின் பண்பு இப் பரநாத வெளியில் கலந்துள்ள பரவிந்து முதலிய தத்துவங்களுக் குரிய புவனுண்டங்களில் சிவ பரம்பொருள் தனது சிவவொளியைப் பரப்பி எல்லாம் சிவமயமாய் விளங்கச் செய்து, தான் அவற்றால் விகாரப் படாது தனிப் பரஞ் சுடராய்த் தனித்தோங்குகின்ற தன்மை தோன்ற, "சுடர் பரப்பி விளங்குகின்ற தூய தனிச் சுடரே" என்று துதிக்கின்றார். தில்லையம்பலம் பொன்னால் வேயப்பட்டிருப்பது பற்றி அதனை, "வேய்ந்த மணி மன்று" என்று சிறப்பிக்கின்றார். "தூய செம்பொன்னினால் எழுதி வேய்ந்த சிற்றம்பலம்" (கோயில்) என்று திருநாவுக்கரசர் எடுத் துரைப்பது காண்க.* (38)

**4128. கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே**
**காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே**
**வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரம்அளிக்கும் வரமே**
**மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே**

நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில்நடம் இடுகின்ற சிவமே
என்அரசே யான்புகலும் இசையும்அணிந் தருளே.

உரை : கல்லார், கற்றவர், கண்களால் காண்பவர், காணாதவர், செயல் வல்லவர், மாட்டாதவர், மதியாதவர், மதிப்பவர், நல்லவர் பொல்லாதவர், நரர்கள், தேவர்கள் ஆகிய எல்லார்க்கும் பொதுவாய் அம்பலத்தில் திருக்கூத்து ஆடுகின்ற சிவ பரம்பொருளே! என்னுடைய அருளரசே! யான் சொல்லுகின்ற சொன் மாலையை ஏற்று உவந்தருளுக எ-று.

கல்லார் - கற்றலைச் செய்யாதவர். "கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்" என்று பெரியோர் கூறினும் அவர்களுக்கும் நல்லது கண்டு மகிழுமாறு செய்பவன் என்றற்கு, "களிப்பருளும் களிப்பே" என்று கூறுகின்றார். களிப்புச் செய்கின்ற சிவனைக் 'களிப்பு' என்று கூறுகின்றார். காணார் - குருடர். கண்டவர் - கண்களால் காண்பவர். கண்களால் காண்பவர் நல்லது கண்டு மகிழச் செய்விப்பது போலக் குருடர்க்கும் அறிவுக்கண் தந்து நல்லவன் நலம் கேட்டு உண்மை கண்டு உவக்கச் செய்தலால் சிவனை, "கண்ணளிக்கும் கண்ணே" என்று சிறப்பிக்கின்றார். வல்லவர் செய்தற்குரியவற்றைச் செய்து முடிக்க வல்லவர். செய்ய மாட்டாதவர்களை "மாட்டார்" எனப் பொதுப்படக் கூறுகின்றார். வரம் - செய்து முடிக்கும் வன்மை. வரம் தருபவனை "வரம்" என்று போற்றுகின்றார். மதியார் - பொருளின் உண்மை யுணர்ந்துகொள்ளாதவர். அவர்களுக்கும் உண்மையறிவு தந்து வாழ்விப்பது பற்றி, "மதி கொடுக்கும் மதியே" என்று சிவனை வாழ்த்துகின்றார். நல்லார் - நீதி நெறியில் ஒழுகுபவர். நீதி நெறியை மதியாதவர்களைப் "பொல்லார்" என்றும், நல்லார் பொல்லார் என்ற இரு திறத்தார்க்கும் நடுவில் நீதி யுருவாய் நின்று அருளுவதால், "நடு நின்ற நடுவே" என்றும் பராவுகின்றார். நரர்கள் - மண்ணுலக மக்கள். சுரர்கள் - மேலுலகத்தில் வாழும் தேவர்கள். இவ்விரு திறத்தார்க்கும் நன்மையே செய்வது பற்றிச் சிவபெருமானை, "நலங் கொடுக்கும் நலமே" என்று நவில்கின்றார். ஆடவர், பெண்டிர், சிறியவர், முதியவர், செல்வர், வறியர், இளைஞர், முதியர், உயர்ந்தார், தாழ்ந்தார் என்ற வேறுபாடின்றி யாவர்க்கும் பொதுவாய் யாவரும் கண்டு மகிழ்ந்து வணங்கி வாழ்த்த அம்பலத்தின்கண் திருக்கூத்தாடுகின்றான் சிவபெருமான் என்று தெரிவித்தற் பொருட்டு, "எல்லார்க்கும் பொதுவில் நடம் இடுகின்ற சிவமே" என்று போற்றுகின்றார். இசை - சொல் மாலை. சொல்லுக்கு இசை என்பதும் பெயராதலால் இசை என்றும் இயம்புகின்றார். (39)

4129. காட்சியுறக் கண்களுக்குக் களிக்கும் வண்ணம் உளதாய்க்
கையும்மெய்யும் பரிசிக்கச் சுகபரிசத் ததுவாய்ச்
சூழ்ச்சியுற நாசிக்குச் சுகந்தஞ்செய் குவதாய்த்
தூயசெவிக் கினியதொரு சுகநாதத் ததுவாய்

மாட்சியுற வாய்க்கினிய பெருஞ்சுவைஈ குவதாய்
மறைமுடிமேல் பழுத்தெனக்கு வாய்த்தபெரும் பழமே
ஆட்சியுற அருள்ஒளியால் திருச்சிற்றம் பலத்தே
ஆடல்புரி அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

உரை : கண்களால் கண்ணுறக் கண்டு களிக்குமாறு அமைந்த காட்சிப் பொருளாகவும், கையாலும் உடம்பாலும் தொட்டு அறியத் தக்க பரிசப் பொருளாய், மூக்கினால் நுகர்வார்க்கு நறுமணம் கமழும் பொருளாய், கூர்த்த செவிகளுக்கு இனிய ஓசைப் பொருளாய், வாயால் சுவைத்தற்கினிய பெரிய சுவைப் பொருளாய், வேதமாகிய மரத்தின் உச்சியில் பழுத்து எனக்குக் கிடைத்த பெரும் பழமாய், எவ்வுயிரும் அருள் பெறுமாறு ஒளி யுடையதாகிய திருச்சிற்றம்பலத்தின்கண் திருக்கூத்தாடுகின்ற அருளரசே! எனது இச் சொல் மாலையை உவந்து அணிந்தருள்க. எ.று.

கற்பொறியால் காணத் தக்க பொருள்களும் காட்சி இன்பம் தருவதால் அவையும் சிவமே எனக் கருதி, "காட்சியுறக் கண்களுக்குக் களிக்கும் வண்ணம் உளதாய்" எனக் கூறுகின்றார். உளதாய் - உள் பொருளாய். பரிசித்தல் - தீண்டுதல். தீண்டிய வழிப், பிறக்கும் ஊற்றின்பத்தையும் சிவம் எனக் கருதும் சிறப்புத் தோன்ற வடலூர் வள்ளல், "கையும் மெய்யும் பரிசிக்கச் சுக பரிசத்ததுவாய்" என்று சொல்லுகின்றார். பரிசித்து உண்டாகும் ஊற்றின்பம் சிவபோகம் என்று நினைக்கின்றாராதலால், "சுகப் பரிசத்ததுவாய்" என்கின்றார். சுகந்தம் - நறுமணம். நாசி - மூக்கு. மூக்குணர்வின் நலம் மனத்தால் எண்ணி அறியப்படுதலின் சூழ்ச்சியுற நாசிக்கும் சுகந்தம்-செய்குவது சிவம் என உணரப்பட்டமை அறிக. சொல்வதை நுணுகிக் கேட்டுணரும் செவியைத் தூய செவி எனவும், செவியாற் கேட்கும் போது இன்பம் தரும் ஓசையைச் சுகநாதம் எனவும் சொல்லுகின்றார். உண்பொருளின் பெருமை அதன் இனிய சுவையால் விளங்குதலின், "மாட்சியுற வாய்க்கினிய பெருஞ் சுவை" என்று குறிக்கின்றார். வேத ஞான முடிவில் உணரப்படுகின்ற இன்ப ஞானப் பொருளாதலால் சிவ பரம்பொருளை, "மறைமுடி மேல் பழுத்து எனக்கு வாய்த்த பெரும் பழமே" என்று வாழ்த்துகின்றார். தனது திருவருளாகிய பேரொளி கொண்டு உலகுயிர்களை ஆட்சி புரிவது பற்றி, "ஆட்சியுற அருள் ஒளியால் திருச்சிற்றம் பலத்தே ஆடல் புரி அரசே" என்று உரைக்கின்றார். (40)

4130. திரைஇலதாய் அழிவிலதாய்த் தோலிலதாய்ச் சிறிதும்
சினைப்பிலதாய்ப் பனிப்பிலதாய்ச் செறிந்திடுகோ திலதாய்
விரை இலதாய்ப் புரைஇலதாய் நார்இலதாய் மெய்யே
மெய்யாகி அருள்வண்ணம் விளங்கிஇன்ப மயமாய்ப்
பரைவெளிக்கப் பால்விளங்கு தனிவெளியில்பழுத்தே
படைத்தஎன துளத்தினிக்கக் கிடைத்ததனிப் பழமே
உரைவளர்மா மறைகளெலாம் போற்றமணிப் பொதுவில்
ஓங்கும்நடத் தரசேஎன் உரையும்அணிந் தருளே.

உரை : சுருக்கமில்லாததாயும், அழியாததாயும், தோல் இல்லாத தாயும், சிறிதும் விதையில்லாததாயும், சாறு கசியாததாயும், நிறைந்த கோதில்லாததாயும், நாற்றமில்லாததாயும், வண்டுகளால் துளைக்கப் படாததாயும், உள்ளே நாறுகள் இல்லாததாயும், உண்மையேயுருவாகி அருளே நிறமாய் விளங்கி, இன்பமயமாய்ச் சத்தி வெளிக்கு அப்பாலதாய் விளங்குகின்ற ஒப்பற்ற பரசிவ வெளியில் பழுத்துக் கையில் தந்து எனது உள்ளம் இனிக்குமாறு கிடைத்த தனிச் சிவமாகிய பழமே! புகழப்படுகின்ற பெரிய வேதங்களெல்லாம் துதித்துப் போற்ற அழகிய அம்பலத்தில் உயர்ந்து விளங்கும் திருக்கூத்தை ஆடுகின்ற அருளரசே! எனது சொல் மாலையையும் உவந்து அணிந்தருள்க. எ.று.

திரை - சுருக்கம். நரை - திரை என்றாற்போல. சினைப்பு - விதையுடையதாதல். பளித்தல் - சாறு கசிதல். விரை - மணம். புரை - வண்டுகளால் செய்யப்படும் துளை. திரை முதலிய குற்றங்கள் உலகியற் பழங்களுக்கு உளவாதலின் அவற்றின் வேறுபடுத்தற்கு இங்ஙனம் எடுத்தோதுகின்றார். மெய்ம்மையே சிவத்தின் தோற்றமாதலால், "மெய்யே மெய்யாகி" எனவும், அருளே உருவாதலால் "அருள் வண்ணம் விளங்கி" எனவும், சிவம் இன்பமயமாதல் பற்றி, "இன்ப மயமாய்" எனவும் இயம்புகின்றார். மாயா வெளிக்கு அப்பால் உறுவது சத்தி வெளியாகிய பரைவெளிக்கு மேலதாய் விளங்குவது சிதாகாசப் பரைவெளியாதல்பற்றி, "பரைவெளிக்கு அப்பால் விளங்கு தனிவெளி" என்றும், அதன்கண் உளதாய் உயர்ந்து ஒளிர்தலின், "தனிவெளியில் பழுத்து" என்றும் கூறுகின்றார். படைத்தல், அழித்தல், உரை புகழ் தொன்மையும், உயர்வும், வலிமையும், உடையவை எனப் போற்றப் படுவதால் வேதங்களை, "உரை வளர் மாமறை" எனப் புகழ்கின்றார். மறைகளெல்லாம் என்றவிடத்து, மறை என்றது வேதங்கள் எல்லா வற்றையும் ஓதியுணர்ந்த மேலோர்களை என அறிக. மணிப்பொது - அழகிய அம்பலம். (41)

4131. கார்ப்பிலதாய்த் துவர்ப்பிலதாய் உவர்ப்பிலதாய்ச் சிறிதும்
கசப்பிலதாய்ப் புளிப்பிலதாய்க் காய்ப்பிலதாய்ப் பிறவில்
சேர்ப்பிலதாய் எஞ்ஞான்றும் திரிபிலதாய் உயிர்க்கே
தினைத்தனையும் நோய்தரும்அத் தீமைஒன்றும் இலதாய்ப்
பார்ப்பனையேன் உள்ளகத்தே விளங்கிஅறி வின்பம்
படைத்திடமெய்த் தவப்பயனால் கிடைத்ததனிப் பழமே
ஓர்ப்புடையார் போற்றமணி மன்றிடத்தே வெளியாய்
ஓங்கியபேர் அரசேஎன் உரையும்அணிந் தருளே.

உரை : கார்ப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கசப்பு, புளிப்பு, காய்ப்பு முதலியன இல்லாமல் பிற சுவையுடைய பொருள்களில் சேராததாய், எக்காலத்தும் விகாரப்படாததாய், உயிர்களுக்குச் சிறிதளவும் துன்பம் தரும் குற்றம் ஒன்றும் இல்லாததாய், பறவைக்குஞ்சு ஒத்த என்னுள்ளத்தில் விளங்கி ஞானவின்பம் உண்டாக மெய்ம்மையான தவப்பயனால் எனக்குக் கிடைத்த ஒப்பற்ற சிவமாகிய பழமே! மெய்

யுணர்வு உடைய பெரியோர்களைப் போற்றித் துதிக்க அழகிய அம்பலத்தின்கண், ஞான வெளியாய் உயர்ந்த பேரருளரசனாகிய பெருமானே! என்னுடைய சொல் மாலையையும் மகிழ்ந்து அணிந் தருள்க. எ.று.

கார்ப்பு - காரம். மிளகின் சுவையொத்தது. துவர்ப்பு - பாக்கின் சுவைபோன்றது. உவர்ப்பு - உப்பின் சுவையுடையது. காய்ப்பு - எரிப்பது. பிற என்றது இச் சுவைதனில் இரண்டும் பிறவும் கலந்த சுவையுடைய பொருள்கள். திரிபு - விகாரம். தினைத்துணையும் - சிறிதளவும். பார்ப்பு - பறவைக்குஞ்சு. படைத்திடல் - உண்டாதல். ஓர்ப்புடையார் - நலந் தீங்குகளில் குற்றமாகிய தீங்கினை நீக்கி நலத்தையே உள்ளவாறு உணர்வும் நல்லறிவுடைய பெரியவர். அம்பலத்தின்கண் சிதாகாசமாய்த் திகழ்வதுபற்றிச் சிவனை, "வெளியாய் ஓங்கிய பேரரசு" என்று குறிக்கின்றார். (42)

**4132.** தெற்றியிலே நான்பசித்துப் படுத்திளைத்த தருணம்
திருஅமுதோர் திருக்கரத்தே திகழ்வள்ளத் தெடுத்தே
ஒற்றியிற்போய்ப் பசித்தனையோ என்றெனையங் கெழுப்பி
உவந்துகொடுத் தருளியஎன் உயிர்க்கினிதாந் தாயே
பற்றியஎன் பற்றனைத்தும் தன்அடிப்பற் றாகப்
பரிந்தருளி எனைஈன்ற பண்புடைஎந் தாயே
பெற்றியுளார் சுற்றிநின்று போற்றமணிப் பொதுவில்
பெருநடஞ்செய் அரசேஎன் பிதற்றும்உவந் தருளே.

உரை : திருவொற்றியூருக்குப்போய் ஓர் வீட்டுப் புறத் திண்ணையில் நான் பசியால் வருந்திப் படுத்துச் சோர்ந்திருந்தபொழுது கையில் ஒளி பொருந்திய ஒரு கிண்ணத்தில் சோறுகொண்டு என்னை எழுப்பிப் பசித்தனையோ என்று சொல்லி மகிழ்வுடன் எனக்குக் கொடுத்தருளிய, என் உயிர்க்கு இன்பம் தரும் தாயாகியவனே! என் உள்ளத்தில் உள்ள பற்றனைத்தும் தன்னுடைய திருவடிக்கண் கொண்ட பற்றாக ஏற்றருளி என்னை வாழ்வித்த நற்பண்புடைய தந்தையாகியவனே! பெருந்தன்மை பொருந்திய சான்றோர்கள் சுற்றி நின்று துதித்துப்போற்ற அழகிய அம்பலத்தின்கண் பெரிய திருக்கூத்தையாடுகின்ற கூத்தப்பெருமானே! என்னுடைய சொல் மாலையையும் அணிந்து மகிழ்ந்தருளுக. எ.று.

தெற்றி - வீட்டின் புறத்திண்ணை. திருவமுது - உண்ணும் சோறு. அழுக்கில்லாத தூய கிண்ணம் என்பதற்கு, "திகழ் வள்ளம்" என்று தெரிவிக்கின்றார். ஒற்றி - திருவொற்றியூர். உயிர்க்கினிதாம் தாய் - உயிர்க்கு இன்பம் தருவதாகிய அன்புடைய தாய். பற்று - நான் எனது என இருவகையாகத் தோன்றும் ஆசைகள். இவை உலகியலில் இயல் பாகவே வந்து பற்றுபவையாதலால், "பற்றிய பற்று" என்று பகர் கின்றார். உள்ளத்தில் எழுகின்ற பற்றுக்களைத் தன் திருவடிக்கண் அமைந்தனவாக ஏற்று உவந்தருளினமை புலப்பட, "பற்றனைத்தும் தன் அடிப்பற்றாகப் பரிந்தருளி எனையீன்ற தந்தையே" எனப் புகழ்கின்றார். பண்பு - அருட் பண்பு. பெற்றி - தன்மை; ஈண்டு உயர்ந்த தன்மைகளை

யுடைய மெய்யன்பர்களைக் குறிக்கின்றது. பிதற்றல் - வாயில் வந்தன சொல்லுதல். (43)

4133. தாய்முதலோ ரொடுசிறிய பருவமதில் தில்லைத்
தலத்திடையே திரைதூக்கத் தரிசித்த போது
வேய்வகைமேல் காட்டாதே என்றனக்கே எல்லாம்
வெளியாகக் காட்டியஎன் மெய்உறவாம் பொருளே
காய்வகைஇல் லாதுளத்தே கனிந்தநறுங் கனியே
கனவிடத்தும் நனவிடத்தும் எனைப்பிரியாக் களிப்பே
தூய்வகையோர் போற்றமணி மன்றில்நடம் புரியும்
சோதிநடத் தரசேஎன் சொல்லும்அணிந் தருளே.

உரை : தாய் தந்தை முதலியரோடு, சிறு பருவத்தில் தில்லைத் திருக்கோயிலுக்கு நான் சென்றபொழுது, அங்குள்ள திரை நீக்கப்பட்ட காலத்தில் நான் கூத்தப்பெருமானைத் தரிசித்தேனாக, குறிப்பு வகையா னன்றி எனக்கு எல்லாம் இனிது வழங்க யான் காண உதவிய எனக்கு உண்மையுறவாகிய பரம்பொருளே! காயாதலின்றி எனது சிந்தையின் கண் பழுத்துக் கனிந்த மணம் கமழும் பழமாகியவனே! கனவின் கண்ணும் நனவின்கண்ணும் என்னை விட்டுப் பிரியாமல் உடனிருந்து மகிழ்வித்த சிவமே! தூய உள்ளம் படைத்த பெரியோர்கள் துதிக்க அழகிய அம்பலத்தின்கண் கூத்தாடுகின்ற சோதி நடனத்தையுடைய அருளரசாகிய பரம்பொருளே! என் சொல் மாலையையும் ஏற்று அணிந்து மகிழ்ந்தருள்க. எ.று.

தாய் தந்தை, உடன் பிறந்தார் ஆகியோருடன் தில்லைக்குச் சென்றிருந்தாராதலின் "தாய் முதலோர்" என்று கூறுகின்றார். சிறிய பருவம் - பிள்ளைப் பருவம். வேய்வகை என்றவிடத்து வேய் என்றது குறிப்பு மொழி. குறிப்பாய்க் காட்டாமல் எல்லாம் இனிது விளங்கத் தாம் காணுமாறு தில்லைஅம்பலவாணன் தனது நலமனைத்தும் அவர் வடலூர் வள்ளல் இனிது கண்டு இன்புறுமாறு காட்டிய அருள் நலத்தை நினைந்து மொழிகின்றாராதலால், "வேய்வகைமேல் காட்டாதே என்றனக்கே எல்லாம் வெளியாகக் காட்டிய என் மெய்யுறவாம் பொருளே" என்று வடலூர் வள்ளல் தமது பிள்ளைப் பருவத்தில் பெற்றோருடன் தில்லைக்குச் சென்றதும், அங்கே திரைக்குள் மறைக்கப் பட்டிருந்த சிவ ரகசியங்கள் அனைத்தையும் தாம் இனிது கண்டு இன்புற்றதும் இதனால் தெரிவிக்கின்றார். எல்லாம் என்பது கூத்தப் பெருமானுடைய பொற்சடைவடிவில் அமைந்திருக்கும் சிவ ரகசியம். அது மறைபொருளாதலின்றி நன்கு விளங்கத் தெரிந்தமை கூறுவாராய், "என்றனக்கே எல்லாம் வெளியாகக் காட்டிய என் மெய்யுறவாம் பொருளே" என்று விளம்புகின்றார். பிஞ்சு, காய் என்ற வகையின்றி முற்றக் கனிந்த பழம் என்றற்கு, "காய் வகையில்லாது கனிந்த நறுங் கனியே" எனக் கூறுகின்றார். சிவஞானத்தால் உள்ளத்தின்கண் சிவம் பழுத்தமை தெரிவிப்பாராய், "உளத்தே கனிந்த கனியே" என

வுரைக்கின்றார். மனம், மொழி, மெய், அறிவு ஆகியவற்றால் தூய நினைவும், தூய சொல்லும், தூய செயலும், தூய ஞானமும் உடைய பெருமக்களை, "தூய்வகையோர்" என்று சொல்லுகின்றார். திருவருள் ஞான ஒளி பரப்பும் திருக்கூத்தாடுவதுபற்றிச் சிவபெருமானை, "சோதி நடத்தரசே" என்று புகழ்கின்றார். (44)

4134. ஓங்கியஓர் துணைஇன்றிப் பாதிஇர வதிலே
உயர்ந்தஒட்டுத் திண்ணையிலே படுத்தகடைச் சிறியேன்
தூங்கிமிகப் புரண்டுவிழத் தரையில்விழா தெனையே
தூக்கிஎடுத் தணைத்துக்கீழ்க் கிடத்தியமெய்த் துணையே
தாங்கியஎன் உயிர்க்கின்பம் தந்தபெருந் தகையே
சற்குருவே நான்செய்பெருந் தவப்பயனும் பொருளே
ஏங்கியஎன் ஏக்கம்எலாம் தவிர்த்தருளிப் பொதுவில்
இலங்குநடத் தரசேஎன் இசையும் அணிந் தருளே.

உரை : உயர்ந்த துணைவர் ஒருவருமின்றித் தனியாக ஒரு வீட்டின் உயர்ந்த ஒட்டுத் திண்ணையிலே கடையவனும் சிறியவனுமாகிய யான் படுத்துறங்கியபோது, நள்ளிரவில் மிக்க தூக்கத்தால் புரண்டு விழுந்தேனாக, தரையில் விழாதவாறு தூக்கியெடுத்து மார்பில் அணைத்துக் கீழே கிடத்தி அருளிய உண்மைத் துணைவனாகிய பெருமானே! நான் தாங்கியிருக்கின்ற என் உயிர்க்கு இன்பம் தந்தருளிய பெருந் தகைமையையுடைய சிவனே! என்னுடைய சற்குருவே! நான் செய்த தவத்தின் பயனாக உள்ள சிவ பரம்பொருளே! அம்பலத்தில் விளங்குகின்ற திருக்கூத்தாடும் கூத்தப் பெருமானே! ஏங்கிய என் ஏக்கமெல்லாம் போக்கி, என் சொல் மாலையையும் அணிந்து மகிழ்ந்தருள்வாயாக. எ.று.

உற்றவிடத்துத் துணைபுரியும் நண்பர்கள் "ஓங்கிய துணை" எனப்படுவர். பாதி இரவு - நள்ளிரவு; நடுவிரவு என்றுமாம். ஒட்டுத் திண்ணை - சுவரை ஒட்டி அமைக்கப்படும் புறந்திண்ணை. போதிய அகலமில்லாத புறந் திண்ணை என்பது புலப்படுத்தற்கு, "ஒட்டுத் திண்ணையிலே படுத்தேன்" என்று உரைக்கின்றார். உயர்ந்த திண்ணையாதலால் தவறி விழுந்தால் ஊறு உண்டாகும் என்று கருதி அணைத்தெடுத்துத் தலையில் படுக்கவைத்த பாங்கு புலப்பட, "தரையில் விழாது தூக்கியெடுத்து அணைத்துக் கீழ்க் கிடத்திய மெய்த்துணையே" என்று கிளந்து கூறுகின்றார். உயிர்க்கு இன்பமாவது ஞானவின்பம்; அதனைத் தந்தமை பற்றிச் சிவபெருமானை, "பெருந்தகையே" எனவும், "சற்குருவே" எனவும் பாராட்டுகின்றார். அந்த ஞானமும் பெருந் தவத்தாலன்றிப் பெறலரியது என்பாராய், "நான் செய் பெருந்தவப் பயனும் பொருளே" என்று செப்புகின்றார். ஏங்கிய என் ஏக்கம் - தன் சொல் மாலை ஏற்கப்படுமோ படாதோ என உள்ளத்தில் ஏங்கிய வழிப் பிறந்த ஏக்கம். இசை - ஈண்டு ஆகுபெயராய்ச் சொல் மாலையைக் குறிக்கின்றது. (45)

4135. தனிச்சிறியேன் சிறிதிங்கே வருந்தியபோ ததனைத்
தன்வருத்தம் எனக்கொண்டு தரியாதக் கணத்தே
பனிப்புறும்அவ் வருத்தம்எலாம் தவிர்த்தருளி மகனே
பயம்உனக்கென் என்றென்னைப் பரிந்தணைத்த குருவே
இனிப்புறுநன் மொழிபுகன்றென் முடிமிசையே மலர்க்கால்
இணைஅமர்த்தி எனையாண்ட என்னுயிர்நற் றுணையே
கனித்தநறுங் கனியேஎன் கண்ணேசிற் சபையில்
கலந்தநடத் தரசேஎன் கருத்தும்அணிந் தருளே

உரை : தனிப்பட்ட சிறியவனாகிய யான் இவ்வாழ்வில் சிறிது மனம் வருந்தியபோது அதனைத் தனக்குற்ற வருத்தமாகக்கொண்டு பொறுது அப்பொழுதே மனம் நடுங்கச் செய்யும் வருத்தம் அத்தனையும் போக்கி "மகனே உனக்கு ஏன் பயம்" என்று சொல்லி என்னை அன்போடு அணைத்துக்கொண்ட குருபரனே! இனிமையான நல்ல சொற்களைச் சொல்லி என் தலைமீது மலர் போன்ற திருவடிகள் இரண்டனையும் வைத்து என்னை ஆண்டுகொண்ட என் உயிர்க்கு நல்ல துணைவனான பெருமானே! நன்கு கனிந்த சுவையுடைய கனி போல்பவனே! என் கண்ணே! ஞான சபையில் திருநடனம் புரிகின்ற அருளரசே! நான் எண்ணித் தொடுக்கும் என் சொல் மாலையையும் ஏற்று உவந்தருளுக. எ.று.

தனி மகனாகவும், சிறுமையுடையவனாகவும் தன்னைக் கூறுவாராய் வடலூர் அடிகள் தம்மை, "தனிச் சிறியேன்" என்று கூறுகின்றார். எனக்குற்ற வருத்தத்தைத் தனக்கு எய்தியதாகக் கொண்டு மனம் தாங்காமல் அப்பொழுதே வந்து அவ்வருத்தத்தைப் போக்கிய அருட் செயலை, "வருந்தியபோது அதனைத் தன் வருத்தம் எனக்கொண்டு தரியாது அக்கணத்தே பனிப்புறும் அவ்வருத்தம் எல்லாம் தவிர்த்தருளி" என்று இயம்புகின்றார். தரித்தல் - தாங்குதல். பனிப்புறல் - மனம் நடுங்குதல். அபயம் அளித்து ஆண்டு கொண்டமை புலப்பட, "மகனே பயம் உனக்கு என்னென்று என்னைப் பரிந்து அணைத்த குருவே" என்று பகருகின்றார். பரிந்தணைத்தல் - அன்போடு தழுவிக்கொள்ளுதல். இனிப்புறும் நல்மொழி - கேட்டற்கு இனிமை நல்கும் நல்ல சொற்கள். மலர்க்கால், குருபரனாய் எழுந்தருளி அன்பு மொழிகளால் தழுவிக்கொண்டு தலைமேல் தன் திருவடிகளைச் சூட்டி அடியவனாக்கிக் கொண்டான் பெருமான் என்பாராய், "என் முடி மிசையே மலர்க்கால் இணை யமர்த்தி எனை யாண்ட என்னுயிர் நற்றுணையே" என்று மொழிகின்றார். கனிந்த கனி என்பது கனித்த கனி என்று வலித்தது. நன்கு கனிந்த கனி சுவை மிக்கதாகலின் அதனை உவமித்துக் கனித்த நறுங்கனியே என்று சிவனைச் சிறப்பிக்கின்றார். சிறந்த உறுப்பாதல் பற்றிக் கண்ணாக உருவகம் செய்து, "என் கண்ணே" என அன்பு மிகுதியைப் புலப்படுத்துகின்றார். சிற்சபை - ஞான சபை. கருத்து - எண்ணிப் பாடும் பாட்டு. மனத்தால் எண்ணிப் பாடுவது பற்றிப் பாமாலையைக் கருத்து எனக் குறிக்கின்றார்.

4136. ஒருமடந்தை வலிந்தணைந்து கலந்தகன்ற பின்னர்
உளம்வருந்தி என்செய்தோம் என்றயர்ந்த போது
பெருமடஞ்சேர் பிள்ளாய்என் கெட்டதொன்றும் இலைநம்
பெருஞ்செயல்என் றெனைத்தேற்றிப் பிடித்தபெருந் தகையே
திருமடந்தை மார்இருவர் என்எதிரே நடிக்கச்
செய்தருளிச் சிறுமைஎலாம் தீர்த்ததனிச் சிவமே
கருமடம்நீர்ந் தவர்எல்லாம் போற்றமணி மன்றில்
காட்டும்நடத் தரசேஎன் பாட்டும்அணிந் தருளே.

உரை : என்பால் பெண்ணொருத்தி வந்து என்னோடு வலியக் கலந்து நீங்கிய பிறகு, என்ன காரியம் செய்தோம் என்று நான் மனம் வருந்தி, மெலிந்தபொழுது மிக்க அறியாமையுடையவனே, உனக்குக் கெட்டது ஒன்றுமில்லை; நம்முடைய பெரிதாகிய செயல் என்று சொல்லி என்னைத் தெளிவித்து அருளிய பெருந்தகைப் பெருமானே! அழகிய பெண்கள் இருவரை என்னெதிரே நடிக்கப் பண்ணி என் மனத்தையும், திண்ணியதாக்கி என் குற்றமெல்லாம் நீக்கியருளிய சிவனே! பிறவிக் கேதுவாகிய அறியாமையைப் போக்கின ஞானிகள் எல்லோரும் நோக்கிப் பராவ, அழகிய அம்பலத்தின்கண் கூத்தாடுகின்ற அருளரசே! என்னுடைய பாமாலையையும் ஏற்றணிந்து உவந்தருளுக. எ.று.

ஒருகால் இளம் பெண்ணொருத்தி வலிய வந்து கலந்து நீங்கினளாக அவளோடு கூடிய குற்றத்திற்காக வருந்திய திறத்தை, "என் செய்தோம் என்று அயர்ந்தபோது" என விளம்புகின்றார். வருந்துதற்கு ஏதுவாகிய குற்றத்தைப் பெருமடம் என்று குறிக்கின்றார். மடந்தை யொருத்தி வந்ததும் அவளோடு கூடியதும் அருட் செயலே என்று சொல்லி, அயர்கின்ற அறிவைத் தெளிவித்தமை இனிது விளங்க, "என் கெட்டது ஒன்றுமிலை நம் பெருஞ் செயல் என்று தேற்றிப் பிடித்த பெருந் தகையே" என்று உரைக்கின்றார். தெளிவுற்றமை புலப்பட, "திருமடந்தைமார் இருவர் என்னெதிரே நடிக்கச் செய்தருளிச் சிறுமை யெலாம் தீர்த்த தனிச் சிவமே" எனப் புகழ்கின்றார். கருமடம் தீர்ந் தவர் - பிறவிக் கேதுவாகிய அறியாமையிலிருந்து நீங்கின ஞானவான் கள். பாட்டு என்பது பாமாலையை. (47)

4137 இருள்இரவில் ஒருமூலைத் திண்ணையில்நான் பசித்தே
இளைப்புடனே படுத்திருக்க எனைத்தேடி வந்தே
பொருள்உணவு கொடுத்துண்ணச் செய்வித்தே பசியைப்
போக்கிஅருள் புரிந்தஎன்றன் புண்ணியநற் றுணையே
மருள்இரவு நீக்கிஎல்லா வாழ்வும்எனக் கருளி
மணிமேடை நடுஇருக்க வைத்தஒரு மணியே
அருள்உணவும் அளித்தென்னை ஆட்கொண்ட சிவமே
அம்பலத்தென் அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

உரை : ஒருநாள் இரவு ஒரு வீட்டு மூலைத் திண்ணையில் நான் பசியால் உண்டாகிய இளைப்புற்றுப் படுத்திருந்தேனாக, என்னைத் தேடி

வந்து இனிய உணவு கொடுத்து என் பசியைப் போக்கி எனக்கு அருள் புரிந்த என் புண்ணிய உருவாகிய நல்ல துணைவனே! மயக்கம் தரும் இரவுகள் எனக்கு உண்டாகாதபடி நீக்கி, எல்லா வாழ்வும் எனக்களித்து அழகிய மேடை மேல் பல்லோர் நடுவே நான் வீற்றிருக்குமாறு வைத்த ஒப்பற்ற மணி போன்றவனே! திருவருள் ஞானமாகிய உணவைத் தந்து என்னை ஆட்கொண்டருளிய சிவ பரம்பொருளே! அம்பலத்தாடும் அருளரசே! என்னுடைய சொல் மாலையை ஏற்று அணிந்து மகிழ்ந் தருளுக. எ.று.

இருளிரவு - நிலவொளி யில்லாத இராப் பொழுது. சத்துள்ள நல்ல உணவு என்றற்கு, "பொருள் உணவு" என்று புகல்கின்றார். பசித்து மெலிந்திருக்கும் பொழுது தான் இருக்குமிடம் தேடி வந்து பசி தீர உணவளித்தமையின் "புண்ணிய நற்றுணையே" என்று புகழ்கின்றார். மயங்கி இருந்த காலத்தை மருளிரவு என்று குறிக்கின்றார். செல்வ வாழ்வும் திருவருள் ஞான வாழ்வும் பெற்றிருந்தமை புலப்பட, "எல்லா வாழ்வும் எனக்கருளி" எனவும், பலர் கூடியிருந்த மேடையில் தலைமை யிடத்தில் தம்மை வீற்றிருக்குமாறு சிறப்பித்தமை தோன்ற, "நடு இருக்க வைத்த ஒரு மணியே" எனவும் உரைக்கின்றார். திருவருள் ஞானத்தை அருளமுதம் என வழங்கும் முறைமை பற்றி, "அருளுணவு" என இயம்புகின்றார். (48)

4138 நான்பசித்த போதெல்லாம் தான்பசித்த தாகி
நல்உணவு கொடுத்தென்னைச் செல்வம்உற வளர்த்தே
ஊன்பசித்த இளைப்பென்றும் தோற்றாத வகையே
ஒள்ளியதெள் அமுதெனக்கிங் குவந்தளித்த ஒளியே
வான்பதிக்கும் நெடுமாற்கும் நான்முகற்கும் அரிதாம்
வாழ்வெனக்கே ஆகியுற வரம்அளித்த பதியே
தேன்பரித்த மலர்மணமே திருப்பொதுவில் ஞானத்
திருநடஞ்செய் அரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

உரை: நான் பசித்து வருந்தியபோதெல்லாம் தான் பசியுற்றது போல, வருந்தி நல்ல உணவு கொணர்ந்து கொடுத்து, என் உடல் வளம் பெற என்னை வளர்த்து, உடம்பிடத்தே பசியும் களைப்பும் எப்பொழுதும் தோன்றாதபடி ஒள்ளிய தெளிந்த ஞானமாகிய அமுதத்தை இவ்விடத்தே எனக்கு மகிழ்வுடன் கொடுத்தருளிய ஞான வொளியாகிய பெருமானே! தேவர்கள் வல்லவனாகிய இந்திரனுக்கும், திருமாலுக்கும், பிரமனுக்கும் பெறுதற்கரியதாகிய செல்வ வாழ்வு எனக்கு அமையுமாறு வரம் தந்துதவிய தலைவனே! தேன் நிறைந்த பூவில் எழும் மணம் போல்பவனே! அழகிய அம்பலத்தின்கண் ஞான நடனம் செய்கின்ற அருளரசே! சிறுமையுடைய என் சொல் மாலையை மகிழ்ந்து ஏற்று அணிந்தருளுக. எ.று.

தான் உற்று வருந்திய பசித் துன்பத்தை நன்கறிந்து அது தீர்தற்கு ஏற்ற நல்லுணவு கொடுத்தமையின், "தான் பசித்ததாகி" என்று

உரைக்கின்றார். நல்லுணவு - சுவை மிக்க உணவு. செல்வமுற வளர்த்தலாவது உடல் வளம் பெறச் சத்து நிறைந்த உணவு கொடுத்தும், உடுக்க உயர்ந்த ஆடை கொடுத்தும் தந்து ஓம்புதல். ஊன் உடம்பில் தோன்றும் பசியும் இளைப்பும் அறிவைச் சிதைத்தலால், "ஊன் பசித்த இளைப்பு என்றும் தோற்றாத வகையே" என்றும், திருவருள் ஞான வமுதம் ஊனுடம்பையும் உயிர் உணர்வையும் ஒருசேர வளமுற வளர்க்கும் ஒட்பம் உடையதாதலால், "ஒள்ளிய தெள்ளமுது எனக்கு இங்கு உவந்தளித்த ஒளியே" என்றும் கூறுகின்றார். வான்பதி - வானத்திலுள்ள தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன். தேவதேவர்களும் பெற முடியாத உயர்ந்த அருள் ஞான வின்ப வாழ்வினைத் தாம் பெறுதற்குரிய நல்வாய்ப்பினைத் தந்தமை விளங்க, "வான்பதிக்கும் நெடுமாற்கும் நான்முகற்கும் அரிதாம் வாழ்வெனக்கே ஆகியுற வரமளித்த பதியே" என்று இசைக்கின்றார். தேன் நிறைந்த மலரே நல்ல மணம் கமழ்வதாதலால், "தேன் பரித்த மலர் மணமே" என்றும், மலரிடத்தில் எழும் மணம் போல உலகியற் பொருள்களில் கலந்திருப்பது பற்றிச் சிவ பரம்பொருளை "மலர் மணமே" என்றும் ஓதுகின்றார். "உற்ற யாக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம் போல் பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்" (அதிசய) என்று மாணிக்கவாசகர் உரைப்பது காண்க. சிவபெருமான் ஊன நாடகத்தையே யன்றி ஞான நாடகத்தையும் அழகுற ஆடுபவன் என்று சான்றோர்கள் உரைப்பதால், "திருப்பொதுவில் ஞானத் திருநடஞ் செய் அரசே" என்று போற்றுகின்றார். தமது சிறுமையைத் தாம் பாடுகின்ற சொல் மாலை மேலேற்றி, "என் சிறுமொழி" என வடலூர் வள்ளல் எடுத்தோதுகின்றார். (49)

4139 நடைக்குரிய உலகிடைஓர் நல்லநண்பன் ஆகி
நான்குறித்த பொருள்களெலாம் நாழிகைஒன் றதிலே
கிடைக்கஎனக் களித்தகத்தும் புறத்தும்அகப் புறத்தும்
கிளர்ந்தொளிகொண் டோங்கியமெய்க் கிளைஎனும்பேர் ஒளியே
படைப்புமுதல் ஐந்தொழிலும் கொள்கஎனக் குறித்தே
பயந்தீர்த்தென் உள்ளகத்தே அமர்ந்ததனிப் பதியே
கடைப்படும்என் கரத்தில்ஒரு கங்கணமும் தரித்த
ககனநடத் தரசேஎன் கருத்தும்அணிந் தருளே.

உரை : உலகியல் வாழ்வின்கண் ஒழுக்கத்துக்குரிய ஒரு நல்ல நண்பனாய் யான் கருதிய பொருள்கள் எல்லாவற்றையும் ஒரு நாழிகைப் பொழுதில் பெறுமாறு எனக்குதவி, என்னுடைய அகத்தும், புறத்தும், அகப்புறத்தும் சிறந்த ஒளியுடன் உயர்ந்த மெய்க்கிளை என்னும் பேரொளியே! படைத்தல் முதலிய ஐந்து தொழிலும் நீ செய்கவென அருள் புரிந்து, எனக்கிருந்த அச்சத்தைப் போக்கி என் மனத்தின்கண் எழுந்தருளுகின்ற ஒப்பற்ற தலைவனே! கீழ்மையுற்ற என் கையில் ஒரு கங்கணமும் அணிந்தருளிய சிதாகாசத்தில் திருநடம் புரிகின்ற அருளரசே! யான் கருதித் தொடுக்கின்ற சொல் மாலையையும் ஏற்று அணிந்தருளுவாயாக. எ.று.

உலகியல் வாழ்வில் நல்லொழுக்க நெறியின்கண் இயலுதற்குரிய நண்பன் நல்ல நண்பனுவான்; அந்நெறியில் சிவ பரம்பொருள் தம்மை தன்னெறியில் ஒழுகுமாறு துணை புரிவது விளங்க, "உலகிடை நடைக் குரிய ஒரு நல்ல நண்பனுகி" என்று நவில்கின்ருர். நம்பியாரூரரும், "என்னுடைய தோழனுமாய்" என்று சிவபெருமானைக் கூறுவர். தனக்கு வேண்டப்பட்ட பொருளை வேண்டிய பொழுதே உதவுபவன் நல்ல நண்பன் என்பது புலப்பட, "நல்ல நண்பனுகி நான் குறித்த பொருள் கள் எல்லாம் நாழிகை ஒன்றதிலே கிடைக்க எனக்களித்து" என இயம்புகின்ருர். நல்ல நண்பனுதலோடு தனக்கே யுரிய ஞான நிலையில் நீங்காமல் நின்றமை தோன்ற, "அகத்தும் புறத்தும் அகப்புறத்தும் கிளர்ந்து ஒளி கொண்டு ஓங்கிய மெய்க்கிளை என்னும் பேரொளியே" என்று கூறுகின்ருர். மெய்க்கிளை - மெய்ம்மையான சுற்றம். ஒளி மயமான ஞானத் திருவுருவினனுதலால், "பேரொளியே" என்று புகழ்கின்ருர். படைப்பு முதல் தொழில் ஐந்தும் சிவனுக்கே உரியவாயினும், சிவமாம் தன்மை உண்டாயினமை விளங்க, "படைப்பு முதல் ஐந்தொழிலும் கொள்க எனக் குறித்தே" என்றும், அச்சம் உயிர்ப் பண்பாதலால் அது நீங்கினுலன்றிச் சிவமாம் தன்மை கை வராது என்பது கொண்டு, "பயம் தீர்த்து" என்றும், அது மீண்டும் தோன்ருதவண்ணம் இறைவன் உடனிருப்பது பற்றி, "என் உள்ளகத்தே அமர்ந்த தனிப் பதியே" என்றும் இயம்புகின்ருர். கங்கணம் - கையில் அணியும் வளை வகை களில் ஒன்று. ககன நடனம் - ஆகாசத்தில் ஆடும் திருக்கூத்து. ஈண்டு ஆகாசம் என்பது ஞானமாகிய ஆகாசம். பாட்டெல்லாம் கருத்திற் தோன்றிச் சொல்லுறுக் கொள்வதால் சொல் மாலையைக் கருத்து எனக் கூறுகின்ருர். (50)

4140 நீநினைத்த நன்மைஎலாம் யாம்அறிந்தோம் நினையே
நேர்காண வந்தனம்என் றென்மடிமேல் மலர்க்கால்
தான்நிலைக்க வைத்தருளிப் படுத்திடநான் செருக்கித்
தாள்களெடுத் தப்புறத்தே வைத்திடத்தான் நகைத்தே
ஏன்நினைத்தாய் இவ்வளவு சுதந்தரம்என் மகனே
எனக்கிலையோ என்றருளி எனை ஆண்ட குருவே
தேன்நிலைத்த தீம்பாகே சர்க்கரையே கனியே
தெய்வநடத் தரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

உரை : மகனே! நீ மெய்யில் நினைத்த நலங்கள் எல்லாவற்றையும் யாம் நன்கு அறிந்துகொண்டோம்; ஆதலால், நின்னை நேரில் காண வந்தோம் என்று சொல்லி என்னுடைய மடி மேல் மலர் போன்ற திருவடியை நிலைபெற வைத்து, அதன்கண் படுத்தாயாக, நான் எனது செருக்கினுல் அத்திருவடியை எடுத்து அப்புறத்தே வைத்தேனுக, குறு நகை செய்து நீ என்ன நினைக்கின்ருய்; இவ்வளவு சுதந்திரம் உன்பால் எனக்கு இல்லையோ என்று வாய் மலர்ந்து என்னை ஆட்கொண்ட குருபரனே! தேனின் சுவையுடைய இனிய பாகும், சர்க்கரையும், கனியும் போல்பவனே! அம்பலத்தின்கண் தெய்வ நடனம் புரிகின்ற சிவனே! சிறுமையுடைய எனது சொல் மாலையை ஏற்றுகொண்டு அணிந்தருளுக. எ.று.

நன்மை - நலங்கள். நல்ல ஞான எண்ணங்கள் என்றுமாம். கனம் தோன்றுதபடி, மடிமேல் காலைவைத்துப் படுத்தமை விளங்க, "மடிமேல் மலர்க்கால் நிலைக்க வைத்தருளிப் படுத்திட" என்று பகர்கின்றார். செருக்கு - நான் எனது என்னும் உணர்வு பிறப்பிக்கும் மயக்கம். நகை - அறியாமை கண்டு செய்த புன்னகை. மடிமேல் கால்வைத்துப் படுக்கும் உரிமை இவ்வளவு சுதந்திரம் என்று சுட்டப்படுகிறது. சிறுமை - தாழ்ந்த தன்மை. (51)

4141. மூர்த்திகளும் நெடுங்காலம் முயன்றாலும் அறிய
முடியாத முடிவெல்லாம் முன்னியஓர் தினத்தே
ஆர்த்தியுடன் அறியஎனக் களித்தருளி அடியேன்
அகத்தினைத்தன் இடமாக்கி அமர்ந்தஅருட் குருவே
பார்த்திபரும் விண்ணவரும் பணிந்துமகிழ்ந் தேத்தப்
பரநாத நாட்டரசு பாலித்த பதியே
ஏர்த்திகழும் திருப்பொதுவில் இன்பநடத் தரசே
என்னுடைய சொன்மாலை இலங்கஅணிந் தருளே.

உரை : பிரமன் முதலிய மும்மூர்த்திகளும் நெடுங்காலம் தவம் செய்தாலும், அவர்களால் அறிய முடியாத ஞான முடிவுகள் அனைத்தையும் அறிந்துகொள்ள நினைத்த ஒரு நாளிலேயே அன்புடன் நான் அறியுமாறு எனக்கு அறிவித்து, அடியேனுடைய உள்ளத்தைத் தனக்கு அமைந்த இடமாக்கிக்கொண்டு எழுந்தருளும் அருள் ஞான குருமுதல்வனே! மண்ணுலக வேந்தரும் தேவர்களும் பணிந்து மகிழ்ந்து துதிக்கப் பரநாத தத்துவ உலகத்தில் அருளரசு புரியும் பரசிவமாகிய தலைவனே! சிறப்புப் பொருந்திய அம்பலத்தின்கண் இன்பத் திருக்கூத்தாடும் அருளரசே! என்னுடைய இந்தச் சொல் மாலை விளக்கமுறத் திருவடியில் அணிந்தருளுக. எ.று.

பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூவரையும் மூர்த்திகள் என்பர். உண்மை ஞான நெறியில் விளங்கும் முடிபுகளின் அருமையுணர்த்தற்கு, "மூர்த்திகளும் நெடுங்காலம் முயன்றாலும் அறிய முடியாத முடிவெல்லாம்" என மொழிகின்றார். முன்னுதல் - நினைத்தல். ஆர்த்தி - அன்பு. ஞான முடிபுகளைத் தமக்கு அறிவித்துத் தமது மனத்தின்கண் ஞானப்பொருளாய் விளங்குவது தோன்ற, "முடிவெல்லாம் அறிய எனக்கு அளித்தருளி அடியேன் அகத்தினைத் தன்இடமாக்கி அமர்ந்த அருட்குருவே" என்று பரவுகின்றார். பார்த்திபர் - மண்ணுலகவேந்தர். பரநாத நாடு - பரநாத தத்துவ புவனம். அரசு பாலித்தல் - அரசாய் ஆட்சி புரிதல். (52)

4142. இச்சைஒன்றும் இல்லாதே இருந்தஎனக் கிங்கே
இயலுறுசன் மார்க்கநிலைக் கிச்சையைஉண் டாக்கித்
தச்சுறவே பிறமுயற்சி செயுந்தோறும் அவற்றைத்
தடையாக்கி உலகறியத் தடைதீர்த்த குருவே

எச்சமய முடிபுகளும் திருச்சிற்றம் பலத்தே
இருந்தளன எனக்கருளி இசைவித்த இறையே
முச்சகமும் புகழ்மணி மன்றிடத்தே நடிக்கும்
முதல்அரசே என்னுடைய மொழியும்அணிந் தருளே.

உரை : ஒன்றிலும் ஆசையில்லாமல் இருந்த எனக்கு, இப்பொழுது சன்மார்க்க நிலையின்கண் ஆசையையுண்டாக்கி அதற்குப் பொருத்தமான வேறு முயற்சிகள் பலவற்றைச் செய்யும்தோறும் அவற்றிற்கு உலகறிய தடை உண்டாக்கிப் பின்பு அவற்றை நீக்கியருளிய ஞான குருவே! எல்லாச் சமயங்களின் முடிபுகளும் திருச்சிற்றம்பலத்தின்கண் இருக்கின்றன என்று எனக்குத் தெரிவித்து, என் மனம் பொருந்துவித்த இறைவனே! முவ்வுலகத்தவரும் புகழுமாறு அழகிய சபையின்கண் நடிக்கின்ற முதல்வனாகிய அருளரசே! என்னுடைய சொல் மாலையையும் ஏற்று அணிந்து மகிழ்ந்தருளுவாயாக. எ.று.

எப்பொழுதும் ஆசையில்லாத தமது மனத்தின்கண் சன்மார்க்க உண்மையைத் தோற்றுவித்து, அதையே மேற்கொள்ளுமாறு தமது அறிவைத் தூண்டினமையால் "சன்மார்க்க நிலைக்கு இச்சையே உண்டாக்கி" எனவும், அதற்குரிய முயற்சிகளோடு வேறான முயற்சிகளைச் செய்யும்போதெல்லாம் தடைகளை உண்டாக்கிப் பிறகு உலகத்தவர் அறியும்படியாக அத் தடைகளை அறிவறிய உணர்த்தி, நெறியில் நிறுத்தினமை விளங்க, "பிற முயற்சி செயுந்தோறும் அவற்றைத் தடையாக்கி உலகறியத் தடை தீர்த்த குருவே" எனவும் கூறுகின்றார். சன்மார்க்க ஞானம் இயற்கை அறிவின்கண் தோன்றி விளங்குவது என்றற்கு, "இயலுறு சன்மார்க்க நிலை" என்றும், உரிய முயற்சியை மேற்கொள்ளாமல் வேறு முயற்சியில் ஈடுபட்டுத் தடைபட்டமையும், பின்னர் ஞானவுரைகளால் தெளிவுற்றமையும் புலப்பட, "பிற முயற்சி செய்யும்தோறும் தடையாக்கித் தடை தீர்த்த குருவே" என்றும் இயம்புகின்றார். சமயங்கள் பலவும் பரம்பொருள் ஒன்றே என்று முடிவுக்கு வருதலால் அதனைத் தெளிவிக்கும் இடம் திருச்சிற்றம்பலம் என்பதை யுணர்த்தற்கு, எச்சமய முடிபுகளும் திருச்சிற்றம்பலத்தே இருந்த எனத் தமக்கு அறிவுறுத்தினார் என்பாராய், "எனக்கருளி இசைவித்த இறையே" என்று மொழிகின்றார். இசைவித்த என்பதனால் தொடக்கத்தில் வடலூர் வள்ளல் அவ்வுண்மையை இயலாதிருந்தமை புலப்படும். தச்சுறு - பொருந்த. பிற முயற்சி - உரியன அல்லாத முயற்சிகள். முவ்வுலகம் - மேலுலகு, கீழ் உலகு, நடுவுலகு ஆகிய மூன்றுமாம். இவற்றை முறையே விண், மண், பாதளம் என்பதுண்டு.

(53)

4143. கையாத தீங்கனியே கயக்காத அமுதே
கரையாத கற்கண்டே புரையாத கரும்பே
பொய்யாத பெருவாழ்வே புகையாத கனலே
போகாத புனலேஉள் வேகாத காலே

கொய்யாத நறுமலரே கோவாத மணியே
குளியாத பெருமுத்தே ஒளியாத வெளியே
செய்யாத பேருதவி செய்தபெருந் தகையே
தெய்வநடத் தரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

உரை : கைத்தல் இல்லாத இனிய கனியும், கசப்பு இல்லாத அமுதமும், கரையாத கற்கண்டும், உள்ளே புரையோடாத கரும்பும், கெடாத பெருவாழ்வும், புகையில்லாத நெருப்பும், பள்ளம் நோக்கி ஓடாத நீரும், உள்ளிருந்து வெந்து படிதலில்லாத காற்றும், கொய்யப் படாத மணமலரும், கோக்கப்படாத மணியும், கடற்குள் மூழ்கி எடுக்கப் படாத பெரிய முத்தும், மறைக்கப்படாத வெளியுமாகியவனே! எவராலும் செய்யப்படாத பெரிய உதவியைச் செய்தருளிய பெருந்தகை யாகிய பெருமானே! அம்பலத்தின்கண் தெய்வ நடனம் புரிகின்ற அருளரசே! சிறுமையுடையவனாகிய என்னுடைய சொல் மாலையை உவப்புடன் ஏற்று மகிழ்ந்தருளுவாயாக. எ று.

தீவிய கனியாயினும் கைத்து ஒடுக்கப் படாதது என்றற்கு. "கையாத தீங்கனியே" என்றும், எவ்வாற்றுலும் கசப்புச் சுவை பெருதது என்றற்கு, "கயக்காத அமுதே" என்றும், வாயில் இட்ட வழிக் கரைந்தொழியும் உலகியற் கற்கண்டு போல்வதன்று என்றற்கு. "கரையாத கற்கண்டே" என்றும், கரும்பு வளருமிடத்து உள்ளே பூச்சிகள் நுழைந்து புரைபடுத்துவதால், அக்கரும்பின் வேறுபடுத்தற்கு, "புரையாத கரும்பே" என்றும் புகழ்ந்துரைக்கின்றுர். புரை - குற்றம். நிலைபெற்ற இன்பமே வினவுதலால் பெருமை அமைந்த பெருவாழ்வை நல்குவதுபற்றி, "பொய்யாத பெருவாழ்வே" எனவும், நெருப்புப்போலும் நிறமுடைய திருமேனியுடையவனுதல் பற்றிச் சிவனை, "புகையாத கனலே" எனவும், நீர்போல அருளுருவாய் நிலைபேறு உடையவனுய் நிற்றல் பற்றிச் சிவ பரம்பொருளை, "போகாத புனலே" எனவும், உடற்குள் ஊடுருவி வெம்மையைச் செய்யினும் வெந்து கெடுக்காத உயிர்க் காற்றைபோல உயிர்க்குள் உயிராய் நின்று உண்மையுணர்வு அருளுவதுபற்றி, "உள் வேகாத காலே" எனவும் இறைவனைப் போற்று கின்றுர். ஞான மணம் கமழும் மலர் போல்வது பற்றிச் சிவபெருமானை, "கொய்யாத நறுமலரே" என்றும், மாணிக்க மணிபோல் செம்மேனி யுடையவனுதலால் உலகியல் மனிதரின் வேறுபடுத்தற்கு, "கோவாத மணியே" என்றும், உலகியலில் முத்துக்கள் கடலில் மூழ்கியெடுக்கப் படுவதுபோல நீர் அணிந்த மேனியுடன் பெரிய வெண்மை நிறமுடைய முத்துப் போல்பவனுதலால் சிவபெருமானை, "குளியாத பெருமுத்தே" என்றும் இயம்புகின்றுர். சூரியன் முதலிய ஒளிப் பொருள்கள் இல்லை யாயினும் ஞானிகள் ஞானக் கண்ணுக்கு விளங்கி நிற்கின்றமைபற்றிச் சிவ வெளியை, "ஒளியாத வெளியே" எனவுரைக்கின்றுர். மாயா மண்டலத்துக்கு அதீதமாகலின் பரசிவ வெளியில் சிவம் ஒழிய வேறு ஒளிப்பொருள்கள் இல்லையென அறிக. செய்யாத பேருதவி - சிவத்திற்கு ஓர் உதவியும் செய்யாதிருக்க ஆன்மாக்களுக்கு உலகு, உடல், கருவி ஆகியவற்றைப் படைத்து உதவுதல் பற்றிப் பரம்பொருளை, "செய்யாத பேருதவி செய்த பெருந்தகையே" என்று புகழ்கின்றுர். இத்தகைய பேருதவியால் பெருந்தக்க பெருமானுதல் பற்றிச் சிவனை, "பெருந்தகை" என்று போற்றுகின்றுர். (54)

4144. எண்ணாத மந்திரமே எழுதாத மறையே
ஏறாத மேனிலைநின் றிறங்காத நிறைவே
பண்ணாத பூசையிலே படியாத படிப்பே
பாராத பார்வையிலே பதியாத பதிப்பே
நண்ணாத மனத்தகத்தே அண்ணாத நலமே
நாடாத நாட்டகத்தே நடவாத நடப்பே
அண்ணாஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே
அடிஇணைக்கென் சொன்மாலை அணிந்துமகிழ்ந் தருளே.

உரை : மானதமாய்ச் சிந்திக்கப்படாத மந்திரமாகியவனே! எழுதப்படாத வேதப் பொருளாகியவனே! தன்னை ஓதிய வேறு எவ்வுயிராலும் அடைந்தறியப்படாத மேனிலையில் நின்று அதனின்றும் கீழ் இறங்காத நிறைபரம்பொருளே! யாவராலும் செய்யப்படாத பூசையின்கண் பாராயணம் பண்ணப்படாத அறிவுப்பொருளே! ஞானப்பாலை உடையவர்க்கு அவர் பார்வையின்கண் உருக்குன்றித் தோன்றுகின்ற ஒண்பொருளே! தன்னை எண்ணாதவர் மனத்தால் எட்டிக் காணப்படாத நன்பொருளே! தன் உண்மையறிந்து நாடுதல் இல்லாதவர் வாழ்வின்கண் தோன்றுதல் இல்லாத செம்பொருளே! எனக்கு அண்ணனே! அப்பனே! அய்யனே! அரசனே! உனது இரண்டாகிய திருவடிகளுக்குச் சூட்டுகின்ற என்னுடைய சொல் மாலையை ஏற்றணிந்து மகிழ்ந்தருளுக. எ.று.

மந்தம், மானதம், உரை என மூவ்வகையாக ஓதப்படும் இயல்புடைய மந்திர வகைகளுள் ஒன்றாலும் எண்ணப்படாத மந்திரப் பொருளாதல் பற்றிச் சிவ பரம்பொருளை, "எண்ணாத மந்திரமே" என்று இயம்புகின்றார். வேதப் பொருளாதல் பற்றி, "எழுதாத மறையே" என மொழிகின்றார். வேதங்கள் ஏட்டில் எழுதப்பட்டு ஓதப்படுவன வல்லவாதலால் அவற்றை, "எழுதாத மறை" என்கின்றார். இது பற்றியே வேதங்களை எழுதாக் கிளவி என வழங்குவர். சிவம் ஒன்றே நின்று திகழும் பரசிவனை மேனிலை எனப்படுகிறது. வேறு எத்தகைய மக்களும் தேவர்களும் சென்றடையாமை பற்றி அதனை, "ஏறாத மேனிலை" என்று குறிக்கின்றார். இது பற்றியே சிவனை, "சென்றடையாத திருவுடையான்" (சீராப்பள்ளி) என்று சான்றோர் குறிக்கின்றனர். அப்பரசிவ நிலையில் இருந்து குற்றமுற்று இறங்குவது இல்லையாதல் தோன்ற, "இறங்காத நிறைவே" என்று கூறுகின்றார். நாள்தோறும் செய்யப்படும் சிவபூசை முடிவில் சிவநெறித் திருமுறைகள் படிக்கப்படுவது மரபாதலின், "பண்ணாத பூசையிலே படியாத படிப்பே" என்று பகர்கின்றார். உலகியல் பொருள்களைப் பார்க்காமல் பரம்பொருளையே பார்த்திருக்கும் பரஞானிகளின் பார்வையிலன்றிச் சிவத்தின் திருவருள் ஒளி பார்த்து இன்புறுமாறு தோன்றுவதில்லை என்பதுபற்றி, "பாராத பார்வையிலே பதியாத பதிப்பே" என்று கூறுகின்றார். மெய்யன்போடு சிவனடியை நினையாதார் உள்ளத்தில் அவர் திருவடித் தோற்றம் வலியாது எனப் பெரியோர்கள் கூறுவதால், "நண்ணாத மனத்தகத்தே அண்ணாத நலமே" என வுரைக்கின்றார். "கல்லார் நெஞ்சின் நில்லான் ஈசன்" என்று பெரியோர்கூறுவது காண்க. நாடாத நாடு - பரம்பொருள் ஒன்று உண்டு என்பதையறிந்து அதனை அடைய முயலாத மக்கள் வாழும் நாடு. அண்ணுதல் - அடைதல். (55)

4145. சாகாத கல்வியிலே தலையான நிலையே
சலியாத காற்றிடைநின் றொலியாத கனலே
ஏகாத புனலிடத்தே இடியாத புவியே
ஏசாத மந்திரத்தே பேசாத பொருளே
கூகாஎன் றெனைக்கூடி எடுக்காதே என்றும்
குலையாத வடிவெனக்கே கொடுத்ததனி அமுதே
மாகாதல் உடையார்கள் வழுத்தமணிப் பொதுவில்
மாநடஞ்செய் அரசேஎன் மாலையும்ஏற் றருளே.

உரை: அழிதலில்லாத கல்வி யறிவால் அறியப்படும் பொருள்களின் தலைமையான பொருள் நிலையாயும் அமைதியான காற்றின்கண் நின்று முழங்குதல் இல்லாத நெருப்புமாகியவனே! ஓடாத நீரினால் அலைத்தழிக்கப்படாத இனமாகியவனே! குறை யில்லாத மந்திரத்தால் பேசப்படாத பரம்பொருளே! கூ கா என்று அழுது உறவினர் கூடி என்னை யெடுக்காதபடியும் என்றும் அழியாது நிற்கின்ற உடம்பை எனக்குக் கொடுத்தருளிய ஒப்பற்ற அமிர்தம் போன்றவனே! பேரன்புடைய பெரியோர்கள் நின்று போற்ற அழகிய அம்பலத்தின்கண் பெரிய நடனத்தைச் செய்கின்ற அருளரசே! என்னுடைய சொல் மாலையை ஏற்று மகிழ்ந்து அணிந்தருளுவாயாக. எ.று.

அழியாச் செல்வமாதலின் கல்வியைச் "சாகாத கல்வி" என்று சிறப்பிக்கின்றார். கல்வி யறிவால் உணரப்படும் பொருள்களுள் தலையாயது சிவாகாசத்தில் விளங்கும் பரஞானப் பரம்பொருள்; அதனுடைய பரஞானப் பரநிலையைத் "தலையான நிலை" என்று சாற்றுகின்றார். ஆகாசத்தினின்றும் காற்றும், அதன் வழி நெருப்பும், அதன் வழி நீரும், அதன் வழி நிலமும் தோன்றுகின்றன என்னும் மரபு பற்றி, "காற்றும் கனலும் புனலும் புவியும்" ஆகிய நான்கையும் முறையே கூறுகின்றார். அசைகின்ற காற்றிடத்தே ஆகாசத்தின் குணமாகிய ஒளி வெளிப்படுதலின் அப்பூதக் கலப்பில்லாத கனலுருவாய் விளங்குவது பற்றிச் சிவனை, "சலியாத காற்றிடை நின்று ஒலியாத கனலே" என்று கூறுகின்றார். நெருப்பு எரியுமிடத்தும் ஒலி எழுதலின், "ஒலியாத கனலே" என வெளிப்படுகின்றார். புனல் ஓடுமிடத்து மண் கரைந்து இடிதல் இயல்பாதலின் அதனை விலக்குதற்கு, "புனலிடத்தே இடியாத புவியே" என்று புகழ்கின்றார். பள்ளம் நோக்கியோடுதல் நீருக்கு இயல்பாகவும் அதனை நீக்குதற்கு, "ஏகாத புனல்" என இயம்புகின்றார். குற்றமில்லாத மந்திரத்தை, "ஏசாத மந்திரம்" எனவும், ஞான நுண்பொருள் குறிப்பால் காட்டப்படுதலின்றி வாயால் உரைக்கப்படுவதில்லை என்பது பற்றி, "பேசாத பொருளே" எனவும் புகழ்கின்றார். மந்திரம் என்பதை ஆராய்ந்தறிவது என்று பொருள் செய்து, மந்திராலோசனைக்கண் வைத்து ஆராயப்படும் பொருள்களின் வேறுதல் விளங்க, "மந்திரத்தே பேசாத பொருளே" என்கின்றார் எனினும் அமையும். கூ, கா என்பது அழுகை ஒலி. உலகியலில் ஒருவர் செத்தவிடத்து உறவினர் கூடிக் கூ, கா என்றழுது எடுத்துப்போவது மரபாதலால், அங்ஙனம் தான் செத்தவிடத்துத் தம்மையெடுத்துப் போய் அடக்கம் செய்தல் கூடாது என்பதற்காக, "கூடி எடுக்காது" என்றும், "குலையாத வடிவு எனக்கே

கொடுத்தாய்" என்றும் கூறுகின்றார். குலையாத வடிவு - செத்து மடியாத உடம்பு. மாகாதல் உடையார் - பேரன்புடைய பெரியோர்கள். வழுத்துதல் - வணங்கிப் போற்றுதல். (56)

4146. சுத்தநிலை அனுபவங்கள் தோன்றுவெளி யாகித்
தோற்றும்வெளி யாகிஅவை தோற்றுவிக்கும் வெளியாய்
நித்தநிலை களின்நடுவே நிறைந்தவெளி யாகி
நீயாகி நானாகி நின்றதனிப் பொருளே
சத்தியமே சத்துவமே தத்துவமே நவமே
சமரசசன் மார்க்கநிலைத் தலைநின்ற சிவமே
புத்தமுதே சித்திஎலாம் வல்லதிருப் பொதுவில்
புனிதநடத் தரசேஎன் புகலும்அணிந் தருளே.

உரை: சுத்த நிலையும் அனுபவங்களும் தோன்றுகின்ற அபர வெளியாகியும், அவை தோற்றும் வெளியாகியும், அவற்றைத் தோற்றுவிக்கும் வெளியாகியும், நித்திய நிலைகளில் நடுவே நிறைந்த ஞான வெளியாகியும், நீயாகியும், நானாகியும் நின்ற தனிப் பரம்பொருளே! சத்தியம், சத்துவம், தத்துவம் ஆகியும், புதுமையுறச் சமரச சன்மார்க்க நிலையின் உச்சியில் நிலை நின்ற சிவமே! புதுமை நீங்காத அமுதமே! சித்தி எல்லாம் செய்யவல்ல அம்பலத்தில் தூய நடம் புரிகின்ற அருளரசே! நான் சொல்லுகின்ற சொல்மாலையை ஏற்றணிந்து மகிழ்ந் தருளுக. எ.று.

சுத்த நிலையும் அதன்கண் நுகரப்படும் அனுபவங்களும் தோன்றுதற்கு இடமாகிய பரவெளியை, "சுத்த நிலை அனுபவங்கள் தோன்று வெளி" எனவும், அவை தோற்றம் பெறும் வெளியும் அவ்வாறு தோற்றுவிக்கும் வெளியும் சுத்த மாயா மண்டலத்தின் காரியங்கள் என்பது பற்றி, "தோற்றுவிக்கும் வெளி" எனவும் சொல்லுகின்றார். மாயாதீத நிலைகள் அழியா இயல்பினவாதலால் அவற்றை, "நித்த நிலைகள்" என்றும், அவற்றின் நடுவில் நிறைந்து விளங்கும் பரவெளியை, "நித்த நிலைகளின் நடுவே நிறைந்த வெளி" என்றும் இயம்புகின்றார். இப் பரவெளியின்கண் நிலவும் பரம்பொருள் இதுவென விளக்குதற்கு, "நீயாகி நானாகி நின்ற தனிப் பொருள்" எனக் கூறுகின்றார். சத்திய வடிவமும், சத்துவ உருவும், தத்துவ மயமுமாய் விளங்குவது எனத் தெரிவித்தற்கு, "சத்தியமே சத்துவமே தத்துவமே" என்று சாற்றுகின்றார். சத்தியம் - மெய்ம்மை. சத்துவம் - சத்துவ குண சொரூபம். தத்துவம் - அபர பர தத்துவங்களின் மயமாதல். சமரச சன்மார்க்கம் என்பது, சங்கற்ப விகற்பங்கள் இல்லாத ஞான நெறி நின்ற வெளி பெறப்படும். சிவஞான சிவபோக நிலைக்கண் பெறலாகும் பரம்பொருளை, "சன்மார்க்க நிலைத்தலை நின்ற சிவமே" என மொழிகின்றார். சிவபோகம் நுகருந்தோறும் நுகருந் தோறும் புத்தின்பம் தருதலால், "புத்தமுது" என்று புகழ்கின்றார். சித்தி - காரிய சித்தி, யோக சித்தி, ஞான சித்தி, போக சித்தி எனப் பலவகைப் படுதலால், "சித்தி எலாம்" என்று தொகுத்துச் சொல்லுகின்றார். அம்பலத்தில் ஆடுவது தூய ஞான நடனமாதலால், அதனைப் "புனித நடம்" என்று புகழ்கின்றார். (57)

4147. நான்அளக்குந் தோறும்அதற் குற்றதுபோல் காட்டி
நாட்டியபின் ஒருசிறிதும் அளவில்உறு தாகித்
தான்அளக்கும் அளவதிலே முடிவதெனத் தோற்றித்
தன்அளவுங் கடந்தப்பால் மன்னுகின்ற பொருளே
வான்அளக்க முடியாதே வான்அனந்தங் கோடி
வைத்தபெரு வான்அளக்க வசமோஎன் றுரைத்துத்
தேன்அளக்கும் மறைகள்எலாம் போற்றமணி மன்றில்
திகழுநடத் தரசேஎன் சிறுமொழி ஏற்றருளே.

உரை : அளவைகளைக் கொண்டு நான் அளந்து காணும் போதெல்லாம் அவ்வளவைகளுக்கு, அமைந்ததுபோல்தே தான்றி இவ்வியல்பிற்று என்று துணிந்த பின் அத் துணிபுக்குள் சிறிதளவும் அடங்காதாகி, அதுதான் அளந்து காணும் அள வின்கண் முடிவதாம் என்று காட்டி அதன்பின் தன்னுடைய அளவும் கடந்து அப்பால் நிலை பெறுகின்ற சிவ பரம்பொருளே! தேவர்களும் அளக்க முடியாமல் அனந்தம் கோடி வானவர்களைத் தனக்குள் கொண்ட பெருவானத்தவர் களாலும் அளந்து காண வல்லதாமோ என்று மொழிந்து, தேன் போல் இனிக்கும் வேதங்கள் யாவும் போற்றுகின்ற அழகிய அம்பலத்தின்கண் விளங்குகின்ற நடனங்களைப் புரியும் அருளரசே! சிறுமை யுடைய என்னுடைய சொல் மாலையை ஏற்று மகிழ்வாயாக. எ.று.

காட்சி, கருத்து, உரை என்பன முதலாக வுள்ள அளவைகள் இவற்றைப் பிரமாணம் என்பது வழக்கு. இப்பிரமாணங்களால் அளக்கப் படுவது பற்றி, "நான் அளக்கும் தோறும் அதற்குற்றது போல் காட்டி" எனவும், பரம்பொருள் பிரமேயம் எனத் துணிந்த பின் அப்பிரமேயம் காணப்படுவதால், "ஒரு சிறிதும் அளவில் உறுதாகி" எனவும், அளவுக்கு அகப்படாததை அளத்தல் அவமாம் என அயலாதபடிப் பிரமேயமாவது தோன்ற, "தான் அளக்கும் அளவதிலே முடிவதெனத் தோற்றி" எனவும், பின் அந்த அளவெல்லையும் கடந்து அப்பாலாய் அப்பிரமேயமாய் அமைவதை யுணர்ந்து, "தன்னளவும் கடந்து அப்பால் மன்னுகின்ற பொருளே" எனவும் இயம்புகின்றார். பரம்பொருள் பிரமேயமாகவும், அப்பிரமேயமாகவும், இரண்டும் கடந்ததாகவும் தெரிவித்தவாறும். பிரமாண, பிரமேய எல்லையைக் கடந்ததாயினும் இல்பொருளாகாது உட்பொருளாவது என உணர்த்தற்கு, "அப்பால் மன்னுகின்ற பொருளே" எனத் தெளிவிக்கின்றார். மண்ணக மக்கட்கே யன்றி விண்ணக தேவர்க்கும் அளந்து காண்பரியது என்பாராய், "வான் அளக்க முடியாதே" என வுரைக்கின்றார். வேதங்கள் அனந்தங் கோடி விண்ணுலகங்களைத் தனக்குள் கொண்ட பெருவானம் ஒன்று உளதாய், அதன்கண் உறையும் தேவர்களாலும் அளக்க முடியாது என வேதங்கள் விளம்புகின்றன என்பாராய், "வான் அனந்தங் கோடி வைத்த பெருவான் அளக்க வசமோ" என்றும், வேதங்கள் ஏங்கிப் போற்று கின்றன என்பதைத் தெரிவித்தற்கு, "தேன் அளக்கும் மறைகள் எலாம் போற்ற" என்றும் இசைக்கின்றார். ஓதுவார்க்கு ஓதுந் தோறும் இன்பம் ஊற்றெடுத்துப் பெருகுதலால், "தேன் அளக்கும் மறை" என்று சிறப்பிக் கின்றார். (58)

4148. திசையறிய மாட்டாதே திகைத்தசிறி யேனைத்
தெளிவித்து மணிமாடத் திருத்தவிசில் ஏற்றி
நசைஅறியா நற்றவரும் மற்றவருஞ் சூழ்ந்து
நயப்பஅருட் சிவநிலையை நாட்டவைத்த பதியே
வசையறியாப் பெருவாழ்வே மயல்அறியா அறிவே
வான்நடுவே இன்பவடி வாய்இருந்த பொருளே
பசைஅறியா மனத்தவர்க்கும் பசைஅறிவித் தருளப்
பரிந்தநடத் தரசேஎன் பாட்டும்அணிந் தருளே.

உரை : திசை தெரியாமல் மயங்கிய சிறியேனாகிய என்னைத் தெளிவித்து அழகிய மாடத்தின்கண் நல்ல ஆசனத்தில் இருத்தி ஆசையை ஒழித்த நல்ல தவமுடையவர்களும் மற்றவர்களும் சூழ இருந்து கேட்டு விரும்புமாறு அருளுருவாகிய சிவநிலையை எடுத்துரைக்குமாறு என்னைச் சிறப்பித்த பதிப்பொருளாகிய சிவனே! குற்றமில்லாத பெருவாழ்வு நல்கும் பெருமானே! மயக்கமில்லாத அறிவாகியவனே! வானுலகின் நடுவில் இன்ப வடிவாய் எழுந்தருளும் உயர் பொருளே! அன்பில்லாத மனத்தை உடையவர்களுக்கும் அதனை அறிவித்து அவர்கட்கும் அருள் செய்ய விழைகின்ற திருக்கூத்தை ஆடுகின்ற பெருமானே! என் சொல் மாலையையும் மகிழ்ந்து ஏற்றருளுக. எ.று.

செய்வகை அறியாமல் மயக்கமுற்ற தமது சிறுமையை வெளிப்படுத்துவாராய், "திசை யறிய மாட்டாதே திகைத்த சிறியேன்" எனவும், தமக்குத் தெளிவு நல்கி மணி மாடத்தின்கண் உயர்நிலையில் இடப்பட்டிருந்த இருக்கையில் அமர்வித்துச் சிறப்பித்த நலம் விளங்க, "தெளிவித்து மணிமாடத் திருத்த விசிலேற்றி" எனவும் இயம்புகின்றார். மூவகை மண், பெண், பொன் என்ற ஆசைகளையும் நீக்கிச் சிவத்தை நோக்கித் தவம் புரியும் சான்றோர்களை, "நசை யறியா நற்றவர்" என்றும், உலகியல் வாழ்வில் உறையும் நன்மக்களை, "மற்றவர்" என்றும், இரு திறத்தாரும் சூழ இருந்து தமது சிவஞான உரையைக் கேட்டு மகிழ்ந்த குறிப்புப் புலப்பட, "சூழ்ந்து நயப்ப அருட் சுவை நிலையை நாட்ட வைத்த பதியே" என்றும் தெரிவிக்கின்றார். துன்பமில்லாத பேரின்பப் பெருவாழ்வைத் தருவது பற்றிச் சிவபெருமானை, "வசை யறியாப் பெருவாழ்வே" எனவும், அஞ்ஞான இருளுக்கு இடமின்றி ஒளிரும் சிவஞானத்தை அருளுவது தோன்ற, "மயல் அறியா அறிவே" எனவும், இன்ப வடிவாய் ஞானாகாசத்தில் எழுந்தருளும் சிவபரம்பொருளின் நிலையை உணர்த்துதற்கு, "வான் நடுவே இன்ப வடிவாய் இருந்த பொருளே" என்றும் கூறுகின்றார். பசை - அன்பு. அன்பில்லாத உள்ளத்தை உடையவர்க்கு அதனைக் காட்டி அதனைச் செய்யுமாறு ஊக்குகின்ற அருள் இயல்பு புலப்பட, "பசை யறியா மனத்தவர்க்கும் பசை அறிவித்தருளப் பரிந்த நடத்தரசே" என்று பகர்கின்றார். பாட்டு - பாட்டுக்களாலாகிய சொல் மாலை. (59)

4149. என்உயிரும் என்உடலும் என்பொருளும் யானே
இசைந்துகொடுத் திடவாங்கி இட்டதன்பின் மகிழ்ந்தே
தன்உயிரும் தன்உடலும் தன்பொருளும் எனக்கே
தந்துகலந் தெனைப்புணர்ந்த தனித்தபெருஞ் சுடரே
மன்உயிருக் குயிராகி இன்பமுமாய் நிறைந்த
மணியேஎன் கண்ணேஎன் வாழ்முதலே மருந்தே
மின்னியபொன் மணிமன்றில் விளங்குநடத் தரசே
மெய்யும்அணிந் தருள்வோய்என் பொய்யும்அணிந் தருளே.

உரை : என் உயிர், உடல், பொருள் ஆகிய மூன்றையும் யானே மனமுவந்து கொடுக்க வாங்கிக்கொண்டு, அவற்றிற்கு எதிராக மன மகிழ்ந்து, தன்னுடைய உயிரும், உடலும், பொருளும் ஆகிய மூன்றை யும் எனக்குத் தந்து என்னோடு கலந்து என்னைச் சிவமாக்கிய தனிப் பெருஞ் சுடரே! உலகில் நிலைபெற்ற உயிர்களுக்கு உயிராய் இன்பமாய் நிறைந்த மாணிக்க மணியே! எனக்குக் கண்ணாய், என் வாழ்வுக்கு முதலாய் என் நோய்க்கு மருந்தாய் ஒளிர்க்கின்ற அழகிய பொற் சபை யில் நடம் புரிகின்ற அருளரசே! மெய்ம்மை உரைகளையே ஏற்று மகிழ்ப வனாகிய நீ என்னுடைய பொய் நிறைந்த சொல் மாலையையும் ஏற்றணிந்து மகிழ்ந்தருளுக. எ.று.

என் உயிர், உடல், பொருள் ஆகிய மூன்றையும் வாங்கிக்கொண்டு உன்னுடைய உயிர், உடல் பொருள் ஆகிய மூன்றையும் எனக்குத் தந்து என்னோடு கலந்து என்னைச் சிவமாக்கிக்கொண்டு, அருள் புரிந்தாய் எனத் தம்மைச் சிவமாக்கிச் சிறப்பித்த அருள் நிலையை இதனால் விளம்புகின்றார். தன்னைச் சிவமாக்கித் தன்னோடு கலந்து கொண்ட திறம் உரைத்த வடலூர் வள்ளல் ஏனைய உயிர்களிடத்தும் உயிராய், இன்பமுமாய் நிறைந்து நிலவுவதையும் எடுத்துரைப்பாராய், "மன்னுயிர்க்கு உயிராகி இன்பமுமாய் நிறைந்த மணியே" என்று போற்றி உரைக்கின்றார். பொன்னிற ஒளி கொண்டு பொழிந்த பொன்னம்பலத்தை, "மின்னிய பொன் மணிமன்று" என்று புகழ்கின்றார். மெய்யுரைகளை ஏற்று மகிழ்வதுபோல யான் கூறுவது பொய்யாயினும் அதனையும் ஏற்று அருளவேண்டுமென வேண்டுவாராய், "என் பொய்யும் அணிந்தருளே" என்று விண்ணப்பிக்கின்றார். (60)

4150. மன்னுகின்ற பொன்வடிவும் மந்திரமாம் வடிவும்
வான்வடிவும் கொடுத்தெனக்கு மணிமுடியுஞ் சூட்டிப்
பன்னுகின்ற தொழில்ஐந்துஞ் செய்திடவே பணித்துப்
பண்புறஎன் அகம்புறமும் விளங்குகின்ற பதியே
உன்னுகின்ற தோறும்எனக் குள்ளம்எலாம் இனித்தே
ஊறுகின்ற தெள்ளமுதே ஒருதனிப்பேர் ஒளியே
மின்னுகின்ற மணிமன்றில் விளங்குநடத் தரசே
மெய்யும்அணிந் தருள்வோய்என் பொய்யும்அணிந் தருளே.

உரை : நிலைபெற்ற பொன் வடிவத்தையும், மந்திர வடிவத்தை யும், வான் வடிவத்தையும் எனக்குக் கொடுத்து, மணிமுடி யணிந்து

சொல்லப்படுகின்ற ஐந்தொழிலும் செய்திடப் பணிந்து, செம்மையாக என் அகத்தும் புறத்தும் விளங்குகின்ற பதிப்பொருளே! எண்ணுந் தோறும் என் உள்ளமெல்லாம் இனிக்கும்படிச் சுரக்கின்ற, தெளிந்த அமுதே! ஒப்பற்ற தனிப்பெரும் ஒளியாகியவனே! ஒளிர்கின்ற அழகிய அம்பலத்தில் நடம் புரிகின்ற அருளரசே! மெய்யன்பர்களில் மெய்ம்மையைக் கொண்டருளும் நீ, யான் பொய்யாகத் தொடுக்கும் சொல் மாலையையும் அணிந்தருளுக. எ.று.

சிவன் திருமேனி நிலையான பொன்னிறமுடையதாகலின் அதனை, "மன்னுகின்ற பொன் வடிவு" எனவும், மந்திர மூர்த்தியாதல் பற்றி, "மந்திரமாம் வடிவம்" எனவும், ஞானகாச வடிவும் சிவனுக்குரியதாகலின் இம்மூன்றையும் தமக்குச் சிவமாந் தன்மை எய்தினமை புலப்பட, "பொன் வடிவும் மந்திரமாம் வடிவும் வான் வடிவும் கொடுத்து" எனவும் கூறுகின்றார். தொழில் ஐந்து என்றது படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்துமாம். சிவமாந் தன்மை எய்திய ஆன்மாவுக்கு அதற்குரிய தொழிலைந்தும் உரியவாம் என்பது பற்றி, "தொழில் ஐந்தும் செய்திடவே பணித்து" என்றும், பொருள் தோறும் அதன் அகமும் புறமும் கலந்து நிற்கும் கலப்புண்மை விளக்குதற்கு, "அகம் புறமும் விளங்குகின்ற பதியே" என்றும் உரைக்கின்றார். சிந்திப்பார் சிந்திக்கும்தோறும் அவர் சிந்தையுள் தேனூறுவதாகப் பெரியோர்கள் உரைத்தலால், "உன்னுகின்றதோறும் எனக்கு உள்ளமெலாம் இனித்தே ஊறுகின்ற தெள்ளமுதே" என்று அனுபவித்து உரைக்கின்றார். பேரொளி மயமாதலின் சிவனை, "ஒரு தனிப் பேரொளியே" என்று சொல்லுகின்றார். இயல்பாகவே ஒளியுடையதாதல் பற்றி, "மின்னுகின்ற மணி" என்று விளக்குகின்றார். மெய்யர்களின் மெய்யை ஏற்றுக்கொள்வதுபோல யான் பொய்யே புனைந்து பாடும் சொல் மாலையை அணிந்தருளுக என்பாராய், "மெய்யும் அணிந்தருள்வோய் என் பொய்யும் அணிந்தருளே" என்று போற்றுகின்றார். (61)

**4151.** நன்மைஎலாம் தீமைஎனக் குரைத்தோடித் திரியும்
நாய்க்குலத்தில் கடையான நாயடியேன் இயற்றும்
புன்மைஎலாம் பெருமைஎனப் பொறுத்தருளிப் புலையேன்
பொய்உரைமெய் உரையாகப் புரிந்துமகிழ்ந் தருளித்
தன்மைஎலாம் உடையபெருந் தவிசேற்றி முடியும்
தரித்தருளி ஐந்தொழில்செய் சதுர்அளித்த பதியே
இன்மைஎலாம் தவிர்ந்தடியார் இன்பமுறப் பொதுவில்
இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

உரை: நல்லோரைக் காணினும் தீயரெனக் கருதிக் குரைத்து ஓடியலையும் நாய் இனத்திலும் கீழ்ப்பட்ட அடியேனாகிய யான் செய்கின்ற சிறுமைகள் எல்லாவற்றையும் பெருமையுடையது என்று பொறுத்தருளிப் புலைத்தன்மை யுடையவனாகிய என்னுடைய பொய்யுரைகளை மெய்யென விரும்பி மேற்கொண்டு உவந்து உயர்ந்த தன்மைகள் எல்லாவற்றையும் தன்பால் உடைய பெரிய இருக்கையில் என்னை

அமர்வித்து, முடிசூட்டித் தொழில் ஐந்தையும் செய்கின்ற சதுரப் பாட்டையும் எனக்குத் தந்த பதிப் பொருளாகிய சிவனே! வறுமையால் உளவாகும் துன்பங்களின் நீங்கி, இன்பமடையுமாறு அம்பலத்தில் விளங்குகின்ற திருநடனத்தை யுடைய அருளரசே! என்னுடைய சொல் மாலையையும் ஏற்று அணிந்தருளுக. எ.று.

நன்மை தீமைகள் ஆகிய பண்புப் பெயர்கள் ஆகுபெயரால் முறையே நல்லவரையும் தீயவரையும் குறித்து நிற்கின்றன. நாய் இனத்தின் மிகக் கீழான நாய் போன்றவன் எனத் தமது சிறுமையைக் குறித்தற்கு, "நாய் குலத்தில் கடையான நாயடியேன்" என்று வடலூரடிகள் தம்மை உரைக்கின்றார். புன்மை - சிறுமை; ஈண்டு அது சிறுமை விளைவிக்கும் செயல்கள் மேல் நின்றது. பெருமைக் குரிய சிறப்பெல்லாம் ஒருங்கு பெற்ற ஆசனம் எனச் சிறப்பித்தற்கு, "தன்மை எலாமுடைய பெருந் தவிசு" என்று மொழிகின்றார். சதுர் - சதுரப்பாடு; வித்தகம் எனினும் அமையும். இன்மை - வறுமை; நல்லுறவு மாம். இன்மையால் விளைவது துன்பமாதலின் அது அடியாரது அடிமைப் பணிக்கு இடையூறுதலின், அதனைப் போக்கி இன்பமுறச் செய்தல் இறைவனது அம்பலத் தாடலின் நோக்கமாதல் வெளிப்பட, "இன்மை எலாம் தவிர்ந்து அடியார் இன்பமுறப் பொதுவில் இலங்கு நடத்தரசே" என்று புகழ்கின்றார். இசை - சொல் மாலை. (62)

4152\. விழுக்குலத்தார் அருவருக்கும் புழுக்குலத்தில் கடையேன்
மெய்யுரையேன் பொய்யுரையை வியந்துமகிழ்ந் தருளி
முழுக்குலத்தோர் முடிசூட்டி ஐந்தொழில்செய் எனவே
மொழிந்தருளி எனைஆண்ட முதற்றனிப்பேர் ஒளியே
எழுக்குலத்தில் புரிந்தமனக் கழுக்குலத்தார் தமக்கே
எட்டாத நிலையேநான் எட்டியபொன் மலையே
மழுக்குலத்தார் போற்றமணி மன்றில்நடம் புரியும்
மாநடத்தென் அரசேஎன் மாலைஅணிந் தருளே.

உரை : உயர் குலத்தவரால் அருவருத்து ஒதுக்கப்படும் புழு இனங்கள் எல்லாவற்றிலும் கடைப்பட்டவனாகிய யான், மெய்ம்மை மொழியாது பொய்யே உரைக்கின்ற என் பொய்ம்மொழியை நயந்து மகிழ்ந்து, நலமே உருக்கொண்ட பெரியோர்க்குரிய திருவடியை எனக்கணிந்து, படைத்தல் முதலிய தொழில் ஐந்தையும் செய்க எனப் பணிந்தருளி, என்னை ஆண்டுகொண்ட முதற்பொருளாகிய ஒப்பற்ற பேரொளிப் பெம்மானே! எழுவினால் ஆக்கப்பட்ட மனத்தையுடைய உழக்கை போன்றவர்க்கு அறிதற்கரிய நிலையை யுடையவனே! நான் நெருங்கி அடைதற்குரிய பொன்மலை போன்றவனே! மழுப்படை ஏந்தும் சிவனடியார்கள் நின்று போற்ற அழகிய அம்பலத்தில் நடம் புரிகின்ற பெரிய கூத்தினையுடைய அருளரசே! என்னுடைய சொல் மாலையை அணிந்தருளுவாயாக. எ.று.

விழுக் குலத்தோர் - உயர் குலத்தவர். புழுக்குலம் - பலவகையான புழுவினம். முழுக் குலத்தோர், உயர்ந்த பண்பும் செயலும் உடைய அருட்செல்வர். பரம்பொருளாய் ஒப்பற்ற ஒளி மயமாய் விளங்குதலால்

சிவனை, "முதற் றணிப் பேரொளியே" என்று மொழிகின்றார். வலிய தின்மை பொருந்திய தூண் போன்ற மனம் என்பது விளங்க "எழுக் குலத்தில் புரிந்த மனம்" என இசைக்கின்றார். எழு - தூண்; வன்மை மிக்க இரும்புமாம். இதனை எஃகு என்பதுமுண்டு. கழு - தூண். கழுக் குலத்தார் - மரம் போல்பவன். கழு - கழுமரம். மழுக் குலத்தார் - மழுப் படையை அடையாளமாகக் கொண்டு சிவத்தொண்டு புரியும் மெய்யன்பர்கள். மழுப்படை - சிவனுக்குரிய படைகளில் ஒன்று. (63)

4153. கலைக்கொடிகண் டறியாத புலைக்குடியில் கடையேன்
கைதவனேன் பொய்தவமும் கருத்தில்உவந் தருளி
மலைக்குயர்மாத் தவிசேற்றி மணிமுடியுஞ் சூட்டி
மகனேநீ வாழ்களன வாழ்த்தியஎன் குருவே
புலைக்கொடியார் ஒருசிறிதும் புலப்படக்கண் டறியாப்
பொன்னேநான் உண்ணுகின்ற புத்தமுதத் திரளே
விலைக்கறியா மாமணியே வெறுப்பறியா மருந்தே
விளங்குநடத் தரசேஎன் விளம்பும்அணிந் தருளே.

உரை : கலை ஒழுங்கைப் பார்த்தறியாத புலைத்தன்மை பொருந்திய குடியினும் கடைப்பட்டவனும் வஞ்சகனுமாகிய என்னுடைய, பொய்த் தவத்தையும் திருவுள்ளத்தில் மகிழ்ந்தருளி மலை போல் உயர்ந்த பெரிய இருக்கையில் அமர்த்தி மணிமுடி சூட்டி, "மகனே நீ வாழ்க" என்று வாழ்த்தி யருளிய என்னுடைய அருட் குருவே! புலைச் செயலால் கொடியராகியோர் சிறிதும் விளங்கக் கண்டறியாத பொன் மேனியையுடைய பெருமானே! நான் உண்ணு கின்ற புதிய அமுதத் திரளாகியவனே! விலை குறிக்கமாட்டாத பெரிய மணி போல்பவனே வெறுத்தொதுக்கக் கூடாத மருந்து போல் பவனே! விளங்குகின்ற திருநடனத்தையுடைய அருளரசே! யான் விளம்புகின்ற சொல் மாலையை அணிந்தருளுக. எ.று.

கலைக் கொடி - கலைகளில் ஒழுங்கு; கல்வியுமாம். புலைக் குடி - புலைச் செயலுடையவர்களின் குடும்பம். கைதவன் - வஞ்சகன். பொய் தவம் - பொய்யான தவம். மலைபோல் உயர்ந்த தவசினை, "மலைக் குயர் தவிசு" என்று கூறுகின்றார். மாத் தவிசு - உயர்ந்த ஆசனம். புலைக் கொடியார் - புலைத் தொழில் புரியும் கீழ்மக்கள். அவர்களுடைய கருத்து அத்தொழிலிலேயே ஈடுபட்டிருப்பதால் அவர்களால் பரம்பொருளைக் காண்டல் கூடாமை பற்றி, "புலைக் கொடியார் ஒரு சிறிதும் புலப்படக் கண்டறியாப் பொன்னே" எனவும், அனுபவிக்குந்தோறும் புத்தின்பம் தருவதால் சிவபெருமானை, "புத்தமுதத் திரளே" எனவும் புகழ்ந்தோது கின்றார். விலையிட்டறியாத மாணிக்க மணி போன்ற நிறம் பொருந்தி விளங்குவதால் சிவனை, "விலைக்கறியா மாமணியே" என்று வியந் துரைக்கின்றார். நோய் பொருட்டுத் தரும் மருந்து வெறுப்பை விளை விக்கும் இயல்பினவாதலால் அவற்றில் வேறுபடுத்தற்கு, "வெறுப் பறியா மருந்தே" என்று மொழிகின்றார். விளம்பும் சொற்களாலாகிய பாமாலையை, "விளம்பு" எனக் கூறுகின்றார். (64)

4154. மதம்என்றும் சமயம்என்றும் சாத்திரங்கள் என்றும்
மன்னுகின்ற தேவர்என்றும் மற்றவர்கள் வாழும்
பதம்என்றும் பதம்அடைந்த பத்தர்அனு பவிக்கப்
பட்டஅனு பவங்கள்என்றும் பற்பலவா விரிந்த
விதம்ஒன்றும் தெரியாதே மயங்கியஎன் தனக்கே
வெட்டவெளி யாஅறிவித் திட்டஅருள் இறையே
சதம்ஒன்றும் சுத்தசிவ சன்மார்க்கப் பொதுவில்
தனிநடஞ்செய் அரசேஎன் சாற்றும்அணிந் தருளே.

உரை: மதங்கள் என்றும், சமயங்கள் என்றும், சாத்திரங்கள் என்றும், அவற்றுள் சொல்லப்படுகின்ற தேவர்கள் என்றும், அத் தேவர்கள் வாழும் பதங்கள் என்றும், அப் பதங்களை அடைந்த மெய்யன்பர்களால் அனுபவிக்கப்படுகின்ற அனுபவங்கள் என்றும், பல்வேறு வகையாய்ச் சமய நூல்களில் விரித்துரைக்கப்படுகின்ற பொருள் வகைகளில் ஒன்றனையும் தெரியாமல் மயங்குகின்ற எனக்கு, அவற்றை வெட்ட வெளியாகத் தெரிவித்தருளிய இறைவனே! நித்தத்தன்மை பொருந்திய சுத்தசிவ சன்மார்க்கமாகிய அம்பலத்தில் ஒப்பற்ற திருக்கூத்தாடுகின்ற அருளரசே! யான் சாற்றுகின்ற சொல் மாலையையும் மகிழ்ந்தேற்றி அணிந்தருளுக. எ.று.

மதம் - கொள்கை. பல கொள்கைகளையுடையது சமயம். அக் கொள்கைகளை எடுத்தோதுவது சாத்திரம். சமயக் கொள்கைகளை மேற்கொண்டு, வாழ்ந்து உயர்ந்தவர்கள் தேவர்கள். அத்தேவர்கள் வாழ்கின்ற நிலைகள் பதம் எனப்படும். சமய ஒழுக்கத்தை அன்புடன் மேற்கொண்டொழுகிய அன்பர்கள் முடிவில் அப்பதங்களை அடைந்து ஆங்கு அனுபவித்த அனுபவங்கள் மிகப் பலவாகக் கூறப்படுவதால் அவை விரிந்த திறத்தை, "பற்பலவா விரிந்த விதம்" எனவும், அவற்றை யறிந்துகொள்ள மாட்டாது மயங்கினேன் என்பாராய், "பற்பலவா விரிந்த விதம் ஒன்றும் தெரியாதே மயங்கிய என்றனக்கே" எனவும், சிவபிரான் குருமுதல்வனாய்த் தோன்றி அவற்றைத் தெளிவாகத் தெரிவித்த சிறப்பை உணர்த்துதற்கு, "வெட்ட வெளியா அறிவித்திட்ட அருள் இறையே" எனவும் எடுத்துரைக்கின்றார். சதம் - நித்தத்துவம், சிவமாகிய சத்துப்பொருளை அடைதற்குரிய தூய சிவநெறியை, "சுத்த சிவ சன்மார்க்கம்" என்று சொல்லுகின்றார். சாற்றுதல் - சொல்லுதல், அதனால் சொல் மாலையைச் சாற்று என்று குறித்தருளுகின்றார். (65)

4155. என்ஆசை எல்லாம்தன் அருள்வடிவந் தனக்கே
எய்திடச்செய் திட்டருளி எனையும்உடன் இருத்தித்
தன்ஆசை எல்லாம்என் உள்ளகத்தே வைத்துத்
தானும்உடன் இருந்தருளிக் கலந்தபெருந் தகையே
அன்னைஎன் ஆருயிரே அப்பாஎன் அமுதே
ஆவாஎன் றெனைஆண்ட தேவாமெய்ச் சிவமே
பொன்னாரும் பொதுவில்நடம் புரிகின்ற அரசே
புண்ணியனே என்மொழிப்பூங் கண்ணியும்ஏற் றருளே.

உரை : என் உள்ளத்தில் எழுகின்ற ஆசைகள் எல்லாம் தன்னுடைய அருளுருவில் பொருந்துமாறு செய்தருளி, என்னையும் தன்னுடன் இருப்பித்துத் தன்னுடைய ஆசையனைத்தும் என் உள்ளத்தில் நிறைத்துத், தானும் என்னுடன் இருந்து எண்ணிக் கலந்துறையும் பெருந் தகைமையையுடைய பெருமானே! எனக்கு அன்னையே, அப்பனே, என்னுடைய அருமையான உயிர் போல்பவனே! அமிர்தமாய் எனக்கு இன்பம் தருபவனே! இங்கே வா என்று என்னைக் கூவியழைத்து ஆட்கொண்டருளிய தேவனே! மெய்ம்மையான சிவபரம் பொருளே! பொன்னாலான அம்பலத்தில் நடம் புரிகின்ற அருளரசே! புண்ணிய மூர்த்தியே! என்னுடைய சொல் மாலையாகிய பூங்கண்ணியையும் மனமுவந்து ஏற்றருளுக. எ.று.

சிவத் திருமேனிகளில் தமது ஆசையெல்லாம் ஒன்றியிருப்பதை உணர்த்துதற்கு வடலூர் வள்ளல், "என் ஆசை எல்லாம் தன் அருள் வடிவந் தனக்கே எய்திடச் செய்திட்டருளி" என்று இசைக்கின்றார். தமது திருவுள்ளத்தில் உளவாகின்ற அருள் வகை எல்லாவற்றையும் என்னுள் வைத்து என் கரணத்தைச் சிவகரணமாக்கி உடனிருந்து உள்ளே கலந்தருளிய பெருநலத்தைக் கண்டு வியந்து, "எனையும் உடன் இருத்தித் தன் ஆசையெல்லாம் என் உள்ளகத்தே வைத்துத் தானும் உடன் இருந்தருளிக் கலந்த பெருந்தகையே" என விரித்துரைக்கின்றார். அன்னை என்பது அன்னா என்று விளியேற்றது. தம்மைக் கூவி அழைத்து ஆண்டுகொண்டமை பற்றி, "ஆவா என்றெனை ஆண்ட தேவா" என்று உரைக்கின்றார். பொற் சபையைப் "பொன்னாரும் பொது" என்று புகழ்கின்றார். பூங்கண்ணி - தலையில் அணியும் பூமாலை. சொல் மாலையும் பூமாலை போல்வது பற்றி, "மொழிப் பூங்கண்ணி" எனக் கூறுகின்றார். அன்னா, அப்பா, ஆருயிரே, அமுதே, தேவா, சிவமே, அரசே, புண்ணியனே, என்பன சிவத்தின்பால் கொண்ட ஆர்வம் புலப்பட நின்றன.

(66)

4156. தன்அரசே செலுத்திநின்ற தத்துவங்கள் அனைத்தும்
தனித்தனிஎன் வசமாகித் தாழ்ந்தேவல் இயற்ற
முன்அரசும் பின்அரசும் நடுஅரசும் போற்ற
முன்னும்அண்ட பிண்டங்கள் எவற்றினும்எப் பாலும்
என்அரசே என்றுரைக்க எனக்குமுடி சூட்டி
இன்பவடி வாக்கிஎன்றும் இலங்கவைத்த சிவமே
என்அரசே என் உயிரே என்இருகண் மணியே
இணை அடிப்பொன் மலர்களுக்கென் இசையும்அணிந் தருளே.

உரை : என்னுடைய அருளரசே! எனக்கு உயிராகியவனே! என்னுடைய இரண்டு கண்மணியானவனே! தனித்தனியாக இயலுகின்ற தத்துவங்கள் எல்லாவற்றையும் தனித்தனிமை குன்றாமல் என் வசம் நிற்பித்து எனக்குத் தாழ்ந்து என்னுடைய ஏவல்களைச் செய்யுமாறு அமைத்தும், மேலுலகில் உள்ள தேவர் அரசர்களும், கீழுள்ள பாதள அரசர்களும், நடுவே மண்ணுலகிலுள்ள என் முன்னின்று போற்ற, கருதப்படுகின்ற அண்ட பிண்டங்கள் எல்லாவற்றிலும் எவ்விடத்திலும்

உள்ள உயிர்கள் என் அரசே என்று தனித்தனியே புகழ்ந்து போற்றும்படி, எனக்கு அரச முடியணிந்து என்னையும் இன்ப வடிவினவாக்கி, எக்காலத்தும் அது நின்று விளங்கச் செய்த சிவ பரம்பொருளே! இரண்டாகிய உன் பொற் பாதங்களில் யான் பாடுகின்ற சொல் மாலையை ஏற்று மகிழ்ந்தருளுவாயாக. எ.று.

ஆன்ம தத்துவம் முதலிய முப்பத்தாறும் தனித்தனியே வேறு வேறு நெறியில் இயங்குவதால் அவற்றை, "தன் அரசே செலுத்தி நின்ற தத்துவங்கள்" எனவும், அவை தம்மையுடைய ஆன்மாவின் வழி நில்லாமல் அவ்வான்மாவின் உன்னின்று ஒளிரும் உயிராகிய என் ஆணை வழி நிற்கப் பண்ணினமை விளங்க, "தனித்தனி என் வசமாகித் தாழ்ந்து ஏவல் இயற்ற" எனவும் இயம்புகின்றார். மூவுலகங்களிலும் உள்ள அரசர்களும், இவ்வுலகங்களுக்கு அகத்தும் புறத்தும் உள்ள அண்ட பிண்டங்கள் எல்லாவற்றிலும் வாழும் ஆன்மாக்கள் யாவும் தனித்தனியே எதிர் நின்று "என் அரசே" என்று போற்ற, உயர்நிலைக் கண் தன்னை இன்ப வடிவமே கொண்டிருந்து விளங்க வைத்தான் சிவபெருமான் என்பாராய், "இன்ப வடிவாக்கி என்றும் இலங்க வைத்த சிவமே" என்று எடுத்தோதுகின்றார். இசை - சொல் மாலை. (67)

4157. பரவெளியே நடுவெளியே உபசாந்த வெளியே
பாழ்வெளியே முதலாக ஏழ்வெளிக்கப் பாலும்
விரவியமா மறைகள்எலாம் தனித்தனிசென் றளந்தும்
மெய்யளவு காணாதே மெலிந்திளைத்துப் போற்ற
உரவில்அவை தேடிய அவ் வெளிகளுக்குள் வெளியாய்
ஓங்கியஅவ் வெளிகளைத்தன் உள்அடக்கும் வெளியாய்க்
கரையறநின் றோங்குகின்ற சுத்தசிவ வெளியே
கனிந்தநடத் தரசேஎன் கருத்தும்அணிந் தருளே.

உரை : வியோமப் பாழ், மாயப் பாழ், உபசாந்தப் பாழ் என்ற முப்பாழ் முதலாகவுள்ள ஏழு வகைப் பாழ்களுக்கப்பால் எண்ணிறந்த இருக்குகள் நிறைந்த வேதங்கள் பலவும் தனித்தனியே முயன்று சென்று கண்டும் உண்மையளவைக் காணாமல் மெலிவுற்று வருந்திப் போற்றிச் செய்ய, அவ்வாறு தேறிய பாழ்வெளிகளுக்குள் உள்வெளியாய் உயர்ந்த உள்வெளியாய்ச் சிறந்த அவ்வெளிகள் அனைத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டு ஓங்கும் சுத்த சிவவெளியாய்த் துலங்குகின்ற பரசிவமே! அருள் கனிந்தொழுகும் திருக்கூத்தாடுகின்ற அருள் முதல்வனே! என்னுடைய கருத்தின்கண் நிறைந்த சொல் மாலையையும் ஏற்று அணிந்தருளுக. எ.று.

மாயா மண்டலாதீதப் பெருவெளியைப் பரவெளி என்றும், மாயா மண்டலத்தின் வெளியை நடுவெளி என்றும், ஞானவெளியை உபசாந்த வெளி என்றும் வடலூரார் குறிக்கின்றார். இவ்வெளிகளில் சிவவொளியின் வேறாக ஒன்றும் இல்லாமையால் இவற்றைப் பாழ் எனச் சான்றோர் குறிப்பர். முப்பாழின் மேலும் நால்வகைப் பாழ்களைக் கூறுப என்பது பற்றி நான்கையும் கூறும் ஏழ்வகைப் பாழ்களையும், "ஏழ் வெளி" என இயம்புகின்றார். இருக்குகள் பலவற்றையும் தன் கண் கொண்டு

மந்திரமும் பிராமணமுமாக வகைப்பட்டு இயலுவதால் வேதங்களை, "விரவிய மாமறைகள்" என விளம்புகின்றார். "வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே" என்று சான்றோர் உரைப்பதால், "மறைகள் எலாம் தனித்தனி சென்றளந்தும் மெய்யளவு காணாதே மெலிந்திளைத்துப் போற்ற" என்று இயம்புகின்றார். பரவெளி முதலாகவுள்ள வெளிகளுக்கு உள்வெளியாயும், அவை எல்லாவற்றையும் தன்னுள் அடங்க நிற்கும் பெருவெளியாயும், இவை எல்லாவற்றையும் கீழ்படுத்தி ஓர் எல்லையின்றி உயர்ந்தோங்குவதாய் நிலவுவது சுத்த சிவவெளி என்பாராய், "கரையயற நின்றோங்குகின்ற சுத்த சிவவெளியே" என்று யாப்புறக் காட்டுகின்றார். (68)

**4153.** வெய்யலிலே நடந்திளைப்பு மேவியஅக் கணத்தே
மிகுநிழலும் தண்ணமுதும் தந்தஅருள் விளைவே
மையல்சிறி துற்றிடத்தே மடந்தையர்கள் தாமே
வலிந்துவரச் செய்வித்த மாண்புடைய நட்பே
கையறவால் கலங்கியபோ தக்கணத்தே போந்து
கையறவு தவிர்த்தருளிக் காத்தளித்த துரையே
ஐயமுறேல் ஒன்றெனையாண் டமுதளித்த பதியே
அம்பலத்தென் அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

உரை : கோடை வெய்யிலிலே நடந்ததனால் உண்டாகிய இளைப்பு தோன்றியபொழுது அக்கணத்திலேயே, மிக்க நிழலும் குளிர்ந்த அமுதும் தந்து அளித்தார் போலும் திருவருள் விளைவாகியவனே! காம மயக்கம் சிறிது உண்டாகியபொழுது இளமங்கையர்கள் தானே வலிய வந்து கூடும்படி உதவிய மாண்புடைய நண்பனைப் போன்றவனே! செயலறுதியால் மனம் வருந்தியபோது அந்நிலையில் தோன்றி அச்செயல் அறுதிக்கு ஏதுவாகிய கவலையைப் போக்கியருளி என்னையும் காத்து ஆதரிக்கும் தலைவனே! ஐயம் பட வேண்டா என்று என்னை ஆட்கொண்டு அமுதளித்து ஆதரவு செய்த பதிப் பொருளே! அம்பலத்தில் ஆடல் புரிகின்ற அருளரசே! எனது சொல் மாலையை ஏற்றுத் தோளில் அணிந்து மகிழ்ந்தருளுக. எ.று.

வெய்யில் - வெய்யல் என வந்தது. கடும் வெய்யிலில் நடந்து இளைப்பவர்க்கு அக்கணத்தே நிழலும் உணவும் இன்பம் தருவதுபோல இறைவனது திருவருள் நலம் விளங்குதலால், "மிகு நிழலும் தண்ணமுதம் தந்த அருள் விளைவே" என்று புகழ்கின்றார். காம வெப்பத்தால் மனம் கலங்கியோர்க்கு மகளிர் உறவால் கலக்கம் நீக்கித் தெளிவு தருவிக்கும் சிறப்புடைய நண்பர்களைப்போல அருள் புரிவது பற்றிச் சிவத்தின் திருவருளை, "மாண்புடைய நட்பே" என்று உரைத்து நயப்பிக்கின்றார். மிக்க இடும்பையால் செய்வகை யறியாமல் திகைக்கின்றபோது அத்திகைப்பு நீக்கி மேலும் அது எய்தாவண்ணம் பாதுகாத்து இன்புறுத்தும் தலைமக்கள் போலத் தமக்கு இறைவன் செய்யும் திருவருள் உதவியை வியந்து, "கையறவு தவிர்த்தருளிக் காத்தளித்த துரையே" என்றும், சந்தேக விபரீதங்களால் மனம் சரிக்கின்றபொழுது சரிப்பு நீங்கியவிடத்து உளதாகும் மனவமைதியைத் திருவருள் நலமாகக் கருதுகின்றாராதலின், "ஐயமுறேல் என்றெனை யிண்டு அமுதளித்த பதியே" என்றும் சொல்லி மகிழ்கின்றார். (69)

4159. கொலைபுரிவார் தவிரமற்றை எல்லாரும் நினது
குலத்தாரே நீஎனது குலத்துமுதல் மகனே
மலைவறவே சுத்தசிவ சமரசசன் மார்க்கம்
வளரவளர்ந் திருக்கஎன வாழ்த்தியஎன் குருவே
நிலைவிழைவார் தமைக்காக்கும் நித்தியனே எல்லா
நிலையும்விளங் குறஅருளில் நிறுத்தியசிற் குணனே
புலையறியாப் பெருந்தவர்கள் போற்றமணிப் பொதுவில்
புனிதநடத் தரசேஎன் புகலும்அணிந் தருளே.

உரை : கொலைத் தொழிலைப் புரிகின்றவர்கள் ஒழிய மற்றவர்கள் எல்லோரும் நின்னுடைய இனத்தைச் சேர்ந்தவர்களாக நீ என்னுடைய இனத்தின் தலைமகனுவன்; சுத்த சிவ சமரச சன்மார்க்க நெறி தடையின்றி வளர்ந்தோங்க அது வளர்ந்து நிலை பெறுக என வாழ்த்தியருளிய குருபரனே! உயர்நிலையைப் பெறுவதற்கு விரும்பி முயல்பவர்களைக் காத்து ஆதரிக்கும் நித்திய முதல்வனே! எல்லாப் பதங்களும் விளக்கமுறத் திருவருள் ஒளியில் நிலைநிறுத்திய சிற்குணச் சிவனே! புலைத் தன்மையில்லாத பெரிய தவ முதல்வர்கள் நின்று போற்ற அழகிய அம்பலத்தில் தூய நடம் புரியும் அருளரசே! என்னுடைய சொல் மாலையையும் அணிந்தருளுக. எ.று.

கொலை புரிவார் - கொலைத் தொழிலைச் செய்பவர். குலம் - இனம். மலைவு - தடை. சமரச சன்மார்க்கம் வளர்ந்தோங்குதற்குக் குருபரனுடைய வாழ்த்து வேண்டப்படுதலின், "சுத்த சிவ சமரச சன்மார்க்கம் வளர்ந்திருக்க என வாழ்த்திய குருவே" என்று ஏத்துகின்றார். நிலை விழைவார் - உயர்ந்த பதங்களை விரும்புபவர். பதங்கள் நிலைபெறுதலன்றி அவற்றை விழைவார்க்கு அருளுதல் கூடாமையால், "எல்லா நிலையும் விளங்குகிற அருளில் நிறுத்திய சிற்குணனே" என்று புகழ்கின்றார். புலைத்தொழிலைக் கனவிலும் நினையாதவர்களை, "புலையறியாப் பெருந்தவர்கள்" எனவும், புலால் உண்ணுமை தவச் செயலாதலால் அதனை நினையாதவர்களை, "பெருந்தவர்" எனவும் சிறப்பிக்கின்றார். புகலுதல் - சொல்லுதல். ஆகவே சொல் மாலை "புகல்" எனப்படுகிறது. (70)

4160. உயிர்க்கொலையும் புலைப்பொசிப்பும் உடையவர்கள் எல்லாம்
உறவினத்தார் அல்லர்அவர் புறஇனத்தார் அவர்க்குப்
பயிர்ப்புறும்ஓர் பசிதவிர்த்தல் மாத்திரமே புரிக
பரிந்துமற்றை பண்புரையேல் நண்புதவேல் இங்கே
நயப்புறுசன் மார்க்கம்அவர் அடையளவும் இதுதான்
நம்ஆணை என்றெனக்கு நவின்றஅருள் இறையே
மயர்ப்பறுமெய்த் தவர்போற்றப் பொதுவில்நடம் புரியும்
மாநடத்தென் அரசேஎன் மாலைஅணிந் தருளே.

உரை : உயிர்களைக் கொல்லுதலும் புலால் உண்டலும் உடையவர் எல்லோரும் நமக்கு உறவினராகார்; அவர் புற இனத்தார் ஆவர்; அவர்களுக்குப் பிறரை வேண்டி நிற்கும் பசித் துன்பத்தைப்

போக்குவது மாத்திரமே செய்க; அவர்கள்பால் பணிந்து நற்பண்புடைய சொற்களைச் சொல்லவேண்டா; நண்பராய் வேறு யாரும் உதவ வேண்டா; இங்கே விரும்பப்படுகின்ற சன்மார்க்க நெறியை அவர்கள் எய்துங்காறும் இதனைச் செய்க; இதுதான் நமது அருளாணை என்று எனக்கு உரைத்தருளிய இறைவனே! மயக்கமில்லாத மெய்மைத் தவத்தையுடைய பெரியோர்கள் நின்று துதிக்க அம்பலத்தில் ஆடுகின்ற அருட்கூத்தையுடைய அருளரசே! என் சொல்மாலையை அணிந்து மகிழ்ந்தருள்க. எ.று.

உயிர்க்கொலை - உயிர்களைக் கொல்லுதல். புலைப்பொசிப்பு - புலால் உண்ணுதல். உறவினத்தார் அல்லர் - உறவினர் ஆகார். நண்பராயினும் பிறரே யாவர். பயிர்ப்புறும் பசி - பசியால் உணவு வேண்டிப் பிறரை இரக்கச் செய்யும் பசி. பயிர்ப்பு - அழைத்தல். பண்புரைத்தல் - இனிய சொற்களைக் கூறுக. நண்புதவல் - நண்பராய்ப் பொருள் இடம் முதலியன கொடுத்தல். நயப்புறு சன்மார்க்கம் - எல்லாராலும் விரும்பப் படுகின்ற சன்மார்க்கம். பிற இனத்தவராகிய அவர்கட்குப் பசி தீர்ப்பது ஒன்றே செய்தல் வேண்டும்; அதற்கு மேல் அவர்கள் நல்லுணர்வு கொண்டு சன்மார்க்க நெறியை மேற்கொள்ளும்வரையில் அவர்களோடு இனிமை மொழிகளையோ, பொருள் இடம் முதலிய பிறவற்றைக் கொடுத்தோ உதவுதல் கூடாது என்று சொல்லுகின்ற வடலூர் அடிகள் இஃது இறைவன் அருளாணை என்பாராய், "இதுதான் நம்மாணை என்று எனக்கு நவின்ற அருள் இறையே" என மொழிகின்றார். மயர்ப்பு - மயக்கம். (71)

**4161.** வன்புடையார் கொலைகண்டு புலைஉண்பார் சிறிதும்
மரபினர்அன் றாதலினால் வகுத்தஅவர் அளவில்
அன்புடைய என்மகனே பசிதவிர்த்தல் புரிக
அன்றிஅருட் செயல்ஒன்றும் செயத்துணியேல் என்றே
இன்புறஎன் தனக்கிசைத்த என்குருவே எனைத்தான்
ஈன்றதனித் தந்தையே தாயேஎன் இறையே
துன்பறுமெய்த் தவர்சூழ்ந்து போற்றுதிருப் பொதுவில்
தூயநடத் தரசேஎன் சொல்லும்அணிந் தருளே.

உரை : வன்கண்மையுடையவர்கள் உயிர்க்கொலை புரிந்து அதன் புலாலை உண்பர்; அவர்கள் ஒருசிறிதும் நம் இனத்தவராகார்; ஆயினும் வேறுபட்ட அவரிடத்து, என் அன்புடைய மகனே! அவருடைய பசியை நீக்குதல் ஒன்றையே செய்க; அதன் மேல் அவர்பால் அருள் கொண்டு ஒன்றும் செய்ய நினையாதே என்று எனக்கு இன்பம் உண்டாக எடுத்துரைத்த என் குருபரனே! என்னைப் பெற்ற ஒப்பற்ற தந்தையே! தாயே! எனக்கு இறைவனே! துன்பமில்லாத மெய்த்தவத்தையுடைய பெரியோர்கள் சூழ்ந்து நின்று போற்றுகின்ற அம்பலத்தில் தூய நடம் புரிகின்ற அருளரசே! என் சொல் மாலையை மகிழ்ந்து அருள்வாயாக. எ.று.

வன்புடையார் - வன்கண்மையுடையவர்கள்; இரக்கமில்லாதவர்கள் எனினும் பொருந்தும். புலால் உண்பவர் உயிர்களைக் கொன்று

அவற்றின் உடலூனைத் தின்பவராதலின், "கொலை கண்டு புலை உண்பார்" என்று புகல்கின்றார். புலால் உண்பது சன்மார்க்கத்தில் விலக்கப்பட்டதாகலின் புலால் உண்பார் சிறிதும் மரபினரன்று என்று கூறுகின்றார். மரபினர் - சன்மார்க்கத்தை மேற்கொண்டு ஒழுகுபவர். பசி தீர்க்கும் நல்லறத்தைப் புலால் உண்பவராயினும் அவர்கட்குச் செய்தல் வேண்டும் என்பாராய், "அவர் அளவில் அன்புடைய என் மகனே பசி தவிர்த்தல் புரிக" என்றும், அதற்கு மேல் அவர்கட்கு உதவுதல் வேண்டா என்று விளக்குவாராய், "அருட் செயல் ஒன்றும் செயத்துணியேல்" என்றும் இயம்புகின்றார். செவிக்கு இன்பமுண்டாக இனிய சொற்களால் உபதேசித்தமை விளங்க, "இன்புற என்றனக்கு இசைத்த என் குருவே" என்று கூறுகின்றார். மெய்த்தவர்கள் உயிர்க் கொலை, புலால் உண்டல் முதலியவற்றால் விளையும் துன்பங்கள் தம்மை வந்து தாக்காமைப் பொருட்டு மெய்ம்மைத் தவம் செய்கின்றார்கள் என விளக்குதற்கு, "துன்பறு மெய்த்தவர்" என்று சொல்லுகின்றார். தூய சிவபோகம் ஒன்றே விளையும் திருநடனமாதலின் சிவனது அம்பலக் கூத்தை, "தூய நடம்" என மொழிகின்றார். சொல் - சொல் மாலை. (72)

**4162.** **கொடியவரே கொலைபுரிந்து புலைநுகர்வார் எனினும்**
**குறித்திடும்ஓர் ஆபத்தில் வருந்துகின்ற போது**
**படியில்அதைப் பார்த்துகவேல் அவர்வருத்தம் துன்பம்**
**பயந்தீர்ந்து விடுகஎனப் பரிந்துரைத்த குருவே**
**நெடியவரே நான்முகரே நித்தியரே பிறரே**
**நின்மலரே என்கின்றோர் எல்லாரும் காண**
**அடியும்உயர் முடியும்எனக் களித்தபெரும் பொருளே**
**அம்பலத்தென் அரசேஎன் அலங்கல்அணிந் தருளே**

**உரை :** கொலைத் தொழிலைச் செய்து புலால் உண்பவர்கள் கொடியவர்களாயினும் குறித்த ஓர் ஆபத்தில் சிக்கி வருந்தும்பொழுது உலகில் அவ்வருத்தத்தைப் பார்த்து மகிழ வேண்டா; அவர்களுக்கு உண்டாகிய வருத்தத்தையும் துன்பத்தையும் தக்கது உதவி போக்குதல் வேண்டுமென்று அன்புடன் உபதேசித்தருளிய குருபரனே! திருமாலும், நான்கு முகங்களையுடைய பிரமனும், நித்தியர்களாகிய தேவர்களும் பிறருமாகிய நின்மலர் எனப்படுகின்ற யாவரும் காணும்படியாக அடியும் முடியும் எளியனாகிய எனக்குக் காட்டி அருளிய பரம்பொருளே! அம்பலத்தில் ஆடுகின்ற அருளரசே! என் சொல் மாலையேற்று அணிந்து மகிழ்ந்தருள்க. எ-று.

உயிர்களைக் கொன்று அவற்றின் புலாலை உண்பவர்கள் கொடியவரே என்றாலும் அவர்கட்குத் துன்பம் வந்தவிடத்து அவர்கள் வருந்துவதைப் பார்த்து மகிழ்வது நற்செயலாகாது என அறிவுறுத்துவாராய், "கொலை புரிந்து புலை நுகர்வார் எனினும் குறித்திடும் ஓர் ஆபத்தில் வருந்துகின்றபோது படியில் அதைப் பார்த்து உகவேல்" எனவும், அவர்களுக்கு வருத்தமோ, துன்பமோ, அச்சமோ தோன்றி அலைக்கின்ற போது வேண்டுவன உதவி அவர்கள் துன்பத்தைப் போக்குக என்பாராய், "அவர் வருத்தம் துன்பம் பயந் தீர்த்து விடுக" எனவும், இவ்வாறு

தமக்கு ஞானாசிரியன் உரைத்தருளினன் எனக் கூறுவாராய், "எனப்ன் பரிந்துரைத்த குருவே" எனவும் உரைக்கின்றார். பயம் தீர்த்து விடுக என்றதில் விடுக என்றது, அவருடைய தொடர்பைக் கைவிடுக எனக் குறிக்கின்றதாம். திருமால் முதலியோர் நித்தியர்களாதலின் அவரோடு ஒத்த தேவர்களை, "நித்தியரே" என மொழிகின்றார். என்கின்றோர் - எனப்படுபவர். திருமால் அடியும், நான்முகன் முடியும் காண முயன்று மாட்டாதொழிந்தாராக, எளியனாகிய எனக்குக் காட்டியருளினாய் என்பது புலப்பட, "அடியும் உயர்முடியும் எனக்களித்த பெரும் பொருளே" என்று கூறுகின்றார். பெரும் பொருள் - பரம்பொருள்; பிரமப் பொருள் எனினும் அமையும். (73)

**4163.** தயைஉடையார் எல்லாரும் சமரசசன் மார்க்கம்
சார்ந்தவரே ஈங்கவர்கள் தம்மோடுங் கூடி
நயமுறுநல் அருள்நெறியில் களித்துவிளை யாடி
நண்ணுகஎன் றெனக்கிசைத்த நண்புறுசற் குருவே
உயலுறும்என் உயிர்க்கினிய உறவேஎன் அறிவில்
ஓங்கியபேர் அன்பேஎன் அன்பிலுறும் ஒளியே
மயலறுமெய்த் தவர்சூழ்ந்து போற்றும்மணி மன்றில்
மாநடத்தென் அரசேஎன் மாலைஅணிந் தருளே.

உரை : அருள் உள்ளம் உடையவர் அனைவரும் சமரச சன்மார்க்கத்தைச் சார்ந்தவர்களாதலால் அவர்களோடு சேர்ந்து விருப்பம் மிகத் தூய அருள் நெறியில் நின்று மகிழ்ந்து விளையாடி வருக என்று எனக்கு உபதேசித்தருளிய நட்புள்ளம் கொண்ட சற்குருவாகிய சிவனே! உய்தி பெற முயலும் என் உயிர்க்கு இனிய உறவாகியவனே! என்னுடைய அறிவின்கண் ஓங்கிய பேரன்புருவாகிய பெருமானே! என் அன்பின்கண் உற்றொளிரும் ஒளி மயமாகிய பரசிவமே! மயக்கத்தைப் போக்கிய மெய்மைத் தவஞானிகள் சூழ்ந்திருந்து துதிக்கின்ற அம்பலத்தின்கண் அழகிய நடம் புரிகின்ற அருளரசே! எனது இச் சொல்மாலையை அணிந்து அருள்வாயாக. எ.று.

தயை - அருள். தமது உள்ளத்திலும் சொல்லிலும் செயலிலும் அருட் பண்பு திகழ ஒழுகுபவரை, "தயையுடையார்" என்று குறிக்கின்றார். அவர்கள் வேறு வேறு நெறியினராயினும் சமரச சன்மார்க்கத்தைச் சார்ந்தவராவர் என்பாராய், "தயையுடையார் எல்லாரும் சமரச சன்மார்க்கம் சார்ந்தவரே" என்று வடலூர் வள்ளல் யாவரும் தெளிய உரைக்கின்றார். அவர்களது கூட்டுறவு அருள் நெறியை வளர்ப்பதாகலின், "அவர்கள் தம்மோடும் கூடி நல்லருள் நெறியில் களித்து விளையாடி "நண்ணுக" என்று கூறுகின்றார். இக்கூற்று ஆசிரியருடைய அருளுரை என்றற்கு, "எனக்கு இசைத்த நண்புறு சற்குருவே" என்று நவில்கின்றார். சன்மார்க்க நெறியில் நின்று உய்தி நாடுவது தோன்ற, "உயலுறும் என் உயிர்க்கு இனிய உறவே" என உரைக்கின்றார். ஈசன்பால் கொள்கின்ற அன்பை ஞானம் என உயர்ந்தோர் கூறுதலால் அன்புக்கு அறிவை இடமாக வைத்து, "அறிவில் ஓங்கிய பேரன்பே" எனவும், அன்பே சிவம் என்பதுபற்றி ஞான ஒளிமயமாகிய சிவ பரம்பொருளை, "அன்பிலுறும் ஒளியே" எனவும் எடுத்துரைக்கின்றார்.

அருளுக்கு மறுதலையான மருள் கெடும் பொருட்டுத் தவம் செய்து உயர்ந் தவர் என்பாராய்ச் சான்றோர்களை, "மயலறு மெய்த்தவர்" எனச் சிறப்பித்து மகிழுகின்றார். மாலை எனப் பொதுப்படக் கூறினாராயினும் சிறப்பாக அது சொல் மாலைக்கு ஆயிற்று. (74)

4164. அருளுடையார் எல்லாரும் சமரசசன் மாக்கம்
அடைந்தவரே ஆதலினால் அவருடனே கூடித்
தெருளுடைய அருள்நெறியில் களித்துவிளை யாடிச்
செழித்திடுக வாழ்கஎனச் செப்பியசற் குருவே
பொருளுடைய பெருங்கருணைப் பூரணமெய்ச் சிவமே
போதாந்த முதல்ஆறும் நிறைந்தொளிரும் ஒளியே
மருளுடையார் தமக்குமருள் நீக்கமணிப் பொதுவில்
வயங்குநடத் தரசேஎன் மாலையும்ஏற் றருளே.

உரை : அருட் பண்புடையார் அனைவரும் சமரச சன்மார்க்க நெறியைச் சேர்ந்தவராவர்; ஆதலால் அவரோடு கூடி அருள்நெறியில் நின்று இன்புற்று விளையாடி அருள்நலம் பெருகி வாழ்க என்று எனக்கு உரைத்தருளிய சற்குருவாகிய சிவனே! உயர் பொருளாகக் கருதப் படுகின்ற பெரிய கருணை நிறைந்த மெய்ப்பொருளாகிய சிவ பரம் பொருளே! போதாந்தம் முதலாக நிலவும் ஆறு அண்டங்களிலும் நிறைந்து விளங்கும் சிவ ஒளியே! உள்ளத்தில் மருளுடையவர்க்கு அம்மருளை நீக்கும் பொருட்டு அழகிய அம்பலத்தின்கண் விளக்க மிக்க திருநடனத்தைச் செய்கின்ற அருளரசே! என் சொல் மாலையையும் அணிந்தருளுக. எ.று.

அருளறமே சமரச சன்மார்க்கத்தின் உயிர் நாடியாதலால் அருளாளர் யாவரையும், "சமரச சன்மார்க்கம் அடைந்தவரே" என்று சாற்றுகின்றார். அறிவுக்குத் தெளிவும் ஒளியும் தரும் நெறியாதலின், "தெருளுடைய அருள் நெறி" என்று சிறப்பிக்கின்றார். அருள் நெறியில் நிற்பார்க்கு ஞானம் நிறைந்து இன்பம் செய்வதுபற்றி, "அருள் நெறியில் களித்து விளையாடிச் செழித்திடுக வாழ்க" எனச் சற்குரு உபதேசிக் கின்றார். அருளே சிவத்தின் திருவுருவாதலின் அதனை, "பொருளுடைய பெருங்கருணைப் பூரண மெய்ச் சிவமே" என்று விளம்புகின்றார். போதாந்த முதல் ஆறும் போதாந்தம், நாதாந்தம், யோகாந்தம், கலாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என வரும். இந்த ஆறு அந்தங் களிலும் பரசிவம் நிறைந்து விளங்குவது தோன்ற, "ஆறும் நிறைந் தொளிரும் ஒளியே" என்று உரைக்கின்றார். மருளுடையார் - ஒன்றைப் பிறிதொன்றாகக் கருதும் மயக்க உணர்வினர். மருளாவது பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும் உணர்வு வகை. இம்மருள் நீங்கும் பொருட்டே இறைவன் அம்பலத்தில் திருக்கூத்தாடுகின்றான் என்ற குறிப்பு விளங்க, "மருள் நீக்க மணிப் பொதுவில் வயங்கு நடத்தரசே" என்று வழுத்துகின்றார். (75)

4165. வெம்மாலைச் சிறுவரொடும் விளையாடித் திரியும்
மிகச்சிறிய பருவத்தே வியந்துநினை நமது
பெம்மான்என் றடிதுறித்துப் பாடும்வகை புரிந்த
பெருமானே நான்செய்த பெருந்தவமெய்ப் பயனே
செம்மாந்த சிறியேனைச் சிறுநெறியில் சிறிதும்
செலுத்தாமல் பெருநெறியில் செலுத்தியநற் றுணையே
அம்மானே என்ஆவிக் கானபெரும் பொருளே
அம்பலத்தென் அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

உரை : *விரும்பத் தக்க மாலைப் பொழுதில் சிறுவரோடு கூடி விளையாடித் திரிகின்ற மிக்க இளம் பருவத்திலேயே என்னை விரும்பி, நின்னையே நமது பெருமான் என்று கொண்டு உன் திருவடியே பொருளாகக் கொண்டு பாடும் திறத்தை எனக்கருளிய சிவபெருமானே! யான் செய்த பெரிய தவத்தின் பயனாக விளங்குபவனே! இளமைச் செருக்கால் செம்மாந்திருந்த சிறியவனாகிய என்னைச் சிறுமை விளை விக்கும் நெறிகளில் சிறிதளவும் செல்லவிடாமல் பெருநெறியாகிய சிவநெறியின்கண் செல்வித்த நல்ல துணைவனே! அம்மானே! என் உயிர்க்குச் சிறந்த பெரும்பொருளே! அம்பலத்தின்கண் ஆடல் புரியும் அருளரசே! என் சொல் மாலையையும் ஏற்றுத் தோளில் அணிந் தருளுக.* எ.று.

வெம்மாலை - வெம்மையையுடைய மாலைப் பொழுது. வெம்மை விரும்பப்படும் தன்மை. வியந்து - சிறப்பாகக் கொண்டணைத்து. பெருமான் என்பது பெம்மான் என வந்தது. மிக்க இளம் பருவத்திலேயே சிவனடியே சிந்திக்கும் செம்மைநெறி தமக்கு எய்திய திறத்தை வடலூர் வள்ளல் இதனால் தெரிவித்தருளுகின்றார். இச் சிறப்பு முன் செய்த பெரிய தவப்பயனாகத் தமக்கு உண்டாயினமை தெரிவிப்பாராய், "நான் செய்த பெருந் தவமெய்ப் பயனே" என்று நவில்கின்றார். செம்மாப்பு - இளமைப் பருவத்தில் எதனையும் மதியா தொழுகும் இளமைச் செருக்கு. சிறுநெறி - சிறுமையை உண்டு பண்ணும் தீநெறி. பெருநெறி - பெருமையை உண்டுபண்ணும் சிவநெறி. அம்மான் - தலைவன். உயிரின்கண் உயிராய் நின்று உணர்வு நல்கி உய்தி பெறச் செய்வதுபற்றிச் சிவ பரம்பொருளை, "என் ஆவிக்கான பெரும் பொருளே" என்று இசைக்கின்றார். அலங்கல் - மாலை; ஈண்டுச் சொல்மாலை மேற்று. (76)

4166. ஆணவமாம் இருட்டறையில் கிடந்தசிறி யேனை
அணிமாயை விளக்கறையில் அமர்த்திஅறி வளித்து
நீணவமாம் தத்துவப்பொன் மாடமிசை ஏற்றி
நிறைந்தஅருள் அமுதளித்து நித்தமுற வளர்த்து
மாணுறஎல் லாநலமும் கொடுத்துலகம் அறிய
மணிமுடியும் சூட்டியஎன் வாழ்முதலாம் பதியே
ஏணுறுசிற் சபைஇடத்தும் பொற்சபையின் இடத்தும்
இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

உரை : ஆணவமாகிய இருள் நிறைந்த அறையின்கண் செயலின்றிக் கிடந்த சிறுமையுடையவனாகிய என்னை அழகிய மாயை என்னும் ஒளியுடைய அறையின்கண் இருக்கவைத்து அறிவு தந்து நெடிய புதுமை கொண்ட தத்துவங்களாகிய அழகிய மாடத்தின் மேலேற்றி நிறைந்த அருள் ஞானமாகிய அமுதத்தை வழங்கி நிலைபேறு பொருந்த வாழ்வித்துச் சிறப்புண்டாக நலங்கள் எல்லாவற்றையும் கொடுத்து உலகவர் அறிய மணிமுடி சூட்டியருளிய என் வாழ்முதலாகிய பதிப்பொருளே! பெருமை பொருந்திய சிற்சபையிலும் பொற்சபையிலும் விளங்குகின்ற நடம் புரிகின்ற அருளரசே! என் சொல் மாலையை அணிந்து மகிழுக. எ.று.

கேவலத்தில் ஆணவ மலவிருள் சூழ்ந்து செயலின்றிக் கிடந்த நிலையை, "ஆணவமாம் இருட்டறையில் கிடந்த சிறியேனை" எனவும், சகலாவத்தையில் மாயா காரியமாகிய உடம்பின்கண் புகுந்து இருந்தமை விளங்க, "அணிமாயை விளக்கறையில் அமர்த்தி" எனவும், உயிரறிவை விளக்கினமை புலப்பட, "அறிவளித்து" எனவும், முப்பத்தாறாகிய தத்துவங்களில் படிப்படியாக உயர்ந்து ஞானமெய்தினமை தெரிவித்தற்கு, "நீணவமாம் தத்துவப் பொன் மாட மிசையேற்றி நிறைந்த அருளமுது அளித்து" எனவும், சுத்த நிலையைப் பெறுதற்கமைந்த நிலை உண்டாகச் செய்தமை பற்றி, "நித்தமுற வளர்த்து" எனவும், சிவமாம் தன்மை பெற ஞானம் தந்த நலத்தை பற்றி, "மாணுற எல்லா நலமும் கொடுத்து" எனவும், சிவன்முத்தர் என்று சான்றோர் சிறப்பிக்கச் செய்தமையால், "உலகறிய மணிமுடியும் சூட்டிய என் வாழ்முதலாம் பதியே" எனவும் இயம்புகின்றார். ஞானசபை பொன் வேயப்பட்டிருத்தலின், பொற்சபை எனவும் வழங்கும். இசை - சொல் மாலை. (77)

4167. பான்மறுத்து விளையாடும் சிறுபருவத் திடையே
பகரும்உல கிச்சைஒன்றும் பதியாதென் உளத்தே
மான்மறுத்து விளங்குதிரு ஐந்தெழுத்தே பதிய
வைத்தபெரு வாழ்வேஎன் வாழ்வில்உறும் சுகமே
மீன்மறுத்துச் சுடர்மயமாம் விளங்கியதோர் விண்ணே
விண்அனந்தம் உள்ளடங்க விரிந்தபெரு வெளியே
ஊன்மறுத்த பெருந்தவருக் கொளிவடிவம் கொடுத்தே
ஓங்குநடத் தரசேஎன் உரையும்அணிந் தருளே.

உரை : உண்ணத் தரும் பாலை மறுத்து வெளியே ஓடி விளையாடும் சிறு பருவத்திலே சொல்லப்படுகின்ற உலகாசை சிறிதும் பதியாத என் உள்ளத்தில் மயக்கம் நீக்கி விளக்கமுடைய திருவைந்தெழுத்தைப் பதியுமாறு வைத்த பெருவாழ்வு நல்கும் பெருமானே! என் வாழ்வில் பொருந்திய சுகப் பொருளே! விண்மீன்களின்றி ஒளி மயமாய் விளங்குகின்ற ஆகாயமே! விண்ணுலகுகள் எண்ணிறந்தன தன்னுள் அடங்க விரிந்து நிற்கின்ற பெருவெளியே! உடம்பை வெறுத்த பெரிய தவ முதல்வர்க்கு ஒளி வடிவம் கொடுத்து உயர்ந்தோங்குகின்ற நடம் புரியும் அருளரசே! எனது சொல் மாலையையும் அணிந்தருளுக. எ.று.

தாயர் தரும் பாலுணவை உண்ண மறுத்து ஓடி விளையாடும் இளங் குழவி பருவத்தை, "பான் மறுத்து விளையாடும் சிறு பருவம்" என்றும், உலகப் பொருள்களின் மேல் ஆசை பதியாமல் தூயதாய் இருக்கும் குழவி உள்ளத்தை விதந்து, "பகரும் உலகிச்சை ஒன்றும் பதியாது என் உளம்" என்றும் பகர்கின்றார். பதியாத என் உளம் என்பது பதியாது என் உளம் என்று வந்தது. மான் - மயக்கம்; பிறப்பால் உளதாகும் மையல். உள்ளத்தில் படியும் பிறவி மையலை நீக்கிச் "சிவாய நம" என்னும் ஐந்தெழுத்தைப் பொருளுறக் கற்பித்து வாழ்வித்தமை புலப்பட, "ஐந்தெழுத்தே பதிய வைத்த பெருவாழ்வே" எனவும், அவ்வாழ்வின்கண் ஐந்தெழுத்தை ஓதிப் பெறும் இன்ப அனுபவத்தை, "வாழ்விலுறும் சுகமே" எனவும் இயம்புகின்றார். விண்மீன்களின் ஒளி களைத் தனக்குள் அடக்கிப் பேரொளி மயமாய் விளங்குகின்ற ஆகாயத்தை, "சுடர் மயமாய் விளங்கியதோர் விண்ணே" என்றும், விண்ணுலகங்கள் மிகப் பலவாதலால் அவை எல்லாவற்றையும் தனக்குள் அடக்கி விரிந்து பரந்து ஓங்கும் பராகாசத்தை, "விண் அனந்தம் உள்ளடங்க விரிந்த பெருவெளி" என்றும் பேசுகின்றார். சிவாகமங்களில் நிவிர்த்தி முதலிய கலை ஐந்தனுள் ஒவ்வொன்றினுள்ளும் மிகப்பல புவனங்களும், அப்புவனங்கள்தோறும் ஆகாயங்களும் என எண்ணிறந்தன கூறப்படுதலால், "விண் அனந்தம்" என விளம்பு கின்றார். ஊன் மறுத்த பெருந்தவர் என்றது, உடல் வாழ்க்கையை வெறுத்த மணிவாசகர் முதலிய பெருந் தவச்செல்வர்களை என அறிக. "ஊனும் உயிர் வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே" என்று திருவாசகம் ஓதுவது காண்க. மாணிக்க வாசகர் சிவப் பேறு பெற்ற போது ஒளி வடிவம் பெற்றாரென்று புராணம் கூறுதலால், "ஒளி வடிவம் கொடுத்தோங்கும் நடத்தரசே" என்று உரைக்கின்றார். (78)

4163. மெய்ச்சுகமும் உயிர்ச்சுகமும் மிகுங்கரணச் சுகமும்
விளங்குபதச் சுகமும் அதன் மேல்வீட்டுச் சுகமும்
எச்சுகமும் தன்னிடத்தே எழுந்தசுகம் ஆக
எங்கணும்ஓர் நீக்கம்அற எழுந்தபெருஞ் சுகமே
அச்சுகமும் அடையறிவும் அடைந்தவரும் காட்டா
ததுதானாய் அதுஅதுவாய் அப்பாலாம் பொருளே
பொய்ச்சுகத்தை விரும்பாத புனிதர்மகிழ்ந் தேத்தும்
பொதுநடத்தென் அரசேஎன் புகலும்அணிந் தருளே.

உரை : உடம்பாலும் உயிராலும் உடம்பினுள் மிக்கு நிற்கும் மனம் முதலிய கரணங்களாலும் நல்கும் இன்பமும், உடம்பின் நீங்கி மேலுலகங் களில் உள்ள இந்திர பதம் முதலியவற்றில் பெறப்படும் இன்பங்களும், அவற்றிற்கெல்லாம் மேலதாகிய முத்தி இன்பமுமாகிய எவ்வகை இன்பங் களும் தன்னிடத்தே எழுவதாகிய இன்பமேயாக எவ்விடத்தும் ஒரு சிறிதும் நீக்கமின்றி உளதாகிய பேரின்பமான பொருளே! அவ் வின்பத்தை அடையும் ஞானமும், அதனை அடைந்த முத்தர்களும் காட்டமாட்டாத அகப் பொருளாய், அது வேறு தான் வேறின்றி அதுவதுவாய் அதற்கப்பாலாய்ச் சிறந்து விளங்கும் பரம்பொருளே!

உலகியற் பொய்யின்பத்தை விரும்பாத தூயவர்களாகிய சான்றோர்கள் மகிழ்ந்து துதிக்கும் அம்பல நடனத்தையுடைய அருளரசாகிய சிவனே! யான் சொல்லுகின்ற சொல் மாலையையும் ஏற்று அணிந்தருளுக. எ.று.

உடம்பாலும் - உடம்பின்கண் உள்ள மனம் முதலிய கரணங்களாலும் அவற்றை இயக்கும் உயிராலும் விளையும் சுகத்தை, "மெய்ச்சுகமும் உயிர்ச்சுகமும், மிகுங் கரணச் சுகமும்" என்று மொழிகின்றார். உயிரோடு கூடிய உடம்பின்கண் பெறலாகும் இன்பத்தை எடுத்துக்காட்டுவது, அந்தக்கரணமாதலால் அதனை, "மிகுங் கரணம்" என்று சிறப்பிக்கின்றார். தேவ பதம், இந்திர பதம், பிரம பதம், வைகுந்த பதம், சிவ பதம் எனப் பலவாக ஓதப்படுதலால் அவற்றைப் பொது வகையில், "விளங்கு பதம்" எனவும், எல்லாப் பதங்களுக்கும் மேலது முத்தி பதமாதலால் அதனை, "மேல் வீட்டுச் சுகம்" எனவும் கூறுகின்றார். இப்பதங்களில் நுகரப்படும் இன்பங்கள் யாவும் பரம்பொருளின் பரம சுகத்தில் விளைந்தன என வற்புறுத்தற்கு, "எச்சுகமும் தன்னிடத்தே எழுந்த சுகமாக எங்கணும் ஓர் நீக்கமற எழுந்த பெருஞ் சுகமே" என்று கூறுகின்றார். பெருஞ் சுகத்தைத் தரும் சிவ பரம்பொருளைப் "பெருஞ் சுகம்" என்று குறிக்கின்றார். மேற்கூறிய பதவின்பங்களைப் பெறுதற்கு, ஞானம் இன்றியமையாததாலால், அந்த ஞானத்தாலும் அந்த ஞானத்தைப் பெற்ற ஞானிகளாலும் காட்டவொண்ணாதது பரசிவப் பொருள் எனவும், அதற்குக் காரணம் பரஞானமாய்ப் பரம்பொருள், பரஞானம், பரஞானி என்ற வேறுபாடின்றி எல்லாமாய் விளங்குவது தோன்ற, "அதுவதுவாய்" எனவும், அந்நிலைக்கும் அப்பாலாய் உளதாதல் பற்றி, "அப்பாலாம் பொருளே" எனவும் இயம்புகின்றார். நிலையில்லாத உலக போகங்களால் உளதாகும் சுகம் நிலையில்லாத பொய்த்தன்மையுடையதாதலால் அது "பொய்ச் சுகம்" எனப்படுகிறது. புனிதர் - உண்மை ஞானத்தால் தூயராகிய உயர்ந்தோர். (79)

4169. அண்டவகை எவ்வளவோ அவ்வளவும் அவற்றில்
அமைந்தஉயிர் எவ்வளவோ அவ்வளவும் அவைகள்
கண்டபொருள் எவ்வளவோ அவ்வளவும் அவற்றில்
கலத்தகலப் பெவ்வளவோ அவ்வளவும் நிறைந்தே
விண்தகும்ஓர் நாதவெளி சுத்தவெளி மோன
வெளிஞான வெளிமுதலாம் வெளிகள் எலாம் நிரம்பிக்
கொண்டதுவாய் விளங்குகின்ற சுத்தசிவ மயமே
குலவுநடத் தரசேஎன் குற்றமும் கொண் டருளே.

உரை : அண்ட கோடிகள் எத்தனையோ, அத்தனை அண்டங்களிலும், அவற்றின்கண் உள்ள உயிர் வகைகள் எத்தனையோ அத்தனையிலும், அவற்றால் காணப்பட்ட பொருள்கள் எவ்வளவோ அவ்வளவு பொருள்களிலும், அவை எல்லாவற்றிலும் பரம்பொருள் கலந்திருக்கும் கலப்பு வகை எத்தனையோ அத்தனையிலும் முற்ற நிறைந்து விண்வெளி போன்ற ஒப்பற்ற நாதவெளியிலும், சுத்த வெளியிலும், மோன வெளியிலும், ஞான வெளியிலும் முதலிய ஏனை வெளிகளிலும் முற்றவும்

நிரம்பிக்கொண்டு அவ்வெளியாய் விளங்குவது சுத்த சிவமயம்; அம்மயமே பொருந்திய நடராசனே! என்னுடைய குற்றம் பொருந்திய சொல் மாலையையும் ஏற்று அருளுவாயாக. எ.று.

ஒன்றுதலும் உடனுதலும் வேறுதலும் எனக் கலப்பு பல வகைப்படுதலால், "கலந்த கலப்பு எவ்வளவோ" என்று கூறுகின்றார். இக்கலப்பு வகையைச் சமவாயம் எனவும், சையோகம் எனவும், சமீயுத்த சம்யோகம் எனவும் வடநூல்களில் கூறுவர். நாதவெளி என்பது சுத்த தத்துவத்தின் மத்தகத்தில் விளங்குவது பற்றி, "விண் தரும் ஓர் நாத வெளி" என்றும், சுத்த தத்துவம் ஐந்தையும் தனக்குள் கொண்டது சுத்த வெளி எனவும் அறிக. வாக்குத் தத்துவத்தின் எல்லைக்கு அப்பாலது மோன வெளி; மோன நிலையின்கண் விளக்கமுறுவது ஞான வெளி; ஞான வெளியும், பரஞான வெளி அபர ஞான வெளி என்பன முதலாக விரிதலால், "ஞான வெளி முதலாம் விரிதலால், "ஞான வெளி முதலாம் வெளிகள்" என்று கூறுகின்றார். இவ்வெளிகள் எல்லாவற்றிலும் கலந்து அவ்வெளியேயாய் விளங்குவது புலப்பட, "வெளிகள் எலாம் நிரம்பிக் கொண்டு அதுவாய் விளங்குகின்ற சுத்த சிவ மயமே" என்று சொல்லுகின்றார். (80)

4170. சத்தியநான் முகர்அனந்தர் நாரணர்மற் றுளவாம்
தலைவர்அவர் அவருலகில் சார்ந்தவர்கள் பிறர்கள்
இத்திசைஅத் திசையாக இசைக்கும்அண்டப் பகுதி
எத்தனையோ கோடிகளில் இருக்கும்உயிர்த் திரள்கள்
அத்தனைபேர் உண்டாலும் அணுவளவும் குறையா
தருள்வெளியில் ஒளிவடிவாய் ஆனந்த மயமாய்ச்
சுத்தசிவ அனுபவமாய் விளங்கியதெள் ளமுதே
தூயநடத் தரசேஎன் சொல்லும்அணிந் தருளே.

உரை: சத்திய உலகிலுள்ள பிரமர்கள், வைகுந்தத்தில் உள்ள நாரணர்கள் மற்றும் உள்ளவர்களாகிய தலைவர்களும், அவரவர் உலகைச் சேர்ந்தவர்களும், மற்றவர்களும், திசை தோறும் உள்ளனவாகக் கூறப்படும் கோடிக் கோடியான அண்டங்களில் வாழும் உயிர் வகைகளும் அத்தனைப் பேரும் அள்ளி உண்டாலும் அணுவளவும் குறையாத அருளின்ப வெளியில் ஒளி வடிவாய் இன்ப மயமாய்ச் சுத்த சிவானு போதமாய் விளங்குகின்ற பரசிவமாகிய தெளிந்த அமுதமாகியவனே! தூய நடம் புரிகின்ற பெருமானே! என் சொல் மாலையை மகிழ்ந்து அணிந்தருளுவாயாக. எ.று.

சத்திய லோகத்துக்குத் தலைவராதலின் பிரமர்களை, "சத்திய நான்முகர்" எனக் கூறுகின்றார். நாரணர் வைகுந்தத்தில் இருப்பவராதலின் வைகுந்தம் என்பது அறிவிக்கப்பட்டது. சிவ பதத்தில் அனந்த சிவர் முதலியோரும், இந்திர பதத்தில் இந்திரரும் எனப் பதந்தோறும் தலைவர் பலர் கூறப்படுவது பற்றி, "மற்றுளவாம் தலைவர்" என உரைக்கின்றார். திசை தோறும் அண்டப் பகுதிகள் உளவாக, நூல்கள் கூறுதலால் "இத்திசை அத்திசையாக இசைக்கும் அண்டப் பகுதி" என

இயம்புகின்றார். அவை கோடிக் கனக்கினவாதல் தோன்ற, "அண்டப் பகுதி எத்தனையோ கோடி" என்று அறிவிக்கின்றார். அத்தனை பேர் உண்டாலும் அணுவளவும் குறையாது விளங்கிய தெள்ளமுதே என இயையும். தெள்ளமுதுமாகிய சிவத்துக்கு இடமும் வெளியும் தன்மையும் கூறுவாராய், "அருள் வெளியில் ஒளி வடிவாய் ஆனந்த மயமாய்ச் சுத்த சிவானுபவமாய் விளங்கிய தெள்ளமுதே" என்று மொழிகின்றார். சொல்-சொல்மாலை. (81)

4171. பொறிகரண முதற்பலவாம் தத்துவமும் அவற்றைப்
புரிந்தியக்கி நடத்துகின்ற பூரணரும் அவர்க்குச்
செறியும்உப காரியங்களாம் சக்திகளும் அவரைச்
செலுத்துகின்ற சத்தர்களும் தன்ஒளியால் விளங்க
அறிவறிவாய் அவ்வறிவுக் கறிவாய்எவ் விடத்தும்
ஆனதுவாய்த் தானதுவாய் அதுஅதுவாய் நிறைந்தே
நெறிவழங்கப் பொதுவில்அருள் திருநடஞ்செய் அரசே
நின்அடியேன் சொன்மாலை நிலைக்கஅணிந் தருளே.

உரை : கண் முதலிய பொறிகள், மனம் முதலிய கரணங்கள் முதலாகிய தத்துவங்கள் பலவும், அத் தத்துவங்களை விரும்பி இயக்குகின்ற பூரணராகிய தேவர்களும், அவர்களுக்குக் கூடி உதவும் உபகாரிகளாகிய சத்திகளும், அச் சத்திகளைத் தொழிற்படுத்துகின்ற சத்தர்களும் தன் அருளொளியால் விளக்கமுற இயங்கும்வண்ணம் அறிவறிவாகவும், அவ்வறிவுக்கு அறிவாகவும், எவ்விடத்தும் ஆனதுவாய், தானதுவாய், அதுவதுவாய் நிறைந்து உரிய நெறியில் இயலுமாறு அம்பலத்தில் அருள் நடம் புரிகின்ற கூத்தப் பெருமானே! உனக்கு அடியவனாகிய என்னுடைய சொல் மாலை நிலைபெறுமாறு நீ அணிந்தருளுவாயாக. எ.று.

தத்துவங்கள் தோறும் அவ்வவற்றை இயக்குகின்ற தேவர்கள் உளராதலால் அவர்களை, "இயக்கி நடத்துகின்ற பூரணர்" எனவும், அவரது தொழில்கள் இனிது நடைபெற உதவும் சத்திகளும் சத்தர்களும் என ஆகமங்களில் கூறப்படுதலால் அவர்களை, "அவர்க்குச் செறியும் உபகாரிகளாம் சத்திகளும் அவரைச் செலுத்துகின்ற சத்தர்களும்" எனப் பொதுப்படக் கூறுகின்றார். சத்தி சத்தர்களின் இயல்பு சிவஞான மாப்பாடியத்தில் இரண்டாம் சூத்திரம் நான்காம் அடிக் கரணத்தில் கூறப்படுவது காண்க. அவரவர் அறியும் அறிவாய் அந்த அறிவுக்கறிவாய் இடம் பெற்றுக் கலப்பால் தான் அதுவாய் அதுவதுவாய் நிறைந்து, தத்துவங்கள் முறையே தத்தமக்குரிய தொழில்களை முறைப்படச் செய்தற்கு ஏதுவாதல் விளங்க, "அறிவறிவாய் அவ்வறிவுக் கறிவாய் எவ்விடத்தும் ஆனதுவாய்த் தானதுவாய் அதுவதுவாய் நிறைந்தே நெறி வழங்க" என்று விளக்குகின்றார். (82)

4172. உண்ணுகின்ற ஊண்வெறுத்து வற்றியும்புற் றெழுத்தும்
ஒருகோடிப் பெருந்தலைவர் ஆங்காங்கே வருந்திப்
பண்ணுகின்ற பெருந்தவத்தும் கிடைப்பரிதாய்ச் சிறிய
பயல்களினும் சிறியேற்குக் கிடைத்தபெரும் பதியே
நண்ணுகின்ற பெருங்கருணை அமுதளித்தென் உளத்தே
நானுகித் தானுகி அமர்ந்தருளி நான்தான்
எண்ணுகின்ற படிஎல்லாம் அருள்கின்ற சிவமே
இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

உரை : கோடிக்கணக்கான தலைமைக் குணம் படைத்தவர்கள் ஆங்காங்கு இருந்து உண்ணுகின்ற உணவைத் துறந்து, உடல் வற்றியும் தம்மைச் சூழப்புற்றெழுந்து மூடிக்கொள்ளவும் வருந்திச் செய்கின்ற பெரிய தவத்தாலும் கிடைத்தற்கரிதாய்ச் சிறிய பயல்களினும் சிறிய வனுகிய எனக்குக் கிடைத்ததாகிய பெரிய பதிப்பொருளே! பொருந்து கின்ற எனது பெரிய திருவருள் அமுதத்தை எனக்களித்து என் உள்ளத்தின்கண் நானும் தானுமாய் எழுந்தருளி நான் எண்ணுகின்ற படியெல்லாம் அருள் செய்கின்ற சிவ பரம்பொருளே! விளங்குகின்ற திருநடனத்தையுடைய அருளரசே! என் சொல் மாலையை ஏற்று அணிந்து மகிழ்ந்தருளுக. எ.று.

உண்ணும் உணவைத் துறத்தலால் உடல் வற்றி மெலிந்தமை புலப்பட, "உண்ணுகின்ற ஊண் வெறுத்து வற்றியும்" எனவும், பொறி புலன்கள் உணர்வறச் செற்றமை விளங்க, "புற்றெழுந்தும்" எனவும், சலிப்பின்றிப் பெருந்தவம் புரிந்தமை விளங்க, "புற்றெழுந்தும் வருந்திப் பண்ணுகின்ற பெருந்தவம்" எனவும், இத் தவத்தாலும் சிவத்தின் திருவருள் கிடைத்தற்கரிதாயினமை புலப்பட, "பெரும் தவத்தும் கிடைப்பரிதாய்" எனவும், தமக்கு அது எளிதில் கிடைத்தமை உரைப்பாராய், "சிறிய பயல்களினும் சிறியேற்குக் கிடைத்த பெரும் பதியே" எனவும் எடுத்துரைக்கின்ருர். சிவனருளை நாடித் தவம் முயன்றவர்கள் எண்ணிறந்தவர் என்றற்கு, "ஒரு கோடிப் பெருந்தலைவர்" என்று கூறு கின்ருர். "புற்றுமாய் மரமாய்ப் புனல்காலே உண்டியாய் அண்ட வாணரும் பிறரும், வற்றியாரும் நின் மலரடி காணு மன்ன" (செத்தி) என மாணிக்கவாசகர் உரைப்பது ஈண்டு நினைவு கூரத்தக்கதாம். தலைவர் - தலைமைக் குணங்களையுடையவர். சிறிய பயல்கள் - மிக்க இளஞ் சிறுவர்கள். சிறியேன் - சிறுமைப் பண்புடையவன். நண்ணுதல்- பொருந்துதல். நானும் தானுமாய் இருந்தோம் என்பார், "நானுகித் தானுகி அமர்ந்தருளி" எனக் கூறுகின்ருர். என்னைத் தன்றன்மை உடையவனுக்கியும், தன்றன்மை கெடாது நின்றமையும் இனிது விளங்க "நானுகித் தானுகி" என்று நவில்கின்ருர். என்னுள்ளே இருந்து நான் நினைப்பனவனைத்தும் நான் எய்த அருளுகின்ற சிவ பரம்பொருள் என்பாராய், "நான்தான் எண்ணுகின்றபடி எல்லாம் அருள்கின்ற சிவமே" என்று எடுத்தோதுகின்ருர். (83)

4172. கொள்ளைவினைக் கூட்டுறவால் கூட்டியபல் சமயக்
கூட்டமும்அக் கூட்டத்தே கூவுகின்ற கலையும்
கள்ளம்உறும் அக்கலைகள் காட்டியபல் கதியும்
காட்சிகளும் காட்சிதரு கடவுளரும் எல்லாம்
பிள்ளைவிளை யாட்டெனநன் கறிவித்திங் கெனையே
பிள்ளைஎனக் கொண்டுபிள்ளைப் பெயரிட்ட பதியே
தள்ளரிய மெய்யடியார் போற்றமணி மன்றில்
தனிநடஞ்செய் அரசேஎன் சாற்றும்அணிந் தருளே

உரை : மிகுதியான வினைப் பெருக்கத்தால், உண்டாகிய பலவேறு சமய வகைகளும் அவற்றிடத்தே ஓதப்படுகின்ற சாத்திரங்களும், கள்ளம் பொருந்துகின்ற அச் சாத்திரங்கள் கூறுகின்ற பல்வகைக் கதிகளும் ஞானங்களும், அவற்றைத் தரும் தெய்வங்களும் எல்லாம் சிறு பிள்ளைகளின் விளையாட்டு என்று எனக்குத் தெளிவாக அறிவித்து, என்னையும் தன் பிள்ளை எனக்கொண்டு பிள்ளைப் பெயரிட்ட பதியாகிய சிவனே! நீக்குதற்கரிய உண்மையடியார்கள் திருமுன் நின்று துதிக்க, அழகிய அம்பலத்தில் தனிநடம் புரிகின்ற அருளரசே! நான் சொல்லு கின்ற என் சொல் மாலையையும் மகிழ்ந்து அணிந்தருள்க. எ.று.

கொள்ளை - மிகுதி. பல்வேறு கொள்கைகளையும் அவற்றிற்குரிய செயல் வகைகளையும் எண்ணி, அமைப்பதாகையால் சமயங்களை, "கொள்ளைவினைக் கூட்டுறவால் கூட்டிய பல்சமயம்" என்றும், அச் சமயக் கொள்கைகளையும் ஒழுக்க நெறிகளையும் எடுத்துரைக்கின்ற சமய சாத்திரங்களை, "அக்கூட்டத்தே கூவுகின்ற கலை" என்றும் குறிக் கின்றார். கூவுதல் - ஓதுதல். அச் சாத்திரங்களில் பொய்யும் கலந் திருப்பதுபற்றி, "கள்ளமுறும் அக்கலைகள்" எனவும், இன்ன கொள்கை களைச் செயற்படுத்தினால் இன்ன பயனைப் பெறுவர் என்று அக் கலைகள் கூறுவதால், அக்கலைகள் காட்டிய பல்கதியும்" எனவும், அவற்றைப் பற்றிய ஞான வகைகளையும் ஞானத்தால் பெறக்கடவ நலங்களை நல்கும் தேவர்களையும், "காட்சிகளும் காட்சி தரு கடவுளரும்" எனவும் இசைக்கின்றார். காட்சி - ஞானம், சமயங்களும், சாத்திரங்களும், கதிகளும், காட்சிகளும், கடவுளருமாகிய இவை எல்லாம் சிறு பிள்ளைகள் மேற்கொண்டு ஆடும் விளையாட்டுப் போல்வனவாம் எனத் தாம் அறிந்து கொண்டமை தெரிவிப்பாராய், "எல்லாம் பிள்ளை விளையாட்டென நன்கறிவித்து" என்றும், தன் பிள்ளைக்குத் தந்தை உரைப்பது போலத் தமக்குத் தெரிவிக்கப்பட்டமை புலப்படுத்தற்கு, "இங்கு எனைப் பிள்ளை எனக்கொண்டு" என்றும், வடலூர் வள்ளலுக்கு இராமலிங்கம் பிள்ளை என்பது பெயராகையால் அதுவும் குறித்தற்கு, "பிள்ளைப் பெயரிட்ட பதியே" என்றும் கூறுகின்றார். மெய்ம்மைத் தன்மையால் விலக்குதற் காகாத சிவனடியார் என்பார், தள்ளரிய மெய்யடியார்" என்று சான் றோர்களைச் சிறப்பிக்கின்றார். மாதொரு பாகனுகாது சிவன் மட்டும் தனி நின்று புரியும் நடனமாதலின், "தனி நடஞ்செய் அரசே" என்று கூறுகின்றார் எனினும் அமையும். (84)

4174. நால்வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலா
நவின்றகலைச் சரிதம்எலாம் பிள்ளைவிளை யாட்டே
மேல்வருணம் தோல்வருணம் கண்டறிவார் இலைநீ
விழித்திதுபார் என்றெனக்கு விளம்பியசற் குருவே
கால்வருணங் கலையாதே வீணில்அலை யாதே
காண்பனஎல் லாம்எனக்குக் காட்டியமெய்ப் பொருளே
மால்வருணங் கடந்தவரை மேல்வருணத் தேற்ற
வயங்குநடத் தரசேஎன் மாலைஅணிந் தருளே.

உரை : நால்வகை வருணம், ஆசிரமும், அவற்றிற்குரிய ஆசாரம் முதலாக நூல்களில் சொல்லப்படும் ஒழுக்கங்கள் எல்லாம் பிள்ளை விளையாட்டாகும்; பிறர் மேல் கூறப்படும், வருண வகைகளை உடம்பின் தோல் வருணம் கொண்டு அறிகின்றவர்கள் யாருமில்லை; நீ இதனைப் பரக்க விழித்துப் பார்ப்பாயாக என எனக்குச் சொல்லியருளிய சற்குருவே! காலின் நிறம் கலையாமலும் வீணே அலையாமலும் காணத் தகுவன எல்லாவற்றையும், இருந்து காணக்காட்டிய மெய்ப்பொருளாகிய பெருமானே! மயக்க வகைகளை நீக்கிய பெரியோர்களைத் தேவர்கள் நிலைக்கு, உயர்த்தும்பொருட்டு விளங்குகின்ற திருக்கூத்தாடுகின்ற சிவனே! என் சொல் மாலையை ஏற்று மகிழ்ந்து அணிந்தருள்க. எ.று.

நால் வருணம் - அந்தணர், அரசர் வணிகர், வேளாளர் என்ற நால்வகைச் சாதிகள். வருணம் - சாதி; நிறமுமாம். ஆசிரமம் - பிரமாசரியம். இல்வாழ்வான், வானபிரஸ்தன், சந்நியாசி என்பன அவரவர்களுக்கு ஓதிய சாதி ஆசிரம ஒழுக்கங்கள் இங்கே ஆசாரம் எனப்படுகிறது. இவை யாவும் நூல்களில் ஒழுக்கம் எனக் குறிக்கப் படுவதால் இவற்றை, "நவின்ற கலைச் சரிதம்" எனவும், இவையும் பல்வகைச் சமய ஒழுக்கங்களைப்போல் பிள்ளை விளையாட்டாகும் என்பாராய், "நவின்ற கலைச் சரிதம் எலாம் பிள்ளை விளையாட்டே" எனவும் உரைக்கின்றார். மேல் வருணம் - மேலே கூறிய நால்வகை வருணம். அந்தணர் முதலிய நால்வகை வருணத்தாரையும் அவர் உடம்பின் தோலின் நிறம் கண்டு அவருடைய சாதி வருணத்தை ஒருவரும் கண்டறியவில்லையாதலால், "மேல் வருணம் தோல் வருணம் கண்டறிவார் இல்லை" என்றும், இதனை நீ கண்ணைப் பரக்கத் திறந்து பார்த்துக் கண்டுகொள்ளலால் என்பாராய், "நீ விழித்து இதுபார்" என்றும் கூறுகின்றார். இவ்வாறு தனக்கு இறைவன் ஞானாசிரியனாய்த் தெரிவித்தார் என்பார், "எனக்கு விளம்பிய சற்குருவே" என விளம்பு கின்றார். கால் வருணம் - காலின் நிறம். தூசி படிந்து நிறம் மாறி வீணே நடந்து அலையாமல் இருந்த விடத்திலிருந்தே காணக் கூடிய எல்லாவற்றையும் தெளிவாகக் காணும்படிக் காணச் செய்தமை விளங்க, "கால் வருணங் கலையாதே வீணில் அலையாதே காண்பன எல்லாம் எனக்குக் காட்டிய மெய்ப்பொருளே" என்று சொல்லு கின்றார். மால் வருணம் - காம வெகுளி மயக்கங்களால் உண்டாகும் மருட்சி. மேல் வருணம் - தேவர் இனம். மயக்கமில்லாத ஞானிகளைத் தேவ தேவர்களாக உயர்த்துதற்கு அம்பலத்தில் ஆண்டவனது திருநடனம் விளங்குகிறது என விளம்புவாராய், "மால் வருணங்

கடந்தவரை, மேல் வருணத் தேற்ற வயங்கு நடத்தரசே" என்று போற்றுகின்றார். மாலை - சொல் மாலை. (85)

4175. எவ்விடத்தும் எவ்வுயிர்க்கும் இலங்குசிவம் ஒன்றே
என்னாணை என்மகனே இரண்டில்லை ஆங்கே
செவ்விடத்தே அருளொடுசேர்த் திரண்டெனக்கண் டறிநீ
திகைப்படையேல் என்றெனக்குச் செப்பியசற் குருவே
அவ்விடத்தே உவ்விடத்தே அமர்ந்ததுபோல் காட்டி
அங்குமிங்கும் அப்புறமும் எங்குநிறை பொருளே
ஒவ்விடச்சிற் சபைஇடத்தும் பொற்சபையின் இடத்தும்
ஓங்குநடத் தரசேஎன் உரையும்அணிந் தருளே.

உரை: எங்கும் எல்லா உயிர்களிலுள்ளும் விளங்குவது சிவ பரம்பொருள் ஒன்றேயாகும்; அஃது இரண்டில்லை; என் மகனே இது என் ஆணையாகச் சொல்லுவது; அங்கே செம்மையாகிய சிவம் அருட் சத்தியோடு சேர்ந்து இரண்டென நீ கண்டறிவாயாக; இவ்வாறு சொல்வதால் நீ திகைக்க வேண்டா என்று எனக்கு எடுத்துரைத்த சற்குருவாகிய பெருமானே! அவ்விடத்தும் இவ்விடத்தும் மேலிடத்தும் இருந்ததுபோல் தன்னைக் காட்டி அங்கும், இங்கும், அப்புறத்தும், எப்புறத்தும், எங்கும் நிறைந்து விளங்குகின்ற பரம்பொருளே! சிற்சபை யிடத்தும் பொற்சபையிடத்தும் ஒத்த நிலையில் ஓங்குகின்ற திருக் கூத்தையுடைய அருளரசே! என்னுடைய சொல் மாலையையும் ஏற்று அணிந்தருளுக. எ.று.

எவ்விடத்திலும் எப்பொருளிலும் எவ்வுயிரின் கண்ணும் கலந்து நின்று விளங்குவது சிவம் ஒன்றேயாகும்; அஃது இரண்டாதல் இல்லை; இஃது உண்மை என வற்புறுத்தற்கு, "என்னாணை என் மகனே இரண்டில்லை" என்று எடுத்துரைக்கின்றார். சிவத்தின் தனிநிலையைச் "செவ்விடம்" என்று சிறப்பிக்கின்றார். மாணிக்கவாசகரும் "செம்மையேயாய்ச் சிவபதம்" என்று தெரிவிக்கின்றார். சிவம் அருட் சத்தியோடு கூடியது என்று சான்றோர் கூறுவதால் சிவமும் சத்தியும் சேர்ந்திருத்தலின் இரண்டெனக் கூறுதல் உண்டாதலால், "அருளொடு சேர்த்து இரண்டெனக் கண்டறி நீ" என்று கூறுகின்றார். சிவம் ஒன்றே என்றவர், அருளொடு சேர்த்து இரண்டு எனக் கண்டறிக என்பது கேட்டு உண்மை விளங்காமல் மாணவன் மயங்காமை பொருட்டு, "திகைப் படையேல்" என்று ஆசிரியர் யாப்புறுகின்றார். தீ என்பது ஒன்றாகவும், தீயும் அதன் சுடும் சத்தியும் என இரண்டாகப் பிரித்து ஓதப்படுவதுபோலச் சிவமும் அருட் சத்தியும் இரண்டாக வைத்து ஓதப்படுவதுபற்றி, "இரண்டெனக் கண்டறி நீ" என்று ஆசிரியர் விளக்குகின்றார். மேலிடத்தும், கீழிடத்தும், பக்கத்தும் இருப்பது போல் அறிந்தோர் கூறுவராயினும், எங்கும் எப்பொருளிலும் கலந்து அச்சிவம் ஒன்றே விளங்குகிறது என விளக்குதற்கு, "அங்குமிங்கும் அப்புறமும் எங்கு நிறை பொருளே" என உரைக்கின்றார். உவ்விடம் - பின்னிடமும் மேலிடமுமாகும். சிற்சபையிலும் பொற்சபையிலும் ஒப்ப நின்று ஆடுவது பற்றி, "சிற்சபை யிடத்தும் பொற்சபை யிடத்தும்

ஒவ்விட ஓங்கு நடத்தரசே" என இயலும். ஒவ்வுதல் - ஒப்ப விருத்தல். உரை - ஈண்டுச் சொல் மாலை மேற்று. (86)

4176. இயல்வேதா கமங்கள்புரா ணங்கள்இதி காசம்
இவைமுதலா இந்திரசா லங்கடையா உரைப்பர்
மயல்ஒருநூல் மாத்திரந்தான் சாலம்என அறிந்தார்
மகனேநீ நூல்அனைத்தும் சாலம்என அறிக
செயல்அனைத்தும் அருள்ஒளியால் காண்கஎன எனக்கே
திருவுளம்பற் றியஞான தேசிகமா மணியே
அயல்அறியா அறிவுடையார் எல்லாரும் போற்ற
ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

உரை: ஓதப்படுகின்ற வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள், இதிகாசங்கள் முதலாக இந்திர சாலம் கூறும் நூல்கள் ஈருகப் பல நூல்களை அறிந்தவர்கள் சொல்லுவார்கள்; ஆனால் மயக்கம் தரும் நூல் இந்திரசாலம் கூறும் நூல் மாத்திரந்தான் சாலம் என உரைப்பர்; ஆயினும், மகனே நீ நூல்கள் யாவுமே சாலமென அறிவாயாக; அன்றியும், செய்யப்பட்ட நூல்கள் எல்லாவற்றையும் அருள் ஞானக் கண் கொண்டு பார்ப்பாயாக என்று எனக்கு மனமுவந்து உரைத் தருளிய ஞான குருவாகிய மணியே! சிவனை ஒழிய அயலாகிய பிற தெய்வங்களை நோக்காத ஞானிகள் எல்லாரும் திருமுன் நின்று ஏத்தித் துதிக்க, அம்பலத்தில் ஆடுகின்ற பெருமானே! என் சொல் மாலையையும் மகிழ்ந்தேற்றி அணிந்தருளுக. எ-று.

ஓதப்படும் நூல் வகைகளில் இந்திரசாலம் முதலிய தந்திர நூல்களைக் கடையாகிய நூலாக அறிஞர் கூறுவது பற்றி, "இந்திர சாலம் கடையா உரைப்பார்" எனவும், அது கண்டார்க்கு மயக்கம் தரும் நூலாதலின் அதனை, அஃது ஒன்றை மாத்திரமே மயக்க அறிவைத் தரும் இயல்பினது என்று அறிந்தோர் கூறுவது பற்றி, "மயல் ஒரு நூல் மாத்திரந்தான் சாலமென உலகவர் அறிந்துள்ளனர்" எனவும், அஃது ஒன்று மாத்திரமன்றி வேதங்கள் முதலாக ஓதப்படும் நூல்கள் யாவுமே மயல் விளைவிக்கும் நூல்களாம் என்பாராய், "நூல் அனைத்தும் சாலவென மகனே நீ அறிக" எனவும் கூறுகின்றார். செய்யப்பட்ட நூல்கள் அனைத்தையும் கண்டாங்குக் காணுமல் திருவருள் ஞான நாட்டம் கொண்டு காண்டல் வேண்டும் என்பாராய், "செயலனைத்தும் அருளொளியால் காண்க என எனக்கே திருவுளம் பற்றிய ஞான தேசிக மாமணியே" என்று மொழிகின்றார். திருவுளம் பற்றுதல் - மனமுவந்து சொல்லுதல். ஞான தேசிகர் - ஞானசிரியர். சிவனுக்கு அயலாக உள்ள தெய்வங்களைச் சிந்தையில் கொள்ளாத சிவஞானச் செல்வர்களை, "அயலறியா அறிவுடையார்" என்று சிறப்பிக் கின்றார். அலங்கல் - மாலை; ஈண்டுச் சொல் மாலை மேற்று. (87)

4177. தோன்றியவே தாகமத்தைச் சாலம்என உரைத்தேம்
சொற்பொருளும் இலக்கியமும் பொய்எனக்கண் டறியேல்
ஊன்றியவே தாகமத்தின் உண்மைநினக் காகும்
உலகறிவே தாகமத்தைப் பொய்எனக்கண் டுணர்வாய்

ஆன்றதிரு அருட்செங்கோல் நினக்களித்தோம் நீயே
ஆள்கஅருள் ஒளியால்என் றளித்ததனிச் சிவமே
ஏன்றதிரு அமுதெனக்கும் ஈந்தபெரும் பொருளே
இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

உரை : வேதாகம உரைகளை மயக்க உரை (சாலம்) எனச் சொன்னோம்; சொற்பொருளும் அவற்றுளாகிய இலக்கியங்களும் பொய் எனக் கொள்ளல் வேண்டா; நிலைத்த வேதாகமங்களில் பொதிந்துள்ள உண்மைகள் எனக்கு உரியனவாகும்; உலகறிய ஓதப்படுகின்ற வேதாகமத்தைப் பொய்யென்று நீயே கண்டுகொள்வாய்; அவை உடையதாகிய திருவருள் என்னும் செங்கோலை உனக்கு அளித்துள்ளோம்; அதுகொண்டு ஞான ஒளியால் அருளாட்சி செய்க என்று உரைத்தருளிய ஒப்பற்ற சிவபெருமானே! பொருந்திய ஞானவமுதத்தை எனக்கும் தந்தருளிய பெரும்பொருளே! விளங்குகின்ற அம்பலத்தில் ஆடுகின்ற அருளரசே! என் சொல் மாலையையும் உவந்தேற்று அணிந்தருள்க. (எ.று.)

வேதாகம உரைகள் எனச் சிலரால் பொய்யாக உரைக்கப்படுவன உண்டாதலால் அவற்றை, "தோன்றிய வேதாகமம்" என்றும், அவை பொருளற்ற மயக்கவுரை என்றற்கு, "சாலமென உரைத்தேம்" என்று கூறுகின்றார். சொல்லும் பொருளும் அவற்றுளாகிய இலக்கியங்களும் உண்மையே அடிப்படையாகக் கொண்டவையாதலால் அவைகளைப் பொய்யெனக் கருதலாகாது என்பாராய், "பொய் எனக் கண்டறியேல்" என்று புகழ்கின்றார். உண்மைப் பொருள்களாய் நிலைபெற்ற வேதாகம உரைகள் என்றும் வேண்டப்படுபவையாதலால் அவைகளை, "ஊன்றிய வேதாகமம்" எனவும், அவற்றின் உண்மைகள் வேண்டப்படுபவை என்பாராய், "உண்மை நினக்காகும்" எனவும், உலகவர் அறிந்தவர் போல் உரைப்பனவற்றை வடலூர் அடிகள் பொய் எனக் கொள்வது தோன்ற, "பொய் எனக் கண்டுணர்வாய்" எனவும் கூறுகின்றார். அருளறம் - அருட் செங்கோல் எனப்படுகிறது. எவ்வுயிர்க்கும் அருள் ஞான நல்லறத்தைப் பரப்புக என்பாராய், "அருட் செங்கோல் நினக் களித்தோம் நீயே அருளொளியால் ஆள்க" என அறிந்தமை புலப்பட, "அளித்த தனிச் சிவமே" எனப் புகழ்கின்றார். அருள் ஞானமாகிய அமுதத்தைத் தமக்கு இறைவன் அருளினமை இனிது விளங்க, "ஏன்ற திருவமு தெனக்கும் ஈந்த பெரும்பொருளே" என இசைக்கின்றார். பரம்பொருள் ஒன்றே பெருமைக்குரியதாகலின் அதனைப் "பெரும் பொருளே" எனச் சிறப்பிக்கின்றார். (88)

4178. நான்முகர்நல் உருத்திரர்கள் நாரணர்இந் திரர்கள்
நவில்அருகர் புத்தர்முதல் மதத்தலைவர் எல்லாம்
வான்முகத்தில் தோன்றிஅருள் ஒளிசிறிதே அடைந்து
வானகத்தும் வையகத்தும் மனம்போன படியே
தேன்முகந்துண் டவர்எனவே விளையாடா நின்ற
சிறுபிள்ளைக் கூட்டம்என அருட்பெருஞ்சோ தியினால்
தான்மிகக்கண் டறிகஎனச் சாற்றியசற் குருவே
சபையில்நடத் தரசேஎன் சாற்றும்அணிந் தருளே.

உரை : பிரமன், திருமால், உருத்திரர், இந்திரர் எனவும், அருகர், புத்தர் என உரைக்கப்படுகின்ற மதத் தலைவர்கள் எல்லாரும் ஞான வானத்தில் தோன்றி, வரும் அருள் ஒளியைச் சிறிதே பெற்று, வானுலகிலும் மண்ணுலகிலும் தங்கள் மனம் போனபடி எல்லாம் மதுவுண்டு மயங்கியவர் போல விளையாடுகின்ற சிறு பிள்ளைக் கூட்டத்தினராவர் எனவும், அவர்களுடைய உபதேசங்களை அருட் பெருஞ் சோதியாகிய ஞானத்தால் நீ கண்டறிவாயாக என உரைத்தருளிய சற்குருவே! அம்பலத்தில் ஆடல் புரிகின்ற அருளரசே! என் சொல் மாலையையும் மகிழ்ந்தேற்று அணிந்தருளுக. எ.று.

பிரமன் முதலிய நால்வரும் வானுலகத்திலும், அருகர், புத்தர் முதலியோர் மண்ணுலகத்திலும் சமயப் பணி புரிந்ததனால் அவர்களை, "வானகத்தும் வையகத்தும் விளையாடுகின்ற சிறு பிள்ளைக் கூட்டம்" என்றும், அவர்களுடைய சமய உணர்வுகளும் ஒழுக்கங்களும் தெளிவில்லாதவை என்ற கருத்துப்பட, "மனம் போனபடியே தேன் முகந்துண்டவர் எனவே விளையாடா நின்ற சிறு பிள்ளைக் கூட்டம்" என்றும் தெரிவிக்கின்றார். தேன் - மது. மதுவுண்டு மயங்கினவர்கள் தெளிவில்லாத சொல்லும் செயலும் உடையவராவர் என அறிக. சிறு பிள்ளைகளின் கூட்டம் அனுபவம் முதிர்ந்த வழித் தம் செயலைக் கைவிடுவதுபோல, உண்மை ஞானம் எய்தியவிடத்துத் தங்கள்செயலைக் கைவிடுவர் என்பது கருத்து. அவர்களது ஞானத்தின் வழி நில்லாது அருட்பெருஞ்சோதியாகிய அருள் ஞானத்தின் வழியாக உண்மைகளைக் கண்டறிக என்று ஞானதேசிகன் உபதேசித்தான் என்பாராய், "அருட் பெருஞ் சோதியினால் தான் மிகக் கண்டறிக எனச் சாற்றிய சற்குருவே" என மொழிகின்றார். சபை - ஞானசபை. சாற்று - சொல்லுகின்ற சொல் மாலை. சாற்றுதல் - சொல்லுதல். • (89)

4179. தவறாத வேதாந்த சித்தாந்த முதலாச்
சாற்றுகின்ற அந்தமெலாம் தனித்துரைக்கும் பொருளை
இவறாத சுத்தசிவ சன்மார்க்க நிலையில்
இருந்தருளாம் பெருஞ்சோதி கொண்டறிதல் கூடும்
எவராலும் பிறிதொன்றால் கண்டறிதல் கூடாது
என்ஆணை என்மகனே அருட்பெருஞ்சோ தியைத்தான்
தவறாது பெற்றனைநீ வாழ்கஎன்ற பதியே
சபையில்நடத் தரசேஎன் சாற்றும்அணிந் தருளே.

உரை : பிழை படுதலில்லாத வேதாந்தம், சித்தாந்தம் முதலாகச் சொல்லப்படுகின்ற அந்தங்கள் எல்லாம் தனித்தனியாக உரைக்கும் பொருள் உண்மைகளை விரிவான சுத்த சிவ சன்மார்க்க நெறியில் இருந்து அருட்பெருஞ் சோதியாகிய ஞானத்தைத் துணை கொண்டு யாவரும் அறிதல் கூடும்; பிறிதொன்றால் எத்தகையவராலும் கண்டறிய முடியாது; இது என் ஆணையாகச் சொல்லுவது; என் மகனே! அருட்பெருஞ்சோதியாகிய ஞானத்தை வழுவாது பெற்றமையாதலால் நீ அருட்பெருஞ் சோதி ஒளியில் வாழ்வாயாக என்று உரைத்தருளிய தலைவனே! அம்பலத்தில் ஆடல் புரிகின்ற அருளரசே! என் சொல் மாலையை உவந்தேற்று அணிந்தருளுக. எ.று.

வேதாந்தம், சித்தாந்தம், கலாந்தம், யோகாந்தம், போதாந்தம், நாதாந்தம் ஆகிய ஆறினையும், "வேதாந்த சித்தாந்த முதலாச் சாற்றுகின்ற அந்தமெலாம்" என்றும், அவை ஒவ்வொன்றும் தனித்தனி உரைக்கும் பொருள்கள் உண்மையானவை என்பாராய், "தவறாத வேதாந்த சித்தாந்த முதலாச் சாற்றுகின்ற அந்தமெலாம் தனித் துரைக்கும் பொருள்" என எடுத்துரைக்கின்றார். அந்தமெலாம் தனித் துரைக்கும் தவறாத பொருள் என இயையும். இவறுதல் என்பது சுருங்குதலாதலால் இவறாத சன்மார்க்க நிலை என்பதற்கு, விரிந்த சன் மார்க்க நிலை எனக் கூறப்பட்டது. அருட்பெருஞ்சோதி ஞானம் சுத்த சிவ சன்மார்க்கத்தால் பெறப்படுவது என்றற்கு, "சுத்த சிவ சன்மார்க்க நிலையில் இருந்து அருளாம் பெருஞ் சோதி கொண்டறிதல் கூடும்" என்று கூறுகின்றார். வேதாந்தம் முதலாகிய அந்தங்கள் உரைக்கும் உண்மைகளை அருட்சோதி ஞானத்தாலன்றிப் பிறிது எதனாலும் எவராலும் காண்டல் முடியாது என்பதை வற்புறுத்தற்கு, "எவராலும் பிறிதொன்றால் கண்டறிதல் கூடாது" என்றும், "என் ஆணை" என்றும் கட்டுரைக்கின்றார். அருட்சோதி ஞானத்தைப் பெற்றதனால் அருள் ஒளியில் நெடிது வாழ்க என்று ஆசிரியர் வாழ்த்தினமையின், "அருட் பெருஞ்சோதியைத்தான் தவறாது பெற்றனை நீ வாழ்க என்ற பதியே" எனப் பாராட்டுகின்றார். சபை என்பது இங்கு ஞான சபை. (90)

4180. ஐயமுறேல் என்மகனே இப்பிறப்பிற் றானே
அடைவதெலாம் அடைந்தனைநீ அஞ்சலைஎன் றருளி
வையமிசைத் தனிஇருத்தி மணிமுடியும் சூட்டி
வாழ்கஎன வாழ்த்தியஎன் வாழ்க்கைமுதற் பொருளே
துய்யஅருட் பெருஞ்சோதி சுத்தசிவ வெளியே
சுகமயமே எல்லாஞ்செய் வல்லதனிப் பதியே
உய்யுநெறி காட்டிமணி மன்றிடத்தே நடிக்கும்
ஒருமைநடத் தரசேஎன் உரையும்அணிந் தருளே.

உரை : என் மகனே, இப் பிறப்பிலேயே நீ பெறவேண்டிய ஞானத்தைப் பெற்றுக் கொண்டாயாதலால், நீ இனி ஐயமோ அச்சமோ நெஞ்சிற் கொள்ளவேண்டியதில்லை என உரைத்து, மண்ணின் மேல் என்னைத் தனியே இருக்கவைத்துத் திருவருள் ஞானமாகிய மணிமுடி யும் சூட்டி வாழ்க என்று எனை வாழ்த்திய என் வாழ்வுக்கு முதல்வனாகிய பெருமானே! தூயதாகிய அருட்பெருஞ் சோதியாகிய அருள் ஞானத்தை நல்கும் சிவவெளியில் திகழ்கின்ற சிவமே! இன்ப மயமானவனே! எல்லாம் செய்யவல்ல தனிப்பெருந் தலைவனே! உயிர்கட்கு உய்வகைக் காட்டி அழகிய அம்பலத்தே நடித்தருளும் நடராசப் பெருமானே, என் சொல் மாலையை உவந்து அணிந்து மகிழ்ந்தருளுக. எ.று.

வேறு பிறவிகளிலின்றி எடுத்துள்ள இப்பிறப்பிலேயே சிவஞானப் பெருநிலையை நீ பெற்றிருக்கின்றாய்; இதில் அச்சமோ ஐயமோ வேண்டா என அறிவுறுத்தமை விளங்க, "இப்பிறப்பிற் றானே நீ அடைவதெல்லாம் அடைந்தனை இனி நீ அஞ்சலை என்றருளி" என இயம்புகின்றார்.

மணிமுடி என்றது திருவருள் ஞானத்தை என அறிக. வாழ்க்கைக்குரிய நினைவு சொற் செயல்களை முன்னின்று இயக்குதலின் சிவபெருமானை, "என் வாழ்க்கை முதற் பொருளே" என்று போற்றுகின்றார். மாணிக்கவாசகரும், "போற்றி என் வாழ்முதலாகிய பொருளே" எனப் புகழ்ந்துரைப்பது காண்க. அருள் ஞானத்தை நல்கும் சுத்த சிவ பரம்பொருள் அதற்குரிய பரவெளியில் விளங்குதலால் அதனைக் குறித்தற்கு, "அருட் பெருஞ்சோதி சுத்த சிவ வெளியே" என்றும், அது இன்ப மயமாதல் தோன்ற, "சுக மயமே" என்றும், அதனுடைய வரம்பில்லாத ஆற்றலை உணர்த்த, "எல்லாஞ் செய்யவல்ல தனிப் பதியே" என்றும் இயம்புகின்றார். அம்பலத்தில் இறைவன் திருக்கூத்தாடுவது ஆன்மாக்கள் ஆணவ முதலிய அறுதிக் கட்டுக்களிலிருந்து நீங்கி உய்தி பெறும் பொருட்டென்று சான்றோர் கூறுதலால், "உய்வு நெறி காட்டி மணி மன்றத்தே நடிக்கும் ஒருமை நடத்தரசே" என மொழிகின்றார். ஒருமை நடம் - சிவன் ஒருவனே நின்று உமாதேவி காண ஆடும் திருக்கூத்து. (91)

4181. காலையிலே என்றனக்கே கிடைத்தபெரும் பொருளே
களிப்பேஎன் கருத்தகத்தே கனிந்தநறுங் கனியே
மேலையிலே இம்மையிலே ஒருமையிலே தவத்தால்
மேவுகின்ற பெரும்பயனும் விளைவைஎலாம் தருமச்
சாலையிலே ஒருபகலில் தந்ததனிப் பதியே
சமரசசன் மார்க்கசங்கத் தலைஅமர்ந்த நிதியே
மாலையிலே சிறந்தமொழி மாலைஅணிந் தாடும்
மாநடத்தென் அரசேஎன் மாலையும்ஏற் றருளே.

உரை: மிக்க இளமைப் பொழுதின்கண், எனக்கு அரிதிற் கிடைத்த பெருமை சான்ற பரம்பொருளாகிய சிவனே! எனக்கு மன மகிழ்ச்சி தருபவனே! என் உள்ளத்தின்கண் நன்கு பழுத்த இனிய கனியாகியவனே! மறுமையிலும் இம்மையிலும் ஒருமை நெறியால் உளதாகும் தவத்தால் பெறப்படும் பெரும் பயன்களாக உண்டாகும் நலமனைத்தும் ஒருநாள் தருமச்சாலையில் எனக்குத் தந்தருளிய ஒப்பற்ற தலைவனே! சமரச சன்மார்க்க சங்கத்தின்கண் இனிது வீற்றிருக்கும் அருள் நிதியாகிய பெருமானே! மாலைகளில் சிறந்தனவாகிய சொல் மாலைகளைப் பூண்டு அம்பலத்தாடும் பெரிய கூத்தப்பெருமானே! என்னுடைய சொல் மாலையையும் மகிழ்ந்து ஏற்றருள்க. எ.று.

காலை என்பது மிக்க இளமைப்பருவம். வடலூர் அடிகளை மிக்க இளமைப் பருவத்திலேயே சிவபெருமான் அருளுணர்வு நல்கி ஆட்கொண்டமை உணர்த்தற்கு, "காலையிலே என்றனக்கே கிடைத்த பெரும் பொருளே" என்று கூறுகின்றார். களிப்பு என்றது களிப்பை நல்கும் பரம்பொருள் மேற்று. மனத்தின்கண் இடையறவின்றி நினைந்து பரவுதலால் இன்பம் உண்டாதல்பற்றி, "கருத்தகத்தே கனிந்த நறுங்கனியே" என்று குறிக்கின்றார். ஒருமையுணர்வு நெறி, தவத்துக்கு உரியதாதலால், "ஒருமையிலே" என்று உரைக்கின்றார். தவத்தால் அருட்செல்வப் பயனும் அதனால் விளையும் இன்பமுமாகிய எல்லாவற்றை

யும் ஒருநாள் வடலூர்த் தருமச்சாலையில் இறைவன் தந்தருளிய குறிப்புத் தோன்ற, "தவத்தால் மேவுகின்ற பெரும் பயனும் விளைவை எலாம் தருமச் சாலையிலே ஒரு பகலில் தந்த தனிப்பதியே" என்று சாற்றுகின்றார். சமரச சன்மார்க்க சங்கத்தால் அடையும் பயன் திருவருட் சிவஞானமாதலின் அதனை, "சமரச சன்மார்க்க சங்கத் தலை அமர்ந்த நிதியே" என்று புகழ்கின்றார். பூமாலை, பொன் மாலை முதலிய மாலை வகைகளில் நிலைபேறு கொண்ட சிறந்த சொல் மாலையாதலால் அதனை, "மாலையிலே சிறந்த மொழி மாலை" என்று மொழிகின்றார். மாலை - சொல் மாலை. (92)

4182. சிற்பதமும் தற்பதமும் பொற்பதத்தே காட்டும்
சிவபதமே ஆனந்தத் தேம்பாகின் பதமே
சொற்பதங்கள் கடந்ததன்றி முப்பதமும் கடந்தே
துரியபத முங்கடந்த பெரியதனிப் பொருளே
நற்பதம்என் முடிசூட்டிக் கற்பதெலாங் கணத்தே
நான்அறிந்து தானாக நல்கியஎன் குருவே
பற்பதத்துத் தலைவரெலாம் போற்றமணி மன்றில்
பயிலும்நடத் தரசேஎன் பாடல்அணிந் தருளே.

உரை: ஞானப்பதத்தையும் தனது பதத்தையும் அழகிய திருவடிக்கண் காட்டியருளும் சிவபதச் செல்வனே! இன்பம் தரும் இனிய பதத்தில் எடுத்த பாகு போல்பவனே! சொற்களின் எல்லை கடந்து நிற்கும் சாக்கிரம் முதலாய முப்பதத்துக்கு அப்பாலுள்ள துரிய பதத்தையும் கடந்து நிற்கின்ற பெரியதாகிய தனிப் பரம்பொருளே! நல்ல நின் திருவடியை என் தலைமேல் வைத்துக் கற்கின்ற கல்வி அனைத்தையும் ஒரு கணப்பொழுதில் நான் அறிந்து சிவமாகிய தானாகு மாறு அருள்புரிந்த ஞான குருவே! பல்வேறு உயர் பதங்களில் இருக்கும் ஞானத் தலைவர்கள் எல்லாரும் கூடி நின்று துதிக்க அழகிய அம்பலத்தின் கண் நடம் பயிலும் கூத்தப் பெருமானே! பாடல்களாலாகிய என் சொல் மாலையையும் உவந்தேற்று அணிந்தருள்க. எ.று.

சிற்பதம் - ஞானப்பதம். சிவமாகிய தன் பதத்தைத் "தற்பதம்" என்று கூறுகின்றார். திருவடி ஞானம் எல்லாப் பதங்களையும் பதார்த்தங்களையும் காட்டுவதாதலால், "பொற் பதத்தே காட்டும் சிவ பதமே" என்று தெரிவிக்கின்றார். வாக்குக்கு எட்டாததோடு சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி ஆகிய மூன்றையும் கடந்ததாகிய துரிய பதத்துக்கும் அப்பாலது சிவ பரம்பொருள் எனத் தெளிவிப்பாராய், "சொற் பதங்கள் கடந்ததன்றி முப்பதமும் கடந்தே துரிய பதமும் கடந்த பெரிய தனிப்பொருளே" என்று விளம்புகின்றார். நற்பதம் - நல்ல திருவடி. தானாதல் - சிவமாதல். இந்திர பதம் முதலிய தேவ பதங்கள் பலவாதலால் அப் பதங்களில் உள்ள தேவர்களை, "பற்பதத்துத் தலைவர்" என்று பகர்கின்றார். மன்றில் நடம் பயிலுதல் - அம்பலத்தின் கண் ஆடுதல். (93)

4183. ஆதியிலே எனையாண்டென் அறிவகத்தே அமர்ந்த
அப்பாஎன் அன்பேஎன் ஆருயிரே அமுதே
வீதியிலே விளையாடித் திரிந்தபிள்ளைப் பருவம்
மிகப்பெரிய பருவம்என வியந்தருளி அருளாம்
சோதியிலே விழைவுறச்செய் தினியமொழி மாலை
தொடுத்திடச்செய் தணிந்துகொண்ட துரையேசிற்
பொதுவாம்
நீதியிலே நிறைந்தநடத் தரசேஇன் றடியேன்
நிகழ்த்திய சொன்மாலையும்நீ திகழ்த்திஅணிந் தருளே.

உரை : பிறந்த குழவிப் பருவத்திலேயே என்னை ஆண்டருளி என் அறிவின்கண் அமர்ந்த அப்பனே! என்னுடைய அன்பும் ஆருயிரும் எனக்கு அமுதமும் ஆனவனே! வீதியிலே ஏனைச் சிறுவர்களோடு கூடி விளையாடித் திரிந்த என் பிள்ளைப் பருவமே மிகப் பெரிய பருவம் எனத் திருவுள்ளம் கொண்டு திருவருள் ஞானமாகிய அருட் சோதியிலே எனக்கு ஆசை தோற்றுவித்தும், இனிய சொல் மாலைகளைத் தொடுத்துப் பாடச் செய்வித்தும், அவற்றை உவந்து அணித்தருளியும் என்னை மகிழ்வித்த துரையாகிய சிவபெருமானே! ஞான சபையாகிய நீதிமன்றத்தின்கண் நிறையுடைய நிருத்தம் புரியும் அருளரசே! அடியவனுகிய யான் இப்பொழுது பாடி அணிகின்ற சொல் மாலையையும் குற்றமற்ற ஒளியுடையதாக அணிந்து கொண்டருளுக. எ.று.

ஆதி என்பது ஈண்டுப் பிறந்த அணிமைத்தாகிய குழவிப் பருவம். பச்சிளம் குழந்தையாக இருக்கும்போதே தன்னைச் சிவபிரான் ஆண்டு கொண்டான் என்பது குறிப்பு. வீதியில் விளையாடும் பருவம், களங்கமில்லாத உள்ளத்தோடு கூடிய பெருமைமிக்க பருவமாதலால், "வீதியிலே விளையாடித் திரிந்த பிள்ளைப் பருவம்" எனக் கூறுகின்றார். களங்கமற்ற பிள்ளை உள்ளம் தெய்வத் தன்மையுடையது என்பது உலகுரை. பிள்ளைப் பருவத்திலேயே வடலூர் வள்ளல் அருட்சோதியில் ஆர்வம் மிகுந்து அந்த ஞானத்தால் இனிய சொல் மாலைகளைப் பாடத் தொடங்கினமை தோன்ற, "அருளாம் சோதியிலே விழைவுறச் செய்து இனிய மொழி மாலை தொடுத்திடச் செய்து அணிந்துகொண்ட துரையே" என்று சொல்லுகின்றார். நீதியே சிவனுக்குத் திருவுருவாதலால் அவன் ஆடும் அம்பலத்தை, "சிற்பொதுவாம் நீதியிலே நிறைந்த நடத்தரசே" என்று எடுத்தோதுகின்றார். திகழ்த்தல் - ஒளிர்வித்தல். (94)

4184. கணக்குவழக் கதுகடந்த பெருவெளிக்கு நடுவே
கதிர்பரப்பி விளங்குகின்ற கண்நிறைந்த சுடரே
இணக்கம்உறும் அன்பர்கள்தம் இதயவெளி முழுதும்
இனிதுவிளங் குறநடுவே இலங்கும்ஒளி விளக்கே
மணக்குநறு மணமேசின் மயமாய்என் உளத்தே
வயங்குதனிப் பொருளேஎன் வாழ்வேஎன் மருந்தே
பிணக்கறியாப் பெருந்தவர்கள் சூழமணி மன்றில்
பெருநடஞ்செய் அரசேஎன் பிதற்றும்அணிந் தருளே.

உரை : அளந்து காண்டற்கும், சென்று உலாவி அறிதற்கும் உரிய எல்லைகளுக்கு அப்பால் உளதாகிய பெருவெளியின் நடுவில், கதிர் பரப்பி ஒளி செய்கின்ற கண்கள் நிறையத் திகழும் சிவமாகிய சுடர்ப் பொருளே! ஞானத்தால் தம்மிற் சேர்ந்து உறையும் மெய்யன்பர்களின் இதயவெளி முற்றும் இனிது விளக்கமுற அதன் நடுவில் ஒளிர்கின்ற ஒளியையுடைய விளக்காகிய பெருமானே! உயரிய மணம் கமழும் சிவமணமே! எனது உள்ளத்தில் ஞான மயமாய் விளங்குகின்ற தனிப் பெரும்பொருளே! எனக்கு வாழ்வு தரும் செல்வமே! என் பிறவி நோய்க்கு மருந்தாகிய சிவபிரானே! வேறுபட்டுப் பிணங்குதல் இல்லாத பெரிய தவச் செல்வர்கள் சூழ விருந்து போற்ற, அழகிய அம்பலத்தின் கண் பெரிய நடம் புரிகின்ற அருளரசே! யான் பிதற்றுகின்ற சொல் மாலையையும் ஏற்றணிந்து உவந்தருள்க. எ.று.

பிரமாணங்களால் அளந்து காண முடியாததும், சென்று கண்டு அறிய முடியாததுமாகிய மாயாதீதப் பெருவெளியை, "கணக்கு வழக்கது கடந்த பெருவெளி" என விளக்குகின்றார். அவ்வெளியின் நடுவில் சிவபெருமான் இருந்து ஞானச் சுடராய்த் திகழ்கின்றானாதலால், "பெருவெளிக்கு நடுவே கதிர் பரப்பி விளங்குகின்ற கண் நிறைந்த சுடரே" என்று போற்றுகின்றார். கண் என்றது, அறிவுக் கண்ணாகிய ஞானக் கண்ணை என அறிக. காணும் கண் நிறைந்து ஒளிர்வது பற்றி, "கண் நிறைந்த சுடர்" என்று கூறுகின்றார். மெய் என்பார் மனவொருமையுற்றுத் தம்மிற் கூடுவதின்றி ஒத்த பண்புடைய சான்றோர்களை, "இணக்கமுறும் அன்பர்கள்" என இயம்புகின்றார். இதயவெளி - மனத்தால் உணரப்படும் பரவெளி. அவ் வெளியின்கண் ஞான ஒளி பரப்பி ஞானச் சூரியனாய் விளங்கு தலால், "இனிது விளங்குற நடுவே இலங்கும் ஒளி விளக்கே" என்று இசைக்கின்றார். ஞானப் பொருளாய் உள்ளக் காட்சிக்கு உருவாய்த் தோன்றுதலால், "சின்மயமாய் என் உளத்தே வயங்கு தனிப்பொருளே" என உரைக்கின்றார். இன்ப வாழ்வளிக்கும் பெருமானை, "என் வாழ்வே" என்று ஏத்துகின்றார். அன்பாகிய ஞானச் செல்வர்களாத லால் தவச் செல்வர்கள் கருத்து வேறுபட்டுப் பிணங்குதல் இலர் என்பது தோன்ற, "பிணக்கறியாப் பெருந்தவர்கள்" என்று புகழ்கின்றார். (95)

4185. அடிச்சிறியேன் அச்சம்எலாம் ஒருகணத்தே நீக்கி
அருளமுதம் மிகஅளித்தோர் அணியும்எனக் கணிந்து
கடிக்கமலத் தயன்முதலோர் கண்டுமிக வியப்பக்
கதிர்முடியும் சூட்டிஎனைக் களித்தாண்ட பதியே
வடித்தமறை முடிவயங்கு மாமணிப்பொற் சுடரே
மனம்வாக்குக் கடந்தபெரு வான்நடுவாம் ஒளியே
படித்தலத்தார் வான்தலத்தார் பரவியிடப் பொதுவில்
பரிந்தநடத் தரசேஎன் பாட்டும்அணிந் தருளே.

உரை : மிக்க சிறுமையுடையவனாகிய என்னுடைய அச்சங்கள் எல்லாவற்றையும் ஒரு கணப்பொழுதில் நீக்கி, அருள் ஞானமாகிய

அமுதத்தை மிகுதியாகத் தந்து அணி வகைகளில் ஒன்றையும் எனக்கு அணிந்து மணம் கமழும் தாமரையில் வீற்றிருக்கும் பிரமன் முதலிய தேவ தேவர்கள் கண்டு வியக்குமாறு கதிர்முடி ஒன்றை என் தலையிற் சூட்டி, என்னை மகிழ்வித்து ஆட்கொண்டருளிய தலைவனாகிய சிவ பெருமானே! திருந்திய வேத ஞானத்தில் உச்சியில் ஒளிரும் பெரிய மாணிக்க மணியின் அழகிய சுடரொளியை யுடைய சிவனே! மனமும் ஒளியுமாகிய இரண்டின் எல்லையைக் கடந்து நிற்கும் பெரிய ஆகாயத்தின் நடுவே விளங்கும் ஒளியாயவனே! மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் பரவி வணங்க, அம்பலத்தில் விரும்பி ஆடுகின்ற அருளரசே! யான் பாடும் இச் சொல் மாலையை உவந்தேற்று அணிந்தருள்க. எ.று.

அடிச் சிறியேன் என்பது அடி ஈண்டு மிகுதி உணர்த்தி நின்றது. அணி என்றது இன்ன அணி என்று விளங்கவில்லை. கடிக் கமலம் - மணம் கமழும் தாமரை மலர். கதிர்முடி என்பது சிவஞானத்தைக் குறிக்கின்றது. வடித்த மறை - குற்றமின்றாகச் செய்யப்பட்ட வேதம். மாமணிப் பொற்சுடர் - பெரிய மாணிக்க மணியில் எழுகின்ற அழகிய சுடரொளி. மனம் வாக்குக் கடந்த ஒளி பெருவான் நடுவாம் ஒளி என இயையும். படித் தலத்தார் - மண்ணுலகில் உள்ளவர். பாட்டு - பாமாலை. (96)

4136. எத்துணையும் சிறியேனை நான்முகன்மால் முதலோர்
ஏறரிதாம் பெருநிலைமேல் ஏற்றிஉடன் இருந்தே
மெய்த்துணையாம் திருவருட்பேர் அமுதம்மிக அளித்து
வேண்டியவா றடிநாயேன் விளையாடப் புரிந்து
சுத்தசிவ சன்மார்க்க நெறிஒன்றே எங்கும்
துலங்கஅருள் செய்தபெருஞ் சோதியனே பொதுவில்
சித்துருவாய் நடம்புரியும் உத்தமசற் குருவே
சிற்சபைஎன் அரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

உரை : எத்தனையோ சிறுமையுடையவனாகிய என்னைப் பிரமன் திருமால் முதலிய தேவர் எவராலும் ஏறமாட்டாத, உயர்நிலைக்கண் உயர்த்தித் தானும் உடனிருந்து மெய்ம்மைத் துணைபுரியும் திருவருள் ஞானமாகிய பேரமுதத்தை மிகைப்படத் தந்து நாயனைய அடியவனாகிய யான் விரும்பியவாறு விளையாடச் செய்து சுத்த சிவ சன்மார்க்க நெறி ஒன்றே எங்கும் விளங்கத் திருவருள் செய்த பெரிய சோதி உருவாகிய சிவபிரானே! அம்பலத்தில் ஞானத் திருவுருக்கொண்டு கூத்தாடும் உத்தம ஞானத் தேசிகனே! ஞான சபையில் எழுந்தருளும் அருளரசே! சிறுமை மிக்க என் சொல் மாலையையும் உவந்தேற்று அணிந்தருள்க. எ.று.

குணஞ்செயல்களால் மிக்க குறையுடையவன் எனத் தம்மைக் குறித்தற் பொருட்டு, "எத்துணையும் சிறியேன்" என இயம்புகின்றார். பெருநிலை - சிவஞானத்தால் எய்தப்படும் பெருமை பொருந்திய நிலை.

எவ்வாற்றுலும் பொய்யாத துணை என்றற்கு, "மெய்த்துணை" என்கின்றுர். அடி நாயேன் என்றது அடிச்சிறியேன் என்றுற்போலச் சிறுமை யுணர்த்திநின்றது. விளையாடல் - செய்வன செய்து ஒழுகுதல். சுத்த சிவத்தை முடிப்பொருளாகக் கொண்டது சன்மார்க்க நெறியாதலால் அது, "சுத்தசிவ சன்மார்க்க நெறி" என்று குறிக்கப்படுகிறது. இந் நாளில் அரசியல் உலகில் சமரச சமதர்மம் என்று பேசப்படுகிறது. இது நாடு முழுதும் பரவினுலன்றி மக்களிடையே நல்வாழ்வு அமையா தென்பதுபற்றி, "எங்கும் துலங்க அருள் செய்த பெரும் சோதியனே" என்று சொல்லுகின்றுர். கூத்தப் பெருமானுடைய திருமேனி ஞானமய மாதலின், "பொதுவில் சித்துருவாய் நடம் புரியும் உத்தம சற்குருவே" என இயம்புகின்றுர். சிற்சபை - ஞானசபை. (97)

4187. இருந்தஇடந் தெரியாதே இருந்தசிறி யேனை
எவ்வுலகில் உள்ளவரும் ஏத்திடமேல் ஏற்றி
அருந்தவரும் அயன்முதலாம் தலைவர்களும் உளத்தே
அதிசயிக்கத்தக்க திருஅமுதும் அளித்தபெரும் பதியே
திருந்துமறை முடிப்பொருளே பொருள்முடியில் உணர்ந்தோர்
திகழமுடிந் துட்கொண்ட சிவபோகப் பொருளே
பெருந்தவர்கள் போற்றமணி மன்றில்நடம் புரியும்
பெருநடத்தென் அரசேஎன் பிதற்றும்அணிந் தருளே.

உரை : இருந்த இடத்தின் இயல்பு அறியாமலே கிடந்த சிறுமை யுடையவனுகிய என்னை, எவ்வுலகங்களிலும் உள்ள யாவரும் ஏத்திப் போற்றுமாறு உயர்நிலையின்கண் ஏற்றி, அரிய தவஞானிகளும், பிரமன் முதலிய தலைமைத் தேவர்களும் தத்தம் மனத்தின்கண் அதிசயப்படும்படித் திருவருள் ஞானவமுதம் தந்து சிறப்பித்த பெரிய தலைவனுகிய சிவனே, திருந்திய வேதங்களின் முடிபொருளானவனே! அப்பொருள் முடிவின்கண் உண்மை உணர்ந்தோர் பிரம ஞான ஒளி விளங்கக் கண்டு நுகருமாறு நிலவும் சிவபோகப் பொருளே! பெரிய தவச் செல்வர்கள் நின்று துதிக்க அழகிய அம்பலத்தின்கண் நடம் புரிகின்ற பெரிய நடராசப் பெருமானே! என்னுடைய சொல் மாலையை யும் உவந்தேற்று அணிந்தருள்க. எ-று.

அறியாமையால் தாம் மயங்கி இருந்த நிலைமை புலப்படத் தம்மை வடலூர் வள்ளல், "இருந்த இடம் தெரியாதே இருந்த சிறியேனை" என இசைக்கின்றுர். ஞானத்தால் தாம் மேம்பட்டமை தெரிவித்தற்கு, "எவ்வுலகில் உள்ளவரும் ஏத்திட மேலேற்றி" என்றும், தாம் பெற்ற அருள் ஞானச் சிறப்பை உரைப்பாராய், "அருந்தவரும் அயன் முதலாம் தலைவர்களும் உளத்தே அதிசயிக்கத் திருவமுதம் அளித்த பெரும் பதியே" என்றும் இயம்புகின்றுர். வேதாந்தத்தின் முடிபொருள் பிரமன் என்பதும், அதன் முடிவு பிரம ஞானப்பேறு என்பதும், அதனைப் பெற்ற பெருமக்கள் சிவபோகத்தை நுகர்வதென்பதும் நூல்களால் உரைக்கப் படுவதால் அதனை, "திருந்து மறை முடிப்பொருளே பொருள் முடியில் உணர்ந்தோர் திகழ முடிந்து உட்கொண்ட சிவபோகப் பொருளே" என்று கூறுகின்றுர். பெருந்தவர்கள் - வியாக்கிர பாதர், பதஞ்சலி

முதலிய தவச் செல்வர்கள். பெருநடம் - பெருமை பொருந்திய திருக்கூத்து. தமது சொல்மாலையால் தம்முடைய சிறுமையும் பணிவும் தோன்ற வடலூர் வள்ளல், "பிதற்று" என்று மொழிகின்றார். பிதற்றல் - குற்றம் நிறைந்த சொற்களைக் குறைபடப் பேசுதல். (98)

4183. குணம்அறியேன் செய்தபெருங் குற்றமெலாங் குணமாக்
கொண்டருளி என்னுடைய குறிப்பெல்லாம் முடித்து
மணமுறுபேர் அருள்இன்ப அமுதமெனக் களித்து
மணிமுடியும் சூட்டிஎனை வாழ்கஎன வாழ்த்தித்
தணவிலிலா தென்னுளத்தே தான்கலந்து நானும்
தானும்ஒரு வடிவாகித் தழைத்தோங்கப் புரிந்தே
அணவுறுபேர் அருட்சோதி அரசுகொடுத் தருளி
ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

உரை : குணமாவனவற்றை அறியாதவனாகிய யான் செய்த பெருங் குற்றங்களை எல்லாம் குணமாம் என்று கொண்டு, என்னுடைய எண்ண மெல்லாம் நிறைவித்து, மணமிக்க பேரருள் ஞானமாகிய இன்ப அமுதத்தையும் தந்து, உண்பித்து அழகிய மணிமுடியை என் தலையில் சூட்டி வாழ்க என்று வாயார வாழ்த்தி, என்னை நீங்குதலின்றி எனது உள்ளத்தில் கலந்து, நானும் சிவமாகிய தானும் சிவஞானத் திருவடிவு எய்திச் சிறந்தோங்கச் செய்து கூறுகின்ற அருட்சோதியாகிய அரசும் அளித்து அம்பலத்தில் ஆடுகின்ற அருளரசே! என் சொல் மாலையையும் உவந்து அணிந்தருள்க. எ.று.

குணம் இது, குற்றம் இதுவென்று தெரிந்துணரும் திறமில்லாதவன் எனத் தம்மைக் குறிப்பாராய் வடலூர் வள்ளல், "குணம் அறியேன்" என்று கூறுகின்றார். குற்றத்தைக் குணமாகக் கொள்வதாவது குற்றம் புரிவது உயிர்க்கியல்பு எனக்கொண்டு பொறுத்தருள்வது. என்னுடைய குறிப்பெல்லாம் முடித்து என்றது, என்னுடைய எண்ணமெல்லாம் நிறை வேறச் செய்து என்பதாம். திருவருள் ஞானத்தை இன்ப அமுதமென இசைக்கின்றாராதலால் அந்த ஞான வமுதம் சிவ மணம் கமழ்வது என்றற்கு, "மணமுறு இன்ப அமுதம்" என இயம்புகின்றார். தணவு - நீங்குதல். தம்மைச் சிவமாக்கி அருளினமை விளக்குதற்கு, "தான் கலந்து நானும் தானும் ஒரு வடிவாகித் தழைத்தோங்கப் புரிந்தே" என்று சாற்றுகின்றார். சிவ பரம்பொருள் எல்லாம் வல்லதாகலின் தன்னை அடையும் ஆன்மாவோடு தான் கலந்து கொள்ளல் கூடுமாகலின், "தான் கலந்து" என்றும், ஆன்மா சிவஞான வடிவம் பெறுகிற பொழுது சிவம் வேறு ஆன்மா வேறு எனப் பிரித்துணர மாட்டாத தனிநிலையைப் பெறுவதால், "நானும் தானும் ஒரு வடிவாகி" என்றும் எடுத்துரைக் கின்றார். "சிவஞானத்தால் சிவன் உளத்தே தோன்றித் தீ இரும்பைச் செய்வது போல் சீவன் தன்னைப் பந்தனையை அறுத்துத் தானாக்கித் தன்னுருவப் பரப்பெல்லாம் கொடு போந்து பதிப்பன் இவன்பாலே" (சிவசித்தி) என்று அருணந்தி சிவனார் உரைப்பது காண்க. அணவுறல் - நெருங்குதல். (99)

4183. தலைகால்இங் கறியாதே திரிந்தசிறி யேனைத்
தான்வலிந்தாட் கொண்டருளித் தடைமுழுதும் தவிர்த்தே
மலைவறுமெய் அறிவளித்தே அருளமுதம் அருத்தி
வல்லபசத் திகளெல்லாம் மருவியிடப் புரிந்து
நிலையுறவே தானும்அடி யேனும்ஒரு வடிவாய்
நிறையநிறை வித்துயர்ந்த நிலைஅதன்மேல் அமர்த்தி
அலர்தலைப்பேர் அருட்சோதி அரசுகொடுத் தருளி
ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

உரை : இவ்வுலகில் முதல் இது கடை யிது என்று அறியாமல், எங்கும் திரிந்துகொண்டிருந்த சிறுமையுடையவனாகிய என்னைத் தானே வந்து வலிய ஆட்கொண்டு இடையே இருந்த தடைகள் பலவற்றையும் போக்கி, மயக்கம் கெட உண்மை ஞானம் தந்து, திருவருளாகிய அமுதத்தைக் கொடுத்து, உண்பித்துப் பலவும் இனிது செய்யவல்ல சத்தியுண்டாக அருள் புரிந்து சிவமாகிய தானும் யானும் சிவ வடிவுற்று நிலைபெறுமாறு சிவமாந் தன்மைகள் குறைவற நிறையச் செய்து உயர்வற்ற உயர்நிலையில் இருக்க வைத்துப் பேரருள் ஞானமாகிய அரசினை எனக்கு நல்கி அம்பலத்தாடுகின்ற அருளரசே! என் சொல் மாலையையும் உவந்தேற்று அணிந்தருள்க. எ.று.

நலந் தீங்குகளை நோக்காமல் மனம் போனவாறு செருக்குற்றுத் திரிபவர்களை, "தலை கால் தெரியாமல் திரிபவர்" என்று இகழ்வது உலக வழக்கு. அப்பொருண்மையும் தோன்ற வடலூர் வள்ளல், "தலைகால் இங்கு அறியாதே திரிந்த சிறியேன்" என்று தம்மைக் கூறுகின்றார். "தனித்துணை நீ நிற்க யான் தருக்கித் தலையால் நடந்த வினைத் துணையேன்" (நீத்தல்) என்று மாணிக்கவாசகர் உரைப்பதும் ஈண்டு நினைவு கூரத் தக்கது. இறைவன் தாமாகவே வந்து ஆட்கொண்டு தமக்கு ஆளாதற்கு இருந்த தடைகள் அனைத்தையும் போக்கினமை தோன்ற, "தான் வலிந்து ஆட்கொண் டருளித் தடை முழுதும் தவிர்த்தே" எனவும், மெய்யுணர்வு தந்து மலைவு நீக்கினமை புலப்பட, "மலைவறு மெய்யறிவு அளித்து" எனவும், அதன் வாயிலாக அருள் ஞான அமுதம் பெற்றமை விளங்க, "அருளமுதம் அருத்தி" எனவும், எல்லாம் செய்யவல்ல சத்திகளை வழங்கினமையின், "வல்லப சத்திகள் எல்லாம் மருவியிடப் புரிந்து" எனவும் விளங்க உரைக்கின்றார். தடைகள் - மலகன்மங்கள் விளைவிக்கும் தடைகள். ஒளி தோன்ற இருள் நீங்குவது போல மெய்யறிவு தோன்ற மலைவுகள் ஒழிதலால், "மலைவறு மெய்யறிவு" என்று சிறப்பிக்கின்றார். காரிய சித்தி, யோக சித்தி, ஞான சித்தி எனச் சித்திகள் பலவாதலின், "வல்லப சித்திகள் எல்லாம்" என்று கூறுகின்றார். தம்மைச் சிவ பரம்பொருள் சிவமாக்கிய தன்மையை விளக்குவாராய், "தானும் அடியேனும் ஒரு வடிவாய் நிறைய நிறைவித்து" என்றும், தாம் சிவமாய், சிவபோகி ஆனமை தெரிவித் தற்கு, "உயர்ந்த நிலை அதன்மேல் அமர்த்தி" என்றும் எடுத்தோது கின்றார். எங்கும் எப்பொருளிலும் பரந்தியலும் தன்மை இது வென்றற்கு, "அலர்தலைப் பேரருட் சோதி" என ஓதுகின்றார். அலங்கல் - மாலை. (100)

திருச்சிற்றம்பலம்

# 58. நற்றாய் கூறல்

சிவஞான ஒழுக்கங்களால் சீவன் முத்தர்ப் பெருமக்கட்கு அவர்களுடைய பசு கரணங்கள் பதி கரணங்களாக மாறுதல் போலப் பத்தி நெறியில் நின்று சிவயோக போகத்தில் வேட்கை மிக்கவர்க்கு ஆண்மை பெண்மை ஆகிய பண்புகள் மாறுகின்றன. ஆடவனாகிய இராமபிரானைக் கண்டு அவனது திருமேனி அழகில் ஈடுபட்டு மனமிழந்த ஆண் மக்கள் ஆண்மை யுணர்வை இழந்து பெண்மை உணர்வுற்று அவனைக்கூடக் காதலிக்கும் நிலைமை பெற்றனர் எனக் கம்பர் கூறுவது ஈண்டு நினைத்தற்குரியதாம். இவ்வகையில் வடலூர் வள்ளலார்க்கு உண்டாகியிருந்த திருவருள் ஞான நிறைவு சிவயோக போகத்தில் அவரது தூய உணர்வைச் செலுத்துகிறது. சிவயோகத்திலும் அவ்யோகம் பயக்கும் சிவபோகத்திலும் வேட்கை மிகுவிக்கின்றது. அதற்கேற்பத் துணைபுரிவது சிவத்தின் திருவருட் சத்தி. சிவபோக வேட்கை மீதூர்ந்திருக்கும் வள்ளற் பெருமானுடைய ஆன்ம சிற்சத்திக்கு நற்றாயாகவும், உயிர்த் தோழியாகவும், ஆன்ம சிற்சத்தியைத் தலைவியாகவும் நிறுத்தித் தமது ஆன்மானுபவத்தை உலகறிந்து துணிதல் வேண்டித் தெரிவிக்கின்றார். அப்போக வேட்கை அனுபவத்தைப் புலவர் பெருமக்கள் வகுத்த கைக்கிளை இலக்கண நெறியில் உரைத்தருளுகின்றார். கைக்கிளையாவது, தலைவன் தலைவி என்ற இருவர் பாங்கில் ஒருவர்பால் உளதாகும் காதல் வேட்கையைப் பாடுவது. பாடல் சான்ற இப்பகுதியில் தலைவனொழிய ஏனைத் தாயரும், தோழியரும், தலைவியுமே சொல் நிகழ்த்துவர். இந்நெறியில் அருட் சத்தியாகிய நற்றாய் தலைமகளாகிய ஆன்ம சிற்சத்தியின் வேட்கை மிகுதியைத் தோழியர்க்குக் கூறும் வகையில் "நற்றாய்க் கூறல்" என்ற இப்பகுதிக்கண் உரைக்கின்றார்.

இப்பகுதிக்கண் உள்ள இப் பாட்டுக்கள் பத்தும் தலைமகள் தன் வேட்கை மிகுதியைத் தலைவனாகிய சிவபிரானை நினைந்து வாய்விட்டு உரைக்கின்றார். "தானுரு வேட்கை கிழவன் முற்கிளத்தல் என்னும் காலை கிழத்திக் கில்லை" (தொல் பொரு : 118) என்பவாயினும் இங்கே தலைவனது திருமுன்பின்றித் தலைவி தானே தனித்து நின்று இவ்வாறு கூறுவது வழுவாகாது; மேலும் இது தலைவி கூறுவனவற்றை நற்றாய் கொண்டெடுத்து மொழிதலால் இஃது அமைதல் என அறிதல் வேண்டும்.

## எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4190. காதல்கைம் மிகுந்த தென்செய்வேன் எனைநீ
கண்டுகொள் கணவனே என்றாள்
ஓதலுன் புகழே அன்றிநான் ஒன்றும்
உவந்திலேன் உண்மையீ தென்றாள்

பேதைநான் பிறிதோர் புகலிலேன் செய்த
பிழையெலாம் பொறுத்தருள் என்றாள்
மாதய வுடைய வள்ளலே என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

உரை : தவம் செய்து பெற்ற வரத்தின் பயனாக எனக்குப் பிறந்த மகள் சிவபிரானை நோக்கி, "கணவனே! பெரிய அருட் பண்பையுடைய வள்ளலே! எனக்கு காதல் வேட்கை வரம்பு கடந்து மிகுந்துளது; என்ன செய்வேன்; என் நிலைமையை நீயே கண்ணால் கண்டுகொள் என்று கூறுகின்றாள்; உன்னுடைய திருப்புகழை ஓதி மகிழ்வதன்றி வேறு ஒன்றையும் நான் விரும்புவதில்லை; இஃது உண்மை என மொழிகின்றாள்; பேதைப் பெண்ணாகிய எனக்கு வேறு புகலிடம் இல்லை; யான் செய்துள்ள பிழைகள் எல்லாவற்றையும் பொறுத்தருள்க என்று புகல்கின்றாள்" இதற்கு நான் என்செய்வது. எ.று.

நான் செய்த தவத்திற்கு இரங்கி, இறைவன் அருளிய வரப் பயனாக நான் ஈன்றெடுத்த மகள் எனத் தலைவியின் அருமையைப் புலப்படுத்தற்கு, "வரத்தினால் நான் பெற்ற மகள்" என்று நற்றாய் கூறுகின்றாள். காதல் - காதல் வேட்கை. கைம் மிகுதல் - வரம்பு மீறிப் பெருகுதல். பெண்மைக்குரிய நாணமாகிய எல்லை கடந்து பெருகுவது; இதனை "இடங்கைக் காமம்" என்றும் கூறுவர். இக்கழி காமத்தை அடக்கியாளும் வழியில்லாதவளாக நான் இருப்பதை நீ நேரில் கண்டாலன்றிப் புலனாகாது என்பாள், "என் செய்வேன் எனை நீ கண்டு கொள்" என உரைக்கின்றாள். தனது உள்ளத் தன்மை இறைவனுடைய திருப்புகழைக் கேட்டு மகிழ்வதன்றி வேறு எதனாலும் மகிழுறுவதன்று என்பாளாய், "ஓதலுன் புகழேயன்றி நான் ஒன்றும் உவந்திலேன் உண்மையீது என்றாள்" என நற்றாய் மகளது சொற்களைத் தான் எடுத்து மொழிகின்றாள். நின்னையொழிய வேறு எவரும் என் வேட்கை மெலிவினை நீக்க வல்லவராகார் என்பாள், "பிறிதோர் புகலிலேன்" என்றும், என்னைக் கூடி மகிழ்வித்தற்குத் தடையாகும் என் பிழைகளைப் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டுவாளாய், "செய்த பிழையெல்லாம் பொறுத்தருள் என்றாள்" என்றும், பிழை செய்தமைக்குக் காரணம் தனது பேதமை என விளக்குவாளாய், "பேதை நான்" என்றும் வழங்குகின்றாள் என நற்றாய் வருந்தி உரைக்கின்றாள். அருளே திருவுருவாக உடைய வள்ளலாகிய சிவபெருமானைத் தன் காதல் மிகுதியால், "மாதய வுடைய வள்ளலே" என்று போற்றுகின்றாள். (1)

4191. மயங்கினேன் எனினும் வள்ளலே உனைநான்
மறப்பனோ கனவினும் என்றாள்
உயங்கினேன் உன்னை மறந்திடில் ஐயோ
உயிர்தரி யாதெனக் கென்றாள்
கயங்கினேன் கயங்கா வண்ணநின் கருணைக்
கடலமு தளித்தருள் என்றாள்
வயங்குசிற் சபையில் வரதனே என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

உரை : நான் பெற்ற வரத்தால் பிறந்த என் மகள், விளங்குகின்ற ஞானசபையில் திருத்தம் புரிகின்ற அருளாளனே என்று மொழிந்து, வள்ளலே வேட்கை மிகுதியால் அறிவு மயங்கினேன் எனினும் உன்னை நான் கனவிலும் மறக்கமாட்டேன் என்று சொல்லுகிறாள்; காதல் வெம்மையால் மெலிந்தேன் எனினும் ஐயோ, நான் உன்னை மறப்பேனா யின் என் உடம்பில் உயிர் நில்லாது என இயம்புகிறாள்; மேனி கசங்கிச் சோர்ந்துள்ளேனாதலால் மேலும் அது கசங்காவண்ணம் உன்னுடைய கருணையாகிய கடலிடத்து எழும் இன்பமாகிய அமுதினைத் தந்தருள்க என்று வாய் வெருவுகின்றாள், என நற்றாய் வருந்தி உரைக்கின்றாள். எ.று.

அறிவு மயங்கினமை மறதி இயல்பாக உளதாகுமாயினும் நான் மறப்பதில்லை என வற்புறுத்தற்கு, "மயங்கினேன் எனினும் கனவினும் மறப்பனோ" எனவும், மறந்த வழித்தான் இறந்து படுவேன் என்பாளாய், "மறந்திடில் ஐயோ உயிர் தரியாது எனக்கென்றாள்" எனவும் நற்றாய் இயம்புகின்றாள். உயங்குதல் - மெலிதல். கயங்குதல் - துவளுதல்; இது கசங்குதல் எனவும் வழங்கும். அருள் வெளியில் பிறக்கும் இன்பத்தை, "கருணைக் கடல் அமுதம்" என்று கூறுகின்றார். கடலமுது - கடல் கடையத் தோன்றிய அமுது என்பதாம். (2)

4192. அஞ்சலென் றெனைஇத் தருணநீ வந்தே
அன்பினால் அணைத்தருள் என்றாள்
பஞ்சுபோல் பறந்தேன் அய்யவோ துன்பம்
படமுடி யாதெனக் கென்றாள்
செஞ்செவே எனது கருத்தெலாம் உனது
திருவுளம் அறியுமே என்றாள்
வஞ்சகம் அறியா வள்ளலே என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

உரை : சிவ வரத்தால் நான் பெற்றெடுத்த மகள், சிவபெருமானை வஞ்சமென்பதறியாத வள்ளற் பெருமானே என அழைத்து, இப்பொழுது நீ என்பால் வந்து அஞ்சவேண்டா என்று வாயால் மொழிந்து, அன்புடன் என்னைத் தழுவி அருள்க என்று மொழிகின்றாள்; காற்றிற் பறக்கும் பஞ்சு போலப் பறக்கின்றேனாதலால் இனியும் காதற் துன்பத்தை என்னால் தாங்க முடியாதே என மொழிகின்றாள்; என்னுடைய எண்ணம் எல்லா வற்றையும் உனது திருவுள்ளம் மிகவும் செம்மையாக அறியுமாதலால், காலம் தாழ்க்க வேண்டா என உரைக்கின்றாள் என்று நற்றாய் வருந்திக் கூறுகின்றாள். எ.று.

வஞ்சகம் புரிவது கீழ்மக்கள் செயலாதலின், "வஞ்சகம் அறியா வள்ளலே" என்று புகல்கின்றார். தனது காதல் வேட்கையின் பெருக்கம் விளங்க, "இத்தருணம் நீ வந்து அன்பினால் அணைத்தருள் என்றாள்" எனவும், அதனால் தான் இறப்ப மெலிந்தமை புலப்பட, "பஞ்சு போல் பறந்தேன் துன்பம் பட முடியாது எனக்கு என்றாள்"

எனவும், யான் வாயால் சொல்லுதற்கு முன்பே என் எண்ண மிகுதியைப் பூரணமாக அறிவாய் என்பாளாய், "எனது கருத்தெல்லாம் உனது திருவுளம் செஞ்செவே அறியுமே என்றாள்" எனவும் இயம்பு கின்றாள் என நற்றாய் வருந்திக் கூறுகின்றாள். கடையப்பட்ட பஞ்சு மென்மை மிகுந்து காற்றில் பறப்பது போல, வேட்கை மிகுதியால் அலைக்கப்பட்ட நான் எல்லை மீறிய மெலிவுற்றேன் என்பது தோன்ற, "பஞ்சுபோல் பறந்தேன்" என்று பகர்கின்றாள். செஞ்செவே என்பது மிகவும் செம்மையாக என்னும் பொருளது. "செஞ்செவே ஆண்டாய் சிவபுரத் தரசே" (வாழா) என்று மாணிக்கவாசகர் வழங்குவது காண்க. (3)

4193. பூமியோ பொருளோ விரும்பிலேன் உன்னைப்
புணர்ந்திட விரும்பினேன் என்றாள்
காமிஎன் றெனைநீ கைவிடேல் காமக்
கருத்தெனக் கில்லைகாண் என்றாள்
சாமிநீ வரவு தாழ்ந்திடில் ஐயோ
சற்றுநான் தரித்திடேன் என்றாள்
மாமிகு கருணை வள்ளலே என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

உரை : வரப் பயனாக நான் பெற்றெடுத்த மகள் சிவபெருமானை நோக்கிப் பெருமை மிக்க கருணைபுரியும் வள்ளற் பெருமானே என்று வாயாரப் போற்றுகின்றவள் நிலத்தையோ பொருளையோ விரும்பாமல் உன்னைக் கூடிக் கலந்திடவே விரும்புகிறேன் எனவும், கீழான காமமுற்ற பெண் என்று என்னை நீ கைவிடலாகாது; அத்தகைய காமக் கருத்து எனக்கில்லை எனவும், தலைவனாகிய நீ என்பால் வரத் தாமதிப்பாயாயின் நான் சிறிதும் உயிர் தாங்கி இருக்கமாட்டேன் எனவும் நற்றாய் தன் மகள் கூறுவதை எடுத்து வருந்தி உரைக் கின்றாள். எ.று.

உலகியல் மக்களுக்கு ஆசை தருவது பூமியும் பொருளும் பெண்ணு மாகிய மூன்றும் என்பர். அவற்றுள் கூற்று நிகழ்த்துபவர் பெண்ணாதலால், "பூமியோ பொருளோ விரும்பிலேன்" என்று புகல் கின்றாள். சிவயோகப் போகமே விரும்பப்படுவது என்றற்கு, "உன்னைப் புணர்ந்திட விரும்பினேன் என்றாள்" என்றும், நீ வெறுத்துக் கைவிடத் தக்க இழிந்த காமக் கருத்துடையவள் அல்ல என்பாளாய், "காமி என்றெனை நீ கைவிடேல் காமக் கருத்து எனக்கில்லை காண் என்றாள்" என்றும், தனது பொறுக்கமாட்டாத தன்மையை வெளிப்படுத்தற்கு, "நீ வரவு தாழ்த்திடில் சற்றும் நான் தரித்திடேன் என்றாள்" என்றும் நற்றாய் வருந்தி உரைக்கின்றாள். காமம் உடையவளைக் "காமி" என்கின்றார். சாமி - தலைவன். தாழ்த்திடல் - தாமதித்தல். (4)

4194. அடுத்துநான் உன்னைக் கலந்தனு பவிக்க
ஆசைமேற் பொங்கிய தென்றாள்
தடுத்திட முடியா தினிச்சிறு பொழுதும்
தலைவனே தாழ்த்திடேல் என்றாள்
தொடுத்துல குள்ளார் தூற்றுதல் வாயால்
சொலமுடி யாதெனக் கென்றாள்
மடுத்தவெந் துயர்தீர்த் தெடுத்தருள் என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

உரை : நான் பெற்ற வரத்தினால் எனக்குப் பிறந்த மகள், சிவனை நோக்கி, நான் உன்னை அடைந்து கூடிக் கலந்து இன்புற எனக்கு ஆசை மேன் மேலும் பொங்குகிறது என்று சொல்லுகிறாள் எனவும், அதனால் இனி என்னை யாரும் தடை செய்ய முடியாது; ஆகவே எனக்குத் தலைவனாகிய நீ சிறிது பொழுதும் தாமதித்தல் கூடாது என்று சொல்லுகின்றாள் எனவும், இவ்வுலகில் என்னைச் சூழவுள்ளவர்கள் பல சொற்களைத் தொடுத்து என்னைத் தூற்றுகின்றார்கள்; அவர்களுடைய அலருரையை நான் ஏற்று என் வாயால் மீளவும் என்னால் எடுத்துரைக்க முடியாது என்று சொல்லுகின்றாள் எனவும், என்னைத் தாக்குகின்ற வேட்கைத் துன்பத்தைப் போக்கி என்னை ஆண்டருள்க என்று வேண்டுகின்றாள் எனவும் நற்றாய் வருந்திக் கூறுகின்றாள். எ.று.

அடுத்தல் - அடைதல். சிவயோகம் அனுபவித்தல் - சிவபோகம். சிவயோகப் போகத்தில் தன் உள்ளத்தில் பெருகிய ஆசையை, "அடுத்து நான் உன்னைக் கலந்து அனுபவிக்க ஆசை மேற் பொங்கியது என்றாள்" எனக் கூறுகின்றாள். சிவயோகப் போகத்திற்கு உரியதாயினரை எவரும் எப்பொருளும் தடை செய்தல் இல்லையாதல் பற்றி, "தடுத்திட முடியாதே" எனத் தெளிய உரைக்கின்றாள். பெண்ணின் மேனி வேறுபாடும் வாய் வெருவுதலும் காணும் உலக மக்கள் உண்மையுணராமையால் பல சொல்லித் தூற்றுவது இயல்பாதலால் அதனை எடுத்தோதி மகள் வருந்துகிறாள் என்பாளாய், "தொடுத்து உலகுள்ளார் தூற்றுதல் வாயால் சொல முடியாதெனக்கு என்றாள்" என நற்றாய் நவில்கின்றாள். இதனை ஈரமின் கூற்றம் ஏற்று அலர் நாணல் (தொல். பொ - 264) எனத் தொல்காப்பியம் குறிக்கின்றது. மடுத்தல் - ஈண்டுத் தாக்குதல் மேற்று. (5)

4195. தடுத்திடல் வல்லார் இல்லையின் அருளைத்
தருகநற் றருணம்ஈ தென்றாள்
கொடுத்திடில் ஐயோ நின்னருட் பெருமை
குறையுமோ குறைந்திடா தென்றாள்
நடுத்தய விலர்போ னிருத்தலுன் றனக்கு
ஞாயமோ நண்பனே என்றாள்
வடுத்தினும் வாயேன் அல்லன்நான் என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

உரை : திருவருள் தந்த வரத்தினால் நான் பெற்றெடுத்த மகள் இறைவனை நோக்கி, முன்னே தடுக்க வல்லவர் ஒருவரும் இல்லையாதலால் இது நல்ல தருணம்; ஆதலின் நின் திருவருளை எனக்குத் தருக என்று வேண்டுகின்றாள்; எனக்கு அதனை நீ நல்கிய வழி உன்னுடைய அருட் பெருமை குறைந்துவிடும் என்று எண்ணுகின்றாயோ; ஐயோ, அது சிறிதும் குறையாது என்று மொழிகின்றாள்; அருள் இல்லாதவர் போல் நடுவே இருப்பது உனக்கு நியாயமாகுமோ; ஆகாது காண் என உரைக்கின்றாள்; குற்றமான சொற்களைப் பேசும் வாயை உடையவளல்ல நான் என்று நற்றாய் வருந்திக் கூறுகின்றாள். எ.று.

யான் வேண்டுகின்ற இக்காலத்தில், எனக்கு உன் திருவருளைத் தருவாயாயின் உன்னைத் தடுப்பவர் ஒருவரும் இல்லை என்பாளாய், "தடுத்திடல் வல்லார் இல்லை நின் அருளைத் தருக நற்றருணம் ஈது என்றாள்" என்றும், கொள்ளக் குறைபடாத பெருமையுடையது இறைவன் திருவருள் என்ற கருத்தினை உடையவளாதலால், "கொடுத்திடல் ஐயோ நின்னருட் பெருமை குறையுமோ குறைந்திடாது என்றாள்" என்றும் தன் மகளின் மனநலத்தை நற்றாய் எடுத்துரைக்கின்றாள். எல்லா ஆன்மாக்களிடத்தும் உடனிருந்து நல்லுணர்வும் நல்லின்பமும் கொடுக்கும் நட்புடையவன் சிவபிரான் என்பது அறிந்தவளாதலால் சிவனை நினைந்து, "நடுத்தயவிலர் போன்றிருத்தல் உன்றனக்கு ஞாயமோ நண்பனே என்றாள்" என இயம்புகின்றாள். வடுத்தினும் வாயேன் - வடுவான சொற்களைப் பேசும் வாயை உடையவளல்லள் என் மகள் என்பாளாய், "வடுத்தினும் வாயேன் அல்லன் நான் என்றாள்" என்று நற்றாய் தன் மகள் கூறுவதை எடுத்தோதுகின்றாள். வடு - குற்றமான சொற்கள். (6)

4196. பொன்செய் நின்வடிவைப் புணர்ந்திட நினைத்தேன்
பொங்கிய தாசைமேல் என்றாள்
என்செய்வேன் எனையும் விழுங்கிய தையோ
என்னள வன்றுகாண் என்றாள்
கொன்செயும் உலகர் என்னையும் உனது
குறிப்பையும் குறித்திலார் என்றாள்
வன்செயும் அவர்வாய் ஓய்வதென் றென்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

உரை : பெற்ற வரத்தின் பயனாக நான் ஈன்ற மகள் சிவபிரானை நினைந்து காதல் தோன்றி மேலெழுந்து பொங்குகின்றதாதலால் பொன்னிறம் பொருந்திய நின்னுடைய திருமேனியைத் தழுவிக் கூட நினைக்கின்றேன் எனவும், அக் காதல் வேட்கை என்னைத் தனக்குள் விழுங்கிக்கொண்டு என் அளவில் நில்லாது பெருகுகின்றபடியால் யான் என்ன செய்வேன் எனவும், என் போன்றார்க்கு அச்சத்தை விளைவிக்கும் உலகத்துப் பெண்கள் என்னையும் உனது திருவுள்ளக் குறிப்பையும் அறிந்திலர் எனவும், வலிய அலர் உரைக்கும் அவர்களுடைய வாய் எப்பொழுது ஓயுமோ எனவும் கூறுகின்றாள் என, நற்றாய் வருந்தி உரைக்கின்றாள். எ.று.

சிவனுடைய திருமேனி பொன்னிறம் உடையதாதலால் சிவனை "பொன் செய நின் வடிவைப் புணர்ந்திட நினைத்தேன்" என்றும் நினைத்தபோது காதல் அன்பு பெருகினமை யுணர்த்த, ஆசை பொங்கி எழுந்து மேம்படுகின்றது என்பாளாய், "புணர்ந்திட நினைத்தேன் பொங்கியது ஆசை மேல் என்றாள்" என்றும் நற்றாய் நவில்கின்றாள். பொங்கி எழுந்த ஆசை அவள் உடம்பு முழுவதையும் கவர்ந்து கொண்டமை தெரிவித்தற்கு, "எனையும் விழுங்கியது என்னளவன்று காண்" என்று சொன்னாள் என நற்றாய் கொண்டெடுத்துக் கூறுகிறாள். கொன் - அச்சம். உனது குறிப்பு என்றது, உன்னுடைய திருவுள்ளக் கருத்து என்றதாம். அலர் தோன்றி நாட்டில் பரவாதபடித் தடுக்க முடியாத வன்மையுடையது என்பாளாய், "வன்செயும் அவர் வாய் ஓய்வதென்று என்றாள்" என நற்றாய் அவலிக்கின்றாள். (7)

4197. மெலிந்தஎன் உளத்தை அறிந்தனை தயவு
மேவிலை என்னையோ என்றாள்
நலிந்தபோ தின்னும் பார்த்தும்என் றிருத்தல்
நல்லவர்க் கடுப்பதோ என்றாள்
மலிந்த இவ்வுலகர் வாய்ப்பதர் தூற்ற
வைத்தல்உன் மரபல என்றாள்
வலிந்தெனைக் கலந்த வள்ளலே என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

உரை : பெற்ற வரத்தின் பயனாக நான் ஈன்ற மகள் சிவனை நினைந்து என்பால் வலிய வந்து கூடி நீங்கிய வள்ளலாகிய சிவனே! வேட்கை மிகுதியால் மனம் மெலிந்த என் மனக் கருத்தை அறிந்திருந்தும் நீ அருள் செய்கின்றாயில்லை; காரணம் என்னவோ; அறியேன் என்றும், வேட்கை நோயால் நான் வருந்துவது கண்டு இன்னும் பார்ப்போம் என்றிருத்தல் நற்பண்புடையவர்க்குப் பொருந்தாது என்றும், இவ்வுலகில் நிறைந்துள்ள பெண்கள் தம் வாயால் அலர் மொழிந்து என்னைத் தூற்றிப் பேசுமாறு வைத்தல் உன்னுடைய இயல்புக்கு ஒவ்வாது என்றும் கூறுகின்றாள் என நற்றாய் வருந்தி மொழிகின்றாள். எ.று.

உளம் மெலிவதாவது - மனவன்மை குறைதல். நலிதல் - வருத்துதல். பார்த்தும் என்பது உம்மீற்றுத் தனித்தன்மை வினைமுற்று. மலிதல் - நிறைதல். வாய்ப்பதர் - இல்லது புனைந்து பொய்யாக மொழிதல். தூற்றுதல் - சொல்லுதல். (8)

4198. ஒன்றிலேன் பிறிதொன் றுன்னருட் சோதி
ஒன்றுற ஒன்றினேன் என்றாள்
நன்றிலேன் எனினும் நின்திரு வடியை
நம்பினேன் நயந்தருள் என்றாள்

குன்றிலே இருத்தற் குரியநான் துயரக்
குழியிலே இருந்திடேன் என்றாள்
மன்றிலே நடஞ்செய் வள்ளலே என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

உரை : பெற்ற வரத்தால் நான் ஈன்றெடுத்த மகள், சிவபெருமானை நினைந்து, அம்பலத்தில் ஆடுகின்ற வள்ளற் பெருமானே! பிறிதொன்றனையும் மனத்திற் கொள்ளாமல் ஒன்றாகிய அருட்சோதியிற்றான் உள்ளம் ஒன்றிக் கலந்துள்ளேன் என்றும், நலமொன்றும் இல்லாதவளாயினும் உனது திருவடியையே விரும்பி இருக்கின்றேனாதலால் என்னை நயந்து ஏற்றருள்க என்றும், சிவானந்தமாகிய குன்றின் மேல் இருக்கும் உரிமையையுடைய யான் துன்பக் குழியில் இருந்து வருந்த மாட்டேன் என்றும் வாய் வெருவுகின்றாள் என நற்றாய் கவலுகின்றாள். எ.று.

சிவபோகத்திலும் சிறந்தது வேறில்லாமையால், "பிறிது ஒன்றிலேன்" எனவும், மனம் முற்றும் சிவபோக வேட்கையே நிறைந்திருப்பது புலப்பட, "ஒன்றிலேன் பிறிதொன்று உன் அருட் சோதி ஒன்றுற ஒன்றினேன்" எனவும் தலைவி இயம்புகின்றாள். திருவடிப் பேற்றுக்கமைந்த நற்பண்பு தன்பால் இல்லை என்பாளாய், "நன்றிலேன்" என்றும், எனினும் திருவடி இன்பம் ஒன்றையே நாடுகின்றேன் என்பாள், "நின் திருவடியை நம்பினேன்" என்றும், எனவே என்னை ஆண்டருளல் வேண்டும் என்றற்கு, "நயந்தருள்" என்றும் அவள் கூறுகின்றாளாம். சிவஞான யோகப் பெருநிலையைக் "குன்று" எனக் குறிக்கின்றாள். இக் குன்றின்கண் இருந்து இன்புறற்பாலளாகிய யான் உலகியலாகிய துன்பக் குழியில் கிடந்து வருந்துவது பொருந்தாது என்பாளாய், "குன்றிலே இருத்தற்குரிய நான் துயரக் குழியிலே இருந்திடேன்" என எடுத்துரைக்கின்றாள். இவ்வாறு சொல்லி என் மகள் வாய் வெருவுகின்றாள் என்று நற்றாய் வருந்தியவாறும். (9)

4199. ஆடிய பாதத் தழகன்என் றனைத்தான்
அன்பினால் கூடினன் என்றாள்
கோடிமா தவங்கள் புரியினும் பிறர்க்குக்
கூடுதல் கூடுமோ என்றாள்
பாடிய படிஎன் கருத்தெலாம் நிரப்பிப்
பரிசெலாம் புரிந்தனன் என்றாள்
வாடிய உளமும் தளிர்த்தனன் என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

உரை : அருள் வரத்தால் நான் பெற்றெடுத்த என் மகள் அம்பலத்தின்கண் அருள் நடம் புரியும் திருவடியையுடைய அழகனாகிய சிவபெருமான் என்னை அன்போடு கலந்து கூடினான் எனவும், எண்ணிறந்த பெரிய தவங்களைச் செய்தாலும் பிறர் யாவர்க்கும் இக் கூட்டத்தைப் பெறுதல் இயலாது எனவும், நான் மனம் கலந்து பாடியவாறே, என் மனம் முழுதும் நிறைந்து சிவபோகப் பான்மைகள் யாவை

யும் எனக்குத் தந்தருளினுன் எனவும் பெருது வாடி வருந்திக் கிடந்த நான் மனம் தளைத்தேன் எனவும் வாய் வெருவுகின்ருள் என நற்ருய் எடுத்து மொழிகின்ருள். எ.று.

அன்பினுல் கூடினன் என்றற்கு, எனது அன்பு மிகுதி கண்டு நயந்து கூடியருளினுன் எனப் பொருள் கூறினும் பொருந்தும். "கோடி மாதவம்", எண்ணிறந்த பெரிய தவங்கள். உண்மை யோக ஞானங் களன்றிப் பிறவாற்ருல் எத்தனை பெரிய தவங்கள் செய்யினும் பிறரால் இச்சிவபோகத்தைப் பெறலரிது என்றற்கு, "கோடி மாதவங்கள் புரியி னும் பிறர்க்குக் கூடுதல் கூடுமோ'' எனத் தலைவி உரைக்கின்ருள். கூடுதல் கூடுமோ என்பது, "உண்ணும் உண்ணேன்" (கலித்.) என்ருற் போல வந்தது. பாடிய பாட்டின்கண் விரும்பி வேண்டிய நலங்களை முழுதும் பெற்றமை தோன்ற, "பாடியபடி என் கருத்தெலாம் நிரப்பிப் பரிசெலாம் புரிந்தனன்" எனத் தலைவி மகிழ்ந்துரைக்கின்ருள். சிவானந்த நுகர்ச்சியால் மனம் இன்பத்தால் நிறைவுற்று, மெய் தளிர்த்தமையின், "வாடிய உளமும் தளிர்த்தனன்" என்று தலைவி கூறுகின்ருள் என நற்ருய் மெய்ம்மறந்து விளம்புகின்ருள். (10)

திருச்சிற்றம்பலம்

## 59. பாங்கி தலைவி பெற்றி யுரைத்தல்

அஃதாவது, தலைமகளின் வேட்கைப் பெருக்கத்தையும், அதனைப் பொருது அவள் வாய் வெருவுதலையும் நற்றாய் உரைப்பக் கேட்டும் தானே நேரிற் கண்டும் கவன்ற தோழி, தலைமகனாகிய சிவபெருமான் திருமுன்படைந்து தலைவியின் ஆற்றாத அவல நிலையை அவற்குக் கூறுவதாம்.

4200. அம்மதவேள் கணைஒன்றோ ஐங்கணையும் விடுத்தான்
அருள் அடையும் ஆசையினால் ஆருயிர்தான் பொறுத்தாள்
இம்மதமோ சிறிதும் இலாள் கலவியிலே எழுந்த
ஏகசிவ போகவெள்ளத் திரண்டுபடாள் எனினும்
எம்மதமோ எக்குலமோ என்றுநினைப் புளதேல்
இவள்மதமும் இவள்குலமும் எல்லாமும் சிவமே
சம்மதமோ தேவர்திரு வாய்மலர வேண்டும்
சபையில்நடம் புரிகின்ற தனிப்பெரிய துரையே.

உரை : அம்பலத்தின்கண் அருள் நடம்புரியும் தனிப்பெருந் தலைவரே! அந்த மன்மதனாகிய காமவேள் தன்னுடைய கணைகளுள் ஒன்றோடமையாது ஐந்து அம்புகளையும் என் தலைவிமேற் செலுத்தி யுள்ளான்; உனது திருவருளைப் பெறும் அன்பு மிகுதியால் தனது அரிய வுயிரைத் தாங்கியிருக்கின்றாள்; இவ்வுலகவர் கூறும் செருக்குச் சிறிதும் உடையவளல்லள்; கூட்டத்தில் தோன்றுகின்ற தனிச் சிவபோகமாகிய பெருவெள்ளத்திற் படிதற்குக் கருத்து வேறுபாடு இலள்; எனினும், இவள் எச்சமயத்தைச் சார்ந்தவளோ, எக்குலத்தவளோ என்று அறிய விழைவீராயின், இவளுடைய சமயமும் குலமும் எல்லாம் சிவமயமே யாகும்; இது தேவரீர்க்கு உடன்பாடுதானே; உரைத்தருள வேண்டு கிறேன். எ.று.

அம்மத வேள் என்பதில் அகரம், உலகறி சுட்டு. கணை - அம்பு. காமவேள் ஐவகை அம்புகளையுடையனாதலால், அவற்றுள் ஒன்றோடு நில்லாமல் ஐந்தனையும் சேர விடுத்துள்ளான்; அதனால் இறந்து படுதற் குரியளாயினும், நினது திருவருளின்பத்தைப் பெறும் ஆர்வம் அவளைக் காத்து நிற்கின்றது என்பாளாய், "அருளடையும் ஆசையினால் ஆருயிர் தான் பொறுத்தாள்" எனத் தோழி கூறுகின்றாள். "பொறுத்தாள்" என்பது, உயிர் தானும் அவட்குத் தாங்குதற்கரிய பாரமாயுளது என்ற குறிப்புணர நிற்கின்றது. இம்மதம் - இவ்வுலகவர் உரைக்கும் குற்றங் களில் ஒன்றான மதம். காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்ற ஆறும் உலகவர் உரைக்கும் குற்றங்கள் என அறிக. குற்றமான மதம் சிறிதும் என் தலைவிபால் இல்லை என்பாளாய், "இம்மதமோ சிறிதும் இலாள்" எனவும், சிவபோகப் பேற்றையன்றி

வேறு யாதும் கருதுவதிலள் என்றற்கு, "சிவபோக வெள்ளத்து இரண்டு படாள்" எனவும் இயம்புகின்றாள். சிவயோகத்தால் நுகரப் படுவதாதலால் சிவபோகத்தை, "கலவியிலே எழுந்த ஏக சிவபோகம்" என்று குறிக்கின்றாள். ஏகம் - ஒப்புயர்வில்லாதது. பாகத்தின் இன்ப மிகுதியைப் புலப்படுத்தற்கு, "சிவபோக வெள்ளம்" எனச் சிறப்பிக் கின்றார். இரண்டு படுதல் - கருத்து வேறுபடுதல். சமயம் குலம் ஆகியவற்றில் என் தலைவி வேறாயவளோ என ஆய்தல் வேண்டா; சமயத்தாலும் குலத்தாலும் பிறவற்றாலும் இவள் சிவவுணர்வும் சிவவொழுக்கமும் சிவநெறியும் உடையவள் என்று வற்புறுத்தற்கு, "இவள் மதமும் இவள் குலமும் எல்லாமும் சிவமே" என்று தெரிவிக் கின்றாள். இவளை ஏற்றுக் கொள்ளற்குத் தேவரீர்க்கு இசைவு தானே எனக் கேட்கலுற்று, "சம்மதமோ தேவர் திருவாய் மலர வேண்டும்" எனத் தோழி வேண்டுகின்றாள். துரை - தலைவர்களைக் குறிக்கும் பெயர்ச் சொல்.

இவ் வேண்டுகோள் இப்பகுதி முற்றும் பாட்டுத் தோறும் செய்யப் படுவால், இனிவரும் பாட்டுக்கட்கும் கருத்து இதுவே எனக் கூறிக் கொள்க. (1)

4201. அங்கலிட்ட களத்தழகர் அம்பலவர் திருத்தோள்
ஆசையெனும் பேய்அகற்றல் ஆவதிலை எனவே
பொங்கலிட்ட தாயர்முகம் தொங்கலிட்டுப் போனார்
பூவைமுகம் பூமுகம்போல் பூரித்து மகிழ்ந்தாள்
எங்களிட்டம் திருவருள்மங் கலஞ்சூட்டல் அன்றி
இரண்டுபடா தொன்றாக்கி இன்படைவித் திடவே
தங்களிட்டம் யாதுதிரு வாய்மலர வேண்டும்
சபையில்நடம் புரிகின்ற தனிப்பெரிய துரையே.

உரை : அம்பலத்தில் ஆடல் புரிகின்ற தனிப்பெருந் தலைவரே! இருண்ட கழுத்தையுடைய அழகராகிய அம்பலக் கூத்தராகிய சிவ பிரானுடைய அழகிய தோள்களின் மேல் வைத்துள்ள ஆசையென்னும் பேய் இவளை விட்டுப் போக்கப்படுவதாய் இல்லையாதலால் சிறு தெய்வங்கட்குப் பொங்கலிட்டு வழிபாடு செய்த தாய்மார்கள் வழிபாடு பயன்படாமையால் வருத்த மிகுதியால் தங்கள் முகத்தைத் தொங்க விட்டுக்கொண்டு போய்விட்டார்கள்; பூவையாகிய தலைமகள் மகிழ்ச்சி யால் மலர்ந்த பூப் போன்ற முகம் தெளிவுற்று உடல் புளகித்தாள்; எங்கள் விருப்பம் யாதெனில் நீ அவட்கு நின் திருவருளாகிய மங்கல நாணைச் சூட்டல் வேண்டும் என்பது; அன்றியும், இவளுடைய மனத்தைப் பேதுற விடாமல் ஒருமையுற்று விளங்க நின்னுடைய பேரின்பத்தை அடைவித்தல் வேண்டும் என்பதாகும்; தேவரீருடைய பெருவிருப்பம் யாதோ அதனை எமக்குத் தெரிவித்திடுக. எ.று.

அங்கு - அசை; இஃது ஆங்கண் எனவும் வழங்கும். இதனை உரையசை என்றும் உரைப்பர். அல் - இருள். விட முண்டமையால் நிறம் கரிதாகிய கழுத்தையுடையவனாதலால் சிவனை, "அல்லிட்ட

களத்தழகர்" என்று தோழி புகழ்கின்றாள். அம்பலவர் - கூத்தாடும் திருவம்பலத்தையுடைய சிவபெருமான். அம்பலவரான சிவபெருமானுடைய தோள் கண்டு காதலாற் கூடற்கெழுந்த ஆசை தலைவிபால் நீங்காது பெருகியிருப்பதறிந்து, தோழியரும் தாயரும் செய்த சூழ்ச்சிகளும் முயற்சிகளும் பயன்படாது கழிந்தமை பற்றி, "திருத்தோள் ஆசையெனும் பேயகற்றல் ஆவதிலை" என்றும், வேறு தெய்வ வழிபாட்டால் அதனை நீக்கக் கருதிப் பொங்கல் செய்து படைத்து வணங்கியும் நினைந்த பயன் எய்தாமையால் தாயரும் சுற்றத்தாரும் மனம் சோர்ந்து முகம் வாடித் தம் மனைகட்குச் சென்றனர் என்பாளாய், "பொங்கலிட்ட தாயர் முகம் தொங்கவிட்டுப் போனார்" என்றும், அவர் செயல் கண்டு மனம் வருந்திய தலைமகள், அவர்களது சூழ்ச்சி தோற்றதனால் உவகை மீதூர்ந்து உடல் பூரித்து முகம் மலர்ந்தாள் என்பாளாய், "பூவை முகம் பூமுகம் போல் பூரித்து மகிழ்ந்தாள்" என்றும் புகல்கின்றாள். தன் மனத்திருந்த காதலுண்மையை யுணராமல் தாயர் செய்த பொங்கற் பூசையும் வழிபாடும் தலைவிக்கு நாணத்தையும் வருத்தத்தையும் விளைவித்தமையின், தாயர் எய்திய சோர்வு தலைவிக்கு மகிழ்ச்சியுண்டுபண்ணியது என்பாளாய், "பூவை முகம் பூமுகம் போல் பூரித்து மகிழ்ந்தாள்" எனவுரைக்கின்றாள். பூவை - இளமை நலம் சிறந்த பெண். பூ முகம் - மலர்ந்த தாமரைப் பூவைப் போன்ற முகம். மங்கலம் - மங்கல நாண். இரண்டு படுதல் - ஐயத்தால் பேதுறுதல்; அலைதலுமாம். ஒன்றுக்கல் - ஒருமைக்கண் நிறுத்தல். இஷ்டம் - இட்டமென வந்தது. தங்கள் விருப்பத்தை எடுத்து முன்மொழிவது, கேட்போர் கருத்தை வெளியிடச் செய்யும் சூழ்ச்சி வகையாகும். திருவாய் மலர்தல் - வாய் திறந்து சொல்லுதல். (2)

4202. பணம்பழமே எனினும்இந்தப் பசிதவிர்த்தால் போதும்
பாரும்எனப் பகர்கின்ற பாவையர்போல் பகராள்
இனம்பழமோ கங்கலந்தாள் சிவானுபவத் தல்லால்
எந்தஅநு பவங்களிலும் இச்சைஇல்லாள் அவர்தம்
மனம்பழமோ காயோஎன் றறிந்துவர விடுத்தாள்
மற்றவர்போல் காசுபணத் தாசைவைத்து வருந்தாள்
தனம்பழமோ தேவர்திரு வாய்மலர வேண்டும்
சபையில் நடம் புரிகின்ற தனிப்பெரிய துரையே.

உரை : அம்பலத்தில் ஆடல் புரிகின்ற தனிப்பெருந் தலைவரே! பனம்பழமாயிருந்தாலும் உற்ற பசியைப் போக்குவதாயின் சாலும்; கிடைக்கிறதா? பார்மின் என்று பேசும் பெண்ணினத்தைச் சேர்ந்தவளல்லள் என் தலைவி; இப்பொழுதும் திருவருளின் மேலுற்ற பழைய மோகமே கொண்டிருக்கிறாள்; சிவானுபவத்திலன்றி வேறாய எவ்வகையனுபவங்களிலும் அவட்கு விருப்பில்லை; திருவருட் செல்வராகிய தலைவருடைய திருவுள்ளம் என் பொருட்டுப் பழமோ காயோ, என்று அறிந்து வர என என்னை நின்பால் விடுத்துள்ளாள்; மற்ற மண்ணுலக மகளிரைப் போலக் காசுக்கும் பணத்துக்கும் ஆசைகொண்டு வருந்துபவளல்லள்; இவளது வருத்தம் பழமாய்ப் பயன்படுமோ, சொல்லுக. எ.று.

பனம்பழம் மணமும் சுவையுமுடையதாயினும் எளிதில் உண்டு பசி நீக்கும் இயல்புடையதன்று; வலிய தோலும் நெடிய நாரும் கொண்டு உண்பார்க்கு வருத்தம் தருவதுபற்றிப் பனம்பழத்தை எடுத்துக் காட்டுகின்றார். உயர்ந்த திருவருட் சிவபோகத்தையன்றி இழிந்த பிறபோகப் பொருள்களை நாடுபவளல்லள் என்பது கருத்து. எழுதிய பாவை போன்ற இளமகளிரைப் பாவையர் என்பது நூல் வழக்கு. இன்னம் இனம் என வந்தது. திருவருட் சிவபோக மோகம் முன்னைப் பிறவிகளில் தோன்றி முதிர்ந்து வருவதாகலின், இப்பொழுதும் அது தொடர்ந்து போந்து இவர் மனத்தைக் கவர்ந்துகொண்டது என்றற்கு, "இனம் பழமோகம் கலந்தாள்" எனத் தோழி சொல்லுகின்றாள். "இறப்பில் தவத்தால் மருவுவனும் ஞானத்தை வந்து" (சிவ. போதம்.8) என மெய்கண்டார் உரைப்பதறிக. மோகம், ஈண்டுத் திருவருட் சிவபோகத்தின் மேல் உண்டாகிய வேட்கை மிகுதி பற்றி வரும் பெரும் பற்று. சிவபோகத்தையன்றிப் பிறவற்றை நோக்கவிடாமையின், மோகம் என்று மொழிகின்றாள். சிவானந்த ஞானனுபவத்தாலன்றி இம் மோகம் வேறு எதனாலும் தீர்வதன்று என வற்புறுத்தற்கு, "சிவானுபவத் தல்லால் எந்த அநுபவங்களிலும் இச்சை யில்லாள்" எனக் கூறுகின்றாள். தான் விரும்பும் சிவபோகத்தை நல்குவாயோ அன்றி மறுப்பாயோ என்ற கவலை மிக்கு, உண்மை தெரிந்து வருக என என்னை நின்பால் தூது விடுத்தாள் என்பாளாய், "அவர் தம் மனம் பழமோ காயோ என்றறிந்துவர விடுத்தாள்" எனவும், பெண் மனம் பொன்னுக்கு மெலியும் என்பது பற்றி இவள் மனம் காசு பணத்துக்குக் கருத்தை இழப்பதன்று என்பாளாய், "மற்றவர் போற் காசு பணத்தாசை வைத்து வருந்தாள்" எனவும் எடுத்துக் கூறுகின்றாள், "எண்ணிப் பத்தங்கையிட்டால் இந்திரன் மகளும் ஆங்கே வெண்ணெய்க் குன்றெரியுற்றாற் போல்" மெலிந்து மனம் திரிவள் எனத் திருத்தக்க தேவர் உரைப்பர். தாம் பழமோ என்பதில் தனம் வருத்தம் குறித்து நின்றது. இவள் எய்தி வருந்தும் வருத்தம் இவட்கு விரும்பிய நற்பயனை விளைக்குமா என விளம்பியருளல் வேண்டும் என்பாள், "தனம் பழமோ தேவர் திருவாய் மலர வேண்டும்" எனத் தோழி வேண்டுகின்றாள். (3)

4203. புல்லவரே பொய்உலக போகம்உற விழைவார்
புண்ணியரே சிவபோகம் பொருந்துதற்கு விழைவார்
கல்லவரே மணிஇவரே என்றறிந்தாள் அதனால்
கனவிடையும் பொய்யுறவு கருதுகிலாள் சிறிதும்
நல்லவரே எனினும்உமை நாடாரேல் அவரை
நன்குமதி யாள்இவளை நண்ணஎண்ணம் உளதோ
வல்லவரே நுமதுதிரு வாய்மலர வேண்டும்
வயங்குதிரு மணிமன்றில் வாழ்பெரிய துரையே.

உரை : விளங்குகின்ற அம்பலத்தின்கண் வாழ்கின்ற பெரிய தலைவரே! அற்பர்களே நிலையில்லாத மண்ணுலக போகத்தைப் பெறுதற்கு விரும்புவர்; சிவ புண்ணியம் செய்த ஞானிகள் சிவ போகத்தைப் பெறுதற்கு விரும்புவர்; இவருட் புல்லர்களைக் கற்

போன்றவரெனவும், புண்ணியரை மணி போல்பவரெனவும் தெரிந்து கொண்டாளாதலால், கனவின்கண்ணும் நிலையாத பொய்யுறவுகளைச் சிறிதும் நினையாமல், நற்பண்புடையோரைக் காணினும் அவர்கள் சிவபெருமானாகிய நின்னை எண்ணுதவராயின், அவர்களை நல்லவர்களாக இவள் மதிக்கின்றாளில்லை; என் தலைவியாகிய இவளையடைதற்கு நுமக்குத் திருவுள்ளம் உண்டோ? எல்லாம் வல்ல பெருமானே, எனக்குச் சொல்லியருள வேண்டுகிறேன். எ.று.

புல்லறிவாளரைப் புல்லர் என்றும், புல்லியோர் என்றும் கூறுவது பற்றிப் "புல்லவர்" எனத் தோழி கூறுகின்றாள். நிலையாமை பற்றி, உலக போகம், "பொய்யுலக போகம்" எனப்படுகிறது. பொய்யுலக போகத்தை விரும்புபவரைக் கல்லவர் என்றும், சிவபோகம் வேண்டுபவரை மணியென்றும் தெரிதலால், எங்கள் தலைவி அறிவறிந்தவளென்றும், அவள் கனவிலும் பொய்யுலக போகம் விரும்புவோரை மனத்தாற் கருதாத திண்மையுடையவள்; ஆகவே, அவள்பாற் போந்து கூடுதல் வேண்டும் என உரைப்பாளாய், "இவளை நண்ண எண்ணம் உளதோ" எனவும், நுமது இசைவைத் தெரிவித்தல் வேண்டும் என்பாள், "நுமது திருவாய் மலர வேண்டும்" எனவும் விண்ணப்பிக்கின்றாள். பொய்யுறவு - நிலையில்லாத தொடர்பு. (4)

4204. தத்துவருந் தத்துவஞ்செய் தலைவர்களும் பிறரும்
தனித்தனியே வலிந்துவந்து தன்எதிர்நிற் கின்றார்
எத்துணையும் மற்றவரை ஏறெடுத்துப் பாராள்
இருவிழிகள் நீர்சொரிவாள் என்னுயிர்நா யகனே
ஒத்துயிரில் கலந்துகொண்ட உடையாய்என் றுமையே
ஓதுகின்றாள் இவள் அளவில் உத்தமரே உமது
சித்தம்எது தேவர்திரு வாய்மலர வேண்டும்
சிற்சபையில் பொற்சபையில் திகழ்பெரிய துரையே.

உரை : ஞான சபையிலும் பொற் சபையிலும் நடம்புரிகின்ற பெரிய பெருமானே! தத்துவ ஞானிகளும் தத்துவங்களை வகுத்துக் காட்டும் தலைவர்களும், மற்றவர்களும் தனித்தனியாகத் தாமே இவள் கண்ணெதிரே வந்து நிற்கின்றார்கள்; இவளோ அவர்களை ஒரு சிறிதும் கண்ணெடுத்துப் பாரா தொழிகின்றாள்; இரு கண்களிலும் நீர் பெருக நின்று, என் உயிர்க்கு நாயகனே, மனமொத்து உயிரோடுயிராய்க் கலந்துகொண்டு என்னைத் தனக்கு உடைமையாகக் கொண்டருளிய பெருமானே, என்று உம்மையே நினைந்து ஓதியவண்ணம் இருக்கின்றாள்; இவள்பால் உமது திருவுள்ளம் யாதெனத் தெரிவித்தருள வேண்டுகின்றேன். எ.று.

தத்துவர் - தத்துவங்களையுணர்ந்த அறிஞர். தத்துவம் செய் தலைவர்; ஆன்ம தத்துவம் இவை, வித்தியா தத்துவங்கள் இவை, சிவ தத்துவங்கள் இவை, தாத்துவிகங்கள் இவை எனத் தத்து வகைகளின் உண்மை கண்டு தொகுத்தும் வகுத்தும் விரித்தும் காட்டும் சான்றோர்.

பிறர் என்றது தத்துவங்களை இயக்கும் தேவர்கள். தத்துவ ஞானத்தைப் பொருளாக மதியாமல், சிவஞான யோகச் சிவபோகத்திலே அழுந்திய ஆர்வமுடையவளாக இருக்கின்றாள்; அதனால் நும்மையே நினைந்து, நும்முடைய நலங்களையே ஓதிய வண்ணம் இருக்கின்றாள் எனத் தோழி கூறுகின்றாள். பொற்சபை - பொன் வேய்ந்த சபை. (5)

4205. அன்னையைக்கண் டம்மாநீ அம்பலத்தென் கணவர்
அடியவளேல் மிகவருக அல்லளெனில் இங்கே
என்னைஉனக் கிருக்கின்ற தேகுகஎன் றுரைப்பாள்
இச்சைஎலாம் உம்மிடத்தே இசைந்தனள்இங் கிவளை
முன்னையள்என் றெண்ணுதீர் தாழ்த்திருப்பீர் ஆனால்
முடுகிஉயிர் விடுத்திடுவாள் கடுகிவரல் உளதேல்
மன்னவரே உமதுதிரு வாய்மலர வேண்டும்
வயங்குதிரு மணிமன்றில் வாழ்பெரிய துரையே.

உரை: விளங்குகின்ற அம்பலத்தில் எழுந்தருளும் பெரிய தலைவரே! எங்கட்கு மன்னிய அருளரசே! பெற்ற தாய் தன்பால் வரக் கண்ட தலைவி, அம்மா, நீ அம்பலவாணராகிய என் கணவர்க்கு அன்பு மிக்க அடியவளாயின் என்பால் நெருங்கி வருக; அல்லாதவளாயின், இவ்விடத்து உனக்குத் தொடர்பு ஏதும் இல்லையாம், செல்க; என மறுக்கின்றாள்; இவளுடைய விருப்பமெல்லாம் நும் பேரிலேயே ஒன்றி யிருத்தலால், இவளை முன்போல் ஒரு பேதைப் பெண்ணென்று கருதி இவள்பால் போதருதற்குக் காலம் தாமதித்தல் கூடாது; தாமதித்தால் இவள் தனது உயிரை வருத்தி இறந்துபடுவாள்; விரைந்து வருவது திருவுள்ளமாயின், அதனை எனக்குத் தெரிவித்தருள வேண்டுகிறேன். எ.று.

நீ என்பால் வர வேண்டா எனத் தாயை விலக்கும் கருத்தின னாகலின், "இங்கே என்னை உனக்கு இருக்கின்றது ஏகுக" என்று நயமாக மொழிகின்றாள். இவ்வாறு மறுத்தற்குக் காரணம் தன் விழைவு முற்றும் நின்பால் ஒன்றியிருப்பதே என்பாள், "இச்சையெலாம் உம்மிடத்தே யிசைந்தனள்" எனக் கூறலுறும் தோழி, தலைவியின் முதுக்குறைவைப் புலப்படுத்தற்கு, "இவளை முன்னையள் என்று எண்ணுதீர்" என இசைக்கின்றாள். முன்னையள் - விளையாடும் பருவத்துச் சிறு பெண்; பேதைப் பெண் எனவும் அமையும், காமஞ் சாலா இளம் பெண்ணைப் பேதை என்பர். விரைந்து வருவது கருத்தாயின் எனக்குத் தெரிவித்தருள்க; இல்லையேல் ஒன்றும் வேண்டா என்ற குறிப்பினால், "கடுகி வரல் உளதேல்" என்று கூறுகின்றாள். (6)

4206. கரவறியா அம்பலத்தென் கணவரைக்கண் டலது
கண்துயிலேன் உண்டிகொளேன் களித்தமரேன் என்பாள்
இரவறியாள் பகலறியாள் எதிர்வருகின் றவரை
இன்னவர்என் றறியாள்இங் கின்னல்உழக் கின்றாள்

வரவெதிர்பார்த் துழல்கின்றாள் இவள்அளவில் உமது
மனக்கருத்தின் வண்ணம்எது வாய்மலர வேண்டும்
விரவும்ஒரு கணமும்இனித் தாழ்க்கில்உயிர் தரியாள்
மெய்ப்பொதுவில் நடம்புரியும் மிகப்பெரிய துரையே.

உரை : மெய்ம்மையாகிய அம்பலத்தில் நடம்புரிகின்ற மிக்க பெருந்தலைவரே! மனத்தில் வஞ்சமில்லாத அம்பலவாணராகிய என் கணவரைக் கண்களாற் கண்டாலன்றி யான் கண்ணுறங்க மாட்டேன்; உணவும் உண்ணேன்; மகிழ்ச்சி கொள்ளேன் எனவுரைக்கும் என் தலைவி, இரவென்றும் பகலென்றும் நோக்குவதிலள்; எதிரே வருபவர்களையும் இன்னாரென்று அறிவதில்லை; துன்பமேயுற்று வருந்துகின்றாள்; உமது வருகையையே எதிர்பார்த்து இரங்குகின்றாள்; இத்தகைய தலைவிபால் உம்முடைய எண்ணம் யாதோ? அதனை எனக்குத் தெரிவித்தருளுக; இனி ஒரு கணப்பொழுது தாமதிக்கிலும் இவள் உயிர் தாங்கமாட்டாள்; என் செய்வேன். எ.று.

நெஞ்சின்கண் மறைந்து கிடத்தலால் வஞ்சகம், கரவு எனப்படுகிறது. வருந்தியவண்ணம் இருத்தல் கண்டு தன்னைத்தேற்ற வருபவர்க்குத் தலைவி "களித்து அமரேன்" என விடை பகர்கின்றாள். இன்னல் - துன்பம். உழக்கின்றாள் - உழல்கின்றாள் என்பன துன்பம் உறுகின்றாள் என்னும் கருத்தில் வழங்குகின்றன. நுமது அன்பு வருகையொன்றையே உயிராக கொண்டுள்ளாள் என்பாளாய், "விரவும் ஒரு கணமும் இனித் தாழ்க்கில் உயிர் தரியாள்" எனத் தோழி தலைவியது ஆற்றாமையை விளம்புகின்றாள். நீரலைபோலப் பொழுது கணந்தோறுங் கழிதலால், "விரவும் ஒருகணமும்" என விதந்து கூறுகின்றாள். (7)

4207. ஊராசை உடலாசை உயிர்பொருளின் ஆசை
உற்றவர்பெற் றவராசை ஒன்றுமிலாள் உமது
பேராசைப் பேய்பிடித்தாள் கள்ளுண்டு பிதற்றும்
பிச்சீஎனப் பிதற்றுகின்றாள் பிறர்பெயர்கேட் டிடினோ
நாராசஞ் செவிபுகுந்தால் என்னநலி கின்றாள்
நாடறிந்த திதுஎல்லாம் நங்கைஇவள் அளவில்
நீர்ஆசைப் பட்டதுண்டேல் வாய்மலர வேண்டும்
நித்தியமா மணிமன்றில் நிகழ்பெரிய துரையே.

உரை : நிலைபேறுடைய அழகிய அம்பலத்தின்கண் எழுந்தருளும் பெரிய தலைவரே! ஊர் மேலாசை, உடம்பின் மேல் ஆசை, உயிர்மேல் ஆசை, பொருளாசை, உற்றவர் பெற்றவர்கள்பால் உள்ள ஆசை ஆகிய ஆசையொன்றும் என் தலைவிக்கில்லை; உம்பால் உண்டாகிய ஆசையொன்றே கொண்டு பேய்க் கோட் பட்டவள் போல வருந்துகின்றாள்; கள்ளருந்திப் பிதற்றுபவர்களைப்போலப் பித்துக் கொண்டவளாய் இடையறவின்றிப் பேசுகின்றாள்; உமது திருப்பெயரையன்றி வேற்றவர் பெயர் செவியில் விழின், நாராசம் பாய்ந்தது போல் துடித்து வருந்துகிறாள்; இவை யாவும் நாடறிந்தனவாகும்; இவள்பால் உமக்கு அன்புளதாயின் அதனை எனக்கு உரைத்தருள வேண்டுகிறேன். எ.று.

நிலைபேறுடைய தென்பது பற்றி அம்பலத்தை, "நித்திய மாமணி மன்று" என்று சிறப்பிக்கின்றாள். ஊராசை - பிறந்த ஊர் மேல் உளதாகும் ஆசை. உற்றவர் - நண்பர்; பெற்றவர் - தாய் தந்தையர், துன்பம் தருவதாகலின், பேராசையைப் பேய் என்றும் குறிக்கின்றாள். சொல்லியதையே பன்முறையும் சொல்லுவது விளங்க, "கள்ளுண்டு பிதற்றும் பிச்சியெனப் பிதற்றுகின்றாள்" எனக் கூறுகின்றாள். பித்து, பிச்சு என வழங்குதலுண்மையின், பித்துடையவளைப் "பிச்சி" எனக் குறிக்கின்றாள்; பித்தி - பிச்சிப் பூ என வழங்குவது காண்க. நாராசம் - இரும்புக் கம்பி, நலிதல் - வருந்துதல். உம்பால்கொண்ட ஆசை மிகுதியால் வேற்றவர் பெயர் கேட்கவும் வருந்துகின்றாள் என்பாள், "பிறர் பெயர் கேட்டிலோ நாராசம் செவி புகுந்தா லென்ன நலிகின்றாள்" எனவும், இது மறைபொருளன்று, பலரும் அறிந்த தென்றற்கு, "நாடறிந்தது இது" எனவும் இயம்புகின்றாள். (8)

4208. என்னுயிரில் கலந்துகொண்டார் வரில்அவர்தாம் இருக்க
இடம்புனைக என்கின்றாள் இச்சைமய மாகித்
தன்னுயிர்தன் உடல்மறந்தாள் இருந்தறியாள் படுத்தும்
தரித்தறியாள் எழுந்தெழுந்து தனித்தொருசார் திரிவாள்
அன்னமுண அழைத்தாலும் கேட்பதிலாள் உலகில்
அணங்கனையார் அதிசயிக்கும் குணங்கள்பல பெற்றாள்
மின்னிவளை விழைவதுண்டேல் வாய்மலர வேண்டும்
மெய்ப்பொதுவில் நடம்புரியும் மிகப்பெரிய துரையே.

உரை : சத்திய ஞானசபையில் நடம் புரிகின்ற, மிகவும் பெரியவராகிய தலைவர், என்னுடைய உயிரோடுயிராய்க் கலந்து கொண்டார்; ஆயினும் அவர் என்பால் வருவாராயின், அவர் இருந்தருளுதற்கு ஓர் இடங்கண்டு தூய்மை செய்க என எங்களைப் பணிக்கின்றாள்; சிவபோக வேட்கையே தனது மயமாகித் தன்னுடைய உயிரையும் உடம்பையும் மறந்தொழிந்தாள்; ஓரிடத்தில் இருப்பதோ, படுத்திருப்பதோ செய்யாமல் எழுந்தெழுந்து ஒருபால் தனியாகச்சென்று உலாவுகின்றாள்; சோறுண்ண அழைத்தாலும் செவியிற் கேளாமல், உலகில் பெண்களெல்லாரும் கண்டு அதிசயிக்கும்படியான குணங்கள் பலவற்றைக் கொண்டுள்ளாள்; மின்னற்கொடி போன்ற இடையையுடைய என் தலைவியாகிய இவளை விரும்புகின்றீராயின், அதனை வாய் திறந்து சொல்லிவிட வேண்டுகிறேன். எ.று.

சிவபெருமானாகிய தலைவர்க்கும் தனக்குமுள்ள தொடர்பை யுணர்த்தற்கு, "என்னுயிரிற் கலந்துகொண்டார்" என்று கூறுகின்றாள். புனைதல் - தூய்மை செய்து கோலமிட்டு அழகு செய்தல். இச்சை - சிவபோக வேட்கை. உட்கரணங்களாகிய மனம் முதலியன யாவும் சிவானுபோக வேட்கை மயமாய் விட்டமையின் தன்னுடைய உயிரையும் அவ்வுயிர் நின்ற வுடம்பையும் நினையாமை தோன்ற, "தன்னுயிர் தன்னுடல் மறந்தாள்" என்று தோழி எடுத்தோதுகின்றாள். உள்ளத்தே இச்சை யுருவாகியபோது செயலறவு படாது உடம்பை சும்மாவிருக்க விடாது இயக்கிய வண்ணம் இருக்குமாதலின், "இருந்தறியாள் படுத்தும்

தரித்தறியாள் எழுந் தெழுந்து தனித்தொருசார் திரிவாள்" எனத் தோழி மேலும் கூறுகின்றாள். உலகியற் காதல் வயப்பட்ட மகளிரிடத்து இன்ன மெய்ப்பாடுகள் உளவாவதைத் தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலிற் கூறுவது காணலாம். பசியற நிற்றல் அம்மெய்ப்பாட்டில் ஒன்றுதலால், "அன்னமுண அழைத்தாலும் கேட்பதிலாள்" என்று இயம்புகின்றாள். அணங்கனையார் - மகளிர். அணங்கு - தெய்வமகள். அவள் போல்வதால் மகளிரை, "அணங்கனையார்" என வழங்குகின்றனர். தம்பால் இல்லாத குணஞ் செயல்களைத் தலைவிபால் உலகத்து மகளிர் காண்பதால் அதிசயிக்கின்றனர் என்பது கருத்து. தலைவியின் பெற்றிகளைக் கூறினேன்; நினது கருத்தை யுரைத்தருள்க என்பாளாய், "விழைவ துண்டேல் வாய் மலர வேண்டும்" எனத் தோழி விண்ணப்பிக்கின்றாள். (9)

4209. அம்பலத்தே நடம்புரியும் என்துதனித் தலைவர்
அன்புடன்என் உளங்கலந்தே அருட்பெருஞ்சோ தியினால்
தம்பலத்தே பெரும்போகந் தந்திடுவார் இதுதான்
சத்தியஞ்சத் தியமதனால் சார்ந்தவர்தாம் இருக்க
எம்பலத்தே மலரணையைப் புனைகளனப் பலகால்
இயம்புகின்றாள் இவள்அளவில் இசைந்துநும தருளாம்
செம்பலத்தே உறுதருணம் வாய்மலர வேண்டும்
சிற்சபைபொற் சபைஓங்கித் திகழ்பெரிய துரையே.

**உரை**: சிற்சபையிலும் பொற்சபையிலும் ஓங்கித் திகழ்கின்ற பெருமைசான்ற கூத்தப் பெருமானே! அம்பலத்தின்கண் ஆடல் புரிகின்றவரும், என்னுடைய தனிப் பெருந் தலைவருமாகிய சிவபெருமான் மிக்க அன்புடன் போந்து என் மனத்துட் கலந்துகொண்டு தம்முடைய அருட்பெருஞ் சோதியாகிய சிவஞானத்தால், தம்பால் உளதாகிய பெரிய சிவபோகத்தை எனக்குத் தாராதொழியார்; இஃது உண்மை; முக்காலும் உண்மை; அதனால் அவர் என்பாற் போந்து என்னைக் கூடி இனிதிருத்தற் பொருட்டு எம்முடைய மனையின்கண் பூக்கள் நிறைத்த படுக்கையை அழகு செய்க என்று பன்முறையும் சொல்லுகின்றாள்; இவ்வளவில் நிகழ்ந்தது கூறுகின்றோம்; இனி நுமது திருவருளாகிய செவ்விய பயன் விளைதற்கமைந்த காலம் இதுவென உரைத்தருள வேண்டுகிறேன். எ.று.

அருட் பெருஞ் சோதி - திருவருட் சிவஞானம். அஃது ஒளி வடிவினதாகலின், இவ்வாறு ஓதப்படுகிறது. தம்பலம் - தம்பால் உளதாதலால் விளையும் பயன். சிவபோகம் பெறப்படுமோ என யாரும் அயிராமைப் பொருட்டு, "இதுதான் சத்தியம் சத்தியம்" என அடுக்கி யுரைத்துத் தலைவி வற்புறுத்துகின்றாள். அவர்தாம் என்னைச் சார்ந்திருக்க என இயைக்க. எம்பலம் - எம்பால். மனத்துள் இருக்கும் உறுதிப்பாட்டால் "பலகால் இயம்புகின்றாள்" என அறிக. இசைத்தும் - இயம்புகின்றோம். செம்பலம் - செவ்விய திருவருள் நலம். உறுதருணம் - போகம் தர எழுந்தருளும் காலம். தலைவன் எழுந்தருளும் காலத்தை, முன்னுணர்ந்து கொள்ளத் தோழி செய்யும் முயற்சி என அறிக. (10)

திருச்சிற்றம்பலம்

## 60. தலைவி வருந்தல்

அஃதாவது, தான் நினைந்தவாறு தன்பால் தலைவன் போந்து இன்னருள் செய்யாமையை எண்ணிக் காரணம் யாதாகலாம் எனப் பலவாறு நினைந்து வருந்துவதாகும்.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4210. பருவமிலாக் குறையாலோ பகுதிவகை யாலோ
பழக்கமிலா மையினாலோ படிற்றுவினை யாலோ
இருவகைமா யையினாலோ ஆணவத்தி னாலோ
என்னாலோ பிறராலோ எதனாலோ அறியேன்
சருவலொழிந் தென்மனமாம் பாங்கிபகை யானாள்
தனித்தபரை எனும்வளர்த்த தாயும்முகம் பாராள்
திருவமடப் பெண்களெலாம் வலதுகொழிக் கின்றார்
நிபுணர்எங்கள் நடராயர் நினைவைஅறிந் திலனே.

உரை : பருவம் நிரம்பாத குறைபாட்டினாலோ, ஊழ்வகையினாலோ, பழக்கமில்லாமையினாலோ, தீவினையினாலோ, இருவகையான மாயையினாலோ, ஆணவ மலத்தினாலோ, என்னாலோ, பிறராலோ, எதனாலோ இன்னதனால் என்றறியேன்; நேசப் பான்மையின்றி என் மனமாகிய தோழி எனக்குப் பகையாகி விட்டாள்; தனிச் சிறப்புடைய பரையாகி சிவசத்தி என்னும் செவிலித் தாயும் என் முகத்தைப் பார்க்கின்றாளில்லை; நிலையுடைய இளம் பெண்கள் எல்லாரும் என்னைப் பார்த்து வல்லாங்கு பேசுகிறார்கள்; எல்லாம் அறிந்தவராகிய எங்கள் கூத்தப் பெருமானுடைய திருவுள்ளத்தை நான் அறிந்தேனில்லை; என்ன செய்வேன். எ.று.

சிவயோக போகத்துக்குரிய ஞான மில்லாமை தோன்ற, "பருவமிலாக் குறையோ" எனப் பகருகின்றாள். செய்வினைக்கேற்ற பயன்களை விளைமுதலுக்குப் பகுத்தளிக்கும் சிறப்புடைமை பற்றி ஊழ்வினையை, "பகுதி" என்று கூறுகின்றாள். படிற்று வினை - துன்பம் தரும் தீவினை. இருவகை மாயை - சுத்தம் அசுத்தம் என இருவகைப்படும் மாயை. இம்மாயைகளும் ஆன்மாவை மயக்குவனவாதலால், "இருவகை மாயையினாலோ" என்றும், ஆணவ மலம் உயிரறிவை மறைப்பதாதலால், "ஆணவத்தினாலோ" என்றும் விளம்புகின்றாள். சருவதி - நேசப் பான்மை. பாங்கி - தோழி. பரை - பரனுடைய அருட் சக்தி அருட் சத்தியின் துணையால் உயிரறிவு வளர்ச்சி பெறுதல் பற்றி அதனை, பரை யெனும் வளர்த்த தாய்" என்று கூறுகிறாள். கேவலத்தில் மலவிருளில் புதைந்து கிடக்கும் ஆன்மாவை மாயையோடு கூட்டி உலகில் வாழச் செய்தலால் பரையாகிய சிவசத்தியை, வளர்த்த தாய்" என்று உரைக்கின்றாள். திருவம் - நிலைபேறு.

இளமையால் அறியாமை நிறைந்த பெண்களை, "நிருவ மடப் பெண்கள்" என்று குறிக்கின்றாள். வாயில் வந்தபடி நீக்க மாட்டாத அலரைக் கூறுவதால், "வலது கொழிக்கின்றார்" என்று சொல்லுகிறாள். வலது - வல்லாங்கு உரைக்கும் சொல். இது வல்லுரை எனவும் கூறப் படும். நிபுணர் - எல்லாம் நுணுகி அறிந்தவர். எனக்கருளும் வகையில் கூத்தப் பெருமான் யாது நினைக்கின்றாரோ அதனை என்னால் அறிய முடியவில்லை என்பாளாய், "நடராயர் நினைவை அறிந்திலனே" என இயம்புகின்றாள். (1)

4211. அம்பலத்தே திருநடஞ்செய் அடிமலர்என் முடிமேல்
அணிந்திடமுன் சிலசொன்னேன் அதனாலோ அன்றி
எம்பலத்தே எம்மிறைவன் என்னைமணம் புரிவான்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
வம்பிசைத்தேன் எனஎனது பாங்கிபகை யானாள்
வளர்த்தெடுத்த தனித்தாயும் மலர்ந்துமுகம் பாராள்
நிம்பமரக் கனியானார் மற்றையர்கள் எல்லாம்
நிபுணர்எங்கள் நடராயர் நினைவைஅறிந் திலனே.

உரை : அம்பலத்தில் திருக் கூத்தாடுகின்ற திருவடியாகிய தாமரையை என் தலைமேல் அணியுமாறு முன்பு சில சொற்களால் வேண்டினேன், அதனாலோ; என்னைச் சூழவுள்ள மகளிரிடத்தே எனக்கு இறைவனாகிய சிவபெருமான் என்னை மணந்துகொள்வான் என்று கூறினேன். அதனாலோ, வேறு எதனாலோ எனக்குத் தெரியவில்லை; வம்பு மொழிந்தேன் என்று என்னுடைய தோழியும், வேறுபாட்டால் என்னை வளர்த்தெடுத்த செவிலித் தாயும் என்னை அன்புடன் பார்க்க மறுக்கின்றனர்; என்னுடைய ஆய மகளிர் எல்லாரும் வேப்பம் பழமாயினர்; எல்லாம் வல்லவராகிய எங்கள் நடராசப் பெருமான் என்ன நினைக்கின்றாரோ அறியிலேன். எ.று.

அம்பலம் - தில்லையம்பலம். அம்பலவாணருடைய திருவுள்ளக் குறிப்பறியாமல் என் தலைமேல் அவருடைய திருவடியை வைத்தருளு மாறு வேண்டிச் சில சொற்களால் முறையிட்டேன் என்பாளாய், "அடி மலர் என் முடிமேல் அணிந்திட முன் சில சொன்னேன்" என்றும், ஏனைய மகளிரிடத்தே என்னுடைய இறைவனாகிய அவர் என்னை மணம் புரிந்து கொள்வார் என்று பல சொன்னேன் என்பாள், "எம்பலத்தே எம்மிறைவன் என்னை மணம் புரிவன் என்று சொன்னேன்" என்றும் கூறுகின்றாள். எவ்வளம் என்பது எம்பலம் என வந்தது. வம்பு - வீண் பூசல் விளைவிக்கும் சொல். முகம் மலர்ந்து பார்த்தல் - அன்பு கனிய நோக்குதல். மற்றையர்கள் - தன்னோடு விளையாடும் ஆயமகளிர். நிம்ப மரம் - வேப்ப மரம். காயானார் என்று உரைக்கின்றாள். (2)

4212. கண்ணுறங்கேன் உறங்கினும்என் கணவரொடு கலக்கும்
கனவன்றி இலைஎன்றேன் அதனாலோ அன்றி
எண்ணுறங்கா நிலையில்அவர் இருக்குமிடம் புகுவேன்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

பெண்ணடங்காள் எனத்தோழி பேசிமுகங் கடுத்தாள்
பெருந்தயவால் வளர்த்தவளும் வருந்தயலாள் ஆனுள்
மண்ணடங்காப் பழிகூறி மற்றவர்கள் இருந்தார்
வள்ளல்நட ராயர்திரு உள்ளம்அறிந் திலனே.

உரை : இரவில் உறங்காத யான் உறங்கின போதெல்லாம் என் கணவராகிய அவரோடு கலந்து மகிழும் கனவன்றி வேறில்லை என்று தோழியரிடத்துச் சொன்னேன் அதனாலோ, எண்ணம் ஒடுங்காத நிலவுப் பொழுதில் அவர் இருக்குமிடத்தை அடைவேன் என்று சொன்னேன் அதனாலோ, வேறு எதனாலோ காரணம் அறிகிலேன்; அவர் என்பால் வந்திலர்; என் தோழியும் பெண்ணாகிய இவள் அடங்குவதில்லை என்று சொல்லி முகங் கடுகடுத்தாள்; பேரன்புடன் என்னை வளர்த்த தாயும் மனம் வருந்தி அயலவள் போல் ஒழுகுகின்றாள்; மற்ற ஆயமகளிர் அனைவரும் ஊர் எல்லை கடந்து ஏனைய ஊர்களிளெல்லாம் பறக்கும் படியாகப் பழி கூறுகின்றார்கள்; வள்ளலாகிய நடராசப் பெருமானுடைய திருக்குறிப்பு யாதோ அறிகிலேன். எ.று.

கண்ணுறங்கல் - கண் மூடித் தூங்குதல். இழித்தக்க கனவு காணின் அதனைப் பிறர்க்கு உரைக்கலாகாது என்பது அறமாதலின் தான் உரைத்தமை பற்றி என்னை வெறுக்கின்றார் போலும் என அஞ்சுகின்றேன் என்பாளாய், "கண்ணுறங்கேன் உறங்கினும் என் கணவரொடு கலக்கும் கனவன்றி இலை என்றேன் அதனாலோ" எனக் கவல்கின்றாள். எண்ணுறங்கா நிலவு - எண்ணங்கள் ஒடுங்காத நிலவுக் காலம். நிலவு விளங்கும் இரவுப் பொழுதில் காதலர் உள்ளம் காதல் உணர்வால் ஒடுங்காமல் விரிந்து மிகுவதாகலின், "எண்ணுறங்கா நிலவு" என எடுத்துரைக்கின்றாள். நிலவு திகழும் இரவுக் காலத்தில் காதலர் உள்ள இடமறிந்து தனித்துச் செல்வது அடங்கா ஒழுக்கமாதலின் அக்குற்றம் காரணமாக காதலர் என்பால் வந்திலர் எனக் கட்டுரைக்கின்றாளாதலால், "எண்ணுறங்கா நிலவில் அவர் இருக்குமிடம் புகுவேன் என்றுரைத்தேன்" எனத் தனது குற்றத்தை வெளிப்படுத்துகின்றாள். தனது அடங்கா ஒழுக்கம் கண்டு தோழி சினந்தமை புலப்படுத்தற்கு, "பெண்ணடங்காள் எனத் தோழி பேசி முகங் கடுத்தாள்" எனவும், எனது செயலும் சொல்லும் தனக்கு வருத்தம் விளைவித்தமையின் அன்புடன் பேணி வளர்த்த செவிலியும் மனம் வெறுத்து எனக்கு அயலவர் போல மாறியுள்ளாள் என்பாளாய், "பெருந்தயவால் வளர்த்தவளும் வருந்து அயலாளானாள்" எனவும் கூறுகின்றாள். வருந்தயலாள் என்பதில், வருந்து என்னும் வினை முதனிலை எச்சப் பொருளில் வந்தது. அயல் மகளிர் எடுத்தோதும் அலர் ஊர் முழுதும் பரவி எல்லை கடந்து விட்டது என்ற ஏக்கத்தால், "மண்ணடங்காப் பழி கூறி மற்றவர்கள் இருந்தார்" என்று சொல்லி வருந்துகிறாள். (3)

4213. எல்லாஞ்செய் வல்லதுரை என்கணவர் என்றல்
எனக்கும்ஒன்று நினைக்கும்ஒன்று என்றஅத னாலோ
இல்லாமை எனக்கில்லை எல்லார்க்குந் தருவேன்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்

கல்லார்போல் என்னைமுகம் கடுத்துநின்றாள் பாங்கி
களித்தெடுத்து வளர்த்தவளும் கலந்தனள் அங்குடனே
செல்லாமை சிலபுகன்று சிரிக்கின்றார் மடவார்
சித்தர்நட ராயர்திருச் சித்தமறிந் திலனே.

உரை : என் கணவர் எல்லாவற்றையும் இனிது செய்ய வல்லவர் என்று சொல்வேனாயின், அஃது எனக்கு ஒன்றாகவும், நினக்கு ஒன்றாகவும் இருத்தல் இல்லை; எல்லார்க்கும் பொதுமொழி என்று கூறினேன், அதனாலோ; ஒன்றும் இல்லாமை என்பால் இல்லை; எல்லார்க்கும் வேண்டுவன தருவேன் எனவுரைத்தேன்; இதனாலோ வேறே எதனாலோ அவர் வந்திலர்; என் தோழியும் கல்வி கல்லாதவர் போல என்னைத் தன் முகங்கடுத்து நோக்குகின்றாள்; என்னை மகிழ்ந்து ஏந்தியெடுத்து வளர்த்த செவிலியும் தோழியோடொத்த கருத்தினளா கின்றாள்; ஏனை ஆய மகளிர் ஒவ்வாத சொற்கள் சிலவற்றைச் சொல்லி இகழ்கின்றனர்; என் சித்தத்தில் இருப்பவராகிய, நடராசப் பெருமானுடைய திருவுள்ளத்தை யான் அறிகின்றிலேன். எ.று.

வரம்பிலாற்றல் உடையவர் எனச் சிவாகமங்கள் உரைப்பது பற்றிச் சிவபெருமானை, "எல்லாம் செய் வல்ல துரை" என்றும், "என் கணவர்" என்றும் கூறினால், அஃது எல்லார்க்கும் ஒத்த பொருளுரை யாவதன்றி, என் கணவர்க்கே உரியதாகாது என்பது அன்புக் குறைவு என்ற குற்றத்தை உரைப்பவர்பால் உறுவித்தலால், "எனக்கும் ஒன்று நினக்கும் ஒன்று என்ற அதனாலோ" எனத் தலைவி எண்ணுகின்றாள். இல்லாமை - வறுமை. "எல்லார்க்கும் தருவேன்" என்பது, செல்வச் செருக்குடைமையாகிய குற்றமுண்மை தோற்று வித்தலால், "எல்லார்க்கும் தருவேன் என்று சொன்னேன், இதனாலோ எதனாலோ அறியேன்" எனச் சொல்லித் தலைவி புலம்புகின்றாள். கல்லாதவர் மனத்தின்கண் தெளிவில்லாமையால் அவர் முகத்தில் ஒளியும் பொலிவும் இல்லாமை பற்றி, "கல்லார் போல் என்னை முகம் கடுத்து நின்றாள் பாங்கி" என்றும், தோழி போலவே செவிலியும் வேறுபடுவது தெரிவித்தற்கு, "களித்தெடுத்து வளர்த்தவளும் அங்குடனே கலந்தனள்" என்றும் மொழிகின்றாள். செல்லாமை - தகுதிக்கும் நிலைமைக்கும் ஒவ்வாமை. சிரிக்கின்றார் - எள்ளியிகழ் கின்றார். மடவார் - இளமகளிர்; இவர்கள் ஆயமகளிர் என அறிக. சித்தர் - சித்தத்தில் வீற்றிருக்கும் சிவபெருமான். சித்தம் - திருவுள்ளக் குறிப்பு. (4)

4214. இச்சைஎலாம் வல்லதுரை என்னைமணம் புரிந்தார்
ஏடிஎனக் கிணைஎவர்கள் என்றஅத னாலோ
எச்சமயத் தேவரையும் இனிமதிக்க மாட்டேன்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
நச்சுமரக் கனிபோலே பாங்கிமனங் கசந்தாள்
நயந்தெடுத்து வளர்த்தவளும் கயந்தெடுப்புப் புகன்றாள்
அச்சமிலாள் இவள்என்றே அலர்உரைத்தார் மடவார்
அண்ணல்நட ராயர்திரு எண்ணம்அறிந் திலனே.

உரை : தாம் விரும்பியது அனைத்தையும் குறைவற இயற்ற வல்லவராகிய சிவபெருமான் என்னை, மணந்து கொண்டதால் ஏடி, தோழி, எனக்கு ஒப்பாவார் யாவர் என்று பெருமிதம் தோன்றப் பேசினேன்; அதனாலோ; அன்றி, வேறு எவ்வகைச் சமயத்தவர் சொல்லும் எத்தகைய தேவர்களையும் இனி யான் பொருளாக மதிக்க மாட்டேன் என்று புகன்றேன்; இதனாலோ வேறே எதனாலோ தலைவர் என்பால் வந்திலர் என எண்ணுகின்ற தலைவி, தன் தோழி தன்னை எட்டி மரத்தின் பழம் போலக் கருதி மனம் வெறுக்கின்றாள்; என்னை விரும்பியெடுத்து வளர்த்த செவிலியும் கசந்த சொற்களைக் கூறுகின்றாள்; ஏனை ஆயமகளிரும் அச்சமாகிய பெண்மைப் பண்பு இல்லாதவள் என்று என்னை அலர் உரைக்கின்றார்கள்; பெருமை கொண்ட நடராசப்பெருமானுடைய திருவுள்ளம் யாதோ அறிகிலேன் என்று சொல்லி வருந்துகிறாள். எ.று.

இச்சை - விருப்பம். நினைத்தது நினைத்தாங்கு முடிக்கும் பேராற்றல் சிவன்பால் உண்மை கூறுதற்கு, "இச்சை யெல்லாம் வல்லதுரை" எனவும், தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனிப்பெரும் தலைவராதலின், அவரை மணந்துகொண்ட தனக்கு நிகராவார் ஒருவருமில்லை என்பது விளங்க, "ஏடி எனக்கு இணையெவர்கள் என்றேன்" எனவும், இது தன்னை வியந்து தருக்குதல் என்ற குற்றமாதல் பற்றி என்பால் வந்திலர் போலும் என்பாளாய்த் தலைவி வருந்துகின்றாள். "வியவற்க எஞ்ஞான்றும் தன்னை" (குறள்) எனத் திருவள்ளுவர் உரைப்பதறிக. எம்மதத்தையும் சம்மதமாகக் கருதுதல் சமரச சன்மார்க்க நெறியாக, அதற்கு மாறுபட்டு, "எச்சமயத் தேவரையும் இனி மதிக்க மாட்டேன் என்று சொன்னேன்" எனத் தலைவி கவல்கின்றாள். நச்சுமரம் - எட்டிமரம். கனியாகியவிடத்தும் கசப்புத் தன்மை மாறுவதில்லையாதலால், "நச்சுமரக் கனி போல" என நவில்கின்றாள். நயத்தல் - விரும்புதல். வளர்த்தவள் - செவிலி. குற்றத்தை மறைக்காமல் எடுத்தோதுவது பற்றி, "கயந்தெடுத்துப் புகன்றாள்" என்று இயம்புகின்றாள் தலைவி. அண்ணல் - பெருமை. (5)

4215. வஞ்சமிலாத் தலைவருக்கே மாலையிட்டேன் எல்லா
வாழ்வும்என்றன் வாழ்வென்றேன் அதனாலோ அன்றி
எஞ்சலுறேன் மற்றவர்போல் இறந்துபிறந் துழலேன்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
அஞ்சுமுகங் காட்டிநின்றாள் பாங்கிஎனை வளர்த்த
அன்னையும்அப் படியாகி என்னைமுகம் பாராள்
நெஞ்சுரத்த பெண்களெலாம் நீட்டிநகைக் கின்றார்
நிருத்தர்நட ராயர்திருக் கருத்தைஅறிந் திலனே.

உரை : எவரையும் வஞ்சிக்கும் தன்மையில்லாத தலைவராகிய சிவபிரானுக்கு, மாலையணிந்து மணந்து கொண்டேனாதலால், நல்வாழ்வனைத்தும் என் வாழ்வாம் என்றும், நிலைபேறு பெற்று யான் உலக மக்களைப் போல இறந்தும் பிறந்தும் வருந்தமாட்டேன் என்றும்

சொன்னேன்; அதனாலோ வேறு எதனாலோ, இன்னும் என்பால் வந்திலர்; அதனால் என் தோழி எனக்கு அச்சமுண்டாக என்னைப் பார்க்கின்றாள்; என்னை வளர்த்த தாயாகிய செவிலியும் தோழி போலவே என் முகத்தைப் பாராதொழிகின்றாள்; வலிய நெஞ்சு படைத்த அயற் பெண்டிர் பலரும் நெடிது பேசி என்னை எள்ளி நகையாடுகின்றார்கள்; கூத்தப்பிரானாகிய நடராசப் பெருமானது திருவுள்ளக் குறிப்பை யறியாமல் வருந்துகிறேன். எ.று.

வஞ்சனை, சூது முதலிய தீய பண்புகளேயில்லாத பெருமானாதலின் சிவபிரானை, "வஞ்சமிலாத் தலைவர்" எனவும், அவரை மணந்து கொண்டமை புலப்பட, "மாலையிட்டேன்" எனவும், அதனால் நல்வாழ்வனைத்தும் தனக்கு எய்தினமை விளங்க, "எல்லா வாழ்வும் என்றன் வாழ்வென்றே" எனவும் தலைவியுரைக்கின்றாள். இது தன் வாழ்வை நினைந்து தருக்குதலாகிய குற்றமாம். எஞ்சல் - நிலைபெறுதல். பிறப்பிறப்புக்களைத் துறந்தமை கூறலும் தருக்கின்பாற் படுதலின், "இதனாலோ எதனாலோ" எனத் தலைவி நினைந்து துயர்கின்றாள். அஞ்சு முகம் காட்டல் - அச்சுறுத்தல். வளர்த்த அன்னை - வளர்த்த தாயாகிய செவிலி. அப்படியாதல் - தோழியின் இயல்புடையளாதல். நெஞ்சுரத்த பெண்கள் - வன்னெஞ்சமுடைய அயற் பெண்டிர். நீட்டுதல் - நீளப் பேசுதல். நிருத்தர் - கூத்தாடும் பெருமான். (6)

**4216.** அன்னமுண அழைத்தனர்நான் ஆடும்மலர் அடித்தேன்
அருந்துகின்றேன் எனஉரைத்தேன் அதனாலோ அன்றி
என்னுயிர்நா யகனொடுநான் அணையும்இடம் எங்கே
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
துன்னுநெறிக் கொருதுணையாம் தோழிமனங் கசந்தாள்
துணிந்தெடுத்து வளர்த்தவளும் சோர்ந்தமுகம் ஆனாள்
மென்னல்ஒத்த பெண்கள்எலாம் கூடிநகைக் கின்றார்
நிபுணர்எங்கள் நடராயர் நினைவைஅறிந் திலனே.

உரை : மனையவர் உணவு கொள்ள என்னையழைத்தாராக, அசைகின்ற மலரையெடுத்து அவர்மீது எறிந்து உணவு பின்பு உண்கின்றேன் எனப் பொய் மொழிந்தேன்; அக் குற்றத்தாலோ; எனக்கு உயிரொத்த கணவரோடு கூடுதற்கேற்ற இடம் எங்கேயுளது என நாணமின்றி வினவினேன்; அதனாலோ வேறு எதனாலோ தலைவர் என்பால் வாராமைக்குக் காரணம் அறிகிலேன்; பொருந்திய செந்நெறிக்கண் யான் செல்லுதற்குரிய துணைபுரியும் தோழி என்னை வெறுக்கின்றாள்; என்னையெடுத்துத் தெளிவுற வளர்த்த செவிலியும் முகம் சோர்ந்து நீங்கினாள்; நேற்று என்னைக் கண்ட என்னையொத்த இளமகளிர் தம்மிற் கூடிக்கொண்டு என்னை எள்ளி நகைக்கின்றார்கள்; முற்றுணர்வுடையவராகிய கூத்தப்பெருமானது திருவுள்ளக் குறிப்பை அறிந்திலேன்; என் செய்வேன். எ.று.

உண்ணும் காலமறிந்து மனைமகளிர் அழைப்பைக் கண்ட யான் உடன் செல்லாமல் எதிரே, கொம்பிற் பூத்தாடிய மலரைக் கொய்து

அவர் மேல் எறிந்தேன் என்பாள், "அன்னமுண அழைத்தனர் நான் ஆடும் மலர் அடித்தேன்" என்றும், வற்புறுத்தினவர்க்கு நான் பின்பு உண்பேன், இப்போது பசியில்லை எனப் பொய் கூறினேன் என்பாளாய், "அருந்துகின்றேன் என வுரைத்தேன்" என்றும், தலைவியுரைக் கின்றாள். மலரெறிந்தது வன்செயலும், பின்பு அருந்துகின்றேன் என்றது பசியில்லையெனப் பொய் கூறலுமாய்க் குற்றம் படுதலை நினைந்து, "இதனாலோ எதனாலோ அறியேன்" என்று தலைவி அவலிக் கின்றாள். அவ்வப்போது அறிவும் நெறியும் தந்து சிறப்பிப்பவளாதலால், தோழியை, "துன்னு நெறிக்கொரு துணையாம் தோழி" எனக் கூறு கின்றாள். தாயாய்ப் பேணி அறிவு தெளிவிப்பவளாதலால், செவிலியை, "துணிந்தெடுத்து வளர்த்தவள்" எனச் சிறப்பிக்கின்றாள். துணிதல் - தெளிதல். தனது காதலொழுக்கத்தால் அறிவு தடுமாறும்போது தலைவிக்குச் செய்யத்தகுவது இதுவென நன்னெறி கண்டு தெளிவிப்பவ ளாதலால் செவிலியை இவ்வண்ணம் உரைக்கின்றாள் எனினும் பொருந்தும். நிபுணர் - முற்றறிவுடைய முனிவர். (7)

4217. பொதுநடஞ்செய் துரைமுகத்தே தளதளஎன் றொளிரும்
புன்னகைஎன் பொருள்என்றேன் அதனாலோ அன்றி
இதுவரையும் வரக்காணேன் தடைசெய்தார் எவரோ
எனப்புகன்றேன் இதனாலோ எதனாலோ அறியேன்
புதுமுகங்கொண் டெனதுதனித் தோழிமனந் திரிந்தாள்
புரிந்தெடுத்து வளர்த்தவளும் புதுமைசில புகன்றாள்
மதுவுகந்து களித்தவர்போல் பெண்கள்நொடிக் கின்றார்
வள்ளல்நட ராயர்திரு உள்ளமறிந் திலனே.

உரை : அம்பலத்தில் திருக்கூத்தாடுகின்ற சிவபெருமானுடைய திருமுகத்தின்கண் தாதளவென்று ஒளிசெய்யும் புன்சிரிப்பு ஒன்றே எனக்குப் பொருளாவது என அறுதியிட்டு உரைத்தேன்; அதனாலோ; அன்றி அவர் இப்பொழுது காறும் வரக் காணாமையால் அவரைத் தடை செய்தவர் எவரோ என்று வருந்தி மொழிந்தேன்; அதனாலோ வேறு எதனாலோ அவர் வாராமைக்குக் காரணம் யாதோ அறியிலேன்; எனது ஒப்பற்ற தோழியும் வேறு வகையான பார்வை கொண்டு மனம் வேறுபடுகின்றாள்; அன்புடன் என்னையெடுத்து வளர்த்த தாயாகிய செவிலியும் புதுப்புதுச் சொற்களைச் சொல்லுகின்றாள்; ஏனை அயல் மகளிரும் கள்ளுண்டு மயங்கினவர் போலச் சில சொற்களை உரைக் கின்றார்கள்; வள்ளலாகிய நடராசப் பெருமானுடைய திருவுள்ளக் குறிப்பையும் நான் அறியாமல் வருந்துகிறேன். எ.று.

பொது - தில்லையம்பலம். துரை - தலைவனாகிய நடராசப் பெருமான். முகத்தில் புன்னகை தவழும்பொழுது கூத்தப்பெருமா னுடைய பொன்னிறம் கொண்ட முகத்தின்கண் இன்பவொளி சிறப் பதால், "முகத்தே தளதள என்றொளிரும் புன்னகை" என்று புகழ் கின்றார். சிவனது வரவைத் தடுக்க வல்லவர் எவ்வுலகிலும் எவரும் இலராதலால் அவரது பெருமைக்குச் சிறுமையுண்டாகுமாறு, "தடை செய்தார் எவரோ எனப் புகன்றேன்" என வருந்துகின்றாள். யான்

உரைத்தது காரணமாக அவர் மனம் வேறுபட்டு வாராதிருக்கின்றாரோ என ஐயுற்று வருந்துகின்றமை புலப்பட, "இதனாலோ எதனாலோ அறியேன்" என இயம்புகின்றாள். மகிழ்ச்சியால் மலர்ந்து விளங்கும் முகம் வருத்தத்தால் சாம்பி இருந்தமையால் எனது தனித் தோழி புது முகம் கொண்டு "மனந் திரிந்தாள்" எனவும், இதுகாறும் அன்பு மொழிகளையே உரைத்துவந்த செவிலியும் வன்மை மொழிகள் சிலவற்றைப் பேசித் தனது மனவேறுபாட்டைத் தெரிவித்தமை தோன்ற, "புதுமை சில புகன்றாள்" எனவும் எடுத்துரைக்கின்றாள். தலைவியின் வேறுபாட்டைக் கண்ட அயல் மகளிர் முன்னும் பின்னும் வேறு வேறு அலர் மொழிகளைப் பேசுகின்றனர் என்பாளாய், "மது வுகந்து களித்தவர் போல் பெண்கள் நொடிக்கின்றார்" எனத் தலைவி மனம் மெலிந்து சொல்லுகின்றாள். உகத்தல் - ஈண்டு உண்ணுதல் மேற்று. நொடித்தல் - சொல்லுதல். (8)

4218. கண்கலந்த கள்வர்என்னைக் கைகலந்த தருணம்
கரணம்அறிந் திலன்என்றேன் அதனாலோ அன்றி
எண்கலந்த போகமெலாம் சிவபோகந் தனி ல
இருந்ததென்றேன் இதனாலோ எதனாலோ அறியேன்
விண்கலந்த மதிமுகந்தான் வேறுபட்டாள் பாங்கி
வியந்தெடுத்து வளர்த்தவளும் வேறுசில புகன்றாள்
பண்கலந்த மொழிமடவார் பழிகூற லானார்
பத்தர்புகழ் நடராயர் சித்தம்அறிந் திலனே.

உரை : கண்வழி நுழைந்து என் கருத்தைக் கவர்ந்துகொண்ட கள்வராகிய சிவபெருமான் என்னைக் கூடி கலந்த சமயத்தில், கலவிக்குரிய கரண வகைகளை யான் அறியேன் என்று சொன்னதனாலோ; அன்றி என் நெஞ்சால் நான் நினைத்த போக வகைகள் எல்லாம் நினது சிவபோகத்திலே ஒன்றி இருக்கின்றன என்று யான் இயம்பியதனாலோ வேறு எதனாலோ அப் பெருமான் என்பால் வாராமைக்குக் காரணம் அறிகிலேன்; இந்நிலையில் என்னை நோக்கிய தோழியும் வானத்தில் திகழும் முழுமதி போன்ற தன் முகம் ஒளி குன்றி வேறுபடுகின்றாள்; என்னைப் பாராட்டி வளர்த்த செவிலியும் வேறுபட்டுச் சில சொற்களை உரைக்கின்றாள்; இசை கலந்த சொற்களைப் பேசும் ஆயத்தவர்களான இளமகளிர் பலத்த சொற்களைக் கூறுவாராயினர்; என் செய்வேன்; அன்பர்கள் புகழ்கின்ற நடராசப் பெருமானுடைய திருவுள்ளம் யாதோ அறிகிலேன். எ.று.

கண்ணெதிரில் தோன்றித் தமது இனிய காட்சியைத் தந்து என் உள்ளத்தைச் சிவபெருமான் கவர்ந்து கொண்டார் என்பாளாய், அப்பெருமானை, "கண் கலந்த கள்வர்" எனக் குறித்துரைக்கின்றாள். கரணம் - போக நுகர்ச்சியில் கை நகத்தாலும் வாயின் பற்களாலும் செய்யப்படும் செயல்வகை. இவற்றை "நகக்குறி" எனவும், "பற்குறி" எனவும் போக நூலார் புகழ்ந்துரைப்பர். தனக்குக் கரண வகை தெரியாமைக்குக் காரணம் தன்னுடைய எண்ணமெல்லாம் சிவபோக நுகர்ச்சியில் ஒன்றியிருந்தனை என்பாளாய், "எண் கலந்த போக

மெல்லாம் சிவபோகந் தனிலே இருந்த தென்றேன்" எனத் தலைவி இயம்புகின்றாள். விண்ணில் ஒளிரும் முழுமதியை இளமகளிரின் முகத்துக்கு ஒப்புக் கூறுபவாதலால் அம்முகம் வேறுபட்டுச் சுழித்து நோக்கினமை விளங்க, "விண் கலந்த மதி முகந்தான் வேறுபட்டாள் பாங்கி" எனவும், தலைமகளின் சீர்களையும் சிறப்புக்களையும் எடுத்தோதிப் பாராட்டி மகிழ்விப்பது செவிலியின் சிறந்த செயலாதலின் அவளை, "வியந்தெடுத்து வளர்த்தவள்" எனவும், அன்பே மொழிந் தொழுகும் செவிலி தலைவியின் செயல் வேறுபாடு கண்டு மனத்தில் சினந்தமை தெரியுமாறு, "வேறு சில புகன்றாள்" எனவும் விளம்புகின்றாள். மடவார் - இளமகளிர். இனிய சொற்களைச் சொல்லும் இயல்பினர் என்பதற்கு, "பண் கலந்த மொழி மடவார்" எனப் பகருகின்றாள். பத்தர் - மெய்யன்பர்கள். சித்தம் - திருவுள்ளம். (9)

4219. மாடமிசை ஓங்குநிலா மண்டபத்தே மகிழ்ந்தேன்
வள்ளலொடு நானென்றேன் அதனாலோ அன்றி
ஈடறியாச் சுகம்புகல என்னாலே முடியா
தென்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
ஏடவிழ்பூங் குழற்கோதைத் தோழிமுகம் புலர்ந்தாள்
எனைஎடுத்து வளர்த்தவளும் இரக்கமிலாள் ஆனாள்
நாடறியப் பெண்களெலாங் கூடிநகைக் கின்றார்
நல்லநட ராயர்கருத் தெல்லைஅறிந் திலனே.

உரை: மாடத்தின் மேல் அமைந்துள்ள அரமியத்தின்கண் இருந்து வள்ளலாகிய சிவபெருமானோடு கூடி நான் இன்புற்றேன் என்று வாய்விட்டுரைத்ததனாலோ; அன்றி ஒப்புக் கூற முடியாதது யான் அவர்பால் பெற்ற இன்பம் என்று நாணமின்றி மொழிந்ததனாலோ வேறு எதனாலோ அவர் என்பால் இன்னும் வரவில்லை; இதழ் விரிந்த பூக்களை அணிந்த கூந்தலையுடைய பெண்ணாகிய தோழி அருவருப்புற்று முகம் வெளித்தாள்; என்னை யெடுத்து வளர்த்த தாயாகிய செவிலியும் என்பால் இரக்கமின்றிப் பேசலானாள்; ஏனை ஆயமகளிர் பலரும் தம்மிற் கூடி ஊரறியும்படியாக எள்ளி நகையாடுகின்றார்கள்; நல்லவராகிய நடராசப் பெருமானுடைய கருத்தில், முடிவு யாதோ அறிகிலேன். எ.று.

தனது பெருமனையின்கண் மாடத்தின் மேல் தென்றலும் நிலவொளியும் ஒருங்கமையக் கட்டப் பெற்ற நிலாமுற்றத்தை, "மாடமிசை ஓங்கு நிலா மண்டபம்" என்று கூறுகின்றாள். இதனை அரமியம் என்றும் வழங்குவர். மாலைப்பொழுதில் இளங்காதலர்கள் கூடி மகிழும் இடம். பிறர்க்கு எடுத்துரைத்து மகிழும் சிறப்புடைய செயலன்மையும் தெரியாது உரைத்த குற்றத்தினாலோ அன்றி அவருடன் கூடிக் கலந்த கலவின்பமும் அப்பெற்றியது என்பதறியாது எடுத்துரைத்த குற்றத்தினாலோ வேறு எதனாலோ தலைவர் என்பால் வந்திலர் என வருந்துகின்றேன் என்பாள், "மாடமிசை ஓங்கு நிலா மண்டபத்தே மகிழ்ந்தேன் வள்ளலொடு நானென்றேன் அதனாலோ அன்றி ஈடறியாச் சுகம் புகல என்னாலே முடியாதென்றுரைத்தேன்

இதனாலோ எதனாலோ அறியேன்'' என்று தலைவி கூறுகின்றாள். ஈடறியாச் சுகம் - ஒப்புக் கூறமுடியாத இன்பம். ஏடு - மலர் இதழ். குழல் - கூந்தல். கோதை - இளம்பெண். என்னுடைய கூற்று பெண்மைக்குரிய நாணத்தின் எல்லை கடந்து கைக்காமத்தினள் இவள் என்று தோன்றலுண்மையின், தோழியும் செவிலியும் என் நிலைமைக் கண்டு, இரக்கமில்லாதவராயினர் என்பாள், "தோழி முகம் புலர்ந்தாள்'' என்றும், "வளர்த்தவளும் இரக்கமிலாள் ஆனாள்'' என்றும், "பெண்கள் எலாம் கூடி நகைக்கின்றார்'' என்றும் தலைவி கூறுகிறாள். ஊரறிந்தது நாடறியப் பரவுமாதலால், "நாடறியப் பெண்களெலாம் கூடி நகைக் கின்றார்'' என்று நவில்கின்றாள். கருத்தின் எல்லையாதலால், "கருத் தெல்லை அறிந்திலேன்'' என்று கூறப்படுகிறது. (10)

4220. கற்பூரம் மணக்கின்ற தென்மேனி முழுதும்
கணவர்மணம் அதுவென்றேன் அதனாலோ அன்றி
இற்பூவை அறியுமடி நடந்தவண்ணம் எல்லாம்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
பொற்பூவின் முகம்வியர்த்தாள் பாங்கிஅவ ளுடனே
புரிந்தெடுத்து வளர்த்தவளும் கரிந்தமுகம் படைத்தாள்
சொற்பூவைத் தொடுக்கின்றார் கால்கள்களை யாதே
துன்னுநட ராயர்கருத் தெல்லைஅறிந் திலனே.

உரை : என் மேனி முழுதும் கற்பூரத்தின் மணம் நிலவுவது கண்டு வினவிய தாயார்க்கு அது எனது கணவனுடைய மேனி மணம் என்று நாக்கூசாது மொழிந்தேன், அதனாலோ; மனையின்கண் கால் நிலந்தோய நடந்ததனால் அடி கன்றியது என்று உரைத்தேன், அதனாலோ; வேறு எதனாலோ; காதலராகிய சிவபெருமான் என்பால் வந்திலர் போலும்; வேறு காரணம் அறியேன்; இந்நிலையில் என் தோழி அழகிய பூப்போன்ற தன் முகம் நாணி நெற்றி முழுதும் வியர்வை அரும்பினாள்; செவிலியாகிய வளர்த்த தாயும் பொலிவுடைய தன் முகம் கரிந்தாள்; அயல் மகளிரும் அம்பலை விடுத்துச் சொற்களாகிய அலரெடுத்து மொழிகின்றனர்; யான் யாது செய்வேன்; என்னைக் கூடுபவராகிய நடராசப்பெருமானுடைய கருத்தின் எல்லை யாதோ, அறிகிலேன். எ.று.

சிவபோகானுபவத்தால் தலைவி மேனியில் உளதாகிய சிவமணத்தை அறிந்த தாயர் மருண்டு வினவினாராக, அதற்கு விடை கூறலுற்ற தலைமகள் தன் மேனி மணத்துக்குக் காரணம் இதுவென்பாள், "கற்பூரம் மணக்கின்றது என் மேனி முழுதும் கணவர் மணம் அது வென்றேன்'' என்று கூறுகின்றாள். கற்பூர மணம் - சிவ மணம் எனப்படும். சிவபோகம் நுகரும் சிவயோகிகளின் திருமேனியில் கற்பூர மணம் கமழும் என்று அறிந்தோர் கூறுகின்றனர். பூவினும் மெல்லியதாகிய என் திருவடி கன்றிச் சிவந்தமைக்குக் காரணம் யான் அவர்பால் தனித்து நடந்து அடைந்தமை என்பாளாய், "இற்பூவை அறியும் அடி நடந்தவண்ணம்'' என்று இசைக்கின்றாள். பொற்பூ - அழகிய பூ. பூவின் முகம் என்றவிடத்து இன் - ஒப்புப் பொருட்டு.

நாண மிகுதி புலப்படுத்தற்குத் தோழி "பூ முகம் வியர்த்தாள்" என அறிக. செவிலி முகம் கரிந்தமைக்குக் காரணம் உள்ளத்திற் தோன்றிய வெகுளியாகும். சொற் பூ - சொல்லாகிய அலர். கால் களைதல் - முகிழாகிய அரும்புகளை விலக்குதல். முகிழ் ஈண்டு அம்பல் மேற்று. செவியோடு செவி கேட்ப மெல்ல மொழிதல் அம்பல்; பிறரும் கேட்பப் பேசுதல் அலர். "அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள்" (குறள் - 1115) என வருவது காண்க. துன்னுதல் - கூடுதல். (11)

4221. மன்னுதிருச் சபைநடுவே மணவாள ருடனே
வழக்காடி வலதுபெற்றேன் என்றஅத னாலோ
இன்னும்அவர் வதனஇள நகைகாணச் செல்வேன்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
மின்னும்இடைப் பாங்கிஒரு விதமாக நடந்தாள்
மிகப்பரிவால் வளர்த்தவளும் வெய்துயிர்த்துப் போனாள்
அன்னநடைப் பெண்களெலாம் சின்னமொழி புகன்றார்
அத்தர்நட ராயர்திருச் சித்தம்அறிந் திலனே.

உரை: பெருமை பொருந்திய தில்லையம்பலத்தின் நடுவே விளங்குகின்ற எனக்கு மணவாளனாகிய கூத்தப்பெருமானோடு வழக்கிட்டு வலப்பக்கமாகிய சிவத்தைப் பெற்றேன் என்று நான் உரைத்ததனாலோ, இன்னமும் அவருடைய முகத்தில் தவழும் இளநகையைக் காணச் செல்வேன் என்று நான் சொன்னதனாலோ, வேறு எதனாலோ, இன்னும் என்பால் அவர் வாராமைக்குக் காரணம் அறிகிலேன் என்று சொன்னேனாக, மின்னற் கொடியைப் போன்ற இடையையுடைய என் தோழி மனம் வேறுபட்டு என்னிடமிருந்து ஒருவிதமாக நடந்து சென்றாள்; மிக்க அன்புடன் என்னை வளர்த்தவளாகிய செவிலியும் பெருமூச்சு விட்டுக்கொண்டு பெயர்ந்து சென்றாள்; அன்னம் போன்ற நடையையுடைய ஆயமகளிர் எல்லாம் சிறுமையுணர்த்தும் சொற்களைச் சொல்லிக்கொண்டார்கள்; தலைவனாகிய நடராசப் பெருமானுடைய திருவுள்ளக் குறிப்பை நான் அறிகின்றிலேன். எ.று.

மன்னு சபை - பெருமை பொருந்திய தில்லையம்பலம். மணவாளன் - மணந்து கொண்ட கணவன். வலது - சிவனுடைய இடப்பாகம் அருட் சத்தியாதலால் வலது என்பது சுத்த சிவமாகிய வலப்பாகத்தைக் குறித்தது. வதனம் - முகம். இளநகை - புன்சிரிப்பு. வலது பெற்றேன் என்பதும், வதன இளநகை காணச் செல்வேன் என்பதும் மிகைப்பட மொழிதல் என்னும் குற்றத்தின்பால் படுவதால், "இதனாலோ எதனாலோ அறியேன்" எனத் தலைவி உரைக்கின்றாள். மின்னொத்த இடையையுடையவள் என்றற்கு, "மின்னும் இடைப் பாங்கி" என்று கூறுகின்றாள். மனத்து அன்பு திரிந்து பிரிந்து சென்றாள் என்பாளாய், "ஒருவிதமாக நடந்தாள்" என உரைக்கின்றாள். செவிலி வெகுண்டு நீங்கினமை விளங்க, "வெய்துயிர்த்துப் போனாள்" என விளம்புகின்றாள். சின்னமொழி - சிறு சொற்களால் இகழ்ந்த மொழி. சித்தம் - திருவுள்ளம். (12)

4222. கள்ளுண்டாள் எனப்புகன்றீர் கனகசபை நடுவே
கண்டதலால் உண்டதில்லை என்றஅத னாலோ
எள்ளுண்ட மற்றவர்போல் என்னைநினை யாதீர்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
உள்ளுண்ட மகிழ்ச்சிஎலாம் உவட்டிநின்றாள் பாங்கி
உவந்துவளர்த் தவளும்என்பால் சிவந்தகண்ணள் ஆனாள்
துள்ளுண்ட பெண்களெலாம் சூழ்ந்துநொடிக் கின்றார்
சுத்தர்நட ராயர்திருச் சித்தம்அறிந் திலனே.

உரை: கள்ளுண்டு மயங்கினாள் என்று சொல்லுகின்றீர்கள்; யானோ பொற் சபையின் நடுவிடத்தே சிவமாகிய கள்ளைக் கண்டதன்றி உண்டதில்லை என்று மொழிந்தேன்; அன்றியும் இகழப்பட்ட ஏனை மக்களைப் போல் என்னை நினைத்தல் வேண்டா என்று தலைவர் முன் எடுத்துரைத்தேன்; இதனாலோ வேறு எதனாலோ அவர் என்பால் வந்திலர்; காரணமும் அறிகிலேன் என்று சொன்னேனாக, கேட்டிருந்த என் தோழி தன் உள்ளத்திற் கொண்டிருந்த மகிழ்ச்சியெல்லாம் நீங்கி வெறுத்த முகத்துடன் ஒதுங்கி நின்றாள்; உவப்புடன் என்னை வளர்த்த செவிலியும் சினமுற்றுக் கண் சிவந்து நீங்கினாள்; துள்ளி விளையாடுகின்ற ஆயமகளிர் பலரும் தம்மிற் தாம் கூறிக்கொண்டு ஏதேதோ பேசுகின்றார்கள்; இந்நிலையில் தூயவராகிய நடராசப் பெருமானுடைய திருவுள்ளத்தை அறியாது வருந்துகிறேன். எ.று.

காதலன்பால் மயங்குகின்ற என்னைக் கண்டு, கள்ளுண்டாள் போலும் என என்னை இகழ்கின்றீர்கள் என்பாளாய்த் தலைவி, நடராசப் பெருமானை நோக்கி, "கள்ளுண்டாள் எனப் புகன்றீர்" என்று மொழிகின்றாள். அதனோடு நில்லாமல் என் காதலன்புக்கு இடமாய்ப் பொற்சபையின் நடுவே எழுந்தருளும் சிவஞானமிர்தமாகிய உம்மைக் கண்டதுண்டே தவிர, கலந்து உண்டதில்லை என்று பகர்ந்தேன் என்பாளாய், "கனக சபை நடுவே கண்டதலால் உண்டதில்லை" என்று இயம்புகின்றாள். எதிர்மாற்றம் கொடுத்தமை நினைந்து வருத்தமுற்று அது காரணமாக, சிவபிரான் தன்பால் வந்திலரெனத் தடுமாறுகின்றாளாதலால், "அதனால் அவர் வந்திலர் போலும்" என்று சொல்லித் துயர்கின்றாள். தன்னை மற்றவர்போல் இகழத்தக்க இயல்பினர் என நினைத்தல் வேண்டா என்று அந்த எதிர்மாற்றத்தின் மேலும் உரைத்தது சிவபிரானுக்கு மனத்தின்கண் வெறுப்பு செய்துவிட்டது போலும் என்று எண்ணி வருந்துகின்றமை இனிது விளங்க, "எள்ளுண்ட மற்றவர்போல் என்னை நினையாதீர் என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்" என்று தலைவி சொல்லுகிறாள். யான் கூறிய இதனைக் கேட்ட தோழி என் சொற்களின் பொருந்தாமை கண்டு மனமகிழ்ச்சி துறந்து என்னை வெறுத்து நோக்கினாள் என்பாளாய், "உள்ளுண்ட மகிழ்ச்சியெலாம் உவட்டி நின்றாள் பாங்கி" என்று உரைக்கின்றாள். உவட்டுதல் - வெறுத்து நீக்குதல். வளர்த்தவள் - செவிலி. சிவந்த கண்ணளானாள் என்பது சினத்தால் கண் சிவந்தாள் என்னும் பொருளதாம். விளையாட்டு ஆயமகளிர் என்பது தோன்ற, "துள்ளுண்ட பெண்கள்" என்று

சொல்லுகின்றாள். நொடித்தல் - பேசுதல். தூய்மையின் உருவாதலின் கூத்தப்பெருமானை, "சுத்தர் நடராயர்" என்று புகழ்கின்றாள். (13)

4223. காரிகையீர் எல்லீரும் காணவம்மின் எனது
கணவர்அழ கினைஎன்றேன் அதனாலோ அன்றி
ஏரிகவாத் திருஉருவை எழுதமுடி யாதே
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
காரிகவாக் குழல்சோரக் கடுத்தெழுந்தாள் பாங்கி
கண்பொறுத்து வளர்த்தவளும் புண்பொறுத்தாள் உளத்தே
நேரிகவாப் பெண்கள்மொழிப் போர்இகவா தெடுத்தார்
நிருத்தர்நட ராயர்திருக் கருத்தைஅறிந் திலனே.

உரை : அழகிய பெண்களே! என் கணவருடைய அழகினைக் காண்டற்கு வருக என அழைத்தேன், அதனாலோ; அழகு புலராத அவருடைய திருவுருவை ஓவியத்தெழுதவொண்ணாது என்று அம் மகளிர்க்கு எடுத்துரைத்தேன்; அதனாலோ, வேறு எதனாலோ என் கணவர் என்பால் இன்னும் வாராமைக்குக் காரணம் அறிகிலேன்; இவ்வாறு யான் உரைக்கக் கேட்ட தோழி கரிய கூந்தல் குலைந்து வீழச் சினம் மிக்கு என் பக்கனின்றும் எழுந்து நீங்கினாள்; கண் குளிர நோக்கி எடுத்து வளர்த்த செவிலியும் தன் மனம் புண்பட்டு வருந்தினாள்; ஒப்பற்ற ஆயமகளிரும் என்னொடு வேறுபட்டுப் பூசலிடுவாராயினர்; கூத்தப் பிரானாகிய நடராசப் பெருமானுடைய திருவுள்ளக் கருத்தையும் யான் அறியேனாயினேன், என் செய்வேன். எ.று.

காரிகை - இளம் பெண். சிவபெருமானது கண் கொள்ளாப் பேரழகைக் கண்டு ஆராமையால் தலைவி ஏனைப் பெண்களுக்கும் அவரது அழகைக் காட்டி இன்புற நினைத்தமையின், "காரிகையீர் எல்லீரும் எனது கணவர் அழகினைக் காண வம்மின்" என்றும், அப் பெருமானது திருவுருவைத் தன் மனக்கிழியில் எழுத மாட்டாமை விளங்க, "ஏரிகவாத் திருவுருவை எழுத முடியாதே என்று சொன்னேன்" என்றும் தலைவியுரைக்கின்றாள். தன் கணவனது பேரழகைப் பிற மகளிர் காண்பதை நன்மகளிர் விரும்பாராக, அவரைக் காணுமாறு தலைவியழைத்தது குற்றம். திருவுருவை எழுத முடியாதென்றது, ஓவியப் புலமையுற்றிருந்தும் மனத்தின்கண் அவ்வுருவை நன்கு பதியக் கொள்ளாதொழிந்தமையைப் புலப்படுத்திக் குற்றப்படுத்திற்று. இவ்வாற்றால் அவர் வாராதொழிந்தாரென்பாள், "இதனாலோ எதனாலோ அறியேன்" எனத் தலைவி வருந்துகிறாள். ஏர் இகத்தல் - அழகு வாடுதல். நன்மகட்குரிய நற்பண்பு குன்றுதல் கண்ட தோழி சினம் மிகுந்து வெய்துயிர்த்து மெய் நடுங்கினமை விளங்க, "கார் இகவாக் குழல் சோரக் கடுத்தெழுந்தாள் பாங்கி" எனவும், செவிலியின் வருத்தத்தை, "வளர்த்தவளும் உளத்தே புண் பொறுத்தாள்" எனவும் இயம்புகின்றாள். நிருத்தர் - திருநடம் புரிபவர். ஆயப் பெண்டிர் வேறுபட்டமை தோன்ற, "போர் இகவா தெடுத்தார்" எனக் கூறுகின்றாள். போர் - சண்டுப் பூசல் மேற்று. (14)

4224. கண்ணேறு படும்எனநான் அஞ்சுகின்றேன் எனது
கணவர்வடி வதுகாணற் கென்றஅத னாலோ
எண்ணாத மனத்தவர்கள் காணவிழை கின்றார்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
நண்ணாரில் கடுத்தமுகம் தோழிபெற்றாள் அவளை
நல்கிளனை வளர்த்தவளும் மல்கியவன் படுத்தாள்
பெண்ணாயம் பலபலவும் பேசுகின்றார் இங்கே
பெரியநட ராயர்உள்ளப் பிரியம்அறிந் திலனே.

உரை : என்னுடைய கணவராகிய சிவபிரானுடைய திருமேனியை, ஏனைப் பெண்கள் காணின் கண்ணேறுபடும் என்று அஞ்சுகின்றேன் என்றும், நல்லெண்ணமில்லாத மகளிர் அவரது திருவுருவைக் காண விரும்புகின்றார் என்றும் கூறினேனாக, அது காரணமாகவோ வேறு எதனாலோ, என் காதற் கடவுளாகிய சிவபிரான் என்பால் வந்திலர் என்று இசைத்தேன்; எனது சொல்லைக்கேட்ட தோழி பகைவர் போல, முகம் கடுத்து என்னை நோக்குகின்றாள்; அன்பு தந்து வளர்த்தெடுத்த செவிலியும் தன் மனத்தின்கண் வன்கண்மை கொண்டு பேசுகின்றாள்; ஆயமகளிர் பலரும் பலப்பல சொல்லி என்னை ஏசுகின்றார்கள்; பெருமை பொருந்திய நடராசப் பெருமானது திருவிருப்பத்தை நான் அறிகிலேன். எ.று.

கண்ணாற் பார்க்கப்படுதலால் ஊறுண்டாயின் அதனைக் கண்ணேறு என்பது உலக வழக்கு. இது கண் திருஷ்டி எனப்படுவதுமுண்டு. கண்ணேறு படுதலும் ஊறுபட்டு வருந்துவதும் மண்ணக மக்கட்கன்றித் தேவதேவராகிய சிவனுக்கில்லை; அது தெரிந்து பேசாமை குற்றமாயிற்று. எண்ணாத மனத்தவர் - அன்பில்லாதவர். அன்பிலார் பார்வையும் மொழியும் தீது செய்யும் என்பது உலகியல். அன்பிலாரிடத்தும் அன்பு செய்வது சிவனது திருவருட் சிறப்பு. அதனை நினைவிற் கொள்ளாமை குற்றம். நண்ணார் - பகைவர். இல்லுருபு - ஒப்புப் பொருட்டு. செவிலி நல்குதலாவது அன்பு செய்தல். வன்பு - அன்புக்கு மறுதலை; வன்கண்மை என்பது கருத்து. மல்குதல் மிகுதல். பெண்ணாயம் - விளையாட்டு மகளிர் கூட்டம். தலைவியின் குணஞ் செயல்களைப் பழித்துப் பேசுதல் பற்றி, "பல பலவும் பேசுகின்றார்" எனத் தலைவி வருந்திக் - கூறுகின்றாள். பெரிய நடராயர் - பெருமைப் பண்புடைய நடராசப் பெருமான். (15)

4225. கற்பூரம் கொணர்ந்துவம்மின் என்கணவர் வந்தால்
கண்ணெச்சில் கழிக்கஎன்றேன் அதனாலோ அன்றி
எற்பூத நிலையவர்தம் திருவடித்தா மரைக்கீழ்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
வற்பூத வனம்போன்றாள் பாங்கியவள் தனைமுன்
மகிழ்ந்துபெற்றிங் கெனைவளர்த்தாள் வினைவளர்த்தாள் ஆனாள்
விற்பூஒள் நுதல்மடவார் சொற்போர்செய் கின்றார்
விண்ணிலவு நடராயர் எண்ணம்அறிந் திலனே.

உரை : என் கணவராகிய சிவபிரான் என்பால் வந்தருளுவா ராயின் அவர்க்குக் கண்ணேறு கழிக்கும்பொருட்டுக் கற்பூரம் கொண்டு வந்துப் வைப்பீராக எனச் சேடியர்க்குச் சொன்னேன்; அதனால்தானே; அவருடைய திருவடியின் கீழ்நிலை ஒளியுடைய பூத தத்துவங்களின் நிலையாகும் என்று மொழிந்தேன்; அதனாலோ வேறு யாது காரணத் தாலோ, தலைவராகிய சிவபெருமான் வந்திலர்; இந்நிலை கண்ட தோழி சினம் மிக்கு வலிய தீயாகிய பூதம் பற்றிய காடு போல் எரிந்து என்னை நோக்கலுற்றாள்; அவளை முன்பே பெற்றவளும் என்னையன்புடன் வளர்த்தவளுமாகிய செவிலித் தாய் கொடுமை செய்வாளாயினாள்; வில்லைப் போல் வளைந்த அழகிய நெற்றியையுடைய ஆயமகளிர் பலரும் என்னொடு மாறுபட்டுச் சொற்களால் என்னை யேசிப் பூசல் செய் கின்றனர்; யான் யாது செய்வேன்; ஞானாகாசத்தில் நடம்புரியும் நடராசப் பெருமானுடைய கருத்தையும் யான் அறிகிலேன். எ.று.

கண்ணெச்சில் - கண்ணேறு. பலரால் பார்க்கப்படுதலால் உண்டாகும் குற்றமுமாம். சிறு குழவிகளும் மணமக்களும் கண்ணெச்சிற் படுவது காணும் தாயர் கற்பூரத்தை யேற்றி முகத் தெதிரே சுற்றி நிலத்தில் எறிவது மகளிர் உலக வழக்கு. இது கண்ணேறு கழித்தல் எனப்படும். நில முதலிய பூதமைந்தும் ஒன்றன் கீழ் ஒன்றாக நிற்கும் உலக நிலை, "எற்பூத நிலை" எனப்படுகிறது. எல் - ஒளி. "நீலமேனி வாலிழை பாகத்தொருவன் இருதாள் நிழற் கீழ் மூவகையுலகும் முகிழ்த்தன முறையே" (ஐங்.கட.) எனப் பெரியோர் உரைப்பது பற்றி, "அவர்தம் திருவடிக் கீழ் எற்பூத நிலை" எனத் தலைவி சிவனது திருவடிப் பெருமையை எடுத்தோதுகின்றாள். வற்பூதம் - நில முதலிய பூதமைந்தனுள் வலியுடைய தீ. பூதவனம் - தீப் பற்றிய காடு. கண்ணும் முகமும் சினத்தால் சிவந்து நிற்கும் தோழியை, "வற்பூத வனம் போன்றாள் பாங்கி" எனவும், தனக்குச் செவிலியா யினும் இப்போது வேறுபட்டு ஒழுகுகின்றமையால் அயன்மை தோன்ற, "அவள் தனை முன் மகிழ்ந்து பெற்று இங்கு எனை வளர்த்தாள்" எனவும் தலைவி கூறுகின்றாள். இளமகளிரின் நெற்றி விற்போல் வளைந்தும் அழகும் ஒளியும் கொண்டு பொலிதலால், "விற்பூ வொண்ணுதல் மடவார்" என்று இயம்புகின்றாள். நெற்றி நெளிந்தும் பூப் போன்ற கண் சிவந்தும் வெம்மையுற்றும் தோன்றுதலால், "விற் பூ வொண்ணு தல் மடவார்" எனத் தலைவி மொழிகின்றாள். விண் என்றது - ஞான மாகிய ஆகாசத்தை எனக் கொள்க. (16)

4226. மனை அணைந்த மலரணைமேல் எனை அணைந்த போது
வடிவுசுக வடிவானேன் என்ற அதனாலோ
இனைவறியேன் முன்புரிந்த பெருந்தவம்என் புகல்வேன்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
புனைமுகம்ஓர் கரிமுகமாய்ப் பொங்கினின்றாள் பாங்கி
புழுங்குமனத் தவளாகி அழுங்குகின்றாள் செவிலி
பனையுலர்ந்த ஓலைஎனப் பெண்கள்ஒலிக் கின்றார்
பண்ணவர்என் நடராயர் எண்ணம்அறிந் திலனே.

உரை : மனையின் கண்ணுள்ள மலர்ப் படுக்கையின் மேல் என்னைச் சிவபிரான் கூடியபோது, என் மேனி வடிவம் இன்ப வடிவாயினேன் என்றுரைத்தேன்; அது காரணமாகவோ; முன்னுளில் நான் புரிந்த பெருந்தவத்தால் இந்நாளில் நான் வருத்தமொன்றும் அறிகிலேன் எனவுரைத்தேன்; அதனுலோ வேறு எதனுலோ அவர் என்பால் வந்திலர்; என் சொற்களைக் கேட்ட தோழி, ஒப்பனை செய்யப் பட்ட தன் முகம் கறுத்துச் சினம் மிக்கு நிற்கின்றாள்; செவிலியும் துன்பத்தால் புழுங்கிய மனமுடையளாய் இரங்குகின்றாள்; அயற் பெண்களும் வற்றிய பனையோலை போலச் சலசலக்கின்றார்கள்; கடவுளாகிய என்னுடைய நடராசப் பெருமானது திருவுள்ளக் குறிப்பை அறிகிலேன். எ.று.

தூய சிவஞானத் திருவுருப் பெற்றாலன்றிச் சிவபோக நுகர்ச்சி கூடாதென்பது பற்றி, "எனையணைந்த போது வடிவு சுக வடிவானேன்" எனவும், சிவயோக போகம் நுகர்வார்க்குத் துன்பமில்லை என்று சான்றோர் கூறுதலின், "இனை வறியேன்" எனவும், இது முன்னைத் தவயோகப் பயன் என்பாளாய், "முன் புரிந்த பெருந் தவம் என் புகல்வேன்" எனவும் தலைவி இயம்புகின்றாள். இதனை "மக்கட்குக் கூறரிதானது, கற்றெட்டத்தான் முடியாதது, மற்றெப்புக்கு யாது மொவ்வாதது, மனதாலே, மட்டிட்டுத் தேட வொணுதது, தத்துவத்திற் கோவை படாதது" (திருப்புகழ்) என்று அருணகிரிநாதர் முதலிய சான்றோர் கூறுவதை நோக்கத் தலைவி கூற்று வேறுபடுதலால், தோழியும் செவிலியும் பிறரும் கருத்து மாறுபட்டுச் சினக்கின்றனர் என அறிக. சினமிக்க வழி முகம் நிறம் கருமையுறுதலால், "கரி முகமாய்ப் பொங்கி நின்றாள் பாங்கி" என்றும், செவிலி வருந்துகின்றமை பற்றி, "புழுங்கு மனத்தவளாகி அழுங்குகின்றாள் செவிலி" என்றும் தலைவி கூறுகின்றாள். உலர்ந்த பனையோலை ஓசை செய்வது போல, அயற் பெண்டிர் அலர் தூற்றுகின்றனர் என்றாளாயிற்று. பண்ணவர் - கடவுள். (17)

4227. தாழ்குழலீர் எனைச்சற்றே தனிக்கவிட்டால் எனது
தலைவரைக்காண் குவல்என்றேன் அதனுலோ அன்றி
ஏழ்கடலிற் பெரிதன்றே நான்பெற்ற இன்பம்
என்றுரைத்தேன் இதனுலோ எதனுலோ அறியேன்
சூழ்கொதிப்ப தெனக்கொதித்தாள் பாங்கிஎனை வளர்த்த
கோதைமருண் டாடுகின்ற பேதைஎனல் ஆனுள்
சூழ்மடந்தை மார்களெலாம் தூற்றிநகைக் கின்றார்
சுத்தர்நட ராயர்திருச் சித்தம்அறிந் திலனே.

உரை : நீண்ட கூந்தலை யுடைய தோழியர்களே! நீவிர் என்னைச் சிறிது போது தனித்திருக்க விடுவீர்களாயின், நான் என் தலைவராகிய சிவபிரானைக் கண்டு மகிழ்வேன் என்று சொன்னேன்; மேலும் நான் அவர்பாற் பெற்ற சிவயோக வின்பம் கடல்கள் ஏழினும் பெரிது காண் என்று இயம்பினேன்; இதனுலோ வேறு எதனுலோ, என்பால் அவர் வந்தாரில்லை என்று வாய் விட்டுச் சொன்னேனாக, கேட்ட

தோழி கூழ் கொதிப்பதுபோலச் சினத்தால் கொதிக்கலானாள்; என்னை வளர்த்த செவிலித் தாய், மருள் கொண்டு உடல் துடித்து ஆடுகின்ற பேதைப் பெண் போல ஆடலுற்றாள்; சூழவிருந்த அயற் பெண்டிர் அனைவரும் பல சொல்லித் தூற்றி இகழ்வாராயினர்; என் செய்வேன், தூயராகிய நடராசப் பெருமானுடைய திருவுள்ளத்தை நான் அறிகிலேன். எ.று.

நீண்ட கூந்தல் இடையளவும் தாழ்ந்து விளங்குவதால் தோழியரை, "தாழ் குழலீர்" எனத் தலைவி கூறுகின்றாள். "தலைவரைக் காண்குவல்" என்பது இடக்கர் மொழியாய்க் குற்றப்படுதலால், "அதனாலோ அவர் வந்திலர்" என அவலிக்கின்றாள். தான் பெற்ற சிவபோகானுபவத்தை யுரைக்கின்றாளாகலின், "ஏழ் கடலிற் பெரிதன்றோ நான் பெற்ற இன்பம் என்று உரைத்தேன்" எனத் தலைவி சொல்லுகின்றாள். "சொலற் கரிய சூழ"லாகச் சான்றோர் குறிக்கும் சிவானந்த நிலையை, "ஏழ் கடலிற் பெரிது" என உவமம் காட்டிக் கூறுவது பற்றித் தோழியும் செவிலியும் வெகுள்கின்றனர் என்பது கருத்து. பாங்கி - தோழி. வளர்த்த கோதை - தலைவியை வளர்த்த செவிலித் தாய். கோதை - பெண். பேதை - அறிவில்லாத மங்கை. நகைத்தல் - எள்ளும் குறிப்புடையது. சூழ் மடந்தைமார் - சூழவிருக்கும் பெண்டிர். (18)

4223. தனித்தலைவர் வருகின்ற தருணம்இது மடவீர்
தனிக்கஎனை விடுமின்என்றேன் அதனாலோ அன்றி
இனித்தசுவை எல்லாம்என் கணவர்அடிச் சுவையே
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
பனித்தகுளிர் காலத்தே சனித்தசலம் போன்றாள்
பாங்கிஎனை வளர்த்தவளும் தூங்குமுகங் கொண்டாள்
கனித்தபழம் விடுத்துமின்னார் காய்தின்னு கின்றார்
கருத்தர்நட ராயர்திருக் கருத்தைஅறிந் திலனே.

உரை: என்னுடைய ஒப்பற்ற தலைவராகிய சிவபிரான் என்பால் வரும் காலம் இதுவாகலின், தோழியரே, என்னைத் தனிக்க விடுவீர்களாக என்றும், இனிமையுடையவையாயின நீவிர் கூறும் சுவை வகைகள் யாவும் என் கணவராகிய சிவனுடைய திருவடி நல்கும் சுவையாம் என்றும் எடுத்துரைத்தேன்; அதனாலோ, வேறே எதனாலோ அவர் என்பால் வந்திலர் என வுரைத்தேனாக, என் தோழி வெறுப்புற்று மிகக் குளிறும் பனிக் காலத்தில் ஊற்றெடுக்கும் தண்ணீர் போல் மேனி சிலிர்த்து என் தோழி நடுக்கமுற்றாள்; செவிலியும் முகம் சுருங்கி வேறுபடலானாள்; ஏனை மகளிரும் செவி கைக்கும் சொற்களைப் பேசுவாராயினர்; யான் யாது செய்வேன்; தலைவராகிய நடராசப் பெருமானுடைய திருவுள்ளக் கருத்தை அறிகிலேன். எ.று.

இளமகளிரைக் குறிக்கும் மடவார் என்பது மடவீர் என விளியேற்றது. என்னைத் தனியே இருக்கவிட்டு நீங்குமின் என்பாளாய், "தனிக்க விடுமின்" என்றேன் எனத் தலைவி யுரைக்கின்றாள். இது

நாண் வரம்பு கடந்த நவிற்சியாதலை யுணர்கின்ற தலைவி, "இதனாலோ அவர் வந்திலர்" என இரங்குகின்றாள். இறைவன் திருவடிப் பேற்றின்கண் பெறப்படும் இன்பத்தை, "இனித்த சுவையெல்லாம் என் கணவர் அடிச்சுவையே" என மொழிகின்றாள். கூற மாட்டாததனைக் கூறிய குற்றமாதலை யுணர்ந்தமை புலப்பட, "இதனாலோ எதனாலோ அறியேன்" என்று கவல்கின்றாள். சனித்த சலம் - ஊற்று நீர். பனிக் காலத்தில் நிலம் குளிர்ந்திருத்தலால் அதன்கண் ஊறும் நீர் மிக்க குளிர்ச்சியுடைய தாய்த் தன் கண் மூழ்குவாரை உடல் நடுங்கச் செய்தலால், "சனித்த சலம் போன்றாள்" என்றும், இன்னாத கூறல், காய் கவர்தல் போல்வதாமெனச் சான்றோர் உரைப்பதால், இன்னாத அலர் கூறித் தூற்றும் அயற் பெண்டிரை, "காய் தின்னுகின்றார்" என்றும் இசைக்கின்றாள். கனிந்த என்பது எதுகை நோக்கிக் "கனித்த" என வலித்தது. மின்னார் - மின்னற் கொடி போலும் இடையையுடைய இளமகளிர். (19)

4229. அரும்பொன்அனை யார்எனது துரைவரும்ஓர் சமயம்
அகலநின்மின் அணங்கனையீர் என்றஅத னாலோ
இரும்புமனம் ஆனாலும் இளகிவிடுங் கண்டால்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
கரும்பனையாள் பாங்கியும்நாய்க் கடுகனையாள் ஆனாள்
களித்தென்னை வளர்த்தவளும் புளித்தின்றாள் ஒத்தாள்
விரும்புகின்ற பெண்களெலாம் அரும்புகின்றார் அலர்தான்
வித்தகர்என் நடராயர் சித்தம்அறிந் திலனே

உரை : மாற்றரிய பொன்போலும் திருமேனியை யுடைய சிவபெரானாகிய என் தலைவர் என்பால்வந்தணையும்காலம் இதுவாதலால்என்னைத் தனியே விடுத்து நீங்குவீராக என்றும், அவரைக் காண்பவர் இரும்பொத்த மனமுடையவராயினும் கண்ட மாத்திரையே இளகிக் குழைந்திடுவர் என்றும் எடுத்துரைத்தேன்; அதனாலோ வேறு எதனாலோ அவர் ஏனோ வந்திலர்; கரும்பு போற் பேசும் தோழியும் நாய்க் கடுகு போலும் சொற்களை வழங்குகிறாள்; மகிழ்வுடன் என்னை எடுத்து வளர்த்த செவிலியும் புளியைத் தின்றவர் போல முசம் சுளிக்கின்றாள்; என்னை விரும்பிச் சூழ்ந்திருக்கும் மகளிர் பலரும் அலர் தூற்றுகின்றார்கள்; வித்தகராகிய நடராசப் பெருமானது திருக்கருத்தை அறிகிலேன்; யான் யாது செய்வேன். எ.று.

மாற்றுக் காண வொண்ணாத பொன் னென்றற்கு, "அரும் பொன்" என எடுத்து, "அரும் பொன் அனையார்" எனச் சிவபெரானைத் தலைவி புகழ்கின்றாள். அணங்கு - தெய்வப் பெண். எளிதில் உருகாமை தெரிவிக்க, "இரும்பு மனமானாலும்" என இயம்புகிறாள். நாய்க் கடுகு, கடுகு போல் முளைத்துக் காய்க்கும் செடி வகை. இதன் கடுகு - உருவிற் சிறிதாயினும் கசப்புச் சுவை மிக்கதென அறிக. அலர் - பழிமொழி. அரும்புதல் - ஈண்டு மொழிதல் மேற்று. வித்தகர் - எல்லாம் வல்லவர். சித்தம் - கருத்து. (20)

**4230.** மணவாளர் வருகின்ற தருணம்இது மடவீர்
மறைந்திருமின் நீவிர்என்றேன் அதனாலோ அன்றி
எணமேது நுமக்கெனைத்தான் யார்தடுக்கக் கூடும்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
குணநீடு பாங்கிஅவள் எம்மிறையை நினையார்
குணங்கொண்டாள் வளர்த்தவளும் பணம்விண்டாள் ஆனாள்
மணநீடு குழன்மடவார் குணநீடு கின்றார்
வள்ளல்நட ராயர்திரு உள்ளம்அறிந் திலனே.

உரை : என் கணவராகிய சிவபிரான் என்பால் வருகின்ற காலம் இதுவாகையால், என் தோழியரே, நீவிர் இவ்விடத்தினின்றும் நீங்கி அவர் கண்படாத வகையில் இருப்பீராக என்றும், அவரோடு கூடியிருந்த போது, உம்முடைய திருவுள்ளம் யாது? நீவிர் இவண் வருவதை ஒருவராலும் தடுக்க வொண்ணாதே என்றும் உரையாடினேனாக, என் கழி காதலை எண்ணியோ வேறே எதனாலோ அவர் வாராமைக்குக் காரணம் அறியேன் என்று சொன்னேன்; என் சொற்களைக் கேட்ட தோழி மிக்க நற்குண முடையவளாயினும் எங்கள் இறைவனாகிய சிவனை அன்புடன் நினையாதவர் போல மாறு கொண்ட குணம் செயல்களை மேற்கொண்டு ஒழுகலானாள்; என்னை வளர்த்த செவிலித் தாயும் கைப் பணத்தை இழந்தவர்களைப் போல வருந்தலுற்றாள்; மணம் கமழும் கூந்தலையுடைய அயற் பெண்டிரும் அயன்மைக் குணமுடையவராய்ப் பேசுகின்றார்கள்; வள்ளற் பெருமானாகிய நடராச மூர்த்தியின் எண்ணம் யாதெனத் தெரியாமல் வருந்துகிறேன். எ.று.

மறைந்த ஒழுக்கத்தை மேற்கொண்டு வருகின்றாராதலால் அவர் இங்கு என்பால் வரும்போது நீவிர் இவ்விடத்து நில்லாது நீங்கியிருப்பீராக என்பாளாய்த் தலைவி, "மணவாளர் வருகின்ற தருணம் இது, மறைந்திருமின் நீவிர் என்றேன்" எனத் தலைவி தோழிகட்குரைக்கின்றாள்; தலைவனொடு கூடியிருக்கும்போது நீவிர் இவண் வருவதற்குத் தாமதமேன்; உம்மைத் தடுப்பவர் ஒருவரும் இல்லையே எனத் தலைவி சிவனோடு புலந்து பேசினமை தெரிவிப்பாளாய், "எணம் ஏது நுமக்கு? எனைத்தான் யார் தடுக்கக்கூடும் என்றுரைத்தேன்" என மொழிகின்றாள். இக்கூற்றுப் பெருந்திணைப் புறமாய்க் குற்றப்படுதலால் தோழி வெறுக்கின்றாள் என்பாளாய், "குணம் நீடு பாங்கியவள் எம்மிறையை நினையார் குணம் கொண்டாள்" என்று இயம்புகின்றாள். எம்முடைய இறைவனை அன்பால் நினையாதவர் மனத்தின் வன்பு கொண்டு பழிப்புரை பகர்வர் என்பது புலப்பட, "எம்மிறையை நினையார் குணம் கொண்டாள்" என்று தலைவி கூறுகிறாளாம். கைப்பொருளை யிழந்தவர்கள் கையறவுபட்டு வருந்துவது போலச் செவிலி வருந்துகின்றமை தோன்ற, "வளர்த்தவளும் பணம் விண்டாளானாள்" என வுரைக்கின்றாள். பணம் - கைப்பொருள். அயன்மைக் குணமாவது அயலார்க்குள்ள அன்புத் தொடர்பில்லாத தன்மை. நீடுதல் - மிக்குறுதல். (21)

4231. பதிவரும்ஓர் தருணம்இது நீவிர்அவர் வடிவைப்
பார்ப்பதற்குத் தரமில்லீர் என்றஅத னாலோ
எதிலும்எனக் கிச்சைஇல்லை அவரடிக்கண் அல்லால்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
மதிமுகத்தாள் பாங்கிஒரு விதிமுகத்தாள் ஆனாள்
மகிழ்ந்தென்னை வளர்த்தவளும் இகழ்ந்துபல புகன்றாள்
துதிசெய்மட மாதர்எலாம் சதிசெய்வார் ஆனார்
சுத்தர்நட ராயர்திருச் சித்தம்அறிந் திலனே.

உரை : பதிப் பொருளாகிய சிவபெருமான் என்பால் வந்தணையும் பொழுது இதுவாகும்; அவருடைய திருவுருவைக் கண்டு மகிழ்தற்கு உங்கட்குத் தகுதியில்லையாதலால், விலகியிருப்பீராக என்று சேடியர்க்கு உரைத்தேன்; அது காரணமாக அவர் என்பால் வந்திலரோ; அன்றியும் அவருடைய திருவடிக் கண்ணன்றி வேறு எதன்பாலும் எனக்கு இச்சையில்லை என்று சொன்னேன்; அதனாலோ வேறு எதனாலோ அறிகிலேன்; என் சொற்களைக் கேட்டுச் சந்திரன் போன்ற முகத்தை யுடையவளாகிய தோழி, கடுத்த முகங்கொண்டு விலகியொழுகு கின்றாள்; என்னை விருப்புடன் வளர்த்த செவிலியும், என்னை இகழ்ந்து பலவற்றையுரைக்கின்றாள்; என்னைப் போற்றி நிற்கும் மகளிரெல்லாரும் அலர் கூறி இடையூறு செய்கின்றனர்; தூயராகிய நடராசப் பெருமா னுடைய, திருவுள்ளத்தையும் அறிகிலேன்; என் செய்வேன். எ.று.

உலகுயிர்கட்குத் தலைவனாதலால் சிவனை, "பதி" என்று கூறுகின்றாள். சிவஞான ஒழுக்கமில்லாதார் அவனைக் காணும் தகுதி படைத்தவராகார், என்பதுபற்றித் தலைவி தன் சேடியரை நோக்கி, "நீவிர் அவர் வடிவைப் பார்ப்பதற்குத் தரமில்லீர்" என்றும், சிவனுடைய திருவடி இன்பமும் அழகுமுடைய எல்லாப் பொருளு மாதலால், "எதிலும் எனக்கு இச்சையில்லை அவரடிக்கண் அல்லால் என்றுரைத்தேன்" என்றும் இயம்புகின்றாள். அவள் எதிர்பார்த்தபடிப் பதியாகிய சிவன் காலம் வந்தும் அவள்பால் வாராமையால், "இதனாலோ எதனாலோ அறியேன்" என்று வருந்துகிறாள். மதி முகத்தாள் - முழுச் சந்திரன் போன்ற முகத்தையுடையவள். விதி முகத்தாள், ஏவலரைக் கட்டளையிடுபவர் போல முகங்கடுத்துத் தன்னைத் தோழி நோக்கினமை தோன்ற, "பாங்கி ஒரு விதி முகத் தாளானாள்" எனக் கூறுகின்றாள். குளிர்ந்த முகமுடையளாயினும் தண்ணிய ஒளியுடைமை நீங்கிக் கடுத்து நோக்கினமையின், "மதி முகத்தாள் ஒரு விதி முகத்தாள் ஆனாள்" எனத் தலைவி கவல்கின்றாள். துதி செய் மட மாதர் - பணிபுரியும் பெண்கள். சதி செய்தல் - இடையூறு செய்தல். சித்தம் - திருவுள்ளம். (22)

4232. மன்றாடுங் கணவர்திரு வார்த்தைஅன்றி உமது
வார்த்தைஎன்றன் செவிக்கேறா தென்றஅத னாலோ
இன்றாவி அன்னவர்க்குத் தனித்தஇடங் காணேன்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

முன்றானை அவிழ்ந்துவிழ முடுகிநடக் கின்றாள்
முதற்பாங்கி வளர்த்தவளும் மதர்ப்புடன்செல் கின்றாள்
ஒன்றாத மனப்பெண்கள் வென்றாரின் அடுத்தார்
ஒருத்தர்நட ராயர்திருக் கருத்தைஅறிந் திலனே.

**உரை :** அம்பலத்தில் ஆடுகின்ற கணவராகிய சிவபெருமானுடைய புகழையன்றி, உம்முடைய சொற்களை என்னுடைய செவி இயலாது என்று என் சேடியர்க்குச் சொன்னேன் என்றும், இப்பொழுது என் உயிர் போன்ற அப்பெருமானைத் தனித்துக் காண்பதற்கு இடமில்லாது வருந்துகிறேன் என்றும் சொன்னேன்; இவ்வாறு சொன்னதனாலோ, வேறு எதனாலோ, அவர் வாராமைக்குக் காரணம் அறிகிலேன்; இந்நிலையில் தனது ஆடையின் முந்தானை தானே அவிழ்ந்து விழுமாறு, என்னுடைய உயிர்த் தோழி என்னை விட்டு நீங்கி விரைந்து செல்கின்றாள்; என்னை வளர்த்தவளாகிய செவிலியும் மதர்ப்புடன் கடுகிச் செல்கின்றாள்; மனம் பொருந்தாத அயற்பெண்டிர் போரில் வெற்றி பெற்றவர்களைப் போலச் செருக்குகின்றார்கள்; ஒப்பற்றவராகிய நடராசப் பெருமானுடைய திருவுள்ளத்தை நான் அறிந்திலேன். எ.று.

அம்பலத்தில் ஆடுகின்ற பெருமானாதலால் சிவபெருமானை, "மன்றாடுங் கணவர்" என்று மகிழ்ந்துரைக்கின்றாள். வார்த்தை இரண்டனுள் முதலது புகழையும் பின்னது சொல்லையும் குறிக்கின்றன. ஆவி அன்னவர் - உயிர் போன்றவர். தோழியரை விலகிச் செல்ல வேண்டும் என்ற கருத்தால், "ஆவி அன்னவர்க்குத் தனித்த இடங் காணேன்" என்று கூறுகின்றாள். முடுகி நடத்தல் - தனது வெறுப்புணர்வு புலப்படக் கடுப்புடன் செல்லுதல். மதர்ப்பு - அசட்டை. ஒத்த கருத்தில்லாத பெண்கள் என்றற்கு, "ஒன்றாத மனப் பெண்கள்" எனத் தலைவி உரைக்கின்றாள். போரில் வென்றவர் தோற்றாரை நோக்கி நிமிர்ந்த பார்வையுடன் செல்வதுபோல, அயற்பெண்டிர் தன்பால் ஒழுகினமை விளங்க, "ஒன்றாத மனப் பெண்கள் வென்றாரின் அடுத்தார்" என விளம்புகிறாள். ஒருத்தர் - ஒப்பற்றவர். (23)

**4233.** கூடியஎன் கணவர்எனைக் கூடாமற் கலைக்கக்
கூடுவதோ நும்மாலே என்றஅத னாலோ
ஏடிஎனை அறியாரோ சபைக்குவரு வாரோ
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
நாடியஎன் பாங்கிமன மூடிநின்று போனாள்
நண்ணிஎனை வளர்த்தவளும் எண்ணியவா றிசைத்தாள்
தேடியஆ யங்களெலாம் கூடிஉரைக் கின்றார்
திருத்தர்நட ராயர்திருக் கருத்தைஅறிந் திலனே.

**உரை :** அன்புடன் என்னைக் கூடி மகிழ்வித்த கணவராகிய சிவபெருமான், மீளவும் என்பால் வந்து என்னைக் கூடாதபடி அவர் கருத்தைச் சிதைக்க உங்களால் இயலுமோ என்றும், ஏடி தோழி,

வந்துள்ளார் பலருள் என்னையறிந்து கொள்வாரோ, நாம் கூடியிருக்கும் இச்சபைக்கு வருவாரோ என்றும் தோழியர்பால் உரையாடினேன்; இது காரணமாகவோ, வேறு யாது காரணமாகவோ நான் அறியேன், அவரும் வந்திலர்; இதனால் என்பால் அன்பு செய்த தோழியும் மனத்தில் வெறுப்புற்று என்னின் நீங்கினாள்; என்னையெடுத்து வளர்த்த செவிலியும் தான் எண்ணியவாறெல்லாம் பேசலாயினாள்; என்னைத் தேடிக் கூடி மகிழும் ஆயமகளிர் எல்லாரும், என்னிற் பிரிந்து தாம்தாம் தனித்துக் கூடி அலர்மொழிகின்றார்கள்; தூயராகிய நடராசப் பெருமான் வந்திலராதலால் அவருடைய திருவுள்ளக் குறிப்பு யாதோ, யான் அறியேன். எ.று.

ஏடி - தோழியை அழைக்கும் மொழி. இதற்கு ஆண்பால் ஏடன் என வரும். நின்பால் வருதற்பாலராகிய நின் கணவர் மாறுமைக்குக் காரணம், என் போல் மகளிரால் தடுக்கப்பட்டார் போலும் என்று தோழியர் கூறினமையால் தலைவி உள்ளத்தில் வெகுளி கொண்டு அவர் கூற்றை மறுக்கலுற்று அவர் மகளிரால் மயக்கி விலக்கப்படும் இயல்பினரல்லர் எனத் தெரிவித்தற்கு, "கூடிய என் கணவர் எனைக் கூடாமற் கலைக்கக் கூடுவதோ நும்மாலே" என்று தலைவி யுரைக்கின்றாள். தன்னோடு வந்திருக்கும் மகளிர் பலராதல் கண்டு, தன்னைக் கண்டறிந்து அன்பு செய்வரோ என உள்ளம் அலமருதல் தோன்ற, "ஏடி எனை அறியாரோ" எனத் தலைவி வருந்துகிறாள். மனமூடுதலாவது அன்பால் விரிவதின்றிக் கூம்பிச் சாம்புதல். எண்ணியவாறு இசைத்தல் - நினைத்தபடிப் பேசுதல். திருத்தர் - தான் தூயராயினார் பிறரும் அங்ஙனம் ஆமாறு தூயராக்குபவர். "திருத்தித் திருத்தி வந்து என் சிந்தை இடங்கொள் கயிலாயா" (ஊர்த்தொகை) என்று சுந்தரர் கூறுவது காண்க. திருத்தன் எனச் சிவனைச் சான்றோர் பாராட்டுவது பற்றித் "திருத்தர்" எனப்படுகின்றார் எனினும் பொருந்தும். "திருத்தன் சேவடிக்கு நாம் இருப்பதே" (பூந்துருத்தி) என்று நாவுக்கரசர் சிவனைப் போற்றுவது காண்க. (24)

திருச்சிற்றம்பலம்

# 61. ஞானசிதம்பர வெண்பா

## தில்லையும் பார்வதிபுரமும்

அஃதாவது, ஞான சிதம்பரம் என்னும் பார்வதிபுரத்தைச் சிறப்பித்துரைக்கும் வெண்பாக்கள் கொண்ட பாமாலையாகும். இவ் வெண்பாக்கள் பலவுள், சித்திரக்கவி நடையில் இயன்றுள்ளமை கண்டு இன்புறத் தகுவன.

## நேரிசை வெண்பா

4234. அன்னையப்பன் மாவினத்தார் ஆய்குழலார் ஆசையினால்
தென்னையொப்ப நீண்ட சிறுநெஞ்சே—என்னையென்னை
யாவகைசேர் வாயில் எயிற்றில்லை என்கிலையே
ஆவகைஐந் தாய்ப்பதம்ஆ ரூர்ந்து.

**உரை :** *தாய் தந்தை, மாமன் மாமி முதலாயினோர் மேலும்,* ஆய்ந்த கூந்தலையுடைய மகளிர் மேலும் ஆசையுற்றுத் தென்னை மரம் போல உயர்ந்த சிறு நெஞ்சமே, எவ்வகையுயிர்களும் சென்றடையும் வாயில் பொருந்திய மதில் சூழ்ந்த தில்லையம்பதியை, முன்னேறுதற்குதவும் ஐந்தறிவுடையையாய்ப் பிரமபதம் முதலிய ஆறுவகைப் பதானுபவம் நிறைந்து சிந்திக்கின்றாயில்லையே; என்னே; இடையறாது சிந்திப்பாயாக. எ.று.

மாமன், மாமி, மைத்துனன், மைத்துனி என்ற உறவு முறையினரை, "மாவினத்தார்" என்று கூறுகின்றார்; மா இனத்தார் - பெரிய உறவினர் எனினும் அமையும். நெய் பெய்து சிக்கறுத்து ஒப்பனை செய்யப்பட்ட கூந்தலையுடையராதலால், "ஆய்குழலார்" என்கின்றார். சிறு நெஞ்சம் - சிறுமையுடைய நெஞ்சம். செயற்குரியதைச் செய்யாமல் சிறுமையுற்றமை விளங்க நின்றது. தென்னைபோல் நீண்டு வளர்ந்தும் ஆசையால் சிறுமையுற்றது என்பதாம். நெஞ்சின் சிறுமைக்கு இரங்கி, "என்னை என்னை" என்று வள்ளற் பெருமான் உரைக்கின்றார். உயிர் வகைகள் பலவும் அடங்க, "யாவகை" என்று குறிக்கின்றார். முற்றும்மை தொக்கது. எயில் - மதில். மெய் வாய் முதலிய கருவிகள் ஐந்தாலும் எய்தும் அறிவு உடம்பொடு கூடி வாழும் உயிர் உய்தி பெறுதற்கு உதவுவனவாதலால், "ஆவகை யைந்து" என அறிவுறுத்துகிறார். பதம் ஆறுவன, பிரம பதம், வைகுந்த பதம், உருத்திர பதம், சாதாக்கிய பதம், மகேசுர பதம், வித்தியேசுர பதம் என்பனவாம். என்கிலை - என்று சிந்திக்கின்றாயில்லை; ஓதுகின்றாயில்லை என்றாலும் ஒன்று.

ஐயுணர் வெய்தி அறுவகைப் பதானுபவம் நிறைந்து, தில்லையம் பதியைச் சிந்திப்பாயாக என்பதாம். (1)

4235. நீர்க்கிசைந்த நாம நிலைமூன்று கொண்டபெயர்
போர்க்கிசைந்த தென்றறியாப் புன்னெஞ்சே—நீர்க்கிசைந்தே
ஒன்றுஒன்றுஒன்று ஒன்றுஒன்றுஒன்று ஒன்றுஒன்று தில்லைமணி
மன்றென்று வானை மகிழ்ந்து.

உரை : தண்ணீர்க்குப் பொருந்திய பெயர்களில் மூன்றெழுத்துக்களையுடைய, சலம் என்பது சொற்போர்க்குப் பொருந்துவது என்று அறியாத புல்லிய நெஞ்சமே! நீர்மையுடன் தில்லையம்பதியிலுள்ள அழகிய அம்பலத்திற் பொருந்தி நின்று, ஆடும் கூத்தப்பெருமானை ஒன்றி நயந்து எண்ணுவாயாக. எ.று.

நாமம் - பெயர். நிலை - ஈண்டு எழுத்தின் மேற்று. சொல் நிற்றற்கு எழுத்து ஆதாரமாதலால், "நிலை மூன்று" என்கின்றார். சொற்போர் வகையான சலவாதம், சலம் எனவும் வழங்குவதாகையால், "போர்க்கு இசைந்த தென்றறியாய்" எனப் புகல்கின்றார். புன்மை - புல்லறிவுடைமை. ஒன்றென்னும் சொல்லை எட்டு முறை கூறியது, எண்ணென்றென இயைந்து மனம் ஒன்றி எண்ணுக என்னும் பொருளதாம். "எண்ணென்றி நினைந்தவர் தம்பால் உண்ணின்று மகிழ்ந்தவன்" (பனையூர்) என்று ஞானசம்பந்தர் நவில்வது காண்க. மணி - அழகு. மணி யிழைக்கப்பெற்ற அம்பலம் என்றுமாம். ஒன்றுவான் - பொருந்தி நின்று ஆடுபவன்.

இதனால், தில்லையம்பலவாணனை மனம் ஒன்றி நினைப்பாயாக என்பதாம். (2)

4236. ஈற்றில்ஒன்றுய் மற்றை இயல்வருக்க மாகியபேர்
ஏற்ற பறவை இருமைக்கும்—சாற்றுவமை
அன்றே தலைமகட்கா அம்பலவர் தம்பால்ஏ(கு)
என்றே எனக்குநினக் கும்.

உரை : ஈறளவில் நின்றெழியாமல் சகர ககார வர்க்கங்களாலாகிய, பெயரையுடைய பறவையான சுகம் என்பது இம்மை மறுமை இரண்டிலும் வேண்டப்படுவது என்று சான்றோர் கூறுவர்; சுகமே; ஒப்பில்லாத தலைமகட்காகத் தில்லையம்பலவாணர்பால் தூது செல்க; அஃது எனக்கும் நினக்கும் என்றும் நலம் பயப்பதாம். எ.று.

சுகம் என்பது பறவையாகிய கிளியைக் குறிக்கும். இதன் ஈருகிய கம் என்பது வானுலக போகத்தைக் குறித்தலால், அதுதானும் நிலையில்லது எனத் தெளிக என்றற்கு, "ஈற்றில் ஒன்றுய்" என அறிவிக்கின்றார். சகர வர்க்கத்துக்குச் சு எனவும் ககர வர்க்கத்துக்கு க எனவும் கூட்டிச் சுகம் என இயைத்தால் கிளி யென்னும் பறவைக்குப்

பெயராம். இருமை - இம்மை மறுமை. சாற்றுதல் - சொல்லுதல்; அறிவித்தலுமாம். ஏகு - செல்க. தூது செல்லின், அஃது இருமைக்கும் என்றும் எனக்கும் நினக்கும் சுகமாம் என வுரைத்தலுமாம்.

இது தோழி தலைமகள் பொருட்டுக் கிளியை அம்பலவாணர்பால் தூது செல்க என விடுத்தவாரும். (3)

4237. கைத்தலைமே லிட்டலையிற் கண்ணுடையான் கால்மலர்க்குக்
கைத்தலைமே லிட்டலையிற் கண்ணீர்கொண் — டுய்த்தலைமேல்
காணுயேல் உண்மைக் கதிநிலையைக் கைக்கணியாக்
காணுயே நெஞ்சே களித்து.

உரை : இல்வாழ்வில் பெறும் இன்பத்தை வெறுத்துக் கண்ணுதற் கடவுளின் திருவடியாகிய தாமரையைத் தரிசித்துக் கையைத் தலைமேல் குவித்து வைத்து, ஆறுபோல் கண்ணில் நீர் சொரிந்துகொண்டு மக்களும் தேவர்களும் உய்தி பெறுவதைக் கண்டிலையாயின், என்றும் உள்ளதாகிய சிவகதி இன்பத்தை உலகியற் போகத்தில் களிப்புற்று மயங்கும் நெஞ்சமே, கைம்மேல் கனியாக நீ காணாது ஒழிகின்றாய். எ.று.

கைத்தல் - வெறுத்தல். மேவிடுதல் - மேற்கொள்ளுதல். அலையிற் கைத்தலை மேலிட்டு என இயைத்து, வருத்துகின்ற இல்வாழ்க்கை இன்பத்தை வெறுத்தலை மேற்கொண்டு என்று பொருள் கொள்க. உய்தல் - உய்த்தல் என வந்தது. அலை - ஆகுபெயரால் கரையை அலைத்தோடும் ஆற்றின் மேலதாயிற்று. கண்ணுடையான் - நெற்றியிற் கண்ணை யுடையவனாகிய சிவன்; அருளொழுகும் கண்ணையுடையவன் என்றுமாம். உண்மைக் கதி - நிலைபேறுடைய சிவகதி. கைக்கனி என்பது கைக்கணி என வந்தது.

இதனால், சிவன் திருவடியைத் தலைமேற் கைகுவித்துக் கண்ணீர் சொரிந்து, வழிபடாயாயின் நெஞ்சமே நீ சிவகதி காணாய் என்பதாம். (4)

4238. கல்லோ மணலோ கனியோ கரும்போஎன்(று)
எல்லோமும் இங்கே இருக்கின்றோம் — சொல்லோம்
அதுவாய் அதன்பொருளாய் அப்பாலாய் யார்க்கும்
பொதுவாய் நடிக்கின்ற போது.

உரை : யாவர்க்கும் பொதுவாய்ச் சிவன் அம்பலத்தில் நடிக்கும் பொழுது, மாணிக்க மலையோ, பாற்கடலின் வெண்மணலோ, செங்கனியோ, செங்கரும்போ என்று இவ்வுலகில் எல்லோரும் சொல்லிக் கொண்டிருக்கின்றோம்; மாணிக்கமலை முதலிய அதுவாகவும் அதன் உட்பொருளாகவும், அவற்றிற்கும் அப்பாலாய் உள்ளதாகும் பரம்பொருள் என்றுணர்ந்து உரைக்கின்றோமில்லை. எ.று.

கல்லோ மணலோ எனப் பொதுப்படக் கூறுவதால், கல்லை மாணிக்கமலை என்றும், மணலைப் பாற்கடல் மணல் என்றும் உரை கூறப்படுகிறது. மாணிக்கமலைபோலச் சிவன் திருமேனி காட்சி தருவதாலும் அம்மேனியில் பூசப்பட்ட வெண்ணீற்று நிறம் விளங்கப் பாற்கடல் மணல் கூறப்பட்டது. கல்லும், மணலும், கனியும், கரும்பும் எனச் சொல்லிக்கொண்டே இருக்கின்றோமேயன்றி அவையேயாகவும், அவற்றின் பொருளாகவும், அவற்றின் வேறாய், அப்பாலாய்ச் சிவன் இருக்கின்றான் என்று உணர்கின்றோமில்லை; உணர்ந்து உரைப்பது மில்லை எனத் தெரிவித்தவாறும். (5)

4239. அதுபார் அதிலே அடைந்துவதி மற்றாங்(கு)
அதில்ஏழை யைப்புரமெய் யன்பால்—அதிலே
நலமே வதிலேநின் றூர் திருவம்
பலமேவக் காட்டும் பரிசு.

உரை : பார்வதிபுரம் என்ற ஊர்ப் பெயரில் தலைமகள் உறையும் ஊராவது பார்; அங்கு அடைந்து வதிக; அதன்கண் ஏழையாகிய தலைவியின் திருமேனியைக் காண்க; மெய்யன்புடன் அவ்வூர்க்கண் நலமாக அவளோடு வாழ்க; அவ்வாழ்க்கையில் நிலையாக நிற்பாயாக; இது நாவால் ஓதப்படும் திருவம்பலத்தை அடையின் பெறலாகும் பரிசு காண். எ.று.

பார்வதிபுரம் என்ற பெயரைப் பார் வதிபுரம் எனப் பிரித்துப் பார் என்பது தலைமகளது ஊர் என்றும், வதிதல் தங்குதலாதலின் அங்கு வதிக என்றும், புரம் என்பது உடம்பைக் குறிப்பதாதலால் அவளது திருமேனியாகவும் இப்பாட்டில் காட்டப்படுகின்றன. அதிலே நலம் மேவு என்றும், அதிலே நில் என்றும் பிரித்து மெய்யன்புடன் அவளோடு கூடி நலம் பெறுக எனவும், அந்த நல நுகர்ச்சியிலே நிலைபெறுக எனவும் பொருள் கொள்க. நாவூர் திருவம்பலம் - நாவால் புகழப்படும் திருவம்பலம் என்க.

இஃது இயலிடம் கேட்ட தலைவனுக்குத் தோழி பார்வதிபுரத்தின் பெயரைக்காட்டிக் கூறியவாறும். இதனைப் பார்வதிபுரம் என்ற பெயரின் சொற்பொருள் நலம்காட்டி மகிழ்வித்தல் என்பதும் உண்டு. (6)

4240. நம்பார் வதிபாக னம்புரத்தில் நின்றுவந்தோன்
அம்பாரத் தென்கிழக்கே அம்பலத்தான்—வெம்பாது
பார்த்தால் அளிப்பான் தெரியுஞ் சிதம்பரம்நீ
பார்த்தாய்இப் பாட்டின் பரிசு.

உரை : நம்மால் துதிக்கப்படும் பார்வதிக்குத் தலைவனும், தம்முடைய உடம்பாகிய புரத்தின்கண் இருந்து மகிழ்பவனும், திசை களுமிடத்து இவ்வூர்க்குத் தென்கிழக்கிலுள்ள தில்லையம்பலத்தை யுடையவனுமாகிய சிவபெருமான், தண்ணிய மனத்துடன் தன்னை யடைந்து காணின் திருவருள் நல்குவன்; அருள் ஞானம் பெற்றார்க்கு

அவனுடைய சிதாகாசமாகிய சிதம்பரம் இனிது தெரியும்; இதுவே இப்பாட்டைப் பார்த்தால் நமக்குக் கிடைக்கும் பரிசு. எ.று.

திசையை யுணர்த்தும் அம்பரம் என்ற சொல் செய்யுளாதலால் எதுகை நோக்கி அம்பாரம் என வந்தது. வெம்புதல் - வெண்மை யுறுதல். புரத்தில் நின்று உவப்பவனும் அம்பலத்தானுமாகிய சிவனைப் பதற்றமின்றி நோக்குவோமாயின் அவனுடைய சிதம்பரம் தெரியும் என்பதாம். சிதம்பரம் - சித் அம்பரம் எனப் பிரிந்து ஞானாகாசம் எனப் பொருள்படுவது காண்க. பரிசு - பொருள் நலம். இன்றும் பார்வதி புரமாகிய வடலூர் அம்பலத்தின் மேல் தட்டிலிருந்து தென்கிழக்கில் நோக்கினால் சிதம்பரம் தெரியும் என அறிக. (7)

4241. நடிப்பார் வதிதில்லை நற்கோ புரத்தின்
அடிப்பாவை யும்வடக்கே ஆர்ந்து—கொடிப்பாய
நின்று வளர்மலைபோல் நெஞ்சேபார்த் தால்தெரியும்
இன்றெவ்விடத் தென்னில்இப்பாட் டில்.

உரை : அம்பலத்தில் நடிக்கின்ற கூத்தப் பெருமான் எழுந்தருளும் தில்லையில் அழகிய கோபுரத்தின் அடியிலுள்ள தேவியாகிய சிவகாமி, கோயில் வடபகுதியில் எழுந்தருளிப் பச்சைக்கொடி படர்ந்து நிற்கும் மலை போலும் என எண்ணிப் பார்த்தால் சிதம்பரம் தெரியும்; எவ்விடத்து என்னில் இப்பாட்டில். எ.று.

அடிப்பாவை - கீழே உள்ள பாவையாகிய சிவகாமி. கொடி - பச்சைக் கொடி. இன்று எவ்விடத்து என்னில் இப்பாட்டில் எனப் பிரித்துக் கொள்க. அடிப்பாவை என்பதற்கு உலக முதற் காரணி யாகிய சிவகாமி எனினும் அமையும். (8)

4242. பூமி பொருந்து புரத்தே நமதுசிவ
காமிதனை வேட்டுக் கலந்தமர்ந்தான்—நேமி
அளித்தான்மால் கண்மலருக் கானந்தக் கூத்தில்
களித்தான் அவன்றான் களித்து.

உரை : நமது அன்னையாகிய சிவகாமியை, மணம்புரிந்து கலந்துறையும் சிவபெருமான், திருமால் அருச்சித்த கண்ணாகிய மலர்க்கு மனம் மகிழ்ந்து சக்கரப் படை தந்து, பார்வதிபுரத்தின்கண் எழுந்தருளி ஆனந்தக் கூத்தாடி மகிழ்கின்றான். எ.று.

பூமி பொருந்து புரம் - பார்வதிபுரம் என வரும். பார் - பூமி, பொருந்துதல் - வதிதல். வேட்டல் - மணம் செய்துகொள்ளுதல். அமர்தல் - எழுந்தருளுதல். நேமி - சக்கரப்படை. ஆனந்தக் கூத்திற் களித்தவனாகிய அச்சிவபெருமான், களித்து நேமி அளித்தான் என இயையும். பார்வதிபுரத்தில் சிவகாமியைக் கலந்து அமர்ந்தவன் ஆனந்தக் கூத்தில் களித்தான் என இயைத்துக் கொள்க.

இதனால், பார்வதிபுரத்தில் ஆனந்தக் கூத்திற் களித்து மால் அர்ச்சித்த கண் மலர்க்காகச் சக்கரப்படை தந்தமை தெரிவித்தவாறும். (9)

திருச்சிற்றம்பலம்

# 62. சிவபதி விளக்கம்

## எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4243. உரைவளர் கலையே கலைவளர் உரையே
உரைகலை வளர்தரு பொருளே
விரைவளர் மலரே மலர்வளர் விரையே
விரைமலர் வளர்தரு நறவே
கரைவளர் தருவே தருவளர் கரையே
கரைதரு வளர்கிளர் கனியே
பரைவளர் ஒளியே ஒளிவளர் பரையே
பரையொளி வளர்சிவ பதியே.

உரை : சான்றோர்களின் சொற் செயல்களில் தோன்றிப் பெருகும் கலைநலமும், கலைவகைகளை விளக்கம் புரியும் உரைநலமும், உரையும் கலையும் நல்கும் மெய்ப்பொருளாயவனே! மணம் பொருந்திய மலரும், மலரிடத்துத் தோன்றிப் பெருகும் நறுமணமும், நறிய மணமுடைய மலரிடத்தூறும் தேனுயவனும், நீர்நிலைகளில் கரையிடத்து வளரும் மர வகையும், மர வகைகளால் உரம் மிகும் கரையும், கரையும் மரவகையும் சேர்ந்து பழுத்தளிக்கும் கனியாயவனும், பரையாகிய சத்தியிடத்துச் சுரக்கும் ஒளியும், ஒளி மிகுவிக்கும் பரையும், பரையும் ஒளியும் சிறந்தோங்குவிப்பவனுமாகிய சிவபதியே வணக்கம். எ.று.

சான்றோர் - இயற்கையும் செயற்கையுமாகிய மதிநுட்பமும் நூலறிவுமுடைய புலமை நன்மக்கள். உரை என்றது சான்றோர்களின் சொற்கள் மேற்று; புகழுமாம். கலை பலவற்றிற்கும் விளக்கமும் பொருள் நலமும் காட்டுவது உரையாதலின், "கலைவளர் உரையே" என்று கூறுகின்றார். கலைகளால் எய்தும் பயன் பொருள்களின் உண்மை யுணர்வாதலால், "உரை கலை வளர்தரு பொருளே" எனவுரைக்கின்றார். விரை - மணம். மலரிடத்து மணமும், மலரின் தேனும் மலரை ஆதார மாகக் கொண்டவையாதலால், "விரைமலர் வளர்தரு நறவே" என விளம்புகின்றார். நீர்நிலையின் கரையிடத்தே நின்று அஃது எளிதில் கரைந்து கெடாதபடி வன்மை யுருவித்தலால் அதனை, "தருவளர் கரை" எனவும், உரம் பெற்ற நிலத்தில் நின்றோங்கும் மரம் இனிது காய்த்துக் கனிகளை நல்குவது பற்றி, "கரைதரு வளர்கிளர் கனியே" எனவும் இயம்புகின்றார். பரை - சிவசத்தி. அஃது ஒளி மயமாதலின், "பரை வளர் ஒளியே" என்றும், ஒளி நலத்தால் சத்தியுண்மை உணரப் படுதலின், "ஒளி வளர் பரையே" என்றும், பரைக்கும் ஒளிக்கும் ஆதாரமாதலின், "பரையொளி வளர் சிவபதியே" என்றும் பகர் கின்றார்.

இதனால், கலைதரு பொருளும், மலர்தரு நறவும், தருகிளர் கனியும், ஒளி வளர் பரையும் சிவமாகிய பதி என்பது கருத்தாம். (1)

4244. ஒளிவளர் உயிரே உயிர்வளர் ஒளியே
ஒளியுயிர் வளர்தரும் உணர்வே
வெளிவளர் நிறைவே நிறைவளர் வெளியே
வெளிநிறை வளர்தரு விளைவே
வளிவளர் அசைவே அசைவளர் வளியே
வளியசை வளர்தரு செயலே
அளிவளர் அனலே அனல்வளர் அளியே
அளியனல் வளர்சிவ பதியே.

உரை: ஒளி மிகும் உயிர்ப்பொருளும், உயிரிடத்து ஓங்கும் அறிவாகிய ஒளியும், ஒளியும் உயிருமாகிய பொருளிடத்தே சிறக்கும் உணர்வுருவாயவனும், வெளியும் நிலவும் நிறைவுத் தன்மையும், குறைவற்ற நிறைவின்கண் நின்றோங்கும் வெளியும், வெளியும் நிறைவும் உள்ளதன்கண் விளையும் பயனுயவனும், காற்றிடத்து ஓங்கும் அசைவும், அசைவு பெருகுவிக்கும் காற்றும், அசைவும் காற்றும் கலந்து செய்யும் செயல் வகையும், அருள்வேண்டுவிக்கும் நெருப்பும், நெருப்புத் தோற்றுவிக்கும் அருளுருவும், அருளும் அனலுமாய்த் தோற்றுவித்து மிகுவிக்குபவனுமாகிய சிவபதியே வணக்கம். எ. று.

உயிரிடத்து நிலவும் உணர்வையும் ஒளியாக உரைப்பது சான்றோர் மரபாதலின், "ஒளி உயிர் வளர்தரும் உணர்வே" எனவும், பூத காரியமாகிய அண்டங்கள் அனைத்தையும் குறைவறத் தனக்குள் அடக்கி நிற்பது வெளியாதலால், குறைபட்டவிடத்தே அடக்கும் பொருளே காணப்படுதலாலும், நிறையுற்றவிடத்து அடக்கும் பொருளுக்கு இடமாகும் வெளி காணப்படுதலாலும், குறைவற நிறைந்த வெளியின் கண் மேல் காட்சிக்கிடமின்றி மனவொடுக்கம் அறியப்படுதலால், "வெளி நிறை வளர்தரு விளைவே" எனவும் இசைக்கின்றார். காற்றின்கண் அசைவு இயற்கை; பொருள்களின் அசைவால் காற்றுண்மை அறியப்படுதலால், "அசை வளர் வளியே" என்றும், வளியின் அசைவால் செயல் பல உளவாதலால், "வளியசை வளர்தரு செயலே" என்றும் கூறுகிறார். இறுகிய பொருள்கள் அனல் வெம்மையில் இளகி உருகுவதால், "அளி வளர் அனலே" எனவும், இளகிய பொருள் அளி எனப்படுவது பற்றி, "அனல் வளர் அளியே" எனவும் உரைக்கின்றார். அனலாய்க் கன்மனத்தையும் உருக்கி அளியாக்குவதால் சிவனை, "அளி யனல் வளர் சிவபதியே" என்று புகழ்கின்றார்.

இதனால், உயிரிடத்து உணர்வுமயமாகவும், வெளி நிறைவின்கண் விளையும் அமைதியாகவும், வளியசைவு விளைவிக்கும் செயலாகவும், அளி விளைவிக்கும் தீயாகவும் சிவபதி விளங்குவது கூறியவாறும். (2)

4245. அடிவளர் இயலே இயல்வளர் அடியே
அடியியல் வளர்தரு கதியே
முடிவளர் பொருளே பொருள்வளர் முடியே
முடிபொருள் வளர்சுக நிதியே

படிவளர் விதையே விதைவளர் படியே
படிவிதை வளர்பல நிகழ்வே
தடிவளர் முகிலே முகில்வளர் தடியே
தடிமுகில் வளர்சிவ பதியே.

உரை : அடிப்படையாகிய அறத்தின்கண் வளர்கின்ற நல்லியலும், நல்லியலால் விரிந்தோங்கும் அறப் பயனும், அறனும் நல்லியலும் விளைவிக்கின்ற நற்கதியானவனும், நான்மறை முடியில் திகழும் ஞானப் பொருளும், ஞானத்தின் எல்லையாகிய பிரமப் பொருளும், ஞானமும் முடிபொருளும் விளைவிக்கும் இன்ப நிதியான வனும், நிலத்தின்கண் விளைதற் கேதுவாகிய விதைப் பொருளும், அவ் விதை முளைத்துப் பயன் விளைவிக்கும் நன்னிலமும், நிலமும் விதையும் சேர்ந்து பலன் நல்கும் நிகழ்வாயவனும், மின்னும் இடியும் தோன்றுதற்கு இடமாகிய முகிலும், முகில் ஏதுவாகத் தோன்றும் இடி மின்னலாகியவனுமாகிய சிவபதியே வணக்கம். எ.று.

அறத்தால் விளைவது நற்கதி என்பாராய், "அடியியல் வளர்தரு கதியே" என்று கூறுகிறார். உலகியல் வாழ்வுக்கு அடிப்படை அறமாதலாலும், அதனால் விளைவது நற்கதியாதலாலும் இரண்டையும் வற்புறுத்துகின்றார். முடி என்றது நான்மறையாதலின், அந்தம் அவற்றால் பெறப்படுவது பிரம ஞானம்; பிரமஞானத்தால் எய்தப்படுவது சிவ போக சுகமாதலால், "முடி பொருள் வளர் சுகநிதியே" என்று மொழிகின்றார். விதை முளைத்தற்கு நிலம் ஆதாரமும் முளைக்கு விதை ஆதாரமுமாதல் பற்றி, "படி விதை வளர் பல நிகழ்வே" எனப் பகர்கின்றார். பல நிகழ்வு - பயன் விளைவு. தடி என்றது மின்னலோடு கூடிய இடி. முகில் இடமாகத் தடி தோன்றுதலால், "முகில் வளர் தடி" என்கின்றார்.

**கதியும், சுகநிதியும், பல நிறைவும், முகில் இடியுமாயவன் சிவபதி எனத் தெரிவித்தவாறும். (8)**

**4246.** சிரம்வளர் முதலே முதல்வளர் சிரமே
சிரமுதல் வளர்தரு செறிவே
தரம்வளர் நிலையே நிலைவளர் தரமே
தரநிலை வளர்தரு தகவே
வரம்வளர் நிறையே நிறைவளர் வரமே
வரநிறை வளர்தரு வயமே
பரம்வளர் பதமே பதம்வளர் பரமே
பரபதம் வளர்சிவ பதியே.

உரை : முடிபு தோற்றுவிக்கும் வேர் முதலும், வேர் முதல் ஏதுவாகத் தோன்றும் முடிபொருளும், முடிவும் தோற்றமும் செறிந் திருக்கும் செறிவாகியவனும், தகுதி பயக்கும் மெய்ந்நிலையும், அந்த நிலையை விளைவிக்கும் தகுதியும், தகுதி நிலை பெறுவிக்கும் வன்மை யானவனும், மேன்மை தோற்றுவிக்கும் நிறைவுத் தன்மையும்,

நிறைவுப் பண்பால் உயர்ந்தோங்கும் மேன்மை நலனும், மேன்மையும் நிறைவும் நல்கும் வன்மையும் ஆயவனும், பரமாம் நிலையை விளக்கும் அறுவகைப் பதங்களும் - அப் பதங்கள் காட்டும் பரமாந் தன்மையும், பரத்தையும் பதத்தையும் தோற்றுவித்து ஓங்குபவனுமாகிய சிவபதியே வணக்கம். எ.று.

மரத்தின் வேர் முதல் வளர்ச்சி முடிவில் வேர்க்கு முதலாகிய விதையை விளைவிப்பது பற்றி, "சிரம் வளர் முதலே" எனவும், முதலாகிய வேரும் விளைவாகிய விதையும் செறிந்து பொருண்மை யுருவில் பொலிவது பற்றி, "சிரம் முதல் வளர்தரு செறிவே" எனவும் தெரிவிக்கின்றார். தகுதியால் நிலைபேறும், நிலைபேற்றால் தகுதியும் இயைந்து பொருண்மைக்கு உறுதி தருதலால், "தர நிலை வளர்தரு தகவே" என்று கூறுகிறார். தரம் - தகுதி. வயம் - உறுதி. வரம் - மேன்மை. மேன்மைப்பண்பால் நிறைவும் நிறைவில் உயர்வும் நிறைதலின், "வரம் நிறை வளர்தரு வயமே" எனவும், பதங்கள் ஒன்றுக்கொன்று மேன்மேலாய் இருந்து மேன்மையைக் காட்டுதலின், "பரபதம் வளர் சிவபதியே" எனவும் இயம்புகிறார். பதங்கள் - பரம பதம், பிரம பதம், வைகுந்த பதம், உருத்திர பதம், மகேசுர பதம், சாதாக்கிய பதம் என்ற ஆறுமாம்.

இதனால், வேர் முதல் செறிவும், தர நிலையும், வர நிறைவும், தருவயமும், பரபதம் தரும் சிவபதியாம் எனக் காட்டியவாறும். (4)

4247. திருவளர் வளமே வளம்வளர் திருவே
திருவளம் வளர்தரு திகழ்வே
உருவளர் வடிவே வடிவளர் உருவே
உருவடி வளர்தரு முறைவே
கருவளர் அருவே அருவளர் கருவே
கருவரு வளர்நவ கதியே
குருவளர் நெறியே நெறிவளர் குருவே
குருநெறி வளர்சிவ பதியே.

உரை: திருவாகிய நலம் நல்கிச் சிறக்கும் வளமாகவும், வளத்தால் தோன்றி விரியும் திருவும், திருவும் வளமும் மிக்கு ஒளிர்விக்கும் ஒளியாயவனும், பொருள்களின் உருவின்கண் திகழும் வடிவும், வடிவால் சிறப்புறும் உருவும், உருவும் வடிவம் ஒருங்கமைந்து ஓங்குதற்கு முறையுளானவனும், கருப்பொருளாய்க் காண நிற்பதன்கண் அருவ நிலையும், அருவப் பொருளாய் உணர்வால் காண்பதன்கண் திகழும் கருப்பொருளும், கருவும் அருவுமாய்க் கலந்து ஒன்றிக் காட்டும் புதுமைக் கதியாயவனும், நல்லாசிரியன் காட்டருளும் நன்னெறியும், அந்நெறியால் விளக்கமும் ஆசிரியனும், அக்குருபரனும் அவனுடைய நன்னெறியுமாகிய சிவபதியே வணக்கம். எ.று.

திருவுடைமையால் வளம் உணரப்படுதலின், "திருவளர் வளமே" என்றும், திருவும் வளமும் ஒருவருக்கு ஒளி தருதலால், "திருவளம்

வளர்தரு திகழ்வே" என்றும் இசைக்கின்றார். உருவின்கண் வடிவமும், வடிவின்கண் உருவமும் பிடிப்பின்றி இயைந்திருக்கும் இயல்பு சிவ விளைவு எனத் தெரிவித்தற்கு, "உருவடி வளர்தரு 'முறைவே" என இயம்புகின்றார். கரு - உருவப் பொருள் மேற்று. பொருட்கு உருவமும் அருவமும் அமைவது தோற்றத்தின் இயல்பு பற்றி அதனை, "நவகதி" என்று நவில்கின்றார். நவம் - புதுமை.

இதனால், திருவளர் திகழ்வும், உருவடி முறைவும், கருவரு வளர் கதியும், குருநெறியும் சிவபதி விளக்கம் என்பதாம். (5)

4248. நிறைவளர் முறையே முறைவளர் நிறையே
நிறைமுறை வளர்பெரு நெறியே
பொறைவளர் புவியே புவிவளர் பொறையே
புவிபொறை வளர்தரு புனலே
துறைவளர் கடலே கடல்வளர் துறையே
துறைகடல் வளர்தரு சுதையே
மறைவளர் பொருளே பொருள்வளர் மறையே
மறைபொருள் வளர்சிவ பதியே.

உரை : நிறைவின்கண் உளதாகும் முறையமைதியும், முறைமைக்கு ஏதுவாய் விரியும் நிறைவும், நிறைவும் முறையும் ஓங்குதற்கிடமாகிய பெருநெறியாளனும், பொறுத்தற் பண்பால் மேம்படும் நிலமும், நிலத்திடை விளங்கும் பொறுமைப் பண்பும், நிலமும் பொறுத்தற் பண்பும் ஆதாரமாகக் கொண்டு நிற்கும் நீராகியவனும், துறைகளால் உயரும் கடலும், கடல்களாற் சிறப்புறும் துறைகளும், துறையும் கடலுமாய்க் கடைவார்க்குப் பெறலாகும் அமுதமானவனும், வேதங்கள் ஓதும் பொருளும், பொருளாற் பொலியும் வேதங்களும், வேதப் பொருளால் மேன்மையுறுபவனுமாகிய சிவபதியே வணக்கம். எ.று.

அறிவால் நிறைந்து சீரிய செயல்முறை அமைந்தவிடத்து உளதாவது பெருநெறியாதலால், "நிறைமுறை வளர் பெருநெறியே" என்று பேசுகின்றார். பொறை - தாங்குதல். பூமியின் சிறப்பியல்பு தன்னை இகழ்வாரையும் தாங்குவதாதலால், "பொறை வளர் புவியே" என்றும், நிலத்தின் பொறுத்தல் தன்மை கண்டு அதன் மேல் நீராகிய பூதம் நிற்பதால், "புவி பொறை வளர்தரு புனலே" என்றும் புகல்கின்றார். கடல்களில் தலைசிறந்தது பாற்கடல் எனப்படுவது பற்றி அதனிடத்து அரிதிற் பிறந்த அமுதத்தை, "துறை கடல் வளர்தரு சுதை" என மொழிகின்றார். சுதை - அமுதம். வேத ஞானத்தின் முடி பொருள் பிரம ஞானமாதலின், "மறை வளர் பொருளே" என்றும், பிரமமே சிவமாதல் தோன்ற, "மறைபொருள் வளர் சிவபதியே" என்றும் உரைக்கின்றார்.

இதனால், பெருநெறியும், கடல் வளர் சுதையும், மறை பொருளுமாவது சிவபதி என விளக்கியவாறும். (6)

4249. தவம்வளர் தயையே தயைவளர் தவமே
தவநிறை தயைவளர் சதுரே
நவம்வளர் புரமே புரம்வளர் நவமே
நவபுரம் வளர்தரும் இறையே
துவம்வளர் குணமே குணம்வளர் துவமே
துவகுணம் வளர்தரு திகழ்வே
சிவம்வளர் பதமே பதம்வளர் சிவமே
சிவபதம் வளர்சிவ பதியே.

உரை : தவநெறியின்கண் சிறக்கும் அருட் செல்வமும், அருள் நலம் மிகுதற் கேதுவாகிய தவப் பயனும், தவமும் அருட்பண்பும் கலந்த ஞானமானவனும், புதுமை மிளிரும் உடம்பும், உடம்பிற் சிறக்கும் புதுமையும், இரண்டும் ஒருங்கியைந்த இறைவனும், ஆன்மாவின்கண் அமையும் குணநலமும், குணநலத்தால் ஓங்கும் ஆன்மப் பண்பும், இரண்டாலும் எய்தும் விளக்கமானவனும், சிவானந்தம் நல்கும் சிவ பதமும், சிவபதத்தில் திகழும் சிவமும், சிவமும் சிவபதமுமாய் இலங்குபவனுமாகிய சிவபதியே வணக்கம். எ.று.

தயை - அருட்பண்பு. அருளறம் தவத்திறகு உருவாதலின், "தயை வளர் தவமே" என்றும், அதுவே தவஞானமாய்ச் சிறப்பது பற்றிச் சதுர் என்றும் கூறுகின்றார். சதுர் - ஞானம். நவம் - புதுமை; ஒன்பது எனப் பொருள் கொண்டு ஒன்பது துவாரங்களையுடைய உடம்பு என வுரைப்பதுமுண்டு. துவம் - ஆன்மா. நன்மை தீமை எனக் குணம் இரண்டாதல் பற்றி இருவகையாக நிலவுகின்ற குணப் பொருள் என்று பொருள் கொண்டு, "துவகுணம் வளர்தரு திகழ்வே" என்று ஆன்மாவை விளம்புகின்றார், எனக் கூறுபவரும் உண்டு. சிவபோக நுகர்ச்சிக்குரிய பதம் சிவபதமாதலின், "சிவம் வளர் பதமே" எனத் தெரிவிக்கின்றார். சிவபோகம், சிவஞானமும் சிவபதமும் பதமுமாய்த் திகழ்வது விளங்க, "சிவபதம் வளர் சிவபதியே" என்று செப்புகின்றார்.

இதனால், தயை வளர் சதுரும், இறையும், துவகுணத் திகழ்வும், பதம் வளர் சிவமும், சிவபதியாம் எனத் தெரிவித்தவாறும். (7)

4250. நடம்வளர் நலமே நலம்வளர் நடமே
நடநலம் வளர்தரும் ஒளியே
இடம்வளர் வலமே வலம்வளர் இடமே
இடம்வலம் வளர்தரும் இசைவே
திடம்வளர் உளமே உளம்வளர் திடமே
திடவுளம் வளர்தரு திருவே
கடம்வளர் உயிரே உயிர்வளர் கடமே
கடமுயிர் வளர்சிவ பதியே.

உரை : நடனத்தின்கண் விளங்கும் நலமும், நலம் பெருகும் நடனமும், நடன நலங்களைத் திகழ்விக்கும் சிவவெளியும், இடப் பாலால் சிறப்புறும் வலப்பகுதியும், வலத்தால் பொலியும் இடப்பாலும், இடமும், வலமுமாய் இசைந்திருக்கும்பொருளிசைவானவனும், திண்மை

யிடம் பெறும் உள்ளமும், உள்ளத்தால் சிறப்புறும் மனத்திண்மையும், இரண்டின் அமைதியால் எய்த வரும் செல்வனும், உடம்பின்கண் மேம்படும் உயிரும், உயிராற் பேணப்படும் உடம்பும், உடம்பும் உயிருமாய் நலம் பெறுவிப்பவனுமாகிய சிவபதியே வணக்கம். எ.று.

நடம் - அம்பலத்தாடும் திருக்கூத்து. அதனால் ஆன்மாக்கள் ஞானவொளி பெறுதலால், "நடநலம் வளர் தரும் ஒளியே" என்று நவில்கின்றார். இடம் - சிவனுடைய இடப்பாகமாகிய உமை கூறு. வலம் - சிவம் விளங்கும் இடம். சத்தியும் சிவமுமாய் இயைந்து உலகியல் நடைபெற உதவுவதால், "இடம் வலம் வளர் தரும் இசைவே" என இசைக்கின்றார். திடம் - ஞானத் திண்மை. திண்ணிய உள்ளத்தின்கண் ஞான நலம் விளங்குதலால், "திடவுளம் வளர்தரு திருவே" என்று தெரிவிக்கின்றார். திரு - விரும்பப்படும் தன்மை. கடம் - உடம்பு. மட் குடம் போல் நிலையின்றிக் கெடுவதாகலின் உடம்பைக் கடம் என்று குறிக்கின்றார்; ஆகுபெயர். உடம்பிலுள்ள உயிரின்கண் உள்ளுணர்வாய் ஒன்றியிருப்பதைப்பற்றி, "கடமுயிர் வளர் சிவபதியே" என்று கூறுகின்றார்.

இதனால், நடநல ஒளியும், இடம் வலம் அமைந்த இசைவும், திடவுளத்து வளரும் திருவும், கடமுயிர் வளர் பதியும் சிவபதி என்று விளக்கியவாறும். (8)

4251. அதுவளர் அணுவே அணுவளர் அதுவே
அதுவணு வளர்தரும் உறவே
விதுவளர் ஒளியே ஒளிவளர் விதுவே
விதுஒளி வளர்தரு செயலே
மதுவளர் சுவையே சுவைவளர் மதுவே
மதுவுறு சுவைவளர் இயலே
பொதுவளர் வெளியே வெளிவளர் பொதுவே
பொதுவெளி வளர்சிவ பதியே.

உரை : அதுவெனக் குறிக்கப்படும் பொருள் உருவாக்கும் அணுவும், அணுக்களால் செறிந்து திகழும் அதுவாகிய பொருளும், இரண்டாலும் பொருண்மையுறும் உறவானவனும், சந்திரனிடத்தெழும் ஒளியும், ஒளிமிகுதற்கு முதலாகிய சந்திரனும், இரண்டால் இயையும் இருள் நீக்கமானவனும், தேனிடத்திருக்கும் இனிமைச் சுவையும், இச்சுவையை மிகுவிக்கும் தேனும், தேனின் சுவையாய்த் திகழும் அழகானவனும், அம்பலத்தில் விளக்கமுறும் சிவவெளியும், சிவவெளியில் இடம் பெறும் ஞான அம்பலமும், இரண்டுமாகிய சிவபதியே வணக்கம். எ.று.

அணுக்கள் காரண வடு எனவும், வகைப்படுதலின் ஊனமாகிய காரண அணுவை அது எனக் குறிக்கின்றார். காரண காரியமாகிய இருவகை அணுக்களும் இயைந்து உருவாதற்கு இறையருள் ஏதுவாதலால், "அதுவணு வளர் தரும் உறவே" என்று உரைக்கின்றார். விது - சந்திரன். மது - தேன். தேனின் சுவை நலம் மிகுதற்கு இறைவன் திருவருள் இன்றியமையாமை தோன்ற, "மதுவுறு

சுவை வளர் இயலே" என்று கூறுகின்றார். பொது - அம்பலம். அம்பலத்துக்கு இடம் ஞானகாசமாதலின், "பொது வளர் வெளி" என்று புகல்கின்றார். இரண்டிலும் இறைவனது ஞான நாடகம் நடைபெறுதல் தோன்ற, "பொது வெளி வளர் சிவபதியே" என்று உரைக்கின்றார்.

இதனால், அணுக்கள் இடையே நிலவும் இயையும், சந்திரனிடத்து திகழும் ஒளியின் செயலும், மதுவின் சுவையும், சிதாகாசப் பெருவெளி யில் நிலவும் அம்பலமும் சிவபதியின் விளக்கமாம் எனத் தெரிவித்த வாறும். (9)

4252. நிதிவளர் நிலமே நிலம்வளர் நிதியே
நிதிநிலம் வளர்தரு நிறைவே
மதிவளர் நலமே நலம்வளர் மதியே
மதிநலம் வளர்தரு பரமே
கதிவளர் நிலையே நிலைவளர் கதியே
கதிநிலை வளர்தரு பொருளே
பதிவளர் பதமே பதம்வளர் பதியே
பதிபதம் வளர்சிவ பதியே.

உரை : செல்வம் பயக்கும் நிலமும், நிலத்திடைப் பெருகும் செல்வமும், நிதியும் நிலமுமாய் நிறைபவனும், அறிவின்கண் அமையும் நலமும், நலம் தரும் அறிவும், அறிவு நலம் விளங்குதற்குரிய மேலாய பரமனும், உயர்கதி அமைந்த நிலையமும், மேனிலை தோறும் உள்ள கதி வகையும், இரண்டாலும் இயைந்த செம்பொருளானவனும், பதியாய் விளங்குதற்கிடமாகிய பதமும், பதந்தோறும் நின்று நிலவும் பதிப் பொருளும், பதியும் பதமுமாய்ப் பரானந்தம் அளிப்பவனுமாகிய சிவபதியே வணக்கம். எ.று.

நிதி - செல்வம். உலகியலுக்கு இன்றியமையாத செல்வம் நிலத்தாலும், செல்வத்தால் நிலமும், நிலவளங்களாலும் வாழ்வு நிறைவு பெற்று இன்பம் செய்தலின், "நிதி நிலம் வளர்தரு நிறைவே" என்று சொல்லுகின்றார். மதி - நுண்ணறிவு. நுண்ணறிவால் ஒருவர்க்கு நலம் பெருகுவதும், நலம் பலவுடையவர் நுண்ணறிவினராதலும் இறைவன் திருவருள் காரணமாக இயைவன என்று புலப்படுத்தற்கு, "மதி நலம் வளர்தரு பரமே" என இயம்புகிறார். மதி நலங்கட்கு வேறாய், அவற்றினும் மேலாய் இலகுவது பரமன் செயலாதல் விளங்க, "மதி நலம் வளர்தரு பரமே" எனப் பகர்கின்றார். கதி - உயர் பிறப்புக்கள். ஆன்மாக்கள் செய்யும் நன்ஞான நன்முயற்சிகளுக்கேற்ப அவர்கள் பெறும் கதியும், அக்கதி வாழ்க்கைக்கு இடமாகும் நிலைகளும் வேறுவேறு உளவாதலால், "கதி நிலை வளர்தரு பொருளே" என்று கூறுகின்றார். பதிப் பொருள் விளக்கத்திற்கு அவ்வப் பதங்கள் ஏதுவாதலால், "பதி வளர் பதம்" என்று இயம்புகின்றார்.

இதனால் - நிதி நிலங்கள் பெறும் நிறைவும், மதி நலங்கட்கு மேலாய பரமும், கதி நிலைகட்கு அமைந்த பொருளும், பதி பதங்களும் எல்லாம் சிவபதியின் விளக்கம் என்று தெரிவித்தவாறும். (10)

திருச்சிற்றம்பலம்

# 63. ஞானோபதேசம்

அஃதாவது, வடலூர் அடிகள், இறைவனை நோக்கித் தமக்குத் திருவருள் ஞானத்தை வழங்கி அருளுமாறு வேண்டுவது.

பண் : நட்டராகம்

## கலிவிருத்தம்

4253. கண்ணே கண்மணி யே—கருத்—தேகருத் தின்கனி வே
விண்ணே விண்ணிறை வே—சிவ—மேதனி மெய்ப்பொரு ளே
தண்ணேர் ஒண்மதி யே—எனைத்—தந்த தயாநிதி யே
உண்ணேர் உள்ளொளி யே—எனக்—குண்மை உரைத்தரு ளே.

உரை : கண்ணும் கண்மணியுமாகியவனே! கருத்தும் கருத்தில் விளங்கும் உருக்கமுமாகியவனே! வானமும் வானத்தின்கண் அமைந்த நிறைவுமாகியவனே! சிவமே! ஒப்பற்ற மெய்ப்பொருளே! குளிர்ந்த அழகிய சந்திரன் போன்றவனே! என்னை இவ்வுலகிற் பிறப்பித்த அருட் செல்வனே! உள்ளத்தில் எழுகின்ற உள்ளொளியாகியவனே! எளியோனாகிய எனக்கு, உனது உண்மை ஞானத்தை உரைத்தருளுக. எ.று.

கண்ணிற்குச் சிறந்த உறுப்பாய்ப் பொருள்களைக் காணும் திறமை நல்குவதுபற்றிக் கண்ணோடு நில்லாமல் "கண்மணியே" என்று சிவனைப் பரவுகின்றார். கருத்து - மனம். மனத்துக்கு மாண்பு தருவது உருக்கப் பண்பாதலால், "கருத்தின் கனிவே" என்கின்றார். கனிவு - உருகும் பண்பு. விண்ணிலுள்ள உலகங்கள் எல்லாவற்றிலும் குறைவற நிறைந்திருப்பது சிவம் என்றற்கு, "விண்ணிறைவு" கூறியவர் "சிவமே" எனவும், ஞானிகளின் ஞானத்தால் தெளிய உணரப்பட்டமைபற்றி, "தனி மெய்ப்பொருளே" எனவும் இயம்புகிறார். சிவயோகிகளால் துவாத சாந்தத்தில் காணப்படும், அமுதசந்திரனும் அடங்க, "தண்ணேர் ஒண்மதியே" எனச் சாற்றுகின்றார். கேவலத்தில் மலவிருளிற் செயலற்றுக் கிடந்த ஆன்மாவாகிய தன்னைச் சகலத்தில் உடம்பொடு கூடிப் பிறப்பித்தற்குக் காரணம் சிவத்தின் தனிப் பெருங் கருணை என்பது தெரிவிக்க, "எனைத் தந்த தயாநிதியே" என எடுத்துரைக்கின்றார். நன்மக்கள்தோறும் உள்ளத்தின்கண் உள்ளொளியாய் உணர்வு தந்தருளும் உயர்வு விளங்க, "எனக்கு உண்மை உரைத் தருளே" என வேண்டுகிறார்.

இதனால், சிவபெருமானுடைய நலங்களையும் ஓதித் துதித்து, உண்மை ஞானத்தை உரைத்தருளுமாறு வேண்டுவதாம். இதுவே கருத்தாக வரும் பாட்டுக்கட்கும் உரைத்துக் கொள்க. (1)

4254. வளியே வெண்ணெருப் பே—குளிர்—மாமதி யேகன லே
வெளியே மெய்ப்பொரு ளே—பொருள்—மேவிய மேனிலை யே
அளியே அற்புத மே—அமு—தேஅறி வேஅர சே
ஒளியே உத்தம னே—எனக்—குண்மை உரைத்தரு ளே.

உரை : காற்றும், காற்றிற்றோன்றிய தூய நெருப்பும், குளிர்ந்த சந்திரனும், வெவ்விய கனலும், பரவெளியும், அங்கே நிலவும் பரம் பொருளும், அப்பொருளிருக்கும் பரநிலையும், அருளும், அற்புதமும், அமுதும், அறிவும், அருளரசும், ஒளியும், உத்தமனுமாகிய சிவ பெருமானே எனக்கு உண்மை ஞானத்தை உரைத்தருள்க. எ.று.

வளி - காற்றாகிய பூதம். காற்றினின்று தீ தோற்றிற்று என்பவாகலின் நெருப்பு எனவும், பூதமாகிய தொடக்க நிலையில் காற்று நிலவும் வெளிமயமாய்த் தூயதாய் இருந்தமையின், "வெண்ணெருப்பே" எனவும் கூறுகின்றார். மதியினிடத்துத் தட்பமும் கனலிடத்து வெப்பமும் விளங்குதலால், "குளிர் மாமதி" என்றும், "கனல்" என்றும் உரைக் கின்றார். வெளி - பூதங்கள் ஐந்தையும் தன்கண் ஒடுக்கி நிற்கும் பரவெளி. மெய்ப்பொருளாகிய பரம்பொருட்கு இடம் கூறுவார், "மேனிலை" எனப்படுகிறது. அளி - அருள். ஒளி - ஞான ஒளி. (2)

4255. அன்பே என்னர சே—திரு—அம்பலத் தாரமு தே
என்பே உள்ளுரு கக்—கலந்—தென்னு ளிருந்தவ னே
இன்பே என்னறி வே—பர—மேசிவ மேயென வே
உன்பே ரோதுகின் றேன்—எனக்—குண்மை உரைத்தரு ளே.

உரை : அன்பும், அருளரசும், அம்பலத்தாடும் அமுதாயவனும், என் உடலிடத்து எலும்பும் உள்ளே உருகுமாறு கலந்து எனக்குள் இருப்பவனும், இன்பமும், என்னறிவும், பரம்பொருளும், சிவமுமாய வனே என்று உன் திருப்பெயரையே எடுத்து ஓதுகின்றேனாதலால் எனக்கு உண்மை ஞானத்தை உரைத்தருள்க. எ.று.

அன்புருவாயும் அருளுருவாயும் விளங்குதலால், "அன்பே அரசே" எனக் கூறுகின்றார். உருகாத எலும்பும் உருகச்செய்தல்பற்றி, "என்பு உள்ளுருக" என்கின்றார். உயிர்க்குயிராய் உணர்விற் கலந் துறைதலால், "என்னுள் இருந்தவனே" என இயம்புகின்றார். பரம் - பரம்பொருள். பேர் என்றவிடத்துத் தேற்றேகாரம் தொக்கது. (3)

4256. தனையா வென்றழைத் தே—அருட்—சத்தி யளித்தவ னே
அனையா யப்பனு மாய்—எனக்—காரிய னானவ னே
இனையா தென்னையு மேல்—நிலை—ஏற்றுவித் தாண்டவ னே
உனையான் ஏத்துகின் றேன்—எனக்—குண்மை உரைத்தரு ளே.

உரை : மகனே எனக் கூவியழைத்துத் திருவருளைத் தந்தருளிய பெருமானே! அம்மையும் அப்பனும் ஆசிரியனுமானவனே! வருந்தா வண்ணம் என்னை உயர்நிலையில் ஏற்றுவித்து ஆட்கொண்டவனே! உன்னையே பராவுகின்றேனாதலால் எனக்கு அருள் ஞானம் வழங்குக. எ.று.

தனயன் - மகன். திருவருள் சத்தி மயமாதலால் "அருட் சத்தி" எனப்படுகிறது. ஆரியன் - அறிவு தரும் அருமைபற்றி ஆசிரியனை ஆரியன் எனச் சிறப்பிக்கின்றார். இளைதல் - வருந்துதல். மேல் நிலை. உயர்ந்த ஞான நிலை. உயர்நிலையில் ஏற்றி மீளவும் கீழ்மைக்கண் விழாதபடிக் காத்தலால், "ஆண்டவனே" எனக் கூறுகின்றார். (4)

4257. துப்பார் செஞ்சுட ரே—அருட்—சோதி சுகக்கட லே
அப்பா என்னர சே—திரு—வம்பலத் தாரமு தே
இப்பா ரிற்பசிக் கே—தந்த—இன்சுவை நல்லுண வே
ஒப்பாய் ஒப்பரி யாய்—எனக்—குண்மை உரைத்தரு ளே.

உரை : பவளம் போற் சிவந்த ஒளியாயவனே! அருள் ஞான ஒளியாய் இன்பக் கடல் போன்றவனே! எனக்குத் தந்தையே! அருளரசே! அம்பலத்தாடும் அமுதாயவனே! இவ்வுலகில் என் பசியறிந்து நல்கப்படும் இனிய சுவையுடைய நல்ல உணவாய் இன்பம் தருபவனே! ஒப்பும் ஒப்பின்மையும் உடையவனே! எனக்கு உண்மை ஞானத்தை வழங்கியருள்க. எ.று.

துப்பு - பவளம். அருள் ஞானத்தால் விளையும் பயன் எல்லையற்ற இன்பப்பெருக்காதலால், "அருட் சோதிச் சுகக் கடலே" எனவும், அம்பலத்தாடும் சிவனுடைய திருக்காட்சி அமுதம் போல் இன்பம் செய்வதுணர்த்தற்கு, "அம்பலத் தாரமுதே" எனவும் இயம்புகிறார். உணவிடை நிலவும் இனிமையும் நன்மையும் சிவமே என உணரும் திறம் புலப்பட, "இன்சுவை நல்லுணவே" என்று கூறுகிறார். பசித் துன்னும் உணவு இனிமையும் நன்மையும் தருதலால், "பசிக்குத் தந்த இன்சுவை நல்லுணவே" என்று சிறப்பிக்கின்றார். உருவாகிய வழி ஒப்புடைமையும், அருவமாகிய வழி ஒப்பின்மையும் கூறலாவதுபற்றி, "ஒப்பாய் ஒப்பரியாய்" என்று உரைக்கின்றார். (5)

4258. என்றே யென்று ளுறுஞ்—சுட—ரேஎனை ஈன்றவ னே
நன்றே நண்பெனக் கே—மிக—நல்கிய நாயக னே
மன்றோர் மாமணி யே—சுக—வாழ்க்கையின் மெய்ப்பொரு ளே
ஒன்றே யென்றுணை யே—எனக்—குண்மை உரைத்தரு ளே.

உரை : சூரியனே! சூரியனுக்கு உள்ளிருக்கும் சுடரொளியே! என்னைப் பெற்ற தந்தையே! எனக்கு நன்மையும் நட்பும் மிகைபடத் தந்தருளிய தலைவனே! அம்பலத்தாடும் பெரிய மணி போல்பவனே! இன்ப வாழ்வுக்கேதுவாகிய மெய்ப்பொருளே! ஒன்றாகிய பரம்பொருளே! எனக்குச் சிறந்த துணைவனே! எனக்கு உண்மை ஞானத்தை வழங்குக. எ.று.

ஈன்றவன் - தந்தை. அருள் மிகுதி பற்றி, "மிக நல்கிய நாயகனே" என்று கூறுகிறார். மன்று - சபை. பொய்ப்பொருள் துன்பம் தருவதாதலால், "சுக வாழ்க்கையின் மெய்ப்பொருளே" என்கின்றார். பரமாம்

பொருள் ஒன்றே என்பது பற்றி, "என்று" எனவும், ஒன்றுயினும் உயிர்க்கு அதுவே துணையாதல்பற்றி, "துணையே" எனவும் இயம்புகின்றார். (6)

4259. திருவே தெள்ளமு தே—அருட்—சித்த சிகாமணி யே
கருவே ரற்றிட வே—களை—கின்றவென் கண்ணுத லே
மருவே மாமல ரே—மலர்—வாழ்கின்ற வானவ னும்
உருவே என்குரு வே—எனக்—குண்மை உரைத்தரு ளே.

உரை : திருவே, தெளிந்த அமுதமாகியவனே, அருளுருவே, மனத்தின் உச்சியில் திகழும் ஞான மணியே, பிறவிக்குக் காரணமாகிய வேரை நீக்கியருள்கின்ற கண்ணுதற் கடவுளே, மணமும், மணமுடைய அழகிய மலருமாயவனே, தாமரைப்பூவில் எழுந்தருளும் தேவனாகிய பிரமனது உருவானவனே, எனக்குக் குருவே, எனக்கு உண்மை ஞானத்தைத் தந்தருள்க. எ.று.

திரு - விரும்பப்படும் தன்மை. அருளாளரின் உள்ளத்தின் உச்சியில் விளக்கமுறும் ஞான மணியாய் விளங்குவது தோன்ற, "அருட் சித்த சிகாமணியே" என்று புகழ்கின்றார். கரு - பிறப்பு. பிறப்புக்குக் காரணமாகிய மலத்தொடர்பை நீக்கி அருள்வதுபற்றி, "வேரற்றிடவே களைகின்ற கண்ணுதலே" என்று குறிக்கின்றார். கண்ணுதல் - நெற்றியில் கண்ணையுடைய சிவனாகிய ஞானமூர்த்தி என்பதாம். மரு - மணம். வானவன் - ஈண்டுத் தேவதேவனாகிய பிரமன் மேல் நின்றது. (7)

4260. தடையா வுந்தவிர்த் தே—எனைத்—தாங்கிக்கொண் டாண்டவ னே
அடையா யன்பிலர் பால்—எனக்—கன்பொடு தந்தபெ ருங்
கொடையாய் குற்றமெ லாங்—குணங்—கொண்ட குணக்குன்ற மே
உடையாய் உத்தம னே—எனக்—குண்மை உரைத்தரு ளே.

உரை : என் வாழ்வுக்குத் தடை செய்வன அனைத்தையும் போக்கி என்னைத் தாங்கிக்கொண்டு யான் உய்தி பெறச் செய்தவனே! அன்பில்லாதவரிடத்து நீ செல்லாய் எனினும் எனக்கு அன்புடன் வேண்டுவன தந்த பெருமானே! என் குற்றமெல்லாவற்றையும் குணமாகக்கொண்டு ஆதரிக்கும் குணக் குன்றாகியவனே! எல்லாமுடைய உத்தமனே! எனக்கு உண்மை ஞானத்தை உரைத்தருள்க. எ.று.

தடை - ஞான வாழ்வுக்கு இடையூறு செய்யும் காம வெகுளி முதலிய குற்றங்கள். காமமும் வெகுளியும் மயக்கமும் முற்றவும் தவிர்க்கப்படுவன அல்லவாதலின், அவை மீள மீள வந்து தாக்கா வண்ணம் காத்தற்கு இறைவன் திருவருள் இன்றியமையாததாகலின் அதனைச் சிறப்பித்துத் "தடை யாவும் தவிர்த்து என்னைத் தாங்கிக் கொண்ட ஆண்டவனே" என்று பாராட்டுகின்றார். அன்பிலார், சிவனை

நினையாராதலின் அவரைச் சிவன் அடைவதிலன் என்பது விளங்க, "அடையா அன்பிலர்" என்கின்றார். அடையாது என்னும் வினையெச்சம் ஈறு கெட்டது. அன்பு என்பது ஞானமாதலின் அந்த ஞானிகட்கு இறைவன் தனது திருவருளைப் பெருக நல்குவது பற்றி, "பெருங் கொடையாய்" என்று போற்றுகின்றார். குற்றம் புரிவது மக்கட்கு இயல்பு என்பது பற்றி, "குற்றமெலாம் குணம் கொண்ட குணக்குன்றமே" என்று கூறுகின்றார். உயிர்களைத் தனக்கு அடிமையாகவும், அவற்றின் உடல் பொருள்களைத் தனக்கு உடைமையாகவும் கொண்டவனாதலின், இறைவனை, "உடையாய்" என்று உரைக்கின்றார். (8)

4261. பெண்ணாய் ஆணுரு வாய்—எனைப்—பெற்றபெ ருந்தகை யே
அண்ணா என்னர சே—திரு—வம்பலத் தாடுகின் றோய்
எண்ணா நாயடி யேன்—களித்—திட்டவு ணவையெ லாம்
உண்ணா துண்டவ னே—எனக்—குண்மை உரைத்தரு ளே.

உரை : பெண்ணாகவும் ஆணாகவும் கூடி என்னை ஈன்றருளிய பெருந்தகையே! எனக்கு அண்ணனே, அரசே, திருச்சிற்றம்பலத்தில் ஆடல் புரிகின்ற பெருமானே! நின் பெருமையை அறியாத அடியேன் விரும்பியுண்ட உண்பொருள்களை உண்ணாமல் உண்டருளிய முதல்வனே! எனக்கு உண்மை ஞானத்தை உரைத்தருள்க. எ.று.

தாயும் தந்தையுமாய் நின்று அருள் புரிபவனாதலால் சிவனை, "பெண்ணாய் ஆணுருவாய் எனைப் பெற்ற பெருந்தகையே" என்று பராவுகின்றார். "ஆணும் பெண்ணுமாய் அடியார்க்கு அருள் நல்கிச் சேண் நின்றவர்க்கு இன்னும் சிந்தை செய வல்லான்" (நாகைக்கா) என்று ஞானசம்பந்தர் உரைப்பது காண்க. தாம் நுகர்வன பலவற்றையும் இறைவன் உடனிருந்து நுகர்கின்றான் என்னும் கருத்தினராதலின் வடலூர் வள்ளல், "நாயடியேன் களித்திட்ட உணவையெலாம் உண்ணாது உண்டவனே" என்று உரைக்கின்றார். "நன் செயலற்றிருந்த நாமற்ற பின் நாதன்தன் செயல் தானே யென்றும் தீபற" (உந்தி) என்ற சான்றோர் கூற்று ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. (9)

4262. நந்தா லுங்கடந் தே—ஒளிர்—ஞானச பாபதி யே
பொன்னா ருஞ்சபை யாய்—அருட்—பூரண புண்ணிய னே
என்னால் ஆவதொன் றும்—உனக்—கில்லையெ னினுமெந் தாய்
உன்னால் வாழுகின் றேன்—எனக்—குண்மை உரைத்தரு ளே.

உரை : நந்நான்காக விரியும் சரியை முதலிய நான்கின் நிலைகளையும் கடந்து விளங்கும் ஞானசபைக்குத் தலைவனே! பொற்சபையிற் பொலிபவனே! திருவருள் பூரணமாக நிறைந்த புண்ணிய மூர்த்தியே! என்னால் உனக்கு ஆவது ஒன்றுமில்லையாயினும் எந்தையே, நான் உன்னருளால் வாழ்கின்றேன்; ஆதலால், எனக்கு உண்மை ஞானத்தை உரைத்தருள்க. எ.று.

சரியை முதலிய நந்நான்காவன: சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையிற் யோகம், சரியையிற் ஞானம்; கிரியையிற் சரியை, கிரியையிற் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம்; யோகத்திற் சரியை, யோகத்திற் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம்; ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என வரும். இப் பதினாறும் பெறப்படும் பதானுபவங்களைக் கடந்து நிற்பதுபற்றிச் சிவபெருமானை, "நந்நாலும் கடந்தே ஒளிர் ஞான சபாபதியே" என்று நவில்கின்றார். பொன்னாருஞ்சபை - பொற்சபை; அஃதாவது பொன் வேய்ந்த சபை. அருளே உருவானவனாதலால் இறைவனை, "அருட் பூரண புண்ணியன்" என்று புகழ்கின்றார். உயிர் வாழ்க்கைக்குத் திருவருளே ஆதாரமாவது பற்றி, "உன்னால் வாழ்கின்றேன்" என்று உரைக்கின்றார். (10)

திருச்சிற்றம்பலம்

## 64. ஆரமுதப் பேறு

அஃதாவது, திருவருள் ஞானமாகிய பெறற்கரிய அமுதத்தைத் தாம் பெற்றமைக்கு, மகிழ்ச்சி மிகுந்து சிவனை வணங்கித் துதித்துப் பாடுவதாகும்.

பண் : நட்டராகம்

### கலிவிருத்தம்

**4263. விரைசேர் பொன்மல ரே—அதில்—மேவிய செந்தே னே**
**கரைசேர் முக்கனி யே—கனி—யிற்சுவை யின்பய னே**
**பரைசேர் உள்ளொளி யே—பெரும்—பற்றம்ப லநடஞ் செய்**
**அரைசே தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.**

**உரை :** மணம் கமழும் பொன்மலர் போன்றவனே! அதன்கண் ஊறுகின்ற செவ்விய தேனாகியவனே! நீர்க்கரையில் நிற்கும் மா, பலா, வாழை ஆகிய மூவகை மரத்துக் கனி போல்பவனே! அக்கனியின்கண் சுவைக்கப்படும் இனிமையின் விளைவாகியவனே! சிவசத்தியின் உள்ளே ஒளிரும் அருளொளியே! பெரும்பற்றப் புலியூர்க் கண்ணுள்ள அம்பலத் தாடும் அருளரசே! எனக்கு நினது திருவருள் ஞானமாகிய அரிய அமுதத்தைத் தந்தருளினாய்; நினக்கு யான் என்ன கைம்மாறு செய்வேன். எ.று.

பொன்னாலாகிய மலர் சிவமணம் கமழ்வது போலச் சிவன் திருமேனி விளங்குதலால், "விரைசேர் பொன் மலரே" என்று விளம்புகிறார்; நீர்நிலைகளில் கரைமேல் நிற்கும் மாவும் பலாவும் வாழையு மாகிய மூவகை மரங்களையும் நினைவுறுத்தற்கு, "கரைசேர் முக்கனியே"

என்று கூறுகின்றார். ஒளி யுருவாகிய சத்தியிடமாகச் சிவம் நிற்கும் உண்மை புலப்பட, "பரைசேர் உள்ளொளியே" என்று பகர்கின்றார். பெரும்பற்றப் புலியூரிலுள்ள திருச்சிற்றம்பலம், "பெரும் பற்றம்பலம்" என வந்தது. அருளாரமுதம் - திருவருள் ஞானமாகிய அமுதம். பெறலருமை பற்றி இஃது ஆரமுதம் எனப்படுகிறது. யான் யாது கைம்மாறு செய்வேன் என்பது குறிப்பெச்சம்.

இதனால், திருவருள் ஞானத்தைப் பெற்ற, வடலூர், அடிகள் அதனைத் தந்தருளிய நலத்தை வியந்து தமது கைம்மாறு செய்ய மாட்டாமையைச் சொல்லித் துதித்தவாரும். இதனைப் பின்வரும் ஒவ்வொரு பாட்டுரையிலும் உரைத்துக் கொள்க. (1)

4264. விண்ணார் செஞ்சுட ரே—சுடர்—மேவிய உள்ளொளி யே
தண்ணார் வெண்மதி யே—அதில்—தங்கிய தண்ணமு தே
கண்ணார் மெய்க்கன லே—சிவ—காமப்பெண் காதல னே
அண்ணா தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை : வானத்துலவும் சிவந்த ஒளியையுடைய சூரியனாகிய வனே! அச்சூரிய வொளிக்குள் ஒளிரும் உள்ளொளியாகியவனே! குளிர்ச்சி நிறைந்த வெண்மையான சந்திரனாகியவனே! அச்சந்திர னிடத்துப் பொருந்திய தண்ணிய அமுதாகியவனே! கண்ணிறைந்த பொருளாகிய நெருப்பாகியவனே! சிவகாமியாகிய தெய்வப்பெண்ணின் கணவனே! தலைவனே! எனக்கு நினது அரிய அருள் ஞான வமுதத் தைத் தந்தனையாதலால் யான் யாது கைம்மாறு செய்வேன். எ.று.

செஞ்சுடர் - சூரியன். "அந்தியில் அருக்கனாவான் அரனுரு வல்லனோ" (ஆதிபுரா) எனத் திருநாவுக்கரசர் முதலிய சான்றோர் கூறுதலால், "விண்ணார் செஞ்சுடரே" என்று விளம்புகின்றார். சந்திரனும் அப்பெருமான் உரு என்பது பற்றி, "தண்ணார் வெண் மதியே" என்று சாற்றுகின்றார். சந்திரனிடத்துத் தண்ணிய அமுதம் உளது என்பது பண்டையோர் கருத்தாதலால், "அதில் தங்கிய தண்ணமுதே" என்று உரைக்கின்றார். அமுதம் உடைமை பற்றிச் சந்திரனை மதி என்பது வழக்காயிற்று. மது - மதுவை உடையவது மதி என அறிக. மெய்க்கனல் - உருவாகிய நெருப்பு. கண்ணிறைந்த காட்சியாவதால் கனல், "கண்ணார் மெய்க்கனல்" எனப்படுகிறது. சிவகாமப் பெண் - சிவகாமி எனப்படும் உமாதேவி. தில்லையில் உமா தேவிக்குச் சிவகாமி என்பது பெயர். (2)

4265. துப்பார் செஞ்சடை யாய்—அருட்—சோதிச் சுகக்கடலே
செப்பா மேனிலைக் கே—சிறி—யேனைச் செலுத்திய வா
எப்பா லும்புக ழும்—பொது—இன்ப நடம்புரி யும்
அப்பா தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை : பவளம் போற் சிவந்த சடையை யுடையவனே! திருவருட் சோதியாகிய இன்பக்கடலே! சொல்லுதற்காகாத மேனிலைக் கண் சிறியவனாகிய என்னை உய்த்தருளியவனே! எவ்விடத்தும் யாவரும்

**புகழ்ந்து போற்றும் அம்பலத்தின்கண் திருக்கூத்தாடும் தந்தையே! உனது திருவருள் ஞானமாகிய அரிய அமுதத்தை அளித்தாயாதலால் நான் என்ன கைம்மாறு செய்வேன். எ.று.**

துப்பு - பவளம். திருவருள் ஞானமாகிய அருளொளி எல்லையில்லாத இன்பப் பெருக்காதலால், "அருட்சோதிச் சுகக்கடலே" என்று சொல்லுகின்றார். சிவஞானனந்தப் பெருநிலை, சொல்லின் எல்லை கடந்த தென்றற்கு, "செப்பா மேனிலை" என்று தெரிவிக்கின்றார். சிறுமை யுடையவனாயினும், சிறுமை கருதாமல் என்னை அச்சிவானந்த மேனிலைக்கண் வைத்தருளத் திருவுளம் கொண்டனை யென்பாராய், "சிறியேனைச் செலுத்தியவா" என்று போற்றுகின்றார். எப்பாலும், நிலவுலகில் எவ்விடத்தில் வாழ்பவரும் வியந்து போற்றுவது திருச் சிற்றம்பலம் என்றற்கு, "எப்பாலும் புகழும் பொது" என்று புகல் கின்றார். இன்ப நடம் - காண்பார்க்கு இன்பம் விளைவிக்கும் நடனம். (3)

4266. மெய்யா மெய்யரு ளே—என்று—மேவிய மெய்ப்பொரு ளே
கையா ருங்கனி யே—நுதற்—கண்கொண்ட செங்கரும் பே
செய்யாய் வெண்ணிறத் தாய்—திருச்—சிற்றம்ப லநடஞ் செய்
ஐயா தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை: நிலையாயவனே! மெய்ம்மை பொருந்திய அருளாளர் உள்ளத்தில் என்றும் உள்ளதாகிய மெய்ப்பொருளே! கையிற் கொண்ட கனி போன்றவனே! நெற்றியில் கண்ணையுடைய செங்கரும்பு ஒப்பவனே! திருநீற்றால் வெண்மை நிறமுடைய பெருமானே! திருச் சிற்றம்பலத்தின்கண் நடம் புரிகின்ற ஐயனே! எனக்கு உன்னுடைய அருள் ஞானமாகிய அரிய அமுதத்தைத் தந்தருளினையாதலால் யான் யாது கைம்மாறு செய்வேன். எ.று.

மெய்யன் - என்றும் உள்ள பொருளாயவன். மெய்ம்மைப் பண்பு சான்ற திருவருள் ஞானத்தையுடைய பெருமக்கள் திருவுள்ளத்தைக் கோயிலாகக் கொண்டவனாதலால், "மெய்யர் உள்ளே என்றும் மேவிய மெய்ப்பொருளே" என விளம்புகின்றார். சந்தேக விபரீத ஞானங்கட் கிடமின்றித் தெள்ளிதின் விளங்குதலால், "கையாருங் கனியே" என்று கூறுகின்றார். செய்யாய் - செம்மை நிறமுடையவனே. செம்பொன்னின் நிறமுடைமை பற்றிச் "செய்யாய்" எனவும், வெண்ணிறத் திரு நீறணிந்து விளங்குதலால், "வெண்ணிறத்தாய்" எனவும் இயம்பு கின்றார். ஐயன் - தலைவன். (4)

4267. பொறிவே றின்றி நினை—நிதம்—போற்றும் புனிதரு ளே
குறிவே றின்றி நின்ற—பெருஞ்—சோதிக் கொழுஞ்சுட ரே
செறிவே தங்களெ லாம்—உரை—செய்ய நிறைந்திடும் பேர்
அறிவே தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை: அறிவால் வேறே எப்பொருளையும் நோக்குதலை யொழித்து உன்னையே நாடோறும் அறிவொன்றிப் போற்றுகின்ற தூய

சிவஞானிகளின் திருவுள்ளத்தின்கண் வேறு குறிப்பின்றி நின்று திகழும் பெரிய சோதியையுடைய கொழுவிய சுடராகிய சிவனே! செறிந்த வேதங்கள் யாவும் துதிக்க, எங்கும் புகழ் நிறைந்து விளங்கும் பேரறிவுருவாகிய பெருமானே! நினது திருவருளாகிய ஞானவமுதத்தை எனக்குத் தந்தருளினையாதலால் யான் நினக்கு யாது கைம்மாறு செய்வேன். எ.று.

பொறி - அறிவு. கண் முதலிய பொறி புலன்களால் எய்தப்படுவதால் அறிவு பொறியெனப்படுகிறது. சிவபெருமானாகிய மெய்ப் பொருளையன்றி வேறே யாதும் நோக்காமை விளங்க, "வேறின்றி நிதம் போற்றும் புனிதர்" என்கின்றார். நிதம் - நாடோறும். புனிதர் - தூய சிவஞானிகள். குறிப்பு - மறக் கருணை நோக்கம். பொருள் நிறைந் திருக்கின்றமையால், "செறி வேதம்" என்று சிறப்பிக்கின்றார். உரை செய்தல் - புகழ்தல். நல்லறிவுடைய சான்றோர் யாவரும் எப்போதும் இடையறவின்றி ஓதுதல் விளங்க, "உரை செய்ய நிறைந்திடும் பேரறிவே" எனப் பராவுகின்றார். அறிவுருவானவனை "அறிவு" என்பது உபசார வழக்கு. (5)

4268. முத்தா முத்தரு ளே—ஒளிர்—கின்ற முழுமுத லே
சித்தா சித்திள லாந்—தர—வல்ல செழுஞ்சுட ரே
பித்தா பித்தனெ னை—வலித்—தாண்ட பெருந்தகை யே
அத்தா தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை: முத்தியின்பத்தை நல்கும் பெருமானே! முத்தன்மாக்களின் திருவுள்ளத்தின்கண் எழுந்தருளி, ஞானவின்பவொளியைச் செய்யும் முழுமுதற் பரம்பொருளே! அன்பர்களின் சித்தத்தில் இருப்பவனே! சித்தி வகைகள் யாவையும் தரும் செழித்த ஞானச் சுடரே! அன்பு செய்பவர் மனத்தின்கண் பிரியாப்பித்தை உண்டு பண்ணுபவனே! நின்பாற் பித்துக் கொண்ட எளியவனாகிய என்பால் வலிய வந்து ஆண்டருளிய பெருந்தகைமைப் பெருமானே! தந்தையே எனக்கு உனது அரிய அருள் ஞான வமுதினைத் தந்தனையாதலால் யான் யாது கைம்மாறு செய்வேன். எ.று.

முத்தி - சிவபோகப் பேறு. முத்தி பெறுதற்குச் சமைந்த ஞான வான்களை முத்தான்மாக்கள் என்பர். முத்தான்மாக்களின் தூய்மையே யுருவான சிந்தையின்கண்: எப்பொழுதும் எழுந்தருளுதலால், "முத்தர் உள்ளே ஒளிர்கின்ற முழுமுதல்" என மொழிகின்றார். குறைவற நிறைந்த முதற் பொருள் முழுமுதற் பொருளாம் என அறிக. சித்தி வகை: காரியசித்தி, யோகசித்தி, ஞானசித்தி என வரும். அணிமா முதலிய எண்வகைச் சித்திகள் என்றலும் உண்டு. பித்தன் - பித்தேற்றுபவன். பித்தேறியவனும் பித்தனாதலால், பித்தன் எனத் தம்மையே வடலூர் வள்ளல் குறிக்கின்றார். நினைவின்றித் திரிந்த தம்மைப் பொருளாக நினைந்தருளித் தன்னையே நினைந்தொழுகுமாறு செய்தமை யுரைப்பாராய் வடலூர் வள்ளல், "பித்தன் எனை வலிந் தாண்ட பெருந்தகையே" என்று போற்றுகின்றார். பொருளாகாத வரையும் பொருளாகக் கருதிப் பேணுவது பெருந்தகைமை, அத்தன் தந்தை. (6)

4269. தன்னே ரில்லவ னே—எனைத்—தந்த தயாநிதி யே
மன்னே மன்றிடத் தே—நடஞ்—செய்யுமென் வாழ்முத லே
பொன்னே என்னுயி ரே—உயி—ருள்நிறை பூரண மே
அன்னே தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை : தனக்குவமையில்லாத பெருமானே! என்னையிவ்வுலகிற் பிறப்பித்தருளிய அருட்செல்வனே! அருளரசே! அம்பலத்தின்கண் ஆடலைச் செய்யும் உயிர் வாழ்க்கைக்கு முதற் பொருளாகியவனே! பொன்னிறம் கொண்ட சிவனே! எனக்கு உயிராய் என்னுடைய உயிர் முழுதும் நிறைந்தருளும் பெருமானே! எனக்குத் தாயாகுபவனே! நினது அரிய அருள் ஞானவமுதத்தைத் தந்துளாயாதலால், யான் நினக்கு யாது கைம்மாறு செய்வேன். எ.று.

தனக்குவமையில்லாதவன் என்று சான்றோர் பராவுதலால் சிவனை, "தன்னேர் இல்லவன்" என்று சாற்றுகின்றார். மலவிருளில் கிடந்த தன்னைச் சகல ஒளியில் பிறப்பித்தற்குச் சிவனது பேரருள் காரணமாதல் பற்றி, "எனைத் தந்த தயாநிதியே" என்று புகல்கின்றார். மன் - அரசு. மன் என்னும் பெயர் மன்னே என விளியேற்றது. மன்னன் - அருளரசு. உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத உலகு, உடல், கருவி, கரணம், போகம் ஆகியவற்றை நல்கி வாழச்செய்தலால் சிவ பரம் பொருளை, "வாழ் முதல்" என்று சிறப்பிக்கின்றார். பொன்னிறம் உடையவனைப் "பொன்" என்கின்றார். உயிர் முழுதும் உணர்வாய் நிறைவதுபற்றி, "உயிருள் நிறை பூரணமே" என்று புகல்கின்றார். (7)

4270. ஒளியே அவ்வொளி யின்—நடு—உள்ளொளிக் குள்ளொளி யே
வெளியே எவ்வெளி யும்—அடங்—கின்ற வெறுவெளி யே
தளியே அம்பலத் தே—நடஞ்—செய்யுந் தயாநிதி யே
அளியே தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை : ஒளிப் பொருளாய் அவ்வொளி நடுவில் உள்ள ஒளிக்குள் உள்ளொளியாய் உள்ளவனே! தத்துவாதீத வெளியே! ஏனை வெளி வகை யாவையும் தன்னுள் அடக்கி நிற்கும் பரவெளியாகியவனே! கோயிலாகிய அம்பலத்தின்கண் ஆடியருளும் அருட்செல்வனே! அருளுருவே! எனக்கு நினது அரிய அருள் ஞானத்தைத் தந்தமையால் யான் யாது கைம்மாறு செய்வேன். எ.று.

ஒளிப்பொருள் எல்லாவற்றையும் சிவம் எனக் கருதும் மரபுபற்றி, "ஒளியே" என்று உரைக்கின்றார். ஒளிப் பொருளின் உள்ளும் புறமும் ஒப்ப நிலவுதல்பற்றி, "அவ்வொளியின் நடு உள்ளொளிக்குள் உள்ளொளியே" என்று உரைக்கின்றார். கண்ணுக்குள் மடியும் மடிக்குள் ஒளியும் போல, ஒளியின் நடு உள்ளொளியும் அதன் உள்ளொளியுமாக ஓதியவாறும். மாயா மண்டலத்தின் புற வெளியை "வெளி" எனவும், அவ்வெளியையும் தனக்குள் அடக்கி நிற்கும் பரவெளியை "வெறு வெளி" எனவும் விளம்புகின்றார், தில்லையம்பலமும் கோயிலாகக் கருதப்படுதலால் "தளி" எனப்படுகிறது. அளி - பேரருள். அருளுரு வாதல்பற்றி "அளி" என்று குறிக்கின்றார். (8)

4271. மருளேய் நெஞ்சக னேன்—மன—வாட்டமெ லாந்தவிர்த் தே
தெருளே யோர்வடி வாய்—உறச்—செய்த செழுஞ்சுடரே
பொருளே சிற்சபை வாழ்—வுறு—கின்றவென் புண்ணிய னே
அருளே தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை : மருட்சி பொருந்திய நெஞ்சினையுடைய எனது மனவருத்த மெல்லாம் போக்கித் தெளிவே உருவமாக யான் பொருந்துமாறு செய்தருளி செழுவிய ஞான விளக்கமே! மெய்ப்பொருளாயவனே! ஞான சபையின்கண் எழுந்தருளும் புண்ணியப் பொருளாயவனே! எனக்கு அரிய அருள் ஞானவமுதத்தை நல்கினையாதலால் யான் யாது கைம்மாறு செய்வேன். எ.று.

மக்கட்பிறப்பு மயக்கமுடையதாகலின் தம்மை, "மருளேய் நெஞ்சகனேன்" என்று உரைக்கின்றார்.' "மையல் மானிடமாய் மயங்கும் வழி ஐயனே தடுத்தாண்டு அருள் செய்" எனச் சுந்தர மூர்த்திகள் தெரிவிப்பது காண்க. மையல் காரணமாக மனத்தின்கண் கவலைகள் தோன்றி வாட்டம் செய்தலால், "மனவாட்ட மெலாந் தவிர்த்து" எனவும், அவ்வாட்டங்கள் தெளிவு உடைமையால் நீங்குவது பற்றி, "தெருளே ஓர் வடிவாயுறச்செய்த செழுஞ்சுடரே" எனவும் இயம்புகின்றார். சிவஞானமே பெறக்குரிய பொருளாதலின் அதனை நல்குகின்ற ஞான சபைத் தலைவனுதல்பற்றிச் சிவபெருமானை, "பொருளே சிற்சபை வாழ்வுறுகின்ற என் புண்ணியனே" என்று போற்றுகின்றார். அருளேயுருவாவதுபற்றிச் சிவனை, "அருளே" என்று புகல்கின்றார். (9)

4272. முன்பே என்றனை யே—வலிந்—தாட்கொண்ட முன்னவ னே
இன்பே என்னுயி ரே—எனை—ஈன்ற இறையவ னே
பொன்பே ரம்பல வா—சிவ—போகஞ்செய் சிற்சபை வாழ்
அன்பே தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை : இளமைப் பொழுதிலேயே என்பால் வலிய வந்து என்னை ஆட்கொண்டருளிய முன்னோனாகிய பெருமானே! எனக்கு இன்பமாய், என்னுடைய இனிய உயிராய் என்னைப் பிறப்பித்தருளிய இறைவனே! பெரிய பொன்னம்பலத்தையுடையவனே! சிவபோகத்தைத் தருகின்ற ஞானசபையில் எழுந்தருளும் அன்புருவாயவனே! எனக்குப் பெறற்கரிய திருவருள் ஞானமாகிய அமுதத்தைத் தந்தாயாதலால் யான் யாது கைம்மாறு செய்வேன். எ.று.

மக்கள் எய்தும் பருவங்கள் எல்லாவற்றிலும் இளமை முற்பட்ட தாதலால் அதனை, "முன்பு" எனக் குறிக்கின்றார். அக்காலத்தே சிவ நினைவு இல்லாதிருக்கவும் அந் நினைவைத் தோற்றுவித்து அந் நெறியே ஒழுகச் செய்தமை விளங்க, "என்றனையே வலிய வந்து ஆட்கொண்ட முன்னவனே" என்று மொழிகின்றார். அந் நினைவு செயல்களிலேயே ஒழுகச்செய்தமை பற்றி, "ஆட்கொண்ட" என வுரைக்கின்றார். முன்னவன் - முன்னே பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருள். சிவ வொழுக்கத்தால் இன்பம் எய்தினமை பற்றி, "இன்பே" எனச் சிவனைக்

குறிக்கின்றார். மக்கள் உலகில் பிறப்பித்தமையால், "என்னை ஈன்ற இறையவனே" என்று ஏத்துகின்றார். பொன் வேய்ந்திருத்தலால், "பொன் பேரம்பலம்" எனப்படுகிறது. சிவஞானத்தால் சிவானந்தம் அனுபவிக்கப் படுகின்றமை புலப்படுத்தற்கு, "சிவபோகம் செய் சிற் சபை வாழ் அன்பே" என்றும், அன்பே சிவமாதலால், "அன்பே" என்றும் புகல்கின்றார். (10)

4273. பவனே வெம்பவ நோய்—தனைத்—தீர்க்கும் பரஞ்சுட ரே
சிவனே செம்பொரு ளே—திருச்—சிற்றம் பலநடிப் பாய்
தவநே யம்பெறு வார்—தமைத்—தாங்கி யருள்செய வல்
லவனே தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை: *சிவபெருமானே! வெவ்விய பிறப்பிறப்பாகிய நோயை நீக்கியருளும் பரஞ்சுடராகிய இறைவனே! சிவனே! செம்பொருளே! திருச்சிற்றம்பலத்தில் கூத்தாடுபவனே! தவஞானம் பெற்ற பெருமக்கட்குத் தீங்குண்டாகாவண்ணம் காத்து, வேண்டும் அருளாக் கத்தைத் தரவல்ல பரமனே! எனக்குத் திருவருள் ஞானமாகிய அரிய அமுதத்தைத் தந்தாயாதலால் உனக்கு யான் யாது கைம்மாறு செய்வேன்.* எ.று.

சிவபிரானுக்குரிய பெயர்களில் பவன் என்பது ஒன்று. ஆணவத்தில் செயலற்றுக் கிடக்கும் உயிர்களைத் தனது பேரருளால் சகலத்தில் பிறக்கச் செய்பவன் என்று இதற்குப் பொருள் கூறுவதும் உண்டு. "பவன் எம்பிரான்" (சதகம்) என்று மணிவாசகர் உரைப்பது காண்க. பவநோய், பிறப்பிறப்புக்களால் உண்டாகும் நோய். பிறவா வாழ்க்கையை அருளும் பெருமானாதலின், "வெம்பவ நோய்தனைத் தீர்க்கும் பரஞ்சுடரே" என்று விளம்புகின்றார். துன்பம் தரும் இயல்பினவாதல் பற்றிப் பிறப்பிறப்புக்களை, "வெம்பவ நோய்" என்று கூறுகின்றார். செம்பொருள், செம்பொருளாவது தோற்றக் கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையாற்றன்னை யொன்றுங் கலத்தலின்மையிற் றூய்தாய்த் தானெல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற்பொருள், விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மைத் தாதல் பற்றி அதனை, "செம்பொருள்" என்றார் எனப் பரிமேலழகர் கூறுவது காண்க. தவநேயம் - தவஞானம். தவஞானிகளை முன்னும் பின்னும் நின்ற வினைப் போகம் வந்து தாக்காமைப் பொருட்டுத் தனது திருவருளால் காத்தோம்புவது பற்றிச் சிவபெருமானை, "தவநேயம் பெறுவார்தமைத் தாங்கியருள் செயவல்லவனே" என்று போற்று கின்றார். (11)

4274. தேனாய்த் தீம்பழ மாய்ச்—சுவை—சேர்கரும் பாயமு தம்
தானாய் அன்பரு ளே—இனிக்—கின்ற தனிப்பொரு ளே
வானாய்க் காலன லாய்ப்—புன—லாயதில் வாழ்புவி யாய்
ஆனாய் தந்தனை யே—அரு—ளாரமு தந்தனை யே.

உரை: தேனாகவும், இனிய பழமாகவும், சுவை பொருந்திய கரும்பாகவும், அமுதமாகவும், மெய்யன்பர் உள்ளத்தில் இனிக்கின்ற

ஒப்பற்ற பரம்பொருளே! வானம், காற்று, நெருப்பு, நீர் நிலமாகிய ஐம்பூதங்களானவனே! நினது திருவருளாகிய அரிய அமுதத்தைத் தந்தாயாதலால் யான் யாது கைம்மாறு செய்வேன். எ.று.

ஞானத்தால் சிவனைச் சிந்திப்பவர் உள்ளத்தில் தேனாகவும் இனிய அமுதமாகவும் தித்திக்கின்றவன் என்று சிவனை மணிவாசகர் முதலிய சான்றோர் அனுபவித்ததுபோல, வடலூர் வள்ளலும் அனுபவிக்கின்றாராதலால், "தேனாய்த் தீம்பழமாய்ச் சுவைசேர் கரும்பாய், அமுதம் தானாய் அன்பருளே இனிக்கின்ற தனிப்பொருளே" என்று போற்றுகின்றார். நில முதலிய பூதங்கள் ஐந்தும் சிவத்தின் வடிவம் என்பது ஞான நாட்டமுடைய பெருமக்கள் நாளும் கண்டு மகிழும் காட்சியாதலால் வடலூர் வள்ளலும், "வானாய்க் கால அனலாய்ப் புனலாய் அதில் வாழ் புவியாயானாய்" என்று பரவுகின்றார். (12)

4275. பொடியேற் கும்புய னே—அருட்—பொன்னம் பலத்தர சே
செடியேற் கன்றளித் தாய்—திருச்—சிற்றம் பலச்சுட ரே
கடியேற் கன்னையெ னுஞ்—சிவ—காமக் கொடையுடை யாய்
அடியேற் கின்றளித் தாய்—அரு—ளாரமு தந்தனை யே.

உரை : திருநீறணியும் தோள்களையுடைய சிவபெருமானே! திருவருள் நிலையமாகிய பொன்னம்பலத்தில் எழுந்தருளும் அருளரசே! குற்றம் பொருந்திய எனக்கு முன்பே அருள் ஞானம் வழங்கினையாகவும், திருச்சிற்றம்பலத்தில் விளங்கும் ஞானச் சுடரொளியாய், கடியத் தக்கவனாகிய எனக்குத் தாய் எனப்படும் சிவகாமிவல்லியைத் தேவியாக உடையவனே! இப்பொழுதும் அடியவனாகிய எனக்கு நினது அரிய அருள் ஞானமாகிய அமுதத்தை வழங்கினாய்; இதற்கு யான் யாது கைம்மாறு செய்வேன். எ.று.

பொடி - வெண்பொடியாய்த் திருநீற்றைக் குறிப்பதாயிற்று. இறைவன் திருவருளைப் பெறுதற்கேற்ற இடமாதலின், "அருட் பொன்னம்பலம்" எனப்படுகிறது. செடியேன் - குற்றமுடையவன். செடி - குற்றம். இளமைப் போதிலேயே தமக்குச் சிவநினைவும் திருவருள் ஒழுக்கமும் தோன்றினமை குறித்தற்கு, "அன்று அளித்தாய்" என அறிவிக்கின்றார். தில்லையம்பலத்தில் தமக்குச் சிவபரம்பொருள் அருட்சுடராய்க் காட்சி தந்தமையின், "திருச்சிற்றம்பலச் சுடரே" என்று சிறப்பிக்கின்றார். கடியேன் - விலக்கத்தக்கவன். சிவகாமியாகிய தேவியைச் "சிவகாமக் கொடி" என்று புகல்கின்றார். இளமைப்பொழுதில் தோற்றுவித்ததுபோல முதுமைப்பருவத்தும் அத்திருவருள் உணர்வு தந்து வலியுறுத்தப்பட்டமை விளங்க, "அடியேற்கு இன்றளித்தாய்" எனப் பாராட்டுகின்றார். இளமையில் யான் நினைவின்மையால் கடியத்தக்கவனாய் இருந்தேனாயினும் இப்போது நினக்கு அடியவனாய் ஒழுகுகின்றேன் என்பாராய், "அடியேற்கு இன்றளித்தாய்" என்று தெரிவிக்கின்றார். (13)

திருச்சிற்றம்பலம்

# 65. உபதேச வினா

அஃதாவது, ஞான நெறிக்கண் ஆன்மாவாகிய தலைவி, ஞானப் பொருள்களைக் காண விரும்புவதும், அக்காட்சிக்குத் துணை புரிதல் வேண்டி, உயிர்த் தோழியாகிய உண்மையறிவை உசாவுவதுமாகும்.

## கலித்தாழிசை

4276. வேதாந்த நிலையொடு சித்தாந்த நிலையும்
மேவும் பொதுநடம் நான்காணல் வேண்டும்
நாதாந்தத் திருவீதி நடப்பாயோ தோழி
நடவாமல் என்மொழி கடப்பாயோ தோழி.

உரை: வேதாந்த நிலை, உபநிடதங்களால் எய்தலாகும் பிரம ஞானப்பேறு. சித்தாந்த நிலை, சிவாகமங்களால் பெறலாகும் சிவஞானானந்த நிலை. சிவயோகப் போகம் பெறும்நிலை. பொதுநடம் - அம்பலத்தில் ஆடும் திருக்கூத்து. நாதாந்த வீதி, நிலம் முதல் நாத தத்துவ மீறாகவுள்ள தத்துவக்கிரமம். கடத்தல் - விலகுதல். (1)

4277. தொம்பத உருவொடு தத்பத வெளியில்
தோன்றசி பதநடம் நான்காணல் வேண்டும்
எம்பத மாகி இசைவாயோ தோழி
இசையாமல் வீணிலே அசைவாயோ தோழி.

உரை: தொம்பதம் - துவம் என்னும் சொல். துவம் - நீ. தற்பதம் - அது வென்னும் சொற்பொருளாகிய பிரமம். பிரமத்துக்கிடம் பரஞானாகாசமாகிய வெளி; இது தத்பத வெளி என்று குறிக்கப் படுகிறது. அசிபதம் - ஆகின்றாய் என்னும் உபதேச வுரை. அது நீயாகின்றாய் என்ற பொருளில் வரும் தத்துவம். அசி என்பது உபதேசம். அது நீயாகும்போது உளதாகும் இன்பக்களிப்பு. மிக நிகழும் ஆனந்தக்கூத்து அசி பத நடம் என்று உரைக்கப்படுகிறது. எம்பதமாக இசைதல் - எனக்குரிய நிலையாகும் பொருட்டு உதவுதல். அசைதல் - சென்றலைதல். (2)

4278. சின்மய வெளியிடைத் தன்மய மாகித்
திகழும் பொதுநடம் நான்காணல் வேண்டும்
என்மய மாகி இருப்பாயோ தோழி
இச்சை மயமாய் இருப்பாயோ தோழி.

உரை: சின்மய வெளி - ஞானமயமாகிய ஆகாச வெளி. தன்மய மாதல் - சிவஞானமாதல். பொதுநடம் - ஞான சபையில் நிகழும் ஞான நடனம். என்மயமாதல் - எனக்கு ஒத்து இயலுதல். இச்சை உலகியலாசை. (3)

4279. நவநிலை மேற்பர நாதத் தலத்தே
ஞானத் திருநடம் நான்காணல் வேண்டும்
மவுனத் திருவீதி வருவாயோ தோழி
வாராமல் வீண்பழி தருவாயோ தோழி.

உரை : நவநிலைமேற் பரநாதத்தலம் - நவநிலைகளுள் மேலதாகிய பரநாதத்தலம். நவநிலைகளை அனுபவ மார்க்கம் என்று மொழிந்து, நிலைகளை விந்து, நாதம், பரவிந்து, பரநாதம், திக்கிராந்தம், அதிக்கிராந்தம், சம்மௌனம், சுத்தம், அதீதம் என உபதேசப் பகுதியால் (பக்—97) அறிகின்றோம். திக்கிராந்தம் - கூத்து வகை. பரநாதத் தலத்து ஞானநடனம், திக்கிராந்தம், அதிக்கிராந்தம் என இருவகையாம். நடனக்காட்சியில் எய்தும் சம்மௌன நிலைக்குத் தோழியை அழைக்கின்றமையின், "மவுனத் திருவீதி வருவாயோ தோழி" எனத் தலைவி கூறுகின்றாள். (4)

4280. ஆறாறுக் கப்புற மாகும் பொதுவில்
அதுவது வாநடம் நான்காணல் வேண்டும்
ஏறாமல் இழியாமல் இருப்பாயோ தோழி
ஏறி இழிந்திங் கிறப்பாயோ தோழி.

உரை : ஆறாறு - தத்துவம் முப்பத்தாறு. தத்துவாதீதப் பெருவெளி பொது எனக் குறிக்கப்படுகின்றது. காணப்படுவதும் காண்பதுமென இரண்டாதலின்றிக் காட்சிமயமாய் இயைவது விளங்க, "அதுவதுவாம் நடம்" எனத் தலைவி கூறுகின்றாள். காட்சியின்கண் அசைவின்றி ஒன்றியமைதல் வேண்டும் என்பாளாய்த் தோழியை, "ஏறி இழிந்திங்கு இறப்பாயோ தோழி" எனத் தலைவி உரைக்கின்றாள். (5)

4281. வகார வெளியில் சிகார உருவாய்
மகாரத் திருநடம் நான்காணல் வேண்டும்
விகார உலகை வெறுப்பாயோ தோழி
வேறாகி என்சொல் மறுப்பாயோ தோழி.

உரை : வகார வெளி - சத்தியாகிய அருள் வெளி. சிகாரம் - சிவாகாரம். மகாரத் திருநடம் இன்பமயமான நடனம். மகரம் - சிகா வகரங்களாகிய இரண்டினாலும் நிரம்பும் இன்பம் என்பது உபதேசப் பகுதி (பக்—62). (6)

4282. நாதாந்த நிலையொடு போதாந்த நிலைக்கு
நடுவாம் பொதுநடம் நான்காணல் வேண்டும்
சூதாந்தப் போதத்தைச் சுடுவாயோ தோழி
துட்டநெறியில் கெடுவாயோ தோழி.

உரை : நாதாந்த நிலை - நாதத்தை அதீதமாகவுடைய தத்துவ நிலை. போதாந்த நிலை - ஞானநூல் காட்டும் எல்லையாகிய ஞானப் பெருநிலை. தத்துவஞானத்துக்கும் சாத்திர ஞானத்துக்கும் நடுவாகிய

ஞானநிலை, "நடுவாம் பொது" எனப்படுகிறது. தற்போதம் - தன்முனைப் பென்னும் அகங்காரம். அது தீது செய்தலால் "சூதாம் தற்போதம்" எனத் தலைவி கூறுகிறாள். துட்ட நெறி - தீய நெறி. (7)

4233. அறிவில் அறிவை அறியும் பொதுவில்
ஆனந்தத் திருநடம் நான்காணல் வேண்டும்
செறிவில் அறிவாகிச் செல்வாயோ தோழி
செல்லாமல் மெய்ந்நெறி வெல்வாயோ தோழி.

உரை : பதிஞானம் துணையாக, அறிவுருவாகிய பதிப்பொருளை யறிதற்கு ஏதுவாவது ஞான சபையாதலால் அதனை, "அறிவில் அறிவை அறியும் பொது" எனப் புகல்கின்றாள். பதிஞானப் பேற்றுக்கு, உறுதுணையாய்ச் செறியும் உயிரின் உண்மையறிவு வேண்டும் என்பாளாய்த் தலைவி தோழியைச் "செறிவில் அறிவாகிச் செல்வாயோ" எனக் கேட்கின்றாள். உண்மையறிவாவது - கல்வி கேள்விகளாலாகிய செயற்கை அறிவுடன் கூடிய இயற்கையறிவு. (8)

4234. என்னைத் தன்னோடே இருத்தும் பொதுவில்
இன்பத் திருநடம் நான்காணல் வேண்டும்
நின்னைவிட் டென்னோடே நிலைப்பாயோ தோழி
நிலையாமல் என்னையும் அலைப்பாயோ தோழி.

உரை : தன்னோடு இருத்தும் பொதுவாவது சிவமாகிய தன்னோடே ஆன்மாவாகிய என்னைச் சிவமாக்கி உடனிருந்து சிவபோகம் துய்ப்பிக்கும் சிவஞானச் செல்வச்சபை. நின்னுடைய ஆன்மயறிவு வெறும் பசுபாச ஞானத்தோடு நின்றழிதல் கூடா தென்பாள், "நின்னைவிட்டு என்னோடே நிலைப்பாயோ தோழி" எனத் தலைவி கேட்கின்றாள். (9)

4235. துரியத்திற் கப்பாலுந் தோன்றும் பொதுவில்
ஜோதித் திருநடம் நான்காணல் வேண்டும்
கரியைக்கண் டாங்கது காண்பாயோ தோழி
காணாது போய்ப்பழி பூண்பாயோ தோழி.

உரை : துரியத்துக்கப்பாலும் தோன்றும் பொது என்பது துரியாதீதத்தில் திருவருட் காட்சிக்குப் பொருளாய்த் தோன்றும் ஞான சபை. சோதித் திருநடம், திருவருட் சிவஞானப் பேரொளி திகழும் ஞான நடனம். கரியைக் கண்டாங்கு - பிறவிக் குருடர் யானையின் ஒவ்வோர் உறுப்பைக் கண்டு குறையறிவால் தம்மிற் கலாம் விளைத்தது போல ஆன்மா சிற்றறிவுடையதாகலின், "சிறுமையுறக் காண்பாயோ" எனத் தலைவி ஐயுறுகின்றாள். (10)

4286. தத்துவத் துட்புறந் தானும் பொதுவில்
சத்தாந் திருநடம் நான்காணல் வேண்டும்
கொத்தறு வித்தைக் குறிப்பாயோ தோழி
குறியா துலகில் வெறிப்பாயோ தோழி.

உரை : நிலம் முதல் நாதம் ஈறுக வுள்ள தத்துவம் ஒவ்வொன்றிலும் அகத்தும் புறத்தும் ஒப்பச் சிவம் நிலவுதல் பற்றி, "தத்துவத் துட்புறம் தானும் பொது" எனத் தலைவியுரைக்கின்றாள். தத்துவங்கள் அசத்தாதலால் சிவமாகிய சத்துப் பொருள், "சத்தாம் திருநடம்" எனப் புகழப்படுகிறது. தத்துவ தாத்துவிகக் கூட்டத்தைக் "கொத்து" எனவும், அவற்றின் வேறுபாட்டைத் தெரிந்து நீங்கும் திருவருள் ஞானத்தை உறுதித் துணையாகக் கொள்வாயோ எனத் தோழியைக் கேட்பாளாய், "கொத்து அறுவித்தைக் குறிப்பாயோ" எனவும் வினவுகின்றாள். வெறித்தல் - பயனின்றிக் கழிதல். (11)

*திருச்சிற்றம்பலம்*

## 66. நெஞ்சொடு நேர்தல்

*அஃதாவது, நெஞ்சினை முன்னிலைப் படுத்தி அறிவுரை பகர்தல்.*

### கலித்தாழிசை

4287. அடங்குநாள் இல்லா தமர்ந்தானைக் காணற்கே
தொடங்குநாள் நல்லதன் றே—நெஞ்சே
தொடங்குநாள் நல்லதன் றே.

உரை : தோற்றக் கேடுகளில்லாத சிவ பரம்பொருளை "அடங்கு நாள் இல்லாது அமர்ந்தான்" எனவுரைக்கின்றார். அடங்குதல் - நடுங்குதல். (1)

4288. வல்லவா றெல்லாமும் வல்லானைக் காணற்கே
நல்லநாள் எண்ணிய நாள்—நெஞ்சே
நல்லநாள் எண்ணிய நாள்.

உரை : வரம்பிலாற்றல் உடையவனுதலால் சிவனை, "எல்லாமும் வல்லான்" என இயம்புகின்றார். நல்ல நாள் - நன்மை விளைவிக்கும் நாள். (2)

4289. காலங் கடந்த கடவுளைக் காணற்குக்
காலங் கருதுவ தேன்—நெஞ்சே
காலங் கருதுவ தேன்.

உரை : கால தத்துவத்தைக் கடந்த வேறுய பரம்பொருளாதல் பற்றிச் சிவனை, "காலம் கடந்த கடவுள்" எனக் கூறுகின்றுர். (3)

4290. ஆலம் அமுதாக்கும் அண்ணலைக் காணற்குக்
காலங் கருதுவ தேன்—நெஞ்சே
காலங் கருதுவ தேன்.

உரை : கடல் கடையப் பிறந்த நஞ்சினைத் தானுண்டு, தேவர்கட்கு அமுதளித்த சிவனது பேரருளைச் சிறப்பித்தற்கு, "ஆலம் அமுதாக்கும் அண்ணல்" என்று புகழ்கின்றுர். "விரிகடல் வருநஞ்சும் உண்டு இறைஞ்சு வானவர்தமைத் தாங்கிய இறைவன்" (வலஞ்சுழி) எனத் திருஞானசம்பந்தர் உரைப்பது காண்க. முப்போது எனவும் அறுபொழுது எனவும் காலம் கருதுவதுண்மையின், "காலம் கருதுவது ஏன்" எனக் கூறுகின்றுர். (4)

4291. தடையாதும் இல்லாத் தலைவனைக் காணற்கே
தடையாதும் இல்லைகண் டாய்—நெஞ்சே
தடையாதும் இல்லைகண் டாய்.

உரை : கண்டு வணங்குதற்கும் அவனது அருட் பேற்றுக்கும் யாதொரு தடையும் இல்லாதவன் என்றற்கு, "தடை யாதும் இல்லாத் தலைவன்" என வுரைக்கின்றுர். தன்னைத் தடுக்க வல்லவர் ஒருவரும் இல்லாதவன் எனினும் பொருந்தும். (5)

4292. கையுள் அமுதத்தை வாயுள் அமுதாக்கப்
பையுள் உனக்கென்னை யோ—நெஞ்சே
பையுள் உனக்கென்னை யோ.

உரை : கையிற் பெற்ற அமுத மயமான சிவபெருமானை, மனத்திற் கொண்டு வாயால் வாழ்த்தி மெய்யால் வணங்குவதை விடுத்து வருந்த வேண்டா என்பது கருத்து. பையுள் வருத்தம். (6)

4293. என்னுயிர் நாதனை யான்கண் டணைதற்கே
உன்னுவ தென்னைகண் டாய்—நெஞ்சே
உன்னுவ தென்னைகண் டாய்.

உரை : உயிர்க்குத் தலைவனுகிய சிவபெருமானைக் கண்டு பரவுவதற்கு வேறுயவற்றை எண்ணுவது கூடாது. உன்னுதல் - நினைத்தல். (7)

4294. நான்பெற்ற செல்வத்தை நான்பற்றிக் கொள்ளற்கே
ஏன்பற்று வாயென்ப தார்—நெஞ்சே
ஏன்பற்று வாயென்ப தார்.

உரை : செல்வம் போன்ற சிவனைச் "செல்வம்'' என்கிறார். சிவனைப் பற்றி அடைதற்குத் தடை செய்பவர் ஒருவருமிலர் என்பது கருத்து. (8)

4295. தத்துவா தீதத் தலைவனைக் காணற்குத்
தத்துவ முன்னுவ தேன்—நெஞ்சே
தத்துவ முன்னுவ தேன்.

உரை: தத்துவங்கட்கெல்லாம் வேறாய், மேலாயவனாகிய சிவ பரம்பொருளைக் காண்பவர் தத்துவங்களை எண்ணி ஆராய்வதால் பயனில்லை என்பதாம். முன்னுதல் - முற்பட வைத்து ஆராய்தல். (9)

4296. ஒக்க அமுதத்தை உண்டோம் இனிச்சற்றும்
விக்கல் வராதுகண் டாய்—நெஞ்சே
விக்கல் வராதுகண் டாய்.

உரை : திருவருள் ஞானமாகிய அமுதத்தைப் பொருந்தி நுகர்கின்றோமாதலால், இனி நமக்குத் தடை யாதும் இல்லையாம் என்பது குறிப்பு. விக்கல் - விக்குதல்; தடுத்தல் என்பது பொருள். (10)

திருச்சிற்றம்பலம்

## 67. அஞ்சாதே நெஞ்சே

### சிந்து

அஃதாவது, உலகியல் வாழ்வில் வந்து தாக்கும் துன்பங்கட்கு அஞ்சுதல் நெஞ்சுக்கு இயல்பாதலால், அஞ்சுதல் வேண்டா எனத் தேற்றுகின்றார் என்பதாம். அச்சம் அறிவைச் சிதைத்துக் கீழ்மைப் படுத்தும் இயல்பினது எனத் திருவள்ளுவர் முதலிய சான்றோர் கூறுவர்.

4297. அஞ்சா தே நெஞ்சே அஞ்சா தே
அஞ்சா தே நெஞ்சே அஞ்சா தே.

உரை : அஞ்சாதே - அஞ்ச வேண்டா. (1)

4298. வஞ்சமி லார் நாம் வருந்திடில் அப்போதே
அஞ்சலென் பார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : வஞ்சமிலார் - வஞ்சிக்கும் குற்றம் இல்லாத சிவ பெருமான். அச்சம் - செய்பவர் செய்வினையின் தூய்மையைக் கெடுக்கு மாதலால், "அஞ்சேல் என்பார்" எனவுரைக்கின்றார். வஞ்சமில்லாத சிவபெருமான் அம்பலத்தில் இருக்கின்றார்; அவர் நாம் வருந்தும்போது அஞ்சவேண்டா என ஆதரிப்பார் என்பது கருத்து. (2)

4299. துய்யர் அருட்பெருஞ் சோதியார் நம்முடை
அய்யர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : துய்யர் - தூயவர். அருட்பெருஞ் சோதியார், திருவருளாகிய பெரிய ஞானவொளி யுருவானவர் என்றற்கு, "அருட் பெருஞ் சோதியார்" எனச் சிறப்பிக்கின்றார். யாரும் எப்போதும் எளிதிற் கண்டு வழிபடும் வண்ணம் அம்பலத்தில் எழுந்தருளுகின்றார் என்பது கருத்து. (3)

4300. மண்ணில் நமையாண்ட வள்ளலார் நம்முடை
அண்ணல் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : மண்ணக வாழ்வு அறிவை மயக்கும் இயல்பினதாகலின், அதனால் நாம் மயங்கிக் கெடாதவாறு நன்ஞானவொளி தந்தருளுதற் காக, அம்பலத்தில் எழுந்தருளுகின்றார் என்பாராய், "மண்ணில் நமை யாண்ட வள்ளலார்" என்றும், அவர் நமக்குத் தலைவர் என அறிவித் தற்கு, "நம்முடை அண்ணல்" என்றும் உரைக்கின்றார். (4)

4301. இப்புவி யில்நம்மை ஏன்றுகொண் டாண்டநம்
அப்பர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : புவி - மண்ணுலகம். ஏன்று கொள்ளுதல் - அன்பெனன ஏற்றருளுதல். (5)

4302. சித்தர் எலாம்வல்ல தேவர் நமையாண்ட
அத்தர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : சித்தர் - சிந்தனையில் இருப்பவர். (6)

4303. சோதி அருட்பெருஞ் சோதியார் நம்முடை
ஆதி இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : சோதி யுருவினராயினும், அச்சோதி அருள் ஞானவொளி எனத் தெளிவித்தற்கு, "அருட் பெருஞ் சோதியார்" என அறிவிக் கின்றார். ஆதி - முதல்வர். (7)

4304. தாண்டவ ஞர்என்னைத் தான்தடுத் தாட்கொண்ட
ஆண்டவ ஞர்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : *தாண்டவனார் - அருட் கூத்தாடுபவர். மண்ணகப் பொருள் வாழ்வில் நினைவு செல்லாமல் தடுத்துத் திருவருள் ஞான வாழ்வில் செலுத்தியருளுதல் விளங்க, "தடுத்து ஆட்கொண்ட ஆண்டவனார்" என்று புகழ்கின்றார்.* (8)

4305. வன்பர் மனத்தை மதியா தவர்நம
தன்பர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : *வன்பர் - அன்புக்கு மாறான வன்கண்மையுடையவர். மதித்தல் - பொருளாக எண்ணுதல்.* (9)

4306. தெருளுடை யார்எலாஞ் செய்யவல் லார்திரு
அருளுடை யார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : *தெருளுடையார் - தெளிந்த ஞானமே திருவுருவாக வுடையவர். அருள் - காரணமொன்றும் இன்றியே செய்யும் பேரன்பு.* (10)

4307. நம்மை ஆட்கொள்ள நடம்புரி வார்நம
தம்மையி னேடிதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : *அம்பலத்தில் ஆடல் புரிவது ஆன்மாக்களை உய்வித்தற் பொருட்டேயன்றி விளையாட்டின்பம் வேண்டியன்று என அறிவித்தற் காக, "நம்மை யாட்கொள்ள நடம் புரிவார்" என்று கூறுகின்றார். நமதம்மை - நமக்குத் தாயாகிய சிவகாமி.* (11)

4308. தன்னைஒப் பார்சிற் சபைநடஞ் செய்கின்றார்
அன்னைஒப் பார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : *தமக்குத் தாமே ஒப்பாவதன்றிப் பிறர் யாரும் தமக்கு ஒப்பாக இல்லாதவர் என்பார், "தன்னை யொப்பார்" என வுரைக் கின்றார். அன்னை - பெற்ற தாய். சிற்சபை - ஞான சபை.* (12)

4309. பாடுகின் றார்க்கருட் பண்பினர் ஞானக்கூத்
தாடுகின் றார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : *தன்னை அன்பால் நினைந்துருகிப் பாடுபவர்களுக்கு இன்னருள் வழங்கும் இயல்பினன் இறைவன் என்பது பற்றி, "பாடுகின்றார்க்கு அருட்பண்பினர்" எனவும், உலகியல் இச்சையை விளைவிக்காமல், சிவஞான ஆனந்தத்தை விளைவிக்கும் திருக்கூத்து என்பது விளங்க, "ஞானக் கூத்தாடுகின்றார்" எனவும் இயம்பு கின்றார்.* (13)

4310. காதரிப் பார்கட்குக் காட்டிக் கொடார்நம்மை
ஆதரிப் பார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : காதரம் - கோபம். கோபித்தல் - காதரித்தல் என வந்தது. கோபமாகிய குற்றத்தால் மயங்குபவர்க்கு, அருள் செய்வதிலர் எனத் தெரிவித்தற்கு "காதரிப்பார்கட்குக் காட்டிக்கொடார்" என்று கூறுகின்றார். (14)

4311. நீளவல் லார்க்குமேல் நீளவல்லார் நம்மை
ஆளவல் லார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : நீளவல்லார் - அண்டத்துக் கப்பாலும் நெடிது உயர வல்ல திருமால். அவராலும் நெடிது உயர்ந்து காணமாட்டாத நெடுமை யுடையவர் சிவபிரான் என்பாராய், "நீள வல்லார்க்கு மேல் நீள வல்லார்" என்று கூறுகின்றார். (15)

4312. இன்புடை யார்நம் இதயத் தமர்ந்தபே
ரன்புடையார் இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : இதயம் - மனம். ஆன்மாக்களின் தூய மனத்தின்கண் எழுந்தருளுதற் கேதுவாகிய மிக்க அன்புடையவர் என்பது கருத்து. (16)

4313. உபய பதத்தைநம் உச்சிமேற் சூட்டிய
அபயர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : உபய பதம், இரண்டாகிய திருவடி. அபயர் - அச்சத்தைப் போக்குபவர். அச்சம் கீழ்மையைத் தருவதாகலின், அஃது ஆன்மாக்கட்கு உண்டாகாமற் காப்பவர் என்பாராய், "அபயர்" என வடலூர் வள்ளல் அறிவிக்கின்றார். (17)

4314. வேண்டுகொண் டார்என்னை மேல்நிலைக் கேற்றியே
ஆண்டுகொண் டார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : வேண்டு - வேண்டுதல்; முதனிலைத் தொழிற் பெயர். முறை வேண்டியும் குறை வேண்டியும் விண்ணப்பித்தல் "வேண்டு" எனப்படுகிறது. மேலாகிய சிவயோகஞான நிலைகளையே தம் மனம் விரும்பச் செய்வது பற்றி, "மேல் நிலைக்கேற்றி ஆண்டு கொண்டார்" எனவும், மேல் நிலை வேட்கை குன்றுதவாறு காக்குமாறு விளங்க, "ஆண்டு கொண்டார்" எனவும் அறிவிக்கின்றார். (18)

4315. எச்சம்பெ றேல்மக னேஎன்றென் னுள்உற்ற
அச்சம் தவிர்த்தவர் அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : எச்சம் - குறை. எச்சம் உலகியற் புகழாகக் கொண்டு, எச்சம் பெறல்வேண்டி ஞானப்பேற்றைக் கைவிடலாகாது என்றற்கு, "மகனே, எச்சம் பெறேல்" என இயம்புகின்றார் என வுரைப்பினும் அமையும். உள்ளுற்ற அச்சம் - உள்ளத்தில் பொருந்தும் அச்சம். (19)

4316. நமுதன் முதற்பல நன்மையு மாம்ஞான
அமுதர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : நமுதன் - சான்றாகுபவன்; பொறுப்பாளன். நம்மைத் தாங்கும் பொறுப்பு முதல் நலம் பலவும் தருபவன் எனக் குறித்தற்கு, "நமுதன் முதற் பல நன்மையுமாம் ஞான வமுதர்" எனக் கூறுகின்றார். நமுதன் - நமோது எனவும் வழங்கும். (20)

4317. செடிகள் தவிர்த்தருட் செல்வ மளிக்கின்ற
அடிகள் இதோதிரு வம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : செடிகள் - குற்றங்கள். அருட்செல்வம்; திருவருள் ஞானமாகிய செல்வம். (21)

4318. விரசுல கெல்லாம் விரித்தைந் தொழில்தரும்
அரசுடை யார்இதோ அம்பலத் திருக்கின்றார் அஞ்சா தே

உரை : விரசுலகு, நிலம் முதல் பூதமைந்தும் கலந்த உலகம். ஐந்தொழில், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து தொழில்கள். (22)

4319. செறிவுடை யார்உளத் தேநடஞ் செய்கின்ற
அறிவுரு வார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே நெஞ்சே அஞ்சா தே
அஞ்சா தே நெஞ்சே அஞ்சாதே.

உரை : செறிவு - நிறைவு. எல்லாப் பொருளிலும் உயிர்களிலும் குறைவற நிறைந்திருத்தல். உளம் - மனம். அறிவுருவார் - ஞானமே உருவாக வுடையவர். (23)

திருச்சிற்றம்பலம்

## 68. ஆடிய பாதம்

### சிந்து

**அஃதாவது, அம்பலத்தின்கண் சிவபெருமான் ஆடற்கமைந்த திருவடியைப் புகழ்ந்து பாடுவதாம். இதன்கண் சிவத்தின் நலங்கள் பலவற்றையும் அதன் திருவடி மேல் ஏற்றிக் கூறுகின்றார். இது கவி மரபு.**

### பல்லவி

4320. ஆடிய பாதமன் றாடிய பாதம்
ஆடிய பாதநின் றாடிய பாதம்.

### கண்ணிகள்

4321. பாடிய வேதங்கள் தேடிய பாதம்
பத்திசெய் பத்தர்க் கருத் தித்திக்கும் பாதம்
நாடிய மாதவர் தேடிய பாதம்
நாதாந்த நாட்டுக்கு நாயக பாதம். ஆடிய

உரை : (4320—1) பாடிய வேதங்கள் - ஓதப்படுகின்ற வேதங்கள். வேதங்களை நன்கு ஓதியுணர்ந்த வைதிக ஞானத்துக்கும் எட்டாதவன் சிவபெருமான் என்பாராய், "வேதங்கள் தேடிய பாதம்" எனக் கூறுகின்றார். பத்தருள்ளத்தில் தேனூற நிற்பது பற்றித் "தித்திக்கும் பாதம்" என்று புகழ்கின்றார். பெரிய தவயோகியர் காண விரும்புதல் விளங்க, "நாடிய மாதவர்" என இயம்புகின்றார். நாத தத்துவத்துக்கு அப்பாலதாகிய பரவெளி "நாதாந்த நாடு" எனப்படுகிறது. மன்று - அம்பலம். (1)

4322. தீராத வல்வினை தீர்க்கின்ற பாதம்
தெய்வங்கள் எல்லாந் தெரிசிக்கும் பாதம்
வாரா வரவாகி வந்தபொற் பாதம்
வஞ்ச மனத்தில் வசியாத பாதம். ஆடிய

உரை : "இருள் சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு" (குறள்) எனப் பெரியோர் கூறுதலால், "தீராத வல்வினை தீர்க்கின்ற பாதம்" என்று சிறப்பிக்கின்றார். தன்னைச் செய்தவன் செய்வினைப் பயனை நுகர்ந்து கழியுமளவும் அவனை நீங்காத வன்மையுடையதாதலால் "வல்வினை" என மொழிகின்றார். வாரா வரவு - பிறர் அறிய வாராத வரவு. வசியாத பாதம் - தங்குதல் இல்லாத திருவடி. (2)

4323. ஆரா அமுதாகி அண்ணிக்கும் பாதம்
அன்பர் உளத்தே அமர்ந்தருள் பாதம்
நாரா யணன்விழி நண்ணிய பாதம்
நான்புனை பாடல் நயந்தபொற் பாதம் ஆடிய

உரை : ஆரா அமுது - உண்ணப்படாத ஞானவமுது. அண்ணித்தல் - இனித்தல். திருமால் மலரிட்டு அருச்சித்தபோது ஒன்று குறைய அதற்காக மலர்போன்ற தன் கண்ணைப் பறித்து வழிபட்டார் என்ற வரலாறு பற்றி, "நாராயணன் விழி நண்ணிய பாதம்" என்று கூறுகிறார். "நீற்றினை நிறையப் பூசி நித்தல் ஆயிரம் பூக்கொண்டு, ஏற்றுழி யொருநாள் ஒன்று குறையக் கண்ணிறைய விட்ட ஆற்றலுக் காழி நல்கியவன்" (வீழி மிழலை) எனத் திருநாவுக்கரசர் உரைப்பது காண்க. நயத்தல் - விரும்புதல். (3)

4324. நல்லவர் எல்லாம் நயக்கின்ற பாதம்
நாத முடிவில் நடிக்கின்ற பாதம்
வல்லவர் சொல்லெல்லாம் வல்லபொற் பாதம்
மந்திர யந்திர தந்திர பாதம். ஆடிய

உரை : நாதமுடிவு - நாதாந்தமாகிய ஞானப்பேரெல்லை. வேத மந்திரங்களாலும் ஆகமங்களாலும் சக்கர வகைகளாலும் போற்றப் படும் பாதம் என்றற்கு, "மந்திர தந்திர யந்திர பாதம்" என்று கூறுகின்றார். யந்திர வகைகளைத் திருமந்திரம் முதலிய நூல்களிற் காண்க. (4)

4325. எச்சம யத்தும் இலங்கிய பாதம்
எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்குமாம் பாதம்
அச்சம் தவிர்த்தென்னை ஆட்கொண்ட பாதம்
ஆனந்த நாட்டுக் கதிபதி பாதம். ஆடிய

உரை : எல்லாச் சமயங்களும் வேறு வேறு பெயர் குறித்துப் போற்றுவது இறைவன் திருவடியே என்பதனால், "எச்சமயத்தும் இலங்கிய பாதம்" என்று கூறுகின்றார். ஆனந்த நாடு - அந்தமில் இன்பத்து அழிவில்லாத முத்தி நிலையாகிய வீடு பேறு. அதிபதி-பெருந்தலைவன். (5)

4326. தேவர்கள் எல்லாரும் சிந்திக்கும் பாதம்
தெள்ளமு தாய்உளந் தித்திக்கும் பாதம்
மூவரும் காணு முழுமுதற் பாதம்
முப்பாழுக் கப்பால் முளைத்தபொற் பாதம். ஆடிய

உரை : மூவர், பிரமன் திருமால் உருத்திரன் என்ற தேவதேவர். முப் பாழ், மாயப் பாழ், வியோமப் பாழ், உபசாந்தப் பாழ். (6)

4327. துரிய வெளிக்கே உரியபொற் பாதம்
சுகமய மாகிய சுந்தரப் பாதம்
பெரிய பொருளென்று பேசும் பொற்பாதம்
பேறெல்லாந் தந்த பெரும்புகழ்ப் பாதம். ஆடிய

உரை : துரியவெளி - துரியநிலையில் இருந்து காணப்படும் சிவானந்த நிலை. சுந்தரப்பாதம் - அழகிய திருவடி. சுந்தரம் - அழகு. பெரிய பொருள் - பிரமப்பொருள். (7)

4328. சாகா வரந்தந்த தாரகப் பாதம்
சச்சிதா னந்த சதோதய பாதம்
தேகாதி எல்லாம் சிருட்டிக்கும் பாதம்
திதிமுதல் ஐந்தொழில் செய்கின்ற பாதம். ஆடிய

உரை : தாரகப்பாதம் - ஆதாரமாகிய திருவடி. உதயம் - சதோதயம். சதம் - நித்தத் தன்மை. சத்தும் சித்தும் ஆனந்தமு மாகிய சிவபோகத்தில் நித்திய வாழ்வு தரும் திருவடியை, "சச்சி தானந்த சதோதய பாதம்" எனக் கூறுகின்றார். தேகாதி - உடல், கருவி, உலகு, போகங்கள். சிருட்டித்தல் - படைத்தல். திதி முதல் ஐந் தொழில், சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்பன. (8)

4329. ஓங்கார பீடத் தொளிர்கின்ற பாதம்
ஒன்றாய் இரண்டாகி ஓங்கிய பாதம்
தூங்காத தூக்கத்தில் தூக்கிய பாதம்
துரியத்தில் ஊன்றித் துலங்கிய பாதம். ஆடிய

உரை : ஓங்காரம் - ஓம் என ஓதப்படும் பிரணவம். சிவம் எழுந் தருளும் இடமாதல் விளங்க, "ஓங்கார பீடம்" எனப்படுகிறது. சிவனை, "ஓங்கார மெய்ப்பொருள்" (ஆலம் பொழில்) எனத் திருநாவுக்கரசர் தெரிவிப்பர். சிவ பரம்பொருள் என ஒன்றாகவும், சிவமும் சத்தியுமென இரண்டாகவும் கூறுதலால், "ஒன்றாய் இரண்டாய் ஓங்கிய பாதம்" என வுரைக்கின்றார். உந்தியாகிய துரியத்தானத்தில் ஞானக்கண் கொண்டு யோகியர் காண்பதால், "துரியத்தில் ஊன்றித் துலங்கிய பாதம்" என்று சொல்லுகின்றார். தூங்காத தூக்கம் - சாக்கிராதீத வொழுக்கம். (9)

4330. ஐவண்ண முங்கொண்ட அற்புதப் பாதம்
அபயர் எல்லார்க்கும் அமுதான பாதம்
கைவண்ண நெல்லிக் கனியாகும் பாதம்
கண்ணும் கருத்தும் கலந்தபொற் பாதம். ஆடிய

உரை : ஐவண்ணம் - ஐவகை நிறம் : அவை — பொன்மை, வெண்மை, செம்மை, கருமை, நீலம் என வரும். கை வண்ண நெல்லிக் கனி - அங்கை நெல்லிக் கனி. கரதல ஆமலகம் எனவும் கூறுவர். புறக்காட்சிக்கும் அகக்காட்சிக்கும் பொருளாவது என்றற்கு, "கண்ணும் கருத்தும் கலந்த பொற்பாதம்" என்று போற்றுகின்றார். (10)

4331. ஆருயிர்க் காதாரம் ஆகிய பாதம்
அண்ட பிண்டங்கள் அளிக்கின்ற பாதம்
சாருயிர்க் கின்பம் தருகின்ற பாதம்
சத்திய ஞான தயாநிதி பாதம். ஆடிய

உரை : அண்டம் - பெரியது; பிண்டம் - சிறியது. சாருயிர் சிவத்தை நினைந்தொழுகும் ஆன்மா. சத்திய ஞான தயாநிதி மெய்ம்மை ஞான அருட்செல்வம். (11)

4332. தாங்கி எனைப்பெற்ற தாயாகும் பாதம்
தந்தையு மாகித் தயவுசெய் பாதம்
ஓங்கிஎன் னுள்ளே உறைகின்ற பாதம்
உண்மை விளங்க உரைத்தபொற் பாதம். ஆடிய

உரை : உயர்ந்தோங்கும் பரம்பொருளாய் என் சிறிய உள்ளத்தின் கண் எழுந்தருளுவது உணர்த்த, ''ஓங்கி என்னுள்ளே உறைகின்ற பாதம்'' என வுரைக்கின்றார். உண்மை - உண்மை ஞானம் குறித்து நின்றது. (12)

4333. எண்ணிய வாறே எனக்கருள் பாதம்
இறவா நிலையில் இருத்திய பாதம்
புண்ணியர் கையுள் பொருளாகும் பாதம்
பொய்யர் உளத்தில் பொருந்தாத பாதம். ஆடிய

உரை : இறவா நிலை - சாகாப் பதம்; பிறவா நெறி எனினும் பொருந்தும். புண்ணியர் - சிவபுண்ணியத்தாற் சிறப்புற்ற ஞானவான்கள். பொய்யர் - பொய்ந்நினைவும் பொய்ச்சொல்லும் பொய்ச் செய்கையுமுடையவர். (13)

4334. ஆறந்தத் துள்ளும் அமர்ந்தபொற் பாதம்
ஆதி அனாதியும் ஆகிய பாதம்
மாறந்தம் இல்லாஎன் வாழ்முதற் பாதம்
மண்முதல் ஐந்தாய் வழங்கிய பாதம். ஆடிய

உரை : ஆறந்தம் - வேதாந்தம், சித்தாந்தம், கலாந்தம், யோகாந்தம், நாதாந்தம், போதாந்தம் என வரும் ஆறு அந்தங்கள். ஆதி - தோற்றமுடையது; அனாதி - அஃது இல்லாதது. மாறு அந்தம் இல்லா வாழ்முதல் - மாறாய் அழிவதில்லாத வாழ்க்கைக்கு முதற் பொருளாவது. மண் முதல் ஐந்து - நிலம் நீர் தீ காற்று வானம் என்ற ஐம்பெரும் பூதம். வழங்கிய பாதம் - படைத்தருளிய திருவடி. (14)

4335. அருட்பெருஞ் ஜோதிய தாகிய பாதம்
அம்மையும் அப்பனும் ஆகிய பாதம்
பொருட்பெரும் போகம் புணர்த்திய பாதம்
பொன்வண்ண மாகிய புண்ணிய பாதம். ஆடிய

உரை : அருட் பெருஞ் சோதியது - திருவருள் ஞானமாகிய பெரிய ஒளியையுடையது. பொருள் வகைகளால் பெரிய இன்பத்தை உயிர்கள் பெறச் செய்யும் நலம் காரணமாக பொருட் பெரும் போகம் புணர்த்திய பாதம் என்று புகழ்கின்றார். மெய்ப்பொருளாகிய பெரிய சிவபோகத்தை, முத்தான்மாக்களை நுகர்விக்கும் திருவடி எனினும் பொருந்தும். சிவன் திருமேனி பொன்னிறமுடையதாகலின், திருவடியைப் பொன் வண்ணமாகிய புண்ணிய பாதம் என்று போற்றுகின்றார். (15)

4336. நாரண னுதியா நாடரும் பாதம்
நான்தவத் தாற்பெற்ற நற்றுணைப் பாதம்
ஆரணம் ஆகமம் போற்றிய பாதம்
ஆசைவிட் டார்க்கே அணிமையாம் பாதம். ஆடிய

ஆடிய பாதமன் றாடிய பாதம்
ஆடிய பாதநின் றாடிய பாதம்.

உரை : நாரணனுதியர் - திருமால் முதலிய தேவதேவர்கள். நாடரும் பாதம் - நாடியடைதற் கரிய திருவடி. ஆரணம் - இருக்கு முதலிய வேதங்கள். ஆசை விட்டவர் - ஐம்புலன்கள் மேற் செல்லும் ஆசையை விட்டவர்; முற்றத் துறந்த முனிவரர்கள். (16)

திருச்சிற்றம்பலம்

## 69. அபயம் அபயம்

### சிந்து

அஃதாவது, அபயம் தருக என, வேண்டுவது. பயம் - அச்சம்; அபயம் - பயமில்லாமை. அஞ்சாத திண்மையைத் தந்தருளுக என்பது கருத்து.

4337. அபயம் அபயம் அபயம்

உரை : அச்சமில்லாத செம்மை நிலையைத் தமக்கு நல்க வேண்டுமென முக்காலும் வேண்டுகின்றார். (1)

### கண்ணிகள்

4338. உபயம தாய்என் உறவாய்ச் சிதம்பரச்
சபையில் நடஞ்செயும் சாமி பதத்திற்கே அபயம்

உரை : உபயம் - இரண்டு. சிதம்பரச் சபை - சிதம்பரத்தில் உள்ள சபை. சிதம்பரம் - சித் அம்பரம் எனப் பிரிந்து, ஞானாகாசம் என்று பொருள்படும். சிற்றம்பலம் என்னும் பழைய சொல் சிதம்பரம் என மருவிற்று என்றலும் உண்டு. சாமி - தலைவர். (2)

4339. எம்பலத் தால்எம்மை ஏன்றுகொ ளத்தில்லை
அம்பலத் தாடும்எம் ஐயர் பதத்திற்கே அபயம்

உரை : எம்பலத்தால் - எங்கள் ஞான பலத்தால். ஏன்று கொளல் - ஏன்று ஆண்டருளுதல். ஞான வாழ்வால் ஆன்மா எய்தும் வன்மை நோக்கி, பேரின்ப வாழ்வு தருவதற்காகச் சிவன் அம்பலத்தில் ஆடுகின்றான் என்பது பற்றி, "எம்மை ஏன்று கொளத் தில்லையம்பலத்தாடும்" என்று கூறுகின்றார். (3)

4340. தவசிதம் பரமாகித் தன்மய மாய்ச்செயும்
சிவசிதம் பரமகா தேவர் பதத்திற்கே அபயம்

உரை : தவ சிதம்பரம் - தவ ஞானக் கடல். தன்மயமாய்ச் செய்தல் - சிவமாம் தன்மை பெறுவித்தல். சிவ சிதம்பர மகாதேவர் - சிவஞானமாகிய ஆகாசத்தில் எழுந்தருளும் தேவதேவர். (4)

4341. ஒன்றும் பதத்திற் குயர்பொரு ளாகியே
என்றும்என் உள்ளத் தினிக்கும் பதத்திற்கே அபயம்

உரை : ஒன்றும் பதம் - ஆன்மாக்கள் சென்று கூடும் சிவபோக பதம். சிவபோக நிலையில் உயர்ந்தோங்கும் சிவ பரம்பொருளை. "உயர் பதத்திற்கு உயர் பொருள்" என வுரைக்கின்றார். (5)

4342. வானந்த மாந்தில்லை மன்றிடை என்றுநின்
றானந்தத் தாண்டவ மாடும் பதத்திற்கே அபயம்

உரை : வான் அந்தமாம் தில்லைமன்று - ஞானாகாயத்தை எல்லையாகவுடைய தில்லையம்பலம். ஆனந்தத் தாண்டவம் - ஆன்மாக்களுக்குப் பேரின்பம் விளைதல் வேண்டிச் செய்கின்ற திருக்கூத்து. (6)

4343. நாரா யணனொடு நான்முக னாதியர்
பாரா யணம்செயும் பதும பதத்திற்கே அபயம்

உரை : நான்முகனாதியர் - பிரமன் முதலிய தேவர்கள். பாராயணம் செய்தல் - நியமமாக ஓதுதல். பதும பதம் - தாமரை மலர் போலும் திருவடி. (7)

4344. அன்பர் செயும்பிழை ஆயிர மும்பொறுத்
தின்ப மளிக்குநம் ஈசர் பதத்திற்கே அபயம்

உரை : எண்ணிறந்த குற்றங்கள் என்றற்குப் பிழையாயிரம் என்று கூறுகின்றார். ஈசர் - அருட்செல்வர். (8)

4345. குற்றம் செயினும் குணமாகக் கொண்டுநம்
அற்றம் தவிர்க்குநம் அப்பர் பதத்திற்கே அபயம்

உரை : அற்றம் தவிர்த்தல் - குற்றம் செய்வதால் உண்டாகும் இழிவு. அப்பர் - தந்தை. (9)

4346. செம்பொருள் ஆகிச் சிதம்பரத் தேஎன்றும்
நம்பொருள் ஆன நடேசர் பதத்திற்கே அபயம்

உரை : செம்பொருள் - மெய்ப்பொருள். சிதம்பரமாகிய பொதுவின்கண் எழுந்தருளுகின்றாராயினும், அன்பர்களாகிய நமக்கு உரிமைப் பொருள் எனத் தெரிவித்தற்கு, "சிதம்பரத்தே என்றும் நம் பொருளான நடேசர்" என நவில்கின்றார். நடம் புரியும் ஈசர் என்பது "நடேசர்" என வந்தது. (10)

4347. வெச்சென்ற மாயை வினையாதி யால்வந்த
அச்சம் தவிர்க்குநம் ஐயர் பதத்திற்கே அபயம்

உரை : மாயை, கன்மம், மலம் என்ற மூன்றாலும் உண்டாகும் அச்சத்தை, "மாயை வினையாதியால் வந்த அச்சம்" என்று கூறுகின்றார். மயக்கம் செய்வது பற்றி, "வெச்சென்ற மாயை" என்கின்றார். வெச்சென்பது குறிப்பு மொழி. (11)

4343. எண்ணிய எண்ணங்கள் எல்லா முடிக்குநம்
புண்ணிய ரூர்தெய்வப் பொன்னடிப் போதுக்கே அபயம்

உரை : புண்ணியமான தவத்தால் எண்ணிய எண்ணியாங்கு எய்துமென்பது பற்றி, "எண்ணிய எண்ணங்கள் எல்லாம் முடிக்கும் புண்ணியனார்" என்று சிவனைப் புகழ்கின்றார். போது - தாமரைப் பூப் போலும் பாதம். (12)

4349. மன்னம் பரத்தே வடிவில் வடிவாகிப்
பொன்னம் பலத்தாடும் பொன்னடிப் போதுக்கே அபயம்

உரை : மன்னம்பரம் - நிலைபெற்ற ஆகாசம். நிலமீருகிய ஏனைப் பூதங்கள் தோன்றி யொடுங்கும் இடமாதலால், ஆகாயமாகிய பூதத்தை, "மன்னம் பரம்" என்று குறிக்கின்றார். அம்பரம் - ஆகாயம். பொன்னடி - அழகிய திருவடி. வடிவில் வடிவு - வடிவங்கட்கெல்லாம் மூல வடிவு. (13)

4350. நாத முடிவில் நடம்புரிந் தன்பர்க்குப்
போதம் அளிக்கின்ற பொன்னடிப் போதுக்கே அபயம்

உரை : நாத முடிவு - நாத தத்துவத்தின் அந்தமாகிய மாயாதீதப் பெருவெளி. போதம் - சிவஞானம். (14)

4351. உச்சி தாழ்கின்ற உறவோர் உறவான
சச்சி தானந்தத் தனிநடப் போதுக்கே அபயம்

உரை : உச்சி தாழ்தல் - தலை சாய்த்து வணங்குதல். உறவோர் - அன்புறவு கொண்ட மெய்யடியார்கள். அவர்கள் சத்தும் சித்தும் ஆனந்தமும் ஆகிய மூன்றினுக்கும் உரிமையுடையவராதலால், "உறவான சச்சிதானந்தம்" என்று உரைக்கின்றார். தனிநடம் - ஒப்பற்ற நடனம். நடப்போது - நடனம் புரியும் திருவடி. (15)

4352. சித்தமும் உள்ளமும் தித்தித் தினிக்கின்ற
புத்தமு தாகிய பொன்னடிப் போதுக்கே
அபயம் அபயம் அபயம்

உரை : சித்தம், சிந்திக்கும் அந்தக் கரணம். சித்தம் சிந்திக்கும் இடம் மனத்தின் உள்ளிடமாதலால் அதனை, "உள்ளம்" என்கின்றார்; உள்ளமாவது உயிர் என்று கூறுவதுமுண்டு. "அறிவிக்க வன்றி யறியாவுளம்" (சிவ. போ.) என மெய்கண்டார் கூறுவது காண்க. (16)

திருச்சிற்றம்பலம்

# 70. அம்பலவாணர் வருகை

## சிந்து

அஃதாவது, தில்லையம்பலக் கூத்தப் பெருமானை வருக, என வரவேற்கும் விருப்ப மிகுதியால் பாடுவதாம். இதன்கண் வரும் பாட்டுக்களைக் கண்ணிகள் என்பதுமுண்டு.

## பல்லவி

4353. வாரீர் சிதம்பர வல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்
மணிமன்ற வாணரே வாரீர்.

உரை : வாரீர், வருக என்னும் பொருளில் வரும் முன்னிலைப் பன்மையுயர் சொற்கிளவி. சிதம்பர வல்லி - சிதம்பரத்திற் கோயிற் கொண்டருளும் வல்லிக்கொடி போன்ற உமாதேவி. சிவகாமவல்லி என்பது தில்லைப்பதிக்கண் வழங்கும் சிறப்புப் பெயர். மணாளர் - கணவர். மன்றவாணர் - அம்பலத்தில் எழுந்தருளுபவர். மணி மன்றம் - அழகிய அம்பலம்; மணிகள் இழைத்த அம்பலம் எனவும் பொருள் கூறுவதுண்டு. (1)

## கண்ணிகள்

4354. அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவ ரேதிரு
அம்பல வாணரே வாரீர்
அன்புடை யாளரே வாரீர். வாரீர்

உரை : அருட் பெருஞ்சோதி ஆண்டவர் - திருவருள் ஞான மாகிய சிவவொளியை ஆன்மாக்கட்கு நல்கி இன்பவாழ்வு தந்து ஆண்டருளுபவர். ஆண்டருளும் பெருமானுக்கும் தமக்குமுள்ள தொடர்பு தோற்றுவித்தற்கு, "என் ஆண்டவர்" என இயம்புகின்றார். அம்பலவாணர் - அம்பலத்தில் வாழ்பவர். வாழ்நர் என்பது வாணர் என மருவிற்று. (2)

4355. அச்சம் தவிர்த்தென்னை ஆட்கொண் டருளிய
அந்தண ரேஇங்கு வாரீர்
அம்பலத் தையரே வாரீர். வாரீர்

உரை : அச்சம், திருவருள் ஞானம் தமக்கு எய்தலாகுமோ என அஞ்சி யமைந்த தமக்கு அதனை இனிது நல்கி இன்புறுத்தினமை விளங்க, "அச்சம் தவிர்த்தென்னை யாட்கொண்டருளிய அந்தணர்" எனப் புகழ்கின்றார். அந்தணர் - செந்தன்மையே யுருவாகியவர். ஐயர் - தலைவர். (3)

4356. அன்புரு வானவர் இன்புற உள்ளே
அறிவுரு வாயினீர் வாரீர்
அருட்பெருஞ் ஜோதியீர் வாரீர். வாரீர்

உரை : அன்பும் அறிவும் தமக்கு உருவாகக் கொண்டவ ராதலின் சிவனை, "அன்புருவானவர்" எனவும், "அறிவுருவாயினீர்" எனவும் இயம்புகின்றார். அறிவுருவாய் உள்ளத்தில் நின்று இன்பம் பெருகுவித்தல் பற்றி, "இன்புற உள்ளே அறிவுருவாயினீர்" என விளம்புகின்றார். (4)

4357. அண்டங்கள் எல்லாம் அணுவில் அடக்கும்
அரும்பெருஞ் சித்தரே வாரீர்
அற்புத ரேஇங்கு வாரீர். வாரீர்

உரை : அண்ட வகைகள் யாவற்றையும் ஓர் அணுவாக்கி ஒடுக்கியடக்கும் பேராற்றல் சிவனுக்கு உண்மை விளங்க, "அண்டங்கள் எல்லாம் அணுவில் அடக்கும் அரும்பெருஞ் சித்தர்" என்று புகழ்கின்றார். சித்தர் — அணிமா, மகிமா முதலிய எண்வகைச் சித்துக்களைச் செய்பவர். (5)

4358. அம்மையு மாய்எனக் கப்பனு மாகிஎன்
அன்பனு மாயினீர் வாரீர்
அங்கண ரேஇங்கு வாரீர். வாரீர்

உரை : அம்மை - தாய். அங்கணர் - அருளாளர். (6)

4359. அல்லல் அறுத்தென் அறிவை விளக்கிய
அம்பல வாணரே வாரீர்
செம்பொரு ளாயினீர் வாரீர். வாரீர்

உரை : அல்லல் - அறியாமையால் விளையும் துன்பம். செம்பொருள் - செம்மையாகிய சிவபதம் அருளும் பரம்பொருள். (7)

4360. அப்பணி பொன்முடி அப்பனென் றேத்துமெய்
அன்பருக் கன்பரே வாரீர்
இன்பம் தர இங்கு வாரீர். வாரீர்

உரை : அப்பணி பொன்முடி-கங்கையாறு தங்குகிற பொன்னிறச் சடைமுடி. மெய்யன்பர் - மெய்ஞ்ஞானிகள். அன்பு - ஈண்டு ஞானம் குறித்து நின்றது. "ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞான முண்டார்" எனச் சேக்கிழார் பெருமான் உரைப்பது காண்க. (8)

4361. அச்சுதர் நான்முகர் உச்சியில் மெச்சும்
அடிக்கம லத்தீரே வாரீர்
நடிக்கவல் லீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : அச்சுதர் - திருமால். அடிக்கமலத்தீர் - திருவடியாகிய தாமரைப் பூவை யுடையவரே. நடித்தல் - நடம் புரிதல். (9)

4362. அண்டர்க் கரும்பதந் தொண்டர்க் கெளிதில்
அளித்திட வல்லீரே வாரீர்
களித்தென்னை ஆண்டீரே வாரீர். வாரீர்

உரை : அண்டர்க்கு அரும்பதம் தொண்டர்க்குஅளித்திட வல்லீர், தேவர்கட்குப் பெறற்கரிதாகும் சிவபதத்தைத் தொண்டு புரியும் மெய்யன்பர்க்குத் தர வல்ல சிவபெருமானே. களித்து - திருவுளம் மகிழ்ந்து. (10)

4363. அம்பர மானசி தம்பர நாடகம்
ஆடவல் லீர்இங்கு வாரீர்
பாடல்உ வந்தீரே வாரீர். வாரீர்

உரை : அம்பரம் - ஆகாசம். சிதம்பர நாடகம் - சிதம்பரத்தில் ஆடும் ஞான நடனம். பாடல் உவந்தீர், ஞானசம்பந்தர் முதலிய பெருமக்கள் பாடிய பாடல்களை விரும்பியருளிய பெருமானே. (11)

4364. ஆதிஅ னாதிஎன் றாரணம் போற்றும்
அரும்பெருஞ் ஜோதியீர் வாரீர்.
ஆனந்த நாடரே வாரீர். வாரீர்

உரை : ஆரணம் - வேதம். உடல் கருவியுலகுகளைப் படைத்தலால் ஆதியென்றும், சிவமாகிய தன்னைப் படைப்போர் இல்லாமையால் அனாதி என்றும் வேதங்கள் ஓதுகின்றன என அறிக. காண்டற்கருமையும் பெருமையும் உடையதாகலின் திருவருள் ஒளியை, "அரும்பெரும் சோதி" என்று கூறுகின்றார். ஆனந்த நாடர், பேரின்பம் நிலவும் முத்தி வீட்டையுடையவர். (12)

4365. ஆகம வேதம் அனேக முகங்கொண்டு
அருச்சிக்கும் பாதரே வாரீர்
ஆருயிர் நாதரே வாரீர். வாரீர்

உரை : அநேக முகம் கொண்டு அருச்சித்தல், ஆகமங்கள் சரியை முதலிய நால்வகையாலும் வேதங்கள் மந்திர பிராமணங்களாலும் முறைப்படி வழிபடுதல். (13)

4366. ஆசறும் அந்தங்கள் ஆறும் புகன்றநல்
ஆரிய ரேஇங்கு வாரீர்
ஆனந்தக் கூத்தரே வாரீர். வாரீர்

உரை : அந்தங்கள் ஆறு, நாதாந்தம், போதாந்தம், கலாந்தம், யோகாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என்பன. இவற்றால் குற்றம் நீங்குதலால், "ஆசறும் அந்தங்கள்" என்று சிறப்பிக்கின்றார். ஆரியர் - ஞானாசிரியர். (14)

4367. ஆல நிழற்கண் அமர்ந்த றஞ் சொன்னநல்
ஆரிய ரேஇங்கு வாரீர்
ஆனந்தக் கூத்தரே வாரீர். வாரீர்

உரை : ஆல நிழல் - கயிலையில் உள்ள கல்லால மரத்தின் நிழல். அறம் சொன்னது - சவுனகாதி முனிவர் நால்வர்க்கு, அறநெறி பற்றி வைதிக ஞான நுண்பொருளை உரைத்தருளியது வரலாறு. "அறங்கொண்டு சிவதன்மம் உரைத்த பிரான்" (புள்ளிருக்கு) என ஞானசம்பந்தர் கூறுவர். (15)

4368. ஆரமு தாகிஎன் ஆவியைக் காக்கின்ற
ஆனந்த ரேஇங்கு வாரீர்
ஆடல்வல் லீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : ஆரமுது - நிறைந்த ஞானப் பொருள். ஆவியைக் காத்தல் - உயிர்க்குயிராய் நின்று நல்லறிவு தந்து உய்தி பெறுவித்தல். (16)

4369. ஆதர வாய்என் அறிவைத் தெளிவித்து
அமுதம் அளித்தீரே வாரீர்
ஆடிய பாதரே வாரீர். வாரீர்

உரை : மலபோக மயக்கத்தால், கலக்கமுறும் ஆன்ம அறிவை நன்னெறியுணர்த்தித் தெளிவு பெறுவித்தல். அமுதம் - உண்மை ஞானம். (17)

4370. ஆதார மீதானத் தப்பாலும் காண்டற்
கரும்பெருஞ் ஜோதியீர் வாரீர்
கரும்பினில் இனிக்கின்றீர் வாரீர். வாரீர்

உரை : ஆதார மீதானம், மூலாதாரம் முதலிய ஆதாரம் ஆறினுக்கும் அப்பாலதாகிய துவாத சாந்தம். மீதானம் - மேனிலை. கரும்பினில் இனிக்கின்றீர், கரும்பு போல் இனிமைச் சுவை நல்கு கின்றீர்; கரும்பின் இனிமை போல் உயிரிற் கலந்து இனிமை தருகின்றீர் என்றலும் உண்டு. (18)

4371. ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
ஜோதிய ரேஇங்கு வாரீர்
வேதிய ரேஇங்கு வாரீர். வாரீர்

உரை : ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ் சோதியீர், தோற்றமும் கேடும் இல்லாத அருமையும் பெருமையும் உடைய திருவருள் ஒளியையுடையவரே. "ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ் சோதி" என்பர் மாணிக்கவாசகர். 'வேதியர் - வேதங்களை ஓதியருளுபவர். (19)

4372. ஆடல்கொண் டீர்திரு வம்பலத் தேஎன்றன்
பாடல்கொண்டீர்இங்கு வாரீர்
கூடவல் லீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : அம்பலம் - தில்லைச் சிற்றம்பலம். கூட வல்லீர் - தான் அருவமாயினும் அருளுருக் கொண்டு கூடி ஞானவின்பம் நல்குவது பற்றி, "கூட வல்லீர்" என்று கூறுகின்றார். (20)

4373. ஆக்கம் கொடுத்தென்றன் தூக்கம் தடுத்தஎன்
ஆண்டவ ரேஇங்கு வாரீர்
தாண்டவ ரேஇங்கு வாரீர். வாரீர்

உரை : ஆக்கம் - சிவஞானமாகிய செல்வம். தூக்கம் - சோம்பல் சோம்புதலின்றிச் சிவநினைவிலேயே இருக்கச் செய்தல். தாண்டவர் - கூத்தாடுபவர். (21)

4374. ஆபத்தை நீக்கிஓர் தீபத்தை ஏற்றிஎன்
ஆணவம் போக்கினீர் வாரீர்
காணவந் தேன்இங்கு வாரீர். வாரீர்

உரை : ஆபத்து - மலவிருளால் மயங்கித் துன்புறல். தீபம் - சிவஞானவொளி. ஆணவம் - செருக்கு. (22)

4575. இதுதரு ணம்தரு ணம்தரு ணம்என்
இறையவ ரேஇங்கு வாரீர்
இடர்தவிர்த் தாட்கொண்டீர் வாரீர். வாரீர்

உரை : தருணம் - காலம். இடர் - முக்குண வயத்தால் குற்றம் புரிந்து கெடுதல். குற்றமுணர்ந்து நீங்கற்கேற்ப அறிவருளுதல் ஈண்டு ஆட்கொள்ளுதல் எனப்படுகிறது. (23)

4376. இச்சையின் வண்ணம் எனக்கருள் செய்ய
இதுதரு ணம்இங்கு வாரீர்
இன்னமு தாயினீர் வாரீர். வாரீர்

உரை : இச்சை - விருப்பம். யான் விரும்பியவண்ணம் எனக்கு நீ அருள்புரிதற்கு இது தக்க சமயம் என்பது கருத்து. (24)

4377. இன்பம் கொடுத்தேஎன் துன்பம் கெடுத்துள்
இருக்கின்ற நாதரே வாரீர்
இருக்கின் பொருளானீர் வாரீர். வாரீர்

உரை : துன்பம் சிறிதிருப்பினும் பெற்ற இன்பம் சிதைவது பற்றி, "என் துன்பம் கெடுத்து" எனவும், இன்பவொளி நிலவும் உள்ளத்தில் இறைவன் இருப்பது புலப்பட, "உள் இருக்கின்ற நாதரே" எனவும் இயம்புகின்றார். (25)

4378. இரவும் பகலும் இதயத்தி லூறி
இனிக்கும் அமுதரே வாரீர்
இனித்தரி யேன்இங்கு வாரீர். வாரீர்

உரை : மெய்யன்பர் உள்ளத்தில் இன்னமுதம் சுரப்பவர் என்பது பற்றி, "இதயத்தில் ஊறி இனிக்கும் அமுதர்" எனவுரைக்கின்றார். தரியேன் - உயிர் தாங்கமாட்டேன். (26)

4379. இன்னும்தாழ்த் தங்கே இருப்ப தழகன்று
இதுதரு ணம்இங்கு வாரீர்
இருமையும் ஆயினீர் வாரீர். வாரீர்

உரை : தாழ்த்தல் - தாமதித்தல். இருமை - பிறப்பு வீடு என்ற இரண்டுமாய் உயிர்கட்கருளுதல் பற்றி, "இருமையும் ஆயினீர்" எனப் புகழ்கின்றார். (27)

4380. இடர்தவிர்த் தின்பம் எனக்களித் தாளற்
கிதுதரு ணம்இங்கு வாரீர்
இனியவ ரேஇங்கு வாரீர். வாரீர்

உரை : ஆளல் - ஆளுதல்; அருள் ஞானப் பேறு பெற்று உய்வித்தல். இனியவர் - இனிமை செய்பவர். (28)

4381. இறையும் பொறுப்பரி தென்னுயிர் நாதரே
இத்தரு ணம்இங்கு வாரீர்
இதநடஞ் செய்கின்றீர் வாரீர். வாரீர்

உரை : உலகியல் நல்கும் துன்பம் சிறிது பொறுக்க வொண்ணாது என்பாராய், "இறையும் பொறுப்பரிது" எனக் கூறுகின்றார். இறை - சிறிதும். பொறுப்பு - தாங்குதல். இதநடம் - இன்பக்கூத்து. (29)

4382. இம்மையி லேஎனக் கம்மையின் இன்பம்
இதுஎன் றளித்தீரே வாரீர்
இதயத் திருந்தீரே வாரீர். வாரீர்

உரை : இம்மை - இப்பிறப்பு. அம்மை - மேலுலகம். அம்மைக்கு மேலது வீட்டுலகம். இதயம் - ஈண்டு உள்ளத்தின் மேற்று. (30)

4383. இங்கங்கென் றுமலே எள்ளுக்குள் எண்ணெய்போல்
எங்கும் நிறைந்தீரே வாரீர்
இந்தெழில் வண்ணரே வாரீர். வாரீர்

உரை : எங்கும் நிறைந்திருக்கும் தன்மையை விளக்குதற்கு "எள்ளுக்குள் எண்ணெய் போல்" என வுரைக்கின்றார். "யாவுளும் எள்ளும் எண்ணெயும் போனின்ற எந்தையே" (சதகம்) எனத் திருவாசகம் உரைப்பது காண்க. இந்தெழில் வண்ணர் - சந்திரனைச் சூடியதனால் உளதாகும் அழகை யுடையவர். (31)

4384. இணையொன்றும் இல்லா இணையடி என்தலை
ஏறவைத் தீர்இங்கு வாரீர்
இறுதியி லீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : இணையொன்றும் இல்லா இணையடி - ஒப்புச் சிறிதும் இல்லாத இரண்டாகிய திருவடி. இறுதியிலீர் - அழிவில்லாதவரே. "ஈறிலாதவன் ஈசன் ஒருவனே" என்பர் திருநாவுக்கரசர். (32)

4385. ஈன்றாளும் எந்தையும் என்குரு வும்எனக்கு
இன்பமும் ஆயினீர் வாரீர்
அன்பருக் கன்பரே வாரீர். வாரீர்

உரை : ஈன்றாள் - பெற்ற தாய். இன்பம், என்றது தாய் தந்தை குரு ஆகியோராற் பெறலாகும் வாழ்க்கை யின்பம். (33)

4386. ஈனம் அறுத்துமெய்ஞ் ஞான விளக்கென்
இதயத்தில் ஏற்றினீர் வாரீர்
உதயச் சுடரினீர் வாரீர். வாரீர்

உரை : ஈனம் - மல மாயை கன்மங்களின் தொடர்பால் உளதாகும் குறைபாடு. மெய்ஞ்ஞான விளக்கு - சிவஞானமாகிய ஒளி விளக்கு. உதயச் சுடர் - நாட்காலையில் வானத்தில் எழுகின்ற சூரிய வொளி. அது பலராலும் புகழப்படும் சிறப்புடையதாகலின், "உதயச்சுடர்" என உரைக்கின்றார். (34)

4387. ஈடறி யாதமெய் வீடுதந் தன்பரை
இன்புறச் செய்கின்றீர் வாரீர்
வன்பர்க் கரியீரே வாரீர். வாரீர்

உரை : ஈடு - ஒப்பு. மெய் வீடு - சிவபோக நுகர்ச்சிக் கமைந்த முத்தி வீடு. வன்பர் - அன்பில்லாத உள்ளமுடையவர். (35)

4388. ஈதியல் என்றுநின் றோதிய வேதத்திற்
கெட்டா திருந்தீரே வாரீர்
நட்டார்க் கெளியீரே வாரீர். வாரீர்

உரை : ஈது இயல் என்று ஓதிய வேதம், பரம்பொருளின் இயல்பு இதுவாம் என எடுத்தோதுகின்ற வேதங்கள். வேத ஞானத்துக்கும் எட்டாதது என்றற்கு, "வேதத்திற்கு எட்டா திருந்தீரே" என மொழிகின்றார். நட்டார் - நண்பர். (36)

4389. ஈசர் எனும்பல தேசர்கள் போற்றும்ந
டேசரே நீர்இங்கு வாரீர்
நேசரே நீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : ஈசர் எனும் பல தேசர்கள் - திருவும் செல்வமும் உடையராதலால் ஈசர் எனச் சிறப்பிக்கப்படும் பலராகிய செல்வ

வொளி யுடையவர்கள். தேசு - ஒளி; பல தேசத்தவர் என்பாரும் உண்டு. நேசர் - நண்பர். (37)

4390. ஈசர் பலிக்குழல் நேசரென் றன்பர்கள்
ஏசநின் றீர்இங்கு வாரீர்
நாசமில் லீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : ஈசர் என்றும், உண்பலி வேண்டி ஊர்தொறும் திரியும் நேசர் என்றும் அன்பர்கள் அன்பால் குறை கூறுவதுண்மையின், "ஈசர் பலிக்குழல் நேசர் என்று அன்பர்கள் ஏசு நின்றீர்" எனக் கூறுகின்றார். ஏசுதல், குறை கூறுதல்; பழித்தலுமாம். நாசம், கேடு. (38)

4391. ஈறறி யாமறை யோனென் றறிஞர்
இயம்பநின் றீர்இங்கு வாரீர்
வயந்தரு வீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : ஈறு அறியா மறையோன் - கேடில்லாத மறை முதல்வன். வயம் - ஞான வலிமை. (39)

4392. ஈதல்கண் டேமிகக் காதல்கொண் டேன்எனக்
கீதல்செய் வீர்இங்கு வாரீர்
ஓதரி யீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : ஈதல் - அருள் ஞானத்தை வழங்குதல். வேண்டுவார் வேண்டுவது ஈதலுமாம். காதல் - பேரன்பு. ஓதரியீர் - இன்ன தன்மையன் என எடுத்து மொழிதற் கரியவரே. (40)

4393. ஈடணை அற்றநெஞ் சூடணை உற்றுமற்
றீடணை யீர்இங்கு வாரீர்
ஆடல்வல் லீர்இங்கு வாரீர் வாரீர்

உரை : ஈடணையற்ற நெஞ்சு -மூவகை யாசையும்துறந்தநெஞ்சம். பொருளாசை, புத்திரராசை, உலகியலாசை என்ற இம்மூன்றும் ஈடணை எனப்படும். இவற்றை ஈஷணாத்திரயம் என்பது வழக்கு. ஈடணை ஏடணைஎனவும் வழங்கும். மண் பெண்பொன் என்று மூன்றாக மொழி பவரும்உண்டு. அணைவுறல் - சேர்தல். ஈடுஅணையீர், ஒப்பில்லாதவரே, ஆடல் - அம்பலத்தின்கண் ஆடல் புரிதல். (41)

4394. ஈண்டறி வோங்கிடத் தூண்டறி வாகிஉள்
ஈண்டுகின் றீர்இங்கு வாரீர்
ஆண்டவ ரேஇங்கு வாரீர். வாரீர்

உரை : ஈண்டு - இப்பிறப்பு. அறிவு - உண்மை ஞானம். தூண்டறிவு - உள்ளத்தின்கண் எழுந்தருளி உணர்வு தருதல். ஈண்டுகின்றீர் - எழுந்தருளுகின்றீர். (42)

4395. உள்ளதே உள்ளது விள்ளது வென்றெனக்
குள்ள துரைசெய்தீர் வாரீர்
வள்ளல் விரைந்திங்கு வாரீர். வாரீர்

உரை : உள்ளதே உள்ளது விள்ளது, உள்பொருளாகிய சிவ பரம் பொருளே உள்ளத்தின்கண் எழுந்தருள்வது; அதனை எடுத்தோதுக. உள்ளது உரை செய்தீர் - உண்மையை யுரைத்தவரே. (43)

4396. உருவாய் அருவாய் உருவரு வாய்அவை
ஒன்றுமல் லீர்இங்கு வாரீர்
என்றும்நல் லீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : உருவாய் அருவாய் அருவுருவாய், உருவம் நான்காகவும் அருவம் நான்காகவும் அருவுருவம் ஒன்றாகவும்; ஈசன், உருத்திரன், மால், அயன் என்ற நான்கும் உருவம்; சதாசிவன் அருவுருவம். சிவம், சத்தி, நாதம், விந்து என்ற நான்கும் அருவம். (சிவ. சித். 74). இவ்வாறு முத்திறத்து ஒன்பது வகையாயினும் அவற்றின் வேறாகவும் கூறுவது பற்றி, "அவை ஒன்று மல்லீர்" என இயம்புகின்றார். நல்லீர் - நன்மையே செய்பவரே. (44)

4397. உறவும் பகையும் உடைய நடையில்
உறவும்எண் ணோன்இங்கு வாரீர்
பிறவுநண் ணோன்இங்கு வாரீர். வாரீர்

உரை : நடை - உலகியல் வழக்கு. பகை முதலியவற்றைப் "பிறவும்" என்று குறிக்கின்றார். எண்ணுதல் - பொருளாகக் கருதுதல். நண்ணுதல் - கருதுதல். (45)

4398. உள்ளக் கருத்தைநான் வள்ளற் குரைப்பதென்
உள்ளத் திருந்தீரே வாரீர்
விள்ளற் கரியீரே வார். வாரீர்

உரை : உள்ளக் கருத்து, உள்ளத்தின்கண் அமையும் கருத்து. விள்ளல் - சொல்லுதல். (46)

4399. உய்யவல் லார்க்கருள் செய்யவல் லீர்நானும்
உய்யவல் லேன்இங்கு வாரீர்
செய்யவல் லீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : உய்தல் - ஈண்டு நலம் பெறல் என்னும் பொருளாம். செய்ய வல்லீர் - அருள் செய்ய வல்லவரே. (47)

4400. உடையவ ரார்இக் கடையவ னேனுக்
குடையவ ரேஇங்கு வாரீர்
சடையவ ரேஇங்கு வாரீர். வாரீர்

உரை : கடையவனேன் - கீழ்மைப்பட்டவன். உடையவர் - ஆண்டருளும் உரிமையுடையவர். (48)

4401. உறங்கி இறங்கும் உலகவர் போலநான்
உறங்கமாட் டேன்இங்கு வாரீர்
இறங்கமாட் டேன்இங்கு வாரீர். வாரீர்

உரை : உறங்கி இறங்கல் - தூக்கத்தில் ஆழ்ந்து செய்வன செய்யாமல் கெடுதல். உலகவர் - உலக வாழ்வில் மூழ்கியிருக்கும் மக்கள். (49)

4402. உண்டுடுத் தின்னும் உழலமாட் டேன்அமு
துண்டி விரும்பினேன் வாரீர்
உண்டி தரஇங்கு வாரீர் வாரீர்

உரை : உழலுதல் : வருந்துதல். அமுதுண்டி - திருவருள் ஞான மாகிய அமுதருந்துதல். உண்டி - ஞான போனகம். (50)

4403. உன்னுதோ றுன்னுதோ றுள்ளே இனிக்கின்ற
உத்தம ரேஇங்கு வாரீர்
உற்ற துணையானீர் வாரீர். வாரீர்

உரை : உன்னுதல் - எண்ணுதல். உள்ளே இனிக்கின்ற உத்தமர் - சிந்தையில் தேனைய் இனிமை தருகின்ற உயர்ந்தவர். உற்ற - துணை - பொருந்திய துணைவர். (51)

4404. உம்மாணை உம்மாணை உம்மையல் லால்எனக்
குற்றவர் மற்றிலை வாரீர்
உற்றறிந் தீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : உம்மையன்றி எனக்கு உறுதுணை யாகுபவர் வேறு எவருமிலர் என்னும் தமது கூற்றை வற்புறுத்தற்கு, "உம்மாணை உம்மாணை" என அடுக்கி யுரைக்கின்றார். உற்றறிந்தீர் - என்னுள் ளிருந்து யாவும் அறிந்தவரே. (52)

4405. ஊன நடந்தவிர்த் தான நடங்காட்டு
மோன நடேசரே வாரீர்
ஞான நடேசரே வாரீர். வாரீர்

உரை : உயிர்களை உடம்பிற் புகுத்தி உலகில் வாழச் செய்வது ஊன நடனம். ஆன நடனம் - ஞானப் பேற்றுக்குரிய அருட்செயல். மௌனம் - மோனம் என வந்தது. ஞான நடேசர் - ஞான நாடகம் புரியும் நடராசப் பெருமான். "ஊனை நாடகம் ஆடுவித்தவா உருகி நானுனைப் பருக வைத்தவா, ஞான நாடகம் ஆடுவித்தவா நைய வையகத்துடைய விச்சையே" (சதகம்) என மாணிக்கவாசகர் ஓதுவது காண்க. (53)

4406. ஊருமில் லீர்ஒரு பேருமில் லீர்அறி
வோருமில் லீர்இங்கு வாரீர்
யாருமில் லீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : அறிவோரும் இல்லீர் - உம்மை முழுதும் நன்கு அறிய வல்லவர் இல்லாதவர். ஒரு தனிப் பரமனுதலால், ''யாரும் இல்லீர்'' என மொழிகின்றார். (54)

4407. ஊறு சிவானந்தப் பேறு தருகின்ற
வீறுடை யீர்இங்கு வாரீர்
நீறுடை யீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : நினைப்பவர் நெஞ்சின்கண் தானாகச் சுரப்பதாகலின், "ஊறு சிவானந்தம்" எனவும், அந்தச் சிவானந்தத்தை ஆன்மாக்கள் பெறுமாறு செய்யும் தனிச் சிறப்புச் சிவத்துக்கமைந்திருப்பது விளங்க, ''சிவானந்தப் பேறு தருகின்ற வீறுடையீர்'' எனவும் புகல்கின்றார். வீறு - தனிச் சிறப்பு. (55)

4403. ஊன்றுநும் சேவடி சான்று தரிக்கிலேன்
ஏன்றுகொள் வீர்இங்கு வாரீர்
ஆன்றவ ரேஇங்கு வாரீர். வாரீர்

உரை : கூத்தப் பெருமான் திருவடி இரண்டனுள் ஊன்றியது ஒன்று; தூக்கியது ஒன்று. ஊன்றிய திருவடி திரோபவமும் (மறைத்தல்) தூக்கிய திருவடி முத்தியும் நல்குவன என்பர். ஊன்றிய திருவடியால் மறைப்புண்டு வருந்துவது விளங்க, "ஊன்றும் நும் சேவடி சான்று தரிக்கிலேன்" என வுரைக்கின்றார். தரித்தல் - தாங்குதல். ஆன்றவர் - நற்குணமனைத்தும் அமைந்தவர். (56)

4409. ஊற்றை உடம்பிது மாற்றுயர் பொன்னெனா
ஏற்றம் அருள்செய்வீர் வாரீர்
தோற்றம் அருள்செய்வீர் வாரீர். வாரீர்

உரை : ஊற்றை உடம்பு - மலநீர், சிறுநீர் முதலிய அழுக்கு நீர் ஊறுகின்ற உடம்பு; ஊத்தை யுடம்பெனக் கொண்டு, அழுக்கினுல் முடை நாறும் உடம்பு என்பவரும் உண்டு. பொன்னெனா ஏற்றம் உடையீர் - பொன்னுடம்பென்னுமாறு உயர்த்தும் அருட்செயல் உடையவரே. தேற்றம் - ஞானத் தெளிவு. (57)

4410. ஊடல்இல் வீர்எனைக் கூடல்வல் வீர்என்னுள்
பாடல்சொல் வீர்இங்கு வாரீர்
ஆடல்நல் வீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : ஊடல் - பிணங்குதல். என்னுட் கூடல் வல்லீர் - என் உடம்பினுள் உயிரோடு கலத்தலையுடையவரே. ஆடலிற் சிறந்தவர் என்பார், ''ஆடல் நல்லீர்'' எனக் கூறுகின்றார். (58)

**4411.** ஊக்கம் கொடுத்தென்றன் ஏக்கம் கெடுத்தருள்
ஆக்க மடுத்தீரே வாரீர்
தூக்கம் தவிர்த்தீரே வாரீர். வாரீர்

உரை : ஞானப்பேறு நினைந்து ஏங்கியிருந்தமை புலப்பட, "ஏக்கம் கெடுத்து" எனவும், ஊக்கத்தாலன்றி ஏக்கம் கெடாமை பற்றி, "ஊக்கம் கொடுத்து" எனவும், மீளவும் ஏங்காமைப் பொருட்டுத் திருவருள் ஞானமாகிய ஆக்கம் நல்கினமை விளங்க, "ஆக்க மடுத்தீரே" எனவும் இயம்புகின்றார். அடுத்தீர் - அடையச் செய்தீர். மடுத்தீர் எனக் கொண்டு நிறைவித்தீர் எனினும் பொருந்தும். (59)

**4412.** ஊமை எழுத்தினுள் ஆமை எழுத்துண்டென்
றோமை அறிவித்தீர் வாரீர்
சேமஞ் செறிவித்தீர் வாரீர். வாரீர்

உரை : மனத்திற் கொண்டு போற்றும் பிரணவம் "ஊமை எழுத்து" எனப்படுகிறது. இதனை மானதப் பிரணவம் என்பர். ஓகாரத்தை முதலெழுத்தாக வைத்து நோக்கும் பிரணவம், "ஆமை எழுத்து" எனப்படுகிறது. ஆமைக்குள் தலையும் காலும் ஒடுங்குதல் போலப் பிரணவத்தின் உறுப்புக்களான அகர வுகர மகரங்கள் ஒடுங்குதலின் இவ்வாறு கூறப்படுகிறது என்பர் அறிந்தோர். ஓமை அறிவித்தீர் - ஓம் என்னும் உருவப் பிரணவத்தைக் காட்டினீர். சேமம் - காப்பு. (60)

**4413.** ஊக மிலேன்பெற்ற தேகம் அழியாத
யோகம் கொடுத்தீரே வாரீர்
போகம் கொடுத்தீரே வாரீர். வாரீர்

உரை : ஊகம் - உணர்வு. யோக நெறியால் அழியாத் தேகத்தை யோகியர் பெறுவராதலால், அவ்வுண்மை புலப்பட, "தேகம் அழியாத யோகம் கொடுத்தீரே" எனவும், யோகத்தின் விளைவு சிவபோகமாதலால், "போகம் கொடுத்தீரே" எனவும் இசைக்கின்றார். (61)

**4414.** ஊதியம் தந்தநல் வேதிய ரேஉண்மை
ஓதிய நாதரே வாரீர்
ஆதிஅ னாதியீர் வாரீர். வாரீர்

உரை : ஊதியம் - திருவருள் ஞானமாகிய பயன். உண்மை - உண்மை ஞானம். தான் அனாதியாகவும், தன்னையொழிந்த ஆன்மாக்கள் அனைத்துக்கும் ஆதியாகவும் விளங்குதலால், "ஆதி யனாதியீர்" என வுரைக்கின்றார். (62)

**4415.** என்குறை தீர்த்தென்னுள் நன்குறை வீர்இனி
என்குறை என்முன்னீர் வாரீர்
தன்குறை இல்லீரே வாரீர். வாரீர்

உரை : நன்குறைவீர் - இனிது எழுந்தருளும் பெருமானாகிய நீவிர். இனி என் குறை - இப்பொழுது வந்தருளுதற்கு யாது குறை;

ஒன்றுமில்லையன்றோ. தன் குறையில்லீர் - தனக்கு ஒரு குறையும் இல்லாதவரே. (63)

4416. என்னுயிர் ஆகிஎன் றன்உயிர்க் குள்ளேஓர்
இன்னுயிர் ஆயினீர் வாரீர்
என்னுயிர் நாதரே வாரீர். வாரீர்

உரை : உயிர்க்குள்ளே ஓர் இன்னுயிராயினீர் - உயிர்க்குள் உயிராகக் கலந்து உணர்வின்பம் தருபவராக இருக்கின்றீர். (64)

4417. என்கண் அருள்செய்தென் புன்கண் விலக்கிய
என்கண் ணனையிரே வாரீர்
மின்கண் ணுதலீரே வாரீர். வாரீர்

உரை : என்கண் அருள்செய்து - எனக்கு அருள் ஞானம் நல்கி. புன்கண் - துன்பம். கண்ணனையீர் - கண் போன்றவரே. (65)

4418. எல்லா உயிர்களும் நல்லார் எனத்தொழும்
எல்லாம்வல் லீர்இங்கு வாரீர்
சொல்லா நிலையினீர் வாரீர். வாரீர்

உரை : நல்லார் - நலமே செய்பவர். வல்லீர் - வல்லவரே. சொல்லா நிலையினீர் - மன வாக்குகட்கு எட்டாத பரநிலையை யுடையவர். (66)

4419. எட்டும் இரண்டுமென் றிட்டு வழங்குதல்
எட்டும் படிசெய்தீர் வாரீர்
எட்டுரு வாயினீர் வாரீர். வாரீர்

உரை : சிவாயநம என நிற்கும் திருவைந்தெழுத்தினுள் பத்தென்னும் எண்ணின் வடிவமாகிய என்பது ஆன்மாவாம் என்பது தெரிய வுணர்த்தினமை விளங்க, "எட்டும் இரண்டும் என்றிட்டு வழங்குதல் எட்டும்படி செய்தீர்" என இயம்புகின்றார். எட்டும் இரண்டும் பத்து; இது ய என எண்ணாற் கூறப்படும். இனி, எட்டினை அகரமாகவும், இரண்டினை உகரமாகவும் கொண்டு, அகர வுகரங்களை உள்ளீடாகவுடையது ஓம் என்னும் பிரணவமென வழங்குதல் எனக் கூறலும் ஒன்று. நில முதற் பூதம் ஐந்தும், ஞாயிறு திங்கள் உயிர் ஆகிய மூன்றும் கூட எய்தும் எட்டும் இறைவன் உருவாம் என்று சான்றோர் கூறுவது பற்றி, "எட்டுரு வாயினீர்" என மொழிகின்றார் எனினும் பொருந்தும். (67)

4420. என்று கண்டாய்இது நன்றுகொண் டாளுக
என்றுதந் தீர்இங்கு வாரீர்
அன்றுவந் தீர்இன்று வாரீர். வாரீர்

உரை : அருட்பெருஞ் சோதியாகிய சிவஞானத்தின் வாய்மை யாகிய இதனை, எப்பொழுது உணர்ந்து கொண்டாயோ அப்பொழு

திருந்து, நன்கு மனத்திற்கொண்டு ஓதியுணர்ந்து உய்தி பெறுக எனத் தாம் பெற்ற ஞானோபதேசத்தை வடலூர் வள்ளல் இதனால் தெரிவிக்கின்றார். அன்று உவந்தீர் - அந்நாளில் மகிழ்ந்து வந்து உபகரித்தீர். (68)

4421. எச்சம யங்களும் பொய்ச்சம யமென்றீர்
இச்சம யம்இங்கு வாரீர்
மெய்ச்சம யந்தந்தீர் வாரீர். வாரீர்

உரை: சமயங்கள் யாவும் ஆசார சங்கற்ப விகற்பங்களைப் படைத்துச் சமரசவுண்மைக்கு ஊறு செய்தலைக் கண்டு தெளிந்தமையின், "எச்சமயங்களும் பொய்ச் சமயமென்றீர்" என இயம்புகின்றார். சத்திய ஞான சமரச சன்மார்க்கமே உண்மைச் சமயமாதலால், "மெய்ச் சமயம் தந்தீர்" என வுரைக்கின்றார். (69)

4422. என்பாற் களிப்பொடும் அன்பால்ஒன் றீந்திதை
இன்பால் பெறுகென்றீர் வாரீர்
தென்பால் முகங்கொண்டீர் வாரீர். வாரீர்

உரை: ஒன்று ஈந்து இறை இன்பாற் பெறுக என்றது, "அருட்பெருஞ் சோதி" என வரும் தனிப் பொருளை யுபதேசித் தருளினமை குறித்து நிற்கிறது. தென்பால் முகங் கொண்டீர் - தட்சிணாமூர்த்தியாயினவரே. (70)

4423. எச்ச உரையன்றென் இச்சையெல் லாம்உம
திச்சைகண் டீர்இங்கு வாரீர்
அச்சம் தவிர்த்தீரே வாரீர். வாரீர்

உரை: எச்ச வுரையன்று - குறை யுடைய சொல்லன்று; அஃதாவது பொய்யுரை யன்று என்பதாம். "என் இச்சை யெல்லாம் உமது இச்சை கண்டீர்" என்பது என்னுடைய இச்சை, அறிவு, செயல் யாவும் நின்னுடைய இச்சையும் அறிவும் செயலுமேயாம் எனத் தன் பணி நீத்தலாம். இதனை இறைபணி நிற்றல் என மெய்கண்டார் கூறுவர். (71)

4424. எண்ணமெல் லாம்உம தெண்ணமல் லால்வேறோர்
எண்ணம் எனக்கில்லை வாரீர்
வண்ணம் அளிக்கின்றீர் வாரீர். வாரீர்

உரை: எண்ணமெல்லாம் உமது எண்ணமல்லால் வேறோர் எண்ணம் எனக்கில்லை என்பது, நான் எண்ணுவதெல்லாம் நீவிர் எண்ணுவிக்க எண்ணுகின்றேனே யன்றி எனக்கென ஒரு எண்ணமும் இல்லை என்பதாம். இதனை "நம் செயலற்று நாமற்று நிற்றல் எனத் திருவுந்தியார் கூறுகிறது. "வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத் தொண்டனேன் விளம்பு மாவிளம்பே" எனப் பெரியோர் உரைப்பது காண்க. (72)

4425. ஏராய நான்முகர் நாராய ணர்மற்றும்
பாராய ணம்செய்வீர் வாரீர்
ஊராயம் ஆயினீர் வாரீர். வாரீர்

உரை : ஏர் சிறப்பு; அழகுமாம். பாராயணம் செய்தல் - நிய மாகச் சிந்தித்து ஓதுதல். செய்வீர் - செய்யப்படுகின்றவரே. ஊரா யம் - ஊரவர்க் கொத்த நண்பர். (73)

4426. ஏம மிருந்திரு வாம சுகந்தரும்
ஏம சபேசரே வாரீர்
சோம சிகாமணி வாரீர். வாரீர்

உரை : ஏமம் - பாதுகாப்பு; பொன். வாம சுகம் - திருவருளின்பம். வாமம் - அழகுமாம். ஏமசபேசர் - பொற் சபையில் உள்ள ஈசர். சந்திரனை முடியிற் கொண்டிருத்தலால், "சோம சிகாமணி" என்று புகழ்கின்றார். (74)

4427. ஏத மிலாப்பர நாத முடிப்பொருள்
ஏதது சொல்லுவீர் வாரீர்
ஈதல் உடையீரே வாரீர். வாரீர்

உரை : ஏதம் - குற்றம். நாத தத்துவத்துக்கு மேலுள்ள சிவவெளி - பரநாத முடி எனப்படுகிறது. (75)

4428. ஏக பராபர யோக வெளிக்கப்பால்
ஏக வெளிநின்றீர் வாரீர்
ஏகர் அனேகரே வாரீர். வாரீர்

உரை : ஏகன் - ஒருவன். பராபரன் - மேலும் கீழுமாகியவன். யோக வெளி - துவாத சாந்தப் பெருவெளி. தனக்குமேல் வெளி யாதும் இன்மை விளங்க, "ஏகவெளி" என இசைக்கின்றார். தனி முதற் பரமனாகலின் ஏகன் என்றும், பலவாகிய உயிர்தோறும் இருத்தலால் அநேகன் என்றும் இயம்புகின்றார். (76)

4429. ஏறி இறங்கி இருந்தேன் இறங்காமல்
ஏறவைத் தீர்இங்கு வாரீர்.
தேறவைத் தீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : நல்வினையால் மேலுலகு புகுவதும், வினைப்போக நுகர்ச்சி முடிவில் கீழுலகிற் பிறப்பதும் செய்தமையால், "ஏறி இறங்கி இருந்தேன்" என்றும், இறவாப் பெருவாழ்வு பெற்றமை விளங்க, "இறங்காமல் ஏற வைத்தீர்" என்றும் இசைக்கின்றார். தேறவைத்தல் - உண்மை ஞானத்தை யுணரச்செய்தல். (77)

4430. ஏகாந்த நன்னிலை யோகாந்தத் துள்ளதென்
றேகாந்தம் சொல்லினீர் வாரீர்!
தேகாந்தம் இல்லீரே வாரீர். வாரீர்

உரை : யோக முடிவில் துவாத சாந்தத்தில் ஞான சந்திராமுதம் உண்டு. தனித்திருத்தல் யோகப்பயன் என்பராதலால், அதனை "ஏகாந்த நன்னிலை யோகாந்தத் துள்ளது என்று ஏகாந்தம் சொல்லி னீர்" என உரைக்கின்றார். தேகாந்தம் இல்லீர் - அழியும் உடம் பில்லாதவர். (78)

4431. ஏகாத கல்விதான் சாகாத கல்வியென்
றேகாத லாற்சொன்னீர் வாரீர்
வேகாத காலினீர் வாரீர். வாரீர்

உரை : ஏகாத கல்வி - உடம்பொடு அழிந் தொழியாத கல்வி. "ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு எழுமையும் ஏமாப் புடைத்து" எனத் திருவள்ளுவர் சாகாக் கல்வியை விளக்குவது காண்க. வேகாத கால் - வெந்தழிக்காத பிராண வாயு. உடம்பினுள் இருந்து வெம்மை செய்யும் பிராணக் காற்றுப் போலின்றி, உயிரினுள் உயிராய் இருந்து உணர்வு நல்கி உய்தி பெறுவிக்கும் சிறப்புப் பற்றி, சிவனை, "வேகாத காலினீர்" என விளம்புகின்றார். (79)

4432. ஏடா யிரமென்னை கோடா மொழிஒன்றே
ஏடாஎன் றீர்இங்கு வாரீர்
ஈடாவார் இல்லீரே வாரீர். வாரீர்

உரை : ஏடாயிரம் என்னை - பல்லாயிர நூல்களைப் படிப்பதாற் பயன் யாது; கோடா மொழி - பொய்படாத மெய்ம்மொழி. ஏடா - உயர்ந்தோர் தாழ்ந்தோரை யழைக்கும் வழக்குச் சொல். ஈடாவார் - ஒப்பாவார். (80)

4433. ஏசாத தந்திரம் பேசாத மந்திரம்
ஈசான மேலென்றீர் வாரீர்
ஆசாதி இல்லீரே வாரீர். வாரீர்

உரை : ஏசாத தந்திரம் - குற்றமில்லாத ஆகமம். பேசாத மந்திரம் - மானதமாய்த் தியான மொன்றிற்கே யுரிய வேத மந்திரம். இவ்விரண்டினும் மேலானது ஈசான முகத் தியான மந்திரம். ஆசாதி - ஆசை முதலிய குற்றம். (81)

4434. ஏனென்பார் வேறிலை நான்அன்பாற் கூவுகின்
றேன்என்பால் ஏனென்பீர் வாரீர்.
ஆனின்பால் ஆடுவீர் வாரீர். வாரீர்

உரை : ஆனின் பால் - பசுவின் பால். பசுவின் பால், தயிர், நெய் முதலாய ஐந்தும் கொண்டு சிவன் திருமேனிக்கு அபிடேகம்

செய்யும் இயல்பு விளங்க, "ஆவின் பால் ஆடுவீர்" என வுரைக்கின்றார். "அட்டமா மலர்கள் கொண்டே ஆனஞ்சும் ஆட்ட ஆடி" (சோற்றுத் துறை) என்று திருநாவுக்கரசர் உரைப்பது காண்க. (82

4435. ஐந்து மலங்களும் வெந்து விழஎழுத்
தைந்துஞ் செயும்என்றீர் வாரீர்
இந்து சிகாமணி வாரீர். வாரீர்

உரை : மலங்கள் ஐந்தாவன : மூல ஆணவ மலம், திரோதான மலம், மாமாயை, மாயை, கன்ம மலம் என்பன (சிவப். 32). எழுத்தைந்துமாவன சிவாயநம என்பன. இந்து - சந்திரன். (83)

4436. ஐயமுற் றேனை இவ் வையங் கரியாக
ஐயம் தவிர்த்தீரே வாரீர்
மெய்யம் பலத்தீரே வாரீர். வாரீர்

உரை : சந்தேக விபரீத ஞானங்களால் தடுமாறி வருந்தினமை தோன்ற, "ஐயமுற்றேன்" எனக் கூறுகின்றார். வையம் - உலகம். கரி - சான்று. உண்மை ஞானம் பெற்றமை விளங்க, "ஐயம் தவிர்த்தீர்" என வுரைக்கின்றார். மெய்யம்பலம் - நிலையான சிற்றம்பலம். (84)

4437. ஐயர் நடம்புரி மெய்யர்என் றேஉணர்ந்
தையர் தொழநின்றீர் வாரீர்
துய்யர் உளநின்றீர் வாரீர். வாரீர்

உரை : ஐயர் - தலைவர். நடம்புரி மெய்யர் - கூத்தாடல் செய்யும் நடராச மூர்த்தி. ஐயர் - மெய்யுணர்வுடையோர். துய்யர் உளம் - தூய்மை மிக்க சான்றோருடைய தூய மனம். (85)

4438. ஐவணங் காட்டுநும் மெய்வணம் வேட்டுநின்
றைவணர் ஏத்துவீர் வாரீர்
பொய்வணம் போக்குவீர் வாரீர். வாரீர்

உரை : ஐவணம் : பொன்மை, வெண்மை, செம்மை, கருமை, நீலம். ஐவணர் : அயன், திருமால், உருத்திரர், மகேசுவரர், சதாசிவர் என்ற ஐவகையினர். பொய்வணம் - பொய்யான உணர்வொழுக்கங்கள். (86)

4439. ஒன்றே சிவம்அதை ஒன்றுசன் மார்க்கமும்
ஒன்றேஎன் றீர்இங்கு வாரீர்
நன்றேநின் றீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : அதையொன்று சன்மார்க்கம் - அக்கருத்தையே மேற்கொண்ட சன்மார்க்க நெறி. நன்றே நின்றீர் - அறநெறியே நிலவநின்றவரே. நன்று - அறம். (87)

4440. ஒப்பாரில் லீர்உமக் கிப்பாரில் பிள்ளைநான்
ஒப்பாரி அல்லகாண் வாரீர்
முப்பாழ் கடந்தீரே வாரீர். வாரீர்

உரை : இல்லீர் - இல்லாதவரே. பாரில் - நிலவுலகில். பிள்ளை மகன். ஒப்பாரி - ஒப்புமை. முப்பாழ், மாயப் பாழ், வியோமப் பாழ், உபசாந்தப் பாழ். (88)

4441. ஒத்த இடந்தன்னில் நித்திரை செய்என்றீர்
ஒத்த இடங்காட்ட வாரீர்
சித்த சிகாமணி வாரீர். வாரீர்

உரை : ஒத்த இடம் - மனவொருமைக்கு அமைந்த இடம் நித்திரை - யோக நித்திரை. ஒத்த இடம் - இருவினை யொப்புணர்வு. சித்த சிகாமணி - சித்தத்தின் உச்சியில் விளங்கும் மாணிக்க மணி போல்பவர். (89)

4442. ஒட்டுமற் றில்லைநான் விட்டுப் பிரிகலேன்
ஒட்டுவைத் தேனும்மேல் வாரீர்
எட்டுக் குணத்தீரே வாரீர். வாரீர்

உரை : ஒட்டு - பற்று. "பற்று நான் மற்றிலேன்" (வாழாப்) என்பதுதிருவாசகம். விடுதல் - நீங்குதல். ஒட்டு வைத்தல் - சத்தியம் செய்தல். எட்டுக் குணம்; தன்வயத்தனுதல், தூய வுடம்பினனுதல், இயற்கை யுணர்வினனுதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங் களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றல் உடைமை, வரம்பிலின்பமுடைமை என இவை. (90)

4443. ஒருமை நிலையில் இருமையும் தந்த
ஒருமையி னீர்இங்கு வாரீர்
பெருமையி னீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : ஒருமை நிலை - சிவமொன்றே என நினைந்தொழுகும் நிலை. இருமை - பந்தம் வீடு என்ற இருவகை நிலை. ஒருமையினீர் - ஒப்புயர்வில்லாத ஒருவரே. (91)

4444. ஒண்மை விரும்பினேன் அண்மையில் ஈகுவீர்
உண்மைசொன் னேன்இங்கு வாரீர்
பெண்மை இடங்கொண்டீர் வாரீர். வாரீர்

உரை : ஒண்மை - உண்மையறிவு. அண்மை - அருகில். பெண்மையிடங் கொண்டீர் - பெண்ணாகிய உமாதேவியை இடப் பாகத்தில் உடையவரே. (92)

4445. ஓங்கார நாடகம் பாங்காகச் செய்கின்ற
ஓங்கார நாடரே வாரீர்
ஆங்கார நீக்கினீர் வாரீர். வாரீர்

உரை : ஓங்கார நாடகம் - பிரணவச் சூழலில் அகர வுகர மகரங் களாய் நின்றுடும் ஞான நாடகம் என்பர். பாங்கு - அழகு. ஓங்கார

நாடர், பிரணவாகார உலகையுடையவர். ஆங்காரம் - அகங்கார மாகிய செருக்கு. (93)

4446. ஓங்கும்பின் டாண்டங்கள் தாங்கும் பெருவெளி
ஓங்கு நடேசரே வாரீர்
பாங்குசெய வீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : சிறியவும் பெரியவுமாகிய பிண்டங்களையும் அண்டங் களையும் தன்னுட் கொண்டிருக்கும் அத்த வெளியை, "பிண்டாண் டங்கள் தாங்கும் பெருவெளி" என வுரைக்கின்றார். (94)

4447. ஓசையின் உள்ளேஓர் ஆசை உதிக்கமெல்
ஓசைசெய் வித்தீரே வாரீர்
பாசம் அறுத்தீரே வாரீர். வாரீர்

உரை : பொதுவாக எங்கும் நிலவும் ஓசைக்குள் கேட்பார் விரும்பத் தக்க இனிய மெல்லிய இசை யொலியை அமைத்துள்ளமை பற்றி, "ஆசை யுதிக்க மெல்லோசை செய்வித்தீர்" என்று மொழி கின்றார். ஓசை - பொது. ஒலி - சிறப்பு. ஓசை யொலியெலாம் ஆனாய் நீயே" என்பர் திருநாவுக்கரசர். பாசம் - மலமாயை கன் மங்கள். (95)

4448. ஓரா துலகினைப் பாரா திருநினக்
கோரா வகைஎன்றீர் வாரீர்
பேரா நிலைதந்தீர் வாரீர். வாரீர்

உரை : ஓராது உற்றுணர்தலின்றி. உலகியல் நிகழ்ச்சிகளைப் பாராதிருப்பின், உள்ளத்தில் பற்றுத்தோன்றி உனது ஒருமை நிலையை அலைக்காது என்பாராய், "உலகினைப் பாரா திரு நினக்கு ஓராவகை" யாம் என உபதேசிக்கின்றார். ஓராமைக்கு உபாயம் உரைத்தவாறும். உலகியலை யோராது உள்பொருளாகிய சிவத்தை ஓர்ந்துணரின், பிறப்பிறப் புண்டாகா எனத் திருவள்ளுவர் முதலிய சான்றோர் அறிவுறுத்தலால், "பேரா நிலை தந்தீர்" என்று பேசு கின்றார். பேரா நிலை, சிவபோகத்திலிருந்து நீங்காத நிலை. (96)

4449. ஓடாது மாயை நாடாது நன்னெறி
ஊடா திருஎன்றீர் வாரீர்
வாடா திருஎன்றீர் வாரீர். வாரீர்

உரை : மாயா காரியமாகிய உலகியலைத் தொடர்ந்து செல்லா மலும், அதனை நினையாமலும் சன்மார்க்கமாகிய நன்னெறிக்கு மாறு படாது ஒழுகுக என்றற்கு, "ஓடாது மாயையை நாடாது நன்னெறி ஊடாது இரு" எனஉபதேசிக்கின்றார். ஊடுதல் - மாறுபடுதல். (97)

4450. ஓலக் கபாடத்தைச் சாலத் திறந்தருள்
ஓலக்கங் காட்டினீர் வாரீர்
காலக் கணக்கில்லீர் வாரீர். வாரீர்

உரை : ஓலக் கபாடம், துவாத சாந்தத்தின் கீழ்நிலையாகிய தலைக்குள் அமைந்த உபசாந்தம் துவாத சாந்தக்காட்சி "திருவருள் ஓலக்கம்" எனப்படுகிறது. ஓலக்கம் - சபை. காலக் கணக்கில்லீர், கால வரம்புக்குட்படாதவரே. (98)

4451. ஓடத்தில் நின்றொரு மாடத்தில் ஏற்றிமெய்
யூடத்தைக் காட்டினீர் வாரீர்
வேடத்தைப் பூட்டினீர் வாரீர். வாரீர்

உரை : ஓடம் - ஓடும் இயல்புடைய உடம்பு. மாடம், தலையோட்டின் உள்ளிடம்; அதனை யோகியர் உபசாந்தம் என்பர். மெய்யூடு அத்தைக் காட்டினீர், உடம்பின்கண் மூலாதார முதலாகவுள்ள ஆதாரங்களின் வழியாகச் செலுத்தித் துவாத சாந்தத்தின் எல்லையைக் காட்டினவரே. அத்து - எல்லை. வேடம் - சிவக் கோலம். (99)

4452. ஓமத்தி லேநடுச் சாமத்தி லேஎனை
ஓமத்தன் ஆக்கினீர் வாரீர்
சாமத்த நீக்கினீர் வாரீர். வாரீர்

உரை : நடுச் சாமத்தில் ஓமத்தில் எனை ஓமத்தனாக்கினீர், நள்ளிரவு உறக்கத்தில் வியோமமாகிய அருள் வெளியில் என்னைப் பிரணவாகார வுருவில் ஒன்றுவித்தீர். வியோமம் - ஓமம் என வந்தது. ஓமத்தன் -ஓம் என்பதன் பொருளாகியவன். (100)

4453. ஓமென்ப தற்குமுன் ஆமென் றுரைத்துடன்
ஊமென்று காட்டினீர் வாரீர்
நாமென்று நாட்டினீர் வாரீர். வாரீர்

உரை : ஓம் என்பதன் உள்ளீடாகிய அகர உகர மகரங்களில், அகரம் சிவத்தையும், உகரம் அருளையும், மகரம் உயிரையும் குறிக்கும் எனச் சான்றோர் உரைப்பதால், "நாம் என்று காட்டினீர்" என நவில்கின்றார். ஓம் என்பதற்கு முன் அகரமும் உகரமும் நிற்றலின், அவற்றை "ஆம் என்று உரைத்து உடன் ஊம் என்று காட்டினீர்" என உரைக்கின்றார். அம் ஆம் எனவும், உம் ஊம் எனவும் செய்யுட் கேற்ப நீண்டன. (101)

4454. ஔவிய மார்க்கத்தின் வெவ்வியல் நீக்கியே
செவ்வியல் அக்கினீர் வாரீர்
ஒவ் வியென் றாக்கினீர் வாரீர் வாரீர். வாரீர்

உரை : ஔவிய மார்க்கம், வஞ்சக நெறி; பொய்ந்நெறி காட்டும் சமயங்கள். வெவ்வியல் - கொடுமை. செவ்வியல் - செம்மை நெறி

யாகிய சன்மார்க்கம். ஒவ்வி - ஒத்து. ஒன்றுக்குதல் - சமரசப் படுத்தல். (102)

**4455.** கண்ணனை யீர்உம்மைக் காணஎன் ஆசைக்
கடல்பொங்கு கின்றது வாரீர்
உடல்தங்கு கின்றது வாரீர். வாரீர்

உரை : கண்ணனையீர் - கண் போன்றவரே. ஆசைக் கடல் ஆசையாகிய கடல். ஆசை பொங்கி வழியாமல் உடற்குள் நிறைந்துளது என்பார், "உடல் தங்குகின்றது" என உரைக்கின்றார். (103)

**4456.** கண்டனைந் தால்அன்றிக் காதல் அடங்காதென்
கண்மணி யீர்இங்கு வாரீர்
உண்மணி யீர்இங்கு வாரீர். வாரீர்

உரை : காதல் - மிக்க அன்பு; ஆர்வம் எனினும் பொருந்தும். கண்மணியீர் - கண்ணின் மணி போன்றவரே. உண்மணியீர் - மனமாகிய மணியில் எழுந்தருள்பவரே. "வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக" (நேரிசை) எனத் திருநாவுக்கரசர் குறிப்பது காண்க. (104)

**4457.** கட்டிக்கொண் டும்மைக் கலந்து கொளல்வேண்டும்
காரண ரேஇங்கு வாரீர்
பூரண ரேஇங்கு வாரீர் வாரீர்.

வாரீர் சிதம்பர வல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்
மணிமன்ற வாணரே வாரீர்.

உரை : காரணர், நினைவு, செயல், பொருள், உலகுகள் அத்தனைக்கும் காரணமானவர். பூரணர் - குறைவற நிறைந்தவர். (105)

திருச்சிற்றம்பலம்

## 71. அம்பலவாணர் ஆட வருகை

### சிந்து

அஃதாவது, ஆயமகளிரும் தோழியரும் தானுமாகக் கூடியிருந்து, விளையாடுதற்குத் தலைவனை வருக என வேண்டி யழைத்தலாம். அம்பலத்தின்கண் திருநடம் புரியும் இயல்பினனாதலின் விளையாடற்கு வருக எனத் தலைவி வேண்டுகின்றாள்.

### பல்லவி

4458. நிவா ரீர் என்னோ ஆடாடவா ரீர்
அம்பலத்தில் ஆடுகின்றீர் ஆடவா ரீர்.

உரை : ஆடல், கூடி மகிழ்ந்து விளையாடுதல்; கூடி வாழ்தலுமாம்.

### கண்ணிகள்

4459. தன்மைபிறர்க் கறிவரியீர் ஆடவா ரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீர் ஆடவா ரீர்
வன்மைமனத் தவர்க்கரியீர் ஆடவா ரீர்
வஞ்சமிலா நெஞ்சகத்தீர் ஆடவா ரீர்
தொன்மைமறை முடியமர்ந்தீர் ஆடவா ரீர்
துரியபதங் கடந்தவரே ஆடவா ரீர்
இன்மைதவிர்த் தெனைமணந்தீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர்

உரை : மெய்யன்பரல்லாதவரால் சிவனது தனிமுதலாம் தன்மையறியப்படுவ தில்லையாதலால், "தன்மை பிறர்க்கு அறிவரியீர்" என்று கூறுகின்றாள். "தன்மை பிறரால் அறியாத தலைவா" (சதகம்) என மணிவாசகர் உரைப்பது காண்க. பெரும்பதி - சிவன் எழுந்தருளும் இடம்; இதனைச் "சிவமாநகர்" என்று திருவாசகம் குறிக்கின்றது. பெரும்பதியீர் என்பதற்குப் பெரிய பதியாகிய தலைவரே என்று உரைத்தலும் உண்டு. வன்மை மனத்தவர் - இரக்கமில்லாத வன்கண்மை பொருந்திய மனம் உடையவர். வேதங்களை அநாதி என்பதுபற்றி, "தொன்மை மறை" என்று சொல்லுகின்றார். மறைமுடி - வேதாந்தம். துரிய பதம் கடந்தவர் - துரியாதீதத்தில் எழுந்தருள்பவர். இன்மை - ஈண்டுத் துணையில்லாமை. (1)

4460. திருவாளர் போற்ற என்னோ டாடவா ரீர்
திருவ ணையார் வாழ்த்தஇங்கே ஆடவா ரீர்
பெருவாய்மைப் பெருந்தகையீர் ஆடவா ரீர்
பேராசை பொங்குகின்றேன் ஆடவா ரீர்
உருவாகி ஓங்குகின்றீர் ஆடவா ரீர்
உத்தமரே இதுதருணம் ஆடவா ரீர்
இருவாணர் ஏத்தநின்றீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர்

உரை : திருவாளர் - சிவஞானமாகிய செல்வத்தையுடைய ஞான வான்கள். திருவனையார் - திருமகளைப் போன்ற மகளிர். பெரு வாய்மைப் பெருந்தகை - பெருமை பொருந்திய வாய்மை யறத்தால் பெருந்தகவுடையவர். பேராசை - மிக்க பெருங்காதல். இருவாணர் - மனைவாழ்வும் துறவு வாழ்வும் உடையவர்; சங்கம் பதுமம் என்ற இரு நிதியும் நிறைந்து வாழ்பவர் எனினும் பொருந்தும். வாழ்நர் என்பது வாணர் என மருவிற்று. (2)

4461. வேற்றுமுகம் பாரேன்என்னோ டாடவா ரீர்
வெட்கமெல்லாம் விட்டுவிட்டேன் ஆடவா ரீர்
மாற்றுதற்கெண் ணாதிர்என்னோ டாடவா ரீர்
மாற்றில்உயிர் மாய்ப்பேன்கண்டீர் ஆடவா ரீர்
கூற்றுதைத்த சேவடியீர் ஆடவா ரீர்
கொண்டுகுலங் குறியாதீர் ஆடவா ரீர்
ஏற்றதனித் தருணமீதே ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர்

உரை : வேற்று முகம் - வேறு தேவர்களைச் சிந்தை செய்யேன். வெட்கம் - நாணம். மாற்றுதற்கு எண்ணாதீர், என் மனவொருமையை மாற்றற்கு நினைத்தல் வேண்டா. கூற்று - எமன். மார்க்கண்டேயர் பொருட்டு எமனை உதைத்துப் போக்கிய வரலாறு, இங்கே குறிக்கப் படுகிறது. சேவடி - சிவந்த திருவடி. குலமறிந்து பின் பெண் கொள்வது உலகியல் முறை; கொண்ட பின் குலம் பேசுவது குற்றம். குறித்தம் - கருதுதல். எம்மோடு விளையாடுதற்கு ஏற்ற ஒப்பற்ற தருணம் இதுவாகலின் வருக என்பது கருத்து. (3)

4462. இல்லாமை நீக்கிநின்றீர் ஆடவா ரீர்
என்னைமண மாலையிட்டீர் ஆடவா ரீர்
கொல்லாமை நெறிஎன்றீர் ஆடவா ரீர்
குற்றமெலாங் குணங்கொண்டீர் ஆடவா ரீர்
நல்லார்சொல் நல்லவரே ஆடவா ரீர்
நற்றுயில் இனியவரே ஆடவா ரீர்
எல்லாம்செய் வல்லவரே ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர்

உரை : இல்லாமை - நல்லறிவில்லாமை. மணமாலையிட்டீர் - ஞான மணம் கமழும் சிவமாலை யணிந்தீர். குணம் கொண்டீர் -

குணமாகக் கொண்டு ஆட்கொண்டவரே. நல்லார், நற்பண்புடையவர்; நல்லார் மகளிரையும் குறிக்கும். நற்றாயில் இனியவர் - பெற்ற தாயினும் இனிமை செய்பவர். "தாயினும் நல்லன் சங்கரன்" என்பர் திருநாவுக்கரசர். (4)

**4463.** ஆசைகொண்டேன் ஆடஎன்னோ டாடவா ரீர்
ஆசைவெட்கம் அறியாதால் ஆடவா ரீர்
ஓசைகொண்ட தெங்குமிங்கே ஆடவா ரீர்
உம்ஆணை உம்மைவிடேன் ஆடவா ரீர்
காசுபணத் தாசையிலேன் ஆடவா ரீர்
கைபிடித்தாற் போதும் என்னோ டாடவா ரீர்
ஏசறல்நீத் தென்னை ஆண்டீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர்

உரை : ஆசை வெட்கம் அறியாது என்பது பழமொழி. ஆசை மிக்கவர் வெட்கமின்றி யாதும் செய்வர் என்பது கருத்து. ஓசை - அலர் கூற்று. எங்கும் நீர் என் காதலர் எனவும், யான் நின் காதலி யெனவும் மகளிர் அலர் கூறுகின்றனர் என்பதாம். கைபிடித்தல், கணவன் மனைவியாகக் கைப்பற்றுதல்; மணம் புணர்தல். ஏசறல் - ஏசறவு; வருத்தம். (5)

**4464.** சன்மார்க்க நெறிவைத்தீர் ஆடவா ரீர்
சாகாத வரந்தந்ீர் ஆடவா ரீர்
கன்மார்க்க மனங்கரைத்தீர் ஆடவா ரீர்
கண்ணிசைந்த கணவரேநீர் ஆடவா ரீர்
சொன்மார்க்கப் பொருளானீர் ஆடவா ரீர்
சுத்தஅருட் சோதியரே ஆடவா ரீர்
என்மார்க்கம் உளத்துகந்தீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர்

உரை : கன்மார்க்க மனம், கல்லைப் போன்ற மனம். கண்ணிசைந்த கணவர், கண்கொள்ளக் கண்டு மகிழவமைந்த கணவர்; கண்ணிறைந்த கணவர் என்பது உலக வழக்கு. சொன் மார்க்கப் பொருளாயினீர் - சொல்லும் பொருளுமாயினீர். அருட்சோதியீர் - திருவருள் ஞானவொளியை யுடையவரே. என் அறிவு வழி நிற்கும் மனத்தின்கண் எழுந்தருளினீர் என்ற கருத்தால் என்மார்க்க உளத்து உகந்தீர் என வுரைக்கின்றாள். (6)

**4465.** அண்டமெலாம் கண்டவரே ஆடவா ரீர்
அகண்டபரி பூரணரே ஆடவா ரீர்
பண்டமெலாம் படைத்தவரே ஆடவா ரீர்
பற்றொடுவி டில்லவரே ஆடவா ரீர்

கொண்டெனைவந் தாண்டவரே ஆடவா ரீர்
கூத்தாட வல்லவரே ஆடவா ரீர்
எண்தகுபொற் சபையுடையீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர்

உரை : அண்டமெலாம் கண்டவர் - அண்டங்கள் அனைத்தையும் படைத்தவர் அகண்ட பரிபூரணர் - அளந்து காண்டற்கரிய நிறைவுடையவர். பண்டம் - அண்டங்களின் அடங்கியிருக்கும் பொருள்கள். பற்று - பந்தம், பற்று விடில்லாதவர் - பெத்த நிலை முத்தி நிலையாகிய இரண்டும் இல்லாதவர். "பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்க ளல்லான்" என்பர் அருணந்தி சிவனார். எண்தகு பொற்சபை - சான்றோர்களால் மதிக்கப்படுகின்ற பொன்னம்பலம். (7)

4466. பேதநினை யாதுவிரைந் தாடவா ரீர்
பின்பாட்டுக் காலையிதே ஆடவா ரீர்
ஓதஉல வாதவரே ஆடவா ரீர்
உள்ளாசை பொங்குகின்ற தாடவா ரீர்
சாதலறுத் தெனைண்டீர் ஆடவா ரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீர் ஆடவா ரீர்
ஏதமறுத் தவர்க்கினியீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர்

உரை : பேதம் - மக்கள் தேவர் என்ற வேறுபாடு; விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்ற வேறுபாடுமாம். ஓத வுலவாதவர் - முற்றவும் சொல்லி முடிக்க வொண்ணாத பெருமை யுடையவர். ஏதமறுத்தவர் - காம வெகுளி மயக்க மென்னும் மூவகைக் குற்றங்களையும் நீக்கினவர். (8)

4467. கள்ளமொன்றும் அறியேன்நான் ஆடவா ரீர்
கைகலந்து கொண்டீர்என்னோ டாடவா ரீர்
உள்ளபடி உரைக்கின்றேன் ஆடவா ரீர்
உம்மாசை பொங்குகின்ற தாடவா ரீர்
தள்ளரியேன் என்னோடிங்கே ஆடவா ரீர்
தாழ்க்கில்இறை யும்தரியேன் ஆடவா ரீர்
எள்ளல்அறுத் தாண்டுகொண்டீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர்

உரை : கள்ளம் - வஞ்சம். தள்ளரியேன் - விலக்குதற்கில்லாத தூய்மையுடையவன். தாழ்த்தல் - தாமதித்தல். இறையும் - சிறிது போதும். எள்ளல் - இகழ்தற் கேதுவாகிய குற்றம். (9)

4468. நச்சுகின்றேன் நிச்சலிங்கே ஆடவா ரீர்
நாணமச்சம் விட்டேனென்னோ டாடவா ரீர்
விச்சையெலாம் தந்துகளித் தாடவா ரீர்
வியந்துரைத்த தருணமிதே ஆடவா ரீர்

எச்சுகமும் ஆகிநின்றீர் ஆடவா ரீர்
எல்லாம்செய் வல்லவரே ஆடவா ரீர்
இச்சைமய மாய்இருந்தேன் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர். ஆடவா ரீர்

உரை : நச்சுகின்றேன் - விரும்புகின்றேன். நிச்சல் - நாடோறும். விச்சை - ஞானம். எச்சுகமும் - எல்லா இன்பங்களும். இச்சை - காதல். (10)

4469. என்னுயிருக் குயிரானீர் ஆடவா ரீர்
என்அறிவுக் கறிவானீர் ஆடவா ரீர்
என்னுடைஎன் பிற்கலந்தீர் ஆடவா ரீர்
என்னுடைஉள் ளத்திருந்தீர் ஆடவா ரீர்
என்னுரிமைத் தாயனையீர் ஆடவா ரீர்
எனதுதனித் தந்தையரே ஆடவா ரீர்
என்னொருமைச் சற்குருவே ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர் என்னோ டாடவா ரீர்
அம்பலத்தில் ஆடுகின்றீர் ஆடவா ரீர்.

உரை : என்பு - ஈண்டுத் தேகத்தின் மேற்று. உரிமைத்தாய் - பெற்ற நற்றாய். ஒருமைச் சற்குரு - மனக் கோட்டமில்லாத உண்மை யுரைக்கும் ஆசிரியர். (11)

திருச்சிற்றம்பலம்

## 72. அம்பலவாணர் அணைய வருகை

### சிந்து

அஃதாவது, தில்லையம்பலவாணராகிய நடராசப் பெருமானைத் தன்பால் வந்தருளிக் கூடியின்பம் தருமாறு தலைவி வேண்டுதல். வேட்கை மிகுதியால் உடம்பும் உயிரும் வாடியபோதும் தலைவி தானே தலைவன்பாற் சென்று சேர்வது மரபன்மையால் இப்பாட்டின்கண் தலைவனைத் தன்பால் வந்து அணையுமாறு தலைவி வேண்டுகிறாள் என அறிக.

### பல்லவி

4470. அணையவா ரீர் என்னை அணையவா ரீர்
அணிவளர்-சிற் றம்பலத்தீர் அணையவா ரீர்.

உரை : அணைதல் - கூடுதல். அணிவளர் சிற்றம்பலத்தீர், அழகு மிகும் சிற்றம்பலத்தை யுடையவரே.

4471. இயற்கைஉண்மை வடிவினரே அணையவா ரீர்
எல்லாம்செய் வல்லவரே அணையவா ரீர்
இயற்கைவிளக் கத்தவரே அணையவா ரீர்
எல்லார்க்கும் நல்லவரே அணையவா ரீர்
இயற்கைஇன்ப மானவரே அணையவா ரீர்
இறைமையெலாம் உடையவரே அணையவா ரீர்
இயற்கைநிறை வானவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர்.

உரை : இயற்கை யுண்மை வடிவினர், செயற்கை வகையாற் சிறப்புறும் உண்மையினும் இயல்பாகவே அமையும் உண்மை மிக வுயர்ந்ததாதலால் இறைவனை இயற்கை யுண்மை வடிவினர் எனப் புகழ்கின்றார். உண்மை வடிவு - உண்மையின் சொரூபம். இயல்பாகவே தூய ஞானவொளி விளங்குபவராதலால், "இயற்கை விளக்கத் தவர்" என்று போற்றுகின்றார். செயற்கைக்கு நிலைபேறு கிடையாது என அறிக. இறைமை - பரமாந் தன்மை, நிறைவு - யாதாலும் குறைவின்மை. (1)

4472. உலகமெல்லாம் உடையவரே அணையவா ரீர்
உண்மையுரைக் கின்றவரே அணையவா ரீர்
கலகமறுத் தாண்டவரே அணையவா ரீர்
கண்ணனைய காதலரே அணையவா ரீர்
அலகறியாப் பெருமையரே அணையவா ரீர்
அற்புதப்பொற் சோதியரே அணையவா ரீர்
இலகுசபா பதியவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர்.

உரை : சொல் வேறு செயல் வேறுபாடுகளால் கலகம் பிறத்தலால், அக்கலகத்தும் இடமளிக்காதவர் என்றற்குக் "கலக மறுத்து ஆண்டவரே" என வுரைக்கின்றார். பிணங்கிக் கலகமிடும் சமய ஞானிகட்குத் தனது சமரசத் தன்மை காட்டி ஒருமை யுறுவித்தலால் இவ்வாறு பேசுகின்றார் எனினும் பொருந்தும். அலகு - அளவு. பொற்சோதி - பொன் வண்ணமாகிய தமது திருமேனியில் பொன்னிற வொளிதிகழ விளங்குபவர். இலகு சபாபதி - விளங்குகின்ற ஞான சபைக்குத் தலைவர். (2)

4473. பொதுவில்நடிக் கின்றவரே அணையவா ரீர்
பொற்புடைய புண்ணியரே அணையவா ரீர்
மதுவில்இனிக் கின்றவரே அணையவா ரீர்
மன்னியஎன் மன்னவரே அணையவா ரீர்
விதுவின்அமு தானவரே அணையவா ரீர்
மெய்யுரைத்த வித்தகரே அணையவா ரீர்
இதுதருணம் இறையவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர்

உரை : பொது - அம்பலம். பொற்பு - அழகு. மது - தேன். "தேனினும் இனியர்" என்பது பற்றி, "மதுவில் இனிக்கின்றவரே" என

மொழிகின்றாள். மன்னிய - நிலைபெற்ற. விது - சந்திரன். சந்திரனிடத்து அமுதுண் டென்பது பற்றி, "விதுவின் அமுதானவரே" என விளம்புகிறாள். மதுவுடைமை கொண்டே சந்திரனை மதி என வழங்குகின்றார். வித்தகர் - ஞான வுருவினர். (3)

4474. வினைமாலை நீத்தவரே அணையவா ரீர்
வேதமுடிப் பொருளவரே அணையவா ரீர்
அனைமாலைக் காத்தவரே அணையவா ரீர்
அருட்பெருஞ்சோ திப்பதியீர் அணையவா ரீர்
புனைமாலை வேய்ந்தவரே அணையவா ரீர்
பொதுவில்நிறை பூரணரே அணையவா ரீர்
எனைமாலை யிட்டவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர்

உரை : வினை மாலை - வினைகள் விளைவிக்கும் மயக்கம். "வினையால் அசத்து விளைதலால் ஞானம் வினை தீரினன்றி விளையா வாம்" (சிவ. போ.) என மெய்கண்டார் கூறுவதறிக. நீத்தவர் - நீக்கியவர். வேத முடிப் பொருள் - வைதிக ஞானத்தின் முடியாகிய பிரமப் பொருள். அனை மாலை - விலக்க முயலும் நற்றாயின் சூழ்ச்சி. அருள் ஞானப் பேரொளியையே தனக்குக் கோயிலாகக் கொண்டவன் என்பது பற்றி, "அருட்பெருஞ் சோதிப் பதியீர்" என வுரைக்கின்றாள். புனை மாலை - பூக்களாலும் பொன்னாலும் அமைக்கப்படும் மாலை. வேய்ந்தவர் - சூடுபவர். மாலையிட்டவர் - மணந்து கொண்டவர். (4)

4475. சிறுவயதில் எனைவிழைந்தீர் அணையவா ரீர்
சித்தசிகா மணியேநீர் அணையவா ரீர்
உறுவயதிங் கிதுதருணம் அணையவா ரீர்
உண்மைசொன்ன உத்தமரே அணையவா ரீர்
பொறுமைமிக வுடையவரே அணையவா ரீர்
பொய்யாத வாசகரே அணையவா ரீர்
இறுதிதவிர்த் தாண்டவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர்

உரை : விழைந்தீர் - விரும்பினீர். சிகாமணி - முடியில் அணியும் மணி. மணிபோன்றவரை மணி எனக் கூறுகின்றாள். உறு வயது, கூட்டத்துக்கேற்ற வயது. பொய்யாத வாசகர் - பொய் படாத சொற்களையுடையவர். இறுதி - ஈண்டுச் சாதல் குறித்து நின்றது. (5)

4476. சாதிமதந் தவிர்த்தவரே அணையவா ரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீர் அணையவா ரீர்
ஆதியந்தம் இல்லவரே அணையவா ரீர்
ஆரணங்கள் போற்றநின்றீர் அணையவா ரீர்
ஓதியுணர் வரியவரே அணையவா ரீர்
உள்ளபடி உரைத்தவரே அணையவா ரீர்
ஈதிசைந்த தருணமிங்கே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர்

உரை : சாதி வேறுபாடும் சமய வேறுபாடுமின்றி எல்லார்க்கும் அருள் செய்பவராதலின், இறைவனைச் "சாதி மதம் தவிர்த்தவரே" என்று தலைவி கூறுகின்றாள். ஆதி - தோற்றம். அந்தம் - கேடு. ஆரணங்கள் - வேதங்கள். நூலறிவு கொண்டு உணரும் உணர்வுக் கெட்டாதவர் என்பதனால், "ஓதி யுணர்வரியீர்" என்று உரைக்கின்றாள். இது - ஈது என வந்தது. (6)

4477. அன்பாட்டை விழைந்தவரே அணையவா ரீர்
அருட்சோதி வடிவினரே அணையவா ரீர்
துன்பாட்டை ஒழித்தவரே அணையவா ரீர்
துரியநிறை பெரியவரே அணையவா ரீர்
பின்பாட்டுக் காலையிதே அணையவா ரீர்
பிச்சேற்று கின்றவரே அணையவா ரீர்
என்பாட்டை ஏற்றவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர். அணையவா ரீர்

உரை : அன்பாட்டு - அன்பர் பொருட்டு அம்பலத்தில் ஆடுதல். துன்பாட்டு - துன்பம் தரும் செயல்கள். துரிய நிறை பெரியவர் - உந்தித்தானமாகிய துரிய நிலையில் ஆன்மாக்கட்குக் காட்சி தரும் பெருமையுடையவர். பின்பாட்டுக் காலை - பின்னின்று பாடிப் பரவும் காலம். பின்னிற்றல் வழிபாட்டு முறை. பிச்சு - பித்து; அஃதாவது பெருங்காதல். (7)

4478. அரைக்கணமும் தரியேன்நான் அணையவா ரீர்
ஆணைஉம்மேல் ஆணைஎன்னை அணைவா ரீர்
புரைக்கணங்கண் டறியேன்நான் அணையவா ரீர்
பொன்மேனிப் புண்ணியரே அணைவா ரீர்
வரைக்கணஞ்செய் வித்தவரே அணையவா ரீர்
மன்றில்நடிக் கின்றவரே அணையவா ரீர்
இரைக்கணவு தருணமிதே அணையவா ரீர்
என்னுடைய நாதரே அணையவா ரீர். அணையவா ரீர்

உரை : உம்மேல் ஆணையாக வேண்டுகின்றேன்; என்னை அணைதல் வேண்டும் என்பாளாய், "ஆணையும் மேல் ஆணை என்னை அணைய வாரீர்" என்று முறையிடுகின்றாள். புரைக்கணம் - குற்ற வகைகள். வரைக்கணம் - மலைகளின் கூட்டம். மன்று, சபை. இரைக்கணவு தருணம் - போக நுகர்ச்சிக்குத் தக்ககாலம். அணவுதல் - நெருங்குதல். (8)

4479. கருணைநடஞ் செய்பவரே அணையவா ரீர்
கண்மணியில் கலந்தவரே அணையவா ரீர்
அருள்நிறைசிற் சபையவரே அணையவா ரீர்
அன்பர்குறை தீர்த்தவரே அணையவா ரீர்

தருணமிது விரைந்தென்னை அணையவாரீர்
சத்தியரே நித்தியரே அணையவாரீர்
இருள்நிறைந்தார்க் கறிவரியீர் அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணையவாரீர்

உரை : கருணை நடம் - அருள் நடனம். அருள் நிறை சிற்பமை, திருவருள் ஞானிகள் நிறைந்த ஞான சபை. சத்தியர் - மெய்ம்மை வடிவினர். நித்தியர் - என்றும் இருப்பவர். இருள் நிறைந்தார் - அஞ்ஞான இருள் நிறைந்த கீழ்மக்கள். (9)

4430. சேரஉம்மேல் ஆசைகொண்டேன் அணையவாரீர்
திருவுளமே அறிந்ததெல்லாம் அணையவாரீர்
ஆரெனக்கிங் கும்மையல்லால் அணையவாரீர்
அயலறியேன் ஆணைஉம்மேல் அணையவாரீர்
ஈரகத்தேன் அல்லஇங்கே அணையவாரீர்
என்னாசை பொங்குகின்ற தணையவாரீர்
ஏரகத்தே அமர்ந்தருள்வீர் அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணையவாரீர்

உரை : உம்மைச் சேர்தற்கு ஆசை கொண்டேன் என்பாளாய். "சேர உம் மேல் ஆசை கொண்டேன்" எனத் தலைவி கூறுகின்றாள். எனது ஆசை மிகுதியை நீவிர் நன்கு அறிந்ததென வற்புறுத்தற்குத், "திருவுளமே யறிந்தது" என்று தெரிவிக்கின்றாள். இங்கு எனக்கு ஆர் - இவ்வுலகில் என் காதலன்புக்குரியவர் வேறு யாவர் உளர். அயலறியேன் - வேறு பிறரை நினைந்தறியேன். இரு மனம் உடைய பெண்ணல்ல என்பாள் - "ஈரகத்தேனல்லேன்" என இயம்புகிறாள். ஏர் அகத்தே அமர்ந்தருள்வீர் - ஞானத்தால் எழுச்சியுடைய தூயவர் உள்ளத்தில் எழுந்தருள்பவர். ஏரகம் என்னும் திருப்பதியில் உள்ளவர் முருகப் பெருமான். (10)

4431. கலந்துகொள வேண்டுகிறேன் அணையவாரீர்
காதல்பொங்கு கின்றதென்னை அணையவாரீர்
புலந்தறியேன் விரைகின்றேன் அணையவாரீர்
புணர்வதற்குத் தருணமிதே அணையவாரீர்
அலந்தவிடத் தருள்கின்றீர் அணையவாரீர்
அரைக்கணமும் இனித்தரியேன் அணையவாரீர்
இலந்தைநறுங் கனியனையீர் அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணையவாரீர்

அணையவாரீர்என்னை அணையவாரீர்
அணிவளர்சிற் றம்பலத்தீர் அணையவாரீர்.

உரை : புலத்தல் - பிணங்குதல். புணர்வது - கூடுதல். அலந்தவிடம் - துன்ப மிக்கு வருந்துமிடம். தரியேன் - உயிர் தாங்க மாட்டேன். இலந்தை நறுங் கனி - இலந்தையின் இனிய பழம். (11)

திருச்சிற்றம்பலம்

# 73. வருவார் அழைத்து வாடி

## சிந்து

அஃதாவது, சிவன்பால் தன் தோழியைத் தூய வேண்டிய தலைவிக்கு அவள், வருவாரோ என ஐயுற்ற, தோழியை நோக்கி, சென்றழைத்தால் வாராதொழியார் என வற்புறுத்துவதாம்.

## பல்லவி

4432. வருவார ழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே
வந்தாற் பெறலாம் நல்ல வரமே.

உரை : வா ஏடி என்பது வாடி யென மருவிற்று. வடலூர் வட திசை - வடலூரில் வடதிசையில் உள்ள ஞான சபை. அவரை அழைத்துவந்தால் பெறும் பயன் இது என்பாளாய், "வந்தால் பெறலாம் நல்ல வரமே" என மொழிகின்ருள். (1)

## பல்லவி எடுப்பு

4433. திருவார்பொன் னம்பலத்தே செழிக்குங்குஞ் சிதபாதர்
சிவசிதம் பரபோதர் தெய்வச் சபாநாதர். வருவார்

உரை : திரு - கண்டார் விரும்பும் அழகு. குஞ்சித பாதர் - வளைந்த திருவடியை யுடையவர். ஒரு பாதம் முயலகன் முதுகில் ஊன்றி விளங்க - ஒரு பாதம் ஆடற் பொருட்டு வளைந்து தோன்றுதலாற் "குஞ்சிதபாதர்" என்கிருள். போதர் - ஞான மூர்த்தி, சபாநாதர், சபைக்குத் தலைவர். (2)

## கண்ணிகள்

4434. சிந்தை களிக்கக்கண்டு சிவானந்த மதுவுண்டு
தெளிந்தோர்எல் லாரும்தொண்டு செய்யப் பவுரிகொண்டு
இந்த வெளியில்நட மிடத்துணிந் தீரேஅங்கே
இதைவிடப் பெருவெளி இருக்குதென் ருல்இங்கே
வருவார்

உரை : சிவானந்தமாகிய மதுவை யுண்பவர், அறிவு மயங்காமல் தெளிந்த சிவஞானம் பெறுவர் என்பாளாய், "சிவானந்த மது வுண்டு தெளிந்தோர்" என்றும், அத் தெளிவின் பயனுக அவர் அனைவரும் சிவஞானத் திருத்தொண்டு மேற்கொள்வர் என்பாளாய், "தெளிந்தோர் எல்லோரும் தொண்டு செய்ய" என்றும் இயம்புகின்ருள். பவுரி - கூத்து. இந்த வெளி - சிதம்பர சபை. அங்கே - வடலூரில். பெரு வெளி - பெரிய ஞான சபை. (3)

4485. இடுக்கி லாமல்இருக்க இடமுண்டு நடஞ்செய்ய
இங்கம் பலம்ஒன் றங்கே எட்டம் பலம்உண்டைய
ஒடுக்கில் இருப்பதென்ன உளவுகண்டு கொள்வீர்என்னுல்
உண்மைஇது வஞ்சமல்ல உம்மேல்ஆணை
என்றுசொன்னுல் வருவார்

உரை : இடுக்கு - குறுகிய இடம். இருத்தற் கமைந்த மூலட்டானம் நாற்புறமும் சுவர் நின்று இடுக்கண் செய்கிறது; இங்கே பரந்த இடம் உளது என்பாளாய், "இடுக்கில்லாமல் இருக்க இடமுண்டு" எனவும், நடம் புரிதற்குத் தில்லையாகிய இங்கே ஒரு அம்பலமேயுண்டு; வடலூரில் எண்கோண வடிவில் அமைந்த பேரம்பலம் உளது என்பாளாய், "நடம் செய்ய இங்கே அம்பலம் அங்கே எட்டு அம்பலம் உண்டு" எனவும் தலைவி இசைக்கின்ருள். ஒடுக்கு - ஒடுங்கிய இடம். என்னுல் ஆன்ம சிற்சத்தியின் எல்லையை இனிதறிந்து கொள்ளலாம் என்றற்கு, "உளவு கண்டு கொள்வீர் என்னுல்" என இயம்புகின்ருள். (4)

4486. மெல்லியல் சிவகாம வல்லி யுடன்களித்து
விளையா டவும்எங்கள் வினைஓ டவும்ஒளித்து
எல்லையில் இன்பந்தரவும் நல்லசம யந்தானிது
இங்குமங்கும் நடமாடி இருக்கலாம் என்றபோது

வருவாரழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே
வந்தாற் பெறலாம்நல்ல வரமே.

உரை : மெல்லியல் சிவகாம வல்லி - மென்மை இயல்பினளாகிய சிவகாமி யம்மை. சிவகாமியுடன் எழுந்தருளினுல் எங்களுடைய வினை மறைந்து ஓடிவிடும்; எங்கட்கு நினது வரம்பில் இன்பத்தை வழங்கலாம் என்பது கருத்து. இங்கேயே இருக்கவேண்டுமென்பதில்லை; இந்த வடலூர்ச் சபையிலும் அங்குத் தில்லைச் சபையிலும் திருநடம் புரிந்தருளலாம் என்பதாம். (5)

திருச்சிற்றம்பலம்

# 74. என்ன புண்ணியம் செய்தேனோ

## சிந்து

அஃதாவது, காதலராகிய அம்பலவாணரது வருகை யறிந்து தலைவி உவகை மேலிட்டு நற்றாய்க்கு உரைப்பதாம்.

### பல்லவி

4487. என்ன புண்ணியம் செய்தே னோ—அம் மாநான்
என்ன புண்ணியம் செய்தே னோ.

உரை : புண்ணியம் - சிவ புண்ணியம்; பதி புண்ணியம் எனவும் வழங்கும். (1)

### பல்லவி எடுப்பு

4488. மன்னர்நாதர் அம்பலவர் வந்தார்வந்தார் என்றுதிருச்
சின்னநாதம் என்னிரண்டு செவிகளினுள் சொல்கின்றதே. என்ன

உரை : மன்னர் - முறை புரியும் வேந்தர். உயிர்கள் செய்யும் வினை வகைகட்குரிய பயன்களை அவற்றைச் செய்த உயிரே நுகருமாறு முறை செய்தலின் சிவனை, "மன்னர்" எனவும், தனக்குக் கணவர் என்ற கருத்தால் "நாதர்" எனவும் இயம்புகின்றாள். திருச் சின்னம் - தலைவர்களின் வருகை தெரிவிக்கும் இசைக் கருவி. நாதம் - சின்னத்தின் ஒலி. (2)

### கண்ணிகள்

4489. பொருள்நான் முகனுமாலும் தெருள்நான்ம றையுநாளும்
போற்றும்சிற் றம்பலத்தே ஏற்றும ணிவிளக்காய்
அருள்நாட கம்புரியும் கருணை நிதியர்உன்னை
ஆளவந்தார் வந்தார்என்றெக் காளநாதம்
சொல்கின்றதே. என்ன

உரை : பொருள் - பிரமப் பொருளைத் தன்னகத்தே கொண்ட வேதம். தெருள் நான்மறை - ஓதுபவர்க்கு ஞானத் தெளிவு நல்கும் இருக்கு முதலாய நான்கு வேதங்கள். நாடகம் - நடனம். கருணை நிதி - அருட் செல்வர். எக்காளம் - இது தலைவர் வருகை தெரிவிக்கும் மங்கள இசைக் கருவி. (3)

4490. பாடியநல் லோர்தமக்கே நாடியதெல் லாம்அளிப்பார்
பத்திவலை யுட்படுவார் சத்தியர்நித் தியர்மன்றில்
ஆடியபொற் பாதர்வேதம் தேடியசிற் போதர்உன்னை
அணையவந்தார் வந்தார்என்றே இணையில்நாதம்
சொல்கின்றதே. என்ன

உரை : பாடிய நல்லோர் - பண் சுமந்த பாடல்களைப் பாடிய திருஞானசம்பந்தர் முதலிய நன்மக்கள். நாடியது - வேண்டியது. பத்தர்களின் பத்தி, வலை போல் இறைவன் திருவடியை அகப்படுத்திக் கொள்வதால், "பத்தி வலையுட் பாடுவார்" எனப் பகர்கின்றாள். "பத்தி வலையுட் படுவோன் காண்க" என்பது திருவாசகம். சிற்போதர் - ஞானாசிரியர். இணையில் நாதம் - ஒப்பில்லாத மங்கள இசைக் கருவிகள் ஓசை. (4)

4491. எந்தரமுட் கொண்டஞான சுந்தரர்என் மணவாளர்
எல்லாம்செய் வல்லசித்தர் நல்லோர் உளத்தமர்ந்தார்
மந்திரமா மன்றில்இன்பம் தந்தநட ராஜர்உன்னை
மருவவந்தார் வந்தார்என்று தெருவில்நாதம்
சொல்கின்றதே. என்ன

உரை : எம் தரம் - எம்முடைய தகுதி. ஞான சுந்தரர் - ஞானமே திருவுருவாகக் கொண்ட அழகர். மந்திர மாமன்று - சிவ ஞான முணர்த்தும் பெரிய அம்பலம். மருவுதல் - கூடுதல். (5)

4492. ஓதிஎந்த விதத்தாலும் வேதியனும் தேர்வரியார்
ஓங்கார பஞ்சகத்தே பாங்காக நடிக்கின்றார்
ஆதியந்தம் காண்பரிய ஜோதிசுயஞ் ஜோதிஉன்னோ
டாடவந்தார் வந்தார்என்றே நாடிநாதம்
சொல்கின்றதே என்ன

உரை : ஓதுதல் - வேதங்களைக் கற்று ஓதுதல். வேதியன் - பிரமன். ஓங்கார பஞ்சலகம் - ஓங்காரப் பொருளாகும் திருவைந் தெழுத்து. சுயஞ்சோதி - தானே தனக்கு முதலாக வுள்ள அருளொளி. (6)

4493. அற்புதப்பே ரழகாளர் சொற்பாதம் கடந்துநின்றார்
அன்பரெலாம் தொழமன்றில் இன்பநடம் புரிகின்றார்
சிற்பரர்எல் லாமும்வல்ல தற்பரர் விரைந்திங்குன்னைச்
சேரவந்தார் வந்தார்என்றோங் காரநாதம்
சொல்கின்றதே. என்ன

உரை : அற்புதப் பேரழகி - வேறு எப்பொருட்கும் இல்லாத தனி யழகு. சொற்பதம் - சொற்பொருளின் எல்லை. சிற்பரர் - ஞானத்தால் மேலாயவர். ஓங்கார நாதம் - ஓம் என முடியும் இசை யோசை. (7)

4494. ஆரணர்நா ரணர்எல்லாம் பூரணர்என் றேத்துகின்ற
ஐயர்திரு வம்பலவர் மெய்யர்எல்லாம் வல்லசித்தர்
காரணமும் காரியமும் தாரணிநீ யாகஉன்னைக்
காணவந்தார் வந்தார்என்றே வேணுநாதம்
சொல்கின்றதே. என்ன

உரை : ஆரணர் - வேதம் ஓதும் பிரமன். பூரணர் - எல்லாம் குறைவற நிறைந்தவர். எல்லாப் பொருள்கட்கும் உயிர்களின் நினைவு செயல்கட்கும் காரணமும் காரியமுமாகிய சிவமே நீயாதல் வேண்டி நிலவுலகில் உன்னைக் காண்டற் பொருட்டு வருகின்றார் என்று வேய்ங் குழலின் இன்னிசை ஒலிக்கின்றது என்பாளாய், "காரணமும் காரியமும் நீயாகத் தாரணியில் உன்னைக் காண வந்தார் என்றே வேணுநாதம் சொல்கின்றது" எனத் தலைவி கூறுகின்றாள். தாரணி - நிலவுலகம். வேணு - மூங்கில். மூங்கிலாலாவதால் வேணு எனவும், வேய்ங்குழல் எனவும் வழங்குகின்றது. (8)

4495. பாகார்மொழி யாள்சிவ மாகாம வல்லிநாளும்
பார்த்தாட மணிமன்றில் கூத்தாடு கின்றசித்தர்
வாகாஉனக்கே என்றும் சாகா வரங்கொடுக்க
வலியவந்தார் வந்தார்என்றே வலியநாதம் சொல்கின்றதே.

என்ன புண்ணியம் செய்தே னோ—அம் மாநான்
என்ன புண்ணியம் செய்தே னோ.

உரை : பாகார் மொழி - வெல்லப் பாகு போல் இனிக்கும் சொற்களைப் பேசுபவள். பார்த்து ஆடல் - காணும் மகிழ்ச்சியால் ஆடுதல். வாகு - அழகு. வலிய நாதம் - குறையாத மங்கல இசை. (9)

திருச்சிற்றம்பலம்

## 75. இவர்க்கும் எனக்கும்

### சிந்து

அஃதாவது, வந்த தலைவனை வரவேற்ற தலைவி, தன் தோழிக்கு இவர் மீண்டும் பிரிந்து செல்லாதவாறு இரட்டைத் தாழிட்டு மனையிற் காவல் செய்க என்று பணித்தலாம்.

### பல்லவி

4496. இவர்க்கும் எனக்கும்பெரு வழக்கிருக் கின்றதது
என்றும் தீரா வழக்குக் காண டி.

உரை : பெருவழக்கு - எளிதில் முடிபு காண முடியாத பெரிய வழக்கு. என்றும் - எந்நாளும். (1)

### பல்லவி எடுப்பு

4497. எவர்க்கும் பெரியவர்பொன் னம்பலத் தேநடம்
இட்டார் எனக்குமாலை இட்டார் இதோவந்தார். இவர்க்கும்

உரை : நடம் இட்டார் - திருநடம் செய்பவர். நடம் - கூத்து. மாலை யிட்டார் - சிவஞானமாகிய மாலையை அணிந்தார். (2)

4498. அன்றிதோ வருகின்றேன் என்று போனவர் அங்கே
யார்செய்த தடையாலோ இருந்தாரென் கையிற்சங்கை
இன்றுதம் கையிற்கொண்டே வந்துநிற் கின்றார்இங்கே
இந்தக் கதவைமுடு இவர்போவ தினிஎங்கே.
இவர்க்கும்

உரை : இதோ வருகின்றேன் - இப்பொழுதே வருவேன். இருந்தார் - வாராதிருக்கின்றார். சங்கு - சங்கினாலாகிய கைவளை. (3)

4499. அவரவர் உலகத்தே அறிந்தலர் தூற்றப்பட்டேன்
அன்றுபோ னவர்இன்று வந்துநிற் கின்றார்கெட்டேன்
இவர்சூதை அறியாதே முன்னம் ஏமாந்துவிட்டேன்
இந்தக் கதவைமுடு இ னிஎங்கும் போகவொட்டேன்.
இவர்க்கும்

உரை : அலர் தூற்றப்பட்டேன் - பழிப்புரை சொல்லப்பட்டேன். சூது - வஞ்சனை. முன்னம் ஏமாந்து விட்டேன் - முன்பு இவர் போகார் என்று கருதி ஏமாந்து செல்லுதற்கிசைந்தேன். போக வொட்டேன் - என்னிற் பிரிந்து போக விடேன். (4)

4500. சின்ன வயதில்என்னைச் சேர்ந்தார்புன் னகையோடு
சென்றார் தயவால்இன்று வந்தார் இவர்க்கார்ஈடு
என்னைவிட் டினிஇவர் எப்படிப் போவார்ஓடு
இந்தக் கதவைமுடு இரட்டைத்தாட் கோலைப்போடு.

இவர்க்கும் எனக்கும்பெரு வழக்கிருக் கின்றதது
என்றும் தீரா வழக்குக் காண டி.

உரை : சின்ன வயது - இளமைப் பருவம். ஈடு - ஒப்பு. இரட்டைத் தாட்கோல் - இரட்டைப் பூட்டு. (5)

திருச்சிற்றம்பலம்

# 76. இது நல்ல தருணம்

## சிந்து

அஃதாவது, திருவருள் ஞானத்தைப் பெறுதற்கு வாய்ந்த காலத்தின் இயல் நலம் கூறுவதாம்.

### பல்லவி

4501. இதுநல்ல தருணம்—அருள்செய்ய
இதுநல்ல தருணம்.

உரை : நல்ல தருணம் - தக்க காலம். ஞான வின்ப வேட்கை கனிந்திருப்பது விளங்கத் தலைவி இது நல்ல தருணம் எனவுரைக்கின்றாள். (1)

### பல்லவி எடுப்பு

4502. பொதுநல்ல நடம்வல்ல புண்ணிய ரேகேளும்
பொய்யேதும் சொல்கிலேன் மெய்யே புகல்கின்றேன். இதுநல்ல

உரை : பொது நல்ல நடம் வல்ல புண்ணியரே - அம்பலத்தில் உயிர்கட்கு நலம் விளைவிக்கும் திருக்கூத்து ஆட வல்லவராகிய புண்ணிய மூர்த்தியே. தக்க தருணம் எனத் தான் உரைப்பதை வற்புறுத்தற்குப் "பொய் யேதும் சொல்கிலேன் மெய்யே புகல்கின்றேன்" என்று தலைவி யுரைக்கின்றாள். (2)

4503. மதித்த சமயமத வழக்கெல்லாம் மாய்ந்தது
வருணாச் சிரமம்எனு மயக்கமும் சாய்ந்தது
கொதித்த லோகாசாரக் கொதிப்பெல்லாம் ஒழிந்தது
கொலையும் களவுமற்றைப் புலையும் அழிந்தது. இது நல்ல

உரை : மதவழக்கு - சமயங்களின் பேரால் கொண்டொழுகப் படும் வழக்கங்கள். இவை உய்தி நல்குவன எனப் பலராலும் கருதப் படுதலின், "மதித்த சமய மத வழக்கு" எனக் கூறுகிறாள். வருணம் - சாதி; ஆசிரமம் - சாதிதோறும் அவ்வவ் பருவத்துக்குரிய ஒழுக்க நிலைகள். பிரமசரியம், இல்வாழ்க்கை, வனவாசம், துறவு என இவை நூல்களில் ஆசிரம வகைகளாகக் குறிக்கப்படுகின்றன. வள்ளற் பெருமான் காலத்தே வானப்பிரஸ்தம் என்னும் வனவாழ்க்கையும் துறவும் வழக்கு வீழ்ந்தமையின், "ஆசிரமம் எனும் மயக்கமும் சாய்ந்தது" என்கின்றாள். வருண வேறுபாடுகள் மக்களினத்தின் ஒருமைப் பண்பைச் சீர்குலைத்து இனநலத்தைச் சிதறச் செய்தமையின், வருண ஆசிரமங்களைத் தலைவி வெறுத்துரைக்கின்றாள். லோகாசாரம் - உலகியற் பழக்க வழக்கங்கள். கொதிப்பு - ஆர்வ மிகுதி. புலை - புலாலுண்டல். (3)

4504. குறித்த வேதாகமக் கூச்சலும் அடங்கிற்று
குதித்த மனமுருட்டுக் குரங்கு முடங்கிற்று
வெறித்தவெவ் வினைகளும் வெந்து குலைந்தது
விந்தைசெய் கொடுமாயைச் சந்தையும் கலைந்தது.
இது நல்ல

உரை : வேதாகமக்கூச்சல், வேதமே பிரமாணமாம் என வேதாந்திகளும் ஆகமமே பிரமாணமாம் எனச் சித்தாந்திகளும் தம்மிற் கலாய்த்துக் கொண்ட காலமும் உண்டாகலின், "வேதாகமக் கூச்சலும் அடங்கிற்று" எனவுரைக்கின்றாள். குதித்த மனம் - துள்ளித்திரிந்த மனம். மனமுருட்டுக் குரங்கு - மனமாகிய முரணியொழுகிய குரங்கு; முருட்டுக் குரங்கு முரட்டுக் குரங்கு என வழங்குவதுண்டு. அடக்க அடங்காமை புலப்பட, "முருட்டுக் குரங்கு" என மொழிகின்றாள். வெறித்த வினை - பயனில்லாத செயல்கள். வெவ்வினை - தீது பயக்கும் தீவினைகள். குலைந்தது - பன்மை யொருமை மயக்கம். இனிவருமிடங்களிலும் இதுவே கூறிக்கொள்க. விந்தை - விபரீதம். கொடுமாயைச் சந்தை - உலகியல் மயக்கமாகிய பேரிரைச்சல். நன்னெறிக்கண் செல்லாமையின், "கொடுமாயை" எனக் குறிக்கின்றாள். நண்பரைப் பகைவராக்கலும், அன்பர்களைத் துரோகிகளாக்குதலும், நற்பண்பாளரைத் தீயவராக்குதலும் உலகியல் மாயையின் விளைவுகளாம். (4)

4505. கோபமும் காமமும் குடிகெட்டுப் போயிற்று
கொடியஓர் ஆங்காரம் பொடிப்பொடி ஆயிற்று
தாபமும் சோபமும் தான்தானே சென்றது
தத்துவம் எல்லாம்என் றன்வசம் நின்றது. இது நல்ல

உரை : கோபம் - சினம். காமம் - பெண்ணாசை. குடிகெடுதல் - நிலையிழந்தழிதல். ஆங்காரம் - ஆணவமாகிய குற்றம். தாபம் - சுருங்குதல். சோபம் - விளக்கம். தத்துவம் - நிலம் முதல் நாதம் ஈறுகவுள்ள தத்துவக் கூறுகள். (5)

4506. கரையா எனதுமனக் கல்லும் கரைந்தது
கலந்து கொளற்கென் கருத்தும் விரைந்தது
புரையா நிலையில்என் புந்தியும் தங்கிற்று
பொய்படாக் காதல் ததும்பிமேல் பொங்கிற்று.

இதுநல்ல தருணம்—அருள்செய்ய
இதுநல்ல தருணம்.

உரை : இரக்கப் பண்பில்லாத என் மனமும் இளகியுருகும் இனிய பண்பைப் பெற்றுள்ளது என்பாள், "கரையா எனது மனக் கல்லும் கரைந்தது" என்று கூறுகின்றாள். புரையா நிலை - குற்றமுறாத நன்னிலை. (6)

திருச்சிற்றம்பலம்

# 77. ஆனந்தப் பரிவு

## தாழிசை

அஃதாவது, ஞானத்தால் விளைந்த இன்ப மிகுதியால், உள்ளம் குழைந்து உரையாடுதல்.

**4507.** நானந்த மடையாதெந் நாளினும்உள்
ளவனுகி நடிக்கும் வண்ணம்
ஆனந்த நடம்புரிவான் ஆனந்த
அமுதளித்தான் அந்தோ அந்தோ.

**உரை :** *அந்தம் - அழிந்தொழிதல்; சாகா நிலை. எந்நாளினும் உள்ளவன் - எக்காலத்தும் சாவாதிருக்கும் உள்பொருளாதல். ஆனந்த அமுது - சிவஞானமாகிய நல்லமிர்தம். உயிர்கள் சாவா மூவாப் பெருநிலையெய்தும் குறிப்பொடு சிவனது திருநடம் நிகழ்வதெனச் சான்றோர் கூறுதலால், "எந்நாளினும் உள்ளவனுகி நடிக்கும்வண்ணம் ஆனந்த நடம் புரிவான்" என அறிவிக்கின்றார். அந்தோ - குறிப்பு மொழி.* (1)

**4508.** சாதிமதம் சமயமுதற் சங்கற்ப
விகற்பம்எலாம் தவிர்ந்து போக
ஆதிநடம் புரிகின்றான் அருட்சோதி
எனக்களித்தான் அந்தோ அந்தோ.

**உரை :** சாதி சமய மதங்களின் பேரால் நமது பாரத நாட்டு மக்கள் விருப்பு வெறுப்புற்று வீற்று வீற்றாகிக் கெடாமை குறித்தே இறைவன் அம்பலத்தில் ஆடுகின்றான் என்பது கருத்து. மதம் - கொள்கை. சமயங்களின் உட்கூற்றுக் கொள்கைகள் மதம் என அறிக. சங்கற்பம் - விழைவு. விகற்பம் - வேறுபாடு. (2)

**4509.** துரியபதம் அடைந்தபெருஞ் சுத்தர்களும்
முத்தர்களும் துணிந்து சொலற்
கரியபதம் எனக்களித்தான் அம்பலத்தில்
ஆடுகின்றான் அந்தோ அந்தோ.

**உரை :** அகக்காட்சி நெறியில் வேதாந்திகள் துரிய நிலையையும் சித்தாந்திகள் துரியாதீத நிலையையும் மேனிலையாகக் கூறுவராதலின், வடலூர் வள்ளல் வைதிகத்தைத் தழுவி ஞானவான்களை, "துரிய பதம் அடைந்த பெருஞ் சுத்தர்" என்று சொல்லுகின்றார். சிவபதம் கண்ட முத்தர்கள், அதனின் நீங்கி உலகியலை நினையாராதலின், அவரால் இத் தன்மைத்தென ஓதப்படாமை பற்றி, "முத்தர்களும் துணிந்து

சொல்லற்கரிய பதம்" எனச் சிவபதத்தைச் சிறப்பிக்கின்றார். சிவபதம் மனம் வாக்குகளின் எல்லையைக் கடந்ததாதலால், "துணிந்து சொல்லற் கரிய பதம்" என்கின்றார் எனினும் பொருந்தும். (3)

4510. மருட்பெருஞ்சோ தனைஎனது மட்டுமிலா
வணங்கருணை வைத்தே மன்றில்
அருட்பெருஞ்சோ திப்பெருமான் அருளமுதம்
எனக்களித்தான் அந்தோ அந்தோ.

உரை : மருட்சோதனை - மனத்தைக் கலக்கி வருத்தும் சோதனை; சிறுத்தொண்டர், திருநீலகண்டர், கண்ணப்பர் முதலிய தொண்டர் களைக் கடுஞ் சோதனை செய்த சிவனுடைய மறக் கருணைச் செயல்கள் இங்கே "மருட் சோதனை" எனக் குறிக்கப்படுகின்றன. கருணை - திருவருள். அருட்பெருஞ்சோதிப் பெருமான் - பேரருட் சோதியை யுடைய சிவபெருமான். அருளமுதம் - அருளாகிய ஞானத் திருவமுதம். (4)

4511. துன்பமெலாம் ஒருகணத்தில் தொலைத்தருளி
எந்நாளும் சுகத்தில் ஓங்க
அன்புடையான் அம்பலத்தான் அருட்சோதி
எனக்களித்தான் அந்தோ அந்தோ.

உரை : துன்பம் - பிறவித் துன்பம். அருட்சோதி - திருவருள் ஞான விளக்கம். அம்பலத்தான் - அம்பலத்தில் ஆடும் சிவபெருமான். (5)

4512. பந்தமெலாம் தவிர்த்தருளிப் பதந்தருயோ
காந்தமுதல் பகரா நின்ற
அந்தமெலாம் கடந்திடச்செய் தருளமுதம்
எனக்களித்தான் அந்தோ அந்தோ.

உரை : பந்தம் - உலகியற் பற்று. பதம் - சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்ற நால்வகைப் பதங்கள். யோகாந்த முதல் பகரா நின்ற அந்தம், கலாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என்பன. (6)

4513. பேராலும் அறிவாலும் பெரியரெனச்
சிறப்பாகப் பேச நின்றோர்
ஆராலும் பெறலரிய தியாததனைப்
பெறுவித்தான் அந்தோ அந்தோ.

உரை : பேர் - புகழ். பெரியர் - பெருமையுடையவர். பெறலரியது யாது அதனை - பெறுதற் கரியதாகிய திருவருள் என்ற அந்த ஞானப் பேற்றை. (7)

4514. தினைத்தனையும் அறிவறியாச் சிறியனென
நினையாமல் சித்தி யான
அனைத்துமென்றன் வசமாக்கி அருளமுதம்
எனக்களித்தான் அந்தோ அந்தோ.

உரை : *தினைத்தனையும் - சிறிதளவும். அறிவறியாச் சிறியவன் - பேரறிவாகிய திருவருள் ஞான நலத்தை அறியாத சிறுமையுடையவன். சித்தி - யோக சித்தி, ஞான சித்தி, காரிய சித்தி.* (8)

4515. பொதுவாகிப் பொதுவில்நடம் புரிகின்ற
பேரின்பப் பொருள்தான் யாதோ
அதுநானும் நான்அதுவாய் அத்துவிதம்
ஆகின்றேன் அந்தோ அந்தோ.

உரை : பொதுவில் - ஞானசபையில். பேரின்பப் பொருள் சிவ பரம்பொருள். *அத்துவிதமாதல் - இரண்டற ஒன்றுதல்.* (9)

4516. மருள்வடிவே எஞ்ஞான்றும் எவ்விடத்தும்
எதனாலு மாய்வி லாத
அருள்வடிவாய் இம்மையிலே அடைந்திடப் பெற்
றுடுகின்றேன் அந்தோ அந்தோ.

உரை : மருள் வடிவு - *தோன்றி நின்று மறைந்து மாயும் பொருளும் அவற்றின் தோற்றங்களும்.* ஆய்வில்லாத அருள் வடிவு - ஆராய்தற் கிடந்தராத மெய்யருளுணர்வு. இம்மை - இப்பிறவி. (10)

4517. எக்கரையும் காணாதே இருட்கடலில்
கிடந்தேனை எடுத்தாட் கொண்டு
அக்கரைசேர்த் தருளெனுமோர் சர்க்கரையும்
எனக்களித்தான் அந்தோ அந்தோ.

உரை : எக்கரை - எத்தகைய எல்லையும். இருட் கடல் - மலத் திருள்களால் உண்டாகும் அஞ்ஞானமாகிய கடல். அக்கரை - அருள் ஞான நிலை. சர்க்கரை - இன்ப நிலை. (11)

திருச்சிற்றம்பலம்

# 78. ஞான மருந்து

## சிந்து

### பல்லவி

4518. ஞான மருந்திம் மருந்து—சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து.

உரை : ஞான மருந்து - சிவஞானமாகிய மருந்து. சிற்சபா நாத மருந்து - ஞான சபைக்குத் தலைவனாகிய மருந்து. (1)

### கண்ணிகள்

4519. அருட்பெருஞ் ஜோதி மருந்து—என்னை
ஐந்தொழில் செய்தற் களித்த மருந்து
பொருட்பெரும் போக மருந்து—என்னைப்
புறத்தும் அகத்தும் புணர்ந்த மருந்து. ஞான

உரை : அருட்பெருஞ்சோதி மருந்து - திருவருட் பேரொளியாகிய மருந்து. ஐந்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல். அளித்த மருந்து - அருள் புரிந்த மருந்து. என்றாலும் ஐந்தொழில் புரிவது சிவம் என்னும், சிவானுபவம் ஒன்றிற்கே உரியது சீவன் என்றும் சித்தாந்திகள் கூறுவர். பொருட் பெரும் போகம் - பொருளாகக் கலந்து நுகர்தற்குரிய சிவபோகம். புணர்தல் - கலத்தல். (2)

4520. எல்லாம்செய் வல்ல மருந்து—என்னுள்
ன்றும் விடாமல் இனிக்கு மருந்து
சொல்லால் அளவா மருந்து—சுயஞ்
ஜோதி அருட்பெருஞ் ஜோதி மருந்து. ஞான

உரை : விடாமல் - நீங்காமல். சொல்லால் அளவா மருந்து சொல்லின் எல்லைக்குள் அடங்காத மருந்து. சுயஞ் சோதி - இயற்கை யொளி. (3)

4521. காணாது காட்டு மருந்து—என்றன்
கையிற்பொற் கங்கணம் கட்டு மருந்து
ஆணாகிப் பெண்ணாம் மருந்து—அது
வாகி மணிமன்றில் ஆடு மருந்து. ஞான

உரை : காணாது காட்டும் மருந்து - காண்பவனும் காணாவகை யுண்ணின்று காணச் செய்யும் மருந்து. பொற் கங்கணம் - பொன்னா

லாகிய வளை. உயர்திணை ஆணாகவும் பெண்ணாகவும், அஃறிணை யதுவாகவும் இயைந்து ஞான சபையில் நின்று நடம் புரிதலால் சிவனை, "மணி மன்றில் ஆடும் மருந்து" எனக் கூறுகின்றார். (4)

4522. சுத்தசன் மார்க்க மருந்து—அருட்
சோதி மலையில் துலங்கு மருந்து
சித்துரு வான மருந்து—என்னைச்
சித்தெலாம் செய்யச்செய் வித்த மருந்து. ஞான

உரை : மருந்துகளை மலைக் காடுகளில் பெறும் மரபுபற்றி அருட் சோதியை மலையாக உருவகம் செய்து, "அருட்சோதி மலையில் துலங்கும் மருந்து" என்று சொல்லுகிறார். துலங்குதல் - விளங்குதல். சித்துரு - ஞான வடிவம். சித்தெல்லாம் - அணிமா மகிமா முதலிய சித்துக்கள். (5)

4523. அன்பர்க் கெளிய மருந்து—மற்றை
ஐவர்க்கும் காண்டற் கரிய மருந்து
என்பற்றில் ஓங்கு மருந்து—என்னை
இன்ப நிலையில் இருத்து மருந்து. ஞான

உரை : ஐவர் - பிரமன், திருமால், உருத்திரன், சதாசிவன், மகேசன் என்ற ஐவர். என் பற்று - என்னுடைய அன்பு. (6)

4524. நாதாந்த நாட்டு மருந்து—பர
ஞான வெளியில் நடிக்கு மருந்து
போதாந்தர்க் கெய்து மருந்து—என்னுள்
பொன்னடி காட்டிப் புணர்ந்த மருந்து. ஞான

உரை : நாதாந்த நாடு - நாத தத்துவத்துக்கு மேலுள்ள வெளி. பரஞான வெளி - பாசபசு ஞானங்கட்கு மேலதாகிய பதிஞான வெளி. போதாந்தர் - சுத்த சிவஞானிகள். (7)

4525. ஆதி அனாதி மருந்து—திரு
அம்பலத் தேநட மாடு மருந்து
ஜோதி மயமா மருந்து—என்னைச்
சோதியா தாண்டா துரிய மருந்து. ஞான

உரை : ஆதி அனாதி மருந்து - ஆதியும் அனாதியுமாகிய மருந்து. சோதி மயம் - ஒளிமயம். சோதியாது - சோதனைக்குள்ளாக்காமல். துரிய மருந்து - துரிய நிலையிற் காணப்படும் மருந்து. (8)

4526. ஆறந்தத் தோங்கு மருந்து—அதற்
கப்பாலுக் கப்பாலும் ஆன மருந்து
ஊறந்த மில்லா மருந்து—எனக்
குள்ளே கலந்த உறவா மருந்து. ஞான

உரை : ஆறந்தம் - நாதாந்தம், போதாந்தம், முதலாகவுள்ள அந்தங்கள் ஆறு. ஊறந்தம் - நோய் செய்வதும் கெடுவதும். இல்லா மருந்து - இல்லாததாகிய சிவஞான மருந்து. (9)

4527. என்னுயிர்க் கன்பா மருந்து—கலந்
தென்னுயிர்க் குள்ளே இருந்த மருந்து
என்னுயிர் காக்கு மருந்து—என்றும்
என்னுயி ராகிய இன்ப மருந்து. ஞான

உரை : உயிர் காக்கும் மருந்து - உயிரறிவை நன்னெறிக்கட் செலுத்தும் மருந்து. என்றும் - எக்காலத்தும். உயிராம் மருந்து - உயிர்க்குயிராய் அருளும் மருந்து. (10)

4528. என்னறி வுட்கொள் மருந்து—என்றும்
என்னறி வாகி இலங்கு மருந்து
என்னறி வின்ப மருந்து—என்னுள்
என்னறி வுக்கறி வென்னு மருந்து. ஞான

உரை : என்னுடைய அறிவைத் தன்னுட் கொண்டு, தானே எனது அறிவாயும் அறிவுக்கறிவாயும் இன்பமாயும் இருப்பது என்பது கருத்து. (11)

4529. என்குரு வான மருந்து—என்றும்
என்தெய்வ மாகி இருக்கு மருந்து
என்அன்னை யென்னு மருந்து—என்றும்
என்தந்தையாகிய இன்ப மருந்து ஞான

உரை : எனக்குத் தாயும் தந்தையும் குருவும் தெய்வமுமாகிய மருந்து என்பதாம். (12)

4530. என்பெரு வாழ்வா மருந்து—என்றும்
என்செல்வ மாகி இருக்கு மருந்து
என்னுயிர் நட்பா மருந்து—எனக்
கெட்டெட்டுச் சித்தியும் ஈந்த மருந்து. ஞான

உரை : எட்டெட்டுச் சித்தி - எண் வகையெனப் பலகாலும் ஓதப் படும் சித்தி வகை. (13)

4531. என்னிறை யான மருந்து—மகிழ்ந்
தெனக்குத்தன் பொன்மேனி ஈந்த மருந்து
தன்னறி வாகு மருந்து—என்னைத்
தந்த மருந்தென்றன் சொந்த மருந்து. ஞான

உரை : என் இறையான மருந்து - எனக்கு இறைவனாகிய மருந்து. என் மேனியையும் தனது பொன்னிறம் பெறுவிக்கும் சிவமெனப்படும் மருந்து. (14)

4532. உள்ளத்தி னுள்ளா மருந்து—என்றன்
உயிருக் கனாதி உறவா மருந்து
தெள்ளத் தெளிக்கு மருந்து—என்னைச்
சிவமாக்கிக் கொண்ட சிவாய மருந்து. ஞான

உரை : உள்ளத்தின் உள்ள மருந்து - உள்ளத்தை இடமாகக் கொண்ட மருந்து. உயிர்க்கும் சிவனுக்குமுள்ள தொடர்பு - அனாதி

சம்பந்தம் என்பது கருத்து. தெள்ளத் தெளிக்கும் மருந்து - மிக்க தெளிவான மருந்து. சிவாய மருந்து - சிவமும் திருவருளும் உயிரு மாகிய மருந்து. (15)

4533. மெய்ப்பொரு ளென்னு மருந்து—எல்லா
வேதா கமத்தும் விளங்கு மருந்து
கைப்பொரு ளான மருந்து—மூன்று
கண்கொண்ட என்னிரு கண்ணுள் மருந்து. ஞான

உரை : வேதாகமத்தும் விளங்கும் மருந்து - வேதங்களிலும் ஆகமங்களிலும் விளக்கப்படும் மருந்து. கைப்பொருள் - கைவசமாகும் மருந்து. மூன்று கண் கொண்ட என் இரு கண்ணுள் மருந்து - மூன்று கண்களைக் கொண்ட சிவனாய் என் கண்ணுக்குள் உறையும் ஒளியாய் விளங்கும் மருந்து. (16)

4534. மதியில் விளைந்த மருந்து—யார்க்கும்
மதிக்கப்ப டாதபொன் வண்ண மருந்து
கதிதரும் இன்ப மருந்து—அருட்
கண்ணால்என் றன்னைக் கலந்த மருந்து. ஞான

உரை : மதி - உண்மை ஞானம். யார்க்கும் மதிக்கப்படாத பொன் வண்ண மருந்து - எவராலும் மாற்றுக் காணமாட்டாத பொன்னின் நிறத்தையுடைய மருந்து. கதி - சிவகதி. அருட் கண்ணால் - அருள் ஞானப் பார்வையால். (17)

4535. கற்பூர ஜோதி மருந்து—பசுங்
கற்பூர நன்மணங் காட்டு மருந்து
பொற்பூவின் ஓங்கு மருந்து—என்தற்
போதம் தவிர்த்தசிற் போத மருந்து. ஞான

உரை : கற்பூர சோதி - கற்பூரத்தில் ஒளி. பொற்பூ - பொன்னு லாகிய மலர். தற்போதம் - நான் என்னும் அகங்காரம்; இதனைப் பசுபோதம் என்றும் கூறுவர். போத மருந்து - ஞான மருந்து. (18)

4536. மேலை வெளியா மருந்து—நான்
வேண்டுந்தோ றெல்லாம் விளையு மருந்து
சாலை விளக்கு மருந்து—சுத்த
சமரச சன்மார்க்க சங்க மருந்து. ஞான

உரை : மேலை வெளி - தத்துவாதீதமாகிய பரவெளி. சாலை வடலூரில் உள்ள அறச்சாலை. சமரச சன்மார்க்க சங்கம் - வேற்றுமை யுணர்வின்றி மெய்ப்பொருள் கண்டுணர்ந்து பொது நெறியை மேற்கொண் டொழுகும் சங்கம். சத்மார்க்கம், சன்மார்க்கமாயிற்று. சத்து - மெய்ப்பொருள். (19)

4537. என்னைத்தா னுக்கு மருந்து—இங்கே
இறந்தாரை எல்லாம் எழுப்பு மருந்து
துன்னுமெய்ச் சோதி மருந்து—அருட்
சோதியால் என்னைத் துலக்கு மருந்து. ஞான

உரை : சீவனாகிய என்னைச் சிவமாக்கும் மருந்து என்பாராய், "என்னைத் தானாக்கும் மருந்து" என்று கூறுகிறார். துன்னும் மெய்ச் சோதி - மெய்ம்மை யொளி திகழும் சிவம். அருட் சோதி - திருவருள் ஒளி.. (20)

4533. பொய்யர்க் கரிதா மருந்து—என்னைப்
புறத்தும் அகத்தும் புணர்ந்த மருந்து
கையிற் கிடைத்த மருந்து—சிவ
காமக் கொடியைக் கலந்த மருந்து. ஞான

உரை : கையிற் கிடைத்த மருந்து - மெய்யாகக் கைக்கொண்ட சிவமாகிய மருந்து. சிவகாமக் கொடி - சிவகாம வல்லியாகிய உமாதேவி. (21)

4439. ஆணவம் தீர்க்கு மருந்து—பர
மானந்தத் தாண்டவ மாடும் மருந்து
மாணவ வண்ண மருந்து—என்னை
வலிய அழைத்து வளர்க்கு மருந்து ஞான

உரை : ஆணவம், ஆன்ம வறிவைச் சுருக்கும் ஆணவமலம். பரமானந்தத் தாண்டவம் - மேலான சிவானந்தத்தை எய்துவிக்கும் திருக்கூத்து. ஞான மாண்புடையனாகுமாறு செய்யும் மருந்து என்பார், "மாணவ வண்ண மருந்து" எனவுரைக்கின்றார். வண்ண மருந்து - அழகிய மருந்து. வலிய அழைத்தல் - வலியப் போந்து ஆட்கொள்ளுதல். (22)

4540. வானடு வான மருந்து—என்னை
மாமணி மேடைமேல் வைத்த மருந்து
ஊனம் தவிர்த்த மருந்து—கலந்
துள்ளே இனிக்கின்ற உண்மை மருந்து. ஞான

உரை : ஞான வானத்தின்கண் நடுநாயகமாய் விளங்குவது என்றற்கு, "வானடு வான மருந்து" என வழங்குகிறார். மாமணி மேடை - சிவஞான பீடம். ஊனம் - குற்றம். உண்மை மருந்து - சத்தாகிய சிவம். (23)

4541. மலையிலக் கான மருந்து—என்றன்
மறைப்பை தவிர்த்தமெய் வாழ்க்கை மருந்து
கலைநலம் காட்டு மருந்து—எங்கும்
கண்ணுகிக் காணும் கனத்த மருந்து. ஞான

உரை : தெளிவாகக் காணத்தக்க மருந்து என்பார், "மலையிலக் கான மருந்து" என்கின்றார். யாவரும் தெளிவாகக் காண்பதை.

"மலை யிலக்கு" என்பது வழக்கு. மறைப்பு - மலமறைப்பு. மெய் வாழ்க்கை - அருள் வாழ்வு. கனத்த மருந்து - பெருமை சான்ற மருந்து. (24)

4542. அற்புத ஜோதி மருந்து—எல்லாம்
ஆகியன் றாகி அமர்ந்த மருந்து
தற்பதம் தந்த மருந்து—எங்கும்
தானேதா னாகித் தனித்த மருந்து. ஞான

உரை : "எல்லாமாய் அல்லதுமாய் இருந்தது" எனச் சான்றோர் பரம்பொருளைக் குறித்தல் மரபாதலின், "எல்லாமாகி யல்லதுமாய் அமர்ந்த மருந்து" என்று கூறுகின்றார். தற்பதம் - தனது பரமாம் பதம். எல்லாப் பொருளிலும் கலந்திருப்பினும் தன்னையொன்றும் கலத்தல் இல்லாததாகலின், சிவ பரம்பொருளைத் "தானே தானாகித் தனித்த மருந்து" என்று விளக்குகின்றார். (25)

4543. தன்னை அளித்த மருந்து—என்றும்
சாகாத நல்வரம் தந்த மருந்து
பொன்னடி ஈந்த மருந்து—அருட்
போனகம் தந்த புனித மருந்து. ஞான

உரை : சிவானந்தத்தைத் தருவது பற்றித் "தன்னை அளித்த மருந்து" என்கிறார். "தந்த துன்றன்னைக் கொண்ட தென்றன்னை" என மணிவாசகர் மொழிகின்றது காண்க. அருட் போனகம் - திருவருள் ஞானமாகிய அமுதம். (26)

4544. கண்ணுக் கினிய மருந்து—என்றன்
கைப்பொரு ளாந்தங்கக் கட்டி மருந்து
எண்ணுக் கடங்கா மருந்து—என்னை
ஏதக்குழிவிட் டெடுத்த மருந்து. ஞான

உரை : கைப்பொருள் - கைகண்ட மருந்து. எண்ணுக் கடங்கா மருந்து - எண்ணத்தின் எல்லைக் கப்பாற்பட்ட மருந்து. ஏதக் குழி - துன்பமாகிய குழி. (27)

4545. சுட்டப் படாத மருந்து—என்றன்
தூக்கமும் சோர்வும் தொலைத்த மருந்து
எட்டுதற் கொண்ணா மருந்து—நான்
எட்டிப் பிடிக்க இசைந்த மருந்து. ஞான

உரை : சுட்டப்படாத மருந்து - இன்ன தன்மையையுடைய தென வரையறுத்துக் காட்டவொண்ணாத மருந்து. (28)

4546. உன்னற் கரிதா மருந்து—எனக்
குள்ளும் புறத்தும் உலாவு மருந்து
தன்னந் தனித்த மருந்து—சுத்தச்
சாக்கிரா தீதச் சபேச மருந்து. ஞான

உரை : உன்னற் கரிது. எண்ணி யறிய வொண்ணாதது. சாக்கிராதீதம், நனவு நிலையில் கருவி கரணங்களோடு கலவாமல்

அதீதாவத்தைக்குரிய காட்சி பெறுவது. "பொற்புறு கருவி யாவும் புணராமே அறிவிலாமைச் சொற்பெனும் அதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்ற சிற்பரமதனுலுள்ளச் செயலறுத்திடவுதிக்கும் தற்பரமாகி நிற்றல் சாக்கிராதீதம் தானே" (சிவப்.80) என்று உமாபதி சிவனுர் தெரிவிப்பது காண்க. சபேசன் - சபாநாயகனுகிய ஈசன். (29)

4547. ஒன்றில் ஒன்ருன மருந்து—அந்த
ஒன்றில் இரண்டாகி ஓங்கு மருந்து
அன்றிமுன் ருன மருந்து—நான்
காகிஐந் தாகி அமர்ந்த மருந்து. ஞான

உரை : ஒன்றில் ஒன்ருதல் - பொருளொன்றிற் கலக்கு மிடத்து வேறறக் கலந்து ஒன்றித் தோன்றல். ஒன்றில் இரண்டாதல் - சிவமாகிய ஒன்றில் சிவமும் சத்தியுமாய் இரண்டாதல். மூன்ருதல் - அருவம் உருவம் அருவுருவம் என உருவத்தால் மூன்ருதல். அற முதலிய உறுதிப் பொருள் நான்கையும் பெறு முறையில் நான்காதல். படைத்தல் முதலிய ஐவகைத் தொழில்களைப் புரியுமாற்ருல், பிரமன், திருமால், உருத்திரன், சதாசிவன், மகேசன் என ஐந்தாதல். (30)

4548. வெளிக்குள் வெளியா மருந்து—எல்லா
வெளியும் கடந்து விளங்கு மருந்து.
ஒளிக்குள் ஒளியா மருந்து—எல்லா
ஒளியும்தா னுகிய உண்மை மருந்து. ஞான

உரை : வெளிக்குள் வெளி - மாயா காரிய வெளிக்குள் வியோம வுபசாந்த வெளி. எல்லா வெளியும் கடந்து விளங்குதல் - மாயா வெளிக்கு அப்பாலான பரவெளிக்கும் அதற்கு மேலுள்ள ஞான வெளிக்கும் அதற்கு மேலுள்ளது சிவபோகப் பெருவெளியாதலின் அங்குள்ள சிவத்தை, "எல்லா வெளியும் கடந்து விளங்கும் மருந்து" எனக் குறிக்கின்ருர். தூலம் சூக்குமம் காரணம் எனப் பிரித்துணரப் படுதல் பற்றி, "எல்லா ஒளியும் தானுகிய மருந்து" எனக் கூறுகின்ருர். (31)

4549. ஆறுறுக் கப்பால் மருந்து—அதற்
கப்புறத் தீராறுக் கப்பால் மருந்து
ஈறுதி யில்லா மருந்து—என்னை
எல்லாம் செயச்செய்த இன்ப மருந்து. ஞான

உரை : ஆறாறு - முப்பத்தாருகிய தத்துவம். அப்புறத்து ஈராறு - தலைக்கு மேலதாகிய பன்னிரண்டங்குல யோகாந்தத் தரிசன வெளி. ஈறுதி - கேடும் தோற்றமும். (32)

4550. ஆரணத் தோங்கு மருந்து—அருள்
ஆகம மாகிஅண் ணிக்கு மருந்து
காரணம் காட்டு மருந்து—எல்லாம்
கண்ட மருந்தென்னுள் கொண்ட மருந்து. ஞான

உரை : ஆரணத் தோங்கும் மருந்து - வேதங்களால் புகழ்ந் தோதப்படும் மருந்து. ஆகமப் பொருளாய் இன்புறுத்தும் இயல்பின

தென்றற்கு, "ஆகமமாகி அண்ணிக்கும் மருந்து" என வுரைக்கின்றார். உள்கொண்ட மருந்து - உள்ளத்தில் இடம் கொண்டிருக்கும் மருந்து. (33)

4551. மலமைந்து நீக்கு மருந்து—புவி
வானண்ட மெல்லாம் வளர்க்கு மருந்து
நலமிக் கருளு மருந்து—தானே
நானாகித் தானாளு நாட்டு மருந்து. ஞான

ஞான மருந்திம் மருந்து—சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து.

உரை : மலம் ஐந்து—ஆணவம், கன்மம், மாமாயை, மாயை, திரோதாயி என்ற ஐந்து. புவி வானம் அண்டம் - நிலம் முதல் வான் ஈருகிய பூதங்களைத் தன்னுட் [கொண்ட அண்டம். தானே நானாகித் தான் ஆளும் நாட்டு மருந்து - தானாகவே வலியப் போந்து என்னுட் புகுந்து யானாய் என் கருவி கரணங்களை இயக்கும் மருந்து. (34)

திருச்சிற்றம்பலம்

## 79. சிவசிவ ஜோதி

### சிந்து

அஃதாவது, சிவ பரம்பொருளாகிய பேரருட் சோதியை, உவகை யுற்று உள்ளக்கிளர்ச்சியுடன் பாடுதலாம்.

### பல்லவி

4552. சிவசிவ சிவசிவ ஜோதி—சிவ
சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி
சிவசிவ சிவசிவ ஜோதி.

உரை : சிவமாகிய அருட் சோதி ஆண்டவனை நினைந்து நாவால் ஓதிப் பராவுகின்றார். சிவத்தைத் திருவருள் ஒளிவடிவில் நினைந்தோதும் இயல்பு விளங்க, "சிவசிவ சோதி" என்று பாடுகின்றார். (1)

### கண்ணிகள்

4553. சிற்பர மாம்பரஞ் ஜோதி—அருட்
சித்தெல்லாம் வல்ல சிதம்பர ஜோதி
தற்பர தத்துவ ஜோதி—என்னைத்
தானாக்கிக் கொண்ட தயாநிதி ஜோதி. சிவசிவ

உரை : ஞான மயமான பரம்பொருளாதலால் "சிற்பரமாம் பரஞ்சோதி" எனத் தெரிவிக்கின்றார். பரஞ்சோதி - மேலான சிவவொளி. சிதம்பர சோதி - சிதம்பரத்தில் காணப்படும் சோதி.

தானே பரம்பொருளாய்த் தத்துவங்களின் உள்ளூறு ஒளியாய்த் திகழ்வது பற்றி, "தற்பர தத்துவ சோதி" எனச் சாற்றுகின்றார். சிவமாம் தன்மை நல்கினமை விளங்க, "என்னைத் தானாக்கிக் கொண்ட தயாநிதி" என்று புகல்கின்றார். தயாநிதி - அருட் செல்வம். (2)

4554. சித்துரு வாம்சுயஞ் ஜோதி—எல்லாம்
செய்திட வல்ல சிதம்பர ஜோதி
அத்துவி தானந்த ஜோதி—என்னை
ஆட்கொண் டருளும்சிற் றம்பல ஜோதி. சிவசிவ

உரை : சித்துருவாம் சுயஞ்சோதி - ஞானமே திருவாகிய தனிப் பெருஞ்சோதி. அத்துவிதானந்த சோதி - சீவன்கள் யாவும் அத்துவிதக் கலப்புற்று இன்புறுவிக்கும் அருட்சோதிப்பொருள். சிற்றம்பல சோதி - திருச்சிற்றம்பலத்தில் விளங்குகிற சோதி. (3)

4555. சின்மய மாம்பெருஞ் ஜோதி—அருட்
செல்வ மளிக்கும் சிதம்பர ஜோதி
தன்மய மாய்நிறை ஜோதி—என்னைத்
தந்தமெய் ஜோதி சதானந்த ஜோதி. சிவசிவ

உரை : சின்மயமாம் சோதி - ஞானமயமாகிய சோதி. அருட் செல்வம் - திருவருள் ஞானமாகிய செல்வம். தன்மயமாய் நிறை சோதி - தனிப் பெருஞ் சிவமாய் ஆன்மாவில் நிறைந்தருளும் சோதி. யானும் சித்துருவாய்ச் சிவபோகம் துய்க்கும் இயல்புடையவன் என்பதை எனக்குணர்த்திய ஞானப்பொருள் என்பார், "என்னைத் தந்த மெய்ச்சோதி" என விளம்புகின்றார். சதானந்த சோதி - நிலைத்த இன்பம் தரும் சோதி. (4)

4556. ஆதிஈ றில்லாமுற் ஜோதி—அரன்
ஆதியர் தம்மை அளித்தபிற் ஜோதி
ஓதி உணர்வரும் ஜோதி—எல்லா
உயிர்களின் உள்ளும் ஒளிர்கின்ற ஜோதி. சிவசிவ

உரை : முற்சோதி - ஆதியந்தங்களையுடைய சோதிப்பொருள்கள் அனைத்திற்கும் முற்பட்டதாகிய சோதி. அரன் ஆதியர் - அரன் அயன் திருமால் உருத்திரன் முதலியோர். பசுபாச ஞானங்களால் அறிதற் கரியது என்றற்கு, "ஓதி யுணர்வரும் சோதி" என உரைக்கின்றார். உயிர்தோறும் உண்ணின்று ஞானமயமாய்த் திகழ்வது பற்றி, "எல்லா வுயிர்களினுள்ளும் ஒளிர்கின்ற சோதி" என மொழிகின்றார். (5)

4557. மன்னிய பொன்வண்ண ஜோதி—சுக
வண்ணத்த தாம்பெரு மாணிக்க ஜோதி
துன்னிய வச்சிர ஜோதி—முத்து
ஜோதி மரகத ஜோதியுள் ஜோதி. சிவசிவ

உரை : பொன் வண்ண சோதி - பொன்னிறம் கொண்ட சோதியாகிய சிவன். சுக வண்ணத்த தாம் பெருமாணிக்க சோதி - இன்பமயமானதாய்ப் பெரிய மாணிக்க மணியின் சிவந்த ஒளியையுடைய

சோதிப் பொருள். துன்னிய வச்சிர சோதி - திண்ணிய வயிரமணியின் நிறத்தையுடைய சோதி. மரகத சோதி - பசுமையான மரகத மணியின் ஒளியையுடைய சோதி. (6)

4558. பார்முதல் ஐந்துமாம் ஜோதி—ஐந்தில்
பக்கமேல் கீழ்நடுப் பற்றிய ஜோதி
ஓர்ஐம் பொறியுரு ஜோதி—பொறிக்
குள்ளும் புறத்தும் ஒளிர்கின்ற ஜோதி. சிவசிவ

உரை : பார் முதல் ஐந்து - நிலம் நீர் தீ வளி வான் என்ற பூதம் ஐந்து. இப் பூதங்கள் ஒவ்வொன்றினும் எங்கும் நிறைந்திருப்பது புலப்பட, "ஐந்தில் பக்கம் மேல் கீழ் நடுப்பற்றிய சோதி" எனக் கூறுகின்றார். ஓர் ஐம்பொறி யுரு - அறிகருவிகளான மெய் வாய் கண் மூக்கு செவி என ஐந்தின் உருவம். இப் பொறிகளிலும் ஓரிடத்தன்றி எங்கும் நிறைவது தோன்ற, "பொறிக்கு உள்ளும் புறத்தும் ஒளிர்கின்ற சோதி" என்று இயம்புகின்றார். (7)

4559. ஐம்புல மும்தானும் ஜோதி—புலத்
தகத்தும் புறத்து மலர்ந்தொளிர் ஜோதி
பொய்ம்மயல் போக்கும்உள் ஜோதி—மற்றும்
பொறிபுலன் உள்ளும் புறத்துமாம் ஜோதி சிவசிவ

உரை : ஐம்புலம் - இப் பொறிகளிடமாகத் தங்குகின்ற சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தும் புலமாம். மலர்தல் - விரிந்து நிற்றல். பொய்ம்மயல் - பொய்யுணர்வு தோற்றுவிக்கும் மயக்கமாகிய குற்றம். (8)

4560. மனமாதி எல்லாமாம் ஜோதி—அவை
வாழ அகம்புறம் வாழ்கின்ற ஜோதி
இனமான உள்ளக ஜோதி—சற்றும்
ஏறு திறங்கா தியக்குமோர் ஜோதி. சிவசிவ

உரை : மனமாதி - மனம், சித்தம், அகங்காரம், புத்தி என்ற நான்கு. இவை பொறி புலன்களாகி புறக் கருவிகட்கு உள்ளும் புறமுமாய் உள்ளேயிலகுவது விளங்க, "அவை வாழ அகம் புறம் வாழ்கின்ற சோதி" என்றும், மன முதலிய கரணங்கள் தத்தம் தொழில் களை முறையாகச் செய்தற் பொருட்டு இறைவன் அவற்றின் உள்ளும் புறமும் நிறைவது பற்றி, அவை வாழ அகம் புறம் வாழ்கின்ற சோதி" என்றும் இயம்புகின்றார். மன முதலியன உணர்வுக் கருவிகளோடு உணர்உருவாய் இறைவனும் நிறைவதால், "இனமான உள்ளகச் சோதி" எனவும், அவற்றின்கண் மிகுதல் குறைதலின்றிச் சமநிலையில் நின்று அவற்றை இயக்கும் அருட் செயல் விளங்க, "ஏறுது இறங்காது இயக்குமோர் சோதி" எனவும் எடுத்துரைக்கின்றார். ஏறுதல் - மிகுதல்; இறங்குதல் - குறைதல். (9)

4561. முக்குண மும்மூன்றும் ஜோதி—அவை
முன்பின் இயங்க முடுக்கிய ஜோதி
எக்குணத் துள்ளுமாம் ஜோதி—குணம்
எல்லாம் கடந்ததே இலங்கிய ஜோதி. சிவசிவ

உரை : முக்குண மூன்றும் - சத்துவம், தாமதம், இராசதம் என்ற மூன்றாகிய குணங்களால் மூவுருப் பெறுதல் பற்றிச் சிவத்தை, "முக்குணமும் மூன்றும் சோதி" என மொழிகின்றார். மேலும் கீழும் முன்னும் பின்னுமாய்க் குண மூன்றும் இயங்கியவண்ணம் இருத்தல் பற்றி, "அவை முன்பின் இயங்க முடுக்கிய சோதி" என்று கூறுகிறார். முக்குணத்துள்ளும் கலந்து நிலவினும், இறைவன் குணாதீதன் என்பார், "குணம் எல்லாம் கடந்தே இலங்கிய சோதி" என்று கூறுகின்றார். (10)

4562. பகுதிமுன் றாகிய ஜோதி—மூலப்
பகுதிகள் மூன்றும் படைத்தருள் ஜோதி
பகுதி பலவாக்கும் ஜோதி—சற்றும்
விகுதிஒன் றின்றி விளக்கிய ஜோதி. சிவசிவ

உரை : பகுதி மூன்றுதல் - மூலப்பகுதி, குணதத்துவம், புத்தி தத்துவம் என்பனவாம். பகுதி பலவாதல் - தைசதாங்காரம், வைகரியாங்காரம், பூதாதியாங்காரம் எனப் பலவாம். சிவ பரம்பொருள் ஒன்றினின்று தோன்றிய தன்றாதலின், "விகுதி யொன்றின்றி விளக்கிய சோதி" என வுரைக்கின்றார். தனக்கொரு மூலம் இல்லாதது பகுதி. பகுதியிலிருந்து தோன்றுவது விகுதி. (11)

4563. கால முதற்காட்டும் ஜோதி—கால
காரணத் தப்பால் கடந்தொளிர் ஜோதி
கோலம் பலவாகும் ஜோதி—ஒன்றும்
குறிக்கப் படாச்சிற் குணப்பெருஞ் ஜோதி. சிவசிவ

உரை : காலத்தைக் காட்டும் முதற்பொருள் சிவ பரம்பொருள்; ஆனால் அது கால தத்துவத்துக்கு அப்பாற்பட்ட தென்றற்குக் "கால காரணத்துக் கப்பால் கடந்ததோர் சோதி" எனக் கட்டுரைக்கின்றார். கோலம் - குணத்தொடு கூடிய தோற்றங்கள். குணாதீதமாயினும் சிவஞானத்தைக் குணமாக வுடைய தென்றற்குச் "சிற்குணப் பெருஞ் சோதி" என்று தெரிவிக்கின்றார். (12)

4564. தத்துவம் எல்லாமாம் ஜோதி—அந்தத்
தத்துவம் எல்லாம் தருவிக்கும் ஜோதி
அத்துவி தப்பெருஞ் ஜோதி—எல்லாம்
அருளில் விளங்க அமர்த்திய ஜோதி. சிவசிவ

உரை : தத்துவம் முப்பத்தாறும் 'தாத்துவிகம் அறுபதும் சேரப் பொருந்தும் தத்துவம் தொண்ணூற்றாறையும் படைத்தருளுவது பற்றி, சிவனை, "அந்தத் தத்துவமெல்லாம் தருவிக்கும் சோதி" என்றும், தத்துவ ஞானமும் திருவருள் ஞானத்தாற் பெறலாவதென்றற்கு,

"எல்லாம் அருளில் விளங்க அமர்த்திய சோதி" என்றும் இசைக்கின்றார். (13)

4565. சத்தர்கள் எல்லாமாம் ஜோதி—அவர்
சத்திகள் எல்லாம் தழைப்பிக்கும் ஜோதி
முத்தர் அனுபவ ஜோதி—பர
முத்தியாம் சோதிமெய்ச் சித்தியாம் ஜோதி. சிவசிவ

உரை : சத்தர் - சத்தியையுடைய சிவபேதங்கள். சத்தி பேதங்கள், சிவசத்தி யொன்றே காரிய வேறுபாட்டால் பராசக்தி, திரோதன சத்தி, இச்சா சத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி எனப் பஞ்ச சத்திகளாயும், ஈசான முதற் சத்தியோ சாதம் ஈருகிய பஞ்ச சத்திகளாயும், ஆரணி சனனி இரோதயித்திரி என மூவகைச் சத்திகளாயும், நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்திய தீதையாகிய பஞ்ச சத்திகளாயும், வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரிணி, பலவிகரணி, பலபிரதமனி, சர்வ பூத தமனி என அட்ட சக்திகளாயும், பரவாகீசுவரி, அபரவாகீசுவரி, மனோன்மணி, மகேசை, உமை, திரு, வாணி என்று எழுவகைச் சத்திகளாயும்; உன்மனை, சமனை, வியாபினி, சத்தி, நாதாந்தம், நாதம், நிரோதி, அர்த்த சந்திரன், விந்து, விடம், அருக்கீசம், மேதையாகிய கலைகளாயும், இன்னும் பலவேறு வகைப் பட்டும் நிற்கும்; இச் சத்திகட்கிடமாகிய சத்தர்களும் பலவேறு வகைப் படுவர். இச்சத்தி வகை பற்றையும் தொழிற்படுத்துவது சிவமாதலின், "அவர் சத்திகள் எல்லாம் தழைப்பிக்கும் சோதி" என்று கூறுகின்றார். முத்தர் - முத்திப் பேற்றுக்குரிய ஞானவான்கள். மெய்ச்சித்தி - முத்தியின்பத்தைக் கையகப்படுத்தும் தன்மை. (14)

4566. ஆறந்தத் தேநிறை ஜோதி—அவைக்
கப்புறத் தப்பாலும் ஆகிய ஜோதி
வீறும் பெருவெளி ஜோதி—மேலும்
வெட்ட வெளியில் விளங்கிய ஜோதி. சிவசிவ

உரை : ஆறந்தம் - யோகாந்தம், கலாந்தம், முதலாகவுள்ள அறுவகை அந்தங்கள். வீறும் பெருவெளி - தனக்கு மேல் ஒன்று மில்லாத பரசிவவெளி. சிவவெளியின் தனிச் சிறப்பை, "வெட்ட வெளி" என்று குறிக்கின்றார். (15)

4567. பேரருட் சோதியுள் ஜோதி—அண்ட
பிண்டங்கள் எல்லாம் பிறங்கிய ஜோதி
வாரமுற் றோங்கிய ஜோதி—மன
வாக்குக் கெட்டாததோர் மாமணி ஜோதி. சிவசிவ

உரை : பெரியவாகிய அண்டங்களிலும் சிறியவாகிய பிண்டங்களிலும் கலந்தொளிரும் இயல்பு விளங்க, "அண்ட பிண்டங்கள் எல்லாம் பிறங்கிய சோதி" என்று பாடுகின்றார். வாரம் - அன்பு. மாமணி - பெரிய சிவமாகிய மணி. (16)

4568. ஒன்றான பூரண ஜோதி—அன்பில்
ஒன்றாத உள்ளத்தில் ஒன்றாத ஜோதி
என்றா ஒளிர்கின்ற ஜோதி—என்னுள்
என்றும் விளங்கிய என்னுயிர் ஜோதி. சிவசிவ

உரை : சிவபரஞ்சோதி வேறே சோதி யில்லாமை பற்றி, "ஒன்றான பூரண சோதி" எனவுரைக்கின்றார். ஒன்றாத வுள்ளம் - பொருந்தாத மனம். என்றா ஒளிர்கின்ற சோதி - சூரியனாய் விளங்குகின்ற சோதி. என்று - சூரியன், இது சிவசூரியன் எனவுணர்க. (17)

4569. மெய்யேமெய் யாகிய ஜோதி—சுத்த
வேதாந்த வீட்டில் விளங்கிய ஜோதி
துய்ய சிவானந்த ஜோதி—குரு
துரியத் தலத்தே துலங்கிய ஜோதி. சிவசிவ

உரை : வேதாந்த வீடு - வேத ஞானிகள் உரைக்கின்ற வீடு பேறு. துய்ய சிவானந்தம் - தூய சிவபோக வின்பம். துரியத்தலம் - சுத்தாவத்தையில் கூறப்படும் துரிய நிலையம். (18)

4570. சிவமய மாம்சுத்த ஜோதி—சுத்த
சித்தாந்த வீட்டில் சிறந்தொளிர் ஜோதி
உவமையில் லாப்பெருஞ் ஜோதி—என
துள்ளே நிரம்பி ஒளிர்கின்ற ஜோதி. சிவசிவ

உரை : சித்தாந்த வீடு - சிவாகமங்கள் கூறுகின்ற முத்தி வீடு. உவமை - ஒப்பு. (19)

4571. என்னைத்தா னாக்கிய ஜோதி—இங்கே
இறந்தாரை எல்லாம் எழுப்புமோர் ஜோதி
அன்னைக்கு மிக்கருட் ஜோதி—என்னை
ஆண்டமு தம்தந்த ஆனந்த ஜோதி. சிவசிவ

உரை : சீவனாகிய என்னைச் சிவமாம் தன்மை எய்வித்தமை தெரிவிப்பாராய், "என்னைத் தானாக்கிய சோதி" என வுரைக்கின்றார். மிக்க அருட் சோதி, மிக்க என்ற பெயரெச்சத் தகரம் விகாரத்தாற் கெட்டு மிக்கருட் சோதியென வந்தது. ஆண்டு - ஆட்கொண்டு. அருளமுதம் - திருவருள் ஞானமாகிய அமுதம். (20)

4572. சித்தம் சிவமாக்கும் ஜோதி—நான்
செய்த தவத்தால் தெரிந்தஉட் ஜோதி
புத்தமு தாகிய ஜோதி—சுக
பூரண மாய்ஒளிர் காரண ஜோதி. சிவசிவ

உரை : சித்தம் சிவமாக்குதல் - சித்தமாகிய அந்தக்கரணத்தைச் சிவகரணமாக்கியுய்வித்தல். அக்கரணம் துணையாகச் செய்யப்படும் தவத்தால் எய்தும் ஞான நாட்டம் பெற்று உள்ளத்தே சிவத்தைக்

காணும் திறம் விளங்க, "செய்த தவத்தால் தெரிந்த உட்சோதி" என்று செப்புகின்றார். மாணிக்கவாசகர், "சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்" (தோணோக்) என உரைத்தருளுவது காண்க. புத்தமுது - புதுமை குன்றாத ஞானாமிர்தம். (21)

4573. தம்பத்தில் ஏற்றிய ஜோதி—அப்பால்
சார்மணி மேடைமேல் தான்வைத்த ஜோதி
விம்பப் பெருவெளி ஜோதி—அங்கே
வீதியும் வீடும் விளக்கிய ஜோதி. சிவசிவ

உரை : தம்பம் - குண்டலினி என்னும் சத்தி என்பர். மூலாதாரம் முதல் ஆஞ்ஞை வரை ஒளி மயமாய் நிற்றலின், அது தம்பம் எனப்படுகிறது. தம்பம் - தூண். மணி மேடை என்பது கபால பீடம் என்பர். அதனைத் திறந்துகொண்டு உபசாந்தத்தில் சிவவெளியை யோகியர் காண்பராம். சிவாகாரமாகிய பரசிவ வெளி, "விம்பப் பெருவெளி" எனப்படுகிறது. அங்கே ஒளிரும் சிவசூரியனைப் பரசிவத்தின் விம்பமாகவுரைக்கின்றார். வீதி - துவாத சாந்த நெறி. வீடு - நெறியின்கண் திகழும் அமுத சந்திர நிலயம். (22)

4574. சுகமய மாகிய ஜோதி—எல்லா
ஜோதியு மான சொருபஉட் ஜோதி
அகமிதந் தீர்த்தருள் ஜோதி—சச்சி
தானந்த ஜோதி சதானந்த ஜோதி. சிவசிவ

உரை : சுக மயம் - ஞான வின்ப மயம். சொரூப உட்சோதி - உண்மை யுருவாய் உள்ளத்தில் ஒளிரும் சோதி. அகமிதம் - அறிய மாட்டாமை; இஃது அகமியம் எனவும் வழங்கும். சதானந்தம் - மெய்யான இன்பம். (23)

4575. நித்த பரானந்த ஜோதி—சுத்த
நிரதிச யானந்த நித்திய ஜோதி
அத்துவி தானந்த ஜோதி—எல்லா
ஆனந்த வண்ணமும் ஆகிய ஜோதி. சிவசிவ

உரை : நித்த பரானந்த சோதி - கெடாத மேலான ஆனந்தத்தை நல்கும் சிவசோதி. சுத்த நிரதிசயானந்த நித்தியசோதி - தூயதாய்த் தன்னின் மேம்பட்ட தொன்றுமில்லாததாய்ப் பொன்றாத இன்பத்தை யுடையதாகிய சோதி. சிவத்தோடு அத்துவிதமாய்ப் பெறும் இன்பம் "அத்துவிதானந்தம்" என்று அறிக. (24)

4576. பொய்யாத புண்ணிய ஜோதி—எல்லாப்
பொருளும் விளங்கப் புணர்த்திய ஜோதி
நையா தருள்செய்த ஜோதி—ஒரு
நானுந்தா னும்ஒன்றாய் நண்ணிய ஜோதி. சிவசிவ

உரை : பொய்யாத புண்ணியம், கெடாத சிவபுண்ணியம். ஏனைப் பசுபாச புண்ணியங்கள் பயன் தந்து கெடுவன என அறிக.

புணர்த்திய சோதி - ஞானத்தை நல்கிய சோதி. நைதல் - தேய்தல். நண்ணிய சோதி - கலந்த சோதி. (25)

4577. கண்ணிற் கலந்தருள் ஜோதி—உளக்
கண்ணுயிர்க் கண்ணருட் கண்ணுமாம் ஜோதி
எண்ணிற்ப டாப்பெருஞ் ஜோதி—நான்
எண்ணிய வண்ணம் இயற்றிய ஜோதி. சிவசிவ

உரை: உளக்கண் உயிர்க்கண் அருட் கண்ணுமாம் சோதி - மன வுணர்வாகிய கண்ணிற்கும் உயிரறிவாகிய கண்ணிற்கும் அறிவாய் ஒளிரும் அருள் ஞானக் கண். எண்ணிற் படாத சோதி - எண்ணத்தின் எல்லைக்குள் அகப்படாத சிவசோதி. (26)

4578. விந்து ஒளிநடு ஜோதி—பர
விந்து ஒளிக்குள் விளங்கிய ஜோதி
நம்துயர் தீர்த்தருள் ஜோதி—பர
நாதாந்த நாட்டுக்கு நாயக ஜோதி. சிவசிவ

உரை: விந்து ஒளி நடு சோதி - ஒளி வடிவாகிய விந்து தத்துவத்தின் நடுவே நின்று விளங்கும் சோதி. விந்துவாகிய ஒளிக்குள்ளும் நிறைதல் பற்றி, "விந்து ஒளிக்குள் விளங்கிய சோதி" எனக் கூறுகிறார். விந்து தத்துவம் - தொழில் மயமான சத்தி தத்துவம். சுத்த மாயா மண்டலத்தின் மேலது நாதம்; அதற்கப்பால் விளங்குவது பரநாதம்; அதன் மேலாய நிலை "பர நாதாந்த நாடு" எனக் குறிக்கப் படுகிறது. (27)

4579. தான்அன்றி ஒன்றிலா ஜோதி—என்னைத்
தன்மயம் ஆக்கிய சத்திய ஜோதி
நான்இன்று கண்டதோர் ஜோதி—தானே
நானாகி வாழ்ந்திட நல்கிய ஜோதி. சிவசிவ

உரை: சிவத்தின் கலப்பின்றி ஒரு பொருளும் இல்லையாதலால். "தானன்றி ஒன்றிலா சோதி" என்றும், சீவனாகிய தன்னைத் தன்னுட் பொதிந்து தன்மயமாக்குதல், "என்னைத் தன்மயமாக்கிய சோதி" என்றும் இயம்புகின்றார். சத்திய சோதி - மெய்ம்மையான சோதி, நல்கிய சோதி - அருள் ஞானம் தந்தருளிய சோதி. (28)

4530. தன்னிகர் இல்லதோர் ஜோதி—சுத்த
சன்மார்க்க சங்கம் தழுவிய ஜோதி
என்னுள் நிறைந்தமெய் ஜோதி—என்னை
ஐந்தொழில் செய் என் றேவிய ஜோதி. சிவசிவ

உரை: சுத்த சன்மார்க்க சங்கத்தவர் மேற்கொண்டு போற்றும் அருட்சோதியைச் "சுத்த சன்மார்க்க சங்கம் தழுவிய சோதி" என்று சிறப்பிக்கின்றார். ஐந்தொழில் செய் என்று ஏவிய சோதி, படைத்தல் முதலிய தொழில்களைச் செய்க என்று பணித்தருளிய சோதி. சீவன்

சிவமாகிய பின் சிவத்தின் தொழில் ஐந்தையும் செய்தல் முறையாதலால், இவ்வாறு கூறுகிறார் போலும். (29)

4581. அச்சம் தவிர்த்தமெய் ஜோதி—என்னை
ஆட்கொண் டருளிய அம்பல ஜோதி
இச்சை எலாம்தந்த ஜோதி—உயிர்க்
கிங்குமங் கென்னுமல் எங்குமாம் ஜோதி. சிவசிவ

உரை : அம்பல சோதி - அம்பலத்தின்கண் எழுந்தருளும் சோதி. இச்சை - விரும்புவன. உயிரின்கண் சிவமிருக்கும் நிலையை, "உயிர்க்கு இங்குமங் கென்னுமல் எங்குமாம் சோதி" எனவுரைக்கின்றார். (30)

4582. காலையில் நான்கண்ட ஜோதி—எல்லாக்
காட்சியும் நான்காணக் காட்டிய ஜோதி
ஞாலமும் வானுமாம் ஜோதி—என்னுள்
நானுகித் தானுகி நண்ணிய ஜோதி. சிவசிவ

உரை : ஞாலம் - பூமி. வேறறக் கலந்தமை விளங்க, "நானுகித் தானுகி நண்ணிய சோதி" என நவில்கின்றார். (31)

4583. ஏகாந்த மாகிய ஜோதி—என்னுள்
என்றும் பிரியா திருக்கின்ற ஜோதி
சாகாத வரந்தந்த ஜோதி—என்னைத்
தானுக்கிக் கொண்டதோர் சத்திய ஜோதி. சிவசிவ

உரை : எல்லா வுலகங்களும் உயிர்களும் தன்னுள் ஒடுங்க, சிவமாகிய தான் ஒன்றே, அவை யனைத்துக்கும் அந்தமாதல் விளங்க, "ஏகாந்தமாகிய சோதி" என இயம்புகின்றார். தான் அவை யனைத்திலும் கலந்து பிரிவின்றி இயைந்திருக்குமாறு புலப்பட, "என்னுள் பிரியாதிருக்கின்ற சோதி" என மொழிகின்றார். சாகா வரம் - பிறப் பிறப்பில்லாத பெருநிலை; பெற்றுள்ள உடம்பிலிருந்து சாகாத வரம் எனக் கூறுபவரும் உண்டு. அழியும் பொருளையுண்டு உருவாகிய உடம்பு அழிந்தே தீருமாதலின், வள்ளற் 'பெருமான் குறித்தருளும் உடம்பு சத்திய நித்தியத் திருவருள் ஞான வுடம்பாகும். அதனோடே என்றும் இருந்து சிவபோகத்தை நுகர்தற் பொருட்டு, "சாகா வரம் தந்த சோதி" என்று சொல்லுகின்றார். ஞான வுடம்பு பெற்றமையால் சிவமாயின நிலைமை விளங்க, "என்னைத் தானுக்கிக் கொண்ட சத்திய சோதி" எனச் சாற்றுகின்றார். (32)

4584. சுத்த சிவமய ஜோதி—என்னை
ஜோதி மணிமுடி சூட்டிய ஜோதி
சத்திய மாம்பெருஞ் ஜோதி—நானே
தானுகி ஆளத் தயவுசெய் ஜோதி. சிவசிவ

சிவசிவ சிவசிவ ஜோதி—சிவ
சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி
சிவசிவ சிவசிவ ஜோதி.

உரை : எங்கும் எல்லாப் பொருளினும் கலந்திருக்கும் கலப்பின்றித் தனித்தோங்கும் நிலை, "சுத்த சிவமயம்" எனப்படுகிறது. திருவருட் சிவஞானம் "சோதி மணிமுடி" என்று உருவகம் செய்யப்பட்டுளது. நான் சிவமயமாகுமாறு ஞான மருளினன் என்பாராய், "தானே தானாகி ஆளத் தயவு செய் சோதி" எனப் புகல்கின்றார். (33)

திருச்சிற்றம்பலம்

## 80. சோதியுட் சோதி

### சிந்து

அஃதாவது, சூரியன், சந்திரன், நாள்கள், கோள்கள், தீ எனவுலகில் உள்ள ஒளிப் பொருள்களின் உள்ளும் புறமும் கலந்தொளிரும் ஒளிகட்கெல்லாம் காரண வுள்ளொளியாய்த் திகழ்வது சிவம் என்பது விளக்குதலாம்.

### பல்லவி

4535. ஜோதியுள் ஜோதியுள் ஜோதி—சுத்த
ஜோதி சிவஜோதி ஜோதியுள் ஜோதி
ஜோதியுள் ஜோதியுள் ஜோதி.

உரை : சோதியுள் சோதியுள் சோதி, தூலமும் சூக்குமமாய் உலகில் நிலவும் ஒளிப் பொருள்கள் அனைத்துக்கும் காரண உள்ளொளி; அந்த உள்ளொளி தூய சிவத்தின் ஒளியாம் என்பது. சிவசோதி - சுத்த சோதியும் உட்சோதியுமாம் என வற்புறுத்துவது கருத்தென அறிக. (1)

### கண்ணிகள்

4536. சிவமே பொருளென்று தேற்றி—என்னைச்
சிவவெளிக் கேறும் சிகரத்தில் ஏற்றிச்
சிவமாக்கிக் கொண்டது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : பலவேறு சமய நூல்கள் கூறும் மெய்ப்பொருள்களுள் சிவமொன்றே பரம்பொருளாவது எனத் தெளியும் நல்லறிவு நல்கினமை விளங்கச் "சிவமே பொருள் என்று தேற்றி" என்றும், சிவஞானப் பரவெளியை யடைதற்குரிய நெறியில் தம்மையுய்த்தமை பற்றி, "சிவவெளிக் கேறும் சிகரத்தில் ஏற்றி" என்றும், தாம் சிவமாம் தன்மை எய்தினமையின், "சிவமாக்கிக் கொண்டது பாரீர்" என்றும் இயம்பு

கின்றார். சிவதத்துவத்தின் உச்சியை, "சிவவெளிக் கேற்றும் சிகரம்" எனத் தெரிவிக்கின்றார். சிகரம் - கோபுரத்தின் உச்சி. தில்லையம் பலத்துத் திருநடம் புரியும் அருட்சோதி, "திருச்சிற்றம்பலத்துத் திருநட சோதி" எனப்படுகிறது. (2)

4587. வித்தெல்லாம் ஒன்றென்று நாட்டி—அதில்
விளைவு பலபல வேறென்று காட்டிச்
சித்தெல்லாம் தந்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : மாயா காரியமாகிய எண்ணிறந்த அண்டங்களும் உலகுகளும் மூல காரணமாகிய மாயை ஒன்றின் விளைவாதலால், அதனை "வித்தெல்லாம் ஒன்றென்று நாட்டி அதில் விளைவு பல பல. வேறென்று காட்டி" எனவும், அவற்றின் உண்மையில் கலையுணரும் உணர்வு பெற்றமையின், "சித்தெல்லாம் தந்தது பாரீர்" எனவும் எடுத்துரைக்கின்றார். சித்து - ஞானம். (3)

4588. சொல்வந்த அந்தங்கள் ஆறும்—ஒரு
சொல்லாலே ஆமென்றச் சொல்லாலே வீறும்
செல்வம் கொடுத்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : சொல் வந்த அந்தங்கள்—சொற்களால் விளங்க வுரைக்கப்படும் வேதாந்தம் சித்தாந்தம் முதலாக வரும் ஆறு அந்தங்கள். ஒரு சொல் - உபதேச மொழியொன்றினால். வீறுதல் - மேம்படுதல். (4)

4589. தங்கோல் அளவெனக் கோதிச்—சுத்த
சமரச சத்திய சன்மார்க்க நீதிச்
செங்கோல் அளித்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : தம் கோல் - தமது சிவஞானமாகிய அளவுகோல். விகற்ப வுணர்வுக்கு இடமில்லாத சமரச நோக்குடைய உண்மைச் சன்மார்க்க நீதி நெறியே செவ்விய அளவுகோல் என்பது கருத்து. (5)

4590. ஆபத்தை நீக்கி வளர்த்தே—சற்றும்
அசையாமல் அவியாமல் அடியேன் உளத்தே
தீபத்தை வைத்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : மல மாயை கன்மங்களால் விளையும் மறைப்பை "ஆபத்து" என்று கூறுகின்றார்; உலகியல் மாயை என்பதும் உண்டு. அவியாமல் - கெடாமல். தீபம் - சிவஞானமாகிய திருவிளக்கு. (6)

4591. மெய்யொன்று சன்மார்க்க மேதான்—என்றும்
விளங்கப் படைப்பாதி மெய்த்தொழில் நீதான்
செய்யென்று தந்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : மெய்யொன்று சன்மார்க்கம் - மெய்ந்நெறியாவது சன்மார்க்கமேதான். மெய்த்தொழில் - நிலையாய செயல் வகை. (7)

4592. என்பால் வருபவர்க் கின்றே—அருள்
ஈகின்றேன் ஈகின்றேன் ஈகின்றேன் என்றே
தென்பால் இருந்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : அருள் ஈகின்றேன் - திருவருட் சிவஞானத்தைத் தருகின்றேன். அடுக்கு, வற்புறுத்தற் பொருட்டு. தென்பால் இருந்தது - கயிலையில் தென்பால் கல்லாலின் கீழ்த் தட்சிணா மூர்த்தமாய் எழுந்தருளியது. (8)

4593. துரியத் தலமூன்றின் மேலே—சுத்தத்
துரியப் பதியில் அதுஅத னாலே
தெரியத் தெரிவது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : கீழாலவத்தை, மேலாலவத்தை, நின்மலாவத்தை என்ற மூவிடத்தும் நிலவும் துரியாவத்தை நிலை, துரியத் தலம் மூன்று எனப்படுகிறது. சாக்கிராத துரியம், பரையில் அதீதமாகிய சுழுத்தின்கண் துரியம், சுத்தாவத்தை துரியம் என்று துரிய தலம் மூவகையாக மொழிவதுமுண்டு. இவற்றைத் துகளறு போதம் முதலிய நூல்களுட் காண்க. சுத்த துரியப் பதி - சுத்தாவத்தைக்கண் நிலவும் துரிய தலம். துரியக் காட்சியால் அந்நிலை விளங்குவது பற்றி, "அது வதனாலே தெரியத் தெரிவது" என்று உரைக்கின்றார். (9)

4594. பரைதூக்கிக் காட்டிய காலே—ஆதி
பரைஇவர்க் கப்பால்அப் பால்என்று மேலே
திரைதூக்கிக் காட்டுதல் பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : பரை - பரனது அருட் சத்தி. தூக்கிய திருவடியே ஆதி பராசத்தி என்பதாம். திருவடிக்கு மேல் மேல் என்று காட்டியருளுவது "திரை தூக்கிக் காட்டுதல்" என்று தெரிவிக்கின்றார். (10)

4595. தற்பர மேவடி வாகி—அது
தன்னைக் கடந்து தனிஉரு வாகிச்
சிற்பரத் துள்ளது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : தற்பரமே வடிவு - தனக்குத்தானே பரம் என்ற திருவுருவம். உருவத்துக்கு அப்பாலதாகிய பரஞான சொரூபம்,

"உருவாகிச் சிற்பரத்துள்ளது" எனக் குறிக்கப்படுகிறது. சிற்பரத்தைச் சேக்கிழார், "சிற்பர வியோமம்" என்று குறித்தருளுவர். (11)

4596. நவவெளி நால்வகை யாதி—ஒரு
நடுவெளிக் குள்ளே நடத்திய நீதிச்
சிவவெளி யாம்இது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : உருவம் நான்கும் அருவம் நான்கும் அருவுருவம் ஒன்றும் ஆக ஒன்பதிற்குரிய வெளி நவவெளியாம். உருவவெளி நான்கிற்கும் அருவ வெளி நான்கிற்கும் நடுவனதாகிய சாதாக்கிய வெளி நடுவெளி. அதுவே சிவவெளி; அதனை "நடுவெளிக்குள்ளே நடத்திய நீதிச் சிவவெளி" என மொழிகின்றார். (12)

4597. மேருவெற் புச்சியின் பாலே—நின்று
விளங்குமோர் தம்பத்தின் மேலுக்கு மேலே
சேருமோர் மேடைமேல் பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : மேரு வெற்பு - மேருமலை; இது புருவ நடுவாகிய இலாடத்தானம் என்பதும் உண்டு. தம்பம் - உபசாந்தத் தூண். (13)

4598. ஆரண வீதிக் கடையும்—சுத்த
ஆகம வீதிகள் அந்தக் கடையும்
சேர நடுக்கடை பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : ஆரண வீதி - வேத நெறி. ஆகம வீதி - சிவாகமங்கள் காட்டும் நெறி. வேதாந்த சித்தாந்தங்களின் நடுவில் உள்ள நாதாந்த நிலை. (14)

4599. பாடல் மறைகளோர் கோடி—அருட்
பாத உருவ சொருபங்கள் பாடி
தேட இருந்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : கோடி - எண்ணிறந்தவை. மறைகள் அனந்தமெனக் கந்தபுராணம் கூறுவதால், "பாடல் மறைகள் ஓர் கோடி" என உரைக்கின்றார். இவற்றால் அருளுருவாகிய திருவடியும் ஏனை உருவங்களாகிய அயன், அரி, உருத்திரன் முதலியோரும் பாடித் தேடுகின்றன என்பது குறிப்பு. (15)

4600. நீடு சிவாகமங் கோடி—அருள்
நேருறப் பாடியும் ஆடியும் ஓடித்
தேட இருந்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : சிவாகமங்கள் இருபத்தெட்டு எனப்படினும் உபாகமங்களாய் மிகப் பலவுண்மையின், "நீடு சிவாகமம் கோடி" என்கின்றார்.

வேதங்களைப்போலச் சிவாகமங்களும் சிவத்தைத் தேடுகின்றன என்பது கருத்து. (16)

4601. பத்தி நெறியில் செழித்தே—அன்பில்
பாடுமெய் யன்பர் பதியில் பழுத்தே
தித்தித் திருப்பது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : பத்தி நெறி - இறைவன் பொருள் சேர் புகழை நினைந்தோதி வழிபட்டொழுகல். இதனை ஞான நெறியெனவும் கூறுவர். செழித்தல் - வளமுறல், பத்திநெறியால் அன்பு சிறந்து இறைவன் புகழ் பாடும் பெருமக்களை, "அன்பிற் பாடும் மெய்யன்பர்" என விளம்புகின்றார். மெய்யன்பர் பதி - மெய்த் தொண்டர்கள் இடமாக. (17)

4602. பித்தாடு மாயைக்கு மேலே—சுத்தப்
பிரம வெளியினில் பேரரு ளாலே
சித்தாடு கின்றது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : பித்தாடும் மாயை - மதி மயங்கித் திரியப் பண்ணும் உலகியல் மாயை. சுத்தப் பிரமவெளி - மயக்க வுணர்வுகட்கிடமில்லாத தூய பரசிவ வெளி. எல்லா வெளிகளையும் தனக்குள் அடக்கித் தன்னிற் பெருவெளி வேறெயில்லாதது என்றற்குச் சிவவெளி, "சுத்தப் பிரம வெளி" யெனப்படுகிறது. பிரமம் - பெரியது. சித்தாடுதல், ஞானத் திருக்கூத்தாடுதல். (18)

4603. தருநெறி எல்லாம்உள் வாங்கும்—சுத்த
சன்மார்க்கம் என்றோர் தனிப்பேர்கொண் டோங்கும்
திருநெறிக் கேசென்று பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : தரும் நெறி எல்லாம் உள்வாங்கும் சுத்த சன்மார்க்கம், ஞானமும் இன்பமும் நல்கும் நெறிகள் அனைத்தையும் தனக்குள் கொண்டிருக்கும் சுத்த சன்மார்க்கம். சன்மார்க்கமே மெய்ம்மை நெறி என்றற்கு, "ஓங்கும் திருநெறி" என்று தெரிவிக்கின்றார். (19)

4604. எம்பொருள் எம்பொருள் என்றே—சொல்லும்
எல்லாச் சமயத்துள் எல்லார்க்கும் ஒன்றே
செம்பொருள் என்பது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : சமயங்கள் தோறும் உட்பிரிவுகள் பலவாதலின் அவற்றைச் சேர்ந்தவர் பலரும் அடங்க, "எல்லாச் சமயத்துள் எல்லார்க்கும்" எனக் கூறுகின்றார். செம்பொருள் - மெய்யான பரம் பொருள். (20)

4605. சைவ முதலாக நாட்டும்—பல
சமயங்கள் எல்லாம் தனித்தனிக் காட்டும்
தெய்வம் இதுவந்து பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : சைவம் முதலாக நாட்டும் சமயங்கள்—சைவம், வைணவம், வைதிகம், சமணம், பவுத்தம், இஸ்லாம், கிறித்தவம் முதலிய சமயங்கள். ஒவ்வொன்றும் ஒவ்வொன்றைப் பரம்பொருள் என்று கூறுதலால், "தனித்தனிக் காட்டும் தெய்வம்" என்று கூறுகின்றார். (21)

4606. எள்ளலில் வான்முதல் மண்ணும்—அமு
தெல்லாம் இதிலோர் இறையள வென்னும்
தெள்ளமு தாம்இது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : எள்ளல் இல் வான் முதல் மண்—இகழ்ந்து விடுதற் கில்லாத வானம், காற்று, தீ, நீர், நிலம் ஆகியவை. அமுதம் - இவ் வைந்தின் கலப்பால் உண்டாகிய உலகபோகம். சிவ பரம்பொரு ளாகிய தெளிந்த அமுதத்தை நோக்க, உலகியற் போகம் மிக மிகச் சிறியது என்பாராய், "இதில் ஓர் இறையளவு" எனக் கூறுகின்றார். (22)

4607. எத்தாலும் ஆகாதே அம்மா—என்றே
எல்லா உலகும் இயம்புதல் சும்மா
செத்தாரை மீட்பது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : எத்தாலும் - எதனாலும்; "எத்தால் மறவாதே நினைக் கின்றேன்" (வெண்) என்று சுந்தரமூர்த்திகள் கூறுவது காண்க. சிவத்தின் திருவருளால் செத்தவரை எழுப்புதல் கூடும் என்றற்குச் "செத்தாரை மீட்பது பாரீர்" என வுரைக்கின்றார். செத்தாரை மீட்ட வரலாறுகள் பல புராணங்கள் உரைப்பது காண்க. (23)

4608. பிறந்து பிறந்துழன் றேனை—என்றும்
பிறவா திறவாப் பெருமைதந் தூனைச்
சிறந்தொளிர் வித்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை : உழன்றேன் - வருந்தினேன். தம்முடைய பிறப்பிறப்புக் களைத் தவிர்த்தமை புலப்படுத்தற்கு, "பிறவாது இறவாப் பெருமை தந்து" என்றும், தமது ஊனுடம்பை ஒளியுடைய தாக்கினமையுரைப் பாராய், "ஊனைச் சிறந் தொளிர்வித்தது பாரீர்" என்றும் இயம்புகின்றார். ஊன் - ஊனாலாகிய உடம்பு. (24)

4609. வருவித்த வண்ணமும் நானே—இந்த
மாநிலத் தேசெயும் வண்ணமும் தானே
தெரிவித் தருளிற்றுப் பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை: வருவித்த வண்ணம் - உலகைத் தோற்றுவித்த வண்ணம். நிலவுலகத்தே நிகழும் செயல் வகைகள். (25)

4610. பாரிடம் வானிட மற்றும்—இடம்
பற்றிய முத்தர்கள் சித்தர்கள் முற்றும்
சேரிட மாம்இது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை: பாரிடம் - நிலவுலகம். சீவன் முத்தர்களும் சித்துக்களைச் செய்யவல்ல சித்தர்களும் முடிவில் சேருமிடம் சிவபரம்பொருள் என்பாராய், "முற்றும் சேரிடமாம் இது பாரீர்" என மொழிகின்றார். (26)

4611. உய்பிள்ளை பற்பலர் ஆவல்—கொண்டே
உலகத் திருப்பஇங் கென்னைத்தன் ஏவல்
செய்பிள்ளை ஆக்கிற்றுப் பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை: உய்பிள்ளை பற்பலர் - உலகியல் துன்பத்தினின்றும் உய்தி பெற முயல்வோர் மிக்க பலராய். ஆவல் - ஆர்வத்துடன். ஏவல் செய்பிள்ளை யாக்கிற்று - தன் பணியைச் செய்பவனாக என்னை ஆட்காண்டது. (27)

4612. உருவும் உணர்வும்செய் நன்றி—அறி
உளமும் எனக்கே உதவிய தன்றித்
திருவும் கொடுத்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை: உரு - மக்களுரு. செய்நன்றி யறியுளம் - உய்தி பெறற்குரிய கருவி கரணங்களும் வாழ்வும் அருளிய இறைவனுடைய நன்றியை மறவாத மனம். திரு - திருவருள் ஞானம். நன்றியை நினைந்த வழி மனத்தின்கண் யன்பு பெருகும் என அறிக. (28)

4613. எண்ணிய எண்ணங்கள் எல்லாம்—நான்
எண்ணிய வாறே இனிதுதந் தென்னைத்
திண்ணியன் ஆக்கிற்றுப் பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி

உரை: எண்ணிய எண்ணங்கள் யாவும், எண்ணியவாறே எய்தினமையால் இறைவன் திருவருளை நினையும் எண்ணம் அருள் நெறியில் வன்மையுற்றுத் திண்ணிதாயிற்று என்பது கருத்து. எண்ணுபவர் திண்ணியராயின், எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் என்பர் திருவள்ளுவர். வடலூரடிகள் எண்ணிய எண்ணியவாறு எய்தித் தம்மைத் திண்ணியராக்கின வென இதனால் தெரிவிக்கின்றார். (29)

4614. பேருல கெல்லாம் மதிக்கத்—தன்
பிள்ளைஎன் றென்னைப் பெயரிட் டழைத்தே
சீருறச் செய்தது பாரீர்—திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதியுள் ஜோதியுள் ஜோதி—சுத்த
ஜோதி சிவஜோதி ஜோதியுள் ஜோதி
ஜோதியுள் ஜோதியுள் ஜோதி.

உரை : பேருலகு - பரந்து பெ தா ய இவ்வுலகத்தவர். மதித்தல் - பெரியவராகக் கருதிப் போற்றுதல். இராமலிங்கம்பிள்ளை என்று தம்மைப் பெயரிட்டழைத்தற் கேதுவாகிய திருவருளை வியந்து, "தன் பிள்ளையென்று என்னைப் பெயரிட் டழைத்துச் சீருறச் செய்தது" என்று தெரிவிக்கின்றார். (30)



# பாட்டு முதற் குறிப்பகராதி

[எண்—பக்க எண்]

## ஆறும் திருமுறை தொடர்ச்சி
## பாட்டு தொடர்ச்சி

### அ



### ஆ

முு



மூ



மெ



மே



யா



யோ



வ



வா



வி



வெ



வே



ஜோ

